# ஸ்ரீமத் பாகவத ஸாரம்

॥ श्रीमद्भागवतसारः ॥

முதல் பாகம்

''பிரம்மஸம்ஸ்பர்சம்'' என்னும் உரையுடன் கூடியது

உரை ஆசிரியர்

" அண்ணா "





ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை - 4.

# ஸ்ரீமத் பாகவத ஸாரம்

## ॥ श्रीमद्भागवतसारः ॥

"பிரம்மஸம்ஸ்பர்சம்" என்னும் உரையுடன் கூடியது

முதல் பாகம்

(ஸப்தாஹக்கிரமத்தில் நாலு நாள் கதை : ஸ்ரீ கிருஷ்ணவதாரம் வரை)





உரை ஆசிரியர்

"அண்ணா"






ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் : : சென்னை-4.

# பொருளடக்கம்

## ஸ்கந்தம் 4



## ஸ்கந்தம் 5



மூன்றாவது நாள் கதை (5.16—8.12)



## ஸ்கந்தம் 6



## ஸ்கந்தம் 7



## ஸ்கந்தம் 8

நாலாவது நாள் கதை (8.13—10.6)



ஸ்கந்தம் 9



ஸ்கந்தம் 10

# குறிகளின் விளக்கம்

## உச்சரிப்புக் குறிகள்

| | | |
|---|---|---|
| க | ग | கங்கை என்பதில் போல |
| ட | ड | குடம் ,, |
| த | द | பாதம் ,, |
| ப | ब | இன்பம் ,, |
| ரு | ऋ | எருது ,, |
| | ऽ | அ தொக்கி நிற்பதைக் குறிக்கும். |

## மற்றக் குறிகள்

அ—அவயவப்பொருள்
உ-ம்.—உதாரணம்
ஒ.—ஒப்பிடுக
கீ.—பகவத் கீதை
சங்.—ஸ்ரீசங்கராசாரியார்
ஸ்ரீ.—ஸ்ரீதரர் வியாக்கியானம்
பா.பே—பாடபேதம்
வி.ஸ,—விஷ்ணு ஸஹஸ்ரநாமம்
ரா.கி.—ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மொழி
நா.ப. ஸூ—நாரத பக்தி ஸூத்ரம்
ம.பா.—மஹாபாரதம்

பாக.—ஸ்ரீமத் பாகவத ஸாரம்
ஈ.ச. உப—ஈச உபநிஷத்து
ஐ. உப.—ஐதரேய ,,
கே. உப—கேன ,,
கட. உப.—கட ,,
ப்ரச்ன உப—ப்ரச்ன ,,
மு. உப.—முண்டக ,,
தை. உப.—தைத்திரீய ,,
சா. உப.—சாந்தோக்கிய ,,
ப்ரு. உப.—ப்ருஹதாரண்யக

ஸ்ரீ:

# முகவுரை

(1)

இதிஹாஸங்களும் புராணங்களும் 'மறை' எனப்படும் வேதத்தில் மறைந்து கிடக்கும் உண்மைகளை விளக்க வந்தவை. அவை நுட்பமான தத்துவங்களை பூதக் கண்ணாடியைப்போல் பெரிதாக்கிக் காட்டுகின்றன. ஒரு சிற்றெறும்பை பூதக் கண்ணாடியில் பார்த்தால் அதன் கண்களும் கால்களும், தெரியாத உறுப்புக்களுந் தெளிவாய்த் தெரிகின்றன. அதே மாதிரி, வேதத்தைப் படிக்கும்போது விளங்காத தத்துவங்களை ஸ்தூலமான புத்திக்கும் தெரியும்படி பெரிதாக்கிக் காட்டுவது புராணம். காலத்தையும் தேசத்தையும், தேவர்களையும் மனிதர்களையும், பலமடங்கு பெரிதாக்கிக் காட்டுவது அதன் இயல்பு. அதனால் அதை உண்மைக்குப் புறம்பானதென்றோ கட்டுக்கதையென்றோ எண்ணிப் புறக்கணிக்கக்கூடாது.

'வரமிம-முபதேச-மாத்ரியத்வம் நிகம-வனேஷு நிதாந்தசார-கின்ன:| விசினுத பவனேஷு வல்லவீனா-முபநிஷதர்த்த-முலூகலே நிபத்தம்||' வேதங்களாகிற அரணியங்களில் அலைந்து துன்புறுபவர்களே! இந்தச் சிறந்த உபதேசத்தை ஆதரியுங்கள். உபநிஷத்தின் அர்த்தம் உரலில் கட்டிவைக்கப்பட்டிருக்கிறது. கோபிகளின் வீடுகளில் தேடுங்கள்' என்று கூறுகிறார் லீலா சுகர். கடினமான உபநிஷதங்களைப் படித்தால் விளங்காத தத்துவம் பாகவதத்தை வாசித்தால் விளங்கும் என்பது இதில் தொனிக்கிறது.

புராணங்கள் இந்து மதத்தில் ஒரு சாரார்க்கோ, இந்நாட்டின் ஒரு பகுதியினர்க்கோ மட்டும் உரித்தானவையல்ல. அவை பாரத நாட்டின் பொது உடைமை. கவியின் மூலமும், கதைகளின் மூலமும் ஆன்ம வாழ்க்கையில் நிகழும் போராட்டங்களை அவை சித்திரித்துக் காட்டுகின்றன. புராணம் (புரா அபி நவ:) பழையதினும் பழையதாயினும், தினந்தோறும் உதித்துப் புத்தொளி தரும் சூரியனைப்போல் என்றும் புதிது (நவோ நவோ பவதி). நாம் புதிது புதிதாய்ப் படிக்கும் நூல்களில் பெரும் பகுதி இரண்டாந்தடவை படிக்கவும் தகுதியற்றவை. ஆனால் புராணங்களோ பல நூற்றாண்டுகளாக இந்நாடு முழுவதையும் வசப்படுத்தி வந்துள்ளன. அன்றுபோல் இன்றும், இராமாயணத்தையும் பாரதத்தையும் பாகவதத்தையும் கோடிக்கணக்கான மக்கள் கேட்டு இன்புறுகின்றனர். பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் நாள்தோறும் பாராயணம் செய்கின்றனர். 'யாவத் ஸ்தாஸ்யந்தி கிரய: ஸரிதச்ச மஹீ-தலே| தாவத் ராமாயண கதா லோகேஷு ப்ரசரிஷ்யதி||' மலைகளும் நதிகளும் பூமண்டலத்தில் எவ்வளவு காலமிருக்குமோ அவ்வளவு காலம் ராமாயண கதை உலகங்களில் உலவிவரும் என்று வால்மீகி கூறுகிறார். புராணங்களில்லாத இந்து மதம் உப்பில்லாத உண்டிபோல் இருக்கும்.

இராமாயணமும் பாரதமும் இதிஹாஸங்கள் எனப்படுவன. அவை இந்நாட்டின் பண்டைக்காலச் சரித்திரத்துடன் தொடர்புடையவை. 'இங்ஙனம் இருந்தது' எனக் கூறுவதால் 'இதி ஹ ஆஸம்' எனப் பெயர் ஏற்பட்டது. இராமாயணம் 24 ஆயிரம் சுலோகம் கொண்டது. பாரதம் ஒரு லக்ஷம் சுலோகம் கொண்டது. முக்கியமான புராணங்கள் பதினெட்டு. அவையெல்லாம் சேர்ந்து நாலு லக்ஷம் சுலோகம்.

ஸ்காந்தம் 81,000 சுலோகம்; பாத்மம் 55000; விஷ்ணு, வராஹ, நாரத, சிவ புராணங்கள் ஒவ்வொன்றும் 24,000; பாகவதம், பிரம்ம வைவர்த்தம், கூர்மம், காருடம் ஒவ்வொன்றும் 18,000; இவற்றினும் சிறியவை பிரம்மம், பிரம்மாண்டம், அக்னி, பவிஷ்யத், லிங்கம், வாமனம், மத்ஸ்யம், மார்க்கண்டேயம் என்பன. ஒவ்வொரு புராணத்திலும் சில முக்கியமான பகுதிகள் பெரிதும் போற்றப்படும்; மகா பாரதத்தில் பகவத் கீதையையும் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும் போல் இராமாயணத்தில் ஸுந்தரகாண்டம், ஆதித்யஹ்ருதயம், பிரம்மாண்ட புராணத்தில் லலிதா ஸஹஸ்ரநாமம், லலிதாத்ரிசதீ, மார்க்கண்டேய புராணத்தில் தேவி மாஹாத்மியம் முதலியன. பதினெட்டுப் புராணங்களும் சேர்ந்தால் இராமாயணத்தைப்போல் 18 புத்தகங்களின் அளவிருக்கும்.

வேத வியாஸர் கிருஷ்ணவதார காலத்தில் வேதங்களைப் பாகுபாடு செய்தாற் போல், மஹா பாரதத்தை எழுதிப் புராணங்களையும் கோர்வையாக ஒழுங்குபடுத்திச் சீடர்களுக்கு உபதேசித்தார். எத்தனையோ நூல்கள் தோன்றி மறைந்த பின்பும் அவை பிரசாரத்திலிருப்பது அவை நாட்டின் உயிர் நிலை என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

(2)

வியாஸர் மகாபாரதத்தைத் தொகுத்தபின் மனதில் நிறைவில்லாமல் எக்காரணத் தாலோ ஆசை நிறைவேறாதவர்போல் காணப்பட்டார். அச்சமயம் அவருடைய ஆசிரமத்திற்கு நாரதர் எழுந்தருளி, "எல்லாப் பொருட்களும் பரிபூர்ணமாய் நிறைந்த மிக அற்புதமான பாரதத்தைச் செய்தவர் நீர். அறியவேண்டியது பூர்ணமாக உம்மால் விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஸநாதனமான பிரம்ம தத்துவம் உம்மால் நன்கு ஆராயப் பட்டும் அறியப்பட்டும் இருக்கிறது. என்றாலும் பயனற்றவரைப்போல் உம்மைக் குறித்தே ஏன் வருந்துகிறீர்?" என்று வினவினர். "உம்மால் கூறப்பட்டதெல்லாம் என்னிடம் இருக்கத்தான் இருக்கின்றன. எனினும் எனது ஆத்மா ஸந்தோஷமடைய வில்லை. எனக்குக் குறைவு இன்னதெனத் தெளிவுபடாத அக்காரணத்தைத் தெளிவுறக் காட்டியருளல் வேண்டும்" என்றார் வியாஸர். "இயற்கையாகவே விஷயங்களில் பற்றுக்கொண்ட மனிதனுக்குத் தருமத்தின் பேரால் வெறுக்கத்தக்க காமிய கருமத்தை உபதேசித்திருக்கின்றீர். அது பெருந் தவறு. உமது உபதேசத்தை ஆதாரமாய்க்கொண்டு 'இதுவே முக்கிய தருமம்' என்று நம்பிய பாமர ஜனங்கள் அதினின்று நிவிருத்தியடைய வேண்டுமென்பதைக் கருதாமல் போவார்கள். தருமம் முதலியவைகளும் அவற்றிற்குச் சாதனங்களான அர்த்தங்களும் எங்ஙனம் உம்மால் கூறப்பட்டனவோ அங்ஙனம் பகவானுடைய மகிமை தொடர்ந்து வர்ணிக்கப் படவில்லை. எல்லோருடைய பந்தங்களும் நீங்கும் பொருட்டு பகவானுடைய லீலைகளைப் பிரகாசப்படுத்துங்கள்" என்று கூறினர் நாரதர். இந்த உபதேசத்தைப் பின்பற்றி ஸ்ரீமத் பாகவதத்தை எழுதி, வியாஸர் தன் புத்திரராகிய சுகருக்கு அத்தியயனம் செய்வித்தார். கங்கைக் கரையில் ரிஷிசிரேஷ்டர்களால் சூழப்பெற்றுப் பிராயோபவேசம் செய்திருந்த பரீக்ஷித்து மகாராஜாவுக்குச் சுகர் இதை உபதேசித்தார். அவர் அங்ஙனம் உபதேசிக்கையில் உக்ர ஜாதியில் பிறந்த ஸூதரும் அவருடைய அனுக்கிரஹத்தால் அங்கு வீற்றிருந்து கேட்கும் பாக்கியத்தைப் பெற்றார். பின்பு நைமிசாரணியத்தில் சௌனகாதி மகரிஷிகள் ஸத்ரயாகம் செய்கையில் அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி, ஸூதர் பாகவதத்தைத் தாம் சுகரிடம் கேட்டபிரகாரம் எடுத்தோதினர். இப்படி இது உலகில் பரவலாயிற்று. இது வேதங்களனைத்தின்

ஸாரமானது. ஒப்பற்ற தனிப் பெருமையுடையது. அத்தியாத்ம தீபம் போன்றது. பொறாமை முதலிய தீய குணங்களில்லாத நல்லவர்களுக்குப் பிரியமானது. எல்லோருக்கும் நன்மை பயப்பது. தாபத்ரயத்தைப் போக்குவது. பாகவதத்தை ஒருவன் கேட்க விரும்பினால், அப்போதே பகவான் அவனுடைய உள்ளத்தில் காட்சியளிக்கிறார்.

(3)

பாகவதத்தில் முக்கியமாகப் பத்து விஷயங்கள் விளக்கப்படுகின்றன: ஸர்க்கம், விஸர்க்கம், ஸ்தானம், போஷணம், ஊதிகள் (ஊழ்வினை), மன்வந்தரம், அவதாரக் கதைகள், நிரோதம் (ஒடுக்கமும் துஷ்ட நிக்ரஹமும்,) முக்தி, ஆசிரயம் (2.10.1–7). ஸர்க்கமாவது பஞ்ச பூதங்கள், (மஹத்) புத்தி, இந்திரியங்கள் ஆகியவற்றின் ஆதிஸ்ருஷ்டி, விஸர்க்கமாவது இதற்குமேல் தோன்றும் விதவிதமான சிருஷ்டி. பாகவதத்தில் முதல் இரண்டு ஸ்கந்தங்கள் அவதாரிகையாகவும், மூன்றாவது நாலாவது ஸ்கந்தங்கள் ஸர்க்கம் விஸர்க்கம் ஆகியவற்றின் விளக்கமாகவும் அமைகின்றன. ஸ்தானத்தைக்கூறும் ஐந்தாவது ஸ்கந்தம் நக்ஷத்திரமண்டலங்களையும் கிரஹங்களையும் பூகோளத்தையும் வர்ணித்து, பூமியில் உள்ள ஏழு கண்டங்களையும் அதில் ஜம்பூத்வீபத்தில் ஒன்பது தேசங்களுள் ஒன்றாகிய பாரத வர்ஷத்தையும், பாரதத்தை ஆண்ட துருவன், பிருது, ஜடபரதர் முதலியவர்களின் புண்ணிய சரித்திரங்களையும் வர்ணிக்கிறது. ஆறாவது ஸ்கந்தத்தின் விஷயம் போஷணம். விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் நிகழும் போர், சித்திரகேது உபாக்கியானம் அஜாமிளோபாக்கியானம் முதலியவற்றின் மூலம் பகவான் பக்தர்களைப் போஷிப்பது விளக்கப்படுகிறது. ஏழாவது ஸ்கந்தத்தில் ஜயவிஜயர்கள் ஸநகாதியர் சாபத்தால் வைகுண்டத்தினின்றிழிந்து ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகசிபுவாக முதல் பிறவியிலும், ராவணன் கும்பகர்ணனாக மறுபிறவியிலும், சிசுபாலன் தந்தவக்த்ரனாக மூன்றாம் பிறவியிலும் தோன்றிய வரலாறுகளால் கர்மகதியும் ஊழ்வினையின் போக்கும் காட்டப்படுகின்றன. ஹிரண்யகசிபு பகவானைப் பகைத்ததால் அவனுடைய பகைக்கு மருந்தாக அவன் வயிற்றிலேயே பகவான் பிரஹ்லாதனைத் தோற்றுவிக்கிறார். எட்டாவது ஸ்கந்தத்தில் மனுக்களின் சரிதங்களும், ஒவ்வொரு மன்வந்தரத்திலும் பகவான் அவதரித்து பக்தர்களைக் காப்பதும், கஜேந்திர மோக்ஷம், அமிருத மதனம், மத்ஸ்யாவதாரம், கூர்மாவதாரம், வாமனாவதாரம் முதலிய கதைகளால் விளக்கப்படுகின்றன. ஒன்பதாவது ஸ்கந்தம் ஈசானு கதை. இதில் ஸூர்ய வம்சத்திலும் சந்திர வம்சத்திலும் தோன்றிய மகா புருஷர்களின் வரலாறுகளையும் ஸ்ரீராமாவதார கிருஷ்ணாவதாரப் பெருமைகளையும் நோக்கங்களையும் காண்கிறோம். பத்தாவது ஸ்கந்தம் மற்றெல்லா ஸ்கந்தங்களையும் விடப் பெரியது. இது பூர்ணாவதாரமான கிருஷ்ணனுடைய லீலைகளையும் துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனத்தையும் கூறுகிறது. பதினொராவது ஸ்கந்தம் முக்தி தத்துவம். வேற்றுமை வடிவத்தைவிட்டுத் தான் தானாயிருத்தலே முக்தி : (முக்திர்-ஹித்வா அன்யதாரூபம் ஸ்வரூபேண வ்யவஸ்திதி:). பனிரண்டாவது ஸ்கந்தம் ஆசிரயம். எதனிடம் இவ்வுலகின் தோற்றமும் இருப்பும் ஒடுக்கமும் காணப்படுகிறதோ அது ஆசிரயம். அதுவே பரப்பிரம்மம் என்றும், பரமாத்மா என்றும் பகவான் என்றும் கூறப்படுகிறது. பத்தாவது லக்ஷணமான ஆசிரயத்தின் தெளிவான ஞானத்தின் பொருட்டே மற்ற ஒன்பது லக்ஷணங்களும் வர்ணிக்கப்படுகின்றன : (தசமஸ்ய விசுத்த்யர்த்தம் நவானாமிஹ லக்ஷணம்).

(4)

பாகவதம் ஒப்புயர்வற்ற பக்தி சாஸ்திரம். பாகவதத்தை அத்தியயனம் செய்து உபதேசித்த சுகப் பிரம்மம் அத்வைதத்தில் நிலைத்தவர். "நிவிருத்தியில் நிலைத்த

விரும், எதிலும் பற்றற்றவரும், ஆத்மானந்தத்தில் ஆழ்ந்தவருமான அம் முனிவர் விரிவான இந்த ஸம்ஹிதையை எதற்காக அப்பியஸித்தார்?" என்று சௌனகர் கேட்க, "ஆத்மானந்தத்தில் ஆழ்ந்த முனிவர்கள் எல்லாப் பற்றுகளுங் கழன்றவர்களெனினும் உருக்கிரமனுகிய பகவானிடத்தில் எக்காரணமுமில்லாமல் ஆழ்ந்த பற்று வைக்கின்றனர். அப்படிப்பட்டது ஹரியின் குணம்" என்று ஸூதர் கூறுகிறார். பக்தியின் பொருட்டு கல்பிக்கப்பட்ட துவைதம் அத்வைதத்தைவிட அழகு வாய்ந்தது : (பக்த்யர்த்தம் கல்பிதம் த்வைதம் அத்வைதா-தபி ஸுந்தரம்).

கீதையின் உபதேசத்திற்கு அடிப்படையாக அர்ஜுனனுக்கு தர்மஸங்கடத்தால் ஏற்பட்ட துயரத்தை முன் வைத்துள்ளதுபோல் பாகவதத்தைப் பரீக்ஷித்திற்கு உபதேசிப்பதற்கும் பிராம்மண சாபத்தால் ஏற்பட்ட துன்பந்தையும் விரக்தியையும் வைத்திருக்கிறது. துன்பக் கண்ணீர் பக்திப் பயிரை வளர்க்கும் நீராகிறது. பாகவதத்தை எழுதும்படி வியாஸருக்கு உபதேசித்த நாரதர் சுயசரிதையைச் சொல்லுவதில் தான் முற்பிறவியில் பட்ட கஷ்டத்தையும், தன் குழந்தைப் பருவத்தில் தாய் பாம்பு கடித்து இறந்ததையும் கூறி 'அதை பக்தர்களுக்கு நன்மையே கோருகின்ற பகவானுடைய அனுக்ரஹமாக எண்ணினேன்' (1-6-10) எனக் குறிப்பிடுகிறார்.

பரீக்ஷித்து கர்ப்பத்திலிருக்கும்போதே ஏற்பட்ட துன்பமும் குந்தியின் பிரார்த்தனையும் துன்பம் பக்திக்கு அனுகூலமாவதையே காட்டுகிறது. குந்தி கூறுகிறாள் : "ஜகத் குருவே! எங்கள் வாழ்க்கையில் அடிக்கடி விபத்துக்கள் வந்துகொண்டே இருக்கட்டும். ஏனெனில் அதனாலேயே பிறவா நிலைக்கு வழிகாட்டும் உமது தரிசனம் கிட்டும். உயர் குடிப்பிறப்பு, ஆதிக்கியம், கல்வி, ஸம்பத்து இவற்றால் பெருமிதமடைந்த மனிதன் உம்முடைய பெயரைக்கூடச் சொல்லுந் திறமையுடையவனுகான்." (1. 8. 26-27.) பீஷ்மஸ்துதியில் மீண்டும் இதே கருத்து வெளியாகிறது. "தரும புத்திரன் அரசனுகவும், பீமசேனன் கதாயுதத்தைத் தாங்கிக் காப்பவனுகவும், அர்ஜுனன் வில்லாளியாகவும், காண்டீவம் வில்லாகவும், கிருஷ்ணபகவான் உற்ற துணையாகவும் அமைந்த இடத்திலுமல்லவா விபத்து ஏற்படுகிறது. பகவானுடைய லீலா ரஹஸ்யத்தை ஒருபோதும் ஒரு மனிதனும் அறியமாட்டான்!' (1. 9. 15-16.)

கபிலகீதை தெளிவாக பக்தியின் லக்ஷணத்தை வர்ணிக்கிறது. "பக்தியோகமானது செல்லும் மார்க்கத்தையொட்டிப் பலவிதமாய்க் கருதப்படுகிறது. இயற்கையான குணங்களின் போக்கையொட்டி மனிதர்களின் பாவனையும் வேறுபடுகிறது. முன்கோபமும் பேதபுத்தியும் உள்ள எவன் இம்சையையோ, இடம்பத்தையோ, பொருமையையோ முன்னிட்டுக்கொண்டு என்னை வழிபடுகிருனே அவன் தாமஸன். பேதபுத்தியுள்ள எவன் விஷய சுகங்களையோ, புகழையோ, ஐசுவரியத்தையோ முன்னிட்டுக்கொண்டு விக்ரஹங்களில் என்னைப் பூஜிப்பானே அவன் ராஜஸன். பேதபுத்தியுள்ள எவன் பாபத்தைப் போக்கிகொள்ளுங் கருத்துடனே, பகவதர்ப்பண புத்தியுடனே, பூஜிக்கவேண்டியது கடமையென்ற நோக்கத்துடனே பக்தி செய்கின்றானே அவன் ஸாத்துவிகன். எனது குணங்களைக் கேட்ட மாத்திரத்திலேயே எல்லோருடைய உள்ளத்திலும் உறைபவனுகிய என்னிடம், ஸமுத்திரத்தை நோக்கி கங்கை ஓடுவதுபோல் மனத்தின் ஓட்டம் இடைவிடாது நிகழ்வதாயும், காரணமின்றி இயற்கையாகவும், வேறு நாட்டமில்லாததாகவும், எந்த பக்தி புருஷோத்தமனிடம் உண்டே அது நிர்க்குண பக்தி யோகத்தின் லக்ஷணம்." தாயாகிய தேவஹூதியிடம் பகவான் மேலும் கூறுகிறார் : "பலவிதமான திரவியங்களைக்கொண்டு பல கிரியைகளின் மூலம்

விக்ரஹத்தில் என்னை அர்ச்சித்தபோதிலும் ஜீவசமுதாயத்தை அவமதிப்பவர்களாயின் அவர்களது பூஜையால் நான் ஸந்தோஷமடையமாட்டேன். எல்லாப் பிராணிகளிடத்தும் பூதாத்மாவாகக் குடிகொண்டிருக்கும் என்னை ஜீவர்களுக்குச் செய்யும் தானத்தாலும் மரியாதையாலும் நட்பாலும் பேதமற்ற நோக்கத்தாலும் பூஜிக்கவேண்டும்" (3. 29. 24-34). பக்தி வளர்வதற்கு முக்கியமான ஸாதனங்கள் சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், பணிவிடை, நட்பு, ஆத்ம நிவேதனம் என்று பிரஹ்லாதர் கூறுகிறார்.

பக்தியால் பாவியும் பரமனுகலாம். இதற்கு உதாரணம் அஜாமிளன் கதை. அவன் உயிரைக் கொண்டுபோகவந்த யமதூதர்களை விஷ்ணு பாரிஷதர்கள் விரட்டி அவர்களும் மறைந்தபின், அஜாமிளன் தனக்குத்தானே இப்படிச் சொல்லிக் கொள்ளுகிறான்: "பாவியாகிய எனக்கும் என் மனதைத் தெளிவிக்கும் தேவ சிரேஷ்டர்களின் தரிசனம் கிட்டுவதற்கு ஏதோ பூர்வ புண்ணியம் இருந்திருக்க வேண்டும். இல்லாவிடின் சாகுந் தருவாயிலுள்ளவனும் அசுத்தனும் இழிகுலப் பெண்ணின் பதியுமான என்னுடைய நாவானது மனதிற்கினிய பகவந் நாமத்தை உச்சரிக்க எங்ஙனம் தகுதியுடையதாகும்? சூதாடியும், பாவியும், பிராம்மண தர்மத்தைக் கொன்றவனும் வெட்கங்கெட்டவனுமான நான் எங்கே? 'நாராயணு!' என்னும் பரம மங்களமான நாமம் எங்கே? பொய்யை மெய்யெனக் கருதிக் கெட்ட நான் இனி இவ்வுடலை நான் என்றும், என்னுடையதென்றும் எண்ணுவதை விட்டு பகவானுடைய நாம கீர்த்தனுதிகளால் பரிசுத்தமான மனதை அவனிடம் அர்ப்பணம் செய்யப்போகிறேன்." இங்ஙனம் அவன் ஒரு க்ஷண நேரம் கிட்டிய ஸாது ஸங்கத்தால் திட வைராக்கியம் உண்டாகியவனுய், எல்லாத் தீமைகளினின்றும் விடுபட்டுக் கங்கா துவாரத்தை யடைந்து பகவத் ஸ்வரூபத்தில் லயித்தான் (6. 2. 32-39).

காமம், கோபம், அபிமானம் முதலியவையுங்கூட பகவானிடம் செலுத்தப்பட்டால் பகவானை நினைக்கக் காரணமாவதால் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட வழியாகும். இந்தத் தத்துவம் ஏழாவது ஸ்கந்தத்தில் விளக்கப்படுகிறது. இராஜஸூய மஹா யக்ஞத்தில் சிசுபாலனிடத்திலிருந்து எழுந்த ஜோதி கிருஷ்ணனிடம் புகுந்தது. இங்ஙனம் சிசுபாலன் பகவானிடத்தில் ஸாயுஜ்யத்தை யடைந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்ணுற்று, தர்ம புத்திரர் நாரதரிடம் "ஏகாந்த பக்தர்களாலும் அடைதற்கரிய பரதத்துவமான வாசுதேவனிடத்தில் ஸாயுஜ்ய முக்தி பரம வைரியாகவும் பகவானை நிந்திப்பவனுகவும் இருந்த சிசுபாலனுக்குக் கிடைத்தது விந்தையாகவல்லவோ இருக்கிறது" என்று சொல்ல, நாரதர் கூறுகிறார்: "நிந்தை, துதி, மரியாதை, அவமானம் இவற்றிற்குப் பொருளாவது சரீரம். இரண்டற்றவராய், அனைத்திற்கும் ஆத்மாவாய், சரீராபிமானமில்லாமல் இருந்துகொண்டு எவர் எல்லோரையும் சிக்ஷிக்கிறாரோ அந்தப் பரம புருஷனுக்கு இம்சையையோ நிந்தையையோ எவரால் கல்பிக்க இயலும்? தொடர்ந்த பகைமையாலோ, பகைமையின் ஒழிவாலோ, பயத்தாலோ, நட்பாலோ, காமத்தாலோ பகவானிடத்தில் ஒருவன் எப்படியாவது மனதைச் செலுத்தட்டும்: (தஸ்மாத் கேனுப்யுபாயேன மன: க்ருஷ்ணே நிவேசயேத்) காமத்தாலும், துவேஷத்தாலும், பயத்தாலும், நடப்பாலும் பகவானிடம் மனதைப் புகுத்தி அதனுலேயே அதிலுள்ள குறைகள் நீங்கியவர்களாய், பக்தியினுல் போலவே பலர் அவரை நாடி நற்கதியடைந்திருக்கின்றனர். காமத்தால் கோபியர்களும், பயத்தால் கம்ஸனும், துவேஷத்தால் சிசுபாலன் முதலியவர்களும், உறவால் விருஷ்ணி குலத்தாரும் அவனை

யடைந்தனர். நட்பால் நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். பக்தியால் நாங்கள் அடைந்துள்ளோம்" (7. 1. 13-30).

துஷ்டக் குழந்தையைத் தாய் அடித்து மிரட்டித் தன் மடியில் தூங்கவைப்பது போல் பகவான் தன்னிடத்தில் வந்துவிட்டால் யாராயிருந்தாலும் அவர்களுடைய குற்றங் குறைகளைக் கருதாமல் ஸாலோக-ஸாரூப-ஸாமீப-ஸாயுஜ்ய முக்தியையும் அளித்துவிடுகிருன். பூதனு மோக்ஷத்தை வர்ணிக்கையில் சுகர் கூறுகிருர்: "உலகிலுள்ள குழந்தைகளை வதம் செய்பவளும், இரத்தத்தைக் குடிப்பவளுமாகிய அரக்கி கொல்ல வேண்டுமென்ற எண்ணத்துடன் கண்ணனுக்கு விஷப்பாலைக் கொடுத்துங்கூட தாயார் அடையக்கூடிய நற்கதியை அடைந்தாள். சிரத்தையுடனும் பக்தியுடனும் கிருஷ்ணபரமாத்மாவுக்கு மிகவும் பிரியமான எதையாவது அளித்தவர்களைப் பற்றிக் கேட்கவேண்டுமா? (10. 6. 35-36)' கரித்துண்டு நெருப்பில் விழுந்தால் நெருப்பாகி விடுவதுபோல் பகவத்ஸம்பந்தம் கரிக்கட்டைபோன்றவர்களையும் தன்மயமாக்கி விடுகிறது.

பக்தி முக்தியிலும் பெரிது: (அஸ்த்வேவ-மங்க **பக**வான் **ப**ஜதாம் முகு**ந்தோ** முக்திம் **ததா**தி கர்ஹிசித் ஸ்ம ந து **ப**க்தியோ**க**ம் —5. 6. 19). அதனுல்தான் உத்தவர் கோபிகளின் பக்தியைக் கண்டு பரவசமடைந்தவராய் "நந்த கோகுலத்திலுள்ள இடைப் பெண்களின் பாததூளிக்கு வந்தனம் செய்கிறேன். அவர்களுடைய ஹரிகீர்த்தனம் மூவுலகையும் புனிதமாக்குகிறது" என்ருர். பகவான் அவதாரகாரியம் முடிந்து பரமபதமேகும்போது உத்தவருக்கு முக்தியைத் தாராமல், ஸ்ரீராமாவதாரத்தில் ஆஞ்ஜனேயரை இங்கே வைத்துப் போனதுபோல் பக்தி செய்துகொண்டு இங்கிருக்கச் சொல்லிப் போனுர்: (மய்யாவேச்ய மன: ஸம்யக் ஸம**த்ரு**க் விசரஸ்வ **கா**ம்).

பக்தனுக்கு உபாஸனுமூர்த்தி ஸாமரஸ்யம் அவசியமென்பது பாகவதத்தில் பன்முறை வற்புறுத்திக் கூறப்படுகிறது. சீரழிந்த தக்ஷயக்ஞத்தை மீண்டும் பூர்த்தி செய்விக்கப் பரமசிவனே கருணைகொண்டு தேவர்களின் பிரார்த்தனைக்கிணங்கி முடிவில் யாகசாலைக்கு வந்தபோது ஸ்ரீமந் நாராயணனும் அங்கு தோன்றி உபதேசித்தது மூர்த்தி ஸாமரஸ்யத்தைப்பற்றிய பாகவத ஸித்தாந்தம். "கேவலம் பரமாத்மாவாகவும், அனைத்தினின்றும் பிரிதற்ற பிரம்மாவாகவும் நான் இருக்க, பிரம்மாவையும் ருத்திரனையும் ஜீவராசிகளையும் என்னில் வேருக வறிவிலிகள் கருதுகிருர்கள். அனைத்துலகிற்கும் ஆத்மாவாயும், இயற்கையில் ஒன்ருகவுமுள்ள மூர்த்திகளிடை எவன் வேற்றுமையைக் காண்பதில்லையோ அவனே சாந்தியை யடைவான் (4. 7. 52-54).

பக்தியின் பரா காஷ்டை அத்வைத ஸித்தி. 'பக்தியால் நான் எவன், எத்தன்மையோன் என்று உண்மையில் உணர்ந்து அதன்பின் விரைவில் என்னிடமே பக்தன் புகுகின்ருன் (கீ. 18. 55). தேவஹூதி பக்தியால் அடைந்த நிலையின் வர்ணனை மூன்ருவது ஸ்கந்தத்திற்குச் சிகரம் வைத்தாற் போலுளது. தேவஹூதி தன் புத்திரனைக் கபில தேவனுயவதரித்த ஹரியையே இடைவிடாது தியானம் செய்பவளாய், ஜீவனுக்கு அதிஷ்டானமும் பகவானுமான பரப்பிரம்மத்தினிடத்தில் லயித்த மதியுடையவளாய், ஜீவபாவம் நீங்கி, எல்லாக் கிலேசங்களினின்றும் விடுபட்டுப் பரமானந்தத்தை எய்தினுள். நிரந்தரமாய் ஸமாதியில் நிலைத்துவிட்டதால் விஷயங்களில் ஸத்தியபுத்தி (குணப்பிரமை) நீங்கிச் சொப்பனத்தில் கண்ட காட்சியை விழித்துக்கொண்டவன் பொருட்படுத்தாதவாறு அவள் தனது சரீரத்தைப்பற்றியும் நினைக்கவில்லை. அச்சரீர

மானது பிறரால் போஷிக்கப்பட்டு வந்தது. எனினும் அது வாட்டமுறுமலிருந்ததற்கு முக்கிய காரணம் மனதில் கிலேசமின்மையே ஆகும். அழுக்கால் மூடப்பட்டுப் புகை சூழ்ந்த நெருப்புப்போல் அது விளங்கிற்று. இங்ஙனம் அவள் கபிலரால் உபதேசிக்கப் பட்ட மார்க்கத்தால் வெகு விரைவில், எல்லா நிலமும், எல்லோருடைய ஆத்மாவும், எல்லாத் துவந்த்வங்களுக்கும் அப்பாற்பட்டதுமான பகவத் பதத்தை யடைந்தாள் (3. 33. 26-30).

பாகவத முடிவில் வர்ணிக்கப்படும் பரீக்ஷித்தின் முக்தியும் ஸாலோகம்-ஸாரூபம்-ஸாமீபம் போன்றதன்று. அது அத்வைத ஸித்தியே. 'எங்ஙனம் பெருகியோடும் நதிகள் நாம ரூபங்களை யிழந்து ஸமுத்திரத்தில் மறைகின்றனவோ அங்ஙனம் ஞானி நாம ரூபங்களினின்று விடுபட்டு உயர்ந்ததற்கெல்லாம் உயர்ந்த தேஜோமயமான புருஷனை அடைகிறான் (மு. உப. 3. 2-8). சுகப் பிரம்மம் பரீக்ஷித்துக்குச் செய்த முடிவான உபதேசம் இதையே கூறுகிறது: "'நான் பரந்தாமாவாகிய பிரம்மம். பரம பதமாகிய பிரம்மமே நான்' என்று பார்ப்பவனாகி நிஷ்களப் பிரம்மத்தினிடம் ஆத்மாவைச் சேர்த்து, விஷத்துடன்கூடிய வாய்களால் உன் பாதத்தில் கடிக்கும் தக்ஷகன் என்ற ஸர்ப்பத்தையும், உன் சரீரத்தையும் பார்க்கமாட்டாய்" (12. 5. 11-12).

பரீக்ஷித்து, "**ஸித்தோஸ்மி**, அனுக்ரஹீதோஸ்மி! பகவானே! உம்மால் காட்டப்பட்டதும், பயமற்றதும், கைவல்யரூபமுமான பிரம்மத்தையடைந்த நான் தக்ஷகன் முதலிய மிருத்யுக்களிடம் பயமடையவில்லை" என்று கூறிச் சரீரம் தன்னை விடுமுன் தான் சரீரத்தை விட்டவராய், மனதை ஆத்மாவிடம் சேர்த்து, விருக்ஷம்போல் அசையாத பிராணனுள்ளவராகித் தியானத்திலாழ்ந்து பிரம்மஸ்வரூபியாயினர்."

'எந்த முனிவர் ஸம்ஸாரமாகிய ஸர்ப்பத்தால் தீண்டப்பட்ட பரீக்ஷித்து ராஜாவை விடுவித்தாரோ அந்த சுத்தரும், பிரம்மஸ்வரூபியும், யோகேசுவரருமாகிய சுகருக்கு நமஸ்காரம்' என்று தலைவணங்கிப் பாகவதக் கதையைச் சௌனகாதி ரிஷிகளுக்குக் கூறின ஸூதர் பூர்த்தி செய்கிறார்.

(5)

சுகர் பாகவதத்தை ஏழு நாட்களில் பரீக்ஷித்துக்கு உபதேசித்தார்: முதல் நாள் வராஹாவதாரம் வரை; இரண்டாவது நாள் ஜடபரதர்பாக்கியானம் வரை; மூன்றாவது நாள் அமிருதமதனம் வரை; நாலாவது நாள் கிருஷ்ணாவதாரம் வரை; ஐந்தாவது நாள் ருக்மிணீ கல்யாணம் வரை; ஆறாவது நாள் உத்தவஸம்வாதம் வரை; ஏழாவது நாள் பூர்த்தி. இதே முறையில் பாகவதத்தைப் பாராயணம் செய்வது 'ஸப்தாஹக் கிரமம்' எனப்படும்.

இந்தப் பதிப்பில் அப்படிப் பிரித்து ஏழுநாளில் படிக்க அனுகூலமாயிருக்கும் வகையில், தொடர்பு கெடாமல், முக்கியமான விஷயங்கள் விடுபடாமல் பாகவதத்தின் மூலம் ஏறக்குறைய ஆறாயிரம் சுலோகங்களில் சுருக்கித் தரப்பட்டுள்ளது. சுலோகங் களின் எண்ணிக்கையில் 10. 2. 6. என்பதற்குப்பின் 10. 2. 9 என்று வந்தால் இடையில் இரண்டு சுலோகங்கள் விரிவுக்கஞ்சி விடப்பட்டிருக்கின்றன என்று கொள்ளவேண்டும். ஒவ்வொரு சுலோகத்திற்கும் தனித்தனியாகப் பொழிப்புரையும், ஸ்ரீதர ஸ்வாமியினுடைய '**பாவார்த்ததீபிகை**' என்னும் வியாக்கியானத்திலிருந்து

விளக்கக் குறிப்புக்களும், பகவத்கீதை, உபநிஷதங்கள், ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மொழிகள், திவ்யப் பிரபந்தம் ஆகியவற்றிலிருந்து ஒப்பிட்டுப் பார்க்க உதவும் மேற்கோள்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

முதல் பாகத்தில் ஸ்ரீகிருஷ்ணாவதாரம் வரை உள்ள நாலுநாள் கதை (ஸ்கந்தம் 1. 1. முதல் 10. 6. வரை) அடக்கம். மீதியுள்ள (ஸ்கந்தம் 10. 7. முதல் 12. 13. முடிய) மூன்று நாள் கதையின் பூர்த்தி இரண்டாம் பாகத்தில் உளது.

அச்சிடுவதில் பிழைகளைத் திருத்தி உதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும், இதை அழகாக அச்சிட்டுத் தந்த அச்சுக்கூடத்தாருக்கும், இதைப் படித்து என் முயற்சியை ஸபலமாக்கும் அன்பர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகும்.

குரோதிஞு தைமீ 1௳, 14-1-1965
ஸ்ரீராம கிருஷ்ண மாணவர் இல்லம்,
மயிலாப்பூர், சென்னை-4.

உரையாசிரியர்.

ओं

स्वरूपनिरूपणहेतवे

श्री गुरवे नमः ॥

## समर्पणम्

निगमकल्पतरो-र्गलितं फलं
शुकमुखा-दमृतद्रव-संयुतम् ।
पिबत भागवतं रस-मालयं
मुहुरहो रसिका भुवि भावुकाः ॥

புவியிலுள்ள ரஸிகர்களே! நுட்பம் அறிந்தவர்களே! வேதமாகிற விருக்ஷத்தினின்று (சுகரிடம் சேர்ந்தபின்) சுகருடைய முகத்தினின்று நழுவியதும் அமிருதமயமான திரவம் நிறைந்ததுமாகிய பாகவதம் எனும் இந்தப் பழ ரஸத்தை மேலும் மேலும் இடைவிடாது, உயிருள்ளவரை (லயமடையும்வரை) பருகுங்கள்.

பாகவதம் 1.1.3.

॥ श्रीः ॥

# ॥ श्रीमद्भागवतसारः ॥

## ॥ श्रीमद्भागवतपाठविधिः ॥

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् सर्व-विघ्नोपशान्तये ॥

अस्य श्रीमद्भागवताख्य-महामन्त्रस्य नारद ऋषिः, बृहती छन्दः, श्रीकृष्णः परमात्मा देवता । ब्रह्म बीजम्, भक्तिः शक्तिः, ज्ञानवैराग्ये कीलकम् । श्रीभगवत्प्रसाद-सिद्ध्यर्थे पाठे विनियोगः ।

न्यासः ॥ क्लां अंगुष्ठाभ्यां नमः । क्लीं तर्जनीभ्यां नमः । क्लूं मध्यमाभ्यां नमः । क्लैं अनामिकाभ्यां नमः । क्लौं कनिष्ठिकाभ्यां नमः । क्लः करतलकरपृष्ठाभ्यां नमः ।

क्लां हृदयाय नमः । क्लीं शिरसे स्वाहा । क्लूं शिखायै वषट् । क्लैं कवचाय हुम् । क्लौं नेत्र-त्रयाय वौषट् । क्लः अस्त्राय फट् ।

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ॥

॥ ஸ்ரீ : ॥

# ஸ்ரீமத் பாகவத ஸாரம்

## ஸ்ரீமத் பாகவத பாடவிதி

எங்கும் நிறைந்தவரும்—எனினும் அன்பர்க்குகந்த வடிவம் ஏற்பவரும்—வெண்மையான ஆடை உடுத்தவரும், நிலவு போன்ற ஒளியுள்ளவரும், நான்கு கைகளுள்ளவரும் ஆனந்தம் பொங்கும் முக மண்டலத்தை உடையவரும்—ஆகிய கணபதியை—எல்லா இடையூறுகளும் விலகுவதற்காக தியானம் செய்யவேண்டும்.

ஸ்ரீமத் பாகவதமெனும் இம் மஹா மந்திரத்திற்கு ரிஷி நாரதர், சந்தம் ப்ருஹதீ, தேவதை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. பீஜம் பிரம்மம், சக்தியாவது பக்தி, கீலகமாவது ஞானமும் வைராக்கியமும். பகவானுடைய திருவருள் சித்திக்கும் பொருட்டுப் படித்தல் இதற்குப் பயன்.

**நியாஸம்** :—'க்லாம் - க்லீம் - க்லூம் - க்லைம் - க்லௌம் - க்ல:' என்று கரந்நியாஸமும் அங்கந்நியாஸமும் செய்து '**பூர்ப்பு**வஸ்ஸுவரோம்' என்று தீமைகள் அணுகா வண்ணம் '**திக்பந்தம்**' செய்க.

ध्यानम् ॥

मूकं करोति वाचालं पंगुं लंघयते गिरिम् ।
यत्कृपा तमहं वन्दे परमानन्दमाधवम् ॥ १ ॥

यं ब्रह्मा-वरुणेन्द्र-रुद्रमरुतः स्तुन्वन्ति दिव्यैस्स्तवै-
वेदैस्सांग-पदक्रमोपनिषदै-र्गायन्ति यं सामगाः ।
ध्यानावस्थित-तद्गतेन मनसा पश्यन्ति यं योगिनो
यस्यान्तं न विदु-स्सुरासुरगणा देवाय तस्मै नमः ॥ २ ॥

जन्माद्यस्य यतोऽन्वया-दितरतश्चार्थेष्वभिज्ञः स्वराट्
तेने ब्रह्म हृदा य आदिकवये मुह्यन्ति यत्सूरयः ।
तेजो-वारि-मृदां यथा विनिमयो यत्र त्रिसर्गो मृषा
धाम्ना स्वेन सदा निरस्तकुहकं सत्यं परं धीमहि ॥ ३ ॥

धर्मः प्रोज्झित-कैतवोऽत्र परमो निर्मत्सराणां सतां
वेद्यं वास्तवमत्र वस्तु शिवदं तापत्रयोन्मूलनम् ।
श्रीमद्भागवते महामुनिकृते किं वा परैरीश्वरः
सद्यो हृद्यवरुध्यतेऽत्र कृतिभिः शुश्रूषुभिस्तत्क्षणात् ॥ ४ ॥

निगमकल्पतरो-र्गलितं फलं शुकमुखादमृतद्रवसंयुतं ।
पिबत भागवतं रस-मालयं मुहुरहो रसिका भुवि भावुकाः ॥ ५ ॥

**தியானம்** :—எவருடைய திருவருள் ஊமையனையும் சிறந்த பேச்சில் வல்லவனுக்கு கிறதோ, நொண்டியை மலையைத் தாண்டச் செய்கிறதோ அந்தப் பரமானந்த வடிவினரான மாதவனை நான் வணங்குகிறேன். (1)

எவரை பிரம்மா, வருணன், இந்திரன், ருத்ரன், மருத்துக்கள் முதலியோர் தெய்விக மான துதிகளால் போற்றுகின்றனர்களோ, ஸாமகானம் பாடுவோர், பதம் கிரமம் உபநிஷ தங்களுடன் கூடிய வேதங்களால் எவரைப் பாடுகிறார்களோ, தியானத்தில் நிலைத்து ஒன்றுபட்ட மனத்தால் யோகிகள் எவரைக் காண்கிறார்களோ, தேவகணங்களும் அசுர கணங்களும் எவருடைய முடிவான நிலையை அறியமாட்டார்களோ, அந்த தேவ தேவருக்கு நமஸ்காரம். (2)

உடன்பாட்டாலும் எதிர் மறையாலும் இவ்வுலகின் பிறப்பு முதலியன எதனிடமிருந்து உண்டானதாய் ஊகிக்கப்படுமோ; எல்லாப் பொருளிலும் உள்ளிருந்து அனைத்தையும் அறிவதாய் ஸ்வயம் பிரகாசமாயுள்ள எந்தப் பரம்பொருள் மகான்களும் ஆழங்காணமல் மயங்கும் வேதத்தை ஆதிரிஷியாகிய பிரம்மாவுக்கு ஸங்கல்ப மாத்திரத்தால் அளித்ததோ எதனிடம் பிருதிவி, அப்பு, தேயு முதலியவற்றில் கானலில் நீர்போல் ஒன்றை மற்றென் றாகக் காட்டுவிக்கும் முக்குணச் சிருஷ்டியாகிய பொய்த் தோற்றம் ஏற்படுகிறதோ தன்னொளியால் எப்போதும் குறைவொன்றுமின்றி விளங்குவது எதுவோ; அந்த உண்மைப் பரம்பொருளை தியானம் செய்வோம். (3)

முனிபுங்கவரால் செய்யப்பட்ட இந்த ஸ்ரீமத் பாகவதத்தில் பொறாமை நீங்கிய ஸாதுக் களுக்குக் கபடமற்ற சிறந்த தர்மம் விளக்கப்படுகிறது. அழிவற்றதாயும், சிறந்த மங்களத் தைத் தருவதாயும், தாபத்திரயங்களை வேருடன் களைவதாயுமுள்ள வஸ்து எதுவோ அதுவே இங்கு அறியத்தகுந்தது. புண்ணியஞ் செய்தவர்களாயும் பாகவதத்தைக் கேட்க வேண்டுமென்ற ஆசையுள்ளவர்களாயுமிருப்பவர்களால் பகவான் அக்கணமே இரு தயத்தில் கட்டி நிறுத்தப்படுகிறார். மற்றவைகளால் ஆகவேண்டியது என்ன? (4)

புவியிலுள்ள ரஸிகர்களே! நுட்பம் அறிந்தவர்களே! வேதமாகிற கற்பக விருக்ஷத் தினின்று பழுத்ததும் சுகருடைய முகத்தினின்று நழுவியதும் அமிருதமயமான ரஸம் நிறைந்ததுமாகிய பாகவதம் எனும் இப்பழரஸத்தை மேலும் மேலும் இடைவிடாது உயி ருள்ளவரை பருகுங்கள். (5)

यं प्रव्रजन्त-मनुपेत-मपेतकृत्यं द्वैपायनो विरहकातर आजुहाव ।
पुत्रेति तन्मयतया तरवोऽभिनेदु-स्तं सर्वभूतहृदयं मुनि-मानतोऽस्मि ॥ ६ ॥

यः स्वानुभाव-मखिल-श्रुतिसारमेक-
मध्यात्मदीप-मतितितीर्षतां तमोऽन्धम् ।
संसारिणां करुणयाह पुराणगुह्यं
तं व्याससूनु-मुपयामि गुरुं मुनीनाम् ॥ ७ ॥

नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ॥ ८ ॥

पंच पूजा ॥

लं- पृथिव्यात्मने गन्धं समर्पयामि ।
हं - आकाशात्मने पुष्पैः पूजयामि ।
यं - वाय्वात्मने धूपमाघ्रापयामि ।
रं - अग्न्यात्मने दीपं दर्शयामि ।
वं - अमृतात्माने अमृतं महानैवेद्यं निवेदयामि ।
सं - सर्वात्मने सर्वोपचारपूजां समर्पयामि ॥

समापनम्

कृष्णं कमलपत्राक्षं पुण्य-श्रवण-कीर्तनम् ।
वासुदेवं जगद्योनिं नौमि नारायणं हरिम् ॥

॥ हरिः ओं तत् सत् ॥

துணையின்றித் துறவியாய்க் கிளம்பியவரும் கருமத்தில் பிரவிருத்தி யில்லாதவருமான எவரைத் துவைபாயனர் பிரிவொற்றுமையால் "புத்திரா!" என்று அழைத்தபோது, அனைத்துந் தானேயாகி நின்றமையால் மரங்களும் "ஏன், ஏன்" என்றனவோ, அங்ஙனம் ஸர்வ ஜீவராசிகளின் உள்ளமாகி நின்ற முனிவரை வணங்குகிறேன். (6)

ஆத்மானுபவத்தை யளிப்பதும், வேதங்களனைத்தின் ஸாரமானதும், ஒப்பற்ற தனிப் பெருமையுடையதும், அத்தியாத்ம தீபம் போன்றதுமாகிய இந்த ரகசியமான புராணத்தை அஞ்ஞான இருளைக் கடக்க அவாக்கொண்ட ஸம்ஸாரிகளுக்கு எவர் கருணையால் உபதேசித்தாரோ அந்த முனிவர்களின் குருவாகிய வியாஸபுத்திரரைச் சரணமடைகின்றேன். (7)

நாராயணனையும், புருஷசிரேஷ்டனுகிய நரனையும், ஸரஸ்வதீ தேவியையும், வியாஸரையும் நமஸ்கரித்து ஜயத்தைக் கூறவேண்டும். (8)

பஞ்ச பூஜை

லம், ஹம், யம், ரம், வம், ஸம் என்ற பீஜாக்ஷரங்களை உச்சரித்து, கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் என்ற ஐந்து உபசாரங்களுடன் பூஜையை மானஸிகமாகவோ, பாஹ்யமாகவோ செய்க.

ஸமாபனம்

க்ருஷ்ணம் கமலபத்ராக்ஷம் புண்ய-ச்ரவண-கீர்த்தனம் ।
வாஸுதேவம் ஜகத்யோனிம் நௌமி நாராயணம் ஹரிம் ॥

॥ ஹரி: ஓம் தத் ஸத் ॥

## ॥ श्रीमद्भागवत–सप्ताह–क्रमः ॥

प्रथमेऽह्नि वराहान्तं द्वितीये भरतान्तिकम् ।
तृतीयेचाब्धिमथनं चतुर्थे कृष्णजन्म च ॥

पञ्चमे तु पठेद्विद्वान् रुक्मिण्याहरणावधि ।
षष्ठे उद्धवसंवादं सप्तमे तु समापयेत् ॥

## ஸ்ரீமத்பாகவத-ஸப்தாஹ - க்ரமம்

முதல் நாள் வராஹாவதாரம் வரை.
இரண்டாவது நாள் ஜடபரதோபாக்கியானம் வரை.
மூன்றுவது நாள் அமிருதமதனம் வரை.
நாலாவது நாள் கிருஷ்ணவதாரம் வரை.
ஐந்தாவது நாள் ருக்மிணீகல்யாணம் வரை.
ஆறுவது நாள் உத்தவஸம்வாதம் வரை.
ஏழாவது நாள் பூர்த்தி.

### முதல் நாள் கதை (1·1—3·19)

(ஆரம்பத்திலிருந்து வராஹாவதாரம் வரை)

### ஸ்கந்தம் 1.

1. **அவதாரிகை**—சௌனகாதி முனிவர்களின் ஸத்ரயாகத்தில் ஸூதர் எழுந்தருளுதல் - பாகவத வரலாறு - நாரத வியாஸ ஸம்வாதம் - நாரதர் பூர்வஜன்மகதை - பாகவதக் கதை ஆரம்பம். அத் 1·1—1·6.

2. **பாரதப்போர் முடிவு**—அசுவத்தாமன் அபாண்டவாஸ்திரம் - குந்திஸ்தோத்திரம் - பீஷ்மோபதேசம் - பீஷ்ம நிர்யாணம் - பகவான் துவாரகை திரும்புதல் அத் 1·7—1·11

3. **பரீக்ஷித்தின் வரலாறும் பாண்டவர் மஹாப்பிரஸ்தானமும்**—பரீக்ஷித்தின் பிறப்பும் வளர்ப்பும் - விதுரர் உபதேசம் - அர்ஜுனன் துவாரகையிலிருந்து திரும்புதல் - பாண்டவர் மஹாப்பிரஸ்தானம். அத் 1·12—1·15.

4. **பரீக்ஷித்தின் பிராயோபவேசம்**—பரீக்ஷித்தின் திக்விஜயம் - கலி நிக்ரஹம் - முனிகுமாரர் சாபம் - பிராயோபவேசம் - சுகர் எழுந்தருளுதல். அத் 1·16—1·18.

### ஸ்கந்தம் 2.

5. **பரதத்துவ நிர்ணயம்**—தியானவிதி - ஸ்தூல தாரணையும் ஸூக்ஷ்ம தாரணையும் - பிரம்ம நாரத ஸம்வாதம் - பரதத்துவ நிர்ணயம் - புருஷஸூக்த முறையில் விராட் வர்ணனை - சதுச்லோக பாகவதம் - பாகவத லக்ஷணம். அத் 2·1—2·10.

### ஸ்கந்தம் 3.

6. **ஸர்க்கவர்ணனை**—விதுர உத்தவ ஸம்வாதம் - விதுர மைத்ரேய ஸம்வாதம் - ப்ராக்ருத ஸ்ருஷ்டியும் வைக்ருத ஸ்ருஷ்டியும்-ப்ரம்மகல்பம் பத்மகல்பம் வராஹ கல்பம்-வராஹாவதாரமும் ஹிரண்யாக்ஷவதமும். அத் 3·1—3·19.

# ॥ श्रीमद्भागवत-सारः ॥

## ॥ प्रथमः स्कन्धः ॥

### ॥ अवतारिका ॥ १ ॥

जन्माद्यस्य यतोऽन्वया-दितरत-श्चार्थेष्वभिज्ञः स्वराट्
तेने ब्रह्म हृदा य आदिकवये मुह्यन्ति यत्सूरयः ।
तेजो-वारि-मृदां यथा विनिमयो यत्र त्रिसर्गो मृषा
धाम्ना स्वेन सदा निरस्तकुहकं सत्यं परं धीमहि ॥ १-१ ॥

# ஸ்ரீமத் பாகவத ஸாரம்

## முதல் ஸ்கந்தம்

### 1. அவதாரிகை

1. 1. (அன்வயாத்) உடன்பட்டாலும் (இதரதச்ச) எதிர்மறையாலும் (அஸ்ய) இவ்வுலகத்தின் (ஜன்மாதி) பிறப்பு முதலியன (யத:) எதனிடமிருந்து உண்டாவதாய் ஊகிக்கப்படுமோ; (அர்த்தேஷ்வபிஜ்ஞ:) எல்லாப் பொருளிலும் உள்ளிருந்து அனைத்தையும் அறிவதாயும் (ஸ்வராட்) ஸ்வயம்பிரகாசமாயும் உள்ள (ய:) எந்தப் பரம்பொருள் (முஹ்யந்தி யத்ஸூரய:) மகான்களும் ஆழங்காணாது மயங்கும் (ப்ரஹ்ம) வேதத்தை (ஆதிகவயே) ஆதிரிஷியாகிய பிரம்மாவுக்கு (ஹ்ருதா) ஸங்கல்ப மாத்திரத்தால் (தேனே) அளித்ததோ; (யத்ர) எதனிடம் (தேஜோ-வாரி-ம்ருதாம்) பிருதிவி அப்பு தேயு முதலியவைகளில்(யதாவினிமய:)கானலில் நீர்போல் ஒன்றை மற்றொன்றாகக் காணும்(த்ரிஸர்க்க:-ம்ருஷா) முக்குணச் சிருஷ்டியாகிய பொய்த் தோற்றமோ; (ஸ்வேன தாம்னா) தன்னொளியால் (ஸதா) எப்பொழுதும் (நிரஸ்தகுஹகம்) நிஷ்களங்கமாய் விளங்குவது எதுவோ, அந்த (ஸத்யம் பரம்) உண்மைப் பரம்பொருளை (தீமஹி) தியானம் செய்வோம்.

---

1-1. **ஜன்மாத்யஸ்ய யத:**—ஒ. 'இந்தப் பிராணிகளெல்லாம் எதனிடமிருந்து உண்டாயினவோ, உண்டாகியவை எதனிடம் உயிர் வாழ்கின்றனவோ, முடிவுறும்போது எதனிடம் புகுந்து மறைகின்றனவோ, அதை ஆராய்ந்தறிய முயல்வாய்; அதுவே பிரம்மம்'
—தை. உப.3.1.

**விநிமய:**—(அன்யஸ்மின்-னன்யாவபாஸ:) ஒன்று மற்றொன்றாகத் தோற்றமளித்தல்.

**ஆதிரிஷியாகிய பிரம்மாவுக்கு:**—ஒ. (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை, தம் ஹ தேவ-மாத்ம-புத்தி-ப்ரகாசம் முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே ॥) ஆதியில் பிரம்மாவைப் படைத்து அவனுக்கு வேதங்களையும் கொடுத்தருளியவன் எவனோ, நமக்குள்ளிருந்து நமது புத்தியைப் பிரகாசிக்கச் செய்பவன் எவனோ, அந்த தேவனை மோக்ஷத்தில் விருப்பமுடைய நான் சரணமடைகின்றேன்.

**ஸத்யம் பரம் தீமஹி:**—ஒ. (காயத்ர்யாரம்பேண காயத்ர்யாக்ய பரப்ரஹ்ம-வித்யா-ரூப-மேதத் புராணம் இதி தர்சிதம்) காயத்திரியில் ஆரம்பிப்பதால் காயத்திரியால் போற்றப்படும் பிரம்ம வித்யா ரூபமாக உள்ளது இப் புராணம் என்று காட்டப்படுகிறது.—ஸ்ரீதரர்.

धर्मः प्रोज्झित-कैतवोऽत्र परमो निर्मत्सराणां सतां
वेद्यं वास्तवमत्र वस्तु शिवदं तापत्रयोन्मूलनम् ।
श्रीमद्भागवते महामुनिकृते किं वा परैरीश्वरः
सद्यो हृद्यवरुध्यतेऽत्र कृतिभिः शुश्रूषुभि-स्तत्क्षणात् ॥ १-२ ॥

निगम-कल्पतरो-र्गलितं फलं शुकमुखा-दमृतद्रव-संयुतम् ।
पिबत भागवतं रसमालयं मुहुरहो रसिका भुवि भावुकाः ॥ १-३ ॥

नैमिषेऽनिमिष-क्षेत्रे ऋषयः शौनकादयः ।
सत्रं स्वर्गाय-लोकाय सहस्र-सम-मासत ॥ १-४ ॥

त एकदा तु मुनयः प्रात-र्हुत-हुताग्नयः ।
सत्कृतं सूत-मासीनं पप्रच्छुरिद-मादरात् ॥ १-५ ॥

1. 2. (மஹாமுனிக்ருதே) முனிபுங்கவரால் செய்யப்பட்ட (அத்ர ஸ்ரீமத் **பாக**வதே) இந்த ஸ்ரீமத் பாகவதத்தில் (நிர்மத்ஸராணும் ஸதாம்) பொருமை நீங்கிய ஸாதுக்களுக்கு (ப்ரோஜ்ஜித-கைதவ:) கபடம் முற்றும் நீங்கிய (பரமோ **த**ர்ம:) உயர்ந்த தர்மம் உளது. (அத்ர) இங்கு (வாஸ்தவம்) அழியாததாயும் (**சி**வ**தம்**) சிறந்த மங்களத்தைத் தருவதாயும் (தாபத்ரயோன்மூலனம்) தாபத்திரயங்களை வேருடன் களைவதாயும் உள்ள (வஸ்து) வஸ்துவே (வேத்**ய**ம்) அறியவேண்டியது. (அத்ர) இங்கு (க்ருதி**பி**:) புண்ணியஞ் செய்தவர்களாயும் (**சுச்**ரூஷு**பி**:) பாகவதத்தைச் சிரவணம் செய்ய வேண்டும் என்று இச்சிப்பவர்களாயும் உள்ளவர்களால் (ஸ**த்**ய: தத்க்ஷணுத்) உடனே அக்கணமே (ஹ்**ருதி**) இருதயத்தில் (ஈ**ச்**வர:) பகவான் (அவருத்**த்**யதே) அசையாமல் நிறுத்தப்படுகிருர். (கிம் வா பரை:) மற்றவைகளால் ஆகவேணடிய தென்ன?

1. 3. புவியிலுள்ள ரஸிகர்களே! நுட்பம் அறிந்தவர்களே! வேதமாகிற கற்பக விருக்ஷத்தினின்று (சுகரிடம் சேர்ந்தபின்) சுகருடைய முகத்தினின்றும் நழுவியதும் அமிருதமயமான திரவம் நிறைந்ததுமாகிய பாகவதம் எனும் இப்பழ ரஸத்தை மேலும் மேலும் இடைவிடாது, உயிருள்ளவரை (லயமடையும் வரை) பருகுங்கள்.

1. 4. அநிமிஷரான பகவான் நித்தியவாசம் செய்யும் க்ஷேத்திரமாகிய நைமிசாரணியத்தில் சௌனகாதி மஹரிஷிகள், ஸ்வர்க்கவாசிகளும் விரும்பத்தக்க லோகத்திற்காக ஆயிரம் ஆண்டுகள் ஸத்திர யாகம் செய்தனர்.

1. 5. ஒரு சமயம் காலையில் ஹோமம் செய்து ஆராதனையை முடித்த அம் முனிவர்கள், மரியாதை செய்யப்பெற்று ஆசனத்தில் அமர்ந்திருந்த ஸூதரை ஆதரவுடன் பின்வருமாறு கேட்டனர்.

---

1. 2. **கைதவ**:—(பலாபிஸந்**தி** - லக்ஷணம் கபடம்) வேறு பயனில் இச்சை **வைத்து**ப் பூஜிப்பது கபடம். **அந்த**க் கபடமின்றி ஈசுவர ஆராதனை ஒன்றையே லக்ஷணமாய்க் கொண்ட தர்மம் இங்கே நிருபிக்கப்படுகிறது.

**ஆசையின்** பூர்த்திக்குக் கருமங்களை செய்யச் சொல்வது மற்ற சாஸ்திரங்கள். இது ஆசையை **விட**ச் சொல்லும்.

பாகவதக் **கதை**யைச் சிரவணம் செய்ய ஆசை வருவதற்குப் பூர்வபுண்ணியம் வேண்டும்.

1.3. பாகவதமா**கி**ய பழம் சுகப்பிரம்மம் எனும் **கி**ளி கோதியது. மற்ற பழங்**கள்** ரஸமில்லாமல் கொட்டையும் தோலும் மிகுந்தவை போன்றவைவாம்.

1. 4. **அநிமிஷ**:—இது ஸ்ரீ விஷ்ணுவின் பெயர். அனைத்தையும் **கண்** கொட்டாது பார்த்துக் கொண்டிருப்பவர். ஓ 'நிமிஷோऽநிமிஷ:'—வி.ஸ.

**ஸத்ரயாகம்**:—இது நீண்ட காலம் நடைபெறும். இதில் எல்லோரும் யஜமானர்கள், எல்லோரும் ரித்விக்குகள்.

ऋषय ऊचुः—

त्वया खलु पुराणानि सेतिहासानि चानघ ।
आख्यातान्य-प्यधीतानि धर्मशास्त्राणि यान्युत ॥ १-६ ॥

यानि वेदविदां श्रेष्ठो भगवान् बादरायणः ।
अन्ये च मुनयः सूत परापर-विदो विदुः ॥ १-७ ॥

वेत्थ त्वं सौम्य तत्सर्वं तत्त्वत-स्तदनुग्रहात् ।
ब्रूयुः स्निग्धस्य शिष्यस्य गुरवो गुह्य-मप्युत ॥ १-८ ॥

तत्र तत्रांजसाऽऽयुष्मन् भवता यद्विनिश्चितम् ।
पुंसामेकान्ततः श्रेय-स्तन्नः शंसितुमर्हसि ॥ १-९ ॥

प्रायेणाल्पायुषः सभ्य कलावस्मिन् युगे जनाः ।
मन्दाः सुमन्दमतयो मन्दभाग्या ह्युपद्रुताः ॥ १-१० ॥

---

ரிஷிகள் கூறியது :—

1. 6. பாவமற்றவரே! உம்மால் புராணங்களும் தர்ம சாஸ்திரங்கள் எவை யுண்டோ அவைகளும் அத்தியயனம் செய்யப்பட்டிருக்கின்றன, பிறர்க்கு ஓதப்பட்டு மிருக்கின்றனவன்றோ ?

1. 7-8. ஸௌதரே! மனதிற்கினியவரே! வேதத்தை உணர்ந்தவர்களில் சிறந்த வராகிய பகவான் பாதராயணரும், பரத்தையும் அபரத்தையும் உணர்ந்த மற்ற முனிவர் களும் எதை யெல்லாம் அறிவார்களோ அதையெல்லாம் அவர்களுடைய அருளால் நீர் உள்ளது உள்ளபடி அறிவீர். குருமார்கள் மிகவும் இரகசியமான விஷயத்தையும் பிரிய மான சிஷ்யருக்கு உபதேசிப்பார்களன்றோ ?

1. 9. நீண்ட ஆயுள்படைத்தவரே! மனிதர்க்கு எளிதில் உயர்வற உயர்நலமளிக் கத்தக்கதென ஒருமைப்பாட்டுடன் அவ்வவற்றுள் உம்மால் எது நிச்சயிக்கப்பட்டுள்ளதோ அதை எங்களுக்குக் கூறியருள்வீராக.

1. 10. ஸபைகளில் சிறந்து விளங்குபவரே! இக்கலியுகத்தில் ஜனங்கள் பெரும் பாலும் அற்பமான ஆயுளுள்ளவர்களாகவும், சோம்பலுள்ளவர்களாகவும், மிகவும் மந்த புத்தி படைத்தவர்களாகவும், பாக்கியங் குறைந்தவர்களாகவும், இன்னல்களால் பீடிக்கப் பட்டவர்களாகவும் இருக்கின்றனர்.

---

1. 7. **பாதராயணர்** :—வேதவியாஸர்.

**பராபரவித:**—ஒ. 'பரா' என்றும் 'அபரா' என்றும் உணரவேண்டிய வித்தைகள் இரண்டு என்று வேதத்தை உணர்ந்தவர் கூறுவர். அவற்றுள் 'அபரா' என்பது ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம், சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தம், ஜோதிஷம். 'பரா' என்பது எதனால் அக்ஷரப்பிரம்மம் அடையப் படுமோ அது.

—முண்டக உப. 1. 4—5.

भूरीणि भूरि-कर्माणि श्रोतव्यानि विभागशः ।
अतः साधोऽत्र यत्सारं समुद्धृत्य मनीषया ॥
ब्रूहि नः श्रद्दधानानां येनात्मा संप्रसीदति ॥ १-११ ॥

सूत जानासि भद्रं ते भगवान् सात्वतां पतिः ।
देवक्यां वसुदेवस्य जातो यस्य चिकीर्षया ॥ १.१२ ॥

तन्नः शुश्रूषमाणाना-मर्हस्यंगानुवर्णितुम् ।
यस्यावतारो भूतानां क्षेमाय च भवाय च ॥ १.१३ ॥

आपन्नः संसृतिं घोरां यन्नाम विवशो गृणन् ।
ततः सद्यो विमुच्येत यद्बिभेति स्वयं भयम् ॥ १.१४ ॥

यत्पाद-संश्रयाः सूत मुनयः प्रशमायनाः ।
सद्यः पुनन्त्युपस्पृष्टाः स्वर्धुन्यापोऽनुसेवया ॥ १.१५ ॥

को वा भगवतस्तस्य पुण्यश्लोकेड्य-कर्मणः ।
शुद्धिकामो न शृणुयाद्यशः कलिमलापहम् ॥ १.१६ ॥

---

1. 11. ஸாதுவே! பலவகைப்பட்ட கர்மங்களைப்பற்றிப் பலவிஷயங்கள் பாகுபடுத்திக் கேட்டறிவதற்குரியனவா யிருக்கின்றன. ஆகையால் அவற்றுள் எது ஸாரமானதோ, எதனுல் ஆத்மா தெளிவுறுமோ அதை உமது உள்ளத்தில் ஆராய்ந்து எடுத்துச் சிரத்தையுடன் கேட்க விரும்பும் எங்களுக்குக் கூறியருள்வீராக.

1. 12. ஸூதரே! உமக்கு மங்களம் உண்டாகுக. பக்தரக்ஷகரான பகவான் எதைச் செய்ய விரும்பி வஸுதேவருக்கு தேவகியிடம் பிறந்தார் என்பதை நீர் அறிவீர்.

1. 13. பிரியமானவரே! அதைக்கேட்க ஆசைகொண்டுள்ள எங்களுக்குத் தொடர்ந்து அதை விளக்கிக்கூறுதல் உமக்குத்தகும். பகவானுடைய அவதாரம் பிராணிகளின் க்ஷேமத்திற்காகவும், வளர்ச்சிக்காகவுமே ஏற்பட்டது.

1. 14. கொடிய பிறவிச்சுழலில் விழுந்த ஒருவன் அவருடைய நாமத்தைத் தன் வசமின்றி உச்சரித்தாலும் அப்பொழுதே விடுபடுவான். அவரிடம் பயமே பயப்படும்.

1. 15. ஸூதரே! அவருடைய திருவடியிலிருந்து பெருகிய கங்கைநீர் தொடர்ந்து சேவிப்பவர்களைப் புனிதமாக்கும். ஆனுல் அவருடைய திருவடிகளில் நீங்காத பற்றுடைய பரம சாந்தர்களான முனிவர்களின் சேர்க்கையோ அப்போதே புனிதமாக்கும்.

1. 16. புனிதமடைய விரும்பும் எவன் புகழ்பெற்ற புண்ணியாத்மாக்களால் துதிக்கப்பெற்ற லீலைகளையுடைய அந்த பகவானுடைய கீர்த்தியைப்பற்றிக் கேட்காமலிருப்பான்? அந்தக் கீர்த்தி கலிதோஷத்தைப் போக்குவதாகும்.

---

1. 15. கங்கை பகவானுடைய பாதங்களினின்று பெருகினபோதிலும் அங்கு நிலையாக இல்லை. ஆனுல் ஸாதுக்களோ பகவானிடமிருந்து நீங்காமலிருப்பதால் கங்கையினும் மேலாகப் போற்றப்படுகின்றனர்.

तस्य कर्माण्युदाराणि परिगीतानि सूरिभिः।
ब्रूहि नः श्रद्दधानानां लीलया दधतः कलाः ॥ १.१७ ॥

अथाख्याहि हरे-र्धीमन्नवतार-कथाः शुभाः।
लीला विदधतः स्वैरमीश्वरस्यात्ममायया ॥ १.१८ ॥

वयं तु न वितृप्याम उत्तमश्लोक-विक्रमे।
यच्छृण्वतां रसज्ञानां स्वादु स्वादु पदे पदे ॥ १.१९ ॥

कृतवान् किल वीर्याणि सह रामेण केशवः।
अतिमर्त्यानि भगवान् गूढः कपटमानुषः ॥ १.२० ॥

कलि-मागत-माज्ञाय क्षेत्रेऽस्मिन् वैष्णवे वयम्।
आसीना दीर्घ-सत्रेण कथायां सक्षणा हरेः ॥ १-२१ ॥

त्वं नः संदर्शितो धात्रा दुस्तरं निस्तितीर्षताम्।
कलिं सत्त्व-हरं पुंसां कर्णधार इवार्णवम् ॥ १-२२ ॥

ब्रूहि योगेश्वरे कृष्णे ब्रह्मण्ये धर्मवर्मणि।
स्वां काष्ठामधुनोपेते धर्मः कं शरणं गतः ॥ १.२३ ॥

---

1. 17. ஞானிகளால் பரிவுடன் கீர்த்தனம் செய்யப்பட்ட அவருடைய சிறந்த செயல்களைச் சிரத்தையுடன் கேட்கும் எங்களுக்குக் கூறியருளுங்கள். அவர் லீலை யாட்டாகப் பல வடிவங்களைத் தரிக்கிறார்.

1. 18. புத்திமானே! தமது மாயா சக்தியால் இஷ்டப்படி லீலைகளைப் புரிபவரும், ஈசுவரனுமான ஹரியினுடைய மங்களமான அவதாரக் கதைகளைச் சொல்லுங்கள்.

1. 19. ரஸமறிந்து கேட்பவர்களுக்கு எது பதந்தோறும் இனிதினும் இனியதாய் உள்ளதோ அந்த உத்தம சுலோகரான பகவானுடைய பெருமையில் நாங்கள் போது மென்ற எண்ணத்தை அடையமாட்டோம்.

1. 20. தன் ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு மனிதரைப்போல் நடித்த பகவா னாகிய கேசவர் பலராமருடன் கூடி மனித இயல்பை மீறின பல வீரச் செயல்களைச் செய் திருக்கிறாரன்றோ?

1. 21. கலி பிறந்து விட்டதை யறிந்து, விஷ்ணுவுக்குப் பிரியமான இந்த க்ஷேத் திரத்தில் நீண்டதொரு ஸத்ரயாகம் செய்ய எண்ணிக் கூடியிருக்கும் நாங்கள் ஹரியின் கதைகளைக் கேட்பதற்கு அவகாசமுள்ளவர்களா யிருக்கின்றோம்.

1. 22. மனிதருடைய மனத் தூய்மையை யழிப்பதும் கடத்தற்கரியதுமான கலியைக் கடந்து செல்ல விரும்பும் எங்களுக்குக் கடலைத்தாண்ட விரும்புபவனுக்குக் கப்பலோட்டியைப்போல நீங்கள் தெய்வத்தால் காண்பிக்கப்பட்டவராகின்றீர்.

1. 23. யோகேசுவரனும், பிராமணப் பிரியனும், தருமத்திற்குக் கவசம் போன்ற வனும் ஆகிய ஸ்ரீ கிருஷ்ணன் தனது உயர் பதத்துக்குச் சென்று விட்டபின், இப்போது தருமம் யாரைச் சரணமடைந்திருக்கிறது என்று கூறுங்கள்.

---

1. 22. **ஸக்ஷண:**—லப்தாவஸரா:

1. 23. **தர்ம வர்மணி**—கவசவத்ரக்ஷகே। **ஸ்வாம் காஷ்டாம் உபேதே**—ஸ்வதா மோபகதே।

इति संप्रश्न-संहृष्टो विप्राणां रौमहर्षणिः ।
प्रतिपूज्य वचस्तेषां प्रवक्तु-मुपचक्रमे ॥ २.१ ॥

सूत उवाच—

यं प्रव्रजन्त-मनुपेत-मपेतकृत्यं द्वैपायनो विरहकातर आजुहाव ।
पुत्रेति तन्मयतया तरवोऽभिनेदु-स्तं सर्वभूतहृदयं मुनि-मानतोऽस्मि ॥ २.२ ॥

यः स्वानुभाव-मखिल-श्रुति-सार-मेक-मध्यात्मदीप-मतितितीर्षतां तमोऽन्धम् ।
संसारिणां करुणयाऽऽह पुराणगुह्यं तं व्याससूनुमुपयामि गुरुं मुनीनाम् ॥ २.३ ॥

नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ॥ २.४ ॥

---

2. 1. பிராம்மணர்களின் இக் கேள்விகளினுல் பிறந்த சந்தோஷத்தையடைந்த ரோமஹர்ஷண புத்திரர் அவர்களுடைய வார்த்தையைப் புகழ்ந்து பதில் கூற ஆரம்பித்தார்.

ஸூதர் கூறியது :-

2. 2. துணையின்றித் துறவியாய்க் கிளம்பியவரும், கருமத்தில் பிரவிருத்தி யில்லாத வருமான எவரைத் துவைபாயனர் பிரிவாற்றுமையால் "புத்திரா!" என்று அழைத்தபோது, அனைத்துந் தானேயாகி நின்றமையால் மரங்களும் "ஏன் ஏன்" என்றனவோ அங்ஙனம் ஸர்வ ஜீவராசிகளின் உள்ளமாகி நின்ற முனிவரை வணங்குகிறேன்

2. 3. ஆத்மானுபவத்தையளிப்பதும், வேதங்களனைத்தின் ஸாரமானதும், ஒப் பற்ற தனிப் பெருமையுடையதும், அத்தியாத்ம தீபம் போன்றதுமாகிய இந்த ரகசியமான புராணத்தை அஞ்ஞான இருளைக் கடக்க அவாக்கொண்ட ஸம்ஸாரிகளுக்கு எவர் கருணை யால் உபதேசித்தாரோ அந்த முனிவர்களின் குருவாகிய வியாஸ புத்திரரைச் சரண மடைகிறேன்.

2. 4. நாராயணனையும், புருஷசிரேஷ்டனுகிய நரனையும், ஸரஸ்வதி தேவியையும், வியாஸரையும் நமஸ்கரித்து ஜயத்தைக் கூறவேண்டும்.

---

2. 2. அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
எங்குமே னேனென்ற தென்னே பராபரமே. —தாயுமானவர்.

**அனுபேதம்** —உபநயனர்த்தம் ஆசார்ய ஸமீபமனுபஸன்னம் ; யத்வா கோநாப் யனுபேதமனுகதம் ஏகாகினமித்யர்த்த : ।

**அபேதக்ருத்யம்**—(க்ருத்ய சூன்யம்) வேண்டுதல் வேண்டாமையிலாமையால் செயலில் நாட்டமில்லாதவர்.

2. 3. **அதிதிதீர்ஷதாம்**—அதிதரிது-மிச்சதாம்; ஸ்வானுபாவம்—மற்றவர்கள் சொன் னதை சொல்லுபவர்கள்; இவர் அனுபவத்தால் சொல்லுபவர்.

**ஏகம்**—அத்விதீயம் அனுபமம்.

2. 4. **ஜயம்**—ஜயத்யனேன ஸம்ஸாரமிதி ஜயோ க்ரந்தஸ்தம் உதீரயேத் இதி ।
கடபயாதி' ஸங்கியைப்படி 'ய' என்பது 1, 'ஜ' என்பது 8; 'ஜய' எனும் பதம் மறைவாக '18' எழுத்துள்ள கிருஷ்ண மந்திரத்தையும் கிருஷ்ணனுடைய பெருமையையும் குறிக்கும்,

मुनयः साधु पृष्टोऽहं भवद्भि-र्लोक-मंगळम् ।
यत्कृतः कृष्ण-संप्रश्नो येनात्मा सुप्रसीदति ॥ २.५ ॥
स वै पुंसां परो धर्मो यतो भक्तिरधोक्षजे ।
अहैतुक्य-प्रतिहता ययात्मा संप्रसीदति ॥ २.६ ॥
वासुदेवे भगवति भक्तियोगः प्रयोजितः ।
जनयत्याशु वैराग्यं ज्ञानं च यदहैतुकम् ॥ २.७ ॥
धर्मः स्वनुष्ठितः पुंसां विष्वक्सेन-कथासु यः ।
नोत्पादये-द्यदि रतिं श्रम एव हि केवलम् ॥ २.८ ॥
धर्मस्य ह्यापवर्ग्यस्य नार्थोऽर्थायोपकल्पते ।
नार्थस्य धर्मैकान्तस्य कामो लाभाय हि स्मृतः ॥ २.९ ॥
कामस्य नेन्द्रियप्रीति-र्लाभो जीवेत यावता ।
जीवस्य तत्त्व-जिज्ञासा नार्थो यश्चेह कर्मभिः ॥ २.१० ॥
वदन्ति तत् तत्त्वविद-स्तत्त्वं यज्ज्ञानमद्वयम् ।
ब्रह्मेति परमात्मेति भगवानिति शब्द्यते ॥ २.११ ॥

2. 5. முனிவர்களே ! எதனுல் ஆத்மா தெளிவடையுமோ அந்தக் கிருஷ்ண விஷய மான கேள்வி உங்களால் கேட்கப்பட்டதால், உலக மங்களத்தின் பொருட்டு நான் நல்ல கேள்வி கேட்கப்பட்டவனுகின்றேன்.

2. 6. காரணமில்லாததும் இடையூறுகளால் அழியாததுமான பக்தி அதோ க்ஷஜரிடம் எதனுல் உண்டாகுமோ, எதனுல் ஆத்மா தெளிவடையுமோ அதுவே மனிதர் களுக்குச் சிறந்த தருமமாகும்.

2. 7. பகவான் வாசுதேவரிடத்தில் பக்தியோகம் கூடினுல், அது விரைவில் வைராக்கியத்தையும் நிஷ்காம ஞானத்தையும் உண்டாக்கும்.

2. 8. எந்த தருமம் நன்கு அனுஷ்டிக்கப்பட்டதாயினும், பகவத் கதைகளில் மனிதர்களுக்கு ஆசையை உண்டாக்காமற் போகுமோ அது வீண் சிரமமேயாகும்.

2. 9-10. மோக்ஷத்திற்கே உரித்தாகும் தருமத்திற்கு அர்த்தம் (பொருள்) பயனுகப் பொருந்தாது. தருமத்திற்கே உரித்தாகும் அர்த்தத்துக்குக் காமம் (இன்பம்) பயனுக (முனிவர்களால்) எண்ணப்படவில்லை. காமத்துக்கு இந்திரியப் பிரீதி பயனுகாது. வாழ்க் கையின் நிர்வாகத்துக்கு எவ்வளவு தேவையோ அதுதான் பயன். வாழ்க்கையின் பயனே எனின், தத்துவ விசாரம்; இங்கு பல கருமங்களால் போகங்களை நாடுவதன்று.

2. 11. (ஞாதா, ஞேயம் என்ற பேதமற்ற அகண்ட ஸச்சிதானந்த) அத்துவித்திய ஞானத்தையே தத்துவம் என்று தத்துவத்தை யுணர்ந்த ஞானிகள் கூறுகின்றனர். அத் தத்துவமே பிரம்மம் என்றும், பரமாத்மா என்றும், பகவானென்றும் கூறப்படுவது.

2. 6. **அஹைதுகீ**—ஹேது:பலாபிஸந்தானம் தத்ரஹிதா।
**அப்ரதிஹதா**—விக்னை-ரனபிபூதா।

2. 7. **அஹைதுகம்**—(சுஷ்கதர்க்காத்யகோசரம் ஔபநிஷதம்) வரட்டு வாதத்துக் கெட்டாத உபநிஷத ஞானம்.

2. 8. பக்தியால் எவனுடைய உள்ளம் கசியவில்லையோ, அவனுக்கு ஞானம் பரோக்ஷ மாகத்தானிருக்கும்.

2. 9. தர்மத்திற்குப் பலன் மோக்ஷம்; அர்த்தத்திற்குப் பலன் தர்மம்.

तच्छ्रद्दधाना मुनयो ज्ञानवैराग्य-युक्तया ।
पश्यन्त्यात्मनि चात्मानं भक्त्या श्रुतगृहीतया ॥ २.१२ ॥

अतः पुंभि-र्द्विजश्रेष्ठा वर्णाश्रम-विभागशः ।
स्वनुष्ठितस्य धर्मस्य संसिद्धि-र्हरितोषणम् ॥ २.१३ ॥

तस्मा-देकेन मनसा भगवान् सात्वतां पतिः ।
श्रोतव्यः कीर्तितव्यश्च ध्येयः पूज्यश्च नित्यदा ॥ २.१४ ॥

यदनुध्यासिना युक्ताः कर्मग्रन्थि-निबन्धनम् ।
छिन्दन्ति कोविदा-स्तस्य को न कुर्यात्कथारतिम् ॥ २.१५ ॥

शुश्रूषोः श्रद्दधानस्य वासुदेव-कथा-रुचिः ।
स्यान्महत्सेवया विप्राः पुण्य-तीर्थ-निषेवणात् ॥ २.१६ ॥

---

2. 12. சிரத்தை நிறைந்த முனிவர்கள் ஞானத்துடனும் வைராக்கியத்துடனும் கூடினதும் சிரவணத்திலுல் அடையப்பட்டதுமான பக்தியால் தம்முள்ளத்திலேயே (பரதத்துவமான) பரமாத்மாவைக் காண்கின்றனர்.

2. 13. ஆகையால், பிராம்மண சிரேஷ்டர்களே, மனிதர்களால் வர்ணுசிரம ஒழுங்கின்படி நன்கு அனுஷ்டிக்கப்பட்ட தருமத்திற்குப் பூர்ணமான பலசித்தியாவது பகவத் பிரீதியேயாகும்.

2. 14. ஆகையால் ஒன்றுபட்ட மனத்துடன் பக்தர்களுக்குப் பதியான பகவான் எப்போதும் சிரவணம், கீர்த்தனம், தியானம், பூஜை இவைகளால் ஆராதிக்கப்பட வேண்டும்.

2. 15. விவேகிகள் எவனுடைய தொடர்ச்சியான தியானத்தில் ஈடுபட்டுக் கர்ம முடிச்சுத் தளையைச் சேதிக்கின்றனரோ அந்த பகவானுடைய கதையில் எவன்தான் ஆசை கொள்ளமாட்டான்?

2. 16. பிராம்மணர்களே! புனிதமான இடங்களுக்குச் சென்று சேவிப்பதால் மகான்களின் சேவை கிட்டும். அதனுல் சிரவணத்தில் இச்சையும் சிரத்தையும் உண்டாகியவனுக்கு வாசுதேவ கதையில் ருசி ஏற்படும்.

---

2. 14. ஒ. ஸர்வதா ஸர்வ-பாவேன நிச்சிந்தைர்-பகவானேவ பஜனீய:।
—நாரத பக்திஸூத்ரம்.

எப்போதும் எல்லா வகையிலும் சிந்தையற்று பகவானையே பஜிக்கவேண்டும்.

2. 15. ஒ. அந்தப் பராபரவஸ்து பார்க்கப்பட்டதும் இவனுடைய இருதய முடிச்சு அவிழ்கிறது, சந்தேகங்களெல்லாம் ஒழிகின்றன, கருமங்களெல்லாம் நாசமடைகின்றன.
—மு. உப. 2. 9.

2. 16. ஒ. மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே. —தாயுமானவர்.

शृण्वतां स्वकथां कृष्णः पुण्य-श्रवण-कीर्तनः ।
हृद्यन्तःस्थो ह्यभद्राणि विधुनोति सुहृत्सताम् ॥ २.१७ ॥

नष्टप्रायेष्वभद्रेषु नित्यं भागवत-सेवया ।
भगव-त्युत्तमश्लोके भक्तिर्भवति नैष्ठिकी ॥ २.१८ ॥

तदा रजस्तमो-भावाः कामलोभादयश्च ये ।
चेत एतै-रनाविद्धं स्थितं सत्त्वे प्रसीदति ॥ २.१९ ॥

एवं प्रसन्न-मनसो भगवद्भक्ति-योगतः ।
भगवत्तत्त्व-विज्ञानं मुक्तसंगस्य जायते ॥ २.२० ॥

भिद्यते हृदयग्रन्थि-श्छिद्यन्ते सर्व-संशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि दृष्ट एवात्मनीश्वरे ॥ २.२१ ॥

अतो वै कवयो नित्यं भक्तिं परमया मुदा ।
वासुदेवे भगवति कुर्वन्त्यात्म-प्रसादिनीम् ॥ २.२२ ॥

---

2. 17. எவனுடைய சிரவணமும் கீர்த்தனமும் புண்ணியமானதோ, எவன் ஸாதுக்களுக்கு நண்பனோ அந்தக் கிருஷ்ணன் தனது கதையைக் கேட்பவர்களின் இருதயத்தினுள்ளே இருந்து கொண்டு கெட்ட வாசனைகளைப் போக்கிவிடுகிறன்.

2. 18. இடையருத பாகவத சேவையால் கெட்ட வாசனைகள் பெரும்பாலும் நாசமடைந்ததும் உத்தம கீர்த்தியுள்ள பகவானிடத்தில் நிச்சலமான பக்தி உண்டாகிறது.

2 19. அப்போது ரஜோ குணங்களினின்றுதிக்கும் காமம் லோபம் முதலியவை எவையுண்டோ அவைகளால் சித்தம் தாக்கப்படாது ஸத்துவத்தில் நிலைத்துத் தெளிவடைகிறது.

2. 20. பகவத் பக்தி யோகத்தால் இங்ஙனம் பற்றுகள் நீங்கி மனந் தெளிந்தவனுக்கு பகவத் தத்துவ அனுபவ ஞானம் தானே உண்டாகிறது.

2. 21. இருதயத்தில் ஆத்ம ஸ்வரூபனுன ஈசுவரனைக் கண்டதும் இருதயத்தின் முடிச்சு அவிழ்கின்றது, எல்லாச் சந்தேகங்களும் சேதிக்கப்படுகின்றன, இவனுடைய கருமங்கள் நசித்துப்போகின்றன.

2. 22. ஆகையால்தான் மதிநுட்பமுடையோர் பகவானுகிய வாசுதேவனிடத்தில் சித்தத்தைத் தெளிவிக்கின்ற பக்தியை மிகுந்த மகிழ்ச்சியுடன் எப்போதும் செய்கின்றனர்.

---

2. 17. ஒ. **அவர்களிடம் அருளால்** நான் **அவர்கள்** உள்ளத்தில் நிலைபெற்றுப் பிரகாசிக்கும் ஞானதீபத்தால் **அஞ்ஞானத்தாலுண்டான** இருளை நாசம் செய்கிறேன், **கீ** 10. 11,

ஒ (ஸ கீர்த்யமான: **சீக்**ரமேவ ஆவிர்**ப்பவதி அனுபா**வயதி **ப**க்தான்)

—நாரதபக்தி ஸூத்ரம்.

**கீர்த்தனம் செய்யப்பட்ட** பகவான் விரைவில் காட்சியளித்து பக்தர்**களைக் காப்பாற்றுகிறன்.**

—பா. பே.

---

2. 18. **नित्यं भगवदाश्रयात् ।**

सत्त्वं रजस्तम इति प्रकृतेर्गुणास्तै-
युक्तः परः पुरुष एक इहास्य धत्ते ।
स्थित्यादये हरि-विरिञ्चि-हरेति संज्ञाः
श्रेयांसि तत्र खलु सत्त्व-तनो-र्नृणां स्युः ॥ २.२३ ॥

वासुदेव-परा वेदा वासुदेव-परा मखाः ।
वासुदेव-परा योगा वासुदेव-पराः क्रियाः ॥ २.२८ ॥

वासुदेव-परं ज्ञानं वासुदेव-परं तपः ।
वासुदेव-परो धर्मो वासुदेव-परा गतिः ॥ २.२९ ॥

जगृहे पौरुषं रूपं भगवान्महदादिभिः ।
संभूतं षोडशकल-मादौ लोक-सिसृक्षया ॥ ३.१ ॥

यस्यांभसि शयानस्य योगनिद्रां वितन्वतः ।
नाभि-ह्रदांबुजा-दासीद्ब्रह्मा विश्वसृजां पतिः ॥ ३.२ ॥

यस्यावयव-संस्थानैः कल्पितो लोक-विस्तरः ।
तद्वै भगवतो रूपं विशुद्धं सत्त्वमूर्जितम् ॥ ३.३ ॥

---

2. 23. ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்பன பிரகிருதியின் குணங்கள். இவற்றுடன் கூடிய பரம புருஷன் ஒருவனே இங்கு இந்த உலகின் காப்பு முதலியவற்றிற்காக ஹரி, பிரம்மா, ஹரன் என்ற பெயர்களைத் தரிக்கிறான் எனினும், அவற்றுள் ஸத்துவ மூர்த்தியிடமிருந்தே மனிதர்களுக்கு உயர்ந்த நன்மைகள் உண்டாகின்றன.

2. 28-29. வேதங்கள் வாசுதேவனைப் பற்றியவை; யஜ்ஞங்கள் வாசுதேவனைக் குறித்தே; யோகங்கள் வாசுதேவனையடையவே; கிரியைகள் வாசுதேவனுக்கே அர்ப்பணம்; ஞானத்தின் நோக்கம் வாசுதேவன்; தவத்தினால் ஸந்தோஷிப்பவன் வாசுதேவன்; தர்மத்தால் அடையப்படுபவன் வாசுதேவன்; எல்லாப் பாதைகளும் அவனிடமே சேருகின்றன.

3. 1-2. (பிரளய) ஜலத்தில் சயனித்து யோக நித்திரையிலிருக்கும் எவருடைய நாபி கமலத்திலிருந்து உலகத்தைச் சிருஷ்டிப்பவர்களுக்குத் தலைவரான பிரம்மா தோன்றினாரோ அந்த பகவான் ஆதியில் உலகத்தைச் சிருஷ்டிக்க விரும்பி மஹத் முதலிய தத்துவங்களினின்றுதித்ததும் பதினாறு கலைகளுள்ளதுமான புருஷ ரூபத்தை எடுத்துக் கொண்டார்.

3 3. எவருடைய அவயவ ஸ்தானங்களால் விரிந்த உலகமானது கற்பிக்கப் பட்டதோ, அந்த பகவானுடைய ரூபம் பரிசுத்தமானது, ஸாத்விகமானது, உயர்ந்தது.

---

2, 28. ஒ. நானே கிரது, நானே யக்ஞம், நானே **பிதிருக்களுக்கிடும் அ**ன்னம், நானே **பி**ராணிகளுக்கு உணவும் மருந்தும்; மந்திரமும் நானே, நெய்யும் நானே, **அக்கினியும்** நானே, ஹோமகர்மமும் நானே.
—கீ. 10. 16.

3. 1. **பதினாறு கலைகள்**—ஐந்து பூதங்கள், பத்து இந்திரியங்கள், மனது.

पश्यन्त्यदो रूपमदभ्र-चक्षुषा
सहस्र-पादोरु-भुजाननाद्भुतम् ।
सहस्र मूर्ध-श्रवणाक्षि-नासिकम्
सहस्र-मौल्यंबर-कुण्डलोल्लसत् ॥ ३-४ ॥

एतन्नानावताराणां निधानं बीजमव्ययम् ।
यस्यांशांशेन सृज्यन्ते देवतिर्यङ्-नरादयः ॥ ३.५ ॥

अवतारा-ह्यसंख्येया हरेः सत्त्वनिधे-र्द्विजाः ।
यथाविदासिनः कुल्याः सरसः स्युः सहस्रशः ॥ ३.२६ ॥

ऋषयो मनवो देवा मनुपुत्रा महौजसः ।
कलाः सर्वे हरेरेव सप्रजापतय-स्तथा ॥ ३.२७ ॥

---

3. 4. ஆயிரக் கணக்கான பாதங்கள், துடைகள், புஜங்கள், முகங்களுடன் அற்புதமாய் விளங்குவதும், ஆயிரக்கணக்கான தலை, காது, கண், மூக்கு இவைகளுடையதும், ஆயிரக்கணக்கான கிரீடம், வஸ்திரம், குண்டலம் இவற்றால் பிரகாசிப்பதுமான இந்த ரூபத்தை (யோகிகள்) ஞானக்கண்ணால் காண்கின்றனர்.

3. 5. எவருடைய அம்சத்தின் அம்சத்தினால் தேவர், பசு, பக்ஷி, மனிதர் சிருஷ்டிக்கப்படுகின்றனரோ, அவருடைய இந்த (நாராயண) ரூபம் எல்லா அவதாரங்களுக்கும் உறைவிடமாயும், வித்தாயும் அழிவற்றதாயும் உள்ளது.

3. 26. பிராம்மணர்களே! வற்றாத ஏரியிலிருந்து ஆயிரக்கணக்கான ஊற்றுக்கள் உற்பத்தியாவதுபோல் ஸத்துவ நிதியான ஹரியினிடமிருந்து கணக்கில்லா அவதாரங்கள் தோன்றுகின்றன. (அவைகளுள் இருபத்தி நான்கு முக்கியமாய்க் கூறப்படுகின்றன.)

3. 27. ரிஷிகளும், மனுக்களும் தேவர்களும் மனு புத்திரர்களும் சக்தி வாய்ந்த மகான்களும் பிரஜாபதிகளுடன்கூட எல்லோரும் ஹரியின் அம்சங்களே யாவர்.

---

3. 5. **ஏதத்**—ஏதத்து கூடஸ்தம் நத்வன்யாவதாரவத் **ஆவிர்ப்பாவ-திரோபாவவதித்** யாஹ। **நிதீ**யதேऽஸ்மின்னிதி **நிதா**னம் கார்யாவஸானே ப்ரவேசஸ்தான-மித்யர்த்த:। **பீஜமுத்பவ**ஸ்தானம்। ந கேவல-மவதாராணாமேவ, ஸர்வப்ராணினாம்। —ஸ்ரீ.

இருபத்துநாலு **அவதார** ஸ்தோத்ரம் :—

ஓம் **பகவதே** நம:। **புருஷாய** நம:। குமாராய। வராஹாய। நார**தா**ய। நரநாராயணாய। **கபி**லாய। **தத்தாத்ரேயாய**। யக்ஞாய। ரிஷபாய। ப்ருதவே। மத்ஸ்யாய। **கமடாய**। **தன்வந்தர**யே। மோஹின்யை। **ந்ருஸிஹ்மாய**। வாமனாய। பர**சு**ராமாய। வ்யாஸாய। ர**கு**ராமாய। பலராமாய। க்ருஷ்ணாய। **புத்தா**ய। ஓம் கல்கயே நம:॥

3. 26. **அவிதாஸின**: அபக்ஷய சூன்யாத்।

**அவதாரங்கள்**: **அ**ர்ச்சாவதாரம், வ்யூஹாவதாரம், விபூதி, ஆவேசம், **அ**ம்சம் என்று பல வகை. விக்ரஹங்கள் **அ**ர்ச்சாவதாரம். வாஸுதேவன், ப்ரத்யும்னன், **அ**நிருத்தன், ஸங்கர்ஷணன் என்று மனம் புத்தி சித்தம் அஹங்காரத்தில் விளங்குவது வ்யூஹாவதாரம். சூரியன், **ச**ந்திரன், மலை, நதி, முதலிய பெருமைகளில் **விபூதி வி**ளக்கம். பரசுராமாவதாரம் ஆவேச **அ**வதாரம். மனு **மு**தலியோர் **அ**ம்சாவதாரம்.

एते चांशकलाः पुंसः कृष्णस्तु भगवान् स्वयम् ।
इन्द्रारि-व्याकुलं लोकं मृडयन्ति युगे युगे ॥ ३.२८ ॥

इदं भागवतं नाम पुराणं ब्रह्मसम्मितम् ।
उत्तम-श्लोक-चरितं चकार भगवान् ऋषिः ॥ ३.४० ॥

निःश्रेयसाय लोकस्य धन्यं स्वस्त्ययनं महत् ।
तदिदं ग्राहयामास सुतमात्मवतां वरम् ॥ ३.४१ ॥

सर्व-वेदेतिहासानां सारं सार-समुद्धृतम् ।
स तु संश्रावयामास महाराजं परीक्षितम् ॥ ३.४२ ॥

प्रायोपविष्टं गङ्गायां परीतं परमर्षिभिः ।
तत्र कीर्तयतो विप्रा विप्रर्षेर्भूरितेजसः ॥ ३.४३ ॥

अहं चाध्यगमं तत्र निविष्टस्तदनुग्रहात् ।
सोऽहं वः श्रावयिष्यामि यथाधीतं यथामति ॥ ३.४४ ॥

3. 28. இவர்கள் பரம புருஷனுடைய அம்சங்களும் கலைகளுமாவர். கிருஷ்ணனே பகவான்தானேயாகிய பரிபூர்ணர். இவர்கள் யுகந்தோறும் இந்திர சத்துருக்களாகிய அசுரர்களால் பீடிக்கப்பட்ட உலகத்தை இன்புறச் செய்கின்றனர்.

3. 40. உத்தம சுலோகனை பகவானுடைய சரித்திரத்தைக் கூறுவதும், வேதத்துக்குச் சமமானதுமான இந்த பாகவதம் எனப் பெயர் பெற்ற புராணத்தை ரிஷியாகிய வேதவியாஸ பகவான் செய்தருளினர்.

3. 41. உயர் செல்வத்தையும் மங்களத்தையும் அளிப்பதும் பெருமை வாய்ந்ததுமான இதை உலகத்தின் மோக்ஷத்திற்காக அவர் ஆத்ம ஞானிகளிற் சிறந்த தன் புத்திரருக்கு அத்தியயனம் செய்வித்தார்.

3 42-44. வேதங்கள் இதிஹாஸங்கள் அனைத்தின் ஸாரமாகக் கடைந்தெடுக்கப்பட்ட இதை அவர் (சுகர்) கங்கைக்கரையில் ரிஷி சிரேஷ்டர்களால் சூழப்பெற்றுப் பிராயோபவேசம் செய்திருந்த பரீக்ஷித்து மகாராஜாவுக்கு உபதேசித்தார். பிராம்மணர்களே! மஹா தேஜஸ்வியான அந்தப் பிரம்மரிஷி அங்ஙனம் உபதேசிக்கையில் நானும் அவருடைய அனுக்கிரகத்தால் அங்கு விற்றிருந்து சிரத்தையுடன் கேட்டேன். அதை நான் கேட்ட பிரகாரம், என் புத்திக்கெட்டியவரை, உங்களுக்குச் சொல்லுகிறேன்.

3. 28. பும்ஸ: பரமேச்வரஸ்ய கேசிதம்சா: கேசித்கலா-விபூதயச்ச। தத்ர மத்ஸ்யாதீனா-மவதாரத்வேன ஸர்வஜ்ஞத்வ-ஸர்வசக்தி-மத்வேஸபி யதோபயோகமேவ ஜ்ஞான-க்ரியா சக்த்யாவிஷ்கரணம்। குமார-நாரதாதிஷ் - வாதிகாரிகேஷு யதோபயோக - மம்சகலாவேச:। தேஷு குமாராதிஷு ஜ்ஞானாவேச: ப்ருத்வாதிஷு சக்த்யாவேச: க்ருஷ்ணஸ்து பகவான் ஸாக்ஷாந்நாராயண ஏவ ஆவிஷ்க்ருத ஸர்வசக்தித்வாத்॥ —ஸ்ரீ.

3. 40. ப்ரஹ்ம ஸம்மிதம்—ஸர்வ வேததுல்யம்।

3. 43. யதாதீதம்—ந து ஸ்வமதி-விலஸிதம்।
யதாமதி—ஸ்வமத்யனுஸாரேண ஸம்க்ஷேபத: கதிதம்
விஸ்தரேண ச்ராவயிஷ்யாமி।

3. 41. ततः स ग्राहयामास । —பா. பே.

कृष्णे स्वधामोपगते धर्मज्ञानादिभिः सह।
कलौ नष्टदृशामेष पुराणार्कोऽधुनोदितः ॥ ॥ ३.४५ ॥

शौनक उवाच—

सूत सूत महाभाग वद नो वदतां वर।
कथां भागवतीं पुण्यां यदाह भगवान् शुकः ॥ ॥ ४.२ ॥

कस्मिन् युगे प्रवृत्तेयं स्थाने वा केन हेतुना।
कुतः सञ्चोदितः कृष्णः कृतवान् संहितां मुनिः ॥ ४.३ ॥

तस्य पुत्रो महायोगी समदृङ् निर्विकल्पकः।
एकान्तमति-रुन्निद्रो गूढो मूढ इवेयते ॥ ४.४ ॥

दृष्ट्वानुयान्तमृषिमात्मज-मप्यनग्नम्
देव्यो ह्रिया परिदधुर्न सुतस्य चित्रम्।
तद्वीक्ष्य पृच्छति मुनौ जगदुस्तवास्ति
स्त्री-पुं-भिदा न तु सुतस्य विविक्तदृष्टेः ॥ ४.५ ॥

---

3. 45. ஸ்ரீ கிருஷ்ணன் தருமம், ஞானம் முதலியவற்றுடன் பரமபதம் அடைந்த பின் கலியின் இருளில் பார்வையிழந்த ஜனங்களுக்கு இந்தப் புராண சூரியன் இப்போது உதயமாயிருக்கிறது.

4. 2. சௌனகர் கூறியது—

ஸூதரே! பேசுவோரில் சிறந்தவரே! மஹா பாக்கியசாலியே! பகவான் சுகர் எதைக் கூறியருளினரோ அந்தப் புண்ணியமான பாகவதக் கதையை எங்களுக்குத் தாங்கள் கூறியருளுங்கள்.

4. 3. எந்த யுகத்தில், எந்த இடத்தில், எக்காரணத்தால் இது ஆரம்பமாயிற்று? எவரால் தூண்டப்பட்டு கிருஷ்ணத்துவைபாயன முனிவர் இந்த ஸம்ஹிதையைச் செய்தார்?

4. 4. அவருடைய புத்திரரோ மஹா யோகி, ஸமதர்சி, பேதபுத்தி யில்லாதவர், நிலைபெற்ற ஒரே மதியுடையவர், (மாயா) நித்திரையிலிருந்து விழித்துக்கொண்டவர், மூடன்போல் காணப்படுவதால் மறைவானவர்.

4. 5. (ஒரு சமயம் தேஹப் பிரக்ஞையின்றி நிர்வாணமாகச் செல்லும்) புத்திரனை யும் அவரைத் தொடர்ந்து வந்த நிர்வாணியல்லாத (வியாஸ) ரிஷியையும் கண்டு (நீராடிக்கொண்டிருந்த) பெண்கள் சுகரைக் கண்டு வெட்கப்படாமல் வியாஸரைக் கண்டு வெட்கத்தால் பரபரப்புடன் ஆடைகளை எடுத்துக்கொண்டனர் (எனக் கேட்டுள்ளோம்). அந்த விசித்திரச் செய்கையைக் கவனித்து முனிவர் வினவ அவர்கள் "ஸ்திரீ புமான் என்ற பேதம் உமக்கிருக்கிறது; பரிசுத்தமான திருஷ்டியுடைய உமது புத்திரனுக்கு இல்லை" என்று கூறினரன்றோ?

---

3, 45. முனிவர்கள் கேட்ட கேள்விகளில் கடைசிக் கேள்விக்கு இங்கு பதில் கூறப்படு கிறது. பகவான் வைகுண்டம் போன பின் அவருடைய ஸ்தானத்தில் இங்கே விளங்குவது பாகவதம்.

4. 2. ஸமத்ருக்—ஸமமாய் ப்ரம்மத்தை எங்கும் பார்ப்பவர்.

4. 4. இவேயதே—இவ ப்ரதீயதே ]

4. 5. அநக்னமபீத்யனேனார்த்தாத் தத்ஸுதோ நக்ன இத்யுக்தம்।

---

4. 5. आत्मज-मप्यु मग्नाः। பா-பே.

कथमालक्षितः पौरैः संप्राप्तः कुरुजांगलान् ।
उन्मत्त-मूक-जडवद्विचरन् गजसाह्वये ॥ ४.६ ॥

कथं वा पाण्डवेयस्य राजर्षेर्मुनिना सह ।
संवादः समभूत्तात यत्रैषा सात्वती श्रुतिः ॥ ४.७ ॥

स गोदोहन-मात्रं हि गृहेषु गृहमेधिनाम् ।
अवेक्षते महाभाग-स्तीर्थी-कुर्वं-स्तदाश्रमम् ॥ ४.८ ॥

अभिमन्यु-सुतं सूत प्राहु-र्भागवतोत्तमम् ।
तस्य जन्म महाश्चर्यं कर्माणि च गृणीहि नः ॥ ४.९ ॥

स सम्राट् कस्य वा हेतोः पाण्डूनां मानवर्धनः ।
प्रायोपविष्टो गङ्गाया-मनादृत्याधिराट्-श्रियम् ॥ ४.१० ॥

---

4. 6. குரு தேசத்தையும் ஜாங்கல தேசத்தையும் அடைந்தவராகி ஹஸ்தினபுரியில் பித்தன், ஊமை, அசடன்போல் சஞ்சரித்த இவர் நகரவாசிகளால் எங்ஙனம் அறியப்பட்டார் ?

4. 7. ஐயனே! இந்த பாகவத சிரவணம் அடங்கிய அந்த ஸம்வாதம் பாண்டு வம்சத்து ராஜரிஷியான பரீக்ஷித்துக்கும் மௌனியான சுகருக்கும் எங்ஙனம் ஏற்பட்டது ?

4. 8. கிருஹஸ்தாச்ரமிகளின் கிருஹங்களில் அந்த (கிருஹஸ்த) ஆசிரமத்தைப் புனிதமாக்கும் பொருட்டு அந்த மகானுபாவர் பால் கறக்கிற அளவு சிறிது நேரம் மட்டுமேயல்லவோ தங்குவார் ?

4. 9. சூதரே! அபிமன்யுவின் புத்திரனை பரீக்ஷித்தைப் பாகவத உத்தமன் என்று கூறுவர். அவருடைய ஆச்சரியம் மிகுந்த பிறப்பையும் செயல்களையும் எங்களுக்குச் சொல்லுங்கள்.

4. 10. பாண்டவ குலத்தின் பெருமையை வளர்த்தவரும், சக்கிரவர்த்தியுமான அவர் எக்காரணத்தால் ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை அனாதரவு செய்துவிட்டு கங்கைக்கரையில் பிராயோபவேசம் செய்தார் ?

---

4. 8. **தீர்த்தீகுர்வன்**—ஏ. (தீர்த்தீகுர்வந்தி தீர்த்தானி, ஸுகர்மீ குர்வந்தி கர்மாணி, ஸச்சாஸ்த்ரீ குர்வந்தி சாஸ்த்ராணி தன்மயா:) தன்மயமான பக்தர்களே தீர்த்தங்களைப் புனிதமுடையவைகளாகவும் கர்மங்களைப் புண்ணியகர்மங்களாகவும், சாஸ்திரங்களை நற்சாஸ்திரங்களாகவும் செய்கின்றனர். —நாரதபக்தி ஸூத்ரம்.

ஒருநாள்கூட ஒரு இடத்தில் தங்காதவர் எப்படி ஏழுநாள் கட்டுப்பட்டு நின்றார் என்றால் அது மகான்களின் ஸ்வபாவம். உலகின் நன்மைக்காக (சிவாய லோகஸ்ய) அப்படிச் செய்வர்.

அவதூதரான தோதாபுரி ஓரிடத்திலும் தங்காதவர் ஸ்ரீராமகிருஷ்ணருடன் தக்ஷிணேசுவரத்தில் பல மாதங்கள் தங்கினார்.

பரீக்ஷித்து மகாராஜாவின் புண்ணியந்தான் அவருடைய அனுக்கிரகத்திற்குக் காரணம். பரீக்ஷித்தின் புண்ணியம் அவர் தாயின் கர்ப்பத்திலிருக்கும்போதே பகவானுடைய கடாக்ஷம் ஏற்பட்டதுதான்.

सूत उवाच—

द्वापरे समनुप्राप्ते तृतीये युगपर्यये ।
जातः पराशराद्योगी वासव्यां कलया हरेः ॥ ४.१४ ॥

स कदाचित् सरस्वत्या उपस्पृश्य जलं शुचि ।
विविक्तदेश आसीन उदिते रविमण्डले ॥ ४.१५ ॥

वितर्कयन् विविक्तस्थ इदं प्रोवाच धर्मवित् ॥
धृतव्रतेन हि मया छन्दांसि गुरवोऽग्नयः ।
मानिता निर्व्यलीकेन गृहीतं चानुशासनम् ॥ ४.२८ ॥

भारत-व्यपदेशेन ह्याम्नायार्थश्च दर्शितः ।
तथापि बत मे दैह्यो ह्यात्मा चैवात्मना विभुः ।
असंपन्न इवाभाति ब्रह्मवर्चस्यसत्तमः ॥ ४.३० ॥

तस्यैवं खिलमात्मानं मन्यमानस्य खिद्यतः ।
कृष्णस्य नारदोऽभ्यागा-दाश्रमं प्रागुदाहृतम् ॥ ४.३२ ॥

---

4. 14. ஸூதர் கூறியது—நிகழும் சதுர்யுகத்தில் மூன்றுவது யுகமான துவாபரம் முடியும் சமயத்தில் பராசரர் மூலம் வசு கன்னியாகிய ஸத்தியவதியிடம் ஹரியின் கலாவதாரமாக யோகியாகிய வியாஸர் உண்டானுர்.

4. 15. அவர் ஒரு சமயம் ஸரஸ்வதி நதியின் பரிசுத்தமான தீர்த்தத்தில் ஸ்நானுதிகளை முடித்து சூரியமண்டலம் உதயமாகும்போது ஏகாந்தமான இடத்தில் அமர்ந்திருந்தார்.

4. 28-30. அந்தத் தனிமை நிலையில் தனக்குள்ளேயே தர்க்கிப்பவராய்த் தருமத்தையறிந்த அவர் இங்ஙனம் சொல்லிக்கொண்டார்: "வஞ்சனையின்றி என்னுல் (பிரம்மசரியம் முதலிய) விரதங்கள் அனுஷ்டிக்கப்பட்டு, வேதங்களும் அக்னிகளும் குருமார்களும் பூஜிக்கப்பட்டு, அவர்களுடைய கட்டளைகளும் நிறைவேற்றப்பட்டன. பாரதம் என்ற பெயரால் வேதத்தின் அர்த்தமும் வெளியிடப்பட்டது. எனினும் எக்காரணத்தாலோ இத்தேகத்திலுறையும் எனது ஆத்மா, உண்மையில் ஸர்வசக்தி வாய்ந்ததாயினும், பிரம்ம தேஜசுடையதாயினும் ஸாரமற்றதுபோலும் ஆசை நிறைவேருதது போலும் காணப்படுகிறது."

4. 32. இவ்விதம் தன்னைக் குறையுள்ளவராக எண்ணி வருந்திக்கொண்டிருந்த கிருஷ்ண துவைபாயனருடைய முன் கூறப்பட்ட ஆசிரமத்துக்கு நாரதர் வந்தார்.

---

4. 14. **வாஸவ்யாம்**—உபரிசரஸ்ய வஸோர் வீர்யாஜ்ஜாதாயாம் ஸத்யவத்யாம்.
4. 28. **த்ருதவ்ரதம்**—வேதத்தையும் குருவையும் அக்கினியையும் சேவிக்கும் விரதம்,
4. 30. **தைஹ்ய**:—தேகத்தில் உள்ள ஆத்மாவாகிய ஜீவன்.
4. 32, **கிலம்-ந்யூனம்; கித்யத**:-கேதம் ப்ராப்னுவத: । க்ருஷ்ணஸ்ய-வ்யாஸஸ்ய।
நாரதர் சிஷ்யரைத் தேடிப்போவார். சிஷ்யர்கள் தேடிவரக்கூடியவர்களாயில்லையென்று தாமாக இரங்கி எங்கும் செல்வார். '**தத்வித்தி** ப்ரணிபாதேன பரிப்ரச்னேன **ஸேவயா**' **என்**றபடி சிஷ்யர்கள் வந்து பணிவிடை செய்து கேட்டால் உபதேசிப்போம் என்றிருக்கமாட்டார்.

---

4. 32. **ब्रह्मवर्चस्युशत्तमः** ।  பா—பே.

तमभिज्ञाय सहसा प्रत्युत्थायागतं मुनिः ।
पूजयामास विधिवन्नारदं सुरपूजितम् ॥ ४.३३ ॥

नारद उवाच—

जिज्ञासितं सुसंपन्नमपि ते महदद्भुतम् ।
कृतवान् भारतं यस्त्वं सर्वार्थपरिबृंहितम् ॥ ५.३ ॥

जिज्ञासित-मधीतं च यत्तद्ब्रह्म सनातनम् ।
अथापि शोचस्यात्मान- मकृतार्थ इव प्रभो ॥ ५.४ ॥

व्यास उवाच—

अस्त्येव मे सर्वमिदं त्वयोक्तं तथापि नात्मा परितुष्यते मे ।
तन्मूल-मव्यक्त-मगाध-बोधं पृच्छामहे त्वाऽऽत्मभवात्म-भूतम् ॥ ५.५ ॥

त्वं पर्यटन्नर्क इव त्रिलोकी-मन्तश्चरो वायु-रिवात्मसाक्षी ।
परावरे ब्रह्मणि धर्मतो व्रतैः स्नातस्य मे न्यून-मलं विचक्ष्व ॥ ५.७ ॥

---

4\. 33. தேவர்களாலுந் தொழப்பெற்ற பெருமைவாய்ந்த அந்த நாரதர் வந்ததைக் கண்டதும் விரைவில் எழுந்து முறைப்படி அவரை வியாச முனிவர் பூஜித்தார்.

5\. 3-4. நாரதர் கூறியது—எல்லாப் பொருட்களும் பரிபூரணமாய் நிறைந்த மிக அற்புதமான பாரதத்தைச் செய்தவர் நீர். அறியவேண்டியது பூரணமாக உம்மால் விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஸநாதனமான பிரும்மதத்துவம் உம்மால் நன்கு ஆராயப் பட்டும் அறியப்பட்டும் இருக்கிறது. என்ருலும் பிரபோ! பயனற்றவரைப்போல உம்மைக் குறித்தே ஏன் வருந்துகிறீர் ?

5\. 5. வியாஸர் கூறியது—உம்மால் கூறப்பட்டதெல்லாம் என்னிடமிருக்கத்தான் இருக்கின்றனவெனினும், எனது ஆத்மா சந்தோஷமடையவில்லை. ஆழ்ந்த அறிவுடைய வரும் பிரம்மபுத்திரரும் ஆகிய உம்மைத் தெளிவுபடாத அந்தக் காரணத்தைக் கேட்கின்றேன்.

5\. 7. நீர் சூரியனைப்போல் மூவ்வுலகிலும் வெளியே ஸஞ்சரிப்பவராயும் வாயுவைப் போல் உட்புகுந்து ஸஞ்சரிப்பவராயும் அந்தக்கரணத்துக்குச் சாக்ஷியாயும் விளங்கு கின்றீர். பரப்பிரம்மத்தினிடத்திலும் சப்தப் பிரம்மத்தினிடத்திலும், யோக தர்மத்தாலும் பிரம்மசரியம் முதலிய விரதங்களாலும் ஈடுபட்டுள்ள எனக்குக் குறைவு இன்னதெனத் தெளிவுறக் காட்டியருளல் வேண்டும்.

---

5\. 4. ஜிஜ்ஞாஸிதம்-விசாரிதம்; **அதீ**தம்-**அதிக**தம் ப்ராப்தம்।

5\. 5. ஆத்மா-**சரீ**ரோ மானஸச்ச।

5\. 7. **பராவரே ப்ரஹ்மணி**—ப்ரே ப்ரஹ்மணி **த**ர்மதோ யோகேன நிஷ்ணதஸ்ய। த**து**க்தம் யாஜ்ஞவல்க்யேன—இஜ்யாசார - **த**யாஸஹிம்ஸா - **தா**ன - ஸ்வா**த்**யாய-கர்மணும்। **அ**யந்து பரமோ **த**ர்மோ ய**த்**யோ**கே**ணத்ம-**த**ர்சனம்॥ அவரே ச ப்ரஹ்மணி வேதாக்யே வ்ரதை: ஸ்வா**த்**யாய-நியமை:। ஸ்நாதஸ்ய-நிஷ்ணதஸ்ய।
—ஸ்ரீதரர்.

---

5\. 4. **तथापि ।**

பா-பே.

नारद उवाच—

यथा धर्मादय-श्चार्थो मुनिवर्यानुकीर्तिताः ।
न तथा वासुदेवस्य महिमा-ह्यनुवर्णितः ॥ ५.९ ॥

न यद्वचश्चित्रपदं हरेर्यशो जगत्पवित्रं प्रगृणीत कर्हिचित् ।
तद्वायसं तीर्थमुशन्ति मानसा न यत्र हंसा निरमन्त्युशिक्क्षयाः ॥ ५.१० ॥

तद्वाग्विसर्गो जनताघ-विप्लवो यस्मिन् प्रति-श्लोकमबद्ध-वत्यपि ।
नामा-न्यनन्तस्य यशोङ्कितानि यत् श्रृण्वन्ति गायन्ति
गृणन्ति साधवः ॥ ॥ ५.११ ॥

अथो महाभाग भवानमोघदृक् शुचिश्रवाः सत्यरतो धृतव्रतः ।
उरुक्रमस्याखिल-बन्ध-मुक्तये समाधिनानुस्मर तद्विचेष्टितम् ॥ ५.१३ ॥

जुगुप्सितं धर्म-कृते ऽनुशासतः स्वभावरक्तस्य महान् व्यतिक्रमः ।
यद्वाक्यतो धर्म इतीतरः स्थितो न मन्यते तस्य निवारणं जनः ॥ ५.१५ ॥

---

5. 9. நாரதர் கூறியது—

முனிசிரேஷ்டரே! தருமம் முதலியவைகளும் (அவற்றிற்குச் சாதனங்களான) அர்த்தங்களும் எங்ஙனம் உம்மால் கூறப்பட்டனவோ அங்ஙனம் வாசுதேவனுடைய மகிமை தொடர்ந்து வர்ணிக்கப்படவில்லை யல்லவா?

5. 10. விசித்திரமான சொற்றொடர்களை யுடையதாயினும் எந்த வாக்கு உலகைப் புனிதமாக்குகின்ற ஹரியின் பெருமையைக் கொஞ்சங்கூட வர்ணிக்காமலிருக்கிறதோ அதைக் காக்கைக் கொப்பான காமிகள் தீர்த்தமென்று நினைப்பர்; பெரியோர் குட்டை என்று கருதுகின்றனர். அதில் ஒருபோதும் பரமஹம்ஸரான பிரம்ம ஞானிகள் ரமிக்கமாட்டார்கள். (காக்கை முழுகும் எச்சில் குழியில் ஹம்ஸம் ரமிக்குமா?)

5. 11. சுலோகந்தோறும் தப்பிருந்தாலும் அனந்தனுடைய கீர்த்தியால் அழகு பெற்ற திவ்ய நாமங்களில் வாக்கைப் பிரயோகிப்பதுதான் ஜன சமூகத்தின் பாவத்தைப் போக்குவதாகும். அதன்சிரவணத்திலும் கானத்திலும் பேச்சிலுந்தான் ஸாதுக்கள் மகிழ்வர்.

5. 13. ஆகையால் வீணாகாத நோக்கமும், பரிசுத்தமான கீர்த்தியும் ஸத்தியத்தில் பற்றும், திடவிரதமும் படைத்த மகாபாக்கியசாலியான தாங்கள் எல்லோருடைய பந்தங்களும் நீங்கும் பொருட்டு ஸமாதியில் நின்று அளவிடமுடியாத சக்திவாய்ந்த பகவானுடைய லீலைகளை தியானம் செய்து பிரகாசப்படுத்துங்கள்.

5. 15. இயற்கையாகவே விஷயங்களில் பற்றுக்கொண்ட மனிதனுக்குத் தருமத்தின் பேரால் வெறுக்கத்தக்க காமியகருமத்தை உபதேசித்திருக்கின்றீர். அது பெருந் தவறு. உமது உபதேசத்தை ஆதாரமாய்க்கொண்டு "இதுவே முக்கிய தருமம்" என்று நம்பிய பாமரஜனங்கள் அதினின்று நிவிருத்தி யடையவேண்டுமென்று ஞானிகள் கூறியுள்ளதைக் கருதாமற் போவார்கள்.

---

5. 9. (த்ரிவர்க்கம்) தர்மம் அர்த்தம் காமம் பாரதத்தில் கூறப்பட்டதுபோல் (அபவர்க்கம்) மோக்ஷம் தெளிவாய் அங்கு வற்புறுத்திக் கூறப்படவில்லை.

5. 10. **உசிக்க்ஷயா:**—(உசிக் கமனீயம் ப்ரஹ்ம க்ஷயோ நிவாஸோ யேஷாம் தே) அழகிய பிரம்மத்தையே இருப்பிடமாகக் கொண்டவர்கள்.

5. 15. பிரவிருத்தியைவிட்டு மனிதர்கள் நிவிருத்திக்கு வரும்படி உபதேசியும்.

अहं पुरातीत-भवेऽभवं मुने दास्यास्तु कस्याश्चन वेदवादिनाम् ।
निरूपितो बालक एव योगिनां शुश्रूषणे प्रावृषि निर्विविक्षताम् ॥ ५.२३ ॥

तस्यैवं मेऽनुरक्तस्य प्रश्रितस्य हतैनसः ।
श्रद्दधानस्य बालस्य दान्तस्यानुचरस्य च ॥ ५.२९ ॥

ज्ञानं गुह्यतमं यत्तत् साक्षाद्भगवतोदितम् ।
अन्ववोचन् गमिष्यन्तः कृपया दीनवत्सलाः ॥ ५.३० ॥

व्यास उवाच—

भिक्षुभिर्विप्रवसिते विज्ञानादेष्टृभिस्तव ।
वर्तमानो वयस्याद्ये ततः किमकरोद्भवान् ॥ ६.२ ॥

नारद उवाच—

एकात्मजा मे जननी योषिन्मूढा च किंकरी ।
मय्यात्मजेऽनन्यगतौ चक्रे स्नेहानुबन्धनम् ॥ ६.६ ॥

---

5. 23. முனிவரே! என் கதையைக் கேளும். நான் எனது முன்கல்பத்துப் பிறவியில் வேதவித்துக்களான பிராம்மணர்களின் பணிப் பெண்ணுயிருந்த ஒருத்திக்குப் பிறந்தேன். அந்த யோகிகள் மழைகாலத்தில் ஒரு இடத்திலிருந்துகொண்டு சாதுர் மாஸ்ய விரதம் அனுஷ்டித்தபோது நான் சிறு பிராயத்திலேயே அவர்களுக்குச் சேவை செய்ய நியமிக்கப்பட்டேன்.

5. 29-30. அவர்களிடம் ஆழ்ந்த பற்றுடையவனும், வணக்கமுடையவனும், சேவையால் பாவந்தேய்ந்தவனும், சிரத்தையுடையவனும், அடக்கமுடையவனும், அவர் களுடைய கட்டளைப்படி நடப்பவனும் ஆகிய எனக்கு தீனவத்ஸலர்களான அவர்கள் அவ்விடம்விட்டுச் செல்லும்போது நேரில் பகவானே திருவாய்மலர்ந்தருளிய அதிரகசிய மான ஞானம் எதுவோ அதைக் கிருபைகூர்ந்து உபதேசித்தார்கள்.

6. 2. வியாஸர் கூறியது—

உங்களுக்கு விஜ்ஞானத்தை உபதேசித்த பிக்ஷுக்கள் அவ்விடம்விட்டுச் சென்ற பின் இளம்வயதினரான நீங்கள் என்ன செய்தீர்கள்?

6. 6. நாரதர் கூறியது—

வேலைக்காரியும், விவேகமில்லாதவளும், ஒரேபிள்ளையுடையவளுமாகிய என் தாய் ஸ்திரீ ஸ்வபாவத்தால் வேறுகதியற்ற பிள்ளையாகிய என்னிடம் அளவிலாத பற்றுக் கொண்டிருந்தாள்.

---

5. 30. **குஹ்யம்**—ஸாதன-பூத-தர்ம-தத்வஜ்ஞானம்; தத் ஸாத்யம் விவிக்தாத்ம-ஜ்ஞானம் குஹ்யதரம்!

**பகவதோதிதம்**—பாகவத சாஸ்திரம்।

---

5. 23. भवेऽभवं श्रुतो ।

பா-பே.

एकदा निर्गतां गेहाद्दुहन्तीं निशि गां पथि ।
सर्पोऽदशत् पदास्पृष्टः कृपणां काल-चोदितः ॥ ६.९ ॥

तदा तदहमीशस्य भक्तानां शमभीप्सतः ।
अनुग्रहं मन्यमानः प्रातिष्ठं दिशमुत्तराम् ॥ ६.१० ॥

एक एवातियातोऽहमद्राक्षं विपिनं महत् ।
घोरं प्रतिभयाकारं व्यालोलूक-शिवाजिरम् ॥ ६.१४ ॥

परिश्रान्तेन्द्रियात्माहं तृट्परीतो बुभुक्षितः ।
स्नात्वा पीत्वा ह्रदे नद्या उपस्पृष्टो गतश्रमः ॥ ६-१५ ॥

तस्मिन्निर्मनुजेऽरण्ये पिप्पलोपस्थ आस्थितः ।
आत्मनात्मान-मात्मस्थं यथाश्रुत-मचिन्तयम् ॥ ६-१६ ॥

ध्यायत-श्चरणांभोजं भाव-निर्जित-चेतसा ।
औत्कण्ठ्याश्रु-कलाक्षस्य हृद्यासीन्मे शनैर्हरिः ॥ ६-१७ ॥

---

6. 9. ஒரு சமயம் இரவில் மாடு கறப்பதற்காக வீட்டைவிட்டு வெளிப் பாதையில் சென்றபோது, ஒரு பாம்பை மிதிக்க நேர்ந்து காலனால் ஏவப்பட்ட அப்பாம்பு துன்பம் நிறைந்த அவளைக் கடித்துவிட்டது. (அவள் உயிர் துறந்தாள்.)

6. 10. அப்போது நான் அதைப் பக்தர்களுக்கு நன்மையையே கோருகின்ற பகவானுடைய அனுக்கிரகமாகவே எண்ணி வடக்கு திக்கைநோக்கிக் கிளம்பினேன்.

6. 14. ஒருவனாகவே வெகுதூரம் சென்றபின் பெரியதொரு வனத்தைக் கண்டேன். அது பாம்பு, கோட்டான், குள்ளநரி இவைகளுக்கு வாசஸ்தானமாய், கோரமாயும், மிகுந்த பயத்தை விளைவிப்பதாயும் இருந்தது.

6, 15-16. வழி நடந்து இந்திரியங்களும் மனமும் சோர்ந்தவனும் பசிதாகம் மேலிட்டவனும் ஆகிய நான் அங்கு ஒரு நதியைக்கண்டு அதன் மடுவில் ஸ்நாநமும் ஆசமனமும் பானமும்செய்து களைப்புநீங்கி மனித சஞ்சாரமில்லாத அவ்வரண்யத்தில் ஒரு அரசமரத்தடியிலமர்ந்து, இருதயத்திலுள்ள பரமாத்மாவை உபதேசிக்கப்பட்டிருந்த படி முழுமனத்துடன் தியானித்தேன்.

6. 17. பக்தியால் பரவசமான சித்தத்துடன் தமது சரண கமலங்களைத் தியானிப்பவனும், பேராவலினால் நீர்பெருகும் கண்களையுடையவனுமாகிய எனது இருதயத்தில் ஹரியானவர் மெள்ள மெள்ளத் தோன்றினார்.

---

6. 10. ப்ராதிஷ்டம்—ப்ரஸ்திதோ஽ஸ்மி ।

6. 14. அஜிரம்—க்ரீடாஸ்தானம்.

7. 16. பிப்பலோபஸ்தே-அச்வத்தமூலே; ஆத்மனா புத்த்யா, ஆத்மஸ்தம் ஹ்ருதிஸ்தம், ஆத்மானம் பரமாத்மானம் ।

6. 17. பாத கமலங்களை தியானம் செய்ததால் பகவத்ரூபம் முழுவதும் கொஞ்சம், கொஞ்சமாய்த் தானே தெரிய ஆரம்பித்தது. ஆனந்தத்தை அனுபவிக்கத் தொடங்கியதும் அது தானே மறைந்தது.

6. 14. एवाभियातो । 6. 16. पिप्पलोपस्थ आश्रितः । आत्मनात्मस्थमात्मानं ॥ பா-பே.

प्रेमातिभर-निर्भिन्न-पुलकाङ्गोऽतिनिर्वृतः ।
आनन्द-संप्लवे लीनो नापश्यमुभयं मुने ॥ ६.१८ ॥

रूपं भगवतो यत्तन्मनः कान्तं शुचापहम् ।
अपश्यन् सहसोत्तस्थे वैक्लव्याद्दुर्मना इव ॥ ६-१९ ॥

दिदृक्षु-स्तदहं भूयः प्रणिधाय मनो हृदि ।
वीक्षमाणोऽपि नापश्य-मवितृप्त इवातुरः ॥ ६.२० ॥

एवं यतन्तं विजने मामाहागोचरो गिराम् ।
गंभीर श्लक्ष्णया वाचा शुचः प्रशमयन्निव ॥ ६-२१ ॥

हन्तास्मिन् जन्मनि भवान् मा मां द्रष्टुमिहार्हति ।
अविपक्व-कषायाणां दुर्दर्शोऽहं कुयोगिनाम् ॥ ६-२२ ॥

---

6. 18. முனிவரே! மிகுந்த பிரேமையின் கிளர்ச்சியால் புளகாங்கிதமடைந்து, இன்பத்தில் திளைத்து, ஆனந்தப் பெருக்கில் மூழ்கின நான் என்னையோ பிறிதையோ இரண்டையுங்காணவில்லை.

6. 19. (பின் உணர்ச்சி உண்டானபோது) மனதைக் கவர்வதும், துன்பத்தைத் துடைப்பதும் ஆகிய பகவத் ரூபத்தைக் காணுமல் வருத்தத்தினுல் குழம்பிய மனத்தினனைப்போல் விரைவில் எழுந்தேன்.

6. 20. திருப்தி யடையாமல் மீண்டுங் காணவேண்டுமென்ற ஆவலுடன் இருதயத்தில் மனதை நிறுத்திப் பார்த்தபோதிலும் காணுமல் வருந்தினேன்.

6. 21. இவ்வாறு நிர்மானுஷ்யமான இடத்திலிருந்துகொண்டு முயற்சிக்கின்ற என்னை நோக்கி மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத பகவான் எனது சோகத்தைப் போக்குபவர்போல ஆழ்ந்த கருத்துடையதும் அழகியதுமான வார்த்தைகளால் பின் வருமாறு கூறினுர்.

6. 22. "குழந்தாய்! வாஸனு மலங்கள் நீங்காதவர்களுக்கும் யோகத்தில் பக்குவம் எய்தாதவர்களுக்கும் நான் காண்பதற் கரியவன். நீ இப்பிறவியில் என்னைக் காணுந் தகுதியுடையவனு யில்லை.

---

6. 18. ஒ. (கண்டாவரோத-ரோமாச்ருபி: பரஸ்பரம் லபமானு: பாவயந்தி குலானி ப்ருதிவீஞ்ச) நெஞ்சம் பதைத்து உரோமஞ்சிலிர்ப்ப ஒருவருக்கொருவர் பகவானைப்பற்றிப் பேசிக்கொள்பவர்களாய் இவர்கள் குலங்களையும் பூமியையும் புனிதமாக்குகின்றனர்.

—நாரத பக்தி ஸூத்ரம்.

உடல்குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள் ஊற்றென வெதும்பியூற்ற, ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல்போலவே ஒருறவு முன்னியுன்னி. —தாயுமானவர்.

காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி. —தேவாரம்.

**நாபச்ய-முபயம்**—ஒ (யத்ர நான்யத் பச்யதி நான்யச்-ச்ருணோதி நான்யத் விஜானுதி ஸ பூமா) எங்கு வேறென்றைக் காண்பதில்லையோ வேறென்றைக் கேட்பதில்லையோ வேறென்றை அறிவதில்லையோ அது பூமா (அளவுகடந்த நிலை). —சா. உப. 7. 23

உபாஸனு காலத்தில் ஸகுணமாயும் அனுபவகாலத்தில் ஞாதுஞேயத்தில் நிர்க்குணமாயு முள்ளது பிரம்மம்.

ஒ. தேஜோமயம் ஸகுண-நிர்க்குண-மத்விதீயம். —விசுவநாதாஷ்டகம்: சங்

सकृद् यद् दर्शितं रूप-मेतत् कामाय तेऽनघ ।
मत्कामः शनकैः साधुः सर्वान् मुञ्चति हृच्छयान् ॥ ६-२३ ॥

सत्सेवयाऽदीर्घया ते जाता मयि दृढा मतिः ।
हित्वावद्य-मिमं लोकं गन्ता मज्जनतामसि ॥ ६.२४ ॥

मतिर्मयि निबद्धेयं न विपद्येत कर्हिचित् ।
प्रजा-सर्ग-निरोधेऽपि स्मृतिश्च मदनुग्रहात् ॥ ६.२५ ॥

एताव-दुक्त्वोपरराम तन्महद् भूतं नभोलिङ्ग-मलिङ्गमीश्वरम् ।
अहं च तस्मै महतां महीयसे शीर्ष्णावनामं विदधेऽनुकंपितः ॥ ६.२६ ॥

नामान्यनन्तस्य हतत्रपः पठन् गुह्यानि भद्राणि कृतानि च स्मरन् ।
गां पर्यटन्स्तुष्टमना गतस्पृहः कालं प्रतीक्षन् विमदो विमत्सरः ॥ ६.२७ ॥

एवं कृष्णमते-र्ब्रह्मन्नसक्तस्यामलात्मनः ।
कालः प्रादुरभूत्काले तडित्सौदामिनी यथा ॥ ६.२८ ॥

---

6. 23. "பாவமற்றவனே! ஒரு தடவை எனது உருவம் உனக்குக் காண்பிக்கப் பட்டது என்னிடம் நீ ஆசை கொள்வதற்காக. என்னிடம் ஆசைவைத்த ஸாது மெள்ள மெள்ள இருதயத்திற் பொதிந்துள்ள மற்ற எல்லா ஆசைகளையும் ஒழித்துவிடுகிறான்.

6. 24. "ஸாதுக்களின் சேவை சிறிதுகாலமே செய்யப்பட்டதாயினும் அதனால் உனக்கு என்னிடம் நிலைத்த மதி உண்டாயிருக்கிறது, இந்த இழிவான (சரீரத்தை) உலகத்தை விட்ட பின் நீ எனது பாரிஷதனைப் போகின்றாய்.

6. 25. "என்னிடம் நிலைத்த இந்த மதியானது ஒருபோதும் இனி அழிவுறாது. எனதருளால் பிரஜைகளின் சிருஷ்டியிலும் பிரளயத்திலும் கூட இந்த நினைவு அழியாது."

6. 26. ஆகாசம்போல் எங்கும் நிறைந்திருப்பதும் உருவமற்றதும் பெரிதும் அனைத்தையும் ஆள்வதுமான அந்த நித்திய வஸ்து இங்ஙனம் கூறி அடங்கியது. பெரிதுக்கெல்லாம் பெரிதான அந்தப் பாவஸ்துவால் அனுக்கிரகிக்கப்பட்ட நான் அதற்குத் தலை வணங்கி நமஸ்கரித்தேன்.

6. 27. இரகசியமானதும் மங்களமானதுமான அனந்தனுடைய நாமங்களை வெட்கத்தைவிட்டுப் பாடிக்கொண்டும், அவனுடைய லீலைகளைச் சிந்தித்துக்கொண்டும் பற்றைவிட்டுச் சந்தோஷம் நிறைந்த மனத்துடனும் கர்வமற்றவனாகவும் பொறாமை யற்றவனாகவும் (சரீரம் விழும்) காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்.

6. 28. வியாஸரே! இவ்விதம் பற்றற்று மாசற்ற மனமுடையவனாகிக் கிருஷ்ணனிடத்தில் மனத்தை வைத்த எனக்கு நாளடைவில் மின்னல்கொடிபோல் மரணம் உண்டாயிற்று.

---

6. 25. ஒ. இதுவே பிரம்மத்துடன் ஒன்றுபட்ட **நிலை**. இதை யடைந்து ஒருவன் மோக**த்தி**லழுந்தமாட்டான். **கடைசி காலத்திலும்** இதில் நின்று பிரம்மத்தில் கலந்து போக்குவரவற்ற முக்தி நிலையை அடைகிறான். —கீ. 2. 72.

6. 26. மஹ**த்பூ**தம்—ஒ. 'ஏகோ **விஷ்ணுர்**-மஹ**த்பூ**தம்' —வி. ஸ.
ஒ. அஸ்ய மஹதோ**பூ**தஸ்ய நிச்வஸிதமேதத்। —ப்ரு.உப. 2.4.10

6. 28. ஸௌ**தா**மினீ—மாலாகாரா இத்யர்த்த:।

---

6. 28. **विद्युत्सौदामिनी ।**

प्रयुज्यमाने मयि तां शुद्धां भागवतीं तनुम् ।
आरब्ध-कर्म-निर्वाणो न्यपतत् पाञ्चभौतिकः ॥ ६-२९ ॥

कल्पान्त इदमादाय शयानेऽम्भस्युदन्वतः ।
शिशयिषो-रनुप्राणं विविशेऽन्तरहं विभोः ॥ ६.३० ॥

सहस्रयुग-पर्यन्ते उत्थायेदं सिसृक्षतः ।
मरीचि-मिश्रा ऋषयः प्राणेभ्योऽहं च जज्ञिरे ॥ ६-३१ ॥

अन्तर्बहिश्च लोकां-स्त्रीन् पर्येम्यस्कन्दित-व्रतः ।
अनुग्रहान्महाविष्णो-रविघातगतिः क्वचित् ॥ ६.३२ ॥

देवदत्ता-मिमां वीणां स्वरब्रह्मविभूषिताम् ।
मूर्छयित्वा हरिकथां गायमान-श्चराम्यहम् ॥ ६.३३ ॥

प्रगायतः स्ववीर्याणि तीर्थपादः प्रियश्रवाः ।
आहूत इव मे शीघ्रं दर्शनं याति चेतसि ॥ ६.३४ ॥

---

6. 29. (ஏற்கெனவே கூறப்பட்டிருந்த) அந்தப் பரிசுத்தமான பகவத் பாரிஷத சரீரம் கூடும் சமயம் வந்ததும் பிராரப்த கர்மத்தினின்று விடுதலை யடைந்த பாஞ்சபௌதிக சரீரம் விழுந்துவிட்டது.

6. 30. கல்பத்தின் முடிவில் பிரளயஜலத்தில் சயனித்திருக்கும் நாராயணனிடம் இவ்வுலகைத் தன்னுள் ஒடுக்கிக்கொண்டு பிரம்மா சயனத்தை நாடிப் பிரவேசிக்கையில் நானும் அவருடைய மூச்சுக் காற்றுடன் உட்புகுந்தேன்.

6. 31. ஆயிரம் சதுர்யுகங்களின் முடிவில் மீண்டும் எழுந்து இவ்வுலகைச் சிருஷ்டிக்கத் தொடங்கியபோது பிரம்மதேவருடைய இந்திரியங்களிலிருந்து மரீசி முதலிய ரிஷிகளும் நானும் தோன்றினேம்.

6. 32. மஹாவிஷ்ணுவின் அனுக்கிரகத்தால் நான் எங்கும் தடைபடாத போக்குடையவனும் குறைவுபடாத விரதமுடையவனும் மூவுலகிலும் உள்ளும் புறமும் ஸஞ்சரித்து வருகின்றேன்.

6. 33. நாதப் பிரம்மத்தினுல் அலங்கரிக்கப்பட்டதும், பகவானுல் அளிக்கப்பட்டதுமான இந்த வீணையை மீட்டி ஹரிகதையைப் பாடிக்கொண்டு நான் ஸஞ்சாரம் செய்கிறேன்.

6. 34. கேள்விக்கினியவனும், தீர்த்தங்களுக்கு மூலமான திருவடியுடையவனும் ஆகிய பகவான் தனது லீலைகளைப் பாடும் எனது சித்தத்தில் அழைக்கப்பட்டவர்போல் எழுந்தருளி தரிசனமளிக்கிறுர்.

---

6. 31. ப்ராணேப்ய:—இந்த்ரியேப்ய: ।

---

6. 32. अनुग्रहादहं विष्णोः । பா. பே.

एतद्ध्यातुर-चित्तानां मात्रा-स्पर्शेच्छया मुहुः ।
भवसिन्धु-प्लवो दृष्टो हरिचर्यानुवर्णनम् ॥ ६.३५ ॥

यमादिभि-र्योग-पथैः काम-लोभ-हतो मुहुः ।
मुकुन्द-सेवया यद्वत्तथाऽऽत्माद्धा न शाम्यति ॥ ६.३६ ॥

सर्वं तदिद-माख्यातं यत्पृष्टोऽहं त्वयानघ ।
जन्म-कर्म-रहस्यं मे भवतश्चात्म-तोषणम् ॥ ६.३७ ॥

सूत उवाच—

एवं संभाष्य भगवान्नारदो वासवीसुतम् ।
आमन्त्र्य वीणां रणयन् ययौ याद्दच्छिको मुनिः ॥ ६.३८ ॥

---

6. 35. இந்திரிய போகங்களை யனுபவிக்கவேண்டுமென்ற இடையருத ஆசையால் இடருற்ற சித்தமுடையவர்களுக்கு இச்சம்சார சாகரத்தைக் கடக்கக் காட்டப்பட்ட கப்பல் போலுள்ளது இந்த ஹரிலீலா வர்ணனை.

6. 36. காமத்தாலும் பேராசையாலும் மீண்டும் மீண்டும் கெடுக்கப்பட்ட மனது முகுந்த சேவையால் எங்ஙனம் பிரத்தியக்ஷமாகச் சாந்தியடையுமோ அங்ஙனம் யமம் முதலிய யோக வழிகளால் சாந்தி யடையாது.

6. 37. பாவமற்றவரே! உம்மால் கேட்கப்பட்ட கேள்விகளுக்குப் பதிலாகவும் உமது உள்ளத்தின் ஸந்துஷ்டிக்காகவும் எனது பிறப்பின் மர்மமும் ஸாதன ரகசியமும் மற்ற அனைத்தும் கூறப்பட்டன.

ஸௌதர் கூறியது:

6. 38. பகவான் நாரத முனிவர் இங்ஙனம் கூறிவிட்டு வியாஸரிடம் விடைபெற்று வீணையை மீட்டிக்கொண்டு இஷ்டப்படி ஸஞ்சரிப்பவராய்க் கிளம்பினார்.

**இங்ஙனம் முதல் இதழாகிய அவதாரிகை முற்றும்**

## ॥ भारतयुद्धावसान-कथा ॥ २ ॥

**सूत उवाच—**

यस्यां वै श्रूयमाणायां कृष्णे परमपूरुषे ।
भक्तिरुत्पद्यते पुंसः शोकमोहभयापहा ॥ ७.७ ॥

स संहितां भागवतीं कृत्वानुक्रम्य चात्मजम् ।
शुक-मध्यापयामास निवृत्ति-निरतं मुनिः ॥ ७.८ ॥

**शौनक उवाच—**

स वै निवृत्तिनिरतः सर्वत्रोपेक्षको मुनिः ।
कस्य वा बृहती-मेता-मात्मारामः समभ्यसत् ॥ ७.९ ॥

**सूत उवाच—**

आत्मारामाश्च मुनयो निर्ग्रन्था अप्युरुक्रमे ।
कुर्वन्त्यहैतुकीं भक्ति-मित्थं-भूत-गुणो हरिः ॥ ७.१० ॥

परीक्षितोऽथ राजर्षे-र्जन्म-कर्म-विलापनम् ।
संस्थां च पाण्डुपुत्राणां वक्ष्ये कृष्ण-कथोदयम् ॥ ७.१२ ॥

---

### 2. பாரதப்போர் முடிவு

7. 7-8. ஸூதர் கூறியது—எதைக் கேட்டவளவிலேயே பரமபுருஷனுகிய கிருஷ்ணனிடத்தில் பக்தி யுண்டாகுமோ, எதனுல் மனிதனுடைய துன்பமும், மயக்கமும், பயமும் நீங்குமோ அந்தப் பாகவத ஸம்ஹிதையைச் செய்து சோதித்துப் பார்த்துத் தனது புத்திரரும் நிவிருத்தியில் நிலைத்தவருமான சுகருக்கு வியாசமுனிவர் அத்தியயனம் செய்வித்தார்.

7. 9. சௌனகர் கூறியது—நிவிருத்தியில் நிலைத்தவரும் எதிலும் பற்றற்றவரும் ஆத்மானந்தத்தில் ஆழ்ந்தவருமான அம் முனிவர் விரிவான இந்த ஸம்ஹிதையை எதற்காக அப்பியசித்தார்?

7. 10. ஸூதர் கூறியது—ஆத்மானந்தத்தில் ஆழ்ந்த முனிவர்கள் எல்லாப் பற்றுகளும் கழன்றவர்களெனினும் உருக்கிரமனுகிய பகவானிடத்தில் எக்காரணமுமில்லாமல் ஆழ்ந்த பற்று வைக்கின்றனர். அப்படிப்பட்டது ஹரியின் குணம்.

7, 12. இனி கிருஷ்ணனுடைய கதைக்குத் தோற்றுவாயாக ராஜரிஷி பரீக்ஷித்தின் பிறப்பு, வாழ்க்கை, முக்தி, பாண்டவர்களின் ஸ்வர்க்காரோஹணம் முதலியவற்றை உங்களுக்குக் கூறுகிறேன்.

---

7. 7. யஸ்யாம் வை ச்ரூயமாணயாமேவ **கிம்** புன: **ச்ருதாயாம்**।

7. 8. **அனுக்ரம்ய-சோத**யித்வா।

7. 10, **நிர்க்ரந்தா:**—**க்ரந்தேப்யோ** நிர்க்**கதா:**। **த**துக்தம் **கீதா**ஸு ‘**யதா** தே மோஹகலிலம் **புத்தி**ர்-வ்யதிதரிஷ்யதி। **ததா** கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச।’ **இதி**। **யத்வா க்ரந்தி**ரேவ **க்ரந்த:** நிவ்ருத்தஹ்ருதயக்ரந்தய இத்யர்த்த:।

ஒ. பற்றுக பற்றற்றுன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்றுவிடற்கு. —குறள்,

7. 12. **விலாபனம்**—முக்திம் ம்ருத்யும் வா। **ஸம்ஸ்தாம்**—மஹா-ப்ரஸ்தானம்।

यदा मृधे कौरव-सृंजयानां वीरेष्वथो वीरगतिं गतेषु ।
वृकोदराविद्ध-गदाभिमर्श-भग्नोरु-दण्डे धृतराष्ट्रपुत्रे ॥ ७-१३ ॥

भर्तुः प्रियं द्रौणिरिति स्म पश्यन् कृष्णासुतानां स्वपतां शिरांसि ।
उपाहरद्-विप्रियमेव तस्य जुगुप्सितं कर्म विगर्हयन्ति ॥ ७.१४ ॥

माता शिशूनां निधनं सुतानां निशम्य घोरं परितप्यमाना ।
तदारुदद् बाष्पकलाकुलाक्षी तां सांत्वयन्नाह किरीटमाली ॥ ७.१५ ॥

तदा शुचस्ते प्रमृजामि भद्रे यद्ब्रह्मबन्धोः शिर आततायिनः ।
गाण्डीव-मुक्तै-र्विशिखै-रुपाहरे त्वाक्रम्य यत्स्नास्यसि दग्ध-पुत्रा ॥ ७-१६ ॥

इति प्रियां वल्गु-विचित्र-जल्पैः स सान्त्वयित्वाच्युतमित्रसूतः ।
अन्वाद्रवद् दंशित उग्रधन्वा कपिध्वजो गुरुपुत्रं रथेन ॥ ७.१७ ॥

---

7. 13. எப்போது யுத்தத்தில் கௌரவ வீரர்களும் பாண்டவ வீரர்களும் வீர ஸ்வர்க்கத்தை யடைந்தார்களோ, எப்போது துரியோதனன் பீமசேனனால் சுழற்றி யெறியப்பட்ட கதாயுதத்தால் துடை எலும்பு முறிந்தவனாய் விழ்ந்தானோ;

7. 14. எப்போது யஜமானனாகிய துரியோதனனுக்குப் பிரியமாகுமென்றெண்ணி தூங்கிகொண்டிருந்த சமயத்தில் திரௌபதி குமாரர்களின் தலைகளை அசுவத்தாமா கொய்தானோ; எப்போது அது துரியோதனனுக்கும் பிரியமில்லாததாகவும் எல்லோராலும் வெறுத்துக் கரிக்கப்பட்டதாகவும் ஆயிற்றோ;

7. 15. அப்போது சிசுக்களான புத்திரர்களின் கொடிய மரணத்தைக் கண்டு பரிதவித்துக் கண்ணீர்விட்டுக் கதறும் தாயாகிய துரௌபதியைச் சமாதானப்படுத்துபவனாய் அர்ஜுனன் பின் வருமாறு கூறினான்.

7. 16. "கல்யாணி! பிராம்மணாதமனும் மகாபாதகனுமாகிய அந்த அசுவத்தாமாவின் தலையைக் காண்டீவத்தினின்று விடப்பட்ட பாணங்களால் கொய்து வருகிறேன். அதை உன் காலால் மிதித்து (பழி வாங்கிவிட்டு) புத்திரர்களின் அந்திம ஸம்ஸ்காரத்தைச் செய்து நீ ஸ்நானம் செய்வாய், அவ்வாறு நான் உன் கண்ணீரைத் துடைப்பேன்."

7. 17. கிருஷ்ணனை நண்பனாகவும் ஸாரதியாகவும் பெற்றவனும் குரங்குக் கொடியோனும் ஆகிய அர்ஜுனன் பிரியமான துரௌபதியை இங்ஙனம் இனிய அழகிய வார்த்தைகளால் சமாதானப்படுத்திவிட்டுக் கவசம் பூண்டு வில்லை எடுத்துக்கொண்டு தேரில் ஏறி (கிருஷ்ணன் தேர் ஓட்ட) அசுவத்தாமாவை நோக்கி விரைந்தான்.

---

7. 13. **ஸ்ருஞ்ஜயானும்**—பாண்டவர்களும் கௌரவர்களே யாயினும் ஸ்ருஞ்ஜய வம்சத்துதித்த திருஷ்டத்யும்னன் பாண்டவ சேனாதிபதியா யிருந்ததால் 'ஸ்ருஞ்ஜயானும்' எனப்பட்டது.

7. 14. அசுவத்தாமா தான் பாண்டவர்களின் குழந்தைகளைக் கொன்றுவிட்டதைச் சாகுந்தருவாயிலிருந்த துரியோதனனிடம் சொன்னது அவனுக்கும் (விப்ரியம்) பிரியமல்லாததாகவே இருந்தது.

7. 15. **கிரீடமாலீ**—ஒரே கிரீடமாயினும் அதன் சிகரங்கள் மாலை போலிருந்ததால் கிரீடமாலீ அர்ஜுனன்.

7. 16. **ஆததாயின:**—(அக்னிதோ கரதச்சைவ சஸ்த்ரபாணிர்-தனாபஹ:। க்ஷேத்ர-தாராபஹாரீச ஷடேதே ஆததாயின:। அத்ர து ஆததாயீ சஸ்த்ரபாணி: தேந ச புத்ரஹந்த்ருத்வம்।) தீவைப்பவன், விஷம் வைப்பவன், ஆயுதங்கொண்டு ஆயுதமில்லாதவரைக் கொல்பவன், பொருளை யபகரிப்பவன், பிறர் பூமியை யபகரிப்பவன், பிறர் மனைவியை யபகரிப்பவன், இவ்வறுவரும் ஆததாயிகள் எனப்படுவர், இங்கு ஆயுதங் கொண்டு குழந்தைகளைக்கொன்ற அசுவத்தாமா ஆததாயீ.

---

7. 15. **माता सुतानां निधनं शिशूनां ।**

7. 16. **विमृजामि ।** பா. பே.

तत आसाद्य तरसा दारुणं गौतमी-सुतम् ।
बबन्धामर्ष-ताम्राक्षः पशुं रशनया यथा ॥ ७.३३ ॥

श्री भगवानुवाच—
मैनं पार्थार्हसि त्रातुं ब्रह्मबन्धु-मिमं जहि ।
योऽसावनागसः सुप्ता-नवधीन्निशि बालकान् ॥ ७.३५ ॥

मत्तं प्रमत्तमुन्मत्तं सुप्तं बालं स्त्रियं जडम् ।
प्रपन्नं विरथं भीतं न रिपुं हन्ति धर्मवित् ॥ ७.३६ ॥

स्वप्राणान् यः परप्राणैः प्रपुष्णात्यघृणः खलः ।
तद्वधस्तस्य हि श्रेयो यद्दोषाद्यात्यधः पुमान् ॥ ७.३७ ॥

सूत उवाच—
एवं परीक्षता धर्मं पार्थः कृष्णेन चोदितः ।
नैच्छद्धन्तुं गुरुसुतं यद्यप्यात्महनं महान् ॥ ७.४० ॥

---

7. 33. கௌதமீ புத்திரனை கொடிய அசுவத்தாமாவை (கண்டு அவனுடன் போர் புரிந்து) விரைவில் பிடித்துக் கோபத்தால் கண்கள் சிவந்த அர்ஜுனன் யாகப் பசுவைக் கட்டுவதுபோல் கட்டினன்.

7. 35. ஸ்ரீ பகவான் கூறியது—பார்த்தா! இவனை நீ காப்பது தகுதியன்று. பிராம்மணப்பதரான இவனைக் கொன்றுவிடு. இவன் குற்றமற்ற சிறு குழந்தைகளைத் தூங்கும்போது கொன்றவனல்லவா?

7. 36. மதுவால் மயங்கியவன், அஜாக்கிரதையா யுள்ளவன், பைத்தியம் பிடித்தவன், தூங்குபவன், பாலன், ஸ்திரீ, ஜடன், சரணமடைந்தவன், தேரிழந்தவன், பயந்தவன் இவர்களைத் தருமமறிந்தவன் சத்துருவாயினும் கொல்லமாட்டான்.

7. 37. எந்த துஷ்டன் கருணையில்லாமல் பிற உயிர்களைக் கொன்று தன் உயிரை வளர்க்கின்றனோ அவனைக் கொல்லுவது அவனுக்கே சிறந்த நன்மை தருவதாகும். ஏனெனில் (அவ்விதம் தண்டிக்கப்படாவிட்டால்) அந்த தோஷத்தால் (மீண்டும் மீண்டும் பாவமே செய்து) கீழ்நோக்கிச் சென்று நரகத்தையே யடைவான்.

7. 40. தருமத்தைப் பரீக்ஷிக்கின்ற கிருஷ்ணனால் இவ்வாறு ஏவப்பட்டபோதிலும், விசாலமான இருதயம் படைத்த அர்ஜுனன் (அசுவத்தாமா) குருபுத்ரன் என்ற எண்ணத்தால் தன் புத்திரனைக் கொன்றவனாயினும் அவனைக் கொல்ல விரும்பவில்லை.

---

7. 35. அநாகஸ:—நிரபராதான்.

7. 37. ஒ. (ராஜபிர்-த்ருததண்டாஸ்து க்ருத்வா பாபானி மானவா:।
விதூத-கல்மஷா யாந்தி ஸ்வர்க்கம் ஸுக்ருதினோ யதா॥)

இங்கே மனிதர்கள் தாம் செய்த பாவங்களுக்கு அரசதண்டனையை யனுபவித்துவிட்டால் அதனால் மாசு நீங்கிப் புனிதமாகி ஸ்வர்க்கம் செல்கின்றனர்.

அர்ஜுனன் (அசுவத்தாமா) குருபுத்ரன் என்ற எண்ணத்தால் தன் புத்திரனைக் கொன்றவனாயினும் அவனைக் கொல்ல விரும்பவில்லை.

---

7. 35. नैनं । பா. பே.

अथोपेत्य स्वशिबिरं गोविन्द-प्रिय-सारथिः ।
न्यवेदयत् तं प्रियायै शोचन्त्या आत्मजान् हतान् ॥ ७.४१ ॥

तथाऽऽहृतं पशुवत्पाशबद्ध-मवाङ्-मुखं कर्म-जुगुप्सितेन ।
निरीक्ष्य कृष्णाऽपकृतं गुरोः सुतं वामस्वभावा कृपया ननाम च ॥ ७.४२ ॥

उवाच चासहन्त्यस्य बन्धनानयनं सती ।
मुच्यतां मुच्यतामेष ब्राह्मणो नितरां गुरुः ॥ ७.४३ ॥

सरहस्यो धनुर्वेदः सविसर्गोपसंयमः ।
अस्त्र-ग्रामश्च भवता शिक्षितो यदनुग्रहात् ॥ ७.४४ ॥

स एष भगवान् द्रोणः प्रजा-रूपेण वर्तते ।
तस्यात्मनोऽर्धं पत्न्यास्ते नान्वगाद्वीरसूः कृपी ॥ ७.४५ ॥

मा रोदीदस्य जननी गौतमी पति-देवता ।
यथाऽऽहं मृतवत्सार्ता रोदिम्यश्रुमुखी मुहुः ॥ ७.४७ ॥

सूत उवाच—

धर्म्यं न्याय्यं सकरुणं निर्व्यलीकं समं महत् ।
राजा धर्मसुतो राज्ञ्याः प्रत्यनन्दद्वचो द्विजाः ॥ ७.४९ ॥

---

7. 41 நண்பனும் ஸாரதியுமான கோவிந்தனுடன் தனது கூடாரத்துக்கு வந்து இறந்துபோன மக்களைக் குறித்து சோகத்திலாழ்ந்த மனைவிக்கு அர்ஜுனன் இந்த அசுவத்தாமாவைக் காண்பித்தான்.

7. 42 பசுவைப்போல் கயிற்றால் கட்டி அங்ஙனம் கொண்டுவரப்பட்டவனும், தான் செய்த வெறுக்கத்தக்க செயலால் தலை குனிந்தவனும், அபகாரியுமான குருபுத்திரனை நல்ல பிறவிக் குணமுடைய துரௌபதியானவள் பார்த்ததும் (தனது கோமளமான இருதயத்தில்) கிருபையுடையவளாய் அவனை நமஸ்கரித்தாள்.

7. 43. இவனைக் கட்டிக்கொண்டுவந்ததைப் பொறுக்கமாட்டாதவளாய், ஸதியான துரௌபதி கூறினாள்: "விட்டுவிடுங்கள், விட்டுவிடுங்கள்; இவர் பிராம்மணர்; அதிலும் முக்கியமாக குரு.

7. 44-45. "எவருடைய அனுக்கிரஹத்தால் அஸ்திரங்களெல்லாம் தனுர்வேதத்தின் இரகசியங்களுடனும் பிரயோக உபஸம்ஹார முறைகளுடனும் உம்மால் கற்றுக்கொள்ளப்பட்டதோ அந்த துரோணபகவானே புத்திர ரூபமாய் இருக்கிறார். அவரது சரீரத்திற் பாதியாய்ப் பத்தினியாயுள்ள கிருபியும் வீரனை புத்திரனைப் பெற்றவளான தால்தான் அனுகமனம் செய்யாமல் பிழைத்திருக்கின்றாள்.

7. 47. "இறந்த குழந்தைகளின் பிறிவாற்றாமையால் கண்ணீர் முகத்தில் வழிய இடையறாது நான் அழுவதுபோல் இவருடைய தாயாகிய பதிவிரதை கௌதமியும் அழவேண்டாம்."

7. 49. ஸூதர் கூறியது—பிராம்மணர்களே! தருமந் தவறாததும், நியாயமானதும், கருணை நிறைந்ததும், கபடமற்றதும், சமபுத்தியையும் விசாலமான இருதயத்தையும் காட்டுவதுமான ராணியின் வார்த்தையை தருமபுத்திர மகாராஜா புகழ்ந்துகொண்டாடினார்.

---

7. 42. **வாமஸ்வபாவா**—ஐந்து பிள்ளைகளையும் அநியாயமாயிழந்து திரௌபதி **தர்மத்தை விடவில்லை.**

7. 45. **ஒ. 'அர்த்தோ** வா ஏஷ **ஆத்மனோ** யத் பத்னீ' —சுருதி.

तत्राहामर्षितो भीमस्तस्य श्रेयान् वधः स्मृतः ।
न भर्तु-र्नात्मनश्चार्थे योऽहन् सुप्तान् शिशून् वृथा ॥ ७.५१ ॥

निशम्य भीमगदितं द्रौपद्याश्च चतुर्भुजः ।
आलोक्य वदनं सख्यु-रिदमाह हसन्निव ॥ ७.५२ ॥

श्री भगवानुवाच—

ब्रह्मबन्धुर्न हन्तव्य आततायी वधार्हणः ।
मयैवोभयमाम्नातं परिपाह्यनुशासनम् ॥ ७.५३ ॥

कुरु प्रतिश्रुतं सत्यं यत्तत्सान्त्वयता प्रियाम् ।
प्रियं च भीमसेनस्य पाञ्चाल्या मह्य-मेव च ॥ ७.५४ ॥

सूत उवाच—

अर्जुनः सहसाऽऽज्ञाय हरेर्हार्द-मथासिना ।
मणिं जहार मूर्धन्यं द्विजस्य सहमूर्धजम् ॥ ७.५५ ॥

---

7. 51. அப்பொழுது கோபித்தெழுந்த பீமசேனன் தனக்கோ தன் யஜமான னுக்கோ ஒரு பயனுமின்றி தூங்குகின்ற குழந்தைகளைக் கொன்ற அவனைக் கொல்வதே சாஸ்திர ஸம்மதமாகும் என்றான்.

7. 52. சதுர்ப்புஜரான பகவான் பீமசேனன் சொன்னதையும், துரௌபதி சொன்னதையும் கேட்டு, அர்ஜுனன் முகத்தைப் பார்த்துச் சிரிப்பவர்போல் பின்வரு மாறு கூறினார்.

ஸ்ரீ பகவான் கூறியது—

7. 53-54. இழிந்தவனாயினும் பிராம்மணனைக் கொல்லக் கூடாதென்றும், ஆனால் ஆததாயி யாயின் கொல்லலாம் என்றும் இரண்டும் என்னாலேயே சாஸ்திரத்தில் விதிக் கப்பட்டுள்ளன. இரண்டு கட்டளைகளையும் பரிபாலிப்பாயாக. உன் மனைவியைச் சமா தானப்படுத்தும்போது உன்னால் எந்தப் பிரதிக்ஞை செய்யப்பட்டதோ அதையும் உண் மையாகச் செய். (பொதுவில்) பீமசேனனுக்கும் பாஞ்சாலிக்கும் எனக்கும் எது பிரிய மாகுமோ அதைச் செய்வாயாக.

ஸூதர் கூறியது—

7. 55. அர்ஜுனன் கிருஷ்ணனுடைய உள்ளக் குறிப்பை உடனே தெரிந்து கொண்டு கத்தியால் பிராம்மணனுடைய தலையிலிருந்த இரத்தினத்தைக் குடுமியுடன் அறுத்தெடுத்தான்.

---

7. 52. **சதுர்ப்புஜ:**—தருமபுத்திரரும் திரௌபதியும் சொல்லியதை எதிர்த்து 'இவ னுக்கு மன்னிப்பா?' என்ற பீமனைத் தடுத்துச் சண்டையை விலக்கச் சதுர்ப்புஜங்களைக் காட் டினார் போலும்.

7. 53. ஒ. ஆகையால் எது செய்யத்தக்கது எது செய்யத்தகாதது என்று நிச்சயிப்ப தில் உனக்கு சாஸ்திரமே பிரமாணமாகும். —கீ. 17. 24.

7. 55. சிசுஹத்தியால் ஏற்கெனவே களையிழந்தவனும் (இப்போது) இரத்தினத்தையும் பிரம்மதேஜஸ்ஸையும் இழந்தவனுமாகிய அவனைக் கட்டிலிருந்து அவிழ்த்துவிட்டுக் கூடாரத் தினின்றும் விரட்டிவிட்டான்.

---

7. 55. **सहसाज्ञात्वा ।** பா. பே.

विमुच्य रशनाबद्धं बालहत्या हतप्रभम् ।
तेजसा मणिना हीनं शिबिरा-न्निरयापयत्  ॥ ७.५६ ॥

वपनं द्रविणादानं स्थानान्निर्यापणं तथा ।
एष हि ब्रह्मबन्धूनां वधो नान्योऽस्ति दैहिकः  ॥ ७.५७ ॥

सूत उवाच—

अथ ते संपरेतानां स्वाना-मुदक-मिच्छताम् ।
दातुं सकृष्णा गंगायां पुरस्कृत्य ययुः स्त्रियः  ॥ ८.१ ॥

तत्रासीनं कुरुपतिं धृतराष्ट्रं सहानुजम् ।
गान्धारीं पुत्रशोकार्तां पृथां कृष्णां च माधवः ।
सान्त्वयामास मुनिभि-र्हतबन्धून् शुचार्पितान्  ॥ ८.३ ॥

गन्तुं कृतमति-र्ब्रह्मन् द्वारकां रथ-मास्थितः ।
उपलेभेऽभिधावन्ती-मुत्तरां भय-विह्वलाम्  ॥ ८.८ ॥

---

7. 56. சிசுஹத்தியால் ஏற்கெனவே களையிழந்தவனும் (இப்போது) இரத்தினத்தையும் பிரம்ம தேஜஸ்ஸையும் இழந்தவனுமாகிய அவனைக் கட்டிலிருந்து அவிழ்த்துவிட்டுக் கூடாரத்தினின்றும் விரட்டிவிட்டான்.

7. 57. குடுமியை அறுத்தல், பொருளைப் பிடுங்கிக்கொள்ளுதல், இடத்தைவிட்டு விரட்டுதல் ஆகிய இவையே பிராம்மணாதமனுக்கு வதமாகும். ஈதன்றி சரீரவதம் விதிக்கப்படவில்லை.

ஸூதர் கூறியது—

8. 1. பிறகு அவர்கள் இறந்துபோன பந்துக்களில் உதகக் கிரியைகளை இச்சிப்பவர்களுக்கு கங்கையில் (தர்ப்பணத்தை) கொடுப்பதற்காக துரௌபதியுடன் ஸ்திரீகளை முன்னிட்டுக்கொண்டு சென்றனர்.

8. 3. (கிரியைகள் முடிந்தபின்) அங்கு வீற்றிருந்த குருவம்சத் தலைவரான தர்மபுத்திரரையும், அவரது தம்பிமார்களையும், திருதராஷ்டிரனையும், புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்ட காந்தாரியையும், குந்தியையும், பந்துக்களையிழந்து சோகத்திலாழ்ந்த மற்றவர்களையும் கிருஷ்ணன் முனிவர்களை முன்னிட்டுக்கொண்டு சமாதானப்படுத்தினார்.

8. 8. பிராம்மணரே! பின் தருமபுத்திரரை ராஜ்யத்தில் ஸ்தாபித்து மூன்று அசுவமேதயாகம் செய்துவைத்துவிட்டு துவாரகை செல்ல நிச்சயித்துத் தேறிலேறின கிருஷ்ணன் பயத்தால் கலங்கி எதிர்நோக்கி விரைந்து வருகின்ற உத்தரையைக் கண்டார்.

---

8. 1. தேவகாரியத்தில் ஆடவர் பெரியோர் குரு புரோகிதர் ஆகியோரை முன்னிட்டும், பித்ருகாரியத்தில் ஸ்திரீ சிறுவர் ஆகியோரை முன்னிட்டும் செல்லவேண்டும்.

8. 8. உபலேபே—ததர்ச।

---

8. 1. तेषां परेतानां ।  —பா. பே.

उत्तरोवाच—

पाहि पाहि महायोगिन् देव देव जगत्पते ।
नान्यं त्वदभयं पश्ये यत्र मृत्युः परस्परम् ॥ ८.९ ॥

अभिद्रवति मा-मीश शर-स्तप्तायसो विभो ।
कामं दहतु मां नाथ मा मे गर्भो निपात्यताम् ॥ ८.१० ॥

सूत उवाच—

उपधार्य वचस्तस्या भगवान् भक्तवत्सलः ।
अपाण्डवमिदं कर्तुं द्रौणेरस्त्र-मबुध्यत ॥ ८.११ ॥

व्यसनं वीक्ष्य तत्तेषा-मनन्य-विषयात्मनाम् ।
सुदर्शनेन स्वास्त्रेण स्वानां रक्षां व्यधाद्विभुः ॥ ८.१३ ॥

अन्तस्थः सर्वभूताना-मात्मा योगेश्वरो हरिः ।
स्वमायया्वृणोद्गर्भं वैराट्याः कुरुतन्तवे ॥ ८.१४ ॥

---

உத்தரை கூறியது—

8. 9 மஹாயோகியே! தேவதேவனே! உலக நாயகனே! காப்பாற்றும்! காப்பாற்றும்! ஒருவருக்கொருவர் யமனுயிருக்கின்ற இவ்வுலகில் உம்மைத் தவிர பயமற்ற ஸ்தானத்தை நான் காணவில்லை.

8. 10. ஈசனே! பிரபுவே! நாதா! பழுக்கக் காய்ந்த இரும்பு வடிவான பாணம் என்னைத் துரத்திவருகிறது. அது என்னை வேண்டுமானல் இஷ்டப்படி பொசுக்கட்டும், என் கர்ப்பம் அழியாமலிருக்கட்டும்.

ஸூதர் கூறியது—

8. 11. பக்தவத்ஸலனை பகவான் அவளுடைய வார்த்தையைக் கேட்டு ஆலோசித்து, இது பாண்டவர்களில்லாமலொழிப்பதற்காக அசுவத்தாமா ஏவிய அஸ்திரம் என்று தெரிந்துகொண்டார்.

8. 13. ஸர்வசக்திமானை கிருஷ்ணன் வேறுநாட்டமின்றித் தன்னிடம் பக்தி செய்பவர்களுக்கு ஏற்பட்ட அந்த விசனத்தைக் கண்டு தனது ஆயுதமாகிய சுதர்சனத்தால் தன்னைச் சார்ந்தவர்களை இரக்ஷித்தார்.

8. 14. யோகேசுவரனை கிருஷ்ணன் எல்லாப் பிராணிகளுடைய இருதயத்திலும் பிரகாசிக்கும் ஆத்மா. உத்தரையினுள்ளுமிருந்துகொண்டு குருவம்சத்தை அழியாமல் காக்கத் தன் மாயாசக்தியால் கருவுக்குக் கவசமளித்தார்.

---

8. 9. ஒ. பரம்பொருளில் எப்போது இவன் ஒரு சிறிதேனும் பேதத்தைச் செய்கிருனே அப்போது அவனுக்கு பயம் ஏற்படுகிறது. —தை. உப. 2. 7.

8. 10. **அபித்ரவதி—அபிமுகம் ஆயாதி**

8. 14. பகவானுக்கு ஹிருதயவாசம்தான், கர்ப்ப வாசம் கிடையாது. நினைத்தால் காப்பாற்றலாமென்றாலும் அன்பினுல் அங்குஷ்ட மாத்திரனுய்க் கருவில் சங்கம் சக்ரம் கதை வனமாலையுடன் தோன்றினுன்.

ஒ. அந்தர்-பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித: | —நாராயண ஸூக்தம்.

---

8. 9. **नान्यत्र त्वभयं ।**

8. 10. **दहति ।** —பா. பே.

यद्यप्यस्त्रं ब्रह्मशिरस्त्वमोघं चाप्रतिक्रियम् ।
वैष्णवं तेज आसाद्य समशाम्यद् भृगूद्वह ॥ ८.१५ ॥

ब्रह्मतेजो-विनिर्मुक्तै-रात्मजैः सह कृष्णया ।
प्रयाणाभिमुखं कृष्ण-मिदमाह पृथा सती ॥ ८.१७ ॥

कुन्त्युवाच—

नमस्ये पुरुषं त्वाऽऽद्य-मीश्वरं प्रकृतेः परम् ।
अलक्ष्यं सर्व-भूताना-मन्त-र्बहि-रवस्थितम् ॥ ८.१८ ॥

माया-जवनिकाच्छन्न-मज्ञाधोक्षज-मव्ययम् ।
न लक्ष्यसे मूढ-दृशा नटो नाट्यधरो यथा ॥ ८.१९ ॥

तथा परमहंसानां मुनीना-ममलात्मनाम् ।
भक्तियोग-विधानार्थं कथं पश्येमहि स्त्रियः ॥ ८.२० ॥

---

8. 15. சௌனகரே! பிரம்மாஸ்திரம் வீண்போகாதெனினும், அதைத் தடுக்க வேறு உபாயம் இல்லையெனினும், பகவானுடைய வீரியத்துக்கு எதிர்ப்பட்டதால் அது சக்தியிழந்து ஒடுங்கிவிட்டது.

8. 17. பிரயாணத்திற்குத் தயாராயிருக்கும் கிருஷ்ணனிடம் வந்து மஹா பதி விரதையான குந்தி, பிரம்மாஸ்திரத்தினின்று விடுபட்ட புத்திரர்களுடனும், திரௌபதியுடனும் பின்வருமாறு கூறினள்.

குந்தி கூறியது—

8. 18-19. உன்னை நமஸ்கரிக்கின்றேன். நீ எல்லாப் பிராணிகளினுள்ளும் புறமும் ஒருபடித்தாயிருப்பவன். எனினும் (இந்திரியங்களுக்கும் மனதுக்கும்) காணமுடியாதவன். பிரகிருதிக்கு அப்பாற்பட்டவனாய், ஈசுவரனாய் ஆதிபுருஷனாய் உள்ளவன் நீ. மாயையாகிற திரைக்குப் பின்னிருப்பதால் இந்திரியங்களுக்கு விஷயமாகாதவனும், மாறுபாடில்லாதவனும் நீ. நாடகத்தில் வேஷம் போட்டுக்கொண்டவனைப் பார்த்தாலும், அறியாத மக்கள் அவனை எப்படி உண்மையில் அறியமாட்டார்களோ அவ்வாறு நீ பார்த்தும் பார்க்கப்படுவதில்லை.

8. 20. பரிசுத்தமான இருதயம்படைத்த முனிவர்களுக்கும் பரமஹம்ஸர்களுக்குங்கூட அவர்களிடம் பக்தியை வளர்க்கும் பொருட்டு நீ அப்படித்தான் (மறைந்து) இருக்கின்றாய். ஸ்திரீகளாகிய நாங்கள் எப்படி அறிவோம் ?

---

8. 15. **அமோகஞ் சாப்ரதிக்ரியம்**—எவன் அமோகமான சக்தியைப் பிரம்மாஸ்திரத்திற்குக் கொடுத்தவனோ அவனே அதை அழித்தான். உலகை உண்டுமிழ்பவனுக்கு இது அதிசயமா ?

**உத்**வஹ: ச்ரேஷ்ட:।

8. 18. ந நு கனிஷ்டம் மாம் கதம் நமஸ்கரோஷி? தத்ர ஆஹ ஆத்யம் புருஷம் ப்ரக்ருதே: பரம்।
—ஸ்ரீ.

ஓ. பராசரபட்டருடைய பாத தீர்த்தத்தை அவருடைய தாயார் ஆண்டாள் சேவித்தாள். 'நீர் தாயாராயிருந்து இப்படிச் செய்யலாமோ ?' என்ன, ஆண்டாள், 'பிறர் திருவாராதனத்தின் தீர்த்தமே ஸ்வீகார்யமாய்த் தான் ஏறியருளப் பண்ணின விக்ரகத்தின் தீர்த்தம் ஸ்வீகார்ய மாகாதோ ?' என்றாள்.

ஓ, கணபுரம் கை தொழும் பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப் பெறுவரே ?

8. 19. ஜவனிகா - திரஸ்கரிணீ।

ஓ. எவர்கள் என்னைச் சரணடைகின்றார்களோ அவர்களே என் மாயையைத் தாண்டுவார்கள்.
—கீ. 7. 15.

---

8. 18. **बहिरपि ध्रुवम् ।**
—பா. பே.

कृष्णाय वासुदेवाय देवकीनन्दनाय च ।
नन्दगोप-कुमाराय गोविन्दाय नमो नमः ॥ ८.२१ ॥

नमः पङ्कजनाभाय नमः पङ्कजमालिने ।
नमः पङ्कजनेत्राय नमस्ते पङ्कजाङ्घ्रये ॥ ८.२२ ॥

यथा हृषीकेश खलेन देवकी कंसेन रुद्धाऽतिचिरं शुचार्पिता ।
विमोचिताहं च सहात्मजा विभो त्वयैव नाथेन मुहुर्विपद्गणात् ॥ ८.२३ ॥

विपदः सन्तु नः शश्वत् तत्र तत्र जगद्गुरो ।
भवतो दर्शनं यत्स्या-दपुनर्भव-दर्शनम् ॥ ८.२५ ॥

जन्मैश्वर्य-श्रुत-श्रीभि-रेधमान-मदः पुमान् ।
नैवार्हत्यभिधातुं वै त्वा-मकिंचन-गोचरम् ॥ ८.२६ ॥

नमोऽकिंचनवित्ताय निवृत्तगुण-वृत्तये ।
आत्मारामाय शान्ताय कैवल्यपतये नमः ॥ ८.२७ ॥

---

8. 21. கிருஷ்ணனுக்கு, வாசுதேவனுக்கு, தேவகீநந்தனனுக்கு, நந்தகோபகுமாரனுக்கு, கோவிந்தனுக்கு, நமஸ்காரம், நமஸ்காரம்.

8. 22, உந்தித் தாமரையோனுக்கு, தாமரைமாலை யணிந்தோனுக்கு, தாமரைக் கண்ணனுக்கு, நமஸ்காரம். தாமரைபோன்ற பாதங்களையுடைய உனக்கு நமஸ்காரம்.

8. 23, ஹ்ருஷீகேசா! ஸர்வேசுவரா! கொடிய கம்சனால் நெடுங்காலம் சிறையிலிடப்பட்டுத் துன்புறுத்தப்பட்ட தேவகி எவ்விதம் உன்னால் விடுவிக்கப்பட்டாளோ அவ்விதமே உன்னையே நாதனாயடைந்த நானும் என் புத்திரர்களும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்து வந்த விபத்துக்களினின்றும் விடுவிக்கப்பட்டோம்.

8. 25. ஜகத்குருவே! (எங்கள் வாழ்க்கையில்) எப்போதும் அடிக்கடி விபத்துக்கள் வந்துகொண்டே இருக்கட்டும். ஏனெனில் அதனாலேயே உன்னுடைய தரிசனம் கிட்டும். அத்தரிசனம் பிறவா நிலைக்கு வழிகாட்டிக் கொடுக்கும்.

8. 26. உயர் குடிப்பிறப்பு, ஆதிக்கியம், கல்வி, ஸம்பத்து இவற்றால் பெருமிதமடைந்த மனிதன் உன்னுடைய பெயரைக்கூடச் சொல்லுந் திறமையுடையவனாகான். ஏனெனில் நீ (மேற்கூறிய பெருமை) ஏதுமில்லாதவர்களாலேயே அடைதற் குரியவனாயிருக்கின்றாய்.

8. 27. ஏதுமிலாரின் செல்வமாயும், மாயா குணங்களுக்கு அப்பாற்பட்டவனாயும், தன்னிடத்திலேயே தான் ரமிப்பனாயும், சாந்தஸ்வரூபனாயும், மோக்ஷநாயகனாயும் உள்ள உனக்கு நமஸ்காரம்.

---

8. 21. அவனை 'நம:' என்று வணங்கினால் எல்லா ஆசைகளும் இவனுக்கு வணக்கம் செய்யும். —தை. உப. 3.10.4

8. 25. ஒ. 'பெரும் ஆபத்தினில் வந்து பக்கத்தினில் நின்றதனை விலக்கிடுவான்' —பாரதி.

5. 26. அபிதாதும்—ஸ்ரீக்ருஷ்ண கோவிந்தேதி வக்துமபி।

---

8. 25. सन्तु ताः । —பா. பே

जन्म कर्म च विश्वात्म-न्नजस्याकर्तु-रात्मनः ।
तिर्यङ्-नृषिषु यादःसु तदत्यन्त-विडंबनम् ॥ ८.३० ॥

गोप्याददे त्वयि कृतागसि दाम तावद्
या ते दशाश्रु-कलिलांजनसंभ्र माक्षम् ।
वक्त्रं निनीय भयभावनया स्थितस्य
सा मां विमोहयति भीरपि यद्बिभेति ॥ ८.३१ ॥

केचिदाहु-रजं जातं पुण्यश्लोकस्य कीर्तये ।
यदोः प्रियस्यान्ववाये मलयस्येव चन्दनम् ॥ ८.३२ ॥

अपरे वसुदेवस्य देवक्यां याचितोऽभ्यगात् ।
अजस्त्व-मस्य क्षेमाय वधाय च सुरद्विषाम् ॥ ८.३३ ॥

---

8. 30. நீ இவ்வுலகாயும் உலகுக்கு ஆத்மாயுமுள்ளவன், பிறப்பற்றவன், செயலற்றவன். அப்படிப்பட்ட உனக்கு பசு, பக்ஷி, மனிதன், ரிஷி, ஜலஜந்து முதலிய நிலைகளில் பிறப்பும் செயலும் விளையாட்டே யொழிய வேறன்று.

8. 31. நீ (தயிர்ச்சட்டியை யுடைத்து) விஷமம் செய்தபோது யசோதை (உன்னை உரலில் கட்டுவதற்கு) கயிற்றை எடுத்ததும் மையிட்ட கண்களில் நீர் பெருக முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு பயந்த பாவனையில் நின்ற உன்னுடைய அந்நிலை என்னை பிரமிக்கச் செய்கின்றது. (உனக்கேது பயம்?) பயமே உருவெடுத்தாலும் அது உன்னிடம் வர பயப்படுமே.

8. 32. சந்தன மரத்தால் மலய பருவதம் பெருமை பெற்றதுபோல், உனக்குப் பிரியனும் புண்ணிய சுலோகனுமான யதுவின் கீர்த்தி விளங்குவதற்காகப் பிறவியில்லாத நீ யது வம்சத்தில் பிறந்ததாக (பெரியோர்) சிலர் கூறுகின்றனர்.

8. 33. இவ்வுலகின் க்ஷேமத்திற்காகவும், தேவர்களின் எதிரிகளை வதைப்பதற்காகவும், வசுதேவரால் (முன் ஜன்மத்தில்) யாசிக்கப்பட்டுப் பிறப்பற்ற நீ தேவகியிடம் புத்திரனுய் வந்ததாக வேறு சிலர் கூறுகின்றனர்.

---

8. 30. திர்யக்ஷு வராஹாதி ரூபேண, ந்ருஷு ராமாதி ரூபேண, ருஷிஷு நரநாராயணாதி ரூபேண, யாதஸ்ஸு மத்ஸ்யாதி ரூபேண।

8. 31. ஒ. முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்
முகிழிளம் சிறுத்தாமரைக் கையும்
எழில் கொள் தாம்பு கொண்டடிப்பதற்கெள்கு
நிலையும் வெண் தயிர் தோய்ந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சி நோக்கு மன்னோக்கும்
அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்
தொழுகையு மிவை கண்டவசோதை
தொல்லையின்பத்திறுதி கண்டாளே. —குலசேகராழ்வார்

பீரபி யத் பிபேதி।—ஒ. இவனிடம் பயத்தால் காற்று வீசுகிறது; பயத்தால் சூரியன். உதிக்கிறான். —தைஉப. 2 8.

8. 32. அன்வவாயே—வம்சே; புண்யச்லோகஸ்ய ப்ரியஸ்ய யுதிஷ்டிரஸ்ய கீர்த்தயே யதோரேவ கீர்த்தயே இதிவா।

8. 33. அஸ்ய ஜகத:க்ஷேமாய।

---

8. 30. नृष्वपि यादस्सु । 8. 31. मृषाश्रु
8. 33. अजस्त्वमस्य । —பா. பே.

भारावतारणायान्ये भुवो नाव इवोदधौ ।
सीदन्त्या भूरि भारेण जातो ह्यात्मभुवार्थितः ॥ ८.३४ ॥

भवेऽस्मिन् क्लिश्यमानाना-मविद्या-काम-कर्मभिः ।
श्रवणस्मरणार्हाणि करिष्यन्निति केचन ॥ ८.३५ ॥

शृण्वन्ति गायन्ति गृणन्त्यभीक्ष्णशः स्मरन्ति नन्दन्ति तवेहितं जनाः ।
त एव पश्यन्त्यचिरेण तावकं भवप्रवाहोपरमं पदांबुजम् ॥ ८.३६ ॥

अथ विश्वेश विश्वात्मन् विश्वमूर्ते स्वकेषु मे ।
स्नेहपाश-मिमं छिन्धि दृढं पाण्डुषु वृष्णिषु ॥ ८.४१ ॥

त्वयि मेऽनन्य-विषया मति-र्मधुपतेऽसकृत् ।
रति-मुद्वहतादद्धा गङ्गेवौघमुदन्वति ॥ ८.४२ ॥

---

8. 34. சமுத்திரத்தில் கப்பல்போல் (பாவிகளின்) மிகுந்த பாரத்தால் தத்தளிக்கும் பூமியின் சுமையைக் குறைப்பதற்காகப் பிரம்மதேவரால் வேண்டப்பட்டு நீ பிறந்ததாகப் பிறர் கூறுகின்றனர்.

8. 35. அவித்தை, காமம், கருமம் இவற்றால் இவ்வுலகில் துன்புறும் ஜீவர்களுக்குக் கேட்டற்கும் நினைத்தற்கும் இனியவைகளான லீலைகளைப் புரியும் பொருட்டு என்று மற்றுஞ் சிலர் கூறுகின்றனர்.

8. 36. எந்த ஜனங்கள் உனது லீலைகளை இடைவிடாது கேட்டும், பாடியும் பேசியும் நினைத்தும் மகிழ்கின்றார்களோ அவர்களே விரைவில் ஸம்ஸாரப் பிரவாகம் சாந்தியடையும் உனது பாதகமலங்களைக் காண்கின்றனர்.

8. 41. உலக நாயகனும், உலகத்தின் ஆத்மாவாயும் உலக வடிவினனாயும் உள்ளவனே! (பிறந்த) விருஷ்ணி குலத்திலும் (புகுந்த) பாண்டு குலத்திலும் உறவினர்களிடத்தில் உள்ள எனது திடமான சிநேகபாசத்தை அறுத்து விடுவாயாக.

8. 42. மதுகுலத் தலைவனே! நீர்ப் பெருக்கைக் கடலில் சேர்க்கும் கங்கைபோல் எனது புத்தியானது வேறு விஷயங்களில் நாட்டமில்லாததாய் இடையறாது அன்புப் பெருக்கை உன்னிடம் நேரில் கொண்டு சேர்க்கட்டும்.

---

8. 36. **தவேஹிதம்**—சேஷ்டிதம்.

ஒ. துஞ்சும் போதழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லினும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணாவென்னு நாமம். —திருமங்கையாழ்வார்.

8. 42. ஆற்றில் அணை கட்டினாலும் அதனால் தடைபடாமல் அதைக் கடந்து வெள்ளம் எப்படிச் சமுத்திரத்தையே நாடிச் செல்லுகிறதோ அப்படி உலக உறவைத்தாண்டி நான் செல்ல அருள்வாய். ஸாதாரண மனிதர் மனம் பிரவாகமின்றிக் குடும்பமாகிற குட்டையில் தேங்கிவிடுகிறது.

---

8. 35. **करिष्य इति ।**
8. 36. **गायन्ति वदन्त्य-।**
8. 42. **रतिमुद्वहतां तद्वत् ।** —பா. பே

श्रीकृष्ण कृष्णसख वृष्ण्यृषभावनिध्रुग् राजन्यवंश-दहनानपवर्गवीर्य ।
गोविन्द गो-द्विज-सुरार्तिहरावतार योगेश्वराखिलगुरो भगव-
न्नमस्ते ॥ ८.४३ ॥

सूत उवाच—

पृथयेत्थं कलपदैः परिणूताखिलोदयः ।
मन्दं जहास वैकुण्ठो मोहयन्निव मायया ॥ ८.४४ ॥

तां बाढमित्युपामन्त्र्य प्रविश्य गजसाह्वयम् ।
स्त्रियश्च स्वपुरं यास्यन् प्रेम्णा राजा निवारितः ॥ ८.४५ ॥

व्यासाद्यै-रीश्वरेहाज्ञैः कृष्णेनाद्भुत-कर्मणा ।
प्रबोधितोऽपीतिहासै-र्नाबुध्यत शुचार्पितः ॥ ८.४६ ॥

---

8. 43. ஸ்ரீ கிருஷ்ணு! அர்ஜுன நண்பா! யாதவசிரேஷ்டா! உலகை வஞ்சிக்கும் அரசகுலமாகிய மூங்கிற் புதருக்குக் காட்டுத் தீ போன்றவனே! குறைவற்ற வீரியமுடையவனே! கோவிந்தா! பசுக்களுக்கும் அந்தணர்க்கும் வானவர்க்கும் ஏற்பட்ட துன்பங்களைத் துடைக்க அவதரித்தவனே! யோகேசுவரா! சராசர குருவே! பகவானே! உனக்கு நமஸ்காரம்.

ஸூதர் கூறியது—

8. 44. அன்புகனியும் சொற்களால் இங்ஙனம் குந்தியால் துதிக்கப்பட்ட ஸர்வேசுவரனுன கிருஷ்ணன் மாயையால் மயக்குபவன்போல் மெல்லச் சிரித்தார்.

8. 45. அவளுக்கு "அப்படியே ஆகுக!" என்று சொல்லிவிட்டு திரும்பி ஹஸ்திநுபுரிக்குட் சென்று ஸ்திரீகளிடம் விடைபெற்றுக்கொண்டு (மீண்டும்) புறப்படுகையில் பிரேமையின் எழுச்சியால் தர்மபுத்திரரால் பயணம் நிறுத்தப்பட்டவராக ஆனுர்.

8. 46. பகவானுடைய லீலா ரகசியங்களை உணர்ந்த வியாசர் முதலிய ரிஷிகளாலும், அற்புதமான செயலுடைய கிருஷ்ணனுலும் இதிஹாஸங்கள் மூலம் அறிவுறுத்தப்பட்டபோதிலும் சோகத்திலாழ்ந்த தருமபுத்திரர் மனந்தெளியவில்லை.

---

8. 43. **க்ருஷ்ணஸக** !—பகவானிடமிருந்து பிரிக்கமுடியாத உறவேற்பட்டிருந்ததால் அர்ஜுனனுக்கும் கிருஷ்ணன் என்ற பெயர் போலும். அப்படியே வியாஸருக்கும் கிருஷ்ணன் என்ற பெயர் பொருந்துகிறது.

8. 44. ஒ. (ஹாஸோ ஜனேன்மாதகரீ ச மாயா) அவனுடைய புன்சிரிப்பே ஜனங்களை மயக்கும் மாயை.

8. 46. **ஸ்ரீ** க்ருஷ்ணனல் உபதேசிக்கப்பட்டும் தருமபுத்திரர் மனம் தெளியாதது ஒரு அற்புதம்; அதுவும் அவன் திருவுள்ளம்; பீஷ்மரால் அறிவுறுத்தப்படவேண்டுமென்பது அவனது ஸங்கல்பம்.

'ஈச்வரேஹாஜ்ஞை-ரீச்வரசேஷ்டாபிஜ்ஞைர்-வ்யாஸாத்யை:'

—ஸ்ரீ வீரராகவ:

'ஸர்வஜ்ஞா அபி ஸத்வ-வ்யவதான-பகவதவதாராச்ச பகவதிச்சாம் ந ஜானந்தீத்யாஹ ஈச்வரேஹா அஜ்ஞைரிதி'

—ஸுபோதினீ.

---

8. 46. **शुचार्दितः ।** —பா. பே.

युधिष्ठिर उवाच—

नैनो राज्ञः प्रजाभर्तु-र्धर्मयुद्धे वधो द्विषाम् ।
इति मे न तु बोधाय कल्पते शासनं वचः ॥ ८.५० ॥

स्त्रीणां मद्धत-बन्धूनां द्रोहो योऽसाविहोत्थितः ।
कर्मभिर्गृहमेधीयै-र्नाहं कल्पो व्यपोहितुम् ॥ ८.५१ ॥

यथा पङ्केन पङ्काम्भः सुरया वा सुराकृतम् ।
भूतहत्यां तथैवैनान्नयज्ञै-र्मार्ष्टु-मर्हति ॥ ८.५२ ॥

सूत उवाच—

इति भीतः प्रजाद्रोहात् सर्वधर्म-विवित्सया ।
ततो विनशनं प्रागाद् यत्र देवव्रतोऽपतत् ॥ ९.१ ॥

तदा ते भ्रातरःसर्वे सदश्वैःस्वर्णभूषितैः ।
अन्वगच्छन् रथैर्विप्रा व्यास-धौम्यादय-स्तथा ॥ ९.२ ॥

---

யுதிஷ்டிரர் கூறியது—

8. 50. 'தரும யுத்தத்தில் எதிரிகளைக் கொல்லுவது பிரஜைகளைக் காக்கும் அர சருக்குப் பாவமாகாது' எனும் சாஸ்திர வாக்கியம் என்னைத் தெளியவைக்க உதவவில்லை.

8. 51. என்னால் கொல்லப்பட்டு பந்துக்களை இழந்துவிட்ட ஸ்திரீகளுக்கு இழைக் கப்பட்டதாய் இப்போது உதித்திருக்கும் துரோகத்தை கிருஹஸ்தன் செய்யக்கூடிய யாகாதி கர்மங்களால் போக்கிக்கொள்ளக் கூடும் என்று எனக்கு நம்பிக்கை இல்லை.

8. 52. சேறான தண்ணீர் எப்படி சேற்றால் சுத்தமாகாதோ, கள்ளின் தோஷம் எப்படிக் கள்ளால் நீங்காதோ அப்படியே பிராணிகளைக்கொன்ற பாவத்தை (பிராணி ஹிம்சையைக் கையாளும்) யாகங்களால் போக்கிக்கொள்ள இயலாது (என்பது என் கருத்து).

ஸூதர் கூறியது—

9. 1. இவ்விதம் 'பிரஜைகளுக்குத் துரோகம் செய்துவிட்டோம்' என்று பயந்த தருமபுத்திரர் குருக்ஷேத்திரத்தில் பீஷ்மர் விழுந்து (அம்புப் படுக்கையில்) கிடந்த இடத்தை நோக்கிச் சென்றார்.

9. 2. அப்போது சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டுச் சிறந்த குதிரைகள் பூட்டிய தேர்களில் எல்லாச் சகோதரர்களும், வியாசர், தௌம்யர் முதலிய பிராம்மணர்களும் தொடர்ந்தனர்.

---

8. 51. **கல்ப:**—ஸமர்த்த:

8. 52. **பூதஹத்**யா - மேகாம் ப்ரமா**த**தோ ஜாதாம் **புத்தி**பூர்வக - ஹிம்ஸாப்ராயைர்-யஜ்ஞைர்-மார்ஷ்டும் **சோத**யிதும் நார்ஹதீதி। —ஸ்ரீ.

9. 1. **விவித்ஸயா**—வேதிதுமிச்சயா। **விநசனம்** - குருக்ஷேத்ரம்। **தே**வவ்ரதோ **பீ**ஷ்ம:।

---

8. 50. **कल्पते शाश्वतं**

8. 52. **तथैवैकां** —பா. பே.

भगवानपि विप्रर्षे रथेन सधनंजयः।
स तैर्व्यरोचत नृपः कुबेर इव गुह्यकैः ॥ ९.३.॥

दृष्ट्वा निपतितं भूमौ दिवश्च्युत-मिवामरम्।
प्रणेमुः पाण्डवा भीष्मं सानुगाः सह चक्रिणा ॥ ९.४ ॥

तत्र ब्रह्मर्षयः सर्वे देवर्षयश्च सत्तम।
राजर्षयश्च तत्रासन् द्रष्टुं भरतपुङ्गवम् ॥ ९-५ ॥

तान् समेतान् महाभागा-नुपलभ्य वसूत्तमः।
पूजयामास धर्मज्ञो देश-काल-विभागवित् ॥ ९-९ ॥

कृष्णं च तत्प्रभावज्ञ आसीनं जगदीश्वरम्।
हृदिस्थं पूजयामास माययोपात्त-विग्रहम् ॥ ९.१० ॥

पाण्डुपुत्रानुपासीनान् प्रश्रय-प्रेम-सङ्गतान्।
अभ्याचष्टानुरागास्रै-रन्धी-भूतेन चक्षुषा ॥ ९-११ ॥

---

9. 3. சௌனகரே! பகவானும் தனஞ்ஜயனுடன் தேரில் சென்றார். அவர்களுடன் கூடிய அரசர் குஹ்யகர்களால் சூழப்பெற்ற குபேரனைப்போல் விளங்கினார்.

9. 4. வானிலிருந்து பூமியில் நழுவிய தேவனைப்போன்று (அம்புப் படுக்கையில்) வீழ்ந்து கிடக்கும் பீஷ்மரைக் கண்டு பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடனும் பரிவாரங்களுடனும் வணங்கினர்.

9. 5. ஸாதுசிரேஷ்டரே! அதே சமயத்தில் அங்கு பிரம்மரிஷிகள், தேவரிஷிகள், ராஜரிஷிகள் எல்லோரும் பரதசிரேஷ்டரான பீஷ்மரைத் தரிசிப்பதற்காக வந்தனர்.

9. 9. தரும மறிந்தவரும் இடத்துக்கும் காலத்துக்கும் உரிய பாகுபாட்டை அறிந்தவருமான வசுசிரேஷ்டர் (பீஷ்மர்) மகான்களான அவர்கள் வந்ததைக்கண்டு (மகிழ்ந்து) பூஜித்தார்.

9. 10. ஸ்ரீ கிருஷ்ணனுடைய பெருமையை அறிந்த அவர் யோகமாயையால் உடலெடுத்தவரும் ஜகதீசனுமான அவரைத் தனது உள்ளத்தில் உறைபவராகவும் எதிரில் வீற்றிருப்பவராகவும் (இருபாங்கிலும்) பூஜித்தார்.

9. 11. அன்பும் வணக்கமும் நிறைந்தவர்களாய் அருகில் அமர்ந்திருந்த பாண்டு புத்திரர்களை நோக்கிக் அன்புக் கண்ணீரால் பார்வை மறைந்தவராய்க் கூறலுற்றார்:—

---

9. 4. பீஷ்மர் தேவர்கள் பூமியில் படாமலிருப்பதுபோலிருந்தார், ஸ்ரீ கிருஷ்ணனும் கூட நமஸ்கரித்தது 'ஆசார-ப்ரபவோ தர்ம:' என்பதைக் காட்டுகிறது. ஒ. அமானீ மானதோ மான்ய: லோகஸ்வாமீ'—வி. ஸ.

9. 5. அந்தியகாலத்தில் பகவந்நாம பஜனை செய்ய சக்தியில்லாவிட்டாலும் மகான்களுடைய கடாக்ஷம் விழுந்தால் பாவம் போகும்.

9. 9. 'ப்ரத்யுத்தானுதி-வந்தனுதி-பூஜாயா-மசக்தத்வான்-மானஸீம் வாசிகீம் ஆஞ்ஜலிகீம் வா பூஜாம் க்ருதவானித்யர்த்த:' —ஸ்ரீ விஜயத்வஜ:।

9. 10. (ஹிருதிஸ்தம் ஸந்தம் புரத ஆஸீனம் பூஜயாமாஸ) இருதயத்தில் தான் பூஜிக்கும் மூர்த்தியையே வெளியிலும் கண்டு பூஜித்தார்.

---

9. 5 सत्तमाः। 9. 11. प्रेमसङ्गतान्। பா. பே.

अहो कष्ट-महोऽन्याय्यं यधूयं धर्मनन्दनाः ।
जीवितुं नार्हथ क्लिष्टं विप्रधर्माच्युताश्रयाः ॥ ९.१२ ॥

संस्थितेऽतिरथे पाण्डौ पृथा बालप्रजा वधूः ।
युष्मत्कृते बहून् क्लेशान् प्राप्ता तोकवती मुहुः ॥ ९.१३ ॥

सर्वं कालकृतं मन्ये भवतां च यदप्रियम् ।
सपालो यद्वशे लोको वायोरिव घनावलिः ॥ ९-१४ ॥

यत्र धर्मसुतो राजा गदापाणि-र्वृकोदरः ।
कृष्णोऽस्त्री गाण्डीवं चापं सुहृत्कृष्ण-स्ततो विपत् ॥ ९-१५ ॥

न ह्यस्य कर्हिचिद्राजन् पुमान् वेद विधित्सितम् ।
यद्विजिज्ञासया युक्ता मुह्यन्ति कवयोऽपि हि ॥ ९.१६ ॥

9. 12. தருமத்தில் மகிழ்பவர்களே! என்ன கஷ்டம்! என்ன அநியாயம்! பிராம்மணர்களையும் தருமத்தையும் அச்சுதனையும் ஆசிரயித்தவர்களா யிருந்தும் நீங்கள் வாழ்வதற்குப்பட்ட துன்பம் ஒவ்வாது.

9. 13. அதிரதனான பாண்டு இறந்த பின் சிறு குழந்தைகளான உங்களை வைத்துக்கொண்டு சிறு பெண்ணான குந்தி உங்களுக்காகப் பல கஷ்டங்களைப் பல முறையடைந்தாள்.

9. 14. மேகக் கூட்டம் காற்றின் வசமாவதுபோல் லோகபாலர்களுடன் கூடிய உலகம் எந்தக் காலமெனும் தெய்வத்தின் வசமாயுள்ளதோ அக்காலத்தாலேயே உங்களுடைய துன்ப மனைத்தும் விளைவிக்கப் பட்டதென நான் கருதுகிறேன்.

9. 15. (ஏனெனில்) தருமபுத்திரன் அரசனாகவும், பீமசேனன் கதை ஏந்திக் காப்பவனாகவும், அர்ஜுனன் வில்லாளியாகவும், காண்டீவம் வில்லாகவும், கிருஷ்ண பகவான் உற்ற துணையாகவும் அமைந்த இடத்திலுமல்லவா விபத்து ஏற்படுகிறது.

9. 16. அரசே! எவனுடைய இச்சையை (லீலா ரகசியத்தை) அறிய விரும்பி யோகத்திலாழ்ந்த தீர்க்கதரிசிகளும் அறியமுடியாமல் மயங்குகின்றனரோ அவனுடைய இச்சையை ஒருபோதும் ஒரு மனிதனும் அறியமாட்டான்.

9, 11. **அப்யாசஷ்ட ததர்ச** உவாசச சக்ஷேருபயார்த்தகத்வாத்। —வீ

9. 12. **'விப்ரதர்மாச்யுதாச்ரயா:'**—தர்மோ ஹி த்ரிவித: நீத்யவிருத்த: ஸ்வபாவ சுத்த: ஈச்வரஸம்பந்தீ ச। தர்மம் முவ்வகைப்பட்டது. நீதிக்கு மாறுபடாமலும் ஸ்வதர்மத்திற்கிசைந்தும் பகவத்பக்தியுடனும் கூடியது.

9. 13. **தோகவதீ**—அபத்யவதீ,

9. 15. தர்மம், தேகபலம், அஸ்திரம் எல்லாவற்றையும் கொடுத்து ஆபத்தையும் அத்துடன் கொடுத்து அதை விலக்க அவனே ஓடிவந்து உழைக்கிருன் பகவான்.

9, 16, **விதித்ஸிதம்**—கர்த்துமிஷ்டம்।

9. 12. **कृच्छ्रं ।**

9. 13. **संस्थिते विरथे ।**

9. 16. **चिकित्सितम् ।**

பா. பே.

तस्मादिदं दैव-तन्त्रं व्यवस्य भरतर्षभ ।
तस्यानुविहितोऽनाथा नाथ पाहि प्रजाः प्रभो ॥ ९.१७ ॥

एष वै भगवान् साक्षादाद्यो नारायणः पुमान् ।
मोहयन्मायया लोकं गूढश्चरति वृष्णिषु ॥ ९.१८ ॥

अस्यानुभावं भगवान् वेद गुह्यतमं शिवः ।
देवर्षि-र्नारदः साक्षाद्भगवान् कपिलो नृप ॥ ९.१९ ॥

यं मन्यसे मातुलेयं प्रियं मित्रं सुहृत्तमम् ।
अकरोः सचिवं दूतं सौहृदादथ सारथिम् ॥ ९.२० ॥

सर्वात्मनः समदृशो ह्यद्वयस्यानहंकृतेः ।
तत्कृतं मतिवैषम्यं निरवद्यस्य न क्वचित् ॥ ९.२१ ॥

---

9. 17. ஆகையால் இதைத் தெய்வாதீனம் என நிச்சயமாய் மனதைத் திடப் படுத்திக்கொண்டு ஈசுவராஜ்ஞையை நிறைவேற்றுபவனாய், அநாதைகளான மக்களை, பரதகுலசிரேஷ்டனாகவும் தலைவனாகவும் ஆளுந்திறமை வாய்ந்தவனாகவுமுள்ள நீர் காப்பீராக.

9. 18. இவர் ஸாக்ஷாத் பகவான், ஆதிநாராயணன், பரமபுருஷன். உலகைத் தனது யோக மாயையால் மயக்கிக்கொண்டு யாதவர்களிடை மறைந்து வசிக்கின்றார்.

9. 19-20. எளிதில் அறியமுடியாத இவர் பெருமையைச் சிவபிரான் அறிவார்; தேவரிஷியான நாரதரும், ஸாக்ஷாத் பகவானேயான கபிலரும் அறிவர். அப்படிப்பட்ட வரை நீர் அம்மான் சேயாகவும், பிரியனாகவும், நண்பனாகவும், உருகுமுள்ளமுடையவனாகவும் கருதுகின்றீர்; நெருங்கிய நட்பினால் மந்திரியாகவும், தூதனாகவும், தேரோட்டுபவனாகவும் அல்லவா செய்துகொண்டீர்.

9. 21 குற்றமற்றவரும், அஹங்காரமற்றவரும், தனக்கு நிகரற்றவரும், ஸமதர்சியும் அந்தர்யாமியுமான அவருக்கு (உயர்வு தாழ்வான) செயல்களினாலுண்டாகும் புத்தி பேதம் ஒருபோதும் இல்லை.

---

9. 18, இந்த ஸமயத்தில்தான் எல்லா தர்மங்களையும் கேட்டபின்னர் யுதிஷ்டிரர் (கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத:) உமது அபிப்பிராயத்தில் எல்லா தர்மங்களினும் சிறந்த தர்மம் எது?' என்று பீஷ்மரைக் கேட்க, 'ஏஷ மே ஸர்வதர்மாணாம் தர்மோऽதிகதமோ மத:) இது தான் எல்லா தர்மங்களிலும் சிறந்த தர்மம்' என்று விஷ்ணு ஸஹஸ்ர நாமஜபத்தை உபதேசித்தார்.

9. 20. **மாதுலேயம்**—மாதுல்யா: தேவக்யா: ஸுதம் | மாதுல்யா இத்யாதிகம் ஸ்த்ரீப்யோ டக்-ஸித்த்யர்த்தமித்தம் வ்யாக்யாதம் | மாதுலஸ்யாபத்யம் மாதுலாயனிரித்யேவ ஸ்யாத் |

கிருஷ்ணன் குதிரையுங் குளிப்பாட்டுவான், கீதையும் உபதேசிப்பான்.

9. 21. **நிரவத்யஸ்ய—ராகாதி சூன்யஸ்ய** |

ஒ. 'நான் எல்லா உயிர்களிடத்தும் ஸமமாயுள்ளேன்; எனக்கு வெறுக்கத்தக்கவனுமில்லை, விரும்பத்தக்கவனுமில்லை; ஆனால் எவர்கள் என்னை பக்தியினால் பூஜிக்கின்றார்களோ அவர்கள் என்னிடத்திலுளர், நானும் அவர்களிடத்திலுள்ளேன்' —கீ. 9-29.

ஒ. காற்று எப்போதும் வீசினாலும் பாயை விரித்தால்தான் படகைத் தள்ளும். வெளிச்சம் கண்ணைத் திறந்தால்தான் தெரியும். —ரா. கி.

---

9. 19. **कपिलो मुनिः** ॥ பா. பே.

तथाप्येकान्त-भक्तेषु पश्य भूपानुकंपितम् ।
यन्मेऽसूंस्त्यजतः साक्षात्कृष्णो दर्शन-मागतः ॥ ९.२२ ॥

भक्त्यावेश्य मनो यस्मिन् वाचा यन्नाम कीर्तयन् ।
त्यजन् कलेवरं योगी मुच्यते कामकर्मभिः ॥ ९.२३ ॥

स देवदेवो भगवान् प्रतीक्षतां कलेवरं यावदिदं हिनोम्यहम् ।
प्रसन्न-हासारुण-लोचनोल्लसन्-मुखांबुजो ध्यान-पथ-श्चतुर्भुजः ॥ ९.२४ ॥

सूत उवाच—

युधिष्ठिरस्तदाकर्ण्य शयानं शरपंजरे ।
अपृच्छद्विविधान् धर्मान् ऋषीणां चानुशृण्वताम् ॥ ९.२५ ॥

धर्मं प्रवदत-स्तस्य स कालः प्रत्युपस्थितः ।
यो योगिनश्छन्दमृत्यो-र्वाञ्छित-स्तूत्तरायणः ॥ ९.२९ ॥

---

9. 22. (அவர் பற்றற்று எங்கும் சமமாய் உறைபவர்) ஆயினும் அரசே! ஏகாந்த பக்தர்களிடத்தில் அவருடைய கருணையைப் பாரும். உயிரைவிடப் போகின்ற எனக்குத் தரிசனமளிக்கவல்லவா அந்தக் கிருஷ்ணன் நேரில் எழுந்தருளி யிருக்கின்றார்.

9. 23-24. எவரிடத்தில் பக்தியால் மனத்தை நிறுத்தி, எவருடைய திருநாமங்களை வாயினால் பாடிக்கொண்டு யோகியானவன் உடலை நீத்தால் ஆசைகளினின்றும் கருமத்தளைகளினின்றும் விடுபடுவானோ அந்த தேவர்களுக்குத் தேவனும் பகவானுமாகிய ஸ்ரீ கிருஷ்ணன் புன்முறுவலும் சிவந்த கண்களும் பிரகாசிக்கின்ற முகாரவிந்தத்துடனும் தியானமார்க்கத்தில் தோன்றும் சதுர்ப்புஜங்களுடனும் நான் இச்சரீரத்தை விடும்வரை என் முன்னிருந்து கடாக்ஷித்தருளட்டும்.

ஸூதர் கூறியது—

9. 25. யுதிஷ்டரர் அவ்வுபதேசத்தைக் கேட்டபின் அம்புப்படுக்கையில் சயனித்திருந்த பீஷ்மரிடம் பல்வேறுபட்ட தருமங்களைப்பற்றி ரிஷிகளும் உடனிருந்து கேட்கையில் வினவினார்.

9. 29. அங்ஙனம் தருமத்தைக் கூறிக்கொண்டிருக்கையில் விரும்பியபோது மரிக்கக்கூடிய சக்திவாய்ந்தவரும் யோகியுமாகிய பீஷ்மர் விரும்பி எதிர்பார்த்திருந்த அந்த உத்தராயண புண்ணியகாலம் வந்தது.

---

9. 24. **ஹிநோமி**—த்யஜாமீதி ஸ்வாதந்த்ர்யம்। **இதமித்யனுத்மத்வேன ஜ்ஞாதம்**।

**ப்ரதீக்ஷதாம்**—நான் அவசரப்பட்டு தேகத்தை விடப்போவதில்லை. விடப்போகும்வரை பகவான் இருந்து கடாக்ஷிக்கட்டும்,

9. 25. ஒ. (**கீதா விது**ரவாக்யானி **தர்**மா: **சாந்**தனவேரிதா:। ந ச்ருதா **பார**தே யேன ஜன்ம தஸ்ய **நிர**ர்த்தகம் ॥)**கீதை**யையும் விதுர வாக்கியங்களையும் பீஷ்மர் கூறிய **தர்மங்களை**யும் பாரதத்தில் கேட்காதவர் **பிற**வி வீண்.

9. 29. **ச்சந்தம்ருத்யோ:**—ச்சந்**தே**ன இச்சயா ம்ருத்யுர் யஸ்ய। **பீஷ்மர் தனக்காக** எதுவும் கேட்கவில்லை. தருமத்தைப் பேசுவதிலும் பகவானுடைய பெருமைகளைச் **சிந்திப்**பதிலும் தன்னையே மறந்தார். பீஷ்மருடைய உபதேசம் மகாபாரதத்தில் 500 **அத்**தியாயங்கள், **அ**தைப்பற்றி பகவான், 'யச்ச த்வம் வக்ஷ்யஸே பீஷ்ம பாண்டவாயானுப்ருச்சதே। **வேத** ப்ரவா**தா** இவ தே ஸ்தாஸ்யந்தி ப்ருதிவீதலே। என்றார்.

---

9. 22. **भूतानुकंपितम् ।**

9. 23. **सर्वकर्मभिः ।**

பா. பே.

तदोपसंहृत्य गिरः सहस्रणी-विमुक्त-संगं मन आदि-पूरुषे ।
कृष्णे लसत्-पीत-पटे चतुर्भुजे पुरः स्थितेऽमीलितदृग्व्यधारयत् ॥ ९.३० ॥

विशुद्धया धारणया हताशुभ-स्तदीक्षयैवाशु गतायुधव्यथः ।
निवृत्त-सर्वेन्द्रिय-वृत्ति-विभ्रम-स्तुष्टाव जन्यं विसृजन् जनार्दनम् ॥ ९-३१ ॥

श्री भीष्म उवाच—

त्रिभुवनकमनं तमालवर्णं रविकर-गौर-वरांबरं दधाने ।
वपु-रलक-कुलावृताननाब्जं विजय-सखे रति-रस्तु मेऽनवद्या ॥ ९.३३ ॥

सपदि सखिवचो निशम्य मध्ये निज-परयो-र्बलयो रथं निवेश्य ।
स्थितवति परसैनिकायु-रक्ष्णा हृतवति पार्थ-सखे रतिर्ममास्तु ॥ ९.३५ ॥

---

9. 30. ஆயிரம் தேர்வீரர்களுக்கு அதிபரான அவ்வீரர் அப்போது வார்த்தைகளை (மனத்தில்) அடக்கி பீதாம்பரத்துடனும் நான்கு கைகளுடனும் முன்னால் பிரகாசிக்கும் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் விஷயப்பற்று நீங்கிய மனத்தை நிறுத்திக் கண்களை மூடாமலேயே தியானித்தார்,

9 31. எல்லா இந்திரியங்களின் வெளிநாட்டச் சுழல்களும் அடங்கி, பகவத்கடாக்ஷத்தால் ஆயுதங்களின் நோயும் நீங்கி, விசுத்தமான தாரணையால் எல்லா இன்னல்களும் ஒழிந்து, சரீரத்தை விடுகின்ற நிலையில் அவர் ஜனார்த்தனரைத் துதிக்கலானார்.

ஸ்ரீ பீஷ்மர் கூறியது—

9. 33, முவ்வுலகையுங் கவருமழகும், தமால வர்ணமும், சூரியனைப்போல் ஒளி வீடும் பீதாம்பரமுடுத்த உடலும், சுருட்டைமயிரால் சூழப்பெற்ற முகாரவிந்தமும் உடைய அர்ஜுன நண்பனிடத்தில் நிஷ்களங்கமான பக்தி எனக்கு இருக்கட்டும்.

9. 35. தோழன் வார்த்தையைக் கேட்டு, உடனே தனது சேனைக்கும் எதிரி சேனைக்கும் மத்தியில் தேரைக் கொண்டுபோய் நிறுத்தி, எதிரி சேனையிலுள்ளவர்களின் ஆயுளை, (எவருமறியாமல்) பார்வையால் அபகரித்த பார்த்தஸாரதியிடத்தில் எனக்கு பக்தி இருக்கட்டும்.

---

9. 30. **ஸஹஸ்ரணீ:**—யுத்தத்தில் ஆயிரம் தேர்ப் படையை அடக்கியாள்பவர்.
' **அமீலிதத்ருகேவ** மனோவ்யதாரயத் ' —ஸ்ரீ.

9. 31. **ஜன்யம்—தேஹம்.**

9. 33. **அனவத்யா—அஹைதுகீ** பலாபிஸந்திரஹிதா ।

9. 35. ஸபதி— தத்க்ஷணமேவ ।

**அக்ஷ்ணா**—பார்வையால் இது துரோணன், இது கர்ணன் என்று காட்டும்போதே அவர்களுடைய ஆயுளை அபகரித்தார்.

பார்த்தஸாரதி ரூபம் ஸௌலப்யத்தின் பரமகாஷ்டை.
அஞ்ஞானமான அநாதி சத்ருவை ஜயிக்க கீதோபதேசம்.

---

9. 30. **विमुक्तसङ्गो ।**

9. 31. **हताशुभ ।**

9. 33. **मतिरस्तु ।**

9. 35. **रथं प्रवेश्य । नतिर्ममास्तु ।** பா. பே.

स्वनिगम-मपहाय मत्प्रतिज्ञां ऋत-मधिकर्तु-मवप्लुतो रथस्थः ।
धृत-रथ-चरणोऽभ्ययाच्चलद्गु-र्हरिरिव हन्तुमिभं गतोत्तरीयः ॥ ९.३७ ॥

विजय-रथ-कुटुंब आत्ततोत्रे धृत-हय-रश्मिनि तच्छ्रियेक्षणीये ।
भगवति रति-रस्तु मे मुमूर्षो-र्यमिह निरीक्ष्य हता गताःसरूपम् ॥९.३९ ॥

तमिम-मह-मजं शरीर-भाजां हृदि-हृदि धिष्ठित-मात्म-कल्पितानाम् ।
प्रतिदृशमिव नैकधार्क-मेकं समधिगतोऽस्मि विधूत-भेद-मोहः ॥ ९-४२ ॥

---

9. 37. (ஆயுதம் மெடுப்பதில்லையென்ற) தன் பிரதிக்ஞையை விட்டு (ஆயுதமெடுக்கச் செய்கிறேன் என்ற) என் பிரதிக்ஞையை உண்மையாக்கும் பொருட்டு தேரினின்றிழிந்து சக்கராயுதத்தைக் கையிலேந்தி யானையைக்கொல்ல வரும் சிங்கம்போல் உத்தரீயத்தை நழுவவிட்டுக்கொண்டு பூமி அதிரும்படி என்னை நோக்கியல்லவா வந்தார்.

9. 39. அர்ஜுனன் தேரைக் குடும்பமாகக் கொண்டு கையில் சாட்டைக் கொம்பும் குதிரைக் கடிவாளக் கயிறும் பிடித்த அவ்வழகை யன்றோ கண் காணவேண்டும். அந்த பகவானிடத்தில் மரணத் தருவாயிலுள்ள எனக்கு பக்தி இருக்கட்டும். இங்கு (யுத்தத்தில்) அவனைப் பார்த்துக்கொண்டு இறந்தவர்கள் ஸாரூப முக்தியல்லவா அடைந்தார்கள்.

9, 42. எப்படி ஒரே சூரியன் ஒவ்வொரு கண்ணிலும் வெவ்வேருகத் தோன்றுகிருனே அப்படியே பிறவியற்றவனுய்த் தான் பிறப்பித்த சரீரிகளின் உள்ளந்தோறும் உறைபவனுயுள்ள அந்த ஒருவனை நான் வேற்றுமை மயக்கம் முற்றும் நீங்கியவனுய் நன்கு அடைந்தவனுகின்றேன்.

---

9. 37: ஒ. 'அர்ஜுனனை வலியச் சண்டைக்கிழுத்து அவனோடு கை கலந்து சண்டை போட்டல்லவோ பரமசிவன் அவனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுத்தார். நம்மைச் சோதனை செய்வதில் அவருக்குப் பரம திருப்தி. நம்மைத் துரத்தி ஓடியும் நாம் துரத்த ஓடியும், நம்முடன் கொஞ்சிக் குலாவியும் அடித்துக் கிள்ளியும், தாலாட்டியும் ஏமாற்றியும், மாற்றி மாற்றி அழப்பண்ணுவதும் சிரிக்கப்பண்ணுவதுமே அவனுக்குத் தொழிலாய்விட்டது.'

—ராஜமய்யர் : கமலாம்பாள் சரித்திரம்.

ஒ, எழிற்படை யெடுக்கிலேனென் றிசைத்தநின் மொழிவிட்டுன்னை
விழுப்படை யெடுப்பித்தன்றி விடுகிலனென யான்சொற்ற
மொழித்திறம் பிழையாவண்ண முறுகுவெஞ் சினத்தபாழி
அழற்படை யெடுத்தாயன்பர்க் களியை நீ பெரிதுமன்றே.

—ஆரியப்பப்புலவர்.

**சலத்கு:**—மானுஷ்ய நாட்ய விஸ்ம்ருதே-ருதரஸ்த-ஸர்வ - புவனபாரேண ப்ரதிபதம் சலத்கு: சலந்தீ கௌ:, ப்ருதிவீ யஸ்மாத் ।

**ரதசரண:**—சக்ராயுதம், ஸுதர்சனம்.

9, 39. கண்ணன் யுத்தத்தில் நின்ற துஷ்டக் குழந்தைகள் எல்லோரையும் தன் கருணையால் தன்னருகிலழைத்து உறங்கவைத்தான். 'உறங்குவதுபோலும் சாக்காடு.' இறந்தவர்கள் ஸாரூப முக்தி அடைந்ததை பீஷ்மர் ஞானக்கண்ணால் கண்டார்.

---

9. 42. हृदि विदधे स्थितं- । प्रतिदिशमिव பா. பே.

सूत उवाच—

कृष्ण एवं भगवति मनो-वाग्दृष्टि-वृत्तिभिः ।
आत्मन्यात्मान-मावेश्य सोऽन्तः-श्वास उपारमत् ॥ ९.४३ ॥

संपद्यमान-माज्ञाय भीष्मं ब्रह्मणि निष्कले ।
सर्वे बभूवुस्ते तूष्णीं वयांसीव दिनात्यये ॥ ९.४४ ॥

तस्य निर्हरणादीनि संपरेतस्य भार्गव ।
युधिष्ठिरः कारयित्वा मूहूर्तं दुःखितोऽभवत् ॥ ९.४६ ॥

तुष्टुवु-र्मुनयो हृष्टाः कृष्णं तद्गुह्यनामभिः ।
ततस्ते कृष्ण-हृदयाः स्वाश्रमान् प्रययुः पुनः ॥ ९.४७ ॥

ततो युधिष्ठिरो गत्वा सह-कृष्णो गजाह्वयम् ।
पितरं सान्त्वयामास गान्धारीं च तपस्विनीम् ॥ ९.४८ ॥

पित्रा चानुमतो राजा वासुदेवानुमोदितः ।
चकार राज्यं धर्मेण पितृ-पैतामहं विभुः ॥ ९.४९ ॥

---

ஸூதர் கூறியது—

9. 43. இவ்விதம் அவர் பகவானும் பரமாத்மாவுமான கிருஷ்ணனிடத்தில் மனம் வாக்கு பார்வை முதலிய விருத்திகளுடன் தன்னை ஒடுக்கி மூச்சை உள்ளே நிறுத்தி ஒழிவடைந்தார்.

9. 44. பீஷ்மர் நிஷ்களப் பிரம்மத்தில் கலந்துவிட்டதை யுணர்ந்து அவர்களெல்லோரும் மாலைப்பொழுதில் பறவைகளைப்போல் மௌனமா யிருந்தனர்.

9. 46. பார்க்கவரே! முக்தியெய்தியவராயினுங் கூட அவருக்கு (உலக வழக்கத்தை யொட்டி) அந்தியக்கிரியைகளை யுதிஷ்டிரர் செய்வித்துச் சிறிது நேரம் துக்கிப்பவராகவும் ஆனார்.

9. 47, அப்போது முனிவர்கள் உள்ளம் மகிழ்ந்து இரகஸ்ய நாமங்களால் கிருஷ்ணனைத் துதித்தனர். பிறகு அவர்கள் இருதயத்தைக் கிருஷ்ணமயமாக்கிக்கொண்டு தத்தம் ஆசிரமங்களுக்கு மீண்டனர்.

9. 48. யுதிஷ்டிரர் அங்கிருந்து கிருஷ்ணனுடன் ஹஸ்தினாபுரம் சென்று பெரிய தகப்பனாரான திருதராஷ்டிரரையும் தவ வன்மைமிக்க காந்தாரியையும் சமாதானப் படுத்தினார்.

9. 49. பெரிய தகப்பனாரின் அனுமதியையும், ஸ்ரீ கிருஷ்ணனின் அனுமோதத்தையும் பெற்றுத் தகப்பன் பாட்டன் வழி பரம்பரையாய் வந்த ராஜ்யத்தை ஏற்று விசாலமான உள்ளம்படைத்த தருமபுத்திரர் நீதியாய் அரசாண்டார்.

---

9. 43. **பீஷ்ம நிர்யாணம்**—மாக சுக்ல ஸப்தமி (ரதஸப்தமி) அன்று நாம் பீஷ்ம தர்ப்பணம் செய்கிறோம். அவர் அம்புப் படுக்கையிலிருந்தது 58 நாள்; அவர் யுத்தம் செய்தது பத்துநாள்; யுத்த ஆரம்பம் மார்கழி அமாவாசை.

9. 44. பீஷ்மரின் மூச்சு வெளிப் பாயாமல் தியானத்தினால் உள்ளேயே ஒடுங்கிற்று.

9. 46. **ஸம்பரேதஸ்ய**—ஸம்யக் பரமாத்மானம் இதஸ்ய ப்ராப்தஸ்ய முக்தஸ்யாபி |

---

9. 43. **मनोवाग्वृत्तिदृष्टिभिः ।**

9. 44. **दिवात्यये ।** பா. பே.

कामं ववर्ष पर्जन्यः सर्वकाम-दुघा मही ।
सिषिचुःस्म व्रजान् गावः पयसोधस्वती-र्मुदा ॥ १०.४ ॥

नाधयो व्याधयः क्लेशा दैव-भूतात्म-हेतवः ।
अजातशत्रावभवन् जन्तूनां राज्ञि कर्हिचित् ॥ १०.६ ॥

उषित्वा हस्तिनपुरे मासान् कतिपयान् हरिः ।
सुहृदां च विशोकाय स्वसुश्च प्रियकाम्यया ॥ १०.७ ॥

आमन्त्र्य चाभ्यनुज्ञातः परिष्वज्याभिवाद्य तम् ।
आरुरोह रथं कैश्चित्-परिष्वक्तोऽभिवादितः ॥ १०.८ ॥

न्यरुन्धन्नुद्गल-द्बाष्प-मौत्कण्ठ्याद्-देवकीसुते ।
निर्यात्यगारा-न्नोऽभद्रमिति स्याद्बान्धव-स्त्रियः ॥ १०. १४ ॥

---

10. 4-6. அஜாதசத்ருவான தருமபுத்திரர் அரசு செலுத்தும்போது மழை வேண்டியவரை பெய்தது; வேண்டியதையெல்லாந் தரும் காமதேனுபோல் பூமியும் ஆசைப்பட்டதையெல்லாம் அளிப்பதாக ஆயிற்று; மடிபெருத்த பசுக்கள் மகிழ்ச்சி பொங்கி இடைச்சேரி யெங்கும் பாலைச் சொரிந்தன; ஆத்தியாத்மிக, ஆதிபௌதிக, ஆதி தைவிகத் துன்பங்களாகிய மனக் கவலைகளோ உடல்நோய்களோ, பிராணிகளுக்கு ஒருபோதும் ஏற்படவில்லை.

10. 7-8. ஸ்ரீ கிருஷ்ணன் நண்பர்களின் சோகத்தைப் போக்கவும் தங்கையைச் சந்தோஷப்படுத்தவும் சில மாதங்கள் ஹஸ்தினபுரியில் தங்கியிருந்துவிட்டு ஊருக்குத் திரும்பிச் செல்வதைப்பற்றி கலந்து யோசனை செய்து அனுமதிபெற்று தருமபுத்திரரைத் தழுவிக்கொண்டும் அபிவாதனம் செய்துவிட்டு, மற்றும் சிலரால் ஆலிங்கனமும் அபிவாதனமும் செய்யப்பெற்றவராய் தேரில் ஏறினர்.

10. 14. உறவினர்களான ஸ்திரீகள் தேவகீபுத்திரன் வீட்டைவிட்டுப் புறப்படுகையில் பிரிவாற்றுமையால் மீறி வருகின்ற கண்ணீரை அது தங்களுக்கு அமங்கள மென்று உணர்ந்து அடக்கிக்கொண்டனர்.

---

10. 4. **பயஸா-ஊதஸ்வதீ:**—ஊத: க்ஷீராசய: தத்வத்ய:
10. 6. **ஆதய:**—மனக்கவலைகள்; **வ்யாதய:**—உடல் நோய்கள்;
க்லேசா:—குளிர் வெப்பம் முதலியவற்றால் ஏற்படுந்துன்பங்கள்.
10. 14. ஓ. யாஸ்யத்யத்ய சகுந்தலேதி ஹ்ருதயம் ஸம்ஸ்ப்ருஷ்ட - முத்கண்டயா, கண்ட: ஸ்தம்பித-பாஷ்ப-வ்ருத்தி-கலுஷச்-சிந்தா ஜடம் தர்சனம்।
—கண்வமகரிஷி: (சாகுந்தலம்)

---

10. 4. **पयसोधस्वतीर्मुदः ।**
10. 6. **भूता इहेतयः ।**
10. 8. **अभिवाद्य तान् ।**
10. 14. **निर्यात्यागारतो । बान्धवाः स्त्रियः ।** பா. பே.

प्रासाद-शिखरारूढाः कुरुनार्यो दिदृक्षया ।
ववृषुः कुसुमैः कृष्णं प्रेम-व्रीडा-स्मितेक्षणाः　　॥ १०.१६ ॥

सितातपत्रं जग्राह मुक्तादाम-विभूषितम् ।
रत्नदण्डं गुडाकेशः प्रियः प्रियतमस्य ह　　॥ १०.१७ ॥

उद्धवः सात्यकिश्चैव व्यजने परमाद्भुते ।
विकीर्यमाणैः कुसुमै रेजे मधुपतिः पथि　　॥ १०.१८ ॥

अथ दूरागतान् शौरिः कौरवान् विरहातुरान् ।
संनिवर्त्य दृढं स्निग्धान् प्रायात् स्वनगरीं प्रियैः　　॥ १०.३३ ॥

आनर्तान् स उपव्रज्य स्वृद्धान् जनपदान् स्वकान् ।
दध्मौ दरवरं तेषां विषादं शमयन्निव　　॥ ११.१ ॥

तमुपश्रुत्य निनदं जगद्भय-भयावहम् ।
प्रत्युद्ययुः प्रजाः सर्वा भर्तृ-दर्शन-लालसाः
तत्रोपनीत-बलयो रवेर्दीपमिवादृताः　　॥ ११.३ ॥

---

10. 16 கௌரவ ஸ்திரீகள் கிருஷ்ணனைப் பார்க்க விரும்பி மாடியின் உச்சியிலேறி நின்றுகொண்டு அன்பு வெட்கம் மகிழ்ச்சி இவற்றைக் குறிக்கும் பார்வையுடன் புஷ்பங்களைச் சொரிந்தனர்.

10. 17. இரத்தினக்கழியுடையதும் முத்துச் சரங்களாலலங்கரிக்கப்பட்டதுமான வெண் குடையைப் பிரியனுன குடாகேசன் உத்தம நண்பனுன பகவானுக்குப் பிடித்தான்.

10. 18. உத்தவரும் ஸாத்தியகியும் மிக அற்புதமான சாமரங்களை வீசினர். வழி நெடுகப் புஷ்பங்கள் தூவப்பெற்று மதுபதியான கிருஷ்ணன் அழகு மிகுந்து பிரகாசித்தார்.

10. 33. பிறகு சௌரியானவர் பிரிவாற்றுமையால் வெகுதூரம் உடன் வந்துவிட்டவர்களும் திடமான சிநேகங்கொண்டவர்களுமான (கௌரவர்களை) பாண்டவர்களை வெகு சிரமத்துடன் திருப்பி யனுப்பிவிட்டு, பிரியமான உத்தவருடனும் ஸாத்யகியுடனும் தன் நகரத்தை நோக்கிப் பயணமானுர்.

11. 1. செல்வம் நிறைந்த தனது ஆனர்த்த தேசத்தை யடைந்ததும் அந்நாட்டு மக்களின் கவலையைப் போக்குபவர்போல் சிறந்த சங்கத்தை ஊதினுர்.

11. 3. உலகின் பயத்தையும் பயப்படுத்தும் அந்த சங்கநாதத்தைக் கேட்டு எல்லா ஜனங்களும் இரக்ஷகனைக் காணும் ஆசையால் சூரியனுக்குத் தீபாராதனை செய்வார் போன்று ஆங்கு காணிக்கைகளைக் கையில் கொண்டு உற்சாகத்துடன் ஓடிவந்தனர்.

---

10. 18. **உத்தவ**:—(வ்ருஷ்ணீனும் ப்ரவரோ மந்த்ரீ, க்ருஷ்ணஸ்ய தயித: ஸகா | சிஷ்யோ ப்ருஹஸ்பதே: ஸாக்ஷாத் உத்தவோ புத்திஸத்தம: ||) உத்தவர் விருஷ்ணி குலத்தோரின் முக்கியமான மந்திரி, கிருஷ்ணனுடைய பிரியமான நண்பன், பிருஹஸ்பதியின் சிஷ்யன், புத்தியிற் சிறந்தவர்.

**ஸாத்யகி** — கிருஷ்ணனுடைய சிநேகிதனும் ஸாரதியும். அனமித்ரனுடைய பேரன்மார் மூவர்: ஸத்ராஜித், ஸத்யகன், ச்வபல்கன். ஸத்ராஜித்தின் பெண் ஸத்யபாமை, ஸத்யகன் குமாரன் ஸாத்யகி, ச்வபல்கன் குமாரன் அக்ரூரர்.

---

10. 18. **ववर्षुः ।**　　10. 33. **कौरवान् विदुरान्वितान् ।**

11. 1. **दध्मौ शङ्खवरं ।**　　—பா. பே.

भगवान्स्तत्र बन्धूनां पौराणा-मनुवर्तिनाम् ।
यथाविध्युपसंगम्य सर्वेषां मान-मादधे ॥ ११-२१ ॥

प्रह्वाभिवादनाश्लेष-करस्पर्श-स्मितेक्षणैः ।
आश्वास्य चाश्वपाकेभ्यो वरै-श्चाभिमतै-र्विभुः ॥ ११.२२ ॥

स्वयं च गुरुभि-र्विप्रैः सदारैः स्थविरैरपि ।
आशीर्भि-र्युज्यमानोऽन्यै-र्वन्दिभिश्चाविशत् पुरम् ॥ ११.२३ ॥

अथाविशत् स्वभवनं सर्वकाम-मनुत्तमम् ।
प्रासादा यत्र पत्नीनां सहस्राणि च षोडश ॥ ११.३० ॥

स एष नरलोकेऽस्मिन्नवतीर्णः स्वमायया ।
रेमे स्त्रीरत्नकूटस्थो भगवान् प्राकृतो यथा ॥ ११.३५ ॥

तं मेनिरेऽबला मूढा स्त्रैणं चानुव्रतं रहः ।
अप्रमाण-विदो भर्तु-रीश्वरं मतयो यथा ॥ ११.३९ ॥

11. 21-22. ஸர்வேசுவரனான கிருஷ்ணன் அப்போது வணக்கம், அபிவாதனம், ஆலிங்கனம், கைப்பிடித்தல், புன்முறுவல், கண்ணோட்டம் என்ற இவ்வாற்றால் தக்க முறைப்படி சந்தித்தும் தேறுதல் வார்த்தைகள் கூறியும் விரும்பிய வரங்களை அளித்தும் உறவினர், பரிவாரங்கள், பட்டணத்து ஜனங்கள் எல்லோருக்கும் சண்டாளன் வரை வெகுமானம் செய்தார்.

11. 23. தானும் குருமார்களாலும், பிராம்மண தம்பதிகளாலும், முதியோர்களாலும், வந்திகளாலும் ஏனையோராலும் ஆசி வசனங்கள் கூறப்பெற்று நகரத்தில் பிரவேசித்தார்.

11. 30. பின் பதினாயிரம் பத்தினிகளின் உப்பரிகைகளுள்ளதும் ஒப்புயர்வற்றதும் எல்லாச்செல்வங்களும் நிறைந்ததுமான தனது அரண்மனையை அடைந்தார்.

11. 35. தனக்கு வசப்பட்ட மாயா லீலையில் இந்த மானிட உலகில் அவதரித்த பகவான் மாயைக்கு வசப்பட்ட மானிடனைப்போல் பெண்மணிகளிடையிருந்து கொண்டு அவர்களுடன் ரமித்தார்.

11. 39. மனோவிருத்திகள் ஈசுவரனைத் தமக்கனுகுணமாக எண்ணுவதுபோல் பர்த்தாவாகிய பகவானின் பெருமையை அறியமாட்டாத மூடஸ்திரீகள் அவரை ஸ்திரீலோலர் என்றும் இரகசியமாகத் தங்களை அனுசரிப்பவர் என்றும் எண்ணினர்.

**இங்ஙனம் இரண்டாம் இதழாகிய பாரதப்போர் முடிவின் வரலாறு முற்றும்.**

11. 22. बान्धवानेव आश्लिष्य । —பா.பே.

## परीक्षिज्जन्म पाण्डवानां महाप्रस्थानंच ॥ ३ ॥

शौनक उवाच—

ततः सर्वगुणोदर्के सानुकूल-ग्रहोदये ।
जज्ञे वंशधरः पाण्डोर्भूयः पाण्डु-रिवौजसा ॥ १२.१२ ॥

तस्य प्रीतमना राजा विप्रै-र्धौम्य-कृपादिभिः ।
जातकं कारयामास वाचयित्वा च मङ्गलम् ॥ १२.१३ ॥

तमूचुर्ब्राह्मणा-स्तुष्टा राजानं प्रश्रयानतम् ।
एष ह्यस्मिन् प्रजातन्तौ पुरूणां पौरवर्षभ ॥ १२.१५ ॥

रातो वोऽनुग्रहार्थाय विष्णुना प्रभविष्णुना ।
तस्मा-न्नाम्ना विष्णुरात इति लोके बृहच्छ्रवाः ।
भविष्यति न सन्देहो महाभागवतो महान् ॥ १२-१७ ॥

स एष लोके विख्यातः परीक्षिदिति यत्प्रभुः ।
गर्भे-दृष्ट-मनुध्यायन् परीक्षेत नरेष्विह ॥ १२.३० ॥

---

மூன்றும் இதழ்

### பரீக்ஷித்தின் வரலாறும் பாண்டவர் மஹாப்பிரஸ்தானமும்

சௌனகர் கூறியது—

12. 12. பின்னர் சுப சூசகங்களான அனுகூலக்கிரகங்கள் உதயமாகும் நல்ல வேளையில் பாண்டு வம்சத்தைத் தாங்கும் புத்திரன் பிறந்தான்; மீண்டும் தன் வீரியத்தால் பாண்டுவே வந்து பிறந்ததுபோல் (அவன் தோற்றமளித்தான்.)

12. 13. ஸந்தோஷமடைந்த தருமபுத்திர மகாராஜா, தௌம்மியர், கிருபாசாரியார் முதலிய பிராம்மணர்களைக் கொண்டு மங்களமான மந்திரங்களை ஜபிக்கச் செய்து ஜாத கர்மாவைச் செய்வித்தார்.

12. 15—17. (தானங்களால் வெகுமானம் செய்யப்பட்டு) சந்தோஷமடைந்த பிராம்மணர்கள் விநயத்துடன் வணங்கிய அரசனை நோக்கி, "புருகுல சிரேஷ்டரே! புரு குலத்துக்கு ஸந்ததி நூலாகிய இவன் உங்களுக்கு அனுக்கிரகம் செய்வதற்காக எண்ணிலா வடிவெடுக்கும் விஷ்ணுவால் இரக்ஷிக்கப்பட்டான். ஆகையால் இவன் விஷ்ணுராதன் என்ற பெயருடன் உலகில் மிகுந்த கீர்த்திமானுகவும், மகாபுருஷனுகவும் மகாபாகவதனுகவும் விளங்கப்போகிருன். இதில் சந்தேகமில்லை" என்று கூறினர்.

12. 30. கர்ப்பத்தில் கண்ட காட்சியை நினைத்துப்பார்த்து மனிதர்களுள் (தான் கண்ட புருஷன் யாராயிருக்கக்கூடும் என்று) பரீக்ஷித்ததால் சமர்த்தனுன அவனுக்கு உலகில் பரீக்ஷித்து என்ற பெயர் பிரசித்தியாயிற்று.

---

12. 12. **உதர்க்கம்—**உத்தரம் பலம்; ஸர்வகுணேனாமுத்தரோத்தராதிக்ய - ஸூசகே லக்னே ।

---

12. 13 **विप्रै-र्जातक्रियादिभिः ।**

12. 30. **पूर्वदृष्टमनुध्यायन् ।** —பா. பே

स राजपुत्रो ववृधे आशु शुक्ल इवोडुपः ।
आपूर्यमाणः पितृभिः काष्ठाभि-रिव सोऽन्वहम् ॥ १२.३१ ॥

सूत उवाच—

विदुर-स्तीर्थयात्रायां मैत्रेयादात्मनो गतिम् ।
ज्ञात्वागा-द्धास्तिनपुरं तयावाप्त-विवित्सितः ॥ १३.१ ॥

तं बन्धुमागतं दृष्ट्वा धर्मपुत्रः सहानुजः ।
धृतराष्ट्रो युयुत्सुश्च सूतः शारद्वतः पृथा ॥ १३.३ ॥

गान्धारी द्रौपदी ब्रह्मन् सुभद्रा चोत्तरा कृपी ।
प्रत्युज्जग्मुः प्रहर्षेण प्राणं तन्व इवागतम् ॥ १३.४ ॥

तं भुक्तवन्तं विश्रान्त-मासीनं सुख-मासने ।
प्रश्रयावनतो राजा प्राह तेषां च शृण्वताम् ॥ १३.७ ॥

युधिष्ठिर उवाच—

कया वृत्त्या वर्तितं वश्चरद्भिः क्षितिमण्डलम् ।
तीर्थानि क्षेत्र-मुख्यानि सेवितानीह भूतले ॥ १३.९ ॥

---

12. 31. சுக்கிலபக்ஷத்தில் தினந்தோறும் சந்திரன் கலைகளால் படிப்படியாய் வளர்ந்து நிறைவதுபோல் பாட்டன்மார்களால் சீராட்டிப் போஷிக்கப்பட்டு விரைவில் வளர்ச்சியடைந்தான்.

ஸூதர் கூறியது—

13. 1. விதுரர் தீர்த்த யாத்திரையில் மைத்திரேயரிடமிருந்து ஆத்மாவுக்குப் புகலாகிய ஞானத்தைப் பெற்று, அதனால் வேண்டுவதெல்லாம் அடைந்தவராய் (இனி வேறொன்றிலும் வேட்கையில்லாதவராய்) ஹஸ்தினாபுரம் வந்து சேர்ந்தார்.

13. 3-4. பிராம்மணோத்தமரே! பந்துவான அவர் வந்ததைக் கண்டு தம்பிமார்களுடன் தருமபுத்திரரும், திருதராஷ்டிரரும், யுயுத்ஸுவும், ஸஞ்ஜயரும், குந்தி, காந்தாரி, துரௌபதி, சுபத்திரை, உத்தரை, கிருபீ முதலிய ஸ்திரீகளும் உடலிலிருந்து பிரிந்து போன பிராணன் திரும்பி வந்தாற்போல ஆவலுடன் அவரை எதிர்கொண்டு வரவேற்றனர்.

13. 7. போஜனம் செய்து களைப்பாறிச் சுகமான ஆசனத்தில் இருக்கையில், அரசனான தர்மபுத்திரர் அவருக்குத் தலை வணங்கி அவர்களெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கப் பின்வருமாறு வினவினார்.

யுதிஷ்டிரர் கூறியது—

13. 9. பூமண்டலத்தைச் சுற்றிவருகையில் தாங்கள் எந்த விருத்தியை மேற்கொண்டீர்கள்? எந்தத் தீர்த்தங்களும் முக்கியமான க்ஷேத்திரங்களும் தங்களால் பூமிப்பரப்பில் சேவிக்கப்பட்டன ?

---

13. 7. तं सत्कृतं तु —பா. பே.

भवद्विधा भागवता-स्तीर्थभूताः स्वयं विभो ।
तीर्थी-कुर्वन्ति तीर्थानि स्वान्तस्थेन गदाभृता ॥ १३.१० ॥

सूत उवाच—

इत्युक्तो धर्मराजेन सर्वं तत्समवर्णयत् ।
यथानुभूतं क्रमशो विना यदुकुलक्षयम् ॥ १३.१२ ॥

नन्वप्रियं दुर्विषहं नृणां स्वयमुपस्थितम् ।
नावेदयत् सकरुणो दुःखितान् द्रष्टु-मक्षमः ॥ १३.१३ ॥

कञ्चित्काल-मथावात्सीत् सत्कृतो देववत् सुखम् ।
भ्रातुर्ज्येष्ठस्य श्रेयस्कृत् सर्वेषां प्रीतिमावहन् ॥ १३.१४ ॥

अबिभ्रदर्यमा दण्डं यथावदघकारिषु ।
यावद्दधार शूद्रत्वं शापाद्वर्षशतं यमः ॥ १३.१५ ॥

---

13. 10. விபுவே! தங்களைப்போன்ற பாகவதர்கள் தாங்களே தீர்த்தங்களாய் விளங்குகின்றனர். கதாதரனை உள்ளக் கோயிலில் கொண்டவர்களாதலால் தீர்த்தங்களையும் அவர்கள் புனிதமாக்குகின்றனர்.

ஸூதர் கூறியது—

13. 12. இவ்விதம் தருமராஜரால் கேட்கப்பட்ட விதுரர் யதுகுல மழிந்துபோன செய்தி நீங்கலாகத் தான் (கண்டது கேட்டது) அநுபவித்தது எல்லாம் தொடர்ச்சியாக வர்ணித்தார்.

13. 13. கருணை நிறைந்த அவர் துக்கிப்பவர்களைக் காணச் சகிக்கமாட்டாதவராய் பிரியமற்றதும் சகிக்கமுடியாததுமான செய்தியை அது மக்களுக்குத்தானே தெரியப் போகிறதென்று தான் தெரிவிக்கவில்லை.

13. 14. (அவர் பாண்டவர்களால்) தெய்வத்தைப்போல் பூஜிக்கப்பெற்றவராயும், தமயனுருக்கு ஞானமார்க்கத்தைக் காண்பிப்பவராயும், எல்லோரிடமும் அன்பை வளர்ப்பவராயும் சிறிது காலம் சுகமாகக் கழித்தார்.

13. 15. சாபத்தினால் யமன் சூத்திரப் பிறவியடைந்து (விதுரராக) நூறு வருஷம் இருந்தபோது, பாவஞ்செய்தவர்களை முறைப்படி சூரியபகவான் தண்டனை செய்து வந்தார்.

---

13. 13. இப்போது யுத்தம் முடிந்து 20 வருடம் ஆகிவிட்டது. விதுரர் வயது 99, திருதராஷ்டிரர் வயது 100, தர்மபுத்திரர் வயது 82.

---

13. 10. आत्मस्थेन गदाभृता ।
13. 13. दुर्विषह्यं । न्यवेदयत् ।
13. 14. देववत् स्वकैः ।
13. 15. यथाघमघ-कारिषु ।

—பா. பே.

युधिष्ठिरो लब्धराज्यो दृष्ट्वा पौत्रं कुलं-धरम् ।
भ्रातृभि-र्लोकपालाभै-र्मुमुदे परया श्रिया ॥ १३.१६ ॥

एवं गृहेषु सक्तानां प्रमत्तानां तदीहया ।
अत्यक्राम-दविज्ञातः कालः परमदुस्तरः
विदुर-स्तदभिप्रेत्य धृतराष्ट्र-मभाषत ॥ १३.१७ ॥

विदुर उवाच—

राजन्निर्गम्यतां शीघ्रं पश्येदं भयमागतम् ।
प्रतिक्रिया न यस्येह कुतश्चित्-कर्हिचित् प्रभो ॥
स एव भगवान् कालः सर्वेषां नः समागतः ॥ १३.१९ ॥

पितृ-भ्रातृ-सुहृत्-पुत्रा हतास्ते विगतं वयः ।
आत्मा च जरया ग्रस्तः परगेह-मुपासते ॥ १३.२१ ॥

---

13. 16. யுதிஷ்டிரர் அரசுரிமையை (மீண்டும்) பெற்று, குலத்தை விளங்கவைக்கும் பேரனையும் கண்டு, ஸகல ஐசுவரியங்களுடனும் லோகபாலர்களுக்கொப்பான சகோதரர்களுடனும் மகிழ்ச்சி பொங்க வாழ்ந்தார்.

13. 17. இங்ஙனம் வீட்டில் பற்றுக்கொண்டு குடும்ப வியாபாரத்தில் அவர்கள் ஆழ்ந்திருக்கையில் கடத்தற்கரிதான (மரண) காலம் வெகு சமீபத்தில் அறியப்படாமலே நெருங்கிவிட்டது. அதை யுணர்ந்த விதுரர் திருதராஷ்டிரரைப் பார்த்துப் பின் வருமாறு கூறினார்.

விதுரர் கூறியது—

13. 19. அரசே! பிரபுவே! சீக்கிரம் வீட்டைவிட்டு வெளியேறவேண்டும். இதோ பாரும்! பயங்கரமான காலன் வந்துவிட்டான். எவ்வாற்றாலும் ஒருபோதும் எவனை விலக்க இயலாதோ அந்தக் கால பகவான் நம்மெல்லோருக்குமே நெருக்கமாக வந்துவிட்டான்.

13. 21. உமது பெற்றோர், உடன்பிறந்தோர், உற்றார், மக்கள் எல்லோரும் இறந்து போயினர். வயதும் கடந்துவிட்டது. உடலும் மூப்பினால் விழுங்கப்பட்டது. பிறர் வீட்டை அண்டி வாழ்கிறீர்.

---

13. 19. ஒ. அங்கம் கலிதம் பலிதம் முண்டம் தசன - விஹீனம் ஜாதம் துண்டம் ।
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம் ததபி ந முஞ்சத்யாசா-பிண்டம் ॥

—பஜகோவிந்தம் : சங்.

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்துள்ளிருமலுமாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று சரியென நாடி
மனையின் புறவிருந்த இனமுங் குலைகுலைந்து
கலகஞ்செய விருண்ட யமன்வரும் வேளை
—ஏது துணை பழிகார மனமே.

—தாயுமானவர்.

---

13. 16. कुलोद्वहम् ।
13. 19. प्रतिक्रियां न पश्येऽहं कुतश्चित् । सर्वेषां वः ।

—பா. பே.

अहो महीयसी जन्तो-र्जीविताशा यया भवान् ।
भीमापवर्जितं पिण्ड-मादत्ते गृहपालवत् ॥ १३.२२ ॥

अग्नि-र्निसृष्टो दत्तश्च गरो दाराश्च दूषिताः ।
हृतं क्षेत्रं धनं येषां तद्दत्तै-रसुभिः कियत् ॥ १३.२३ ॥

तस्यापि तव देहोऽयं कृपणस्य जिजीविषोः ।
परैत्यनिच्छतो जीर्णो जरया वाससी इव ॥ १३-२४ ॥

गतस्वार्थमिमं देहं विरक्तो मुक्तबन्धनः ।
अविज्ञात-गति-र्जह्यात् स वै धीर उदाहृतः ॥ १३.२५ ॥

यः स्वकात् परतो वेह जात-निर्वेद आत्मवान् ।
हृदि कृत्वा हरिं गेहात् प्रव्रजेत् स नरोत्तमः ॥ १३-२६ ॥

अथोदीचीं दिशं यातु स्वैरज्ञात-गति-र्भवान् ।
इतोऽर्वाक्प्रायशः कालः पुंसां गुणविकर्षणः ॥ १३.२७ ॥

---

13. 22. ஐயோ! (பிறவி யெய்திய) பிராணிக்கு வாழ்க்கையில் ஆசை பெரிதினும் பெரிது! அதனாலல்லவா தாங்கள் பீமன் எறியும் பிண்டத்தை வீடுகாக்கும் நாய்போல் ஏற்றுக்கொள்ளுகின்றீர்.

13. 23. எவர்கள் தீயிலிடப்பட்டனரோ, எவர்களுக்கு விஷங்கொடுக்கப்பட்டதோ, எவர்கள் மனைவி அவமானம் செய்யப்பட்டாளோ, எவர்களுடைய பூமியும் பொருளும் அபகரிக்கப்பட்டனவோ அவர்களிட்டதை உண்டு உயிர் வாழ்வதால் ஆவதென்ன?

13. 24. இவ்விதம் கிடைப்பதை விட மனமில்லாமல் நீர் உயிர் வாழ விரும்பினாலும், உம்முடைய இந்த உடல் கிழிந்த துணியைப்போல் உமக்கிஷ்டமில்லாவிட்டாலும் ஜீர்ணமாய்ப் போயே தீரும்.

13. 25. பற்று நீங்கியவனாய் வைராக்கியத்துடன் (வெளிக் கிளம்பி) பிறர் காணாதபடி சென்று பயனிழந்த இச்சரீரத்தை விட்டுவிடவேண்டும். அப்படிச் செய்பவனே தீரன் எனப்படுவான்.

13. 26. எவன் தானாகவோ, பிறருபதேசத்தாலோ இங்கு வைராக்கிய மடைந்து தைரியசாலியாக இருதயத்தில் ஹரியைத் தியானித்துக்கொண்டு வீட்டிலிருந்து துறவியாகக் கிளம்புகின்றானோ அவனே மனிதர்களுள் உத்தமன்.

13. 27. ஆகையால் நீர் உம்மைச் சேர்ந்தவரால் அறியப்படாத வழியில் வடக்கு திக்கை நோக்கிச் செல்லவேண்டும். இனி வரப்போகும் காலம் பெரும்பாலும் மனிதர்களின் நற்குணங்களை யழிப்பதா யிருக்கும்.

---

13. 24. **பரைதி**—க்ஷீயதே.

13. 25. ஒ. இதம் **சரீரம்** பரிணமபேசலம் பதத்யவச்யம் ச்லத-ஸந்தி ஜர்ஜரம் । கிமௌஷதை: க்லிச்யஸி மூட துர்மதே நிராமயம் க்ருஷ்ண-ரஸாயனம் பிப ॥

---

13. 25. **अविज्ञातमतिः ।**
13. 26. **सम्यक् प्रव्रजेत् ।**

—பா. பே.

सूत उवाच—

एवं राजा विदुरेणानुजेन प्रज्ञाचक्षु-र्बोधित आजमीढः ।
छित्वा स्वेषु स्नेहपाशान् द्रढिम्नो निश्चक्राम भ्रातृ-संदर्शिताध्वा ॥ १३.२८ ॥

पतिं प्रयान्तं सुबलस्य पुत्री पतिव्रता चानुजगाम साध्वी ।
हिमालयं न्यस्तदण्ड-प्रहर्षं मनस्विनामिव सत्संप्रहारः ॥ १३.२९ ॥

अजातशत्रुः कृतमैत्रो हुताग्नि-र्विप्रान् नत्वा तिल-गो-भूमि-रुक्मैः
गृहं प्रविष्टो गुरुवन्दनाय न चापश्यत् पितरौ सौबलीं च ॥ १३.३० ॥

अथाजगाम भगवान् नारदः सहतुंबुरुः ।
प्रत्युत्थायाभिवाद्याह सानुजोऽभ्यर्चयन्निव ॥ १३.३७ ॥

युधिष्ठिर उवाच—

नाहं वेद गतिं पित्रो-र्भगवान् क्व गतावितः ।
अंबा वा हत-पुत्रार्ता क्व गता च तपस्विनी
कर्णधार इवापारे भगवान् पारदर्शकः ॥ १३.३८ ॥

---

ஸௌதர் கூறியது—

13. 28. இவ்வாறு ஆஜமீட (திருதராஷ்டிர) மகாராஜா தம்பியாகிய விதுரரால் ஞானக் கண் பெற்றவராய் தனக்குற்றாரிடத்தில் ஏற்பட்டிருந்த திடமான பற்றுத்தளை களைச் சேதித்துவிட்டுச் சகோதரனால் வழிகாட்டப்பட்டவராய் வெளிக் கிளம்பினார்.

13. 29. வீரர்களுக்குச் சூரர்களான எதிரிகளின் அடி எங்ஙனமோ அங்ஙனம் இமாலயம் துறவிகளுக்கு மகிழ்ச்சியை யளிக்கும். அப்படிப்பட்ட இமயமலையை நோக்கிச் சென்ற நாயகனைப் பின்பற்றிச் சுபலராஜபுத்திரியும், சிறந்த குணவதியும், பதிவிரதையு மான காந்தாரியும் சென்றாள்.

13. 30. சத்துருவே யில்லாத தருமபுத்திரர் ஸந்தியாவந்தனமும், அக்னிஹோத் திரமும் முடித்துக்கொண்டு, எள், பசு, பூமி, பொன் இவற்றைப் பிராம்மணர்களுக்குத் தானம் செய்து அவர்களை நமஸ்கரித்துவிட்டுப் பெற்றோர்களுக்கு வந்தனம் செய்தற் காக அவர்கள் மாளிகையில் புகுந்தபோது அங்கே (திருதராஷ்டிரர், விதுரர் ஆகிய) தந்தையரையும் காந்தாரியையும் காணவில்லை.

13. 37. அப்போது நாரத பகவான் தும்புருவுடன் அங்கு எழுந்தருளினார். அவ ரைப் பூஜிக்கும் முறையில் எதிர்கொண்டு தம்பிமார்களுடன் நமஸ்கரித்துப் பின் வரு மாறு கூறினார்.

யுதிஷ்டிரர் கூறியது—

13. 38. ஐயனே! என் தந்தையர் இங்கிருந்து எங்கு போய்விட்டனர்? அவர்கள் போன வழி தெரியவில்லை. புத்திரர்களை இழந்து தவிக்கும் தபஸ்வினியான தாய் எங்கு சென்றாள்? கரை காணாத ஸமுத்திரத்தைக் கடப்பிக்கும் கப்பலோட்டிபோல் தாங்கள் விளங்குகின்றீர்கள்.

---

13. 29. விதுரர் திருதராஷ்டிரரை யோகசக்தியால் இமாலயத்திற்குக் கொண்டு போனார். அவர் யமதர்மராஜனே யன்றோ? அப்போது அவர் வயது 99.

13. 30. க்ருதமைத்ர:—ஸர்வத்ர மைத்ரீ க்ருதா அதவா (ப்ராத: - ஸந்த்யா மித்ர தைவத்யா) க்ருத-ஸந்த்யாவந்தன:।

---

13. 29. सत्संप्रहारम् ।

13. 30. कृतमैत्र-सत्क्रियो विप्रान् । वसुगोभूमि । परं न पश्यत् । —பா. பே.

**नारद उवाच—**

**यन्मन्यसे ध्रुवं लोक-मध्रुवं वा न चोभयम् ।**
**सर्वथा न हि शोच्यास्ते स्नेहा-दन्यत्र मोहजात् ॥ १३.४३ ॥**

**तस्माज्जह्यङ्ग वैक्लव्य-मज्ञानकृत-मात्मनः ।**
**कथं त्वनाथाः कृपणा वर्तेरं-स्ते च मां विना ॥ १३.४४ ॥**

**काल-कर्म-गुणाधीनो देहोऽयं पांचभौतिकः ।**
**कथ-मन्यांस्तु गोपायेत् सर्पग्रस्तो यथा परम् ॥ १३.४५ ॥**

**तदिदं भगवान् राजन्नेक आत्माऽऽत्मनां स्वदृक् ।**
**अन्तरोऽनन्तरो भाति पश्य तं माययोरुधा ॥ १३.४७ ॥**

**सोऽयमद्य महाराज भगवान् भूतभावनः ।**
**कालरूपोऽवतीर्णोऽस्या-मभावाय सुरद्विषाम् ॥ १३.४८ ॥**

**निष्पादितं देवकृत्य-मवशेषं प्रतीक्षते ।**
**तावद् यूयमवेक्षध्वं भवेद् यावदिहेश्वरः ॥ १३.४९ ॥**

**धृतराष्ट्रः सह भ्रात्रा गान्धार्या च स्वभार्यया ।**
**दक्षिणेन हिमवत ऋषीणा-माश्रमं गतः ॥ १३.५० ॥**

---

13. 43. இவ்வுலகை நீர் நிலையுள்ளதாகவோ, நிலையற்றதாகவோ, இரு வகைத் தாகவோ, எப்படிக் கருதினாலும் அவர்களைக் குறித்து நீர் துக்கிப்பது தகாது. மதிமயக் கத்தாலுண்டான மன நெகிழ்ச்சியைத் தவிர, துக்கத்துக்குக் காரணமே யில்லை.

13. 44. ஆகையால் ‘ சகாயமற்றவர்களும் தீனர்களுமான அவர்கள் என்னைவிட்டு எப்படி ஜீவிப்பார்கள் ’ என்று அறியாமையால் உமது மனத்திலேற்பட்ட குழப்பத்தை விட்டொழியும்.

13. 45. மலைப் பாம்பின் வாயில் அகப்பட்ட ஒருவன் பிறனை எங்ஙனம் காப்பாற்ற இயலாதோ அங்ஙனம் காலம் கருமம் குணம் இவற்றின் கட்டிலகப்பட்ட இந்த ஐம்பூத வுடல் ஒருபோதும் பிறரைக் காப்பாற்றிவிடாது.

13. 47. அரசே! ஸ்வயம் பிரகாசனும், எல்லா ஆத்மாக்களின் ஆத்மாவும், உள்ளும் புறமும் விளங்குபவனும், யோகமாயையால் பலவடிவானவனும் ஆகிய பகவான் ஒருவனையே காண்பீராக.

13. 48. மகாராஜனே! உலகை ஆக்கியளிக்கும் அந்த பகவான் இப்போது தேவ சத்துருக்களின் அழிவுக்காகக் காலரூபியாக இப்பூதலத்தில் அவதரித்துள்ளார்.

13. 49. தேவகாரியம் முடிந்து எஞ்சியுள்ளதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார். நீங்களும் அதை எதிர்பார்த்துக்கொண்டு பகவான் இங்குள்ளவரை இருங்கள்.

13. 50. திருதராஷ்டிரர் தம்பியுடனும் மனைவி காந்தாரியுடனும் இமயத்தின் தென் சாரலில் உள்ள ரிஷிகளின் ஆசிரமம் அடைந்துவிட்டார்.

---

13. 50. **दक्षिणे हिमवत्पार्श्वे ।**

ध्वस्त-माया-गुणोदर्को निरुद्ध-करणाशयः ।
निवर्तिताखिलाहार आस्ते स्थाणु-रिवाचलः
तस्यान्तरायो मैवाभूः संन्यस्ताखिल-कर्मणः ॥ १३.५५ ॥

स वा अद्यतनाद् राजन् परतः पञ्चमेऽहनि ।
कलेवरं हास्यति स्वं तच्च भस्मी-भविष्यति ॥ १३.५६ ॥

दह्यमानेऽग्निभि-र्देहे पत्युः पत्नी सहोटजे ।
बहिः स्थिता पतिं साध्वी तमग्नि-मनुवेक्ष्यति ॥ १३.५७ ॥

विदुरस्तु तदाश्चर्यं निशाम्य कुरुनन्दन ।
हर्ष-शोकयुत-स्तस्माद् गन्ता तीर्थ-निषेवकः ॥ १३.५८ ॥

इत्युक्त्वाथारुहत् स्वर्गं नारदः सहतुंबुरुः ।
युधिष्ठिरो वचस्तस्य हृदि कृत्वाजहाच्छुचः ॥ १३.५९ ॥

युधिष्ठिर उवाच—

संप्रेषितो द्वारकायां जिष्णु-र्बन्धु-दिदृक्षया ।
ज्ञातुं च पुण्यश्लोकस्य कृष्णस्य च विचेष्टितम् ॥ १४.६ ॥

गताः सप्ताधुना मासा भीमसेन तवानुजः ।
नायाति कस्य वा हेतोर्नाहं वेदेदमंजसा ॥ १४.७ ॥

---

13. 55. மாயா குணங்களின் வாசனை நீங்கி, கரணங்கள் ஒய்ந்து, ஒரு விஷயத்தையும் அனுபவியாதவராய்க் கட்டைபோல் அசையாமல் அமர்ந்திருக்கிறார். எல்லாக் கர்மங்களையும் விட்டவரான அவருக்கு இடையூறு விளைவிப்பவராக ஆகாதீர்.

13. 56. அவர் இப்போதிருந்து ஐந்தாவது நாளில் தனது உடலை விட்டுவிடப் போகிறார். அதுவும் சாம்பலாகப் போகிறது.

13. 57. பர்ணசாலையுடன் பர்த்தாவின் தேகம் அக்கினியால் எரிக்கப்படும்போது வெளியே நின்ற பதிவிரதையான காந்தாரி அந்த அக்கினியில் அனுகமனம் செய்யப் போகிறாள்.

13. 58. குருநந்தன! விதுரரும் அவ்வாச்சரியத்தைக் கண்டு மகிழ்வும் துன்பமும் கலந்த மனத்தினராய் அங்கிருந்து தீர்த்த யாத்திரைக்கு (மீண்டும்) கிளம்பப் போகிறார்.

13. 59. இங்ஙனம் கூறிவிட்டு நாரதர் தும்புருவுடன் ஆகாயத்தில் கிளம்பினார். தருமபுத்திரர் அவருடைய வார்த்தையை உள்ளத்தில் இருத்திச் சோகத்தைப் போக்கிக் கொண்டார்.

(பீமசேனனை நோக்கி) யுதிஷ்டிரர் கூறியது—

14. 6. உறவினர்களைக் கண்டுவருவதற்காகவும் புண்ணிய சுலோகனை கிருஷ்ணனுடைய செய்திகளை யறிந்து வருவதற்காகவும் அர்ஜுனன் துவாரகைக்கு அனுப்பப்பட்டான்.

14. 7. பீமசேனா! உன் தம்பி போய் ஏழு மாதங்கள் ஆகிவிட்டன. என்ன காரணத்தால் அவன் திரும்பி வரவில்லை என்பது எனக்கு விளக்கமாய்த் தெரியவில்லை.

---

13. 55. स्थाणुरिवाश्मना ।

अपि देवर्षिणाऽऽदिष्टः स कालोऽयमुपस्थितः ।
यदाऽऽत्मनोऽङ्गमाक्रीडं भगवानुत्सिसृक्षति ॥ १४.८ ॥

नद्यो नदाश्च क्षुभिताः सरांसि च मनांसि च ।
न ज्वलत्यग्निराज्येन कालोऽयं किं विधास्यति ॥ १४.१८ ॥

न पिबन्ति स्तनं वत्सा न दुह्यन्ति च मातरः ।
रुदन्त्यश्रु-मुखा गावो न हृष्यन्त्यृषभा व्रजे ॥ १४.१९ ॥

दैवतानि रुदन्तीव स्विद्यन्ति ह्युच्चलन्ति च ।
इमे जनपदा ग्रामाः पुरोद्यानाकराश्रमाः ।
भ्रष्टश्रियो निरानन्दाः किमघं दर्शयन्ति नः ॥ १४.२० ॥

सूत उवाच—

इति चिन्तयत-स्तस्य दृष्टारिष्टेन चेतसा ।
राज्ञः प्रत्यागमद् ब्रह्मन् यदुपुर्याः कपिध्वजः ॥ १४.२२ ॥

युधिष्ठिर उवाच—

कच्चिदानर्तपुर्यां नः स्वजनाः सुखमासते ।
मधु-भोज-दशार्हार्ह-सात्वतान्धक-वृष्णयः ॥ १४.२५ ॥

---

14. 8. தனது லீலைக்குச் சாதனமாக எடுத்த சரீரத்தை பகவான் விட்டுவிடப் போகிறார் என்று நாரதரால் குறிப்பிடப்பட்ட அந்தக் காலந்தான் கிட்டிவிட்டதா?

14. 18. (கீழ்த்திசைப்பாயும்) நதிகளும் (மேற்றிசைப்பாயும்) நதங்களும் ஏரிகளும் கலங்கி யிருக்கின்றன; மனோநிலைகளும் அவ்வாறே; (ஹோமம் செய்யும்போது) நெய்யினால் அக்கினி ஜ்வலிக்கக் காணோம்; இந்தக் காலமானது என்ன செய்யப் போகிறதோ?

14. 19. கன்றுகள் ஊட்டுவதில்லை; தாய்ப் பசுக்கள் கறப்பதில்லை. பசுக்கள் கண்ணீர்விட்டு அழுகின்றன; கோகுலத்தில் காளைகள் மகிழ்வதில்லை.

14. 20. (ஆலயங்களில்) மூர்த்திகள் அழுவனபோலும் வியர்வை சொரிவன போலும், அசைவனபோலும் காண்கின்றன. பட்டினங்கள், கிராமங்கள், புரங்கள், நந்தவனங்கள், சுரங்கங்கள், ஆசிரமங்கள், எல்லாம் களை யிழந்து மகிழ்ச்சியற்றனவாய்த் தோற்றுகின்றன; நமக்கு என்ன அமங்களத்தைத் தெரிவிக்கின்றனவோ?

ஸூதர் கூறியது—

14. 22. பிராம்மணோத்தமரே! இங்ஙனம் அரிஷ்டங்கள் காணப்பட்டதால் கலங்கிய சிந்தையுடையவராக அரசன் இருக்கையில் யதுபுரியிலிருந்து அர்ஜுனன் திரும்பி வந்தான்.

யுதிஷ்டிரர் கூறியது—

14. 25. துவாரகையில் மது—போஜ—தாசார்ஹ—ஸாத்வத—அந்தக—விருஷ்ணி வம்சத்தவர்களான நமது பந்துஜனங்கள் எல்லோரும் சுகமா யிருக்கின்றார்களா?

---

14. 25. दशार्हास्ते कुकुरान्धक । —பா. பே.

भगवानपि गोविन्दो ब्रह्मण्यो भक्तवत्सलः ।
कच्चित्पुरे सुधर्मायां सुखमास्ते सुहृद्वृतः ॥ १४.३४ ॥

कच्चित् तेऽनामयं तात भ्रष्टतेजा विभासि मे ।
अलब्धमानोऽवज्ञातः किं वा तात चिरोषितः ॥ १४.३९ ॥

कच्चित् त्वं ब्राह्मणं बालं गां वृद्धं रोगिणं स्त्रियम् ।
शरणोपसृतं सत्त्वं नात्याक्षीः शरणप्रदः ॥ १४.४१ ॥

अर्जुन उवाच—

वञ्चितोऽहं महाराज हरिणा बन्धुरूपिणा ।
येन मे ऽपहृतं तेजो देवविस्मापनं महत् ॥ १५.५ ॥

यो नो जुगोप वन एत्य दुरन्तकृच्छ्राद्
दुर्वाससोऽरिरचिता-द्युताग्रभुग् यः ।
शाकान्नशिष्ट-मुपयुज्य यतस्त्रिलोकीं
तृप्तामममंस्त सलिले विनिमग्न-संघः ॥ १५.११ ॥

---

14. 34. பக்தர்களுக் கிரங்குபவனும், பிராம்மணப் பிரியனும் ஆகிய பகவான் கோவிந்தன் துவாரகையில் ஸுதர்மை என்ற தனது சபையில் நல்ல உள்ளம் படைத்தவர்கள் சூழ இன்புற்றிருக்கின்றாரா?

14. 39. அப்பா! நீ ஒரு நோயுமின்றிச் சுகமா யிருக்கிறாயா? எனக்கு நீ வீரிய மிழந்தவன்போல் தோன்றுகின்றாய். அங்கு நீண்டகாலம் தங்கியதால் மானக் குறைவோ அவமதிப்போ ஏதேனும் ஏற்பட்டதா?

14. 41. அல்லது சரணளிக்கும் நீ சரணடைந்த பிராம்மணனையோ, சிறுவனையோ, பசுவையோ, கிழவனையோ, நோயாளியையோ, ஸ்திரீயையோ வேறு ஜீவனையோ காப்பாற்றாமல் கைவிட்டு வருந்துகின்றனையா? (ஏன் பேசவில்லை?)

அர்ஜுனன் கூறியது—

15. 5. மகாராஜனே! பந்து வடிவந்தாங்கியிருந்த ஹரியால் நான் வஞ்சிக்கப்பட்டவனாய்விட்டேன். தேவர்களும் அதிசயிக்கும் எனது அளவுகடந்த வீரியம் அவரால் அபகரிக்கப்பட்டுவிட்டது.

15. 11. பதினாயிரம் சிஷ்யர்களுடன் புசிக்கும் துர்வாஸ முனிவர் மூலம் நமது சத்துருவால் ஏற்பட்ட கடக்கமுடியாத இக்கட்டிலிருந்து விடுவிக்க எவன் வனத்துக்கு வந்து நம்மைக் காப்பாற்றினானோ; உண்டு மிகுந்த கீரையுணவை எவன் உட்கொண்ட மாத்திரத்தில் நீரில் மூழ்கியிருந்த ரிஷிக் கூட்டமும் மூவ்வுலகும் (வயிறார உண்டு) திருப்தியடைந்ததாக எண்ணிற்றோ;

---

4. 41. स्वन्तं ब्राह्मणं ।

**यो भीष्म-कर्ण-गुरु-शल्य-चमूष्वदभ्र-राजन्य-वर्य-रथमण्डल-मण्डितासु ।**
**अग्रेचरो मम विभो रथयूथपाना-मायुर्मनांसि च दृशा**
**सह ओज आर्च्छत् ॥ १५.१५ ॥**

**सौत्ये वृतः कुमतिनाऽऽत्मद ईश्वरो मे यत्पादपद्म-मभवाय भजन्ति भव्याः ।**
**मां श्रान्तवाह-मरयो रथिनो भुविष्ठं न प्राहरन् यदनुभाव-**
**निरस्त-चित्ताः ॥ १५.१७ ॥**

**नर्माण्युदार-रुचिर-स्मित-शोभितानि हे पार्थ हेऽर्जुन सखे कुरुनन्दनेति ।**
**संजल्पितानि नरदेव हृदिस्पृशानि स्मर्तु-र्लुठन्ति हृदयं**
**मम माधवस्य ॥ १५.१८ ॥**

---

15. 15. பிரபுவே! பீஷ்மர், கர்ணன், துரோணுசாரியர், சல்லியன், இவர்களின் சைனியங்களில் சிறந்த அரசர்களுடைய தேர்க் கூட்டங்கள் சூழ்ந்து நம்மை எதிர்த்த போது எவன் எனக்கு முன்னிருந்து தேர்க்கூட்டத் தலைவர்களின் ஆயுளையும் மனோ வன்மையையும் வீரியத்தையும் கண்ணோட்டத்தாலேயே கவர்ந்தானோ;

15. 17. எவனுடைய பாதகமலங்களைப் பிறவிப்பிணி நீங்குவதற்காகப் புருஷ சிரேஷ்டர்கள் சேவிக்கின்றார்களோ; என் தேர்க் குதிரைகள் களைப்படைந்தபோது நான் (அவைகளுக்கு நீர் தேடி) பூமியில் நிற்கையில் சத்துருக்களான தேராளிகள் எவ னுடைய மகிமையினால் மதியிழந்து என்னை அடிக்கவில்லையோ; அந்த ஸர்வேசுவரனை புத்திகெட்ட நான் தேரோட்டும்படியல்லவா கேட்டுக்கொண்டேன்.

15. 18. அரசே! புன்சிரிப்புடன் உதாரமாய் விளங்கும் விளையாட்டுப் பேச்சுக்க ளும், ஏ பார்த்தா—அர்ஜுனா—நண்பா—குருநந்தனா—என்று உள்ளத்தைத் தொடும் வகை யில் அன்புடன் அழைக்கும் மாதவனுடைய சொற்களும் நினைத்துப் பார்க்கும் என் னுடைய இருதயத்தை இப்போது துளைக்கின்றன.

---

15. 15. **அதப்ரா:—**அனல்பா:।

15. 17. ஜயத்ரதனுடன் யுத்தத்தில் குதிரை தாகத்தால் களைப்படைய அர்ஜுனன் கீழே இறங்கி வில்லால் பூமியைப் பிளந்து தண்ணீர் காட்டினான். அப்போது எதிரிகள் மதி மயக்க முற்று அர்ஜுனனை இம்சிக்கவில்லை.

18 நாள் யுத்தத்திலும் பகவான் முதலில் தேரைவிட்டு இறங்கி அர்ஜுனனைப் பின்பு கைபிடித்து இறக்கிவிடுவார். 18 வது நாள் அர்ஜுனனை முன் இறக்கித் தான் பின்பு இறங்கி னார். தேர் நெருப்புப் பிடித்துக்கொண்டது. ஏன்? 11 வது நாள் யுத்தத்தில் துரோணர் போட்ட ஆக்னேயாஸ்திரம் அமோகமானது. தேரை மாற்றவேண்டாமென்று அஸ்திரசக்தியை யடக்கிவைத்திருந்தார் பகவான். அஸ்திரத்தை கௌரவிக்க இப்போது எரியவிட்டார். அப்படிப்பட்டது அவர் கிருபை.

**ஸௌத்யே—**ஸாரத்யே; **அபவாய—**மோக்ஷாய; **பவ்யா:—**ச்ரேஷ்டா:

---

15. 15. **कर्णकृपशल्य ।**

15. 18. **कर्माण्युदार ।** —பா. பே.

शय्यासनाटन-विकत्थन-भोजनादि-ष्वैक्याद्-वयस्य ऋतवानिति विप्रलब्धः।
सख्युः सखेव पितृवत् तनयस्य सर्वं सेहे महान् महितया कुमते-
र्घं मे ॥ १५.१९ ॥

सोऽहं नृपेन्द्र रहितः पुरुषोत्तमेन सख्या प्रियेण सुहृदा हृदयेन शून्यः।
अध्वन्युरुक्रम-परिग्रह-मङ्ग रक्षन् गोपै-रसद्भि-रबलेव
विनिर्जितोस्मि ॥ १५.२० ।

तद्वै धनुस्त इषवः स रथो हयास्ते सोऽहं रथी नृपतयो यत आनमन्ति।
सर्वं क्षणेन तदभूदसदीश-रिक्तं भस्मन् हुतं कुहकराद्ध-
मिवोप्तमूष्याम् ॥ १५.२१ ॥

---

15. 19. படுக்கையிலும், இருக்கையிலும், நடக்கையிலும், பொழுதுபோக்காகப் பேசுகையிலும். சாப்பிடுகையிலும் ஒன்றாகவே பழகியதால் ஒரு சமயம், "நண்பா! நீ ஸத்தியமே உருவெடுத்தவன்!" என்று இகழ்ச்சியாய்ப் பேசினேன். அம் மகா புருஷன் தன் பெருமையால் அற்ப புத்தியுடைய நான் செய்த பிழை யனைத்தையும் தோழனுக்குத் தோழன்போலும், பிள்ளைக்குத் தகப்பன்போலும் பொறுத்துக்கொண்டானல்லவா?

15. 20. அரசர் பெருமானே! அப்படிப்பட்ட நான் பிரியனும் நன்மையைக் கோருபவனும், நண்பனுமாய் நின்ற புருஷோத்தமனைவிட்டுப் பிரிந்து உள்ளத்தில் சூனியனாகி விட்டேன். பகவானுடைய ஸ்திரீஜனங்களைக் காத்து வருகையில் வழியில் துஷ்டர்களான இடையர்களால் பேதைபோல் ஜயிக்கப்பட்டேன்.

15. 21. எதற்காக அரசர்களெல்லாம் என்னை வணங்கினரோ அதே வில்லும் பாணங்களும், அதே தேரும் குதிரைகளும், அதே தேராளியான நான்—எல்லாம் ஒரு கணத்தில் ஈசனில்லாதுபோகவே, சாம்பலில் ஹோமம்போலும், சூதுக்காரனிடம் வைத்த பொருள்போலும், களரிலிட்ட விதைபோலும் வீணாகிவிட்டன.

---

15. 19. **விகத்தனம்**—ஸ்வகுணச்லாகனம்; **விப்ரலப்த**:—திரஸ்க்ருத:; **மஹிதயா**—மஹத்வேன

ஓ. யச்சாவஹாஸார்த்த-மஸத்க்ருதோ஽ஸி விஹார-சய்யாஸன-போஜனேஷு। ஏகோத-வாப்யச்யுத தத் ஸமக்ஷம் தத்க்ஷாமயே த்வாமஹ-மப்ரமேயம் ॥ —கீ. 11. 42.

ஒ. பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு: ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் ॥—கீ. 11. 44.

ஓ. அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்றன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே —திருப்பாவை.

15. 20. பிரபாஸ க்ஷேத்திரத்தில் யதுகுலம் க்ஷயமானபின் பகவான் பரமபதம் எழுந்தருளும்போது ஸாரதி தாருகன் தேடிவந்தான். அப்போது பகவான் அவனிடம் 'நீ துவாரகை செல். ஞாதிகள் நாசமடைந்ததையும் என் மறைவையும் பந்துக்களுக்குத் தெரிவி. துவாரகையை ஸமுத்ரம் வியாபிக்கப் போகிறது. இனி ஒருவரும் அங்கிருக்கவேண்டாம். அர்ஜுனனால் ரக்ஷிக்கப்பட்டு இந்திரப்பிரஸ்தம் செல்லுங்கள்' என்று கட்டளையிட்டார். அப்படியே அனைவரையும் அழைத்துச் செல்லுகையில் அர்ஜுனன் வழியில் துஷ்டர்களிடம் தோல்வியடைந்தான்.

15. 21. **பஸ்மன்**—இதி லுப்தம் ஸப்தம்யந்தம் பதம்। **உப்தம்**—ப்ரகீர்ணம்।

राजं-स्त्वयाभिपृष्टानां सुहृदां नः सुहृत्पुरे ।
विप्रशाप-विमूढानां निघ्नतां मुष्टिभिर्मिथः ॥ १५.२२ ॥

वारुणीं मदिरां पीत्वा मदोन्मथित-चेतसाम् ।
अजानता-मिवान्योन्यं चतुः पंचावशेषिताः ॥ १५.२३ ॥

एवं बलिष्ठैर्यदुभि-र्महद्भि-रितरान् विभुः ।
यदून् यदुभिरन्योन्यं भूभारान् संजहार ह ॥ १५.२६ ॥

सूत उवाच—

एवं चिन्तयतो जिष्णोः कृष्णपाद-सरोरुहम् ।
सौहार्देनातिगाढेन शान्तासीद् विमला मतिः ॥ १५.२८ ॥

वासुदेवाङ्घ्र्यनुध्यान-परिबृंहित-रंहसा ।
भक्त्या निर्मथिताशेष-कषाय-धिषणोऽर्जुनः ॥ १५.२९ ॥

गीतं भगवता ज्ञानं यत्तत् संग्राम-मूर्धनि ।
काल-कर्म-तमो-रुद्धं पुन-रध्यगमत् प्रभुः ॥ १५.३० ॥

---

15. 22-23 அரசே! நீர் விசாரித்த உற்றார்களில் அவர்களுடைய நகரில் நாலைந்து பேர்களே மிகுந்துள்ளனர். ஏனையோர் பிராம்மண சாபத்தினால் மதிகெட்டு, மதுபானம் செய்து, மதம் மிகுந்து அறியாதவர்கள்போல் ஒருவரை யொருவர் (கோரை) முஷ்டிகளால் அடித்துக்கொண்டு மாண்டுபோயினர்.

15. 26. இவ்வாறு விபுவான பகவான் பலசாலிகளும் மகான்களுமான யாதவர்களைக் கொண்டு (பலசாலிகளும் பராக்கிரமம் மிகுந்தவர்களுமான) பிறரை (போரில்) அழித்துப் பின் யாதவர்களைக்கொண்டே யாதவர்களையும் அழித்து பூபாரத்தைப் போக்கிவிட்டார்.

ஸூதர் கூறியது—

15. 28. இங்ஙனம் கிருஷ்ணனுடைய சரணாரவிந்தத்தை ஆழ்ந்த அன்புடன் சிந்தித்த அர்ஜுனனுடைய மனது நிர்மலமாகவும் சாந்தமாகவும் ஆயிற்று.

15. 29-30. வாசுதேவனுடைய சரணங்களில் இடைவிடாத் தியானத்தால் பக்தி பெருகிச் சித்தமலம் முழுதும் நீங்கிய பிரபுவாகிய அர்ஜுனன் போர்த் தொடக்கத்தில் பகவானால் உபதேசிக்கப்பட்டு, காலத்தாலும் கரும வசத்தாலும் தமோ குணத்தாலும் மறைக்கப்பட்டிருந்த ஞானத்தை மீண்டும் பெற்றான்.

---

15. 29. ரம்ஹோ வேக: । பக்தியின் வேகம் காமாதி தோஷங்களை அடித்துக்கொண்டு போயிற்று.

15. 30. ருத்தம்—ஆவ்ருதம்

विशोको ब्रह्मसंपत्त्या संछिन्न-द्वैत-संशयः ।
लीन-प्रकृति-नैर्गुण्या-द्लिंगत्वा-दसंभवः ॥ १५.३१ ॥

निशम्य भगवन्मार्गं संस्थां यदुकुलस्य च ।
स्वः पथाय मतिं चक्रे निभृतात्मा युधिष्ठिरः ॥ १५.३२ ॥

पृथाप्यनुश्रुत्य धनंजयोदितं नाशं यदूनां भगवद्गतिं च ताम् ।
एकान्त-भक्त्या भगवत्यधोक्षजे निवेशितात्मोपरराम संसृतेः ॥ १५.३३ ॥

स्वराट् पौत्रं विनयिन-मात्मनः सुसमं गुणैः ।
तोय-नीव्याः पतिं भूमे-रभ्यषिंचद् गजाह्वये ॥ १५.३८ ॥

मथुरायां तथा वज्रं शूरसेनपतिं ततः ।
प्राजापत्यां निरूप्येष्टि-मग्नीनपिबदीश्वरः ॥ १५.३९ ॥

---

15. 31. அவன் பிரம்மஞானத்தால் சோகம் ஒழிந்தவனுனன். துவைத ரூபமான சந்தேகம் சேதிக்கப்பட்டது. பிரகிருதியின் சேஷ்டை ஒடுங்கி குணாதீத நிலை ஏற்பட்டது. அதனால் லிங்கசரீரம் நாசமாயிற்று. இங்ஙனம் போக்குவரவற்ற முக்தி நிலையை யெய்தினன்.

15. 32. யுதிஷ்டிரரோ வெனில் பகவான் பரமபதம் சென்றுவிட்டதை யெண்ணியும், யதுகுல மழிந்துவிட்டதைக் கேட்டும், மனதை யொடுக்கி ஸ்வர்க்கம் செல்ல நிச்சயித்தார்.

15. 33. குந்தியும்-யாதவர்களின் அழிவையும் பகவான் சென்றுவிட்டதையும் அர்ஜுனன் கூறக்கேட்டு அதோக்ஷஜன பகவானிடத்தில் ஏகாந்த பக்தியால் மனதை நிறுத்தி ஸம்ஸாரச் சுழலினின்றும் ஓய்வடைந்தாள்.

15. 38. சக்கிரவர்த்தியான தருமபுத்திரர், நற்குணங்களில் தனக்கு நிகரானவனும் அடக்கமுடையவனுமான பேரனை நீர் சூழ்ந்த புவிக்குப் பதியாக ஹஸ்தினபுரியில் அபிஷேகம் செய்து வைத்தார்.

15. 39. மதுரையிலும் அவ்வாறே சூரசேன நாட்டுக்குப் பதியாக வஜ்ரனை (அபிஷேகம் செய்வித்தார்). பின் பிராஜாபத்ய இஷ்டியைச் செய்து, ஸர்வ வல்லமை வாய்ந்த அவர் (உபாசித்து வந்த அக்கினிகளை) தன்னிடமே ஆரோபணம் செய்துகொண்டார்.

---

15. 31. **ப்ரஹ்மஸம்பத்யா**—அர்ஜுனன் ப்ராஹ்மீஸ்திதியை எய்தினன்.
—ஓ. கீ. 2. 72.

**ஸஞ்சின்ன-த்வைத-ஸம்ச்ய:**—ஓ. உருவும் உடலும் குறியும் இடமும் இல்லாத இந்தப் பரம்பொருளில் எப்போது இவன் நிலை பெறுகின்றானோ அப்போதே இவன் பயமற்ற நிலையை அடைந்தவனாகிறான். —தை. உப. 2.7.

எந்நிலையில் ஒருவன் பிரம்மத்தைத் தவிர வேறொன்றையும் காண்பதில்லையோ அந்நிலையிலுள்ளவன் தான் உண்மையில் வித்வான்; ஆசை வாய்ப்பட்டு அழிந்து போகாதவன்.

15. 32. **ஸம்ஸ்தாம்**—நாசம்; **நிப்ருதாத்மா**—நிச்சலசித்த: ।

15. 38. மகாபாரதயுத்தம் முடியும்போது தருமபுத்திரர் வயது 62. பின்பு 18 வருஷம் அரசாண்டார். இப்போது அவர் வயது 80.

15. 39. **வஜ்ர:**—கிருஷ்ணனுடைய புத்ரன் ப்ரத்யும்னன்; ப்ரத்யும்னன் புத்ரன் அநிருத்தன்; அவனுடைய புத்ரன் வஜ்ரன். **அபிபத்**—ஆத்மன்யாரோபயாமாஸ। ஈச்வர:—ஸமர்த்த:।

---

15. 38. **संराट् विनियतं** பா. பே.

विसृज्य तत्र तत् सर्वं दुकूल-वलयादिकम् ।
निर्ममो निरहंकारः संछिन्नाशेष-बन्धनः ॥ १५.४० ॥

वाचं जुहाव मनसि तत्प्राण इतरे च तम् ।
मृत्यावपानं सोत्सर्गं तं पंचत्वे ह्यजोहवीत् ॥ १५.४१ ॥

त्रित्वे हुत्वा च पंचत्वं तच्चैकत्वेऽजुहोन्मुनिः ।
सर्व-मात्मन्यजुहवीद् ब्रह्मण्यात्मान-मव्यये ॥ १५.४२ ॥

चीरवासा निराहारो बद्धवाङ्-मुक्त-मूर्धजः ।
दर्शयन्नात्मनो रूपं जडोन्मत्त-पिशाचवत् ॥ १५.४३ ॥

अनपेक्षमाणो निरगा-दशृण्वन् बधिरो यथा ।
उदीचीं प्रविवेशाशां गतपूर्वां महात्मभिः
हृदि ब्रह्म परं ध्यायन्नावर्तेत यतो गतः ॥ १५.४४ ॥

---

15. 40-42. பட்டாடை, பொன்வளை முதலிய அனைத்தையும் அவ்விடத்தே களைந்து, 'நான், எனது' என்ற எண்ணமற்றவராய், தளைகள் ஏதும் இல்லாதவராகி, வாக்கை மனத்தில் ஹோமம் செய்தார்; அதைப் பிராணனிலும், அதை மற்றதிலும் (அபானனிலும்), அபானனை உத்ஸர்க்கம் என்ற கிரியையுடன் மிருத்யுவிலும், மிருத்யுவை ஐம்பூதவடிவான (சரீரத்துடையதென்று) சரீரத்திலும் ஹோமம் செய்தார். ஐம்பூதங்களை முக்குணங்களிலும் முக்குணங்களை ஒன்றாகிய மூலப் பிரகிருதியிலும், முனிவராகிய அவர் ஹோமம் செய்து, ஸர்வகாரணரூபமான பிரகிருதியை ஆத்மாவிடத்திலும் ஆத்மாவை அழிவிலாப் பிரம்மத்தினிடமும் ஹோமம் செய்தார்.

15. 43-44. மரவுரியணிந்து, ஆகாரத்தை யொழித்து, பேச்சில்லாமல், தலை விரிகோலமாய், ஆத்மரூபத்தை விளக்குபவராய் ஜடன்போலும் பித்தன் போலும் பேயன் போலும் வேண்டுதல் வேண்டாமையிலாதவராய் (எவரையும் எதையும் எதிர் பாராமல்), செவிடன்போல் எதையுங் கேளாமல், (அரண்மனைவிட்டு) வெளிக் கிளம்பினார். எதையடைந்தவர் திரும்புவதில்லையோ அந்த பரப்பிரம்மத்தை மனதில் தியானித்துக்கொண்டு மகான்கள் முன் சென்றுள்ள வடக்கு திக்கை நோக்கிச் சென்றார்.

---

15. 40. ஒ. நுண்ணறிவுடைய விவேகி வாக்கை மனதில் ஒடுக்கி அதைப் பிரகாச ரூபமான புத்தியில் ஒடுக்கி, புத்தியைப் பிரத்யகாத்மாவில் ஒடுக்கி அதைப் பரமாத்மாவில் ஒடுக்கவேண்டும். —கட. உப. 3. 13.

ஒ. அக்னிர்மே வாசி ச்ரிதः। வாக்-ஹ்ருதயே। ஹ்ருதயம் மயி। அஹமம்ருதே। அம்ருதம் ப்ரஹ்மணி। —லகுந்யாஸம்।

15, 43, ஒ. விரிதரு குஞ்சியன் விரித்துடுத்ததோர்
மரவுரியுடையினன் மலர்ந்த காட்சியன்
உரையிலன் ஊணிகந்தொற்றை வெண்கொடைத்
தருமன் அங்கேகிய காட்சி என் சொல்கேன். —ஆரியப்பப் புலவர்

15. 44. ஆசாம்—திசம்।

सर्वे तमनु निर्जग्मु-र्भ्रातरः कृत-निश्चयाः ।
कलिनाऽधर्म-मित्रेण दृष्ट्वा स्पृष्टाः प्रजा भुवि ॥ १५.४५ ॥

ते साधुकृत-सर्वार्था ज्ञात्वाऽऽत्यन्तिक-मात्मनः ।
मनसा धारयामासु-र्वैकुण्ठ-चरणांबुजम् ॥ १५.४६ ॥

अवापु-र्दुरवापां ते असद्भि-र्विषयात्मभिः ।
विधूत-कल्मषाः स्थानं विरजेनात्मनैव हि ॥ १५.४८ ॥

विदुरोऽपि परित्यज्य प्रभासे देहमात्मवान् ।
कृष्णावेशेन तच्चित्तः पितृभिः स्वक्षयं ययौ ॥ १५.४९ ॥

द्रौपदी च तदाऽऽज्ञाय पतीना-मनपेक्षताम् ।
वासुदेवे भगवति ह्येकान्त-मति-राप तम् ॥ १५.५० ॥
यः श्रद्धयैतत्-भगवत्प्रियाणां पाण्डोः सुतानामिति सम्प्रयाणम् ।
शृणोत्यलं स्वस्त्ययनं पवित्रं लब्ध्वा हरौ भक्तिमुपैति सिद्धिम् ॥ १५.५१ ॥

---

15. 45. பூமியிலுள்ள மக்கள் அதர்ம மித்திரனை கலியால் தொடப்பட்டு விட்டதைக் கண்டு அவரை (தருமபுத்திரரை) பின்பற்ற நிச்சயித்துத் தம்பிமார்கள் எல்லோரும் தொடர்ந்தனர்.

15. 46. எல்லாப் புருஷார்த்த தருமங்களையும் செவ்வையாய் அனுஷ்டித்த அவர்கள் பகவானுடைய சரணகமலமே ஆத்மாவுக்கு முடிவான புகலிடம் என்று அறிந்து அதையே மனதில் தாங்கினர்.

15. 48. இந்திரிய வசப்பட்ட அஸத்துக்களால் அடையமுடியாத நிலையை மனக் கலக்கம் நீங்கிப் பரிசுத்தமான உள்ளமுடைய அவர்கள் அடைந்தார்கள்.

15. 49. ஆத்மஞானியான விதுரரும் பிரபாஸ தீர்த்தம் சென்று ஸ்ரீ கிருஷ்ணனிடம் சித்தத்தை வைத்து உடலை நீத்து (தன்னையழைத்துச் செல்ல வந்த) பிதிரு தேவதைகளுடன் தனது அதிகார ஸ்தானத்தை யடைந்தார்.

15. 50. திரௌபதியோ கணவன்மார் வேண்டுதல் வேண்டாமையிலாத உயர் நிலை யெய்தியதைக் கண்டு பகவான் வாசுதேவனிடத்தில் ஏகாந்த பக்தியால் அவரையே யடைந்தாள்.

15. 51. பகவானுக்குப் பிரிய பக்தர்களான பாண்டுபுத்திரர்களின் மஹாப் பிரயாணத்தைக் கூறும் இந்தப் பவித்திரமானதும் பரம மங்களகரமானதுமான கதையை எவர் கேட்கின்றாரோ அவர் ஹரிபக்தியை யடைந்து முக்தியையும் எய்துவர்.

**இங்ஙனம் மூன்றும் இதழாகிய பரீக்ஷித்தின் வரலாறும்**
**பாண்டவர் மஹாப்பிரஸ்தானக் கதையும் முற்றும்.**

---

15. 45. பின் தொடர்ந்தவர்கள் ஒவ்வொருவரும் ஒரு குணக்குறைவால் ஒருவர் பின் ஒருவராகப் பிரயாணத்தின்போது வீழ்ந்தனர். துரௌபதி அர்ஜுனனிடம் பக்ஷபாதத்தால்; ஸஹதேவன் தான் ஞானி என்ற எண்ணத்தால்; நகுலன் தான் அழகில் மிக்கவன் என்று கருதியதால்; அர்ஜுனன் தனக்கொப்பான வீரன் இல்லை என்று நினைத்ததால்; பீமன் உண்டியிலுள்ள ஆவலால்; தருமபுத்திரருக்குமட்டும் தேவ விமானம் வந்தது. அப்போது அவரைத் தொடர்ந்து வந்த நாய் ஒன்று எஞ்சியிருந்தது. அதை தேவ விமானத்தில் ஏற்ற வேத தூதர்கள் மறுத்தபோது தருமபுத்திரர் தனக்கும் விமானம் வேண்டாமென்றார். அப்போது நாய் தர்மதேவதையாகக் காட்சியளித்தது. தர்மத்திலிருந்தே அர்த்தமும் காமமும், அர்த்தத்தாலும் காமத்தாலும் தர்மமன்று என்பது தருமபுத்திரருடைய வாழ்க்கையில் நிதர்சனம்.

15. 49. **ஸ்வக்ஷயம்**—ஸ்வாதிகார ஸ்தானம்.

---

15. 45. **निर्जग्मुस्त्वरिताः ।** பா. பே.

## परीक्षितः प्रायोपवेशनम् ॥ ४ ॥

सूत उवाच—

ततः परीक्षिद् द्विजवर्य-शिक्षया महीं महाभागवतःशशास ह ।
यथा हि सूत्या-मभिजातकोविदाः समादिशन् विप्र महद्गुण-स्तथा ॥ १६.१ ॥

स उत्तरस्य तनयामुपयेम इरावतीम् ।
जनमेजयादीं-श्चतुर-स्तस्या-मुत्पादयत् सुतान् ॥ १६.२ ॥

भद्राश्वं केतुमालं च भारतं चोत्तरान् कुरून् ।
किंपुरुषादीनि वर्षाणि विजित्य जगृहे बलिम् ॥ १६.१२ ॥

तत्र तत्रोपश्शृण्वानः स्वपूर्वेषां महात्मनाम् ।
प्रणीयमाणं च यशः कृष्ण-माहात्म्य-सूचकम् ॥ १६.१३ ॥

तेभ्यः परम-सन्तुष्टः प्रीत्युज्जृंभित-लोचनः ।
महाधनानि वासांसि ददौ हारान् महामनाः ॥ १६.१५ ॥

सारथ्य-पारषद्-सेवन-सख्य-दौत्य-वीरासनानुगमन-स्तवन-प्रणामान् ।
स्निग्धेषु पाण्डुषु जगत्प्रणतिं च विष्णो-र्भक्तिं करोति नृपति-
श्चरणारविन्दे ॥ १६.१६ ॥

---

நான்காவது இதழ்

### பரீக்ஷித்தின் பிராயோபவேசம்

ஸூதர் கூறியது—

16. 1. பிராம்மணரே! பிறகு மகா பாகவதரான பரீக்ஷித்து பிராம்மணோத்தமர்களின் உபதேசப்படி பூமியை ஆண்டார். அவர் பிறந்தபோது ஜாதகபலனைக் கூறிய வித்துவான்கள் எடுத்துரைத்த சிறந்த குணங்கள் எல்லாம் அவரிடம் விளங்கலாயின.

16. 2. அவர் உத்தரனுடைய பெண் இராவதி என்பவளைக் கலியாணம் செய்து கொண்டார். அவளிடம் ஜனமேஜயன் முதலிய நான்கு புத்திரர்களை உண்டாக்கினார்.

16. 12. பத்ராசுவம், கேதுமாலம், பாரதம், உத்தர குருவர்ஷம், கிம்புருஷம் முதலிய நாடுகளைத் தன் வசமாக்கிக்கொண்டு கப்பங்கட்டச் செய்தார்.

16. 13-15. மகாத்மாக்களான தனது முன்னோர்களின் கீர்த்தி ஆங்காங்கு பாடப்படுவதைக் கேட்டு, (அங்ஙனம் பாடிய) அவர்களுக்குப் பரமசந்தோஷத்துடனும் ஆனந்தத்தால் மலர்ந்த கண்களுடனும் விசாலமான உள்ளம்படைத்த அவர் விலையுயர்ந்த ஆடைகளையும் ஹாரங்களையும் (வெகுமதியாக) அளித்தார்.

16. 16. பகவான் தேரோட்டியது, சபையை யலங்கரித்தது, சேவை செய்தது, நட்புக்கொண்டது, தூது போனது, (கண்விழித்து இரவில் பாதுகாப்புக்காக)வீராசனத்திலிருந்தது, (அன்பினால்) பின் தொடர்ந்தது, புகழ்ந்தது, வந்தனம் செய்தது, பிரியர்களான பாண்டவர் பாதங்களில் உலகெல்லாம் வணங்கும்படி செய்தது இதையெல்லாங் கேட்டுக் கேட்டு (பரவசமாகி) பரீக்ஷித்து மகாராஜன் பகவானுடைய சரணாரவிந்தங்களில் பக்தி செய்தார்.

---

16. 1. **ஸூத்யாம்**—ஜன்மனி ।
16. 16. **வீராஸனம்**—ராத்ரௌ கட்க ஹஸ்தஸ்ய திஷ்டதோ ஜாகரணம் ।

---

16. 13. **गीयमानं च पुरतः कृष्णमाहात्म्यसूचनम् ।** பா. பே.

तस्यैवं वर्तमानस्य पूर्वेषां वृत्ति-मन्वहम् ।
नातिदूरे किलाश्चर्यं यदासीत् तन्निबोध मे ॥ १६.१७ ॥

तत्र गोमिथुनं राजा हन्यमान-मनाथवत् ।
दण्ड-हस्तं च वृषलं ददृशे नृपलांछनम् ॥ १७.१ ॥

वृषं मृणाल-धवलं मेहन्तमिव बिभ्यतम् ।
वेपमानं पदैकेन सीदन्तं शूद्रताडितम् ॥ १७.२ ॥

गां च धर्मदुघां दीनां भृशं शूद्रपदाहताम् ।
विवत्सां साश्रुवदनां क्षामां यवस-मिच्छतीम् ॥ १७.३ ॥

राजोवाच—

कस्त्वं मच्चरणे लोके बलाद्धंस्यबलान् बली ।
नरदेवोऽसि वेषेण नटवत्कर्मणाऽद्विजः ॥ १७.५ ॥

एष राज्ञां परो धर्मो ह्यार्तानां-मार्ति-निग्रहः ।
अत एनं वधिष्यामि भूतद्रुहमसत्तमम् ॥ १७.११ ॥

आख्याहि वृष भद्रं वः साधूना-मकृतागसाम् ।
आत्म-वैरूप्यकर्तारं पार्थानां कीर्ति-दूषणम् ॥ १७.१३ ॥

---

16. 17. அவர் இவ்வாறு முன்னோர்களின் வழியைப் பின்பற்றி நடந்து வருகையில் வெகுநாளாவதற்கு முன் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. அதை என்னிடமிருந்து கேளும்.

17. 1. (தேசாடனம் செய்துகொண்டு குருக்ஷேத்திரம் வந்தபோது) அங்கு அரசர் ஒரு பசுவும் ரிஷபமும் நாதனற்றவைபோல் நிற்பதையும் அரச உடைதரித்த ஒரு சூத்திரன் கையில் தடியை வைத்துக்கொண்டு அவற்றை இம்சிப்பதையும் கண்டார்.

17. 2-3. தாமரை நூல்போல் வெளுத்ததும், பயத்தினால் சிறுநீர் விடுவதும், நடுங்குவதும், ஒற்றைக்காலில் நின்றுகொண்டு வருந்துவதும் சூத்திரனால் அடிக்கப்பட்டதுமான அந்த ரிஷபத்தையும்; (தருமத்தை வளர்க்குங் கிரியைகளுக்குப் பாலும் நெய்யும் அளிப்பதால்) தருமத்தையே கறப்பதும், இரங்கத்தக்கதும் அடிக்கடி சூத்திரனுடைய காலால் உதைக்கப்பட்டதும், கன்றற்றதும், கண்ணீர் வடிப்பதும், இளைத்ததும், புல்லை விரும்புகின்றதுமான பசுவையும் (கண்டு)
(சூத்திரனை நோக்கி) அரசன் கூறியது—

17. 5. நீ யார்? என்னைச் சரணடைந்துள்ள இவ்வுலகில் பலசாலியாய்த் தோன்றும் நீ வலிமையற்ற இப் பிராணிகளை வலுவில் இம்சிக்கின்றாய். நாடகம் நடிப்பவனைப்போல் நீ வேஷத்தில் அரசனாக விருந்தும் செயலில் சூத்திரனாகவும் இருக்கின்றாய்?
(ரிஷபத்தை நோக்கி)

17. 11. துன்புற்றவர்களின் துன்பத்தைக் களைவதே அரசர்களின் உயர்ந்த கடமை. ஆகையால் பிராணிகளைப் பீடிக்கும் இந்தப் பரமதுஷ்டனை இதோ கொன்று விடுகிறேன்.

17. 13. ரிஷபமே! உங்களுக்கு க்ஷேமம் உண்டாகட்டும். சாதுவான பிராணிகளும் ஒரு பாவமும் அறியாதவர்களுமான உங்களை விரூபப்படுத்தியவன் பார்த்தர்களின் நற்கீர்த்தியை நாசமாக்கியவனாவான். அவன் யாரென்று கூறுவாய்.

धर्म उवाच—

न वयं क्लेशबीजानि यतः स्युः पुरुषर्षभ ।
पुरुषं तं विजानीमो वाक्य-भेद-विमोहिताः ॥ १७.१८ ॥

केचिद्विकल्पवसना आहुरात्मान-मात्मनः ।
दैवमन्ये परे कर्म स्वभाव-मपरे प्रभुम् ॥ १७.१९ ॥

अप्रतर्क्या-दनिर्देश्या-दिति केष्वपि निश्चयः ।
अत्रानुरूपं राजर्षे विमृश स्वमनीषया ॥ १७.२० ॥

राजोवाच—

धर्मं ब्रवीषि धर्मज्ञ धर्मोसि वृषरूपधृक् ।
यदधर्मकृतः स्थानं सूचकस्यापि तद्भवेत् ॥ १७.२२ ॥

अथवा देवमायाया नूनं गति-रगोचरा ।
चेतसो वचसश्चापि भूताना-मिति निश्चयः ॥ १७.२३ ॥

---

(ரிஷப வடிவிலிருந்த) தருமதேவதை கூறியது—

17. 18. புருஷசிரேஷ்டனே! சாஸ்திர வாக்கியங்களின் வேற்றுமைகளால் மதி கலங்கியுள்ள நாங்கள், எவனிடமிருந்து துன்பத்திற்குக் காரணங்கள் தோன்றினவோ அந்தப் புருஷன் யாரென்று தெரிந்துகொள்ளவில்லை.

17. 19. விகல்பம் பேசும் சிலர் தமது நிலைக்குத் தாமே பிரபு என்கின்றனர். பிறர் தெய்வத்தையும். கருமத்தையும், ஸ்வபாவத்தையும் பிரபுவாகக் கூறுகின்றனர்.

17. 20. ஊகிக்கமுடியாததும், இன்னதென்று சுட்டிக் காட்ட முடியாததுமான ஏதோ ஒன்றினின்றும் இங்ஙனம் நிகழ்கின்றதென்று சிலருடைய முடிவு. ராஜரிஷியே! இதில் எது பொருத்தமானதென்பதை உமது புத்தியால் நீரே ஆராய்ந்து கொள்ளும்.

அரசன் கூறியது—

17. 22. தருமம் அறிந்த நீ ரிஷப வடிவந்தாங்கிய தருமதேவதையே. அதருமம் செய்தவனுக்கு ஏற்படும் நிலை அதைக் குறித்துப் பேசுபவனுக்கும் ஏற்படுமாதலால் (நீ தெரிந்திருந்தாலும் அதருமத்தின் காரணத்தைப் பேசாமல்) தருமத்தையே பேசுகின்றாய்.

17. 23. அல்லது தேவமாயையின் போக்கு (அதில் அகப்பட்ட) ஜந்துக்களின் மனதுக்கும் வாக்குக்கும் எட்டாது என்பது நிச்சயம் (எனத் தெரிவிக்கின்றாய் போலும்.)

---

17, 19. **விகல்பவஸனா:**—விகல்பம் பேதம் வஸதே ஆச்சாதயந்தி யே யோகினஸ்தே ஆத்மானமேவ ஆத்மன: ப்ரபும் ஸுகது:க்கப்ரதமாஹு:। யத்வா விகல்பை: குதர்க்கை: வஸனா: ப்ராவ்ருதா நாஸ்திகா:।

17. 22. தீயார் குணங்களுரைப்பதுவும் தீது.

---

17. 18. **यतस्त्व पुरुषर्षभ ।**
17. 19. **आहुरात्मान-मात्मना ।**
17. 22. **यदधर्मकृतं ।** பா. பே.

तपः शौचं दया सत्य-मिति पादाः कृते कृताः ।
अधर्मांशै-स्त्रयो भग्नाः स्मय-सङ्गमदै-स्तव ॥ १७.२४ ॥
इदानीं धर्मपादस्ते सत्यं निर्वर्तयेद्यतः ।
तं जिघृक्षत्यधर्मोऽय-मनृतेनैधितः कलिः ॥ १७.२५ ॥
इयं च भूर्भगवता न्यासितोरुभरा सती ।
श्रीमद्भि-स्तत्पदन्यासैः सर्वतः कृत-कौतुका ।
शोचत्यश्रुकला साध्वी दुर्भगेवोज्झिताधुना ॥ १७.२६ ॥

सूत उवाच—

इति धर्मं महीं चैव सान्त्वयित्वा महारथः ।
निशात-माददे खड्गं कलयेऽधर्महेतवे ॥ १७-२८ ॥
न वर्तितव्यं तदधर्मबन्धो धर्मेण सत्येन च वर्तितव्ये ।
ब्रह्मावर्ते यत्र यजन्ति यज्ञै-र्यज्ञेश्वरं यज्ञवितानविज्ञाः ॥ १७.३३ ॥

कलिरुवाच—

यत्र क्वचन वत्स्यामि सार्वभौम तवाज्ञया ।
लक्षये तत्र तत्रापि त्वामात्तेषु-शरासनम् ॥ १७.३६ ॥
तन्मे धर्मभृतां श्रेष्ठ स्थानं निर्देष्टु-मर्हसि ।
यत्रैव नियतो वत्स्य आतिष्ठं-स्तेऽनुशासनम् ॥ १७.३७ ॥

---

17. 24. தவம், சுத்தம், தயை, ஸத்தியம் என (தருமதேவதையாகிய உனக்கு) கிருத யுகத்தில் பாதங்கள் நான்கு இருந்தன. அதருமப் பகுதிகளாகிய கருவம், பற்று, மதம் ஆகிய மூன்றினாலும் மூன்று பாதங்கள் அழிக்கப்பட்டுவிட்டன.

17. 25. தர்மதேவதையே! இப்போது உனது நாலாவது பாதமாகிய ஸத்தியம் ஒன்றுதான் எஞ்சியிருக்கிறது. அதைக்கொண்டு நீ நடமாடி வருகிறாய். அஸத்தியத்தால் விருத்தி யடைந்துள்ள இந்தக் கலியானவன் அதையும் நாசமாக்க முயலுகின்றான்.

17. 26. பகவானால் தனது பாரங்குறைக்கப் பெற்றும், அழகுவாய்ந்த அவனது அடிவைப்பினால் எங்கும் புளகாங்கிதமடைந்தும் மகிழ்ந்திருந்த ஸாத்வியாகிய இந்த பூமி தேவி (பசு) அவரால் விடப்பட்டு துர்ப்பாக்கியசாலிபோல் இப்போது கண்ணீர்விட்டுக் கொண்டு துக்கிக்கிறாள்.

ஸூதர் கூறியது—

17. 28. இவ்வாறு தருமதேவதையையும் பூமிதேவியையும் ஸமாதானப்படுத்தி விட்டு மஹாரதனான பரீக்ஷித்து அதருமத்துக்குக் காரணமான கலியை நிக்கிரகிக்கும் பொருட்டு கூரிய உடைவாளை எடுத்தான்.

17. 33. வேள்வி முறைகளை அறிந்த பெரியோர்கள் வேள்விகளால் வேள்வி நாயகனை பகவானை ஆராதித்து வாழும் நாடாகிய பிரம்மாவர்த்தம் தருமத்துடனும் ஸத்தியத்துடனும் வாழ்தற்குரிய இடம். ஆகையால் அதருமத்தில் நட்புக்கொண்ட நீ இங்கு வசித்தல் கூடாது.

கலி கூறியது—

17. 36-37. சக்கிரவர்த்தியே! உமது கட்டளைப்படி நான் எங்கு வேண்டுமானாலும் வசிக்கிறேன். ஆனால் (எங்கு சென்றாலும்) அங்கங்கு அம்பு தொடுத்தவில்லை ஏந்திய உம்மைக் காண்கிறேன். தருமரக்ஷக சிரேஷ்டரே! உமது கட்டளைக் கடங்கி எந்த இடத்தில் நான் நிலையாக வசிக்க அனுமதியுண்டோ அந்த இடத்தைக் குறிப்பிட்டருளப் பிரார்த்திக்கிறேன்.

सूत उवाच—

अभ्यर्थित-स्तदा तस्मै स्थानानि कलये ददौ ।
द्यूतं पानं स्त्रियः सूना यत्राधर्म-श्चतुर्विधः ॥ १७.३८ ॥

पुनश्च याचमानाय जातरूप-मदात् प्रभुः ।
ततोऽनृतं मदं कामं रजो वैरं च पंचमम् ॥ १७.३९ ॥

अमूनि पंच स्थानानि ह्यधर्म-प्रभवः कलिः ।
औत्तरेयेण दत्तानि न्यवसत् तन्निदेशकृत् ॥ १७.४० ॥

अथैतानि न सेवेत बुभूषुः पुरुषः क्वचित् ।
विशेषतो धर्मशीलो राजा लोकपति-र्गुरुः ॥ १७.४१ ॥

वृषस्य नष्टां-स्त्रीन् पादान् तपः शौचं दया-मिति ।
प्रतिसन्दध आश्वास्य महीं च समवर्धयत् ॥ १७.४२ ॥

सूत उवाच—

यो वै द्रौण्यस्त्र-विप्लुष्टो न मातुरुदरे मृतः ।
अनुग्रहाद् भगवतः कृष्णस्याद्भुत-कर्मणः ॥ १८.१ ॥

---

ஸூதர் கூறியது—

17. 38. இங்ஙனம் பிரார்த்திக்கப்பட்ட அவர் அப்போது (ஆலோசித்து) சூது, குடி, வியபிசாரம், கொலை என்ற நான்குவிதமான அதருமங்களும் எங்கு உளவோ அவ்விடங்களை அவனுக்கு அளித்தார்.

17. 39. மீண்டும் (ஒரு இடத்தைக் குறிக்கும்படி) வேண்டிய அவனுக்குப் பிரபுவாகிய பரீக்ஷித்துப் பொன்னையும் (இருப்பிடமாக) அளித்தார். அதனால் பொய் (சூது), வெறி (குடி), காமம் (வியபிசாரம்), கலகம் (கொலை) இவற்றுடன் ஐந்தாவதாகப் பகைமையும் (கலிக்கு) அளிக்கப்பட்டதாயிற்று.

17. 40. உத்தரையின் மகனை பரீக்ஷித்தால் அளிக்கப்பட்ட இவ்வைந்து ஸ்தானங்களையும் அதருமத்தைப் பெருக்கும் கலி அவன் கட்டளைக் குட்பட்டுத் தன் வாசஸ்தானங்களாக்கிக்கொண்டான்.

17. 41. ஆகையால் ஆத்மீய வாழ்க்கையை விரும்பும் எந்தப் புருஷனும் இவ்விடங்களை ஒருபோதும் நாடக் கூடாது. முக்கியமாக தருமசீலனை அரசனோ, ஜனசமூகத் தலைவனோ, தருமோபதேசம் செய்யும் குருவோ (இவ்விடங்களை அணுகவே கூடாது.)

17. 42. தருமதேவதை இழந்திருந்த தவம், சுத்தம், தயை என்ற மூன்று பாதங்களையும் கூடும்படி செய்து பூமிதேவிக்கும் ஆறுதலளித்து மீண்டும் புஷ்டியாய் வளரும்படி செய்தார்.

ஸூதர் கூறியது—

18. 1. அற்புதச் செயலுடைய கிருஷ்ண பகவானுடைய அனுக்கிரகத்தால் எவர் அசுவத்தாமாவின் அஸ்திரத்தால் (பொசுக்கிக்) கரைக்கப்பட்டும் தாயின் கர்ப்பத்தில் மரிக்கவில்லையோ;

---

17. 38. அனுசார ப்ரபவோ அதர்ம:। அதர்மஸ்ய ப்ரபு: கலி: ॥

17. 41. ஓ. ஸ்த்ரீ-தன-நாஸ்திக-சரித்ரம் ந ச்ரவணீயம் । —நாரதபக்தி ஸூத்ரம்.

18. 0. ராஜ்ஞஸ்த்வஷ்டாதசே தஸ்ய ப்ரஹ்ம சாபோ நிரூப்யதே ।
ஸ சானுக்ரஹ ஏவாஸ்ய ஜாதோ வைராக்ய மாவஹன் ॥ —ஸ்ரீ.

---

17. 42. आश्वास्य महीं । பா. பே.

ब्रह्मकोपोत्थिताद् यस्तु तक्षकात् प्राण-विप्लवात् ।
न सम्मुमोहोरुभयाद् भगवत्यर्पिताशयः ॥ १८.२ ॥

उत्सृज्य सर्वतः सङ्गं विज्ञाताजित-संस्थितिः ।
वैयासके-र्जहौ शिष्यो गङ्गायां स्वं कलेवरम् ॥ १८-३ ॥

नोत्तमश्लोक-वार्तानां जुषतां तत्कथामृतम् ।
स्यात् सम्भ्रमोऽन्तकालेऽपि स्मरतां तत्पदांबुजम् ॥ १८.४ ॥

नानुद्वेष्टि कलिं सम्राट् सारङ्ग इव सारभुक् ।
कुशलान्याशु सिद्ध्यन्ति नेतराणि कृतानि यत् ॥ १८.७ ॥

ऋषय ऊचुः—

तन्नः परं पुण्य-मसंवृतार्थ-माख्यान-मत्यद्भुत-योगनिष्ठम् ।
आख्या-ह्यनन्ताचरितोपपन्नं पारीक्षितं भागवताभिरामम् ॥ १८.१७ ॥

सूत उवाच—

अहो वयं जन्मभृतोऽद्य हास्म वृद्धानुवृत्त्यापि विलोमजाताः ।
दौष्कुल्य-माधिं विधुनोति शीघ्रं महत्तमाना-मभिधानयोगः ॥ १८.१८ ॥

---

18. 2. பகவானிடம் சித்தத்தை அர்ப்பணம் செய்து எவர் பிராம்மண சாபத்தால் தக்ஷகன் மூலம் ஏற்பட்ட பெரும் பயமாகிய பிராணநாசத்திலும் மனங்கலங்கவில்லையோ;

18. 3. அவர் ஸர்வஸங்க பரித்தியாகம் செய்து, சுகாசாரியரின் சிஷ்யராகி, பகவத் ஸ்வரூபத்தை யுணர்ந்தவராகி, கங்கைக் கரையில் தன் உடலை நீத்தார்.

18. 4. உத்தம சுலோகனை பகவானைப்பற்றியே பேசுபவர்களுக்கும் அவன் கதைகளையே பருகுபவர்களுக்கும் அவன் பாத கமலங்களையே நினைப்பவர்களுக்கும் மரணகாலத்திலும் மதிமயக்கம் உண்டாகாது.

18. 7. தேனீ போன்று ஸாரத்தையே கிரகிக்குங் குணமுள்ள சக்கிரவர்த்தி (கலி யினிடமுள்ள ஒரு குணத்தைப் பார்த்து) கலியைத் தொடர்ந்து பகைக்கவில்லை. ஏனெனில் (கலியில்) புண்ணியங்கள் (எண்ணிய மாத்திரத்திலேயே) விரைவில் பயனளிக் கின்றன, பாவங்கள் அப்படியல்லாமல் செய்யப்பட்ட பின்னரே பயனளிக்கின்றன. (இது கலியிலுள்ள சிறந்த குணம்.)

ரிஷிகள் கூறியது—

18. 17. பாகவதர்களின் மனதுக்கினியதும், பரீக்ஷித்துக்கு உபதேசிக்கப்பட்ட தும், பகவானுடைய லீலைகளின் வர்ணனையுடன் கூடியதும், ஒப்பற்ற புண்ணியம் வாய்ந் ததும், உயர்நல மெய்தும் வழியை மறைவின்றிக் காட்டுவதும், யோகநிஷ்டையை நிரூபிப் பதுமான அந்த அற்புதம் மிகுந்த கதையை எங்களுக்குக் கூறி யருளுங்கள்.

ஸூதர் கூறியது—

18. 18. அந்தோ! நாங்கள் விலோம ஜாதியிற் பிறந்தவரா யிருந்தும் மகான்களைச் சேவித்ததால் பிறவிப்பயனெய்தியவர்களாயினோம். மகான்களுடன் ஏற்படுங் கூட்டுறவு இழிகுலத்தாலேற்படும் மனவருத்தத்தை விரைவில் போக்கிவிடுகிறது.

---

18. 17. ஏதைர்-விசேஷணை: கர்ம-ஜ்ஞான-பக்தி-யோக-ப்ரகாசகத்வம் தர்சிதம் ।

---

18. 4. कुर्वतां तत्कथामृतम् । பா. பே.

अहं हि पृष्टोऽर्यमणो भवद्भि-राचक्ष आत्मावगमोऽत्र यावान् ।
नभः पतन्त्यात्मसमं पतत्त्रिण-स्तथा समं विष्णुगतिं
विपश्चितः ॥ १८.२३ ॥

एकदा धनुरुद्यम्य विचरन् मृगयां वने ।
मृगा-ननुगतः श्रान्तः क्षुधित-स्तृषितो भृशम् ॥ १८.२४ ॥

जलाशय-मचक्षाणः प्रविवेश तमाश्रमम् ।
ददर्श मुनि-मासीनं शान्तं मीलित-लोचनम् ॥ १८.२५ ॥

प्रतिरुद्धेन्द्रिय-प्राण-मनो-बुद्धि-मुपारतम् ।
स्थानत्रयात् परं प्राप्तं ब्रह्म-भूत-मविक्रियम् ॥ १८.२६ ॥

विप्रकीर्ण-जटाच्छन्नं रौरवेणाजिनेन च ।
विशुष्यत्तालु-रुदकं तथाभूत-मयाचत ॥ १८.२७ ॥

अलब्धतृण-भूम्यादि-रसम्प्राप्तार्घ्य-सूनृतः ।
अवज्ञात-मिवात्मानं-मन्यमान-श्चुकोप ह ॥ १८.२८ ॥

18. 23. ஞான சூரியர்களே! தேவரீர்கள் என்னிடம் எதைக் கேட்டீர்களோ அதை நான் அறிந்துள்ள வகையில் கூறுகிறேன். பக்ஷிகள் அவற்றின் சக்திக் கிசைந்த வகையில் ஆகாயத்தில் பறக்கின்றன; அவ்வாறே (புத்திக்கெட்டிய வகையில்) விஷ்ணு லீலைகளை அறிந்தவர்கள் வர்ணிக்கின்றார்கள்.

18. 24. ஒரு சமயம் (பரீக்ஷித்து) வில் தாங்கி வனத்தில் வேட்டை யாடச் செல்லுகையில், மான்களைத் தொடர்ந்தோடிக் களைப்பும் பசியும் தாகமும் மேலிட்டவராய்;

18. 25. நீருள்ள இடத்தைக் காணாமல் அங்கு தோன்றிய ஒரு ஆசிரமத்துள் நுழைந்தார். கண்ணை மூடிச் சாந்தமாக வீற்றிருந்த ஒரு முனிவரைக் கண்டார்.

18. 26-27. இந்திரியம், பிராணன், மனது, புத்தி எல்லாம் ஒடுங்கிச் சாந்தமாகி (ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற) மூன்று நிலைகளுக்கும் அப்பாலிருப்பவரும், செயலற்றுப் பிரம்மநிஷ்டை கூடியவரும், தலையில் ஜடையும் உடலில் (மான்) தோலுமாக அவ்வாறு விளங்கியவரை நோக்கித் தொண்டை உலர்ந்துபோன அரசன் குடிக்க நீர் யாசித்தார்.

18. 28. (உட்காருவதற்கு) புல்லாசனமோ, அல்லது வெறுந்தரையோ, (மரியாதைக்கு) அர்க்கியமோ அல்லது பிரியமான வார்த்தையோ, எதுவும் பெறாமையால், தான் அவமதிக்கப்பட்டதாய் எண்ணிக் கோபமடைந்தார்.

18. 23. ஒ. **யத்** வா ச்ரமாவதி யதா மதி வாப்யசக்த: ஸ்தௌம்யேவ-மேவ கலு **தேடபி ஸதா** ஸ்துவந்த:। வேதாச்-சதுர்முக-முகாச்ச மஹார்ணவாந்த: கோ மஜ்ஜதோ-ரணு-குலாசலயோர்-**விசேஷ**:॥ —ஆளவந்தார்: ஸ்தோத்ர ரத்னம்.

18. 25. **அசக்ஷாண:**—அபச்யன்।

18. 26. **ஸ்தானத்ரயாத்பரம்**—ஒ. ஏகாத்ம-ப்ரத்யயஸாரம் ப்ரபஞ்சோப-**சமம் சாந்தம் சிவ**-மத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே।

18. 27. **ருரு:**—ஒருவகை மான்.

18. 28. **ஸூந்ருதம்**—பிரியவசனம்.

अभूतपूर्वः सहसा क्षुत्तृड्भ्या-मर्दितात्मनः ।
ब्राह्मणं प्रत्यभूद् ब्रह्मन् मत्सरो मन्यु-रेव च ॥ १८.२९ ॥
स तु ब्रह्मर्षे-रंसे गतासु-मुरगं रुषा ।
विनिर्गच्छन् धनुष्कोट्या निधाय पुरमागमत् ॥ १८.३० ॥
एष किं निभृताशेष-करणो मीलितेक्षणः ।
मृषा समाधि-राहोस्वित् किं नु स्यात् क्षत्रबन्धुभिः ॥ १८.३१ ॥
तस्य पुत्रोऽतितेजस्वी विहरन् बालकोऽर्भकैः ।
राज्ञाघं प्रापितं तातं श्रुत्वा तत्रेद-मब्रवीत् ॥ १८.३२ ॥
अहो अधर्मः पालानां पीव्नां बलिभुजामिव ।
स्वामिन्यघं यद् दासानां द्वारपानां शुनामिव ॥ १८.३३ ॥
ब्राह्मणैः क्षत्रबन्धुर्हि द्वारपालो निरूपितः ।
स कथं तद्गृहे द्वाः स्थः सभाण्डं भोक्तुमर्हति ॥ १८.३४ ॥

---

18. 29. பிராம்மணரே! பசியாலும் தாகத்தாலும் பீடிக்கப்பட்டு என்றுமில்லாத படபடப்பை யடைந்திருந்த அவருக்கு அந்த ரிஷியிடம் கோபமும் வெறுப்பும் உண்டாயிற்று.

18. 30-31. கோபாவேசத்தில் வெளிச் செல்லுகையில் அங்கு செத்துக்கிடந்த ஒரு பாம்பை வில்லின் நுனியால் தூக்கிப் பிரம்மரிஷியின் கழுத்தில் போட்டுவிட்டு "இவர் இந்திரியங்களடங்கிக் கண்மூடியவரா அல்லது க்ஷத்திரியப் பதர்களால் ஆகவேண்டுவதென்ன என்று பொய் ஸமாதியிலிருப்பவரா?" என்று எண்ணிக்கொண்டே தனது புரத்துக்குத் திரும்பினர்.

18, 32. அந்த ரிஷியின் புத்திரன் விளையாட்டுப்பிள்ளை யெனினும் பிரம்மதேஜஸ் மிகுந்தவன். மற்ற சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருக்கையில் தன் தந்தைக்கு அரசனால் இழைக்கப்பட்ட பிழையைக் கேட்டு அப்போதே இங்ஙனம் கூறினன்.

18. 33. "பிறர் இட்ட பிண்டத்தை உண்டு கொழுத்த காக்கை (அல்லது நாய்) போன்ற அரசர்களின் அநீதிதான் என்ன? அடிமைகளும் வாசற்காக்கும் நாய்களும் யஜமானருக்கு இழைக்கும் தீமைபோலல்லவா இருக்கிறது?

18. 34. "க்ஷத்திரியப் பதரானவன் நாய்க்கொப்பாகவே யல்லவோ பிராம்மணர்களால் கருதப்படுகின்றனன். வாயிலுடன் நிற்கவேண்டிய நாய் (உள் நுழைந்து) பாத்திரத்திலிருந்து உண்பதற்கு ஏது உரிமை?

---

18. 29. இவர் கலிக்குச் சற்று இரங்கி இடம் கொடுத்ததால் அந்தக் கலி இவரிடமே தனது சேஷ்டையைக் காட்டத் தொடங்கினன் போலும்.

ஒ. மானங் குலங் கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசி வந்திடப் பறந்து போம்.

18. 33. பாலானும்—ராஜ்ஞாம்; பீவ்னும்—புஷ்டானும்;
பலி-புஜாம்—காகானுமிவ சுனுமிவ சேதி।

---

18. 30. तस्य ब्रह्मर्षेरंसे। 18. 34. गृहपालो। भक्तुमर्हति। பா. பே.

कृष्णे गते भगवति शास्त-र्युत्पथगामिनाम् ।
तद्भिन्नसेतू-नद्याहं शास्मि पश्यत मे बलम् ॥ १८.३५ ॥

इत्युक्त्वा रोषताम्राक्षो वयस्यान् ऋषिबालकः ।
कौशिक्याप उपस्पृश्य वाग्वज्रं विससर्ज ह ॥ १८.३६ ॥

इति लङ्घित-मर्यादं तक्षकः सप्तमेऽहनि ।
दङ्क्ष्यति स्म कुलाङ्गारं चोदितो मे ततद्रुहम् ॥ १८.३७ ॥

ततोऽभ्येत्याश्रमं बालो गले सर्पकलेवरम् ।
पितरं वीक्ष्य दुःखार्तो मुक्तकण्ठो रुरोद ह ॥ १८.३८ ॥

स वा आङ्गिरसो ब्रह्मन् श्रुत्वा सुतविलापनम् ।
उन्मील्य शनकै-र्नेत्रे दृष्ट्वा स्वांसे मृतोरगम् ॥ १८.३९ ॥

विसृज्य पुत्रं पप्रच्छ वत्स कस्माद्धि रोदिषि ।
केन वा तेऽपकृत-मित्युक्तः स न्यवेदयत् ॥ १८.४० ॥

निशम्य शप्त-मतदर्हं नरेन्द्रं स ब्राह्मणो नात्मज-मभ्यनन्दत् ।
अहो बतांहो महदद्य ते कृत-मल्पीयसि द्रोह उरुर्दमो धृतः ॥ १८.४१ ॥

---

18. 35. "சாஸ்திர மரியாதையை மீறியவர்களைத் தண்டிக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் பரமபதம் ஏகிவிட்டதால், வரம்பை மீறிய அவர்களை இப்போது நான் தண்டிக்கப் போகிறேன்; என் தவ வலிமையைப் பாருங்கள்."

18. 36. ரிஷிபுத்திரன் தோழர்களிடம் இங்ஙனம் கூறிவிட்டுக் கோபத்தால் கண் சிவந்தவனாய், கௌசிகீ நதியில் ஆசமனம் செய்து சொல்லாகிய வஜ்ராயுதத்தை (சாபத்தை) விடுத்தான்.

18. 37. "இங்ஙனம் என் தந்தைக்குத் துரோகம் செய்தவனும் மரியாதையைக் கெடுத்தவனும் குலத்தை யழிக்கும் நெருப்புப்போன்றவனுமான அவ்வரசனை என்னால் ஏவப்பட்ட (ஸர்ப்ப ராஜன்) தக்ஷகன் இன்றைக்கு ஏழாவது நாள் கடிக்கப்போகிறான்."

18. 38. பின் அச்சிறுவன் (விரைவில்) ஆசிரமம் வந்து கழுத்தில் இடப்பட்ட பாம்புடனிருந்த தந்தையைப் பார்த்து துக்கம் பொங்கிவர வாய்விட்டு அலறினான்.

18. 39-40. பிராம்மணரே! அப்போதுதான் ஆங்கிரஸ குலத்தவரான அந்த ரிஷி தன் புத்திரனுடைய கூக்குரலைக் கேட்டு மெதுவாகக் கண்களைத் திறந்து தன் கழுத்தில் செத்த பாம்பைக் கண்டு, அதை எடுத்தெறிந்து விட்டு "குழந்தாய்! ஏன் அழுகிறாய்?" என்று புத்திரனைக் கேட்டார். யாரால் தீங்கிழைக்கப்பட்டதென்று மீண்டுங் கேட்கப்பட்டபோது அவன் நிகழ்ந்ததைத் தெரிவித்தான்.

18. 41. சாபத்துக்குத் தகுதியற்ற அரசர் சபிக்கப்பட்டதைக் கேட்டு அந்தப் பிரம்மரிஷி தன் புத்திரன் செய்கையைக் கொண்டாடவில்லை. "ஐயோ! அறியாதவனே! நீ செய்தது பெரும் பிழை. இது வருந்தத்தக்கது. சிறிய பிழை செய்தவனுக்குப் பெரிய தண்டனை விதிக்கப்பட்டது.

न वै नृभि-र्नरदेवं पराख्यं सम्मातु-मर्हस्यविपक्व-बुद्धे ।
यत्तेजसा दुर्विषहेण गुप्ता विन्दन्ति भद्राण्यकुतोभयाः प्रजाः ॥ १८.४२ ॥

तदद्य नः पापमुपैत्यनन्वयं यन्नष्टनाथस्य वसोर्विलुम्पकात् ।
परस्परं घ्नन्ति शपन्ति वृञ्जते पशून् स्त्रियोऽर्थान् पुरु-
दस्यवो जनाः ॥ १८.४४ ॥

धर्मपालो नरपतिः स तु सम्राड् बृहच्छ्रवाः ।
साक्षान्महाभागवतो राजर्षि-र्हयमेधराट् ।
क्षुत्तृट्श्रमयुतो दीनो नैवास्मच्छाप-मर्हति ॥ १८.४६ ॥

अपापेषु स्वभृत्येषु बालेनापक्वबुद्धिना ।
पापं कृतं तद्भगवान् सर्वात्मा क्षन्तुमर्हति ॥ १८.४७ ॥

तिरस्कृता विप्रलब्धाः शप्ता क्षिप्ता हता अपि ।
नास्य तत् प्रतिकुर्वन्ति तद्भक्ताः प्रभवोऽपि हि ॥ १८.४८ ॥

---

18. 42. "பக்குவப்படாத புத்தியுடையவனே! ஈசுவராம்சம் பொருந்தியவராய்க் கூறப்படும் அரசரைச் சாதாரண மனிதர்களுக்குச் சமமாக நீ எண்ணுதல் கூடாது. ஏனெனில் அரசருடைய எதிரற்ற பராக்கிரமத்தால் இரக்ஷிக்கப்படுவதாலல்லவா எங்கும் பயமின்றிப் பிரஜைகள் நன்மைகளை யடைகிறார்கள்.

18. 44. "நாதனில்லாதவர்களுடைய சொத்துக்களை யபகரிப்பவர்களால் செய்யப் படும் அந்தப் பாவம் சம்பந்தமில்லாத நம்மை வந்து சாரும். கொள்ளைக் கூட்டங்கள் மிகுந்து ஜனங்கள் ஒருவரை யொருவர் கொல்வர், சபிப்பர், பசுக்களையும், பெண்டிரையும் பொருளையும் அபகரிப்பர்.

18. 46. "அவ்வரசர் தருமத்தைக் காத்துச் சக்ரவர்த்தியாகிப் பெரும் புகழ்பெற்றவர்; மஹா பாகவதராய் விளங்குபவர்; ராஜரிஷி; அசுவமேதம் செய்தவர்; பசியாலுந் தாகத்தாலும் களைத்து உதவி நாடிய அவர் ஒருக்காலும் நமது சாபத்துக் குரியவரல்லர்.

18. 47. "ஒரு பாவமுமறியாத தனது அடியார்க்குப் பக்குவமில்லாத புத்தி யுடைய பாலகனால் செய்யப்பட்ட பாவத்தைக் ஸர்வேசுவரனாகிய பகவான் மன்னித் தருளவேண்டும்.

18. 48. "பகவத் பக்தர்கள் தாம் நிந்திக்கப்படினும், வஞ்சிக்கப்படினும், அவமதிக்கப்படினும், அடிக்கப்படினும் அதற்குப் பிரதிசெய்ய வல்லவர்களாயினும் அதைத் திருப்பிச் செய்வதில்லை."

---

18. 42. **பராக்யம்**—பரோ விஷ்ணுரிதி ஆக்யா க்யாதிர்-யஸ்ய தம் நரதேவம்। **ஸம் மாதும்**—(ந்ருபி:) ஸமம் த்ரஷ்டும்।

18. 44. **வஸோ:**—தனஸ்ய। **வ்ருஞ்ஜதே** - அபஹரந்தி। **புருதஸ்யவ:**—சோரபஹுலா:

18. 48. ஒ. சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்பரறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந்தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்.

**திரஸ்க்ருதா:**—நிந்திதா:, **விப்ரலப்தா:**—வஞ்சிதா:,
**க்ஷிப்தா:**—அவஜ்ஞாதா:, **ஹதா:**—தாடிதா:।

---

18. 42. **सम्मातु-मर्हस्यविपक्वबुद्धिः ।**
18. 44. **नष्टस्य नाथस्य ।** பா. பே.

इति पुत्रकृताघेन सोऽनुतप्तो महामुनिः।
स्वयं विप्रकृतो राज्ञा नैवाघं तदचिन्तयत् ॥ १८.४९ ॥

प्रायशः साधवो लोके परैर्द्वन्द्वेषु योजिताः।
न व्यथन्ति न हृष्यन्ति यत आत्माऽगुणाश्रयः ॥ १८.५० ॥

महीपतिस्त्वथ तत्कर्म गर्ह्यं विचिन्तयन्नात्मकृतं सुदुर्मनाः।
अहो मया नीच-मनार्यवत् कृतं निरागसि ब्रह्मणि गूढतेजसि ॥ १९.१ ॥

स चिन्तयन्नित्थ-मथाशृणोद् यथा मुनेः सुतोक्तो निर्ऋति-स्तक्षकाख्यः
स साधु मेने न चिरेण तक्षकानलं प्रसक्तस्य विरक्ति-कारणम् ॥ १९.४ ॥

अथो विहायेम-ममुं च लोकं विमर्शितौ हेयतया पुरस्तात्।
कृष्णाङ्घ्रिसेवा-मधिमन्यमान उपाविशत् प्राय-ममर्त्य-नद्याम् ॥ १९.५ ॥

18. 49. இங்ஙனம் புத்திரன் செய்த பிழையால் வருத்தமடைந்த அம் மகா முனிவர் தான் அரசனால் அவமதிக்கப்பட்டிருந்தபோதிலும் அப் பிழையைப்பற்றி எண்ணவே இல்லை.

18. 50. ஆத்மா குணத்தைச் சாராததால், பெருவாகச் சாதுக்கள் உலகில் பிறரால் இன்ப துன்பங்களில் புகுத்தப்படினும், இன்புறுவதுமில்லை, துன்புறுவதுமில்லை.

19. 1-4. அரசன் (தனது அரண்மனை சென்ற) பிறகு தான் செய்துவிட்ட இழிவான செயலைக் குறித்து எண்ணி எண்ணி வருத்தமடைந்து, "ஐயோ! மறைந்த தேஜஸுடையவரும் பாவமற்றவருமாகிய பிராம்மணருக்குச் சீரழிந்த நீசனைப்போல் என்னால் (பிழை) செய்யப்பட்டது" என்றிவ்வாறு எண்ணிக்கொண்டிருக்கையில், முனிகுமாரனால் கூறப்பட்ட சாபம் தக்ஷகன் வடிவில் தன்னை எங்ஙனம் வந்து அடையப்போகிறதென்பதைக் கேள்வியுற்று அதுவும் நல்லது தான் என்று கருதினார். "சீக்கிரத்தில் தக்ஷகனுடைய விஷஜ்வாலை உலகப்பற்றில் ஆழ்ந்துவிட்ட எனக்கு விரக்திக்குக் காரணமாகப் போகிறது" என்றார்.

19. 5. பின்னர் இவ்வுலகமும் அவ்வுலகமும் வெறுக்கத்தக்கவை என அவரால் ஏற்கெனவே விமர்சனம் செய்யப்பட்டிருந்தமையால் (அவற்றில் ஆசையை) விட்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரணசேவையையே அனைத்தினும் மேலாக உணர்ந்து தெய்வீக நதியாகிய கங்கைக் கரையில் பிராயோபவேசத்தைச் செய்ய நிச்சயித்தார்.

18. 49. **விப்ரக்ருத**:—அபக்ருத:, **அகம்**:—அபராதம்।

18. 50. **த்வந்த்வேஷு**:—ஸுகது:க்காதிஷு।

ஒ. எவன் மானத்திலும் அவமானத்திலும் ஸமபாவனையுடையவனோ, மித்திரனிடமும் சத்துருவிடமும் ஸமமானவனோ ஆசைவாய்ப்பட்டு ஆரம்பிக்கும் எல்லாக் கர்மங்களையும் விட்டவனோ அவன் குணாதீதன் என்று சொல்லப்படுகிறான். —கீ. 14. 25.

19. 4. **நிர்ருதி**:—ம்ருத்யு:।

19. 5. அரசன் என்ற அபிமானம் தான், தான்செய்த தவறுதலுக்குக் காரணம் என்றறிந்து அரசை மகனிடம் ஒப்புவித்துவிட்டு வைராக்கியம் பூண்டு கங்கைக்கரைக்குச் சென்றார்.

ஏழை ஒருவன் ஒரு ராஜாவிடம் சென்று பசுமாட்டை யாசித்தான். அத்துடன் அதைக் காப்பாற்றும் கவலையையும் பெற்றான். மற்றொருவன் அரண்மனையிலிருந்து தினம் பால்கிடைக்கும்படி ஏற்பாடு செய்துகொண்டான். அவனுக்குக் கவலையில்லை. பகவத்ஸேவை பாலைப் பெறுவதுபோல் சுகமானது. மற்ற சுகஸாதனங்கள் கவலையைத்தருவன. பரீக்ஷித்து பகவத்ஸேவை ஒன்றிலேயே மனம் வைத்தார்.

**ப்ராயோபவேசம்**—ப்ராய-மனசனம் தத்ஸங்கல்பேன உபாவிசத்। யத்வா ப்ரக்ருஷ்டமயனம் சரணம் யதா பவதி ததா ॥

19. 2. पुनरेव सद्यः　　19. 3. बलमूर्जकोशं । मेऽस्तु ।

19. 4. चिन्तयन्निदमथा ।　　பா. பே.

इति व्यवच्छिद्य स पाण्डवेयः प्रायोपवेशं प्रति विष्णुपद्याम् ।
दध्यौ मुकुन्दाङ्घ्रि-मनन्यभावो मुनिव्रतो मुक्त-समस्त-सङ्गः ॥ १९.७ ॥

तत्रोपजग्मु-र्भुवनं पुनाना महानुभावा मुनयः सशिष्याः ।
प्रायेण तीर्थाभिगमापदेशैः स्वयं हि तीर्थानि पुनन्ति सन्तः ॥ १९.८ ॥

इति स राजा व्यवसाय-युक्तः प्राचीनमूलेषु कुशेषु धीरः ।
उदङ्मुखो दक्षिणकूल आस्ते समुद्रपत्न्याः स्वसुतन्यस्तभारः ॥ १९.१७ ॥

महर्षयो वै समुपागता ये प्रशस्य साध्वित्यनुमोदमानाः ।
ऊचुः प्रजानुग्रह-शील-सारा यदुत्तमश्लोक-गुणाभिरूपम् ॥ १९.१९ ॥

राजोवाच—

सभागताः सर्वत एव सर्वे वेदा यथा मूर्तिधरास्त्रिपृष्ठे ।
नेहाथवामुत्र च कश्चनार्थं ऋते परानुग्रह-मात्मशीलम् ॥ १९.२३ ॥

---

19. 7. பாண்டவேயன் (பரீக்ஷித்து) விஷ்ணு பாதத்தினின்று பெருகும் கங்கைக் கரையில், பிராயோபவேசத்தைக் குறித்து இவ்விதம் நிச்சயித்து வேறு எண்ணமில்லா மல் முனிவிரதமுடையவராகவும் எல்லாப் பற்றுக்களையுந் துறந்தவராகவும் ஸ்ரீ கிருஷ்ண னுடைய திருவடிகளைத் தியானித்தார்.

19. 8. (அப்போது அவரைக் காணும் பொருட்டு) அங்கு உலகைப் புனிதமாக்கு கின்ற மகான்களான முனிவர்கள் சிஷ்யர்களுடன்கூட வந்து சேர்ந்தனர். தீர்த்தயாத் திரை என்ற வியாஜத்தால் பெரும்பாலும் தாங்களே யன்றோ தீர்த்தங்களையும் சாதுக் கள் புனிதமாக்குகின்றனர்.

19. 17. ஏற்கெனவே கூறிய வண்ணம் தீர்மானத்துடன் கூடிய தீரராகிய அரசர் தன் புத்திரனிடம் அரசாங்கச் சுமையை ஒப்புவித்துவிட்டு, ஸமுத்திர பத்தினியாகிய கங்கையின் தென்கரை யடைந்து கிழக்கு நுனியாய்ப் பரப்பிய தர்ப்பையின்மேல் வடக்கு நோக்கியவராய் அமர்ந்தார்.

19. 19. எம்மகரிஷிகள் அங்கு கூடியிருந்தனரோ அவர்கள் மக்களுக்கு அருளைச் சொரியும் இயற்கையுடையவர்களாதலால் அரசருடைய தீர்மானம் நன்மை பயப்பதெனச் சந்தோஷித்தும் சிலாகித்தும் பகவத்குணானுபவத்துக்குப் பொருத்தமான வார்த்தை களைப் பேசினர்.

அரசர் கூறியது—

19. 23. பல திசைகளிலிருந்தும் இங்கு வந்து கூடியுள்ள நீங்களெல்லோரும் மூவுலகுக்கும் மேல் ஸத்தியலோகத்தில் வேதங்களே உருவெடுத்துக் கூடினாற்போல் விளங்குகிறீர்கள். பிறர்க்கு இயற்கையாகவே அருள் புரிவதைத் தவிர உங்களுக்கு இம் மையிலோ மறுமையிலோ வேறு நோக்கமில்லை.

---

19. 7. **விஷ்ணுபத்யாம்—கங்காயாம்** |
உடல் வியாதிக்குச் சிகிச்சை செய்ய வைத்தியசாலைக்குப் போவதுபோல் உள்ளத்தின் நோய்க்குச் சிகிச்சைச் செய்துகொள்ளப் பரீக்ஷித்து கங்கைக்கரைக்குச் சென்றார்.
ஓ. (பேஷஜம் ஜாஹ்னவீதோயம் வைத்யோ நாராயணः ஸதா)
எப்போதும் மருந்தாவது கங்காதீர்த்தம் வைத்தியராகியவர் நாராயணர்.

19. 8. ஒருவன் மனதில் வைராக்கியமேற்படும்போது குருமார்கள் தாமே அவனிருக்கு மிடந்தேடி வருவர்.

19. 17. மூலமந்த: (கூலமந்த:) அந்தச்சாக்ரேऽபி | தஸ்மால்லக்ஷணயா ப்ராகக்ரேஷ் வித்யேவ வ்யாக்யாதம் |

19. 19. யாகம், தானம், தவம் என்று பல உபாயங்களை ரிஷிகள் கூற ஆரம்பித்ததைக் கேட்டுப் பரீக்ஷித்துக் கலங்கினபோது சுகர் வந்தார்.

19. 23. ஓ. எந்த மனிதன் ஆன்மாவிலேயே இன்புற்றவனாக, ஆன்மாவிலேயே திருப்தி யடைந்தவனாக, ஆன்மாவிலேயே ஸந்தோஷத்தைப் பெற்றவனாக உள்ளவனோ அவனுக்குச் செய்யவேண்டிய கர்மம் ஒன்றுமில்லை. —கீ. 3. 17.

---

19. 17. **प्राचीन कूलेषु ।** 19 23. **त्रिपिष्टे ।** பா. பே.

**ततश्च वः पृच्छ्यमिमं विपृच्छे विश्रभ्य विप्रा इति कृत्यतायाम् ।**
**सर्वात्मना म्रियमाणैश्च कृत्यं शुद्धं च तत्रामृशताभियुक्ताः ॥ १९.२४ ॥**

**सूत उवाच—**

**तत्राभवद्-भगवान् व्यासपुत्रो यदृच्छया गामटमानोऽनपेक्षः ।**
**अलक्ष्यलिङ्गो निजलाभतुष्टो वृतश्च बालैरवधूतवेषः ॥ १९.२५ ॥**

**तं द्व्यष्टवर्षं सुकुमार-पाद-करोरु-बाह्वंस-कपोल-गात्रम् ।**
**चार्वायताक्षोन्नस-तुल्य-कर्ण-सुभ्र्वाननं कंबुसुजातकण्ठम् ॥ १९.२६ ॥**

**निगूढजत्रुं पृथु-तुङ्ग-वक्षस-मावर्त-नाभिं वलिवल्गूदरं च ।**
**दिगंबरं वक्त्र-विकीर्ण-केशं प्रलंब-बाहुं स्वमरोत्तमाभम् ॥ १९.२७ ॥**

**श्यामं सदापीच्यवयोऽङ्गलक्ष्म्या स्त्रीणां मनोज्ञं रुचिर-स्मितेन ।**
**प्रत्युत्थिता-स्ते मुनयः स्वासनेभ्यस्तल्लक्षणज्ञा अपि गूढवर्चसम् ॥ १९.२८ ॥**

---

19. 24. ஆகையால், விப்ரர்களே, இனி நான் செய்தற்குரியதைக் குறித்து உங்களிடம் பூர்ண விசுவாசத்துடன் இதைக் கேட்கிறேன். எப்போதும் முழு மனத்துடன் மனிதன் செய்யவேண்டிய பரிசுத்தமான செயலும் முக்கியமாக மரணவாயிலிருப்பவன் செய்யவேண்டியதும் எதுவோ அதைப் பெரியோர்களாகிய நீங்கள் தீர்மானம் செய்து அருள்வீர்களாக.

ஸூதர் கூறியது—

19. 25. அப்போது அங்கு பகவான் வியாசபுத்திரர் தோன்றினர். அவர் இச்சைப்படி பூமியில் சஞ்சாரம் செய்பவர். விருப்பு வெறுப்பற்றவர். (வர்ணாசிரம) அடையாளங்களேதுமிலாதவர். ஆத்மானந்தம் பொங்கிவழிபவர். (அங்கு வந்தபோது) அவதூத வடிவினராயிருந்த அவரை ஸ்திரீகளும் பாலர்களும் தொடர்ந்து வந்தனர்.

19. 26. ஈரெட்டு வயதினராகவும், மிக அழகிய பாதங்களும் கைகளும் துடைகளும் தோள்களும் கன்னங்களும் உடைய மேனியினராகவும், அழகியதும் பரந்ததுமான கண்களும் எடுப்பான மூக்கும் சமமான காதுகளும் சிறந்த புருவங்களும் உடைய முகத்தினராகவும், சங்குபோன்ற கழுத்தினராகவும் ;

19. 27. கழுத்தின் கீழெலும்புகள் மறைந்தும், மார்பு விரிந்தும் உயர்ந்தும், நாபி சுழன்றும், வயிறு மடிந்தும், அழகாகவும் விளங்கத் திசையே ஆடையாகக் கொண்டு முகத்தில் மயிர்ச் சுருள்கள் தவழ, நீண்ட புஜங்களுடன் தேவசிரேஷ்டனைப் போன்றவராகவும் ;

19. 28. சியாமள வர்ணராகவும், உடலின் யௌவன வனப்பினாலும் சிரித்த முகத்தாலும் ஸ்திரீகள் மனதுக்கினியவராகவும் பிரம்மதேஜஸ்ஸை மறைத்துக்கொண்டவராகவும் தோன்றிய அவரைக் கண்டு அவருடைய லக்ஷணங்களை யுணர்ந்தவர்களான அம் முனிவர்கள் அவரவராசனத்தினின்று எழுந்து நின்று வரவேற்றனர்.

---

19. 24. **விச்ரப்ய**—விச்வாஸம் க்ருத்வா ।
19. 25. **தத்ர**—தேஷு யோக-யாக-தபோ-தானாதிபிர்-விவதமானேஷு ஸத்ஸு ।
**அவதூத:**—அவஜ்ஞயா ஜனைஸ்த்யக்த: ।
19. 27. **திகம்பரம்**—திறந்த உடலில் வெட்கம் குழந்தைகளுக்கில்லை. வெட்கம் தோன்றுதலே பாவத்தின் அறிகுறி.
19. 28. **அபீச்யம்**—அத்யந்த உத்தமம் ।

---

19. 28. **सदापीनवयो । रुचिरस्मयेन ।** பா. பே.

स विष्णुरातोऽतिथय आगताय तस्मै सपर्यां शिरसाऽऽजहार।
ततो निवृत्ता ह्यबुधाः स्त्रियोऽर्भका महासने
सोपविवेश पूजितः ॥ १९.२९ ॥

प्रशान्त-मासीन-मकुण्ठ-मेधसं मुनिं नृपो भागवतोऽभ्युपेत्य।
प्रणम्य मूर्ध्नावहितः कृतांजलि-र्नत्वा गिरा सूनृतयान्वपृच्छत् ॥ १९.३१ ॥

अपि मे भगवान् प्रीतः कृष्णः पाण्डुसुतप्रियः।
पैतृष्वसेय-प्रीत्यर्थं तद्गोत्रस्यात्त-बान्धवः ॥ १९.३५ ॥

अन्यथा तेऽव्यक्तगते-र्दर्शनं नः कथं नृणाम्।
नितरां म्रियमाणानां संसिद्धस्य वनीयसः ॥ १९.३६ ॥

अतः पृच्छामि संसिद्धिं योगिनां परमं गुरुम्।
पुरुषस्येह यत्कार्यं म्रियमाणस्य सर्वथा ॥ १९.३७ ॥
यच्छ्रोतव्य-मतो जप्यं यत्कर्तव्यं नृभिः प्रभो
स्मर्तव्यं भजनीयं वा ब्रूहि यद्वा विपर्ययम् ॥ १९.३८ ॥

---

19. 29. விஷ்ணுராதர் அங்ஙனம் எழுந்தருளிய அதிதிக்குச் சிரம் வணங்கி மரியாதை செய்தார். அதைக்கண்டு (அவரைத் தொடர்ந்து வந்த) அறிவிலிகளும் ஸ்திரீகளும் குழந்தைகளும் பின்னடைந்தனர். பூஜிக்கப்பெற்ற அவர் சிறந்த ஆசனத்தில் அமர்ந்தார்.

19. 31. பாகவதரான அரசர் பரமசாந்தராக விற்றிருக்கும் மகா மேதாவியான அம் முனிவரை யணுகித் தலைவணங்கிக் கைகளைக் கூப்பிக்கொண்டு நமஸ்கரித்து அடக்கத்துடன் இனிய சொற்களால் (பின்வருமாறு) கேட்கலானார்.

19. 35. பாண்டுமக்களுக்குப் பிரியரான கிருஷ்ணபகவான் என்னிடமும் பிரீதி செய்கிறார் என்பது நிச்சயம். அத்தைமக்களிடம் கொண்ட அன்பால் அவர்கள் குலத் துதித்த என்னிடமும் அதே உறவு முறைக்குப் பொருத்தமானதைச் செய்திருக்கிறார்.

19. 36. பகவத்கிருபை இல்லாவிட்டால், பரம சித்த புருஷரும் வனவாசிகளை விரும்புபவரும் காணற்கரிய போக்குடையவருமான தேவரீருடைய தரிசனம் எங்களைப் போன்ற மனிதர்கட்கு, அதிலும் மரிக்குந்தருவாயிலுள்ளவர்கட்கு எங்ஙனம் கிட்டும்?

19. 37. ஆகவே யோகிகளின் பரமகுருவாகிய தேவரீரை உயர்ந்த சித்தியைப் பற்றிக் கேட்கின்றேன். எப்போதும் மரணத்தை நோக்கிச் செல்லும் மனிதனுக்குச் செய்தற்குரியது எது?

19. 38. பிரபுவே! மேலும் மனிதர்க்கு எது கேட்கத்தக்கதோ, எது ஜபிக்கத்தக்கதோ, எது செய்யத்தக்கதோ, எது நினைக்கத்தக்கதோ, எது பஜிக்கத்தக்கதோ அல்லது எது எது தகாததோ (அவற்றைக் கூறியருளல் வேண்டும்).

---

19. 29. **ஸபர்யாமாஜஹார**—ஆத்மநிவேதனம் க்ருதவான்।
ஒ. **குண**: பூஜாஸ்தானம் **குணிஷு** ந ச லிங்கம் ந ச வய:।
19. 36. **வனீயஸ**:—வனமஸ்யாஸ்தீதி வனீ, வனவான் வனவாஸீ ப்ரக்ருத-ரிஷிஸங்கா பேக்ஷயா **திசயேன** வனீ இதி வனீயான்ஸ் தஸ்ய வனீயஸ:।

---

19. 29. **विष्णुरातो मुनये।** 19. 36. **वरीयसः** பா. பே.

नूनं भगवतो ब्रह्मन् गृहेषु गृहमेधिनाम् ।
न लक्ष्यते ह्यवस्थान-मपि गोदोहनं क्वचित् ॥ १९.३९ ॥

**सूत उवाच—**

एवमाभाषितः पृष्टः स राज्ञा श्लक्ष्णया गिरा ।
प्रत्यभाषत धर्मज्ञो भगवान् बादरायणिः ॥ १९.४० ॥

**इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां संहितायां पारमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीवब्रह्मविद्यायां प्रथमः स्कन्धः समाप्तः ॥**

---

19. 39. பிரம்மஸ்வரூபரே! கிருஹஸ்தர்கள் வீட்டில் தங்களுடைய இருப்பு காணப்படுவதேயில்லை. ஒருவேளை காணப்படினும் அது பால் கறக்கும் போதளவே யாகும்.

ஸூதர் கூறியது—

19. 40. இவ்விதம் மதுரமான மொழிகளால் கேட்கப்பட்டு ஸம்பாஷணையின் வசப்பட்டவரும் தருமசூக்ஷ்ம மறிந்தவருமான பகவான் பாதராயணி பதில் சொல்லத் தொடங்கினர்.

**இங்ஙனம் நான்காவது இதழாகிய பரீக்ஷித்தின்
பிராயோபவேசக் கதை முற்றும்**

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணாயிரம் சுலோகங்களடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்மவித்தை யெனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மஹா புராணத்தில் முதல் ஸ்கந்தம் முற்றும்.

# ॥ द्वितीय : स्कन्ध : ॥

## परतत्त्व-निर्णयः ॥ ५ ॥

श्रीशुक उवाच—

वरीयानेष ते प्रश्नः कृतो लोकहितं नृप ।
आत्मवित्-सम्मतः पुंसां श्रोतव्यादिषु यः परः ॥ १. १॥

श्रोतव्यादीनि राजेन्द्र नृणां सन्ति सहस्रशः ।
अपश्यता-मात्मतत्त्वं गृहेषु गृहमेधिनाम् ॥ १.२ ॥

प्रायेण मुनयो राजन् निवृत्ता विधिषेधतः ।
नैर्गुण्यस्था रमन्ते स्म गुणानुकथने हरेः ॥ १.७ ॥

इदं भागवतं नाम पुराणं ब्रह्मसम्मितम् ।
अधीतवान् द्वापरादौ पितुर्द्वैपायना-दहम् ॥ १.८ ॥

---

# இரண்டாவது ஸ்கந்தம்

## 5. பரதத்துவ நிர்ணயம்

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 1. அரசே! மனிதர்கள் கேட்கத்தக்கவை முதலியவற்றுள் எது மேலானதோ அதைப்பற்றிய உமது கேள்வி மிகச் சிறந்ததாகவும், உலகிற்கு நன்மை பயப்பதாகவும், ஆத்மஞானிகளால் கொண்டாடத்தக்கதாகவும் உளது.

1. 2. ராஜேந்திரா! ஆத்ம தத்துவத்தைக் காணாது கிருஹத்தில் வாழும் குடும்பிகளான மக்களுக்குக் கேட்கத்தக்கவை முதலியன ஆயிரக்கணக்காக இருக்கின்றன.

1. 7. முனிவர்களோ பெரும்பாலும் விதிவிலக்குகளினின்று நீங்கியவர்களாய் நிர்க்குணப் பிரம்மத்திடம் நிலைத்தவர்களா யிருப்பினும் ஹரியின் குணங்களைப் பேசுவதொன்றிலேயே மகிழ்கின்றனர்.

1. 8. இந்த பாகவத புராணம் வேதத்துக்குச் சமமானது. (இந்த யுகம் ஆரம்பிப்பதற்கு) முன் துவாபரத்தில் எனது பிதாவாகிய துவைபாயனரிடம் இதை நான் அத்தியயனம் செய்தேன்.

---

இரண்டாவது ஸ்கந்தம் முதல் அத்தியாயத்தில் பகவானுடைய ஸ்தூல ரூபதாரணை சொல்லப்படுகிறது.

1. 1. **வரீயான்**—வர, வரதர, வரதம, வரீயஸ்.

1. 2. **க்ருஹமேதினும்**—தத்கதபஞ்சஸூனுபராணும் । மேததிர்ஹி ஸார்த்த: ।

1. 7. **விதிநிஷேதத:**—விதிநிஷேதாப்யாம் நிவ்ருத்தா: । ஸ்ம ப்ரஸித்தம் ।

ஒ. 'நிஸ்த்ரைகுண்யே பதி விசரதே கோ **விதி:** கோ நிஷேத:' என்றால் விதிநிஷேதமில்லை யென்பதில்லை. விதியாவது 'லோகஸங்க்ரஹத்திற்காக ஸதாசாரத்தைக் கைக்கொள்ள வேண்டும்.' நிஷேதமாவது 'ந **புத்திபேதம்** ஜனயேத்' என்றபடி அஜ்ஞானிகளிடம் புத்தி மாறாட்டத்தை உண்டாக்கக் கூடாது என்று பாஸ்கரராயர் த்ரிபுரோபநிஷத் பாஷ்யத்தில் கூறுகிறார்.

---

1. 1. **लोकहितो ।**

तदहं तेऽभिधास्यामि महापौरुषिको भवान्।
यस्य श्रद्दधतामाशु स्यान्मुकुन्दे मतिः सती ॥ १.१० ॥

किं प्रमत्तस्य बहुभिः परोक्षै-र्हायनैरिह।
वरं मुहूर्तं विदितं घटते श्रेयसे यतः ॥ १.१२ ॥

खट्वाङ्गो नाम राजर्षि-र्ज्ञात्वेयत्तामिहायुषः।
मुहूर्तात् सर्व-मुत्सृज्य गतवानभयं हरिम् ॥ १.१३ ॥

तवाप्येतर्हि कौरव्य सप्ताहं जीविताविधिः।
उपकल्पय तत्सर्वं तावद्यत् सांपरायिकम् ॥ १.१४ ॥

---

1. 10. நீர் புருஷோத்தமருடைய கருணைக்குப் பாத்திரமாகியவர். உமக்கு அதை (பாகவதத்தை) அளிக்கிறேன். அதில் விசுவாஸமுள்ளவர்களுக்குச் சீக்கிரத்தில் முகுந்தனிடத்தில் சீரிய சித்தவிருத்தி ஏற்படும்.

1. 12. (ஞானவாழ்க்கையில்) ஊக்கமில்லாதவனுக்குப் பகவத் தரிசனத்துக்குப் புறம்பான பல ஆண்டுகளால்தான் என்ன பயன்? சிரேயசுக்காக எதனுல் முயற்சிப் பானே அப்படிப்பட்ட ஒரு முகூர்த்தமே (நீண்ட ஆயுளினும்) சிறந்ததாய்க் கருதப்படும்.

1. 13. கட்வாங்கன் என்று பிரசித்திபெற்ற ராஜரிஷி தனது ஆயுளின் முடிவு காலத்தை யறிந்ததும், ஒரு முகூர்த்தத்தில் ஸர்வஸங்கபரித்தியாகம் செய்து ஹரியைச் சரணடைந்து பயமற்ற நிலையை யெய்தியவரானர்.

1. 14, கௌரவ குலத்தரசே! உமக்கோ ஆயுளின் எல்லை இன்னும் ஏழு நாள் இருக்கிறது. அதற்குள் எது பரலோகத்துக்குப் பயன்படுமோ அதையெல்லாம் ஸம்பாதித்துக்கொள்ளும்.

---

1. 12. **பரோக்ஷை:**—அலக்ஷிதை:, **ஹாயனை:**—வர்ஷை:| **கடேத**—யத்னம் குர்யாத்|

1. 13. தேவர் ரக்ஷியில் யுத்தம் செய்த கட்வாங்கனுக்குத் தேவர்கள் வரமளித்தனர். கட்வாங்கன் 'என் ஆயுளைக் கூறுங்கள்' என்றான். அவர்கள் 'ஒரு முகூர்த்தம்' என்றனர். உடனே தேவர்கள் கொடுத்த விமானத்தில் பூலோகம் வந்து ஹரியைச் சரணடைந்தான். (தேவலோகம் ரஜோகுணம் மிகுந்தது. கர்மபூமியான பூலோகம் முக்தி சாதனத்திற்கு அதினும் சிறந்தது.) முடியுமா என்று பரீக்ஷித்து சந்தேகப்படப்போகிறீரே என்று கட்வாங்கன் கதையை சுகர் ஞாபகப்படுத்தினர்.

**ஒ. அப்தார்த்**தேன ஹரிம் ப்ரஸன்னமகரோ-**தௌத்தா**னபா**தி: சிசு:**, ஸப்தாஹேன ந்ருப: **பரீக்ஷிதப**லா யாமார்த்தத: பிங்கலா| கட்வாங்கோ **கடி**கா-**த்**வயேன நவதி-ப்ராயோபி தந்நவ்யதே தம் காருண்ய-நிதிம் ப்ரபத்ய சரணம் சேஷாயுஷா தோஷயே ||

—குருவாயூர் செல்லப்பரம்பு.

1. 14, **ஸாம்பராயிகம்**—பார-லௌகிகம் ஸாதனம் ஸம்பாதய|
உமக்கு ஏழுநாள் நிச்சயமாக இருப்பது அதிர்ஷ்டம்.

---

1. 12. **यतते श्रेयसे।** பா. பே.

अन्तकाले तु पुरुष आगते गत-साध्वसः ।
छिन्द्या-दसङ्ग-शस्त्रेण स्पृहां देहेऽनु ये च तम् ॥ १.१५ ॥

गृहात् प्रव्रजितो धीरः पुण्यतीर्थ-जलाप्लुतः ।
शुचौ विविक्त आसीनो विधिवत् कल्पितासने ॥ १.१६ ॥

अभ्यसेन्मनसा शुद्धं त्रिवृद्ब्रह्माक्षरं परम् ।
मनो यच्छे-ज्जितश्वासो ब्रह्मबीज-मविस्मरन् ॥ १.१७ ॥

नियच्छे-द्विषयेभ्योऽक्षान्मनसा बुद्धिसारथिः ।
मनः कर्मभिराक्षिप्तं शुभार्थे धारयेद्धिया ॥ १.१८ ॥

---

1. 15. புருஷன் முடிவுகாலம் எய்தியபோது படபடப்பற்றவனாய், உடலிலும் உடலின் வழிவந்த உறவிலும் பற்றை அஸங்கம் எனும் சஸ்திரத்தால் சேதிக்கவேண்டும்.

1. 16. வீட்டிலிருந்து வெளியேறித் தீரனாகிய புருஷன் புண்ணிய தீர்த்தங்களில் நீராடிப் பரிசுத்தமானதும் தனிமையானதுமான இடத்தில் முறைப்படி ஏற்படுத்திக் கொண்ட ஆசனத்தி லமர்ந்து;

1. 17. பரமபவித்திரமானதும் மூன்று மாத்திரைகளுடன் கூடினதுமான ஓங்கார மந்திரத்தை மானஸீகமாக ஜபம் செய்யவேண்டும். பிரணவத்தை மறவாமல் பிராணாயாமம் செய்து மனத்தை வசப்படுத்தவேண்டும்.

1. 18. புத்தியைச் சாரதியாகக் கொண்டு (கடிவாளம் போன்ற) மனத்தால் (குதிரைகள்போன்ற) இந்திரியங்களை வெளிவிஷயங்களினின்று இழுத்துப் பிடித்து அந்தர்முகமாகச் செய்யவேண்டும். கருமவாசனைகளிலீர்க்கப்பட்ட மனதை (மீண்டும் மீண்டும்) புத்தியால் வசப்படுத்தி பகவானுடைய மங்கள ரூபத்தில் நிலைபெறச் செய்ய வேண்டும்.

---

1. 15. **கதஸாத்வஸ:**—ம்ருத்யுபயசூன்ய: ।

ஒ. அச்வத்தமேனம் ஸுவிரூடமூல-மஸங்க-சஸ்த்ரேண த்ருடேன ச்சித்வா ।—கீ. 15. 3.

1. 16. வீட்டிலிருந்தால் மீண்டும் பற்று வளருமென்று வெளியேறி. ஒ அதிகத் தாழ்வில்லாததும் தர்ப்பையின்மேல் தோலும் வஸ்திரமும் விரிக்கப் பெற்றதும் ஆகிய ஆசனத்தை ஏற்படுத்திக்கொண்டு அதிலமர்ந்து மனதை ஒருமுனைப்படுத்தி மனதின் செயல்களையும் இந்திரியச் செயல்களையும் அடக்கிச் சித்த சுத்திக்காக யோகத்தை அப்பியசிக்கவேண்டும்.
—கீ. 6. 11—12.

1. 17, இங்கு பிராணாயாமம் கூறப்படுகிறது.

1. 18. இங்கு பிரத்யாஹாரம் கூறப்படுகிறது. ஒ. நெல்லைக் குத்துகையில் அப்போதைக்கப்போது குத்துவதை நிறுத்திவிட்டு உமி போயிற்ரு என்று பார்ப்பதுபோல் மனதின் எண்ணங்களைச் சோதிக்கவேண்டும். —ரா. கி.

**அக்ஷான்**—இந்த்ரியாணி; **சுபார்த்தே**—பகவத்ரூபே ।

---

1. 15. देहानुयायिनीम् ।
1. 17. ब्रह्मबीज-मनुस्मरन् । பா. பே.

तत्रैकावयवं ध्याये-दव्युच्छिन्नेन चेतसा ।
मनो निर्विषयं युक्त्वा ततः किंचन न स्मरेत्
पदं तत्परमं विष्णो-र्मनो यत्र प्रसीदति ॥ १.१९ ॥

राजोवाच—

यथा सन्धार्यते ब्रह्मन् धारणा यत्र सम्मता ।
यादृशी वा हरेदाशु पुरुषस्य मनोमलम् ॥ १.२२ ॥

श्रीशुक उवाच—

जितासनो जितश्वासो जितसङ्गो जितेन्द्रियः ।
स्थूले भगवतो रूपे मनः सन्धारयेद्धिया ॥ १.२३ ॥

विशेष-स्तस्य देहोऽयं स्थविष्ठश्च स्थवीयसाम् ।
यत्रेदं दृश्यते विश्वं भूतं भव्यं भवच्च सत् ॥ १.२४ ॥

---

1. 19. நழுவாத சித்தத்துடன் அந்த திவ்யரூபத்தின் ஒவ்வொரு அவயவமாக தியானம் செய்யவேண்டும். இங்ஙனம் மனத்தை விஷய வாசனையற்றதாக்கிப் பின்னர் ஒரு விஷயத்தையும் நாம் எண்ணக்கூடாது. மனது எந்நிலையில் ஆனந்தபூர்த்தி யெய்தி அவ்வாறு அடங்குகிறதோ அதுவே எங்கும் நிறைந்த பரமாத்மாவாகிய விஷ்ணுவின் பரமபதம்.

அரசர் கூறியது—

1. 22. பிரம்மஸ்வரூபரே! விரைவில் புருஷனுடைய மனத்தின் அழுக்கைப் போக்கக்கூடிய தாரணை எந்த இடத்தில் செய்வது சிறந்தது? எவ்வண்ணம் செய்யவேண்டும்? அதன் வகைகள் எவை?

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 23. இந்திரியங்களை ஜயித்து வெளி விஷயங்களில் பற்றை யொழித்துச் சுவாசத்தை யொழுங்குபடுத்தி ஸ்திரமான ஆசனத்திலிருந்துகொண்டு பகவானுடைய ஸ்தூல ரூபத்தில் புத்தியினால் வசப்பட்ட மனதை தாரணை செய்யவேண்டும்.

1. 24. சென்றதும் இருப்பதும் வரப்போவதுமான இந்தக் காரியப் பிரபஞ்சம் எதில் காணப்படுகிறதோ அது ஸ்தூலத்திலும் ஸ்தூலமான பகவானுடைய விராட்சரீரம்.

---

1. 19. இங்கு தியானமும் தாரணையும் ஸமாதியுங் கூறப்படுகின்றன.

'ஆச்ரய விசேஷே ஸாமான்யதச்சித்த-ஸ்திரீகரணம் தாரணா, அவயவ விபாவனயா தத் தார்ட்யம் த்யானமிதி பேத:। ஸமாதிமாஹ நிர்விஷயம் மன: யுக்த்வா ஸமாதாய ஸ்திரீபூதே மனஸி ஸ்புரத் பரமானந்த-மாத்ராகாரம் க்ருத்வேத்யர்த்த:। ப்ரஸீததி உபசாம்யதி।

ஒ. தைரியத்துடன் கூடிய புத்தியினால் மெல்ல மெல்ல சாந்தியைக் கூடவேண்டும். மனதை ஆத்மாவில் நிலைபெறச் செய்து, பின்னர் யாதொன்றையும் நினைக்கக் கூடாது. —கீ. 6. 25.

ஒ. மார்வமென்பதோர் கோவிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தை நாட்டி, ஆர்வமென்பதோர் பூவிடவல்லார்க்கு அரவதண்டத்திலுய்யலுமாமே. —பெரியாழ்வார்.

ஒ. எல்லா இந்திரிய வாயில்களையும் அடைத்து, மனத்தை இருதயத்தில் நிலை நிறுத்தி, பிராணனைத் தலை உச்சியில் வைத்து, யோகதாரணையில் நிலைபெற்றவனாய் ஓம் எனும் பிரம்ம வாசகமாகிய ஓரெழுத்தை உச்சரித்துக்கொண்டு என்னை முறைப்படி சிந்தித்தவனாய் உடலை விட்டு எவன் செல்லுகின்றானோ அவன் உயர்ந்த கதியை அடைகிறான். —கீ. 8—12. 13.

1. 24. ஸத்—கார்யமாத்ரம்।

अण्डकोशे शरीरेऽस्मिन् सप्तावरण-संयुते ।
वैराजः पुरुषो योऽसौ भगवान् धारणाश्रयः ॥ १.२५ ॥

पातालमेतस्य हि पादमूलं पठन्ति पार्ष्णि-प्रपदे रसातलम् ।
महातलं विश्वसृजोऽथगुल्फौ तलातलं वै पुरुषस्य जङ्घे ॥ १.२६ ॥

द्वे जानुनी सुतलं विश्वमूर्ते-रूरुद्वयं वितलं चातलं च ।
महीतलं तज्जघनं महीपते नभस्तलं नाभिसरो गृणन्ति ॥ १.२७ ॥

उरःस्थलं ज्योतिरनीकमस्य ग्रीवा महर्वदनं वै जनोऽस्य ।
तपो रराटीं विदुरादिपुंसः सत्यं तु शीर्षाणि सहस्रशीर्ष्णः ॥ १.२८ ॥

नद्योऽस्य नाड्योऽथ तनूरुहाणि महीरुहा विश्वतनोर्नृपेन्द्र ।
अनन्तवीर्यः श्वसितं मातरिश्वा गतिर्वयः कर्मगुणप्रवाहः ॥ १.३३ ॥

इयानसावीश्वर-विग्रहस्य यः सन्निवेशः कथितो मया ते ।
सन्धार्यतेऽस्मिन् वपुषि स्थविष्ठे मनः स्वबुद्ध्या
न यतोऽस्ति किञ्चित् ॥ १.३८ ॥

---

1. 25. ஏழு ஆவரணங்களுடன் கூடிய பிரம்மாண்ட கோசமான இந்த சரீரத்தில் விராட்புருஷ ரூபியான பகவான் எவரோ அவரே தாரணைக்கு ஆசிரயமானவர்.

1. 26. விசுவத்தைச் சிருஷ்டித்த புருஷராகிய இவருடைய உள்ளங்காலாகப் பாதாளத்தையும், காலின் முன் பின் பக்கமாக ரஸாதலத்தையும், குதிகாலாக மஹாதலத்தையும், கணுக்காலாகத் தலாதலத்தையும் (அறிந்தோர்) வர்ணிக்கின்றனர்.

1. 27. மஹிபதியே! விசுவமூர்த்தியாகிய அவருக்கு முழங்காலாகச் சுதலத்தையும், துடைகளாக விதல அதலங்களையும், பிருஷ்டமாகப் பூதலத்தையும், உந்தி மடுவாக ஆகாயத்தையும் கூறுகின்றனர்,

1. 28. ஆதிபுருஷராகிய இவருக்கு மார்பாக ஒளி மண்டலமாகிய சுவர்க்கத்தையும், கழுத்தாக மஹர்லோகத்தையும், முகமாக ஜனலோகத்தையும், நெற்றியாகத் தபோலோகத்தையும், அறிகின்றனர். ஆயிரந்தலை படைத்த இவருடைய தலைகளே ஸத்தியலோகம்.

1. 33. ராஜேந்திரா! விசுவமே உடலாகிய இவருக்கு நதிகள் நாடிகள், மரங்கள், உரோமங்கள்; அளவற்ற விரியமுடைய இவரது மூச்சுக்காற்று வாயுதேவன், நடையே காலம், செயலே குணப்பிரவாகம்.

1. 38. எந்த ஈசுவர வடிவத்தின் விசேஷமான அமைப்பு இங்ஙனமென்று உமக்கு என்னால் வர்ணிக்கப்பட்டதோ, எதற்குப் புறம்பாக ஒரு சிறிதும் இல்லையோ அந்த ஸ்தூலவடிவில் தமது புத்தியால் (யோகிகள்) மனதை நிலைநிறுத்துகின்றனர்.

---

1. 25. வஸ்துதஸ்து விராட் ஜீவநியந்தா **பக**வானேவ விஷய:। **ஸப்தாவரண ஸம்யுதே**—பஞ்சபூதங்களும் அஹங்காரமும் மஹத்தத்துவமுமாக ஏழு ஆவரணங்கள்.

ஒ. விராஜோ **அதி**பூருஷ:। ஸப்தாஸ்யாஸன் பரிதய:। —புருஷஸூக்தம்.

1. 26. விராட் **தே**ஹாஜ்ஜீவ ததந்தர்யாமிணு - ம**பேத** - மாரோப்யோபாஸனம் கர்த்தவ்யம்।

**மஹீருஹா:**—வ்ருக்ஷா:।

1. 33. **குணப்ரவாஹ:**—ப்ராணிநும் ஸம்ஸார: கர்ம தஸ்ய க்ரீடா।

1. 38. **ஸந்நிவேச:—**அவயவ-ஸம்ஸ்தானம்।

---

1. 28. **तपो ललाटं** பா. பே.

केचित्स्वदेहान्त-र्हृदयावकाशे प्रादेशमात्रं पुरुषं वसन्तम् ।
चतुर्भुजं कंज-रथांङ्ग-शङ्ख-गदाधरं धारणया स्मरन्ति ॥ २.८ ॥

प्रसन्न-वक्त्रं नलिनायतेक्षणं कदंब-किंजल्क-पिशङ्ग-वाससम् ।
लसन्महारत्न-हिरण्मयाङ्गदं स्फुरन्महारत्न-किरीट-कुण्डलम् ॥ २.९ ॥

उन्निद्र-हृत्पंकज-कर्णिकालये योगेश्वरास्थापित-पादपल्लवम् ।
श्री लक्ष्मणं कौस्तुभरत्नकन्धर-मम्लान-लक्ष्म्या वनमालयाऽऽञ्चितम् ॥ २.१० ॥

विभूषितं मेखलयांगुलीयकै-र्महाधनै-र्नूपुर-कंकणादिभिः ।
स्निग्धामलाकुंचित-नीलकुन्तलै-र्विरोचमानानन-हास-पेशलम् ॥ २.११ ॥

अदीन-लीला-हसितेक्षणोल्लसद्-भ्रूभंग-संसूचित-भूर्यनुग्रहम् ।
ईक्षेत चिन्तामय-मेन-मीश्वरं यावन्मनो धारणयावतिष्ठते ॥ २.१२ ॥

---

2. 8. சிலர் தமது உடலினுள் இருதயாகாசத்தில் வசிப்பவராய் ஒரு சாண் அளவுள்ளவராய், நான்கு புஜங்களுடன் தாமரைப்பூ சக்கரம் சங்கு கதை இவைகளைத் தாங்கிநிற்கும் வடிவினரான புருஷனை தாரணை செய்து தியானிக்கின்றனர்.

2. 9. பிரசன்னமுகம், தாமரை யிதழ்போல் பரந்த கண்கள், கதம்பப்பூவின் தாது போன்ற மஞ்சட்பட்டாடை, பிரகாசிக்கும் சிறந்த ரத்னங்களிழைத்த பொன்வளைகள், ஜ்வலிக்கும் சிறந்த ரத்னங்களுடன் கூடின கிரீட குண்டலங்கள் இவற்றுடன் விளங்குபவரும்;

2. 10. மலர்ந்த இருதயத் தாமரையின் கர்ணிகைபாகிற ஆலயத்தில் யோகேசுவரர்களால் ஸ்தாபிக்கப்பட்ட துளிர்போன்று மெதுவான பாதங்கள், ஸ்ரீவத்ஸம், கழுத்தில் கௌஸ்துப மணி, வாடாத சோபையுடைய வனமாலை இவற்றுடன் கூடியவரும்;

2. 11. மதிப்புமிக்க அரைநாணும், மோதிரங்களும், பாதசரங்களும் கங்கணங்களும் அணிந்தவரும், பளபளப்பாகக் குறைவின்றி கறுத்துச் சுருண்ட மயிரிடை விளங்கும் சிரித்த முகத்தின் அழகுடையவரும்;

2. 12. கம்பீரமான விளையாட்டுச் சிரிப்புடன் நோக்கும்போது ஏற்படும் புருவ அசைப்பினால் குறிக்கப்படும் அளவுகடந்த கருணையுடையவரும் நினைவுக்குகந்த வடிவினருமாகிய இந்த ஈசுவரனை மனது தாரணையால் ஸ்திரமாகும் வரை (அகக்கண்ணால்) பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும்.

---

2. 8. **ப்ராதேச:—**தர்ஜன்யங்குஷ்டயோர் விஸ்தார:। சக்ரம்-மனஸ்தத்வம்; சங்கம்-சப்தவடிவான உலகம்; கதை-புத்திதத்வம்.

ஒ. **கங்கையார்** கழலுங் **கதிர்** செம்பொற்கலையுங் கடகமும் மகுடமும் குழையும் சங்கொடு **திகிரி** வெங்கதை தண் பூந்தாமரை மலரிவை தாங்கும் அங்கையோர் நான்கும் **திருமரு** மார்பும் **அருள்பொழி** கமலலோசனமும் **திங்கள்** வான்முகமும் முறுவலுமாகச் சிலர் புயல் வண்ணனை நினைவார்.
—ஆரியப்பப் புலவர்.

2. 10. **உந்நித்ரம்—**விகஸிதம்; **கௌஸ்துபம்**—ஜீவதத்துவம்; **ஸ்ரீவத்ஸம்—**ஸ்ரீதேவியின் அடையாளமாயிருக்கும் மரு; **வனமாலை—**பஞ்சபூதவடிவான உலகம்.

2. 11. **பேசலம்**—ஸுந்தரம்।

2. 12. **அதீனம்—**உதாரம்.

ஒ. **ஆநீலச்லக்ஷ்ணகேசம்** ஜ்வலித மகரஸத் குண்டலம் மந்தஹாஸ-ஸ்யந்**தார்த்ர**ம் கௌஸ்து**ப-ஸ்ரீ-**பரிகத-வநமாலோருஹாராபிராமம்। ஸ்ரீவத்ஸாங்கம் ஸுபாஹும் ம்ருதுலஸ**துதர**ம் காஞ்சனச்சாய சேலம் சாருஸ்நிக்தோருமம்போருஹ-லலிதபதம் பாவயேஹம் பவந்தம்॥
—நாராயணீயம் 95. 8.

---

2. 8. **स्वदेहेऽन्तर्हृदोऽवकाशे ।** 2. 9. **महाहारहिरण्मय ।**
2. 11. **स्निग्धामलैः ।**

பா. பே.

एकैकशोऽङ्गानि धियानुभावयेत् पादादि यावद्धसितं गदाभृतः ।
जितं जितं स्थान-मपोह्य धारयेत् परं परं शुद्ध्यति
धीर्यथा यथा ॥ २.१३ ॥

यावन्न जायेत परावरेऽस्मिन् विश्वेश्वरे द्रष्टरि भक्तियोगः ।
तावत् स्थवीयः पुरुषस्य रूपं क्रियावसाने प्रयतः स्मरेत ॥ २.१४ ॥

न ह्यतोऽन्यः शिवः पन्था विशतः संसृताविह ।
वासुदेवे भगवति भक्तियोगो यतो भवेत् ॥ २.३३ ॥

तस्मात् सर्वात्मना राजन् हरिः सर्वत्र सर्वदा ।
श्रोतव्यः कीर्तितव्यश्च स्मर्तव्यो भगवान् नृणाम् ॥ २.३६ ॥

अकामः सर्वकामो वा मोक्षकाम उदारधीः ।
तीव्रेण भक्तियोगेन यजेत पुरुषं परम् ॥ ३.१० ॥

---

2. 13. கதாதரனுடைய பாதத்திலிருந்து தொடங்கி ஒவ்வொரு அவயவத்தையும் (முகமண்டலத்தில் விளங்கும்) புன்முறுவல் வரை புத்தி சக்தியால் இடைவிடாது தியானிக்கவேண்டும். (ஒவ்வொரு அவயவத்தின் தியானத்தால்) புத்தியானது (சலனமற்று) எவ்வெப்போது தெளிவுறுகிறதோ அவ்வப்போது அங்ஙனம் ஜயிக்கப்பட்ட ஸ்தானத்தைக் கடந்து மேலே உள்ள அவயவத்தில் தியானத்தைச் செலுத்தவேண்டும்.

2. 14, உயர்ந்ததும் தாழ்ந்ததும் (ஸகுணமும் நிர்க்குணமும்) அனைத்துலகும் அவரேயாகவும் (பார்க்கப்படுபவராயல்லாமல்) அனைத்தையும் பார்ப்பவராயுள்ளவருமான இவரிடத்தில் பக்தியோகமானது எதுவரை உண்டாகவில்லையோ அதுவரை இந்த ஸ்தூலமான (விராட்) புருஷரூபத்தை (அவசியமான நித்திய நைமித்திக) கருமங்களை முடித்தபின் ஒழிவு நேரமெல்லாம் விடாமுயற்சியுடன் சிந்தித்து வரவேண்டும்.

2, 33. எதனால் வாசுதேவரிடத்தில் பக்தியோகம் உண்டாகுமோ அதைக்காட்டிலும் மங்களகரமான மார்க்கம் இங்கு ஸம்ஸாரத்தில் உழல்பவர்க்கு வேறு இல்லை.

2. 36. ஆகையால், அரசே! முழுமனத்துடன் எல்லாவிடத்திலும் எல்லாக் காலத்திலும் பகவான் ஹரியே மனிதர்க்குக் கேட்டற்கும் கீர்த்தனம் செய்தற்கும் நினைத்தற்கும் உரியவர்.

3. 10. சிறந்த புத்தியுடையவன் எதையும் விரும்பாதவனாயினும், எல்லாவற்றையும் விரும்புபவனாயினும், அல்லது மோக்ஷத்தை விரும்புபவனாயினும், தீவிரமான பக்தியோகத்தால் பரமபுருஷன் ஒருவரையே பூஜிக்கவேண்டும்.

---

2. 14. ஒ. எதுவரை விசிறிவேண்டும்? காற்று ஆரம்பமாகும்வரை. —ரா. கி.

2. 33. ஒ. நான்ய: பந்தா வித்யதேऽயனாய। சிவ:—ஸுகரூபோ நிர்விக்னச்ச।

ஒ. இது நேரில் கண்டனுபவிக்கக் கூடியது, தருமத்தினின்று பிறழாதது, அனுஷ்டிப்பதற்கு மிக எளியது, என்றும் அழியாதது. —கீ. 9. 2.

2. 36. ஒ. ஸர்வதா ஸர்வபாவேன நிச்சிந்தைர்-பகவானேவ பஜனீய:। —நாரதபக்தி ஸூத்ரம் (68)

3. 10. அகாம: ஏகாந்த பக்த:।

ஒ. 'யோऽகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாம:' —ப்ரு. உப. 44. 6.

ஒ. தன்னை யறிந்தால் தலைவன்மேல் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே. —தாயுமானவர்.

இது மோக்ஷகாமனுக்குமட்டும் சொன்னதல்ல.

राजोवाच—

भूय एव विवित्सामि भगवानात्म-मायया ।
यथेदं सृजते विश्वं दुर्विभाव्य-मधीश्वरैः ॥ ४.६ ॥

शुक उवाच—

तपस्विनो दानपरा यशस्विनो मनस्विनो मन्त्रविदः सुमङ्गलाः ।
क्षेमं न विन्दन्ति विना यदर्पणं तस्मै सुभद्रश्रवसे नमो नमः ॥ ४-१७ ॥

प्रचोदिता येन पुरा सरस्वती वितन्वताजस्य सतीं स्मृतिं हृदि ।
स्वलक्षणा प्रादुरभूत् किलास्यतः स मे ऋषीणा-मृषभः प्रसीदताम् ॥ ४.२२ ॥

एतदेवात्मभू राजन् नारदाय विपृच्छते ।
वेदगर्भोऽभ्यधात् साक्षात् यदाह हरिरात्मनः ॥ ४.२५ ॥

---

அரசர் கூறியது—

4. 6. பகவான் தனது மாயையினால் எவ்வாறு இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறார் என்பதை அறிய விரும்புகிறேன். அது பிரம்மாதி தேவர்களாலும் அறிதற்கரிதாயுளது.

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 17. தவஞ்செய்வோரும், தானம் செய்வோரும், கீர்த்திமான்களும், மனதையடக்கிய யோகிகளும், மந்திரமறிந்தவர்களும், மங்களமான ஆசார சீலர்களும் எவருக்கு (அவரவர் கருமங்களை) அர்ப்பணம் செய்யாமல் க்ஷேமத்தை யடையமாட்டார்களோ அந்தப் பரம மங்களமான கீர்த்தியுள்ள பகவானுக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

4. 22. (இந்தக் கல்பத்தின்) ஆதியில் சிருஷ்டிக்க விரும்புகின்ற பிரம்மதேவனுடைய இருதயத்தில் (முன் கல்பத்தின்) நினைவு எழும்பொருட்டு ஞானதேவதையான ஸரஸ்வதி எவரால் பிரேரணை செய்யப்பட்டுத் தனது லக்ஷணமான அங்கங்களுடன் வேத வடிவில் பிரம்மதேவருடைய முகத்தினின்று தோன்றினளோ, அந்த ரிஷிகளுக்கு ரிஷியான பகவான் (எனது இருதயத்திலும் ஆவிர்ப்பவித்து) எனக்கு அருள் புரியட்டும்.

4. 25. அரசே! ஹரியானவர் தனக்கு எதை நேரில் உபதேசித்தாரோ அதை வேதகர்ப்பரும் ஸ்வயம்புவுமான பிரம்மா தன்னை நாடி வினவிய நாரதருக்கு உபதேசித்தார்.

---

4. 17. பக்தியில்லாதவர்களின் எல்லாக் கர்மங்களும் வீண் என்பது கூறப்படுகிறது. **மனஸ்வின:**—யோகின:. **ஸுமங்கலா:**—ஸதாசாரா:। ஒ. 'யத் கரோஷி யதச்னஸி'
—கீ. 9. 27.

4. 22. **ஸதீம்**—ஸ்ருஷ்டி விஷயாம்.

---

4. 25. **सर्वं यदाह हरिरीश्वरः ॥** பா. பே.

नारद उवाच—

यद्रूपं यदधिष्ठानं यतः सृष्टमिदं प्रभो ।
यत्संस्थं यत्परं यच्च तत् तत्त्वं वद तत्त्वतः ॥ ५.२ ॥

ब्रह्मोवाच—

तस्मै नमो भगवते वासुदेवाय धीमहि ।
यन्मायया दुर्जयया मां ब्रुवन्ति जगद्गुरुम् ॥ ५.१२ ॥

विलज्जमानया यस्य स्थातु-मीक्षापथेऽमुया ।
विमोहिता विकत्थन्ते ममाहमिति दुर्धियः ॥ ५.१३ ॥

ब्रह्मोवाच—

नारायणपरा वेदा देवा नारायणांगजाः ।
नारायणपरा लोका नारायणपरा मखाः ॥ ५.१५ ॥

नारायणपरो योगो नारायणपरं तपः ।
नारायणपरं ज्ञानं नारायणपरा गतिः ॥ ५.१६ ॥

तस्यापि द्रष्टुरीशस्य कूटस्थस्याखिलात्मनः ।
सृज्यं सृजामि सृष्टोऽह-मीक्षयैवाभिचोदितः ॥ ५.१७ ॥

---

(பிரம்மாவை யணுகி) நாரதர் கூறியது—

5. 2. பிரபுவே! இந்தப் பிரபஞ்சத்தின் லக்ஷணமென்ன? இதற்கு ஆதாரமென்ன? எங்ஙனம் சிருஷ்டிக்கப்பட்டது? முடிவு எங்ஙனம்? எதை ஆசிரயத்திருக்கிறது? இதன் தத்துவமென்ன? இவற்றை உள்ளவாறு கூறியருளப் பிரார்த்திக்கிறேன்.

பிரம்மா கூறியது—

5. 12. எவருடைய வெல்லுதற்கரிய மாயையால் (ஜனங்கள்) என்னை ஜகத்குரு என்று கூறுகிறார்களோ அந்த வாசுதேவரான பகவானை தியானிப்போம்.

5. 13. அவருடைய கண்பார்வை செல்லும் மார்க்கத்தில் நிற்பதற்கும் எந்த மாயை வெட்கப்படுகிறாளோ அவளால் மயக்கப்பட்டு புத்திகெட்டவர்களே நான் என்றும் என்னுடையது என்றும் பிதற்றுகின்றனர்.

5. 15-16. வேதங்கள் நாராயணனைப்பற்றியவை; தேவர்கள் நாராயணனுடைய அவயவங்களில் தோன்றியவர்கள்; உலகங்கள் நாராயணனை ஆசிரயித்தவை; யக்ஞங்கள் நாராயணனைக் குறித்தே; யோகம் நாராயணனை யடையவே; தவம் நாராயணனுக்கே அர்ப்பணம்; ஞானத்தின் நோக்கம் நாராயணனே; எல்லாப் பாதைகளும் நாராயணனையே நாடிச் செல்லுகின்றன.

5. 17, அவரால் சிருஷ்டிக்கப்பட்ட நான் அவருடைய கடாக்ஷத்தால் ஏவப்பட்டு ஸர்வஸாக்ஷியாயினும் ஈசுவரனாகவும், கூடஸ்தனாயினும் ஸர்வஸ்வரூபியாகவும் உள்ள அவருடைய இச்சைப்படி சிருஷ்டிக்கத் தகுந்ததைச் சிருஷ்டிக்கிறேன்.

---

5. 15. ஒ. நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:। —நாராயண ஸூக்தம்.

5. 17. ஒ. சூரியகாந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரியகாந்தம் சூழ்பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதியில் சுடுமாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. —திருமந்திரம்.

सर्वं पुरुष एवेदं भूतं भव्यं भवच्च यत् ।
तेनेद-मावृतं विश्वं वितस्ति-मधितिष्ठति ॥ ६.१५ ॥

स्वधिष्ण्यं प्रतपन् प्राणो बहिश्च प्रतपत्यसौ ।
एवं विराजं प्रतपन्-स्तपत्यन्तर्बहिः पुमान् ॥ ६.१६ ॥

सोऽमृतस्याभयस्येशो मर्त्य-मन्नं यदत्यगात् ।
महिमैष ततो ब्रह्मन् पुरुषस्य दुरत्ययः ॥ ६.१७ ॥

पादेषु सर्वभूतानि पुंसः स्थितिपदो विदुः ।
अमृतं क्षेम-मभयं त्रिमूर्ध्नोऽधायि मूर्धसु ॥ ६.१८ ॥

यदास्य नाभ्यान्नलिनादहमासं महात्मनः ।
नाविदं यज्ञसंभारान् पुरुषावयवादृते ॥ ६.२२ ॥

---

6. 15. இந்த சிருஷ்டி எல்லாம் விராட்புருஷ ரூபியான பகவானே. சென்றதும் நிகழ்வதும், வரப்போவதும் எதுவோ அதுவும் அவரே. அவராலேயே இது எல்லாம் மறைக்கப்பட்டிருக்கிறது. அவர் பத்து விரல் பிரமாணத்தைக் கடந்து நிற்கிறார்.

6. 16. பிராணரூபியான சூரியன் எவ்வாறு தனது மண்டலத்தைப் பிரகாசிப்பித்துக்கொண்டு வெளியிலும் பிரகாசிக்கின்றாரோ அவ்வாறே புருஷன் எனப்படும் பகவானும் விராட்ரூபத்தைப் பிரகாசிப்பித்துக்கொண்டு பிரம்மாண்டத்துக்கு உள்ளிலும் வெளியிலும் பிரகாசிக்கிறார்.

6. 17. பிரம்மத்திடம் நிலைபெற்ற நாரதரே! அழிவுடையதும் மனிதரால் போக்கியமாய்க் கருதப்படுவதுமான அனைத்தையும் கடந்து நிற்கும் தன்மையால் அவர் அமிருதத்துக்கும் அபயத்துக்கும் ஈசுவரர் எனப்படுவர். ஆகையால் அந்தப் புருஷருடைய மகிமை அளவிடற்கரியது.

6. 18. (அனைத்துக்கும்) உறைவிடமாகிய புருஷனுடைய பாதங்களில், உண்டாய உலகங்களெல்லாம் (ஒடுங்கும்) என (ஞானிகள்) அறிகின்றனர். கீழுள்ள மூவுலகுக்கும் மேலே தலைபோலுள்ளது மஹர்லோகம். அதற்கும் தலைபோல் மேலாக விளங்கும் இடத்தில் உளது அமிருதமும் க்ஷேமமும் அபயமும்.

6. 22. இந்த மகாபுருஷனுடைய நாபி கமலத்தினின்று நான் உண்டானபோது அந்தப் புருஷனுடைய அவயங்களுக்குப் புறம்பாக அவரை யாராதித்தற்குறிய பொருள்கள் எவற்றையும் காணவில்லை.

---

6. 15. ஒ. புருஷஸூக்தம். அவர் பத்து விரல்களால் எண்ணப்படும் எண்ணிக்கைக்கு அப்பாற்பட்டவர்.

6. 16. ஒ. யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி:। க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத। —கீ. 13. 33.

6. 17. **மர்த்யம்**—மரண **தர்**மகம் **அன்னம்** கர்மபலம் யஸ்மாத் **அத்யகாத் அதிக்ராந்த**வான்। ப்ரபஞ்சாத்மகஸ்யாபி அம்ருதேசத்வம் இத்யேஷ மஹிமா **துரத்யய** அபார:।

6. 18. **பாதேஷு**—அம்ச பூதேஷு லோகேஷு। த்ரிபாத் அம்ருதம் நித்யஸுகம் **திவி ஊர்த்வ** லோகேஷு। த்ரிலோக்யாம் நச்வரமேவ ஸுகம்।

---

6. 16. **प्रातपन् प्राणो ।**

6. 18. **त्रिमूर्ध्नोवापि ।** பா. பே.

गतयो मतयश्चैव प्रायश्चित्तं समर्पणम् ।
पुरुषावयवैरेते संभारास्संभृता मया ॥ ६.२६ ॥
इति संभृतसंभारः पुरुषावयवै-रहम् ।
तमेव पुरुषं यज्ञं तेनैवायज-मीश्वरम् ॥ ६.२७ ॥
ततस्ते भ्रातर इमे प्रजानां पतयो नव ।
अयजन् व्यक्तमव्यक्तं पुरुषं सुसमाहिताः ॥ ६.२८ ॥
सृजामि तन्नियुक्तोऽहं हरो हरति तद्वशः ।
विश्वं पुरुषरूपेण परिपाति त्रिशक्तिधृक् ॥ ६.३१ ॥
इति तेऽभिहितं तात यथेदमनुपृच्छसि ।
नान्यद्भगवतः किंचिद्भाव्यं सदसदात्मकम् ॥ ६.३२ ॥

---

6. 26. அனுஷ்டான முறைகள், தியான முறைகள் (குறைகளுக்குப் பரிகாரமான) பிராயச்சித்த முறைகள், அர்ப்பண முறைகள், அவைகளுக்குரிய பொருள்கள் எல்லாம் அம் மகாபுருஷனுடைய அவயவங்களைக் கொண்டே என்னால் கல்பிக்கப்பட்டன.

6. 27. இங்ஙனம் புருஷனுடைய அவயவங்களைக்கொண்டே வேள்விப் பொருள்களைத் திட்டம் செய்துகொண்ட நான் அவற்றால் யக்ஞ புருஷரும் ஈசுவரருமாகிய அவரை ஆராதித்தேன்.

6. 28. பிறகு உனது சகோதரர்களான ஒன்பது பிரஜாபதிகளும் சித்தத்தை ஒரு நிலைப்படுத்தி விராட்டாக வியக்தமாயும் அந்தர்யாமியாய் அவ்வியக்தமாயும் உள்ள அப் புருஷனை ஆராதித்தனர்.

6. 31. அவரால் ஏவப்பட்டு நான் படைக்கிறேன்; அவருக்கு வசப்பட்டு ருத்திரர் அழிக்கிறார்; மூன்று சக்திகளையுந் தரிக்கின்ற அவர் விஷ்ணுரூபத்தில் பரிபாலிக்கிறார்.

6. 32. மகனே! இதைப்பற்றி நீ கேட்டதற்கிணங்க உனக்குப் பதில் கூறப்பட்டது. காரியமாகவுங் காரணமாகவுமுள்ள இவ்வனைத்தும் பகவானைத் தவிரச் சிறிதும் வேறுபடாததாக அறியப்படவேண்டும்.

---

6. 26. ஒ. யஜ்ஞப்ருத் யஜ்ஞக்ருத் யஜ்ஞீ யஜ்ஞாங்கோ யஜ்ஞவாஹன:। —வி. ஸ.

ஒ. வெல்லப் பிள்ளையாருக்கு வெல்லத்தை நிவேதனம் செய்தாற்போலும், ஸமுத்ர ராஜனுக்கு ஸமுத்திர ஜலத்தை அர்க்கியம் கொடுத்தாற்போலும்.

ஒ. பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப் பனிமலரெடுக்க மனமும் நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கவெனின் நாணுமென்னுள நிற்றி நீ. —தாயுமானவர்.

6. 27. ஒ. யஜ்ஞேன யஜ்ஞமயஜந்த தேவா:। —புருஷஸூக்தம்.

6. 31. **திரிசக்தி:**—மாயா।

ஒ. ஒளி மணிவண்ண னென்கோ ஒருவனென்றேத்த நின்ற
நளிர் மதிச்சடைய னென்கோ நான் முகக்கடவுளென்கோ
அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்தவை யளித்துக்காக்கும்
களி மலர்த்துளவ னெம்மான் கண்ணனை மாயனையே. —நம்மாழ்வார்.

---

6. 26. **मतयः श्रद्धा । पुरुषावयवैरेतैः ।** பா. பே.

यस्यावतार-कर्माणि गायन्ति ह्यस्मदादयः।
न यं विदन्ति तत्त्वेन तस्मै भगवते नमः ॥ ६.३७ ॥

स एष आद्यः पुरुषः कल्पे कल्पे सृजत्यजः।
आत्माऽऽत्मन्यात्मनाऽऽत्मानं संयच्छति च पाति च ॥ ६.३८ ॥

विशुद्धं केवलं ज्ञानं प्रत्यक् सम्यगवस्थितम्।
सत्यं पूर्ण-मनाद्यन्तं निर्गुणं नित्य-मद्वयम् ॥ ६.३९ ॥

ऋषे विदन्ति मुनयः प्रशान्तात्मेन्द्रियाशयाः।
यदा तदेवासत्तर्कै-स्तिरोधीयेत विप्लुतम् ॥ ६.४० ॥

आद्योऽवतारः पुरुषः परस्य कालः स्वभावः सदसन्मनश्च।
द्रव्यं विकारो गुण इन्द्रियाणि विराट् स्वराट् स्थास्नु चरिष्णु भूम्नः ॥ ६.४१ ॥

इदं भागवतं नाम यन्मे भगवतोदितम्।
संग्रहोऽयं विभूतीनां त्वमेतद्विपुलीकुरु ॥ ७.५१ ॥

---

6. 37. நம்போன்றவர்கள் எவருடைய அவதார லீலைகளைப் பாடுகின்றார்களோ, ஆனால் எவரை உள்ளபடி அறியமாட்டார்களோ அந்த பகவானுக்கு நமஸ்காரம்.

6. 38. பிறப்பில்லாத அந்த ஆதிபுருஷன் கல்பந்தோறும் தானே தன்னிடத்தில் தன்னால் தன்னையே ஆக்கவும் அளிக்கவும் அழிக்கவும் செய்துகொள்ளுகிறார்.

6. 39. (எனினும் அவருடைய ஸ்வரூபம்) பரிசுத்தமான தனித்த ஞானவடிவு; அனைத்தினும் உள்ளுறைந்து செவ்வனே நிலைத்திருப்பது; ஸத்தியமும் பூரணமும் ஆவது; அடிமுடியற்றது; நிர்க்குணமும் நித்தியமும் அத்துவயமும் ஆவது.

6. 40. ரிஷியே (நாரதரே!) சாந்தி நிறைந்த உடலும் இந்திரியங்களும் உள்ளமும் உடைய முனிவர்கள் (அந்த ஸ்வரூபத்தை) அறிகிறார்கள். எப்போது அது அஸத்துக்களின் குதர்க்கங்களால் மாற்றிக் கூறப்படுமோ அப்போது மறைந்துபோய்விடும்.

6. 41. பரம்பொருளின் ஆதி அவதாரம் (விராட்) புருஷ வடிவாகும். அளவுகடந்த அதனிடமிருந்தே காலமும், நியதியும், காரிய காரணவடிவான பிரகிருதியும், மனதும், பஞ்சபூதத் திரவியமும், அதன் விகாரமான அகங்காரமும், முக்குணங்களும், இந்திரியங்களும், (ஸமஷ்டியில்) ஸ்தூலமான விராட்டும் ஸூக்ஷ்மமான ஸ்வராட்டும், (வியஷ்டியில்) ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும்.

7. 51, எனக்குப் பகவானால் உபதேசிக்கப்பட்டு பாகவதம் எனப் பிரசித்திபெற்றது எதுவோ அதுவே இது. இது அவருடைய பெருமைகளின் சுருக்கம். நீர் இதை விரிவுபடுத்தும்.

---

6. 40. ஒ. வேதங்களைக் கற்றதாலோ, நுண்ணறிவினாலோ, விரிந்த கேள்வியாலோ இந்த ஆத்மா அடையப்படுவதன்று. (ஒரு ஸாதகன் எப்போது) ஆத்மா ஒன்றையே பிரார்த்திக்கிறானோ அப்போது அவனால் அடையப்படும்; அப்போது ஆத்மா இவனுக்குத் தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தைப் பிரகாசப்படுத்துகின்றது. —கட. உப. 2. 23.

---

6. 38. ऽसृजत् प्रजाः। समं गच्छति पाति च।

7. 51. तद्वैतद् विपुलीकुरु। பா. பே.

यथा हरौ भगवति नृणां भक्तिर्भविष्यति ।
सर्वात्मन्यखिलाधारे इति संकल्प्य वर्णय ॥ ७.५२ ॥

राजोवाच—

कथयस्व महाभाग यथाहमखिलात्मनि ।
कृष्णे निवेश्य निः सङ्गं मनस्त्यक्ष्ये कलेवरम् ॥ ८.३ ॥

शृण्वतः श्रद्धया नित्यं गृणतश्च स्वचेष्टितम् ।
कालेन नातिदीर्घेण भगवान् विशते हृदि ॥ ८.४ ॥

प्रविष्टः कर्णरन्ध्रेण स्वानां भावसरोरुहम् ।
धुनोति शमलं कृष्णः सलिलस्य यथा शरत् ॥ ८.५ ॥

न मेऽसवः परायन्ति ब्रह्मन्ननशना-दमी ।
पिबतोऽच्युत-पीयूष-मन्यत्र कुपिताद् द्विजात् ॥ ८.२६ ॥

---

7. 52. அனைவருக்கும் ஆத்மாவாகவும் அனைத்துக்கும் ஆதாரமாகவும் விளங்கும் பகவானாகிய ஹரியிடத்தில் மானிடர்க்கு எங்ஙனம் பக்தியேற்படுமோ அங்ஙனம் ஆலோசித்தறிந்து வர்ணிப்பீராக.

அரசர் கூறியது—

8. 3. மஹா பாக்கியசாலியே! உலகப்பற்று நீங்கிய மனத்தை நான் எவ்வாற்றால் ஸர்வாத்மாவான ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் வைத்து உடலை விடுவேனோ அவ்வண்ணம் உபதேசித்தருளும்,

8. 4. இடைவிடாது சிரத்தையுடன் தனது லீலைகளை எவர்கள் சிரவணம் செய்கிறார்களோ, கீர்த்தனஞ் செய்கிறார்களோ அவர்களுடைய இருதயத்தில் பகவான் தாமதமின்றிக் குறுகிய காலத்தில் பிரவேசிக்கின்றார்.

8. 5. காதின் வழியாகத் தன்னடியார்களின் உள்ளமாகிய தாமரையில் பிரவேசித்த கிருஷ்ணன் நீரின் கலக்கத்தைச் சரத்காலம் போக்குவதுபோல் உள்ளத்தின் அழுக்கைப் போக்கிவிடுகிறார்.

8. 26. பிரம்மஸ்வரூபியே! (பசி தாகம் என்னை வருத்தவில்லை). அச்சுதாமிருதத்தைப்பானம் செய்யும் என்னுடைய இப் பிராணன்கள் பிராம்மண கோபத்தா லேற்பட்ட சாபத்தாலன்றி பட்டினி முதலியவற்றால் பிரிந்து செல்லமாட்டா.

---

8. 4. ஒ. ஸ கீர்த்யமான: சீக்ரமேவ ஆவிர்ப்பவதி அனுபாவயதி பக்தான் ।
—நா. ப. ஸூ. 80.

8. 5. பாவ ஸரோருஹம்—ஹ்ருதயகமலம்.

8. 26. ஒ. எத்திக்குந் தானாகி எனினிதயத்தே யூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே. —தாயுமானவர்.

---

7. 52. वर्ण्यताम् । பா. பே.

सूत उवाच—

स उपामन्त्रितो राज्ञा कथायामिति सत्पतेः ।
ब्रह्मरातो भृशं प्रीतो विष्णुरातेन संसदि ॥ ८.२७ ॥

प्राह भागवतं नाम पुराणं ब्रह्मसम्मितम् ।
ब्रह्मणे भगवत्प्रोक्तं ब्रह्मकल्प उपागते ॥ ८.२८ ॥

श्री भगवानुवाच—

ज्ञानं परमगुह्यं मे यद्विज्ञान - समन्वितम् ।
सरहस्यं तदङ्गं च गृहाण गदितं मया ॥ ९.३० ॥

यावानहं यथाभावो यद्रूप-गुण-कर्मकः ।
तथैव तत्त्व-विज्ञान-मस्तु ते मदनुग्रहात् ॥ ९.३१ ॥

अहमेवासमेवाग्रे नान्यद् यत् सदसत् परम् ।
पश्चादहं यदेतच्च योऽवशिष्येत सोऽस्म्यहम् ॥ ९.३२ ॥

ऋतेऽर्थं यत् प्रतीयेत न प्रतीयेत चात्मनि ।
तद्विद्यादात्मनो मायां यथाऽऽभासो यथा तमः ॥ ९.३३ ॥

---

ஸூதர் கூறியது—

8. 27. அந்த ஸாதுக்களின் கூட்டத்தில் பகவானுடைய கதைகளைச் சொல்லும் விஷயத்தில் இங்ஙனம் விஷ்ணுராதராகிய அரசரால் பிரார்த்திக்கப்பட்ட பிரம்மராதராகிய சுகப்பிரம்மம் மிக்கப் பிரீதியடைந்தவராய்;

8. 28. பாகவதம் என்று பெயர்பெற்ற புராணத்தைச் சொல்லலானார்; (அது) வேதத்துக்குச் சமமானது; பிரம்மகல்பம் ஆரம்பித்தபோது பகவானால் பிரம்மாவுக்கு உபதேசம் செய்யப்பட்டது.

ஸ்ரீ பகவான் கூறியது—

9. 30. விஞ்ஞானத்துடன் கூடிய எந்தப் பரமரகசியமான ஞானம் என்னைச் சார்ந்ததோ அதை இரகசியத்துடனும் அங்கத்துடனும் நான் கூறப்பெற்றுக்கொள்வீர்.

9. 31. நான் எப்படிபட்டவனோ, எப்படி நினைக்கத் தகுந்தவனோ, என்ன ரூபமும் குணமும் கருமமுமுடையவனோ அவைகளைப்பற்றிய தத்துவவிக்ஞானம் உள்ளது உள்ளபடி என தனுக்கிரகத்தால் உமக்குண்டாகட்டும்.

9. 32. ஆதியில் (சிருஷ்டிக்கும் முந்தி) நானே இருந்தேன். என்னையன்றி ஸத்தோ அஸத்தோ அவற்றிற்கு மப்பாலான ஒன்றோ (பிரதானமோ) இல்லை. (சிருஷ்டிக்குப்) பின்னும் உள்ள இது நானே. (பிரளயத்திற்குப்பின்) எஞ்சியிருக்கப்போவது எதுவோ அதுவும் நானே.

9. 33. மாயாபிம்பம்போல் பொருளில்லாத இடத்தில் தோற்றமும், (உள்ள இடத்தில்) இருளில்போல தோன்றாமையும் ஆத்மாவிடத்தில் எக்காரணத்தால் ஏற்படுகின்றதோ அதை ஆத்மாவைச் சார்ந்த மாயை என அறியவேண்டும்.

---

9. 30. **விஜ்ஞானம்** அனுபவ:। **ரஹஸ்யம் பக்தி:**। **அங்கம்** ஸாதனம்।

9. 32–9. 35. இந்த நாலு சுலோகங்களும் சதுச்லோகீ பாகவதம் எனப்படும். பகவானால் பிரம்மாவுக்கு உபதேசிக்கப்பட்ட இதுவே விரிவான பாகவத விருக்ஷத்திற்கு வித்தாக ஆயிற்று.

---

8. 28. **आह भागवतं । भगवता प्रोक्तं ।** பா. பே.

यथा महान्ति भूतानि भूतेष्वुच्चावचेष्वनु ।
प्रविष्टान्यप्रविष्टानि तथा तेषु न तेष्वहम् ॥९.३४॥

एतावदेव जिज्ञास्यं तत्त्व-जिज्ञासुनाऽऽत्मनः ।
अन्वय-व्यतिरेकाभ्यां यत् स्यात् सर्वत्र सर्वदा ॥ ९.३५ ॥

एतन्मतं समातिष्ठ परमेण समाधिना ।
भवान् कल्पविकल्पेषु न विमुह्यति कर्हिचित् ॥ ९.३६ ॥

श्री शुक उवाच—

तुष्टं निशाम्य पितरं लोकानां प्रपितामहम् ।
देवर्षिः परिपप्रच्छ भवान् यन्मानुपृच्छति ॥ ९.४२ ॥

तस्मा इदं भागवतं पुराणं दशलक्षणम् ।
प्रोक्तं भगवता प्राह प्रीतः पुत्राय भूतकृत् ॥९.४३॥

नारदः प्राह मुनये सरस्वत्या-स्तटे नृप ।
ध्यायते ब्रह्म परमं व्यासायामित-तेजसे ॥ ९.४४ ॥

अत्र सर्गो विसर्गश्च स्थानं पोषण-मूतयः ।
मन्वन्तरेशानुकथा निरोधो मुक्ति-राश्रयः ॥ १०.१ ॥

---

9. 34. (ஸமஷ்டியாயுள்ள) ஆகாயம் முதலிய பஞ்சமஹாபூதங்கள் உயர்ந்ததும் தாழ்ந்ததுமான சிருஷ்டியனைத்திலும் (வியஷ்டியாக) எங்ஙனம் புகுந்துள்ளனவாய்க் காணப்படுகின்றனவோ ஆனால் உண்மையில் புகுதல் இல்லையோ அங்ஙனமே நானும் அவற்றுள் புகுந்தவனைப்த் தோன்றினும் புகவேயில்லைதான்.

9. 35. உடன்பாட்டாலும் எதிர் மறையாலும் எது எல்லாவிடத்திலும் எல்லாக் காலத்திலும் இருப்பதாய் அறியப்படுமோ அவ்வளவுதான் ஆத்ம தத்துவத்தை அறிய விரும்புபவரால் அறியப்படவேண்டுவது,

9. 36. உயர்ந்த ஸமாதியால் நீர் இந்தத் தத்துவத்தில் நிலைபெறவேண்டும். (பின்னர்) கல்பந்தோறும் செய்யும் சிருஷ்டிகளில் ஒருபோதும் மயக்கத்தையடைய மாட்டீர்.

ஸ்ரீ சுகர் கூறியது—

9, 42. (பின்னர்) உலகின் பிரபிதாமஹரும் தனது பிதாவுமாகிய பிரம்மதேவர் (தனது ஆராதனையால்) மகிழ்வடைந்ததைக்கண்டு தேவரிஷியான நாரதர் நீர் என்னை வினவுவதையே வினவினார்.

9. 43. சிருஷ்டிகர்த்தாவும் பிரீதியுள்ளவராகப் பகவானால் தனக்கு உபதேசிக்கப் பட்டதும் பத்து லக்ஷணங்களுடன் கூடியதுமான இந்தப் பாகவத புராணத்தை அந்தப் புத்திரனுக்கு உபதேசித்தார்.

9. 44. அரசே! ஸரஸ்வதியின் கரையில் பரப்பிரம்மத் தியானத்திலிருந்தவரும் அளவுகடந்த தேஜஸுள்ளவருமான வியாசருக்கு (இதை) நாரதர் உபதேசித்தார்.

10. 1. இதில் ஸர்க்கம், விஸர்க்கம். ஸ்தானம், போஷணம், ஊதிகள், மன் வந்தரம், ஈசனுடைய அவதாரக் கதைகள், நிரோதம், முக்தி, ஆசிரயம் எனப்பத்து விஷ யங்கள் உள்ளன.

---

9. 43. **பத்து லக்ஷணங்கள்**—10-1 பார்க்க.

---

9. 34. **भूतेष्वुच्चावचेषु च ।** பா. பே.

दशमस्य विशुद्ध्यर्थं नवानामिह लक्षणम् ।
वर्णयन्ति महात्मानः श्रुतेनार्थेन चांजसा ॥ १०.२ ॥

भूतमात्रेन्द्रियधियां जन्म सर्ग उदाहृतः ।
ब्रह्मणो गुणवैषम्याद् विसर्गः पौरुषः स्मृतः ॥ १० ३ ॥

स्थितिर्वैकुण्ठविजयः पोषणं तदनुग्रहः ।
मन्वन्तराणि सद्धर्म ऊतयः कर्मवासनाः ॥ १०.४ ॥

अवतारानुचरितं हरेश्चास्यानुवर्तिनाम् ।
सतामीशकथाः प्रोक्ता नानाख्यानो-पबृंहिताः ॥ १०.५ ॥

निरोधोऽस्यानुशयन-मात्मनः सह शक्तिभिः ।
मुक्तिर्हित्वान्यथारूपं स्वरूपेण व्यवस्थितिः ॥ १०.६ ॥

आभासश्च निरोधश्च यतश्चाध्यवसीयते ।
स आश्रयः परं ब्रह्म परमात्मेति शब्द्यते ॥ १०.७ ॥

---

10. 2. பத்தாவதான ஆசிரயத்தின் தெளிவான ஞானத்தின் பொருட்டே சுருதியாலும், சுருதியின் கருத்தை விளக்குவதாலும் (சுய அனுபவத்தாலும்) எளிய முறையில் மஹா புருஷர்கள் மற்ற ஒன்பது லக்ஷணங்களையும் வர்ணிக்கின்றனர்.

10. 3. பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், மஹத் (புத்தி) ஆகிய இவை பிரம்மத்தினின்று குணங்களின் தாரதம்மியத்தால் தோன்றுதல் ஸர்க்கம் எனப்படும். விராட்புருஷனிடம் தோன்றின பிரம்மாவின் சிருஷ்டி விஸர்க்கம் எனப்படும்.

10. 4. பகவானுடைய இச்சைப்படி உலகை நிறுத்துதல் ஸ்திதி (ஸ்தானம்), பக்தர்களுக்குப் பகவான் செய்யும் அனுக்கிரகம் போஷணம். மனுக்கள் காட்டிய தர்மமார்க்கம் மன்வந்தரம். (ஜீவாத்மாக்களுக்கு) கர்மவாசனையால் ஏற்படும் ஊழ்வினைகள் ஊதிகள்.

10. 5. ஹரியின் அவதாரங்களைப்பற்றியும் ஹரிபக்தர்களான நல்லோர்களின் சரித்திரங்களைப்பற்றியும் பல உபகதைகளுடன் விரித்துக் கூறுதல் ஈசானுகதை எனப்படும்.

10. 6. (பிரளய காலத்தில் பகவான் யோக நித்திரையில் சயனிக்கும்போது) இந்த ஜீவாத்மாவுக்குத் தன் சக்திகளுடன் பகவானிடம் ஏற்படும் ஒடுக்கம் நிரோதம். வேற்றுமை வடிவத்தை விட்டுத் தான் தானுயிருத்தல் முக்தி.

10. 7. எதனிடமிருந்து (இவ்வுலகின்) தோற்றமும் ஒடுக்கமும் ஏற்படுகின்றதென நிச்சயிக்கப்படுகிறதோ அது ஆச்ரயம். அதுவே பரப்பிரம்மம் என்றும் பரமாத்மா என்றும் கூறப்படுகிறது.

---

10. 2. **தசம**ஸ்யாச்ரயஸ்ய **விசுத்த்**யர்த்தம் தத்வஜ்ஞானர்த்தம் நவானும் லக்ஷணம் ஸ்வருபம் ।

10. 3. **பூதானி** ஆகாசா**தீ**னி மாத்ராணி ச **சப்தாதீ**னி, இந்**த்**ரியாணி ச, **தீ சப்தே**ன **மஹத**ஹங்காரௌ। **வைஷம்யாத்**—பரிணமாத் ।

10. 7. **ஆபாஸ**:—ஸ்ருஷ்டி: **நிரோதோ** லயச்ச யதோ **பவ**தி அத்யவஸீயதே ப்ரகா**ச**தே ச ।

ஓ. யதோ வா இமானி **பூ**தானி ஜாயந்தே । **தை. உப. 3. 1.**

---

10. 5. **पुंसामीशकथाः ।** **பா. பே.**

**शौनक उवाच—**

**यदाह नो भवान् सूत क्षत्ता भागवतोत्तमः ।**
**चचार तीर्थानि भुवस्त्यक्त्वा बन्धून् सुदुस्त्यजान्** ॥ १०.४८ ॥

**कुत्र कौषारवेस्तस्य संवादोऽध्यात्म-संश्रितः ।**
**यद्वा स भगवांस्तस्मै पृष्टस्तत्त्व-मुवाच ह** ॥ १०.४९ ॥

**ब्रूहि नस्तदिदं सौम्य विदुरस्य विचेष्टितम् ।**
**बन्धुत्याग-निमित्तं च तथैवागतवान् पुनः** ॥ १०.५० ॥

**इति श्रीमद्भागवते महापुराणे अष्टादश-साहस्रिकायां संहितायां पारमहंस्यां श्रीहयग्रीव-ब्रह्मविद्यायां द्वितीयः स्कन्धः समाप्तः ॥**

---

சௌனகர் கூறியது—

10. 48. ஸூதரே! பாகவதசிரேஷ்டரான விதுரர் விடுதற்கரிய உறவினரைவிட்டு பூமியிலுள்ள புண்ணியக்ஷேத்திரங்களை நாடிச் சென்றுர் என்று எங்களுக்குத் தாங்கள் கூறினீர்களே (அதைப்பற்றி மேலுங் கேட்க விரும்புகிறேம்.)

10. 49. அவருக்கும் மைத்திரேயருக்கும் அத்தியாத்தும விஷயத்தைப்பற்றிய ஸம்பாஷணை எங்கு ஏற்பட்டது? தத்துவத்தைப்பற்றி வினவப்பெற்ற அந்த மைத்திரேய பகவான் என்ன உபதேசம் செய்தார்?

10. 50. சித்தம் அழகியவரே! இதை எங்களுக்குக் கூறி யருளுங்கள். விதுர ருடைய செயல்களையும், அவர் உறவினர்களை விட்டு விலகிய காரணத்தையும் திரும்பி வந்த காரணத்தையும் அவ்வாறே கூறி யருளுங்கள்.

**இங்ஙனம் ஐந்தாவது இதழாகிய பரதத்துவ நிர்ணயம் முற்றும்.**

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம் சுலோகங்க ளடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்மவித்தை யெனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மகாபுராணத்தில் இரண்டாவது ஸ்கந்தம் முற்றும்.

---

10. 49. **संश्रयः ।** பா. பே.

# ॥ तृतीयः स्कन्धः ॥

## सर्गवर्णनम् ॥ ६ ॥

सूत उवाच—

स एवमृषिवर्योऽयं पृष्टो राजा परीक्षिता ।
प्रत्याह तं सुबहुवित् प्रीतात्मा श्रूयतामिति ॥ १.५ ॥

श्रीशुक उवाच—

यदा च पार्थप्रहितः सभायां जगद्गुरु-र्यानि जगाद कृष्णः ।
न तानि पुंसा-ममृतायनानि राजोरु मेने क्षत-पुण्यलेशः ॥ १.९ ॥

यदोपहूतो भवनं प्रविष्टो मन्त्राय पृष्टः किल पूर्वजेन ।
अथाह तन्मन्त्रदृशां वरीयान् यन्मन्त्रिणो वैदुरिकं वदन्ति ॥ १.१० ॥

अजातशत्रोः प्रतियच्छ दायं तितिक्षतो दुर्विषहं तवागः ।
सहानुजो यत्र वृकोदराहिः श्वसन् रुषा यत्त्वमलं बिभेषि ॥ १.११ ॥

---

# மூன்றாவது ஸ்கந்தம்

## 6. ஸர்க்க வர்ணனை

ஸௌதர் கூறியது—

1, 5. இங்ஙனம் பரீக்ஷித்து மகாராஜனால் வினவப்பெற்ற ஸர்வக்ஞரான அந்த ரிஷிசிரேஷ்டர் கருணை நிறைந்த மனத்தினராய் 'கேளும்' என்று அவரை நோக்கிக் கூறலானார்.

ஸ்ரீ சுகர் கூறியது—

1, 9. ஜகத்குருவும் பார்த்தரால் தூதனுப்பப்பட்டவருமான ஸ்ரீ கிருஷ்ண பகவான் அரசசபையில் கூறிய சொற்கள் எவையோ அவை (புண்ணிய) புருஷர்க்கு அமுதமாய் விளங்கியபோதிலும், புண்ணியம் சிறிது மின்றி யழிந்துபோனவரான திருதராஷ்டிர மகாராஜன் (அச்சொற்களை) எப்போது மதிக்காமற்போனாரோ;

1. 10. இரகசியாலோசனைக்காகத் தமயனால் அழைக்கப்பட்டு அரண்மனை சென்ற விதுரர், ஆலோசனை வல்லவர்களால் விதுர நீதி யெனப் போற்றப்படுவதை எப்போது (திருதராஷ்டிரருக்கு) கூறினாரோ;

1. 11. அதாவது—(பாண்டவர்க்கு) நீர் செய்துள்ள தீங்கு சகிக்க முடியாதது. அதனால் பீமசேனன் தம்பிமார்களுடன் மலைப்பாம்புபோல் ரோஷத்தால் சீறிக்கொண்டிருக்கிறான். அதைக்கண்டு நீர் அஞ்சியது போதும். பொறுமையுடனிருக்கும் அஜாத சத்துருவுக்குப் பாகத்தைக் கொடுத்துவிடும்.

---

1, 5. एवं मुनिवर्योऽथ । பா. பே.

पार्थास्तु देवो भगवान् मुकुन्दो गृहीतवान् सक्षितिदेवदेवः ।
आस्ते स्वपुर्यां यदुदेवदेवो विनिर्जिताशेष-नृदेवदेवः ॥ १.१२ ॥

स एष दोषः पुरुष-द्विडास्ते गृहान् प्रविष्टो यमपत्य-मत्या ।
पुष्णासि कृष्णाद्विमुखो गतश्री-स्त्यजाश्वशैवं कुलकौशलाय ॥ १.१३ ॥

इत्यूचिवांस्तत्र सुयोधनेन प्रवृद्धकोपस्फुरिताधरेण ।
असत्कृतः सत्स्पृहणीय-शीलः क्षत्ता सकर्णानुजसौबलेन ॥ १.१४ ॥

क एनमत्रोपजुहाव जिह्मं दास्याः सुतं यद्बलिनैव पुष्टः ।
तस्मिन् प्रतीपः परकृत्य आस्ते निर्वास्यतामाशु पुराच्छ्वसानः ॥ १.१५ ॥

---

1. 12. பாண்டவர்களை பகவான் முகுந்தர் ஆதரிக்கிறார். பகவானை எல்லா தேவர்களும் பிராம்மணர்களும் ஆராதிக்கின்றனர். இப்போது அவர் அரசர்களையெல் லாம் ஜயித்து யதுவீரர்களால் போற்றப்பட்டுத் தனது புரியாகிய துவாரகையில் விளங்கு கின்றார். (ஆகையால் பகவானுடைய திருவுள்ளத்தின்படி பாண்டவர்க்குப் பாகத்தைக் கொடுத்துவிடும்.)

1. 13. கிருஷ்ணனிடத்திலிருந்து விலகிய உம்மிடமிருந்து லக்ஷ்மி விலகிவிட்டாள். புருஷோத்தமத்துவேஷமெனும் தோஷமே உருவெடுத்து வீட்டிற் புகுந்தாற்போலுள்ள எவனைப் பிள்ளையென்று கருதிப் போஷிக்கிறீரோ அந்த அமங்கள வடிவினனைக் குலத் தின் க்ஷேமத்திற்காக விலக்கிவிடுவீராக.

1. 14-15. சாதுக்கள் போற்றும் குணமுடைய விதுரர் இங்ஙனங் கூறியதைக் கேட்ட துரியோதனன் பொங்குங் கோபத்தால் உதடு துடிக்கத் தம்பிமார்களுடனும் கர்ணன் சகுனி முதலியவர்களுடனும் அவரை—"தாசி புத்திரனும், கபடனும், ஆகிய இவனை இங்கே கூப்பிட்டது யார்? எவர்களுடைய பிண்டத்தால் வளர்ந்து கொழுத் தானோ அவர்களுக்குப் பிரதிகூலனாகவும் எதிரிகளுக்கு அனுகூலனாகவும் இருக்கின் றான். உயிர்மட்டும் உடையவனாக இவன் விரைவில் வெளியேற்றப் படட்டும்" என்று எப்பொழுது அவரை அவமதித்தானோ;

---

1. 14-15. துரியோதனன்—
நன்றிகெட்ட விதுரா! சிறிதும் நாணமற்ற விதுரா!
தின்ற உப்பினுக்கே நாசம் தேடுகின்ற விதுரா!
அன்று தொட்டு நீயும் எங்கள் அழிவு தேடுகின்றாய்
மன்றிலுன்னை வைத்தான் எந்தை மதியை என்னுரைப்பேன்!
ஐவருக்கு நெஞ்சும் எங்கள் அரமனைக்கு வயிறும்
தெய்வமன்றுனக்கே விதுரா! செய்துவிட்டதேயோ!
வண்புரைத்தல் வேண்டா எங்கள் வலிபொறுத்தல் வேண்டா
இன்பமெங்கணுண்டோ அங்கே ஏகிடென்றுரைத்தான்—பாரதி.

---

1. 14. संस्पृहणीयशीलः । பா. பே.

स इत्थ-मत्युल्बण-कर्णबाणै-र्भ्रातुः पुरो मर्मसु ताडितोऽपि ।
स्वयं धनु-र्द्वारि निधाय मायां गतव्यथोऽयादुरु मानयानः ॥ १.१६ ॥

स निर्गतः कौरवपुण्य-लब्धो गजाह्वयात् तीर्थपदः पदानि ।
अन्वाक्रमत् पुण्यचिकीर्षयोर्व्यां स्वधिष्ठितो यानि सहस्रमूर्तिः ॥ १.१७॥

तत-स्त्वतिव्रज्य सुराष्ट्रमृद्धं सौवीर-मत्स्यान् कुरु-जांगलांश्च ।
कालेन तावद्यमुना-मुपेत्य तत्रोद्धवं भागवतं ददर्श ॥ १.२४ ॥

स वासुदेवानुचरं प्रशान्तं बृहस्पतेः प्राक्तनयं प्रतीतम् ।
आलिंग्य गाढं प्रणयेन भद्रं स्वाना-मपृच्छ-द्भगवत्प्रजानाम् ॥ १.२५ ॥

---

1. 16. (அப்போது அவர்) இவ்விதம் காதுகளில் பாய்ந்த கொடிய சொல்லம்புகளால் சகோதரர் முன்னிலையில் மர்மஸ்தானத்தில் தாக்கப்பட்ட போதிலும் மனங்கலங்காதவராய் மாயையின் மகிமையை வெகுவாக வியந்துகொண்டு தாமாகவே வில்லை வாயிலில் வைத்துவிட்டு வெளிக் கிளம்பினர்.

1. 17. குருவம்சத்தின் புண்ணியவசமாய்த் தோன்றிய அவர் அங்ஙனம் ஹஸ்தினபுரியினின்று வெளிச் சென்று, பகவான் ஆயிரக்கணக்கான மூர்த்திகளில் எங்கெங்கு கோயில் கொண்டுள்ளாரோ, எங்கெங்கு அவர் திருவடிகளினின்று பெருகும் புண்ணிய தீர்த்தங்கள் உளவோ, அந்தந்த க்ஷேத்திரங்களை நாடிப் புண்ணியத்தை விரும்பியவராய் முறையே சென்றார்.

1. 24. அங்ஙனம் செல்லுகையில் செழிப்பான சௌராஷ்டிரம், சௌவீரம், மத்ஸ்யம், குரு, ஜாங்கலம் முதலிய நாடுகளைக் கடந்து நாளடைவில் எப்போது யமுனை வந்து சேர்ந்தாரோ அப்போது அங்கு பாகவதரான உத்தவரைச் சந்தித்தார்.

1. 25. வாசுதேவரையே பின்பற்றுபவரும் பரமசாந்தரும் பிருகஸ்பதியிடமிருந்து நீதி சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவரும் உலகப் பிரசித்தரும் ஆகிய அவரை அன்பின் மிகுதியால் இறுகத் தழுவி பகவானால் பரிபாலிக்கப் பெற்ற உற்றார்களின் க்ஷேம சமாசாரத்தை வினவினர்.

---

1. 16. மாயையைக் கடந்த விதுரர் மாயைக் குட்பட்டாரை மாயை ஆட்டுவிப்பதைக் கண்டு வியந்து 'மாயையே இவர்களைத் தண்டிக்கும், நான் எதிர்க்கட்சியில் சேருவேனென்று இவர்கள் நினைக்கவேண்டியதில்லை' என்று வில்லை வைத்துவிட்டு விதுரர் அவ்விடம் விட்டுச் சென்றார்.

1. 17. 'குருவம்சத்தின் புண்ணியவசமாய்த் தோன்றிய அவர்' என்றதால் அவர்களுடைய பாக்கியமே அவர் வெளிச்சென்றபோது மறைந்தது என்று குறிப்பு.

---

1. 25. प्राक्तनये । பா. பே.

तस्य प्रपन्नाखिल-लोकपाना-मवस्थितानां-मनुशासने स्वे ।
अर्थाय जातस्य यदुष्वजस्य वार्तां सखे कीर्तय तीर्थकीर्तेः ॥ १.४५ ॥

इति भागवतः पृष्टः क्षत्त्रा वार्तां प्रियाश्रयाम् ।
प्रतिवक्तुं न चोत्सेह औत्कण्ठ्यात्-स्मारितेश्वरः ॥ २.१ ॥

यः पंचहायनो मात्रा प्रातराशाय याचितः ।
तन्नैच्छद्रचयन् यस्य सपर्यां बाललीलया ॥ २.२ ॥

स कथं सेवया तस्य कालेन जरसं गतः ।
पृष्टो वार्तां प्रतिब्रूयाद् भर्तुः पादावनुस्मरन् ॥ २.३ ॥

स मुहूर्त-मभूत्तूष्णीं कृष्णाङ्घ्रि-सुधया भृशम् ।
तीव्रेण भक्तियोगेन निमग्नः साधु निर्वृतः ॥ २.४ ॥

पुलकोद्भिन्न-सर्वांगो मुंचन् मीलद् दृशा शुचः ।
पूर्णार्थो लक्षित-स्तेन स्नेह-प्रसर-संप्लुतः ॥ २.५ ॥

1. 45. "அன்பரே! பிறவியற்றவராயினும் எவர் தன்னைச் சரணுய்க் கொண்ட எல்லா லோகபாலர்களையும் தன் அதிகாரத்தில் நிற்பவர்களையும் அனுக்கிரகிப்பதற்காக யதுகுலத்தில் அவதரித்துள்ளாரோ, பரமபாவனமான கீர்த்தியுடைய அவரைப்பற்றிய சமாசாரத்தைக் கூறுங்கள்" என்ருர்.

2. 1. இங்ஙனம் விதுரரால் பிரியத்துக் குறைவிடமான கிருஷ்ணனுடைய சமாசாரத்தைக் கூறும்படி கேட்கப்பட்ட பாகவதரான உத்தவர் ஈசுவரனை நினைத்துக் கொண்டு பிரிவாற்ருமையினுல் கலங்கினவராய் பதில் கூறமுடியாதவராகி இருந்தார்.

2-3. ஐந்து வயதில் எவருடைய பூஜையைக் குழந்தை விளையாட்டாகச் செய்யும் இன்பத்திலாழ்ந்து, தாயாரால் காலைச் சாப்பாட்டுக்கு வருந்தி அழைக்கப் பெற்றும் அதை விரும்பவில்லையோ அந்த உத்தவர் அவருடைய சேவையிலேயே நாளடைவில் மூப்பெய்திவிட்ட இப்போது நாயகனுடைய திருவடிகளையே தியானிப்பவராய் அவரைப் பற்றி வினவப்படினும் எப்படி (மனத்தை வெளிநாட்டத்தில் புகுத்தி) பதில்தான் சொல்லுவார் ?

2. 4. தீவிரமான பக்தியோகத்தால் கிருஷ்ணனுடைய திருவடிகளினின்று பெருகும் ஆனந்தாமிர்தத்தில் இடையருது மூழ்கி மெய்மறந்துவிட்ட அவர் ஒரு முகூர்த்தம் மௌனமாக இருந்தார்.

2. 5. அன்பு வெள்ளத்தில் மூழ்கியவரும், மயிர்க் கூச்சலினுல் பூரித்த அங்கங்களையுடையவரும், மூடிய கண்களினின்று ஆனந்தக் கண்ணீரைப் பெருக்குபவரும் ஆகிய அவர் பரிபூர்ண நிலை யெய்தியவரென விதுரரால் காணப்பட்டார்,

1. 45. ஒ. ஒருவனுகிய பரமாத்மாவையே அறிவீர்களாக! மற்ற வார்த்தைகளை விட்டொழிக! இதுவே மோக்ஷத்திற்குப் பாலம். —மு. உப. 2. 2. 51

1. 45. **अथोपजातस्य ।** 2. 3. **रजसं गतः** பா. பே.

शनकै-र्भगवल्लोका-न्नृलोकं पुनरागतः ।
निमृज्य नेत्रे विदुरं प्रत्याहोद्धव उत्स्मयन् ॥ २.६ ॥

उद्धव उवाच—

कृष्णद्युमणि-निम्लोचे गीर्णेष्वजगरेण ह ।
किं नु नः कुशलं ब्रूयां गतश्रीषु गृहेष्वहम् ॥ २.७ ॥

दुर्भगो बत लोकोऽयं यदवो नितरामपि ।
ये संवसन्तो न विदु-र्हरिं मीना इवोडुपम् ॥ २.८ ॥

प्रदर्श्यातप्त-तपसा-मवितृप्त-दृशां नृणाम् ।
आधायान्तरधाद्यस्तु स्वबिंबं लोक-लोचनम् ॥ २.११ ॥

पुर्यां कदाचित् क्रीडद्भि-र्यदु-भोज-कुमारकैः ।
कोपिता मुनयः शेपु-र्भगवन्मत-कोविदाः ॥ ३.२४ ॥

---

2. 6. மெதுவாக தெய்வ உலகினின்று மானிட உலகுக்கு மீண்டும் வந்து கண்களைத் துடைத்துக்கொண்டு (பகவானுடைய பெருமையில்) ஆச்சரியம் மிக்கவராய் உத்தவர் விதுரரை நோக்கிப் பதிலளிக்க ஆரம்பித்தார்.

உத்தவர் கூறியது—

2. 7. கிருஷ்ணசூரியன் மறைந்தபின் (எவர்கள் இருளில் ஆழ்ந்தார்களோ) காலமென்னும் மலைப்பாம்பால் எவர்கள் விழுங்கப்பட்டார்களோ, அதனால் பெருமை யிழந்தவர்களானார்களோ, அப்படிப்பட்ட எமது குலத்தவரின் க்ஷேம சமாசாரத்தைப்பற்றி நான் என்ன சொல்லட்டும்?

2. 8. அந்தோ! இந்த உலகம் துர்ப்பாக்கியமானது. அதிலும் யாதவர்கள் மிகுந்த துர்ப்பாக்கியசாலிகள். பகவானுடன் கூடி வாழப்பெற்றும், (நீரில் பிரதிபலிக்கும்) சந்திரனை மீன்கள் உணரமாட்டாது தங்களைப்போல் ஜந்து என்று எண்ணினாற்போல் இவர்கள் அவரை உணரவில்லை யல்லவா?

2. 11. தவஞ்செய்தறியாதவர்களும்கூடக் கண்கொள்ளாக் காட்சியாகக் காணும்படி தம்மைக் காட்டுவித்துத் தமது வடிவையும் உலகமக்களின் கண்களையும் கவர்ந்துகொண்டு எந்த பகவான் மறைந்துவிட்டாரோ (அவரைப்பற்றி நான் என்ன சொல்லட்டும்?).

3. 24. ஒரு சமயம் துவாரகாபுரியில் விளையாடிக்கொண்டிருந்த யாதவச் சிறுவர்களாலும் போஜச் சிறுவர்களாலும் கோபமூட்டப்பட்ட முனிவர்கள் பகவானுடைய திருவுள்ளக் குறிப்புக் கிணங்கச் சாபங்கொடுத்தனர்.

---

2. 8. ஒ. கடல் வருமதியினைக் கண்டு கண்டு மீன்
இடைவரு ஜந்து வென்றெண்ணுமாறு போல். —ஆரியப்பப் புலவர்.

ஒ. கறவைகள் பின் சென்று கானஞ் சேர்ந்துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க் குலத்து உன் தன்னைப்
பிறவி பெருந்தனைப் புண்ணியம் யாம் உடையோம். —திருப்பாவை.

---

2. 7. किं पुनः कुशलं । பா. பே.

ततः कतिपयैर्मासै-र्वृष्णि-भोजान्धकादयः ।
ययुः प्रभासं संहृष्टा रथै-र्दैवविमोहिताः ॥ ३.२५ ॥

तत्र स्नात्वा पितृन् देवान् ऋषींश्चैव तदंभसा ।
तर्पयित्वाथ विप्रेभ्यो गावो बहुगुणा ददुः ॥ ३.२६ ॥

अथ ते तदनुज्ञाता भुक्त्वा पीत्वा च वारुणीम् ।
तया विभ्रंशित-ज्ञाना दुरुक्तै-र्मर्म पस्पृशुः ॥ ४.१ ॥

तेषां मैरेय-दोषेण विषमी-कृत-चेतसाम् ।
निम्लोचति रवावासी-द्वेणूनामिव मर्दनम् ॥ ४.२ ॥

भगवान् स्वात्म-मायाया गतिं तामवलोक्य सः ।
सरस्वती-मुपस्पृश्य वृक्षमूल-मुपाविशत् ॥ ४.३ ॥

अहं चोक्तो भगवता प्रपन्नार्ति-हरेण ह ।
बदरीं त्वं प्रयाहीति स्वकुलं संजिहीर्षुणा ॥ ४.४ ॥

अथापि तदभिप्रेतं जानन्नह-मरिन्दम ।
पृष्ठतोऽन्वगमं भर्तुः पादविश्लेषणाक्षमः ॥ ४.५ ॥

---

3. 25. அதற்குச் சில மாதங்களுக்குப் பின் விருஷ்ணிகளும் போஜர்களும் அந்தகர்களும் விதியினுல் மதியிழந்தவர்களாய் (வருவதை யறியாமல்) மகிழ்வுடன் தேர்களில் ஏறிக்கொண்டு பிரபாஸத்திற்குச் சென்றனர்.

3. 26. அங்கு நீராடி அந்தப் புண்ணியதீர்த்தத்தால் பிதிருக்களுக்கும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் தர்ப்பணம் செய்து சிறந்த பசுக்களைப் பிராம்மணர்களுக்கு தானம் செய்தனர்.

4. 1. அவர்களுடைய அனுமதி பெற்றுப் போஜனம் செய்தபின் (விதிவசத்தால்) மதுபானம் செய்து அதனுல் அறிவிழந்து இருதயத்தைப் பிளக்கும் வசைமொழிகளைப் பேச ஆரம்பித்தனர்.

4. 2. குடியின் தோஷத்தால் மதிகெட்ட அவர்களுக்கு சூரியாஸ்தமான காலத்தில் மூங்கிலில் (தீப்பற்றி அழிவு ஏற்படுவது)போல் அழிவு ஏற்பட்டது.

4. 3. அங்ஙனம் தமது மாயையின் போக்கைக் கண்ணுற்ற பகவான் ஸரஸ்வதீ நதியில் ஆசமனம் செய்து ஒரு மரத்தடியில் அமர்ந்தார்.

4. 4. தம்மைச் சார்ந்தவர்களின் துன்பத்தைத் துடைப்பவராயினும் (இப்போது) தமது குலத்தைச் சம்ஹாரம் செய்ய விரும்பியவராகிய பகவானுல் பதரிகாசிரமம் செல்லும்படி நான் கட்டளையிடப்பட்டிருந்தேன்.

4. 5. விதுரரே! அவருடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்ட பின்னும் அவரது சரணத்தைவிட்டுப் பிரியமாட்டாதவனுய் அவரைத் (தேடிக்கொண்டு) பின் சென்றேன்.

---

4. 4. **அஹஞ்சோக்த:**—பூர்வமேவ த்வாரகாயாம் ।

अद्राक्ष-मेक-मासीनं विचिन्वन् दयितं पतिम् ।
श्रीनिकेतं सरस्वत्यां कृतकेत-मकेतनम् ॥ ४.६ ॥

श्यामावदातं विरजं प्रशान्तारुण-लोचनम् ।
दोर्भि-श्चतुर्भि-र्विदितम् पीत-कौशांबरेण च ॥ ४.७ ॥

वाम ऊरावधिश्रित्य दक्षिणांघ्रि-सरोरुहम् ।
अपाश्रितार्भकाश्वत्थ-मकृशं त्यक्त-पिप्पलम् ॥ ४.८ ॥

तस्मिन् महाभागवतो द्वैपायन-सुहृत्-सखा ।
लोका-ननुचरन् सिद्ध आससाद यदृच्छया ॥ ४.९ ॥

तस्यानुरक्तस्य मुने-र्मुकुन्दः प्रमोद-भावानत-कन्धरस्य ।
आश्रृण्वतो माम नुराग-हास-समीक्षया विश्रमयन्नुवाच ॥ ४.१० ॥

वेदाह-मन्त-र्मनसीप्सितं ते ददामि यत्तद् दुरवाप-मन्यैः ।
सत्रे पुरा विश्वसृजां वसूनां मत्सिद्धि-कामेन वसो त्वयेष्टः ॥ ४.११ ॥

---

4. 6-8. அங்ஙனம் சென்று எனது அன்பிற்சிறந்த பிரபுவை (தனிமையில்) ஒருவராக விற்றிருக்கக் கண்டேன். ஆசிரயமற்றவராயினும் ஸரஸ்வதிக் கரையில் தமக்கு ஆசிரயத்தைக் கல்பித்துக்கொண்டவரும் திருவிற்கு ஆசிரயமானவரும், சியாமசுந்தரரும், விமலரும், சாந்தமான சிவந்த கண்களையுடையவரும், நான்கு புஜங்களுடனும், மஞ்சட் பட்டாடையுடனும் விளங்குபவரும், இடது துடையில் வலது சரணாரவிந்தத்தைப் பொருத்திப் பின்புறமுள்ள இளம் அரசமரத்தில் சாய்ந்திருப்பவரும், அன்னபானத்தைத் துறந்தவராயினும் மெலிவடையாமல் ஆனந்தபூர்ணராய் விளங்கியவருமாகிய அவரைக் கண்டு ஆனந்தித்தேன்.

4. 9. அந்நிலையில் வியாசருக்கு ஆப்தநண்பரும் மகா பாகவதரும் சித்த புருஷருமான மைத்திரேயர் உலகங்களில் சஞ்சரித்துக்கொண்டு அங்கு (பகவத் ஸங்கல்பத்தால்) தாமாகவே வந்து சேர்ந்தார்.

4. 10. அன்பின் பெருக்கினாலும் ஆனந்தத்தின் மிகுதியினாலும் வணங்கிய சிரத்தையுடைய அம்முனிவர் கேட்டுக்கொண்டிருக்கையில் கருணையுடனும் புன்சிரிப்புடனும் என்னை நோக்கி எனது கவலையெல்லாம் போக்கி பகவான் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினார்.

4. 11. "நான் உனது மனதில் அந்தரங்கமாயுள்ள ஆசையை அறிவேன். மற்றவர்களால் அடைய முடியாத அந்த ஆசையை நான் உனக்கு அளிக்கிறேன். உத்தவா! நீ பூர்வஜன்மத்தில் வசுவாயிருந்தாய். உலகைச் சிருஷ்டிக்கும் பிரஜாபதியும் வசுக்களும் கூடியனுஷ்டித்த ஸத்திரயாகத்தில் என்னையே யடைய விரும்பிய உன்னால் பூஜை செய்யப்பட்டேன்.

---

4. 8. **த்யக்தபிப்பலம்**—த்யக்தம் பிப்பலம் விஷயஸுகம் யேந தம் I தயாப்யக்ருசம் **ஆனந்த** பூர்ணம் I

4. 9. **த்வைபாயன ஸுஹ்ருத்ஸகா**—பராசர புத்திரரான துவைபாயனரைத் தமது பிரிய நண்பராகவும் ஸஹபாடியாகவும் கொண்ட மைத்ரேயர் (பராசர சிஷ்யர்.)

---

4. 10. **प्रमोदभावानत** I  4. 11. **मनसेप्सितं** I பா. பே.

स एष साधो चरमो भवानां-मासादित-स्ते मदनुग्रहो यत् ।
यन्मां नृलोकान् रह उत्सृजन्तं दिष्ट्या ददृश्वान् विशदानुवृत्त्या ॥ ४.१२ ॥

पुरा मया प्रोक्त-मजाय नाभ्ये पद्मे निषण्णाय ममादिसर्गे ।
ज्ञानं परं मन्महिमावभासं यत्सूरयो भागवतं वदन्ति ॥ ४.१३ ॥

स एव-माराधित-पाद-तीर्था-दधीत-तत्त्वात्म-विबोध-मार्गः ।
प्रणम्य पादौ परिवृत्य देव-मिहागतोऽहं विरहातुरात्मा ॥ ४.२० ॥

सोऽहं तद्दर्शनाल्हाद-वियोगार्तियुतः प्रभो ।
गमिष्ये दयितं तस्य बदर्याश्रम-मण्डलम् ॥ ४.२१ ॥

यत्र नारायणो देवो नरश्च भगवान् ऋषिः ।
मृदु तीव्रं तपो दीर्घं तेपाते लोक-भावनौ ॥ ४.२२ ॥

4. 12. "ஸாதுவே! உன் ஜன்மங்களில் இதுவே கடைசி; ஏனெனில் இதிலல்லவோ எனது அனுக்கிரஹம் உன்னல் அடையப்பட்டது, மனித உலகங்களைவிட்டுச் செல்லுகின்ற என்னை ஏகாந்தத்தில் நிலைத்த பக்தியின் பண்பால் நீ அதிர்ஷ்டவசத்தால் காணப் பெற்ருய்.

4. 13 "முந்தின பாத்ம கல்பத்தின் ஆரம்பத்தில், சிருஷ்டியின் தொடக்கத்தில், எனது நாபிகமலத்தில் வீற்றிருந்த பிரம்மதேவருக்கு என் பெருமையை விளக்குவதும் மகான்கள் பாகவதம் எனக் கூறுவதுமாகிய இச்சிறந்த ஞானநூல் என்னல் உபதேசிக்கப்பட்டது."

4. 20 பூஜ்யபாத குரு ஸ்ரீ கிருஷ்ணனிடமிருந்து ஆத்ம ஞானத்தையடையும் மார்க்கத்தையுணர்ந்து அவர் பாதங்களில் பணிந்து அவரைப் பிரதக்ஷிணம் செய்து இங்கு வந்துள்ளேன். அவரது பிரிவினல் உள்ளத்தில் மிகுந்த வியாகூலத்தையடைந்துள்ளேன்.

4. 21 விதுரரே! அவருடைய தரிசனத்தால் பரமானந்த மெய்திய நான் இப்போது பிரிவால் பீடிக்கப்பட்டவனுய் அவருக்குப் பிரியமான பதரிகாசிரம மண்டலத்தை நாடிச் செல்லுகின்றேன்.

4. 22 அவ்விடத்திலல்லவா நாராயணதேவனும் பகவான் நரரிஷியும் உலகுக்கு அனுக்கிரகம் செய்யவேண்டி மிருதுவானதும் தீவிரமானதுமான தவத்தை நெடுங்காலம் செய்தனர்.

4. 22. **ம்ருது**—பரோபத்ரவ சூன்யம்; **தீவ்ரம்**—துச்சரம் **தீர்க்கம்** ஆகல்பாந்தம்; **தேபாதே**—தபச்சரதே; **லோக-பாவனௌ**—லோகானுக்ராஹகௌ ।

4. 12. **नृलोकानिह ।** பா. பே.

श्रीशुक उवाच—

इत्युद्धवा-दुपाकर्ण्य सुहृदां दुस्सहं वधम् ।
ज्ञानेनाशमयत् क्षत्ता शोक-मुत्पतितं बुधः ॥ ४.२३ ॥

विदुर उवाच—

ज्ञानं परं स्वात्म-रहः प्रकाशं यदाह योगेश्वर ईश्वरस्ते ।
वक्तुं भवान् नोऽर्हति यद्धि विष्णो-र्भृत्याः स्वभृत्यार्थ-कृतश्चरन्ति ॥ ४.२५ ॥

उद्धव उवाच—

ननु ते तत्त्वसंराध्य ऋषिः कौषारवोऽन्तिमे ।
साक्षाद्भगवताऽऽदिष्टो मर्त्य-लोकं जिहासता ॥ ४.२६ ॥

श्रीशुक उवाच—

इति सह विदुरेण विश्वमूर्ते-र्गुणकथया सुधया प्लावितोरुतापः ।
क्षणमिव पुलिने यमस्वसुस्तां समुषित औपगवि-र्निशां ततोऽगात् ॥ ४.२७ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 23 விவேகியான விதுரர் இங்ஙனம் உத்தவரிடமிருந்து பிரியமானவர்களின் அழிவுபற்றிய சகிக்கொணுச் செய்தியைக் கேட்டு அதனுலேற்பட்ட சோகத்தை ஞானத்தால் போக்கிக் கொண்டார்.

விதுரர் கூறியது—

4. 25 ஆத்மஞான ரகசியத்தை விளங்க வைக்கும் எந்தப் பரம ஞானத்தை யோகேசுவரனுகிய பகவான் உமக்குக் கூறினுரோ அதைத் தேவரீர் எங்களுக்குக் கூறியருளுதல் வேண்டும். விஷ்ணுவின் அடியார்கள் தமது அடியார்களுக்கு நன்மை புரிதற்காகவேயன்ருே சஞ்சாரம் செய்கின்றனர்.

உத்தவர் கூறியது—

4. 26 விதுரரே! தத்துவஞானுேபதேசத்தின் பொருட்டு உம்மால் ஆராதிக்கப் படவேண்டியவர் மைத்திரேயரிஷி யல்லவா? மனிதவுலகை விடுவதற்குவிரும்பிய சமயத்தில் நேராக பகவானுலேயே என்முன் அங்ஙனம் (உமக்கு உபதேசிக்கும்படி) அவர் கட்டளையிடப் பெற்றிருக்கிருர்.

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 27 இவ்விதம் உத்தவர் விதுரருடன் விசுவமூர்த்தியான பகவானுடைய குணங்களைப் பேசியதால் உண்டான ஆனந்த அமுதப் பெருக்கால் (பிரிவாற்ருமையால் ஏற்பட்ட) மன வருத்தந் தீரப் பெற்று யமுனை மணற்றிட்டில் இரவை ஒரு கணம்போல் கழித்துவிட்டு அங்கிருந்து (பதரிகாசிரமத்தை நோக்கிக்) கிளம்பினுர்.

---

4. 25. ந ஹி க்ருதார்த்தாஞு-மன்யத் க்ருத்ய-மஸ்தீத்யர்த்தः।

4. 26. **தத்வஸம்ராத்ய:**—தத்வோபதேசாய ஸம்ராத்ய:।
**பகவதைவ** ஸ்மரணமாத்ரேண தவாபி தத்வமுபதிஷ்ட-ப்ராயம்।

விதுரரே! புண்ணியஞ் செய்தவர்கள் அந்தியகாலத்தில் பகவானை நினைப்பர், பகவான் உம்மை நினைத்தார். உமது புண்ணியம் அளவிலடங்காது.

பா. பே.

---

4. 26. **तत्त्वसंराद्धः ।**

राजोवाच—

निधन-मुपगतेषु वृष्णिभोजे-ष्वधिरथ-यूथप-यूथपेषु मुख्यः ।
स तु कथ-मवशिष्ट उद्धवो यद् हरिरपि तत्यज आकृतिं त्र्यधीशः ॥ ४.२८ ॥

श्रीशुक उवाच—

ब्रह्म-शापापदेशेन कालेनामोघ-वाञ्छितः ।
संहृत्य स्वकुलं नूनं त्यक्ष्यन् देह-मचिन्तयत् ॥ ४.२९ ॥

अस्माल्लोका-दुपरते मयि ज्ञानं मदाश्रयम् ।
अर्हत्युद्धव एवाद्धा सम्प्रत्यात्मवतां वरः ॥ ४.३० ॥

नोद्धवोऽण्वपि मन्न्यूनो यद्गुणै-र्नार्दितः प्रभुः ।
अतो मद्वयुनं लोकं ग्राहयन्निह तिष्ठतु ॥ ४.३१ ॥

एवं त्रिलोकगुरुणा सन्दिष्टः शब्दयोनिना ।
बदर्याश्रम-मासाद्य हरिमीजे समाधिना ॥ ४.३२ ॥

---

அரசர் கூறியது—

4. 28 விருஷ்ணிகளிலும் போஜர்களிலும் அதிரதர்களும் தலைவர்களிட் சிறந்தவர்களும் நாசமடைந்திருக்க, மூவுலகுக்கும் நாதனை பகவானும்கூட தனது சரீரத்தை விட்டிருக்க, முக்கியரான உத்தவர் மட்டும் எங்ஙனம் எஞ்சி நின்றார்?

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 29 ஸத்திய ஸங்கல்பரான பகவான் பிராம்மணசாபம் என்று பெயர் கொண்ட தனது கால சக்தியினால் தனது குலத்தைச் சம்ஹரித்துத் தனது தேகத்தையும் விடக் கருதிப் பின்வருமாறு சிந்தித்தார்.

4. 30 "நான் இவ்வுலகினின்று மறைந்தபின் என்னிடமுள்ளதும் என்னைப்பற்றியதுமான ஞானத்தைக் கிரகிப்பதற்கு உத்தம அதிகாரி ஆத்மவான்களிற் சிறந்தவரான உத்தவரேயாவார்.

4. 31. "உத்தவர் என்னைவிட அணுமாத்திரமும் குறைந்தவரன்று, ஏனெனில் அவர் ஆத்மஜயம் பெற்றவர், விஷயங்களில் கலங்காதவர். ஆகையால் எனது ஞானத்தை உலகுக்குப் புகட்டிக்கொண்டு இங்கே இருக்கட்டும்."

4. 32. இங்ஙனம் மூவுலகுக்கும் குருவாகிய வேதநாயகரால் உபதேசிக்கப்பட்ட உத்தவர் பதரிகாசிரமத்தை யடைந்து ஹரியை (மனதை யடக்கிச்) சமாதியினால் ஆராதித்தார்.

---

4. 29. நஹ்யத்ர **சாப**: ப்ரபு: கிந்து **பகவதி**ச்சைவேத்யர்த்த: ।

4. 31. **மத்வயுனம்**—மத்விஷயம் । **க்ராஹயன்—உபதி**சன் । ஸ்ரீ ராமாவதாரத்தில் ஆஞ்ஜனேயரை இவ்வுலகிலிருக்கப் பணித்ததுபோல் ஸ்ரீ **கிருஷ்ணவதாரத்தில் உத்தவரை ப**கவான் பணித்தார்,

---

4. 28. **ध्रुवोरुतापः ।**
4. 29. **स्वकुलस्फीतं ।**
4. 31. **यद्गुणैर्निर्जितः ।** பா. பே.

विदुरोऽप्युद्धवा-च्छुत्वा कृष्णस्य परमात्मनः।
क्रीडयोपात्त-देहस्य कर्माणि श्लाघितानि च  ॥ ४.३३ ॥

देहन्यासं च तस्यैवं धीराणां धैर्य-वर्धनम्
अन्येषां दुष्करतरं पशूनां विक्लबात्मनाम्  ॥ ४.३४ ॥

आत्मानं च कुरुश्रेष्ठ कृष्णेन मनसेक्षितम्।
ध्यायन् गते भागवते रुरोद प्रेम-विह्वलः  ॥ ४.३५ ॥

कालिन्द्याः कतिभिः सिद्ध अहोभि-र्भरतर्षभः।
प्रापद्यत स्वः सरितं यत्र मित्रासुतो मुनिः  ॥ ४.३६ ॥

विदुर उवाच—

तदस्य कौषारव शर्मदातु-र्हरेः कथामेव कथासु सारम्।
उद्धृत्य पुष्पेभ्य इवार्तबन्धो शिवाय नः कीर्तय तीर्थकीर्तेः  ॥ ५.१५ ॥

मैत्रेय उवाच—

भवान् भगवतो नित्यं सम्मतः सानुगस्य च।
यस्य ज्ञानोपदेशाय माऽऽदिशद्भगवान् व्रजन्  ॥ ५.२१ ॥

---

4. 33-35. குருசிரேஷ்டரே! விளையாட்டாகச் சரீரமெடுத்த கிருஷ்ணபரமாத்மாவினுடைய சிறந்த லீலைகளையும், தீரர்களுக்குத் தைரியத்தை வளர்ப்பதும் அற்பப் பிராணிகளைப்போல் அறிவில்லாப் பேடிகளாகிய பிறர்க்குச் செய்யொண்ணாததுமான அவருடைய தேகத் தியாகத்தையும், கிருஷ்ணனால் தான் மனக்கண்ணால் கடாக்ஷிக்கப்பட்டதையும் கேட்டு அதையே தியானித்துக்கொண்டு, பாகவதராகிய உத்தவர் சென்றபின் பிரேமையினால் மனங்குழைந்து விதுரர் வாய்விட்டு அழுதார்.

4. 36. பரதகுல சிரேஷ்டரும் சித்தபுருஷருமான விதுரர் பின் யமுனைவிட்டுச் சில தினங்களில் மைத்திரேய முனிவர் எங்கிருந்தாரோ அந்த கங்காத்வாரத்தை யடைந்தார்.

விதுரர் கூறியது—

5. 15. மைத்திரேயரே! துன்புற்றோரின் துணைவரே! பரமபாவனமான கீர்த்தியுடையவரும் சகல மங்களங்களையு மருள்பவருமான அந்த ஹரியினுடைய கதையையே, புஷ்பங்களினின்று வண்டானது தேனைக் கிரகிப்பதுபோல் கதைகளின் ஸாரமாகத் திரட்டி எம் போன்றவரின் நன்மைக்காகக் கூறியருளும்.

---

4. 34. விக்லபாத்மனும்—அதீரசித்தானும்।

4. 36. ஸ்வ: ஸரிதம்—கங்காம்।

---

4. 34. दुष्करतमं।
4. 35. मनसाधृतम्।
4. 36. कालिन्द्यां  பா. பே.

अथ ते भगवल्लीला योगमायोप-बृंहिताः ।
विश्व-स्थित्युद्भवान्तार्था वर्णयाम्यनुपूर्वशः ॥ ५.२२ ॥

भगवानेक आसेदमग्र आत्मात्मनां विभुः ।
आत्मेच्छानुगतावात्मा नानामत्युपलक्षणः ॥ ५.२३ ॥

यथेदानीं तथाग्रे च पश्चादप्येत-दीदृशम् ।
सर्गो नवविधस्तस्य प्राकृतो वैकृतस्तु यः ॥ १०.१३ ॥

काल-द्रव्य-गुणै-रस्य त्रिविधः प्रतिसंक्रमः ।
आद्यस्तु महतः सर्गो गुणवैषम्य-मात्मनः ॥ १०.१४ ॥

द्वितीयस्त्वहमो यत्र द्रव्य-ज्ञान-क्रियोदयः ।
भूत-सर्ग-स्तृतीयस्तु तन्मात्रो द्रव्य-शक्तिमान् ॥ १०.१५ ॥

---

மைத்திரேயர் கூறியது—

5. 21. தாங்கள் பகவானுக்கும் அவனடியார்க்கும் என்றும் மிகுந்த பிரியமானவர். பரமபதம் செல்லுகையில் பகவான் (உம்மை நினைந்து) உமக்கு ஞானோபதேசம் செய்யும்படி எனக்குக் கட்டளையிட்டல்லவா சென்றார். (நீர் அப்படிப்பட்ட பெருமை வாய்ந்தவர்.)

5, 22. ஆகையால் உலகின் காப்பு படைப்பு அழிவு இவற்றின் நிமித்தம் யோக மாயையின் மூலம் ஏற்பட்ட பகவானுடைய லீலைகளைத் தொடர்பாக உமக்கு வர்ணிக்கின்றேன்.

5. 23. (சிருஷ்டிக்கு) முன் ஸர்வவியாபியான பகவான் எல்லா ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாக ஒருவராகவே இருந்தார். (சிருஷ்டிகாலத்தில்) இச்சாசக்தியால் பலவாய்த் தோற்றுபவரும் அவரே.

(மிக விரிவாக 6, 7, 8, 9 அத்தியாயங்களில் விராட் வர்ணனை, பிரம்மோத்பத்தி வர்ணனை முதலியன)

10. 13. (பிரபஞ்சமாகிய) இது இப்போது எப்படி இருக்கிறதோ அப்படியேதான் முன்னும் இருந்தது. இனியும் இப்படித்தான் இருக்கப்போகிறது. (பிரபஞ்ச) சிருஷ்டி பிராகிருதம் என்றும் வைகிருதம் என்றும் எது உண்டோ அது ஒன்பது வகைப்படும்.

10. 14. இதற்கு எதிரிடையான பிரளயம் காலத்தாலும் திரவியத்தாலும் குணத்தாலும் மூன்று வகைப்படும். (இனிச் சிருஷ்டிவகைகளைக் கூறுவாம்.) பரமாத்மாவினிடம் குணங்களின் ஏற்றத்தாழ்வால் ஏற்படும் முதல் சிருஷ்டி **மஹத்தத்துவம்.**

10. 15. இரண்டாவது **அஹங்காரம்;** அதிலிருந்து (பஞ்சபூத) திரவியமும் ஞானமும் (ஞானேந்திரியங்களும்), கிரியையும் (கர்மேந்திரியங்களும்) தோன்றுகின்றன. (பஞ்சபூத) திரவியத்தை உண்டாக்கும் சக்தியுடைய **தன்மாத்திரை**களின் சிருஷ்டி மூன்றாவதாம்.

---

5. 23. ஓ. ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத் நான்யத்கிஞ்சன மிஷத் ஸ ஈக்ஷத லோகான்னு ஸ்ருஜா இதி ॥ ஐ. உப. 1-1

ஓ. ஸோऽகாமயத । பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி ॥ தை. உப. 2-6

ஓ. விஷ்ணோஸ்து த்ரீணி ரூபாணி புருஷாக்யான்யதோவிது: । ப்ரதமம் மஹத: ஸ்ரஷ்ட்ரு த்விதீயந்த்வண்ட-ஸம்ஸ்திதம் । த்ருதீயம் ஸர்வ-பூதஸ்தம் தானி ஜ்ஞாத்வா விமுச்யதே ॥

—பாஞ்சராத்ரம்.

चतुर्थ ऐन्द्रियः सर्गो यस्तु ज्ञानक्रियात्मकः ।
वैकारिको देवसर्गः पंचमो यन्मयं मनः ॥ १०.१६ ॥

षष्ठस्तु तमसः सर्गो यस्त्वबुद्धि-कृतः प्रभो ।
षडिमे प्राकृताः सर्गो वैकृतानपि मे शृणु ॥ १०.१७ ॥

रजोभाजो भगवतो लीलेयं हरिमेधसः ।
सप्तमो मुख्य-सर्गस्तु षड्विध-स्तस्थुषां च यः ॥ १०.१८ ॥

वनस्पत्योषधि-लता-त्वक्सारा वीरुधो द्रुमाः ।
उत्स्रोतस-स्तमः प्राया अन्तः स्पर्शा विशेषिणः । ॥ १०.१९ ॥

तिरश्चा-मष्टमः सर्गः सोऽष्टाविंशद्विधो मतः ।
अविदो भूरितमसो घ्राणज्ञा हृद्यवेदिनः ॥ १०.२० ॥

---

10. 16. ஞானகர்ம வடிவான **இந்திரியங்களின்** சிருஷ்டி நான்காவது. (இந்திரியங்களின் அதிஷ்டானமான) **தேவதைகளின்** சிருஷ்டி ஐந்தாவது; இது அஹங்காரத்தின் காரியமான மனேவடிவானது.

10. 17. ஆறுவது தமஸ் அல்லது **அவித்தையின்** சிருஷ்டி; இதுவே புத்தியை (ஆவரணத்தாலும் விக்ஷேபத்தாலும்) கெடுப்பது. இவ்வாறும் பிராகிருத சிருஷ்டிகள். இனி வைகிருத சிருஷ்டிகளைப்பற்றிக் கேள்,

10. 18. இது எல்லாம் ரஜோகுணத்தை உபாதியாகக்கொண்ட பகவானுடைய லீலையே; தன்னையே எண்ணுபவர்களின் தாபத்தைப் போக்குபவன் அவன். (பிராகிருத சிருஷ்டியினின்று தோன்றிய) வைகிருத சிருஷ்டியில் முதலாவது அறுவகைப்பட்ட **ஸ்தாவரசிருஷ்டி**. இது ஏழாவதாம்.

10. 19. வனஸ்பதிகள், ஓஷதிகள், கொடிகள், துவக்ஸாரங்கள், வீருதங்கள், மரங்கள் என்ற இவை வேர்மூலம் ஸாரத்தைக் கிரகித்து மேல்நோக்கிச் செலுத்துபவைகளாகவும் அறிவு விளக்கமற்றவைகளாகவும் வெளிப்படையாகத் தோன்ருத உணர்ச்சி உடையவைகளாகவும் விசேஷித்துக் காணப்படுகின்றன.

10. 20. (திர்யக் யோனிகளின்) **பசுபக்ஷிகளின் சிருஷ்டி** எட்டாவதாம். அவை இருபத்தெட்டு உட்பிரிவுகளையுடையனவாம். எதிர்கால அறிவின்மையும் இருள் கவிந்த மனமும் மோப்பத்தினுல் அறியும் திறமையும், மனச்சாக்ஷி யறியாமையும் இவற்றின் குணங்கள்.

---

10, 19. ஓஷத்ய: பலபாகாந்தா: பஹுபுஷ்ப-பலோபகா: |
அபுஷ்பா: பலவந்தோ யே தே வனஸ்பதய: ஸ்ம்ருதா: |
புஷ்பிண: பலினச்சைவ வ்ருக்ஷாஸ்துபயத: ஸ்ம்ருதா: ||

**த்வக்ஸாரா:**—மூங்கில் முதலியவை.

**வீருத:**—கொடிபோன்றவை எனினும் வேறு பிடிப்பு வேண்டாமல் கடினமா யிருப்பவை.

**த்ருமா:**—புஷ்பித்துக் காய்ப்பவை.

10. 20. **ஹ்ருத்யவேதின:—**தீர்க்கானு-ஸந்தான சூன்யா; | ததா ச ச்ருதி:| " அதேதரேஷாம் பசூனும் அசனுபிபாஸே ஏவாபிஜ்ஞானம் நவிஜ்ஞாதம் வதந்தி ந விஜ்ஞாதம் பச்யந்தி ந விது: ச்வஸ்தனம் ந லோகா லோகாவிதி "

---

10. 17. **तामसः सर्गो ।**　　10. 18. **भगवतो लीलेयं ।**　　பா. பே.

अर्वाक्स्रोतस्तु नवमः क्षत्तरेक-विधो नृणाम् ।
रजोधिकाः कर्म-परा दुःखे च सुख-मानिनः ॥ १०.२५ ॥

वैकृता-स्त्रय एवैते देवसर्गश्च सत्तम ।
वैकारिकस्तु यः प्रोक्तः कौमारस्तूभयात्मकः ॥ १०.२६ ॥

देव-सर्गश्चाष्ट-विधो विबुधाः पितरोऽसुराः ।
गन्धर्वाप्सरसः सिद्धा यक्ष-रक्षांसि चारणाः ॥ १०.२७ ॥

भूत-प्रेत-पिशाचाश्च विद्याध्राः किन्नरादयः ।
दशैते विदुराख्याताः सर्गास्ते विश्व-सृक्-कृताः ॥ १०.२८ ॥

अतः परं प्रवक्ष्यामि वंशान्मन्वन्तराणि च ।
एवं रजः प्लुतः स्रष्टा कल्पादिष्वात्मभू-र्हरिः ।
सृजत्यमोघ-संकल्प आत्मैवात्मान-मात्मना ॥ १०.२९ ॥

चत्वारि त्रीणि द्वे चैकं कृतादिषु यथाक्रमम् ।
संख्यातानि सहस्राणि द्विगुणानि शतानि च ॥ ११.१९ ॥

---

10. 25. விதுரரே! ஒன்பதாவது **மனித சிருஷ்டி**. இவர்கள் ஒரே இனம். இவர்களுடைய ஆகாரம் கீழ்நோக்கிச் செலுத்துப்படுவது. இவர்கள் ரஜோகுணம் மேலிட்டவர்கள். கர்மத்திலேயே கண்ணுயிருப்பவர்கள். துக்கத்தையும் சுகமெனக் கருதும் இயல்புடையவர்கள்.

10. 26. நலம் மிக்கவரே! இம் மூன்றும் வைகிருதசிருஷ்டி. (இனிக் கூறப் போகும்) தேவசிருஷ்டியும் வைகிருதமே. ஏற்கெனவே (பிராகிருத சிருஷ்டியில்) வைகாரிகமாகக் கூறப்பட்ட (அதிஷ்டான) தேவஸர்க்கமும் ஸநத்குமாராதிகளின் சிருஷ்டியும் இரண்டு வகையிலும் சேரும்.

10. 27-28. **தேவசிருஷ்டி** எட்டு வகை—ஸுரர்; அஸுரர், பிதரர், கந்தர்வ-அப்ஸரஸ்-ஸித்தர்கள், யக்ஷ-ராக்ஷஸ-சாரணர்கள், பூதப்ரேத பிசாசங்கள், வித்யாதரர், கிந்நரர் முதலியோர். விதுரரே! இங்ஙனம் பிரம்மாவால் செய்யப்பட்ட சிருஷ்டிகள் பத்தும் உமக்கும் விளக்கிக் கூறப்பட்டன.

10. 29. இனி வம்சங்களையும் மன்வந்தரங்களையும் கூறுகிறேன். இவ்விதம் சிருஷ்டிசெய்பவர் ஸத்தியஸங்கல்பரான ஹரியே. அவரே பிரம்மா வடிவில் பிரதிகல்பத்தின் ஆதியிலும் ரஜோகுணத்தை மேற்கொண்டு தானுகத் தன்னையே (ஜகத்தாகத்) தன்னுலேயே சிருஷ்டித்துக்கொள்ளுகிறுர்.

11. 19. (காலத்தைப்பற்றிப் பேசுமிடத்து) கிருதம் முதலிய யுகங்களில் வரிசையாக நாலாயிரத்தெண்ணூறு, மூவாயிரத்தறுநூறு, இரண்டாயிரத்து நானூறு, ஆயிரத்திருநூறு (தேவவருஷங்கள்) கணக்கிடப்படுகின்றன.

---

10. 26. ஸநத்குமாராதீனும் ஸர்க்கஸ்து ப்ராக்ருதோ வைக்ருதச்ச தேவத்வேன மனுஷ்யத்வேன ச।

10. 26· एते वै देवसर्गश्च । பா. பே.

त्रिलोक्या युगसाहस्रं बहिराब्रह्मणो दिनम् ।
तावत्येव निशा तात यन्निमीलति विश्वसृक् ॥ ११.२२ ॥
यावद्दिनं भगवतो मनून् भुञ्जं-श्चतुर्दश ।
स्वं स्वं कालं मनु-र्भुंक्ते साधिकां ह्येक-सप्ततिम् ॥ ११.२३ ॥
मन्वन्तरेषु मनव-स्तद्वंश्या ऋषयः सुराः ।
भवन्ति चैव युगपत् सुरेशाश्चानु ये च तान् ॥ ११.२४ ॥
एष दैनन्दिनः सर्गो ब्राह्मस्त्रैलोक्य-वर्तनः ।
तिर्यङ्-नृ-पितृ-देवानां सम्भवो यत्र कर्मभिः ॥ ११.२५ ॥
मन्वन्तरेषु भगवान् बिभ्रत्सत्त्वं स्वमूर्तिभिः ।
मन्वादिभि-रिदं विश्व-मवत्युदित-पौरुषः ॥ ११.२६ ॥
पूर्वस्यादौ परार्धस्य ब्राह्मो नाम महानभूत् ।
कल्पो यत्राभवद्ब्रह्मा शब्दब्रह्मेति यं विदुः ॥ ११.३४ ॥

---

11. 22. (பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் எனும்) மூன்று உலகங்களுக் கப்பால் பிரம்மலோகம் வரை ஆயிரம் சதுர்யுகம் ஒரு பகலாகிறது. அப்பனே! பிரம்ம தேவன் எப்போது கண்மூடி யுறங்குகிறாரோ அந்த இரவும் அதே (ஆயிரம் சதுர்யுகம்) அளவுடையது.

11. 23. பிரம்மதேவனுடைய அளவு எதுவோ அதனுள் பதினான்கு மனுக்களின் காலம் செல்லுகிறது. எழுபத்தோரு சதுர்யுகங்களுக்குச் சற்று அதிகமான தமக்குரிய காலத்தை ஒவ்வொரு மனுவும் அனுபவிக்கிறார்.

11. 24. மன்வந்தரங்களில் மனுக்களும் மனுவம்சத்தரசர்களும், ரிஷிகளும், தேவர்களும், தேவேந்திரனும், அவர்களை யனுசரித்த கந்தர்வர்கள் முதலியோரும் ஒரே காலத்தில் உண்டாகின்றனர்.

11. 25. பிரம்மாவின் பகல்தோறும் நிகழும் இந்த சிருஷ்டியானது (பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் எனும்) மூவுலகங்களைப்பற்றியது. இவற்றில்தான் கர்மங்களி னால் பசு பக்ஷி மனிதர் பிதிரர் தேவர் முதலிய பிறவிகள் ஏற்படுகின்றன.

11. 26. ஸத்துவ குணத்தைத் தாங்கி பகவான் மன்வந்தரங்களில் தனது அவதாரங்கள் மூலமாகவும் மனு முதலியவர்கள் மூலமாகவும் தனது பெருமையை வெளிக்காட்டி பிரபஞ்சத்தை ரக்ஷிக்கிறார்.

11. 34. பிரம்மாவின் ஆயுட்காலத்தின் முதல் பரார்த்தத்தின் ஆரம்பத்தில் நிகழ்ந்தது பிராம்மகல்பம். அதில்தான் பிரம்மா தோன்றினார். அவரைத்தான் சப்தப் பிரம்மமாகிய வேதத்தை வெளியிட்டவராகக் கூறுகின்றனர்.

---

11. 22. ஒ. ஸஹஸ்ரயுகபர்யந்த-மஹர்-யத் ப்ரஹ்மணோ விது: ।
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தே஽ஹோராத்ரவிதோ ஜனா: ॥ —கீ. 8. 17.

---

11. 22. विश्वदृक् ।
11. 23. ऽनुवर्धते ।
11. 24. भवन्ति चैके । பா. பே.

तस्यैव चान्ते कल्पोऽभूद् यं पाद्म-मभिचक्षते ।
यद्धरे-र्नाभिसरस आसील्लोक-सरोरुहम् ॥ ११.३५ ॥

अयं तु कथितः कल्पो द्वितीयस्यापि भारत ।
वाराह इति विख्यातो यत्रासीत् सूकरो हरिः ॥ ११.३६ ॥

कालोऽयं द्विपरार्धाख्यो निमेष उपचर्यते ।
अव्याकृतस्यानन्तस्य अनादे-र्जगदात्मनः ॥ ११.३७ ॥

ससर्जाग्रे-ऽन्धतामिस्र-मथ तामिस्र-मादिकृत् ।
महामोहं च मोहं च तमश्चाज्ञानवृत्तयः ॥ १२.२ ॥

दृष्ट्वा पापीयसीं सृष्टिं नात्मानं बह्वमन्यत ।
भगवद्ध्यान-पूतेन मनसान्यां ततोऽसृजत् ॥ १२.३ ॥

सनकं च सनन्दं च सनातन-मथात्मभूः ।
सनत्कुमारं च मुनी-न्निष्क्रिया-नूर्ध्वरेतसः ॥ १२.४ ॥

---

11. 35. அதே பரார்த்தத்தின் முடிவில் பாத்மம் எனக்கூறப்படும் கல்பம் உண்டாயிற்று. இந்தக் கல்பத்தில் ஹரியின் நாபியாகிற மடுவிலிருந்து உலகம் தாமரை போல் கிளம்பிற்று.

11. 36. விதுரரே! இரண்டாவது பரார்த்தத்தின் ஆதியில் இந்த வராஹ கல்பமும் பிரசித்தமாய்க் கூறப்படும். இதில் தான் ஹரியானவர் வராஹாவதார மெடுத்தார்.

11. 37. இரண்டு பரார்த்த அளவுள்ள இந்தக் காலம் அவ்வியாகிருதரும் அனந்தரும், ஆதியற்றவரும் ஜகத்காரணருமான பகவானுக்கு நிமிஷம் போலாகின்றது.

12. 2. அவர் (பிரம்மதேவர்) ஆதியில் அக்ஞானத்தின் விருத்திகளான அந்த தாமிஸ்ரம், தாமிஸ்ரம், மஹாமோஹம், மோஹம் தமஸ் முதலியவற்றைச் சிருஷ்டித்தார்.

12. 3. இந்தப் பாவமயமான சிருஷ்டியைப் பார்த்துத் தன்னையே இகழ்ந்து கொண்டார். பின்பு பகவத்தியானத்தால் புனிதமான மனத்தால் வேறு சிருஷ்டிகளைச் செய்தார்.

12. 4. கிரியையற்றவர்களும் ஊர்த்துவரேதர்களும் ஆன ஸநகர், ஸநந்தர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்ற முனிவர்களை பிரம்மா சிருஷ்டித்தார்.

---

12. 2. ஒ. தமோऽவிவேகோ மோஹ: ஸ்யாதந்த:கரண-விப்ரம: |
மஹாமோஹஸ்து விஜ்ஞேயோ க்ராம்யபோக-ஸுகைஷணா ||
மரணம் ஹ்யந்த-தாமிஸ்ரம் தாமிஸ்ர: க்ரோத உச்யதே |
அவித்யா பஞ்சபர்வைஷா ப்ராதுர்ப்பூதா மஹாத்மன: ||

ஒ. அவித்யாஸ்மிதா-ராக-த்வேஷாபிநிவேசா: பஞ்சக்லேசா:
—பதஞ்ஜலி யோகஸூத்ரம்.

12. 4. **மனஸா**—ஒ. முன்னவர்களான ஏழு மகரிஷிகளும் நால்வர்களும் மனுக்களும் என் பாவனையால் என்னைப்போன்று சக்திவாய்ந்தவர்கள். மனத்தினின்றே உதித்தவர்கள்.
—கீ. 10. 6.

ஒவ்வொரு கல்பத்திலும் ஸனகாதியர் சிருஷ்டி இல்லை; பிராம்ம கல்பத்தின் ஆதியில் அவர்களின் சிருஷ்டி.

तान् बभाषे स्वभूः पुत्रान् प्रजाः सृजत पुत्रकाः।
तन्नैच्छन् मोक्षधर्माणो वासुदेवपरायणाः ॥ १२.५ ॥

अथाभिध्यायतः सर्गं दशपुत्राः प्रजज्ञिरे।
भगवच्छक्तियुक्तस्य लोकसन्तान-हेतवः ॥ १२.२१ ॥

मरीचि-रत्र्यङ्गिरसौ पुलस्त्यः पुलहः क्रतुः।
भृगु-र्वसिष्ठो दक्षश्च दशमस्तत्र नारदः ॥ १२.२२ ॥

कस्य रूपमभूद् द्वेधा यत्काय-मभिचक्षते।
ताभ्यां रूपविभागाभ्यां मिथुनं समपद्यत ॥ १२.५२ ॥

यस्तु तत्र पुमान् सोऽभून्मनुः स्वायंभुवः स्वराट्।
स्त्री याऽऽसीच्छतरूपाख्या महिष्यस्य महात्मनः ॥ १२.५३ ॥

स चापि शतरूपायां पंचापत्यानजीजनत्।
प्रियव्रतोत्तानपादौ तिस्रः कन्याश्च भारत ॥
आकूति-र्देवहूतिश्च प्रसूतिरिति सत्तम ॥ १२.५५ ॥

---

12. 5. அந்தப் புத்திரர்களை நோக்கிப் பிரம்மா, "புத்திரர்களே! பிரஜைகளைச் சிருஷ்டியுங்கள்" என்று கூறினார். மோக்ஷதர்மத்தை விரும்பியவர்களும் வாசுதேவ பராயணர்களுமான அவர்கள் அதை (சிருஷ்டித் தொழிலை) விரும்பவில்லை.

12. 21. பகவானுடைய சக்தியால் தூண்டப்பட்டவரும் மேலும் சிருஷ்டியைப் பற்றிச் சிந்திப்பவருமான பிரம்மாவிடம் உலகத்தின் பெருக்குக்குக் காரணபூதர்களான பத்துப் புத்திரர்கள் உண்டாயினர்.

12. 22. இவர்கள், மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், க்ரது, பிருகு, வசிஷ்டர், தக்ஷர், பத்தாவதாக நாரதர்.

12. 52. (இதன்பின் மேலும் பிரஜாவிருத்தியை விரும்பிப் பிரம்மா ஆலோசிக்கையில்) பிரம்மாவின் சரீரத்திலிருந்து அவர் போலவே ஒரு உருவம் தோன்றி இரண்டாகப் பிரிந்தது. இப்படிப் பிரிந்த பிரம்ம சரீரத்தைக் **காயம்** என்று கூறுவர். ('க' என்றால் பிரம்மா; அவருடைய சரீரமாகிய இது காயம்). பிரிந்த அவ்விரண்டு வடிவங்களினின்றும் ஸ்திரீ புருஷர்களரன இரட்டை உண்டாயிற்று.

12. 53. அவற்றுள் எது புருஷனோ அதுவே ஆத்மசித்தான ஸ்வாயம்புவமனு. எது ஸ்திரீயோ அதுவே சதரூபை எனப் பிரசித்திபெற்றவள். அவள் மகாத்மாவாகிய மனுவுக்குப் பத்தினியானாள்.

12. 55. நலம் மிக்க விதுரரே! அம்மனுவும் சதரூபையிடம் ஐந்து மக்களை உண்டாக்கினார். அவர்கள் பிரியவிரதர், உத்தானபாதர் என்ற இரண்டு புத்திரர்களும், ஆகூதி, தேவஹூதி, ப்ரஸூதி என்ற மூன்று புத்திரிகளும் ஆவர்.

---

12. 52. **த்விதாபூ**த-மித்யாச்சர்யாத் காயம**த்**யாப்யபிசக்ஷதே।

12. 53. **स्त्री वासीत्। महिष्यश्च।** பா. பே.

आकूतिं रुचये प्रादात् कर्दमाय च मध्यमाम् ।
दक्षायादात् प्रसूतिं च यत आपूरितं जगत् ॥ १२.५६ ॥

ब्रह्मोवाच—

परं शुश्रूषणं मह्यं स्यात् प्रजा-रक्षया नृप ।
भगवां-स्ते प्रजा-भर्तु-हृषीकेशोऽनुतुष्यति ॥ १३.१२ ॥

मनुरुवाच—

यदोकः सर्व-सत्त्वानां मही मग्ना महाम्भसि ।
अस्या उद्धरणे यत्नो देव देव्या विधीयताम् ॥ १३.१५ ॥

मैत्रेय उवाच—

अथात्र किमनुष्ठेय-मस्माभिः सर्गयोजितैः ।
यस्याहं हृदयादासं स ईशो विदधातु मे ॥ १३.१७ ॥

इत्यभिध्यायतो नासा-विवरात् सहसानघ ।
वराहतोको निरगा-दङ्गुष्ठ-परिमाणकः ॥ १३.१८ ॥

तस्याभिपश्यतः खस्थः क्षणेन किल भारत ।
गजमात्रः प्रववृधे तदद्भुत-मभून्महत् ॥ १३.१९ ॥

---

12. 56. ஆகூதியை ருசி என்னும் பிரஜாபதிக்கும், நடுப்பெண்ணாகிய தேவஹூதியைக் கர்த்தமப் பிரஜாபதிக்கும், பிரஸூதியை தக்ஷப்பிரஜாபதிக்கும் கொடுத்தார். இவர்கள் மூலம் (பிரஜைகளால்) உலகம் நிரம்பியதாயிற்று.

பிரம்மா கூறியது—

13. 12. ஸ்வாயம்புவ மகாராஜரே! பிரஜைகளை ரக்ஷிப்பதே எனக்குச் செய்யும் சிறந்த பணிவிடையாகும். பிரஜைகளைப் பரிபாலிக்கும் உன்னிடம் பகவான் ஹ்ருஷீகேசர் சந்தோஷமடைவார்.

(ஸ்வாயம்புவ)மனு கூறியது—

13. 15. எல்லா வுயிர்களுக்கும் எது இருப்பிடமோ அந்த பூமி பிரளயஜலத்தில் மூழ்கி யிருக்கிறது. அந்த பூதேவியை உயரக் கிளப்புவதில் தேவரீருடைய முயற்சி யானது ஏற்படவேண்டும்.

மைத்திரேயர் கூறியது—

13. 17-18. "இப்பொழுது இவ்விஷயத்தில் நான் என்ன செய்யவேண்டும்? சிருஷ்டி விஷயத்தில் நியமனம் செய்யப்பட்ட நான் செய்யத்தகுந்ததை எவருடைய இருதயத்திலிருந்து நான் உண்டானேனோ அந்த ஈசன் எனக்குக் காட்டி யருளவேண்டும்" என்று பிரம்மா தியானிக்கையில், பாவமற்றவரே! அவருடைய நாசித் துவாரத்தினின்று கட்டைவிரலளவுள்ள ஒரு சிறு பன்றிக்குட்டி வெளிவந்தது.

13. 19. விதுரரே! அவர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அது ஒரு கணத்தில் ஆகாயத்தை யடைந்து யானையளவாக வளர்ந்துவிட்டது மிகவும் ஆச்சரியமாயிருந்தது.

मरीचि-प्रमुखै-र्विप्रैः कुमारै-र्मनुना सह ।
दृष्ट्वा तत् सौकरं रूपं तर्कयामास चित्रधा ॥ १३.२० ॥

किमेतत् सौकर-व्याजं सत्त्वं दिव्य-मवस्थितम् ।
अहो बताश्चर्य-मिदं नासाया मे विनिःसृतम् ॥ १३.२१ ॥

इति मीमांसतस्तस्य ब्रह्मणः सह सूनुभिः ।
भगवान् यज्ञपुरुषो जगर्जागेन्द्र-सन्निभः ॥ १३.२२ ॥

स्वदंष्ट्रयोद्धृत्य महीं निमग्नां स उत्थितः संरुरुचे रसायाः ।
तत्रापि दैत्यं गदया पतन्तं सुनाभ-सन्दीपित-तीव्र-मन्युः ।
जघान रुन्धान-मसह्य-विक्रमं स लीलयेभं मृगराडिवाम्भसि ॥ १३.३१ ॥

ऋषय ऊचुः—

जितं जितं ते ऽजित यज्ञभावन त्रयीं तनुं स्वां परिधुन्वते नमः ।
यद्रोमगर्तेषु निलिल्यु-रध्वरा-स्तस्मै नमः कारण-सूकराय ॥ १३.३४ ॥

---

13. 20. மரீசி முதலிய பிரஜாபதிகளுடனும், ஸனகர் முதலிய குமாரர்களுடனும், ஸ்வாயம்புவமனுவுடனும்கூட பிரம்மாவானவர் அந்தப் பன்றி வடிவத்தைக் கண்டு பின் வருமாறு) பலவிதமாகச் சிந்திக்கலானார்.

13. 21. "ஆகாயத்தில் பன்றி யுருக்கொண்டு நிற்கும் இந்த தெய்வீகப் பிராணி எதுவா யிருக்கலாம்? என்ன ஆச்சரியம்! இது எனது நாசியிலிருந்தல்லவா வெளி வந்தது?"

13. 22. இங்ஙனம் பிரம்மதேவர் தனது புத்திரர்களுடன் சிந்தித்துக்கொண் டிருக்கையில் (தன்னை யாரெனக் காட்டுபவராய்) பகவான் யக்ஞபுருஷர் மலைபோல் வளர்ந்து கர்ஜித்தார்.

13. 31. (பின் பிரளயஜலத்தில்) முழுகியிருந்த பூமியைத் தனது தெற்றிப் பற்களிடை தூக்கிக்கொண்டு ரஸாதலத்தினின்றும் கிளம்பியபோது (விளக்கமுடியாத அதிசயமான) அழகுடன் விளங்கினார். அப்போது கதையைத் தூக்கிக்கொண்டு அவர் மேல் பாய்ந்து வழிமறித்த ஹிரண்யாக்ஷனைக் கண்டு அவன் மேல் சக்ராயுதம்போல் தீக்ஷ்ணமான கோபப்பார்வையைச் செலுத்துபவராய்ச் சிங்கமானது யானையைக் கொல்லு வதுபோல் எதிர்த்தற்கரிய வீரியமுடைய அவனை விளையாட்டாக பிரளயஜலத்திலேயே கொன்றார்.)

ரிஷிகள் கூறியது—

13. 34. யக்ஞங்களால் ஆராதிக்கப்படும் பகவானே! ஜயிக்கப்படாதவரே! ஜய விஜயீபவ! (இப்பொழுது காணப்படும்) உமது சரீரம் வேதமயமானது. அதைச் சிலிர்க் கும்போது வேதத்தின் கருத்து வெளிப்படுகின்றது. உமக்கு நமஸ்காரம். உமது மயிர்க் கால்களில் யாகங்கள் ஒளிந்திருக்கின்றன. (பூமியை உத்தாரணம் செய்யவேண்டிய) காரணத்தால் பன்றி வடிவெடுத்த உமக்கு நமஸ்காரம்.

---

13. 34. சுவேதவராஹ கல்பத்தில் ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் பிரம்மாவின் நாசியி லிருந்து தோன்றி பூமியை உத்தாரணம் செய்தார். ஆறாவது சாக்ஷுஷ மன்வந்தரத்தில் எதிர் பாராது ஏற்பட்ட பிரளயஜலத்தில் கருப்பு வர்ணமான வராஹமாகத் தோன்றி பூமியை உத்த ரணம் செய்து ஹிரண்யாக்ஷனை வதம் செய்தார். இரண்டையும் சேர்த்து மைத்ரேயர் இங்கு கூறுகிறார். —விசுவநாத சக்ரவர்த்தி: ஸாரார்த்த தர்சினீ.

---

13. 31. विमग्नां । सन्नादसन्दीपित ।

13. 34. निलिल्युरद्दयः । பா. பே.

नमो नमस्तेऽखिल-मन्त्र-देवता-द्रव्याय सर्वक्रतवे क्रियात्मने ।
वैराग्य-भक्त्यात्मजयानु-भावित-ज्ञानाय विद्यागुरवे नमो नमः ॥ १३.३९ ॥

मैत्रेय उवाच—

स इत्थं भगवानुर्वीं विष्वक्सेनः प्रजापतिः ।
रसाया लीलयोन्नीता-मप्सु न्यस्य ययौ हरिः ॥ १३.४७ ॥

विदुर उवाच—

तस्य चोद्धरतः क्षोणीं स्वदंष्ट्राग्रेण लीलया ।
दैत्य-राजस्य च ब्रह्मन् कस्माद्धेतो-रभून्मृधः ॥ १४.३ ॥

मैत्रेय उवाच—

अथात्रापीतिहासोऽयं श्रुतो मे वर्णितः पुरा ।
ब्रह्मणा देवदेवेन देवाना-मनुपृच्छताम् ॥ १४.६ ॥

दिति-र्दाक्षायणी क्षत्त-र्मारीचं कश्यपं पतिम् ।
अपत्यकामा चकमे सन्ध्यायां हृच्छयार्दिता ॥ १४.७ ॥

इष्ट्वाग्निजिह्वं पयसा पुरुषं यजुषां पतिम् ।
निम्लोचत्यर्क आसीन-मग्न्यगारे समाहितम् ॥ १४.८ ॥

---

13. 39. எல்லா மந்திரங்களும் தேவதைகளும் திரவியங்களும் கிரதுக்களும் கிரியைகளும் எவருடைய வடிவமோ அவருக்கு நமஸ்காரம். வைராக்கியம், பக்தி, இந்திரியஜயம் முதலிய சாதனங்களால் அடையப்பெற்ற ஞானவடிவினரும் வித்தியா குருவுமான உமக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

மைத்திரேயர் கூறியது—

13. 47. இங்ஙனம் பிரஜாபதியும் விஷ்வக்ஸேனருமான பகவான் ரஸாதலத்தினின்று விளையாட்டாக உயரத் தூக்கிவந்த பூமியைப் பிரளயஜலத்தில் மிதக்கும்படி வைத்துவிட்டு மறைந்துவிட்டார்.

விதுரர் கூறியது—

14. 3. பிரம்மஸ்வரூபியான மைத்திரேயரே! அவர் அங்ஙனம் விளையாட்டாகத் தன் தெற்றிப்பல் நுனியில் பூமியைத் தூக்கி வருகையில் அசுர ராஜனுக்கும் அவருக்கும் எக்காரணத்தால் போர் ஏற்பட்டது?

மைத்திரேயர் கூறியது—

14. 6. இதே கேள்வியை முன்னொரு சமயம் தேவர்கள் கேட்கத் தேவதேவரான பிரம்மா அவர்களுக்கு வர்ணித்த இதிஹாஸ வரலாறு என்னால் கேட்கப்பட்டுளது. (அதை உமக்குக் கூறுகிறேன்.)

14. 7. விதுரரே! தக்ஷப்பிரஜாபதியின் பெண்ணான திதிதேவி புத்திரனையடைய விரும்பியவளாய் காமத்தால் பீடிக்கப்பட்டவளாய் மாலை வேளையில் மரீசி புத்திரனும் தனது பர்த்தாவுமான கசியபரைச் சேர அவாவினாள்.

14. 8. அக்கினியை நாவாகவுடையவரும் யஜுஸ்பதியுமான பகவானைப் பாலினால் பூஜித்துவிட்டு, சூரியன் அஸ்தமிக்கும் அச்சமயத்தில் அக்கினிஹோத்திர சாலையில் தியானத்திலிருக்கும் கசியபரை திதிதேவி அணுகினாள்.

---

14. 7. **ஹ்ருச்சய:**— காம: |
14. 8. **யஜுஷாம்பதிம்**—யஜ்ஞானாம்பதிம் விஷ்ணும் |

दितिरुवाच—
अथ मे कुरु कल्याण कामं कंजविलोचन।
आर्तोपसर्पणं भूमन्नमोघं हि महीयसि ॥ १४.१४ ॥

मैत्रेय उवाच—
इति तां वीर मारीचः कृपणां बहुभाषिणीम्।
प्रत्याहानुनयन् वाचा प्रवृद्धानङ्ग-कश्मलाम् ॥ १४.१५ ॥

कश्यप उवाच—
एषा घोरतमा वेला घोराणां घोरदर्शना।
चरन्ति यस्यां भूतानि भूतेशानुचराणि ह ॥ १४.२२ ॥

श्मशान-चक्रानिल-धूलि-धूम्र-विकीर्ण-विद्योत-जटाकलापः।
भस्माव-कुण्ठामल-रुक्म-देहो देवस्त्रिभिः पश्यति देवरस्ते ॥ १४.२४ ॥

ब्रह्मादयो यत्कृत-सेतु-पाला यत्कारणं विश्वमिदं च माया।
आज्ञाकरी तस्य पिशाच-चर्या अहो विभूम्न-श्चरितं विडंबनम् ॥ १४.२८ ॥

திதி கூறியது—
14. 14. அழகிய கண்களையுடையவரே! மங்கள வடிவினரே! மகாத்மாவே! தேவரீர் அடியேனது ஆசையைப் பூர்த்திசெய்தருளவேண்டும். துன்புற்றோர் மகான்களை யணுகினால் அது ஒருநாளும் வீண்போவதில்லை.

மைத்திரேயர் கூறியது—
14. 15. வீரரே! விதுரரே! இவ்விதம் வெகுவாய்ப் பேசுகின்றவளும் காமக் கிளர்ச்சியால் மதிமயங்கியவளும் துன்புற்றவளுமான அவளை நல்ல வார்த்தைகளால் சமாதானப்படுத்துபவராய்க் கசியபர் பின்வருமாறு கூறலானார்.

கசியபர் கூறியது—
14. 22. மிகவும் கடுமையான இந்த ஸந்தியாவேளை கொடுஞ்செயல் புரியும் அசுரர்களுக் குரியது. மிகவும் பயங்கரமானது. பூதேசனான ருத்திரனுடைய பூதகணங்கள் இந்த வேளையில் வெளிப்போந்து சஞ்சரிக்கின்றனர்.

14. 24. சுடுகாட்டில் சுழல்காற்றிரைத்த புழுதி படிந்து காற்றில் அலைவுற்றுப் பிரகாசிக்கின்ற ஜடைகளுடன் கூடியவரும், சாம்பல்பூச்சுடையவரும் ஆயினும் இயற்கையில் நிர்மலமான பொன்போன்ற மேனியுடையவரும் உனது சகோதரியின் பர்த்தாவும் ஆகிய ஸ்ரீ ருத்திரதேவர் தமது முக்கண்களாலும் பார்த்துக்கொண்டிருக்கிறார்.

14. 28. பிரம்மாதி தேவர்கள் எவருடைய ஆணையைப் பரிபாலிக்கின்றனரோ, இவ்வுலகு எவரைக் காரணமாக வுடையதோ, யோகமாயை எவருடைய கட்டளைப்படி நடக்கிறாளோ அந்த அளவுகடந்த மகிமை பொருந்திய மகாதேவனுடைய பேய்த் தொழிலும் விசித்திரமான லீலையும் நம்போன்றவர்களால் அறிதற்குமியலாதது.

14. 14. **ஆர்த்தோபஸர்ப்பணம்**—ஆர்த்தானும் சரணகமனம்।
14. 28. ஒ. அலோக-ஸாமான்ய-மசிந்த்ய-ஹேதுகம்
த்விஷந்தி மந்தாச் சரிதம் மஹாத்மனாம்। —காளிதாஸன்.

14. 14. भूमन्नमोघं कर्तुं-मर्हसि। आर्त्तोपसर्पणम्। பா. பே.

मैत्रेय उवाच—

सैवं संविदिते भर्त्रा मन्मथोन्मथितेन्द्रिया ।
जग्राह वासो ब्रह्मर्षे-र्वृषलीव गतत्रपा ॥ १४.२९ ॥

स विदित्वाथ भार्यायास्तं निर्बन्धं विकर्मणि ।
नत्वा दिष्टाय रहसि तयाथोपविवेश ह ॥ १४.३० ॥

अथोपस्पृश्य सलिलं प्राणानायम्य वाग्यतः ।
ध्यायन् जजाप विरजं ब्रह्मज्योतिः सनातनम् ॥ १४.३१ ॥

दितिस्तु व्रीडिता तेन कर्मावद्येन भारत ।
उपसङ्गम्य विप्रर्षि-मधोमुख्यभ्यभाषत ॥ १४.३२ ॥

दितिरुवाच—

मा मे गर्भमिमं ब्रह्मन् भूतानामृषभोऽवधीत् ।
रुद्रः पतिर्हि भूतानां यस्याकरव-मंहसम् ॥ १४.३३ ॥

---

மைத்திரேயர் கூறியது—

14. 29. பர்த்தாவால் இவ்விதம் அறிவுறுத்தப்பட்டும், மன்மத விகாரத்தால் கலங்கிய இந்திரியங்களையுடைய திதிதேவி வேசிபோல் வெட்கத்தைவிட்டுப் பிரம்மரிஷி யின் வஸ்திரத்தைப் பற்றினாள்.

14. 30. தகுதியற்ற செயலில் அங்ஙனம் மனைவியால் ஏற்பட்ட நிர்ப்பந்தத்தை யுணர்ந்து விதியை வணங்கி அவளுடன் இரகசியத்தில் கூடினார்.

14. 31. பின் ஸ்நாநம் செய்துவிட்டு மௌனியாகிப் பிராணாயாமம் செய்து நிர்மல மான பிரம்மஜோதியைத் தியானித்து ஸநாதனமான காயத்திரியை ஜபித்தார்.

14. 32. விதுரரே! திதிதேவியோவெனில் நிந்தைக்குரிய தனது செயலுக்கு வெட்கிப் பிரம்மரிஷியை யணுகித் தலைகுனிந்து பின்வருமாறு கூறினாள்.

திதி கூறியது—

14. 33. பிரம்ம ஸ்வரூபியே! பூதபதியான ஸ்ரீ ருத்திரருக்கு நான் அபராதம் செய்துவிட்டேன். எனினும் அந்த பூதநாதர் எனது இக்கருவைச் சிதைவுபடுத்தாதிருக்க வேண்டும்.

---

14. 33. **ருத்ர:**—ருத் **து:**க்கம் தத் **த்**ராவயதீதி ருத்ர: |

कश्यप उवाच—

अप्रायत्या-दात्मनस्ते दोषान्-मौहूर्तिकादुत ।
मन्निदेशातिचारेण देवानां चातिहेलनात् ॥ १४.३७ ॥

भविष्यत-स्तवाभद्रा-वभद्रे जाठराधमौ ।
लोकान् सपालांस्त्रीं- श्चण्डि मुहुराक्रन्दयिष्यतः ॥ १४.३८ ॥

तदा विश्वेश्वरः क्रुद्धो भगवां-ल्लोकभावनः ।
हनिष्य-त्यवतीर्यासौ यथाद्रीन् शतपर्वधृक् ॥ १४.४० ॥

पुत्रस्यैव तु पुत्राणां भवितैकः सतां मतः ।
गास्यन्ति यद्यशः शुद्धं भगवद्यशसा समम् ॥ १४.४४ ॥

स वै महाभागवतो महात्मा महानुभावो महतां महिष्ठः ।
प्रवृद्ध- भक्त्या ह्यनुभाविताशये निवेश्य वैकुण्ठ-मिमं विहास्यति ॥ १४.४७ ॥

मैत्रेय उवाच—

श्रुत्वा भागवतं पौत्र-ममोदत दिति-र्भृशम् ।
पुत्रयोश्च वधं कृष्णा-द्विदित्वाऽऽसीन्महामनाः ॥ १४.५० ॥

---

கசியபர் கூறியது—

14. 37-38. அமங்களமானவளே! சண்டியே! உனது மனத்தின் அழுக்காலும் வேளையின் தோஷத்தாலும் என் கட்டளையை மீறியதாலும் தேவர்களை அவமதித்ததாலும் உனக்கு அமங்களமான இரண்டு புத்திரர்கள் உண்டாகப் போகின்றனர். அவ்வதமர்கள் முவ்வுலகங்களையும் லோகபாலர்களையும் அடிக்கடி இம்சித்துக் கதறும்படி செய்யப் போகின்றனர்.

14. 40. அப்போது லோகநாயகனும் லோகரக்ஷகனுமான பகவான் கோபங்கொண்டு அவதாரம் செய்து இந்திரன் மலைகளை நொறுக்குவதுபோல் இவர்களை வதைக்கப்போகிறார்.

14. 44. ஆனால் உனது புத்திரனுடைய புத்திரர்களுக்குள் ஒருவன் ஸாதுக்களுக்குப் பிரியனாக இருப்பான். பகவானுடைய புகழுக்குச் சமமாக அவனுடைய நிர்மலமான புகழைச் சாதுக்கள் பாடுவார்கள்.

14. 47. மகாபாகவதனும் மகாத்மாவும் விசாலமான உள்ளம் படைத்தவனும் மகான்களுட் சிறந்தவனும் ஆகிய அவன் பக்திப் பெருக்கால் பாவனமான உள்ளத்தில் வைகுண்டநாதனை நிலைபெறச்செய்து இந்த தேகாபிமானத்தை விடப்போகிறான்.

மைத்திரேயர் கூறியது—

14. 50. திதிதேவி பகவத் பக்தனை பேரன் பிறக்கப்போகிறான் என்று கேட்டு அதனால் (மனந்தேறி) மிகுந்த சந்தோஷத்தை யடைந்தாள், தனது புத்திரர்களின் வதமும் பகவானால் ஏற்படும் என்பதை யறிந்து (அதனால் அவர்களுக்கும் நல்ல கதி கிடைக்கும் என்று) பெருமிதம் உடையவளாக ஆனாள்.

---

14. 37. चैव हेलनात् ।
14. 40. भगवांल्लोकभावितः । 14. 50. पौत्रं मुमोद च । பா. பே.

प्राजापत्यं तु तत्तेजः परतेजोहनं दितिः ।
दधार वर्षाणि शतं शङ्कमाना सुरार्दनात् ॥ १५.१ ॥

लोके तेन हतालोके लोकपाला हतौजसः ।
न्यवेदयन् विश्वसृजे ध्वान्त-व्यतिकरं दिशाम् ॥ १५.२ ॥

ब्रह्मोवाच—

मानसा मे सुता युष्मत् पूर्वजाः सनकादयः ।
चेरु-र्विहायसा लोकाँ-ल्लोकेषु विगतस्पृहाः ॥ १५.१२ ॥

त एकदा भगवतो वैकुण्ठस्यामलात्मनः ।
ययु-र्वैकुण्ठनिलयं सर्वलोक-नमस्कृतम् ॥ १५.१३ ॥

तस्मिन्नतीत्य मुनयः षडसज्जमानाः
कक्षाः समानवयसावथ सप्तमायाम् ।
देवावचक्षत गृहीतगदौ परार्ध्य-
केयूरकुण्डल-किरीट-विटंक-वेषौ ॥ १५.२७ ॥

---

15. 1. கசியபப் பிரஜாபதியின் அவ்வீரியம் எதிரிகளின் வீரியத்தை நாசம் செய்யக் கூடியது. தேவர்களின் பீடையைச் சங்கித்து அந்த வீரியத்தை நூருண்டு தன் வயிற்றில் திதிதேவி தாங்கினுள்.

15. 2. அதனுல் (அந்த அசுரக்கருவின் வளர்ச்சியால்) உலகில் ஆதித்தியன் முதலிய தேவர்களும் லோகபாலர்களும் வீரியமும் ஒளியும் இழந்தவர்களாயினர். அப்போது அவர்கள் பிரம்மாவிடம் சென்று எத்திக்கிலும் இருள் கவிந்தாப்போல் தோன்றுவதற்குக் காரணந் தெரியவில்லையே என்று முறையிட்டனர்.

பிரம்மா கூறியது—

15. 12. (தேவர்களே! இதன் வரலாற்றை ஆதியிலிருந்து கூறுகிறேன். கேளுங்கள்.) எனது மானஸபுத்திரர்கள், உங்களுக்கு முன் பிறந்தவர்கள், ஸநகாதிகள்; அவர்கள் உலக விஷயங்களில் பற்றற்றவர்கள். ஆகாயமார்க்கமாய் (எங்குந் தடையின்றி) எல்லா உலகங்களிலும் சஞ்சரித்து வந்தனர்.

15. 13. அவர்கள் ஒரு சமயம் பரந்தாமனும் பரமபாவனனுமான பகவான் நித்திய வாசம் செய்வதும் எல்லா வுலகங்களுக்கும் மேம்பட்டதுமான வைகுண்டத்தை யடைந்தனர்.

15. 27. அம் முனிவர்கள் அங்கு (காணும் அற்புதங்களைக் கவனியாதவர்களாய்ப் பகவானைக் காணும் ஆசையால்) எதிலும் பற்றின்றி ஆறு வாயில்களைக் கடந்தபின் ஏழாவது வாயிற்படியில் தோள்வளைகள், குண்டலம், கிரீடம் முதலிய விலையுயர்ந்த ஆபரணங்கள் அணிந்து கதைகளை யேந்திக்கொண்டு நிற்கும் ஸம வயதுள்ள இரண்டு தேவர்களைக் கண்டனர்.

---

15. 2· तेन कृतालोके । பா. பே.

तान् वीक्ष्य वातरशनांश्चतुरः कुमारान्
वृद्धान् दशार्ध-वयसो विदितात्म-तत्त्वान् ।
वेत्रेण चास्खलयता-मतदर्हणांस्तौ
तेजो विहस्य भगवत्प्रतिकूलशीलौ ॥ १५.३० ॥

मुनय ऊचुः—
न ह्यन्तरं भगवतीह समस्तकुक्षा-
वात्मान-मात्मनि नभो नभसीव धीराः ।
पश्यन्ति यत्र युवयोः सुरलिंगिनोः किं
व्युत्पादितं ह्युदरभेदि भयं यतोऽस्य ॥ १५.३३ ॥

तद्वा-ममुष्य परमस्य विकुण्ठभर्तुः
कर्तुं प्रकृष्टमिह धीमहि मन्दधीभ्याम् ।
लोकानितो व्रजतमन्तर-भाव-दृष्ट्या
पापीयस-स्त्रय इमे रिपवोऽस्य यत्र ॥ १५.३४ ॥

---

15. 30. இடையில் ஆடையில்லாதவர்களும், விருத்தர்களாயினும் ஐந்து வயதுக் குழந்தைகளைப்போலிருப்பவரும், ஆத்மஞானிகளும் ஆகிய அந்த நான்கு குமாரர்களை யும் (அவர்கள் உட்புகும்போது) துவாரபாலர்கள் பிரம்பினால் தடுத்தனர். அவர்க ளுடைய தகுதிக்கு இச்செய்கை ஒவ்வாது; அது முனிவர்களுடைய தவ வலிமையை அவமதித்ததாயிற்று; பகவானுடைய திருவுள்ளக் குறிப்புக்கும் மாறுபட்டதாக இருந்தது.

முனிவர்கள் கூறியது—

15. 33. உலகனைத்தையும் தன் வயிற்றில்கொண்ட பகவானிடம் புத்திசாலிகள் சிறிதும் பேதத்தைக் காண்பதில்லை. சிறிய ஆகாயம் பெரிய ஆகாயத்தில் அடங்கிய வாறு தங்களைப் பரமாத்மாவிடம் அடங்கியவர்களாகவே காண்கின்றனர். அப்படி யிருக்க தேவவேஷம் பூண்ட உங்களுக்கு (இந்த வைகுண்ட நிலயத்திலும்) தேகபேத முடைய அறிவிலிகள் கற்பிக்கும் பயம் (பகவானுக்கும் பிறரால் பயம் உண்டு என்ற எண்ணம்) எங்ஙனம் ஏற்பட்டது?

15. 34. நீங்கள் (பரமபுருஷனை இந்த வைகுண்டநாதனுடைய பாரிஷதர்களா யிருந்தும் மந்தபுத்தியுடையவர்களா யிருப்பதால் உங்களைச் சீர்படுத்த விரும்பி இங்ஙனம் சிந்திக்கின்றோம். பேதபுத்தியுடைய பாவிக்கு (காமம் குரோதம் லோபம் என்ற) மூன்று பகைகள் எங்கு உண்டோ அந்த உலகங்களுக்கு இங்கிருந்து நீங்கள் செல்லக் கடவீர்கள்.

---

15. 34. ஒ. ஆத்மாவிற்கு நாசம் விளைக்கும் இந்த நரகவாயில் மூவகைத்து; காமம், கோபம், லோபம் என்பன; ஆகையால் இம்மூன்றையும் தள்ளவேண்டும். —கீ. 16. 21.

கோபத்திற்கு அசுரஜன்மம், காமத்திற்கு ராக்ஷஸ ஜன்மம், லோபத்திற்கு மனுஷ்யஜன்மம்.

तेषामितीरितमुभाववधार्य घोरं तं ब्रह्मदण्ड-मनिवारण-मस्त्रपूगैः ।
सद्यो हरे-रनुचरावुरु बिभ्यत-स्तत् पादग्रहावपतता-
मतिकातरेण ॥ १५.३५ ॥

एवं तदैव भगवानरविन्दनाभः स्वानां विबुध्य सदतिक्रम-मार्यहृद्यः ।
तस्मिन् ययौ परमहंस-महामुनीना-मन्वेषणीय-चरणौ चलयन्
सहश्रीः ॥ १५.३७ ॥

श्रीभगवानुवाच—
तद्वः प्रसादयाम्यद्य ब्रह्म दैवं परं हि मे ।
तद्धीत्यात्मकृतं मन्ये ये यत्स्वपुंभि-रसत्कृताः ॥ १६.४ ॥

एतौ सुरेतर-गतिं प्रतिपद्य सद्यः
संरंभ-संभृत-समाध्यनुबद्ध-योगौ ।
भूयः सकाश-मुपयास्यत आशु यो वः
शापो मयैव निमित-स्तदवैत विप्राः ॥ १६.२६ ॥

---

15. 35. இங்ஙனம் கடுமையானதும், எத்தகைய அஸ்திர சமூகங்களினுலும் தடுக்க முடியாததுமான அந்தப் பிராம்மணசாபத்தைக் கேட்டவுடன் நடுநடுங்கி அவ்விரு பகவத் பாரிஷதர்களும் முனிவர்களின் கால்களைப் பிடித்துக்கொண்டு படபடப்புடன் கீழே விழுந்தனர்.

15. 37. ஸாதுஜனங்களின் இருதயத்தில் உறையும் உந்தித்தாமரையோனுகிய பகவான் ஸாதுக்களுக்குத் தமது பாரிஷதர்கள் செய்த தவறுதலை உணர்ந்து, பரமஹம்ஸர்களான முனிசிரேஷ்டர்கள் தேடிப் போற்றுந் திருவடிகள் நோவ ஸ்ரீ தேவியுடன் அவ்விடற்திற்கு நடந்து வந்தார்.

ஸ்ரீ பகவான் கூறியது—

16. 4. எனது பணியாட்களால் உங்களுக்கேற்பட்ட அவமதிப்பை நானே செய்துவிட்டதாய்க் கருதுகிறேன். அதற்காக மன்னிப்புக் கோருகின்றேன், பிராம்மணர்கள் எனக்குப் பரதெய்வம் அன்ரு ?

16. 26. முனிவர்களே! தரங்கள் (ஜயவிஜயர்களாகிய) இவர்களுக்கு எந்தச் சாபத்தைக் கொடுத்தீர்களோ அது உண்மையில் என்னுலேயே ஏற்படுத்தப்பட்டதாய் அறியுங்கள். ஆகையால் இவ்விருவரும் இப்போதே அசுரப்பிறவியை யடைந்து (அப்பிறவிக்கு இயற்கையான) கோபத்தின் மிகுதியையே யோகஸமாதிக்குச் சாதனமாய்க் கொண்டு (எதனுல் வீழ்ந்தனரோ அதனுலேயே) சீக்கிரத்தில் மீண்டும் என்னை வந்தடையட்டும்.

---

16. 26. **ஸம்ப்ரமேண**—க்ரோதாவேசேன ஸம்வ்ருத்தோ யः ஸமாதிரேகாக்ரதா தேனுனுபத்தோ த்ருடீக்ருதோ யோகோ யயோ:|

एतत्पुरैव निर्दिष्टं रमया क्रुद्धया यदा ।
पुरापवारिता द्वारि विशन्ती मय्युपारते ॥ १६.३० ॥

ब्रह्मोवाच—

तावेव ह्यधुना प्राप्तौ पार्षद-प्रवरौ हरेः ।
दिते-र्जठर-निर्विष्टं काश्यपं तेज उल्बणम् ॥ १६.३५ ॥

मैत्रेय उवाच—

दितिस्तु भर्तु-रादेशा-दपत्यपरिशङ्किनी ।
पूर्णे वर्षशते साध्वी पुत्रौ प्रसुषुवे यमौ ॥ १७.२ ॥

उत्पाता बहवस्तत्र निपेतु-र्जायमानयोः ।
दिवि भुव्यन्तरिक्षे च लोकस्योरु भयावहाः ॥ १७.३ ॥

तावादिदैत्यौ सहसा व्यज्यमानात्म-पौरुषौ ।
ववृधातेऽश्मसारेण कायेनाद्रिपती इव ॥ १७-१६ ॥

---

(பின் ஜயவிஜயர்களைப் பார்த்து பகவான் கூறியது)—

16. 30. முன்னொரு சமயம் (இதேபோல்) நான் யோகநித்திரையிலிருக்கையில் ரமாதேவியானவள் வாயிலில் தடுக்கப்பட்டதால் கோபங்கொண்டு இப்பொழுது ஏற்பட்டுள்ள இந்தச் சாபத்தை அப்போதே உங்களுக்குக் கற்பித்துள்ளாள். (அது ஸநகாதியர் மூலம் இப்போது பலிக்கின்றது என்று அறியுங்கள்).

பிரம்மா கூறியது—

16. 35. ஹரியின் முக்கிய பாரிஷதர்களான அவர்களே (ஜய விஜயர்களே) இப்போது திதியினுடைய வயிற்றில் வைக்கப்பட்ட கசியபரின் உக்கிரமான வீரியத்தில் பிரவேசித்திருக்கின்றனர்.

மைத்திரேயர் கூறியது—

17. 2. பதிவிரதையான திதி தேவியும் பர்த்தாவின் வார்த்தைப்படி தனக்குப் பிறக்கப்போகும் பிள்ளைகளால் வரக்கூடிய தீமையைக் குறித்துச் சங்கிப்பவளாய் (நீண்ட காலம் கருவைத்தாங்கி) நூறுவருஷம் முடிந்தபின் இரட்டைப் பிள்ளைகளைப் பெற்றாள்.

17. 3. அவர்கள் பிறந்தபோது ஆகாயத்திலும் பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் உலகுக்கு மிகுந்த பயத்தை விளைக்கும் பல உத்பாதங்கள் (அசுபக் குறிகள்) உண்டாயின.

17. 16. ஆதிதைத்தியர்களான அவர்கள் விரைவில் தங்கள் பராக்கிரமத்தை விளக்கிக்கொண்டு கருங்கல்போல் வலிமை பொருந்திய சரீரங்களுடன் பெரியமலைகளைப் போல் வளர்ந்தனர்.

---

16. 30. பகவான் தமது பாரிஷதர்களையே எதிரிகளாய்க் கொண்டு உலக நாடகம் நடிக்க விரும்பினார்போலும். வேறுவிதமாய் வைகுண்டவாசிகளான ஜயவிஜயர்களின் வீழ்ச்சி பொருந்தாது. (யுத்த-கௌதுகம் ஸம்பாதனீய - மிதி பகவதைவ வ்யவஸித-மத: ஸர்வம் ஸங்கச்சதே தஸித - முக்தம் சாபோ மமைவ நிர்மித இதி).

प्रजापति-र्नाम तयो-रकार्षीद्यः प्राक्स्वदेहाद्यमयो-रजायत ।
तं वै हिरण्यकशिपुं विदुः प्रजा यं तं हिरण्याक्ष-मसूत साग्रतः ॥ १७.१८ ॥

चक्रे हिरण्यकशिपु-र्दोर्भ्यां ब्रह्मवरेण च ।
वशे सपालां-ल्लोकां-स्त्रीनकुतो-मृत्युरुद्धतः ॥ १७.१९ ॥

हिरण्याक्षोऽनुजस्तस्य प्रियः प्रीतिकृदन्वहम् ।
गदापाणि-र्दिवं यातो युयुत्सु-र्मृगयन् रणम् ॥ १७.२० ॥

हरे-र्विदित्वा गतिमङ्ग नारदाद् रसातलं निर्विविशे त्वरान्वितः ।
ददर्श तत्राभिजितं धराधरं प्रोन्नीयमानावनि-मग्रदंष्ट्रया ॥ १८.२ ॥

दैत्यस्य यज्ञावयवस्य माया-गृहीत-वाराह-तनो-र्महात्मनः ।
कौरव्य मह्यां द्विषतो-र्विमर्दनं दिदृक्षुरागा-दृषिभिर्वृतः स्वराट् ॥ १८.२० ॥

---

17. 18. கசியபப் பிரஜாபதி அவர்களுக்கு நாமகரணம் செய்தார். இரட்டையர்களுள் முதலாக அவரிடம் தோன்றியவனை ஹிரணியகசிபு என்றும், முதலாக அவளிடம் பிறந்தவனை ஹிரணியாக்ஷனென்றும் பிரஜைகள் தெரிந்து கொண்டனர்.

17. 19. ஹிரணியகசிபு (தவஞ்செய்து) பிரம்மாவிடம் பெற்ற வரத்தால் எதனின்றும் மரணபயமில்லாதவனாகி மிகுந்த கர்வத்தை யடைந்து, தனது தோள்வலியால் லோக பாலர்களுடன் மூவுலகையும் அடக்கித் தன் வசமாக்கிக்கொண்டான்.

17. 20. அவனுக்குப்பிரியமான தம்பியாகிய ஹிரணியாக்ஷனும் நாள் தோறும் அவனுக்குப் பிரீதியைச் செய்கின்றவனாய்க் கதையை எடுத்துக் கொண்டு போரில் விருப்பமுள்ளவனாய்ப் போரைத் தேடிக்கொண்டு தேவலோகம் சென்றான்.

18. 2. (தேவர்கள் பயந்து ஒளிந்து கொண்டனர். பின் தனக்கு நிகராகப் போர் புரியக்கூடியவர் ஒருவர் இருக்கிறார் என்றும் அவர் சமுத்திரத்தில் ஒளிந்திருக்கிறார் என்றும் கேள்விப்பட்டு) நாரதரிடமிருந்து அந்த ஹரி சென்ற மார்க்கத்தைத் தெரிந்து கொண்டு வெகு வேகமாக ரஸாதலத்தில் பிரவேசித்தான். தெற்றிப்பல்லின் நுனியில் பூமியை உயரத்தூக்கிக் கொண்டு வரும் ஜயசீலரான பூவராஹ மூர்த்தியைக் கண்டான். (அவருடன் சண்டையிட ஆரம்பித்தான்).

18. 20. விதுரரே! தைத்தியனுக்கும் மாயையினால் சரீர மெடுத்த பரமாத்மா யக்ஞ வராஹ மூர்த்திக்கும் பூமியின் நிமித்தம் போர் நிகழ்ந்ததைக் காண்பதற்குப் பிரம்ம தேவர் ரிஷிகள் படைசூழ வந்து சேர்ந்தார்.

---

17. 18. இரட்டையர்களில் முதலில் பிறப்பவன் தம்பி, பின்பு பிறப்பவன் தமயன். (ப்ரதம ப்ரவிஷ்டஸ்ய பச்சாத் ப்ரஸூதி:, பச்சாத் ப்ரவிஷ்டஸ்ய ப்ரதமம் ப்ரஸூதி:)

18. 2. ஹிரண்யாக்ஷனுக்குள்ளேயே பகவான் ஒளிந்திருந்ததால் முதலில் அவரை இவ்வுலகில் எங்கு தேடியுங் காணவில்லை. பின்பு மேலுலகங்களில் தேடியுங் காணவில்லை. கடைசியில் நாரதர் சொற்படி ஸமுத்திரத்தின் உள்ளே மூழ்கித் தேடியபோது கண்டான்: உள்ளே ஒளிந்திருப்பவனை உள்ளே மூழ்கித் தேடினால் தான் காணமுடியும்.

यं योगिनो योगसमाधिना रहो ध्यायन्ति लिङ्गादसतो मुमुक्षया ।
तस्यैष दैत्यऋषभः पदाहतो मुखं प्रपश्यं-स्तनुमुत्ससर्ज ह ॥ १९.२८ ॥

एवं हिरण्याक्ष-मसह्य-विक्रमं स सादयित्वा हरि-रादिसूकरः ।
जगाम लोकं स्व-मखण्डितोत्सवं समीडितः पुष्कर-विष्टरादिभिः ॥ १९.३१ ॥

सूत उवाच—

यो वै हिरण्याक्षवधं महाद्भुतं विक्रीडितं कारणसूकरात्मनः ।
शृणोति गायत्यनुमोदतेऽञ्जसा विमुच्यते ब्रह्मवधादपि द्विजाः ॥ १९.३७ ॥

एतन्महा-पुण्य-मलं पवित्रं धन्यं यशस्यं पदमायुराशिषाम् ।
प्राणेन्द्रियाणां युधि शौर्यवर्धनम् नारायणोऽन्ते गतिरङ्ग
शृण्वताम् ॥ १९.३८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां संहितायां पारम-हंस्यां वैयासिक्यां श्रीहयग्रीव-ब्रह्मविद्यायां तृतीयस्कन्धे हिर-ण्याक्षवधोनाम एकोनविंशोऽध्यायः ॥

---

19. 28. யோகிகள் அஸத்தான லிங்க தேகத்திலிருந்து விடுபடுவதற்காக ஏகாந்தத்தில் யோகசமாதியினுல் எவரைத் தியானிக்கின்றனரோ அவருடன் பேரர் புரிந்து அவருடைய பாதத்தினுல் மிதிக்கப்பட்டவனுய் அவருடைய முகத்தைப் பார்த்துக் கொண்டே அந்த அசுரராஜன் சரீரத்தை விட்டான்.

19. 31. விதுரரே! ஆதிவராஹரான ஹரியானவர் இவ்வாறு பராக்கிரமம் மிக்க ஹிரணியாக்ஷனைக் கொன்று விட்டு பிரம்மாதி தேவர்களால் துதிக்கப் பெற்றவராய் வைகுண்டத்திற்கு எழுந்தருளினுர்.

ஸூதர் கூறியது—

19. 37. பிரரம்மணர்களே! பூமியை உத்தாரணம் செய்வதற்காக வராஹ அவதார மெடுத்த ஸ்ரீ ஹரியின் ஹிரணியாக்ஷவதம் என்னும் இந்த அற்புதமிக்க லீலையை கேட் போரும் பாடுவோரும் ஆமோதிப்போரும் விரைவில் பிரம்மஹத்தியாதி பாவங்களினின் றும் விடுபடுவர்.

19. 38. புண்ணியம் மிகுந்ததும், பரமபாவன மானதும், பொருள் புகழ் பதவி ஆயுள் ஆசைகளின் பூர்த்தி முதலியவற்றைத் தருவதும், பிராணனுக்கும் இந்திரியங்க ளுக்கும் போரில் வலிமையை வளர்ப்பது மான இக்கதையைக் கேட்பவர்க்கு முடிவில் நாராயணனே கதியாகின்றுன்.

இங்ஙனம் ஆறுவது இதழாகிய ஸர்க்கவர்ணனை முற்றும்.

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம் சுலோகங்களடங்கியதும் ஹயக்கிரீவப்பிரம்ம வித்தை யெனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் மூன்றுவது ஸ்கந்தத்தில் ஹிரணியாக்ஷவதம் என்று பெயர் பெற்ற பத்தொன்பதாவது அத்தியாயம் முற்றும்.

முதல் நாள் கதை முற்றும்.

# ஸ்ரீமத் பாகவதஸாரம்

## இரண்டாவது நாள் கதை (3·20—5·15)

(கபிலாவதாரத்திலிருந்து ஜடபரதோபாக்யானம் முடிய)

7. **கபிலாவதாரம்**—கர்த்தம தேவஹூதி விவாஹம் — பதிசுசுரூஷை — ஒன்பது பெண்கள் பிறப்பு - கபிலாவதாரம் - கபில கீதை - தேவஹூதியின் முக்தி.
அத். 3·20—3·33

8. **தக்ஷயஜ்ஞம்**—தக்ஷப்பிரஜாபதியின் வரலாறு - தக்ஷன் பரமசிவனை வெறுத்தல் - தக்ஷயக்ஞம் - தாக்ஷாயணியின் தேஹத் தியாகம் - தக்ஷவதம்-பரமசிவப் பிரஸாதம்-தக்ஷஜீவனம் - யஜ்ஞ பூர்த்தி-த்ரிமூர்த்தி ரஹஸ்யம். அத். 4·1—4·7.

9. **உத்தானபாத வம்சம்**—துருவ சரித்திரம்-வேன நிக்ரஹம் - பிருதுமஹாராஜன் கதை - புரஞ்ஜனோபாக்கியானம் - தக்ஷன் புனர்ஜன்மம். அத். 4·8—4·31.

10. **பிரியவிரதர் வம்சம்**—பிரயவிரதர் - நாபி - ரிஷபதேவர் - ஜடபரதர்.
அத். 5·1—5. 15.

# ॥ श्रीमद्भागवतसार : ॥

॥ कपिलावतारः ॥

विदुर उवाच—

स्वायंभुवस्य च मनोर्वंशः परमसंमतः ।
कथ्यतां भगवन् यत्र मैथुनेनैधिरे प्रजाः ॥ २१.१ ॥

मैत्रेय उवाच—

प्रजाः सृजेति भगवान् कर्दमो ब्रह्मणोदितः ।
सरस्वत्यां तपस्तेपे सहस्राणां समा दश ॥ २१.६ ॥

तावत् प्रसन्नो भगवान् पुष्कराक्षः कृते युगे ।
दर्शयामास तं क्षत्तः शाब्दं ब्रह्म दधद्वपुः ॥ २१.८ ॥

श्रीभगवानुवाच—

प्रजापतिसुतः सम्राण्मनु-विंख्यात-मंगलः ।
ब्रह्मावर्तं योऽधिवसन् शास्ति सप्तार्णवां महीम् ॥ २१.२५ ॥

स चेह विप्र राजर्षि-र्महिष्या शतरूपया ।
आयास्यति दिदृक्षु-स्त्वां परश्वो धर्मकोविदः ॥ २१.२६ ॥

---

## ஸ்ரீமத் பாகவதஸாரம்

இரண்டாவதுநாள் கதை

**கபிலாவதாரம்**

விதுரர் கூறியது—

21. 1. ஸ்வாயம்புவ மனுவின் வம்சம் பெரிதும் போற்றுதற்குறியது. அதிலிருந்தே பிரஜைகள் ஸ்திரீபுருஷர்கள் கூடிய தருமத்தால் விருத்தி யடையலாயினர். அவ்வம்சத்தைப்பற்றிக் கூறி யருளுங்கள்.

மைத்திரேயர் கூறியது—

21. 6. பிரம்மாவால் பிரஜாசிருஷ்டியில் ஏவப்பட்ட பகவான் கர்த்தமர் ஸரஸ்வதி நதிக்கரையில் பத்தாயிரம் வருஷம் தவம் செய்தார்.

21. 8. விதுரரே! அந்தக் கிருதயுக ஆரம்பத்தில் தாமரைக் கண்ணனுகிய பகவான் பிரஸன்னராகி சப்தப்பிரம்ம வடிவினராய்க் கர்த்தமருக்குக் காக்ஷி யளித்தரர்.

ஸ்ரீ பகவான் கூறியது :—

21. 25.-26. பிராம்மணரே! பிரம்ம புத்திரரும், மங்களமான கீர்த்தியுடைய சக்கிரவர்த்தியும் பிரம்மாவர்த்தத்தில் இருந்துகொண்டு ஏழு கடலுடன் கூடிய பூமியை ஆள்பவரும் ராஜ ரிஷியும் தருமத்தை நன்குணர்ந்தவரும் ஆகிய (ஸ்வாயம்புவ) மனு தன் பத்தினியாகிய சதரூபையுடன் உம்மைக் காணும் பொருட்டு நாளைக்கு மறுநாள் வரப்போகிறுர்.

आत्मजा-मसितापांगीं वयःशील-गुणान्विताम् ।
मृगयन्तीं पतिं दास्य-त्यनुरूपाय ते प्रभो ॥ २१.२७ ॥

त्वं च सम्यगनुष्ठाय निदेशं म उशत्तमः ।
मयि तीर्थीकृताशेषक्रियार्थो मां प्रपत्स्यसे ॥ २१.३० ॥

कृत्वा दयां च जीवेषु दत्त्वा-चाभय-मात्मवान् ।
मय्यात्मानं सह जगद् द्रक्ष्यस्यात्मनि चापि माम् ॥ २१.३१ ॥

सहाहं स्वांशकलया त्वद्वीर्येण महामुने ।
तव क्षेत्रे देवहूत्यां प्रणेष्ये तत्त्वसंहिताम् ॥ २१.३२ ॥

मैत्रेय उवाच—
अथ संप्रस्थिते शुक्ले कर्दमो भगवान् ऋषिः ।
आस्ते स्म बिन्दुसरसि तं कालं प्रतिपालयन् ॥ २१.३५ ॥

---

21. 27. பிரபுவே! கருவிழி படைத்த அழகியும் தகுந்த வயதும், நடத்தையும் குணமும் உடையவளுமான தமது பெண்ணுக்குரிய பதியை நாடும் அவர் அனுருபமான உமக்கு அவளைக் கொடுக்கப் போகிறார்.

21. 30. நீரும் (அவளை ஏற்று கிருஹஸ்த தர்மத்திலிருந்து) எனது கட்டளையை நிறைவேற்றிப் பரிசுத்த மனத்தினராய் என்னிடமே எல்லாக் கரும பலன்களையும் அர்ப்பணம் செய்து என்னை அடையப் போகிறீர்.

21. 31. உயிர்களுக்கிரங்கி (அதனால்) ஆத்ம ஞானம் பெற்று (எல்லா உயிர்களுக்கும்) அபயமளித்து (ஸந்நியாஸியாகி) என்னிடத்தில் உம்முடன் உலகையும், உம்மிடத்தில் என்னையும் பார்க்கப்போகிறீர்.

21. 32. முனிசிரேஷ்டரே! நானும் உமது வீரியத்தால் உமது பத்தினியான தேவஹூதியிடம் எனது அம்சத்தின் பகுதியால் அவதரித்து (ஸாங்கிய) தத்துவ ஸம்ஹிதையைச் செய்யப்போகிறேன்.

மைத்திரேயர் கூறியது—

21. 35. ஸ்ரீ நாராயணர் சென்றபின் பகவான் கர்த்தமரிஷி அவர் குறிப்பிட்ட காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு பிந்துஸரஸ்ஸில் இருந்தார்.

---

21. 31. தயாம்—(கார்ஹஸ்த்யே) இல்லறத்தில் தயை.
அபயம்—(ஸந்ந்யாஸே) துறவறத்தில் அபயம்.

---

21. 35. आस्तेऽस्मिन्।

मनुः स्यन्दन-मास्थाय शातकौम्भ-परिच्छदम् ।
आरोप्य स्वां दुहितरं सभार्यः पर्यटन् महीम् ॥ २१.३६ ॥

तस्मिन् सुधन्वन्नहनि भगवान् यत् समादिशत् ।
उपायादाश्रमपदं मुनेः शान्तव्रतस्य तत् ॥ २१.३७ ॥

अथोटज-मुपायातं नृदेवं प्रणतं पुरः ।
सपर्यया पर्यगृह्णात् प्रतिनन्द्यानुरूपया ॥ २१.४८ ॥

गृहितार्हण-मासीनं संयतं प्रीणयन् मुनिः ।
स्मरन् भगवदादेश-मित्याह श्लक्ष्णया गिरा ॥ २१.४९ ॥

नूनं चंक्रमणं देव सतां संरक्षणाय ते ।
वधाय चासतां यस्त्वं हरेः शक्तिर्हि पालिनी ॥ २१.५० ॥

अथापि पृच्छे त्वां वीर यदर्थं त्वमिहागतः ।
तद्वयं निर्व्यलीकेन प्रतिपद्यामहे हृदा ॥ २१.५६ ॥

---

21. 36-37. வில்லிற் சிறந்த விதுரரே! ஸ்வாயம்புவமனு தமது பாரியையுடன் பொன்னுலலங்கரிக்கப்பட்ட தேரில் தமது பெண்ணையும் ஏற்றிக்கொண்டு பூமியில் சஞ்சரிப்பவராய்ப் பகவான் குறிப்பிட்ட அந்நாளில் சாந்தவிரதரான (கர்த்தம) முனிவரின் ஆசிரமம் வந்தடைந்தார்.

21. 48. அப்போது, (அவர்) தமது குடிசைக்கு வந்து தம் முன் நமஸ்கரித்த அவ்வரசரை ஆசீர்வாதத்தால் மகிழ்வித்துத் தக்கமுறையில் அதிதி பூஜையும் செய்தார்.

21, 49. தமது மரியாதையை ஏற்று அடக்கமாய் அமர்ந்திருக்கும் அரசரை இனிய மொழிகளால் மகிழ்விப்பவராய்ப் பகவானுடைய கட்டளையை நினைவில் வைத்துப் பின் வருமாறு கூறலானார்.

21. 50. தெய்வத்தன்மை வாய்ந்த அரசே! தாங்கள் ஹரியினுடைய பாலனசக்தியின் வடிவே யாகின்றீர். அதனால் தங்களுடைய சஞ்சாரமானது ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்குமே யாகும்.

21. 56. வீரரே! ஆயினும் நீர் எதன் பொருட்டு இங்கு எழுந்தருளீரோ அதைக் கேட்க விரும்புகிறேன். அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கபடமின்றி அதன்படி நடப்போம்.

---

21. 48. உடஜம் - பர்ணசாலாம்; ஸபர்யயா - பூஜயா; ப்ரத்யக்ருஹ்ணாத் - ஸத்க்ருதவான்.

21. 56. நிர்வ்யலீகேன—ஸஹர்ஷேண; ப்ரதிபத்யாமஹே-ஸ்வீகுர்மஹே ।

---

21. 37. सुधन्येन्वहमि

मनुरुवाच—

दिष्ट्या मे भगवान् दृष्टो दुर्दर्शो योऽकृतात्मनाम् ।
दिष्ट्या पादरजः स्पृष्टं शीर्ष्णा मे भवतः शिवम् ॥ २२.६ ॥

स भवान् दुहितृ-स्नेह-परिक्लिष्टात्मनो मम ।
श्रोतुमर्हसि दीनस्य श्रावितं कृपया मुने ॥ २२.८ ॥

प्रियव्रतोत्तानपदोः स्वसेयं दुहिता मम ।
अन्विच्छति पतिं युक्तं वयःशीलगुणादिभिः ॥ २२.९ ॥

यदा तु भवतः शील-श्रुत-रूप-वयो-गुणान् ।
अश्रृणो-न्नारदादेषा त्वय्यासीत् कृतनिश्चया ॥ २२.१० ॥

तत्प्रतीच्छ द्विजाग्र्येमां श्रद्धयोपहृतां मया ।
सर्वात्मनानुरूपां ते गृहमेधिषु कर्मसु ॥ २२.११ ॥

ऋषिरुवाच—

बाढ-मुद्वोढुकामोऽह-मप्रत्ता च तवात्मजा ।
आवयो-रनुरूपोऽसावाद्यो वैवाहिको विधिः ॥ २२.१५ ॥

மனு கூறியது—

22. 6. புண்ணியஞ் செய்யாதவர்க்கு உமது தரிசனம் கிடைத்தற்கரிது. பகவாளுகிய தங்களுடைய தரிசனம் எனக்குக் கிடைத்தது பாக்கியவசத்தாலேயாம். மங்களகரமான உமது பாததூளியானது எனது சிரத்தால் தொடப்பட்டதும் பாக்கியவசத்தாலேயாம்.

22. 9. முனிவரே! அப்படிப்பட்ட நீர் தீனஞன என்னுடைய வேண்டுகோளைக் கிருபையுடன் கேட்கவேண்டும். பெண்ணிடம் உள்ள பாசத்தால் நான் கவலையில் ஆழ்ந்தவன்.

22. 9. இவள் என் பெண்; பிரிய விரதனுக்கும் உத்தானபாதனுக்கும் சகோதரி வயது, நடத்தை, குணம் முதலியவற்ருல் தனக்குகந்த கணவனை விரும்புகிருள்.

22. 10. தங்களுடைய நடத்தை கல்வி, அழகு, யௌவனம் முதலிய குணங்களைப்பற்றி நாரதரிடமிருந்து கேட்டதுமுதல் இவள் உம்மையை பதியாக நிச்சயித்து விட்டாள்.

22. 11. பிராம்மணசிரேஷ்டரே! சிரத்தையுடன் உமக்குச் சமர்ப்பணமாக என்ஞல் அழைத்து வரப்பட்ட இவளை ஏற்றுக்கொள்வீராக. கிருஹஸ்த தர்மானுஷ்டானத்தில் உமக்கு எல்லா வகையிலும் மனதுக் கிசைந்தவளாக இருப்பாள்.

ரிஷி (கர்த்தமர்) கூறியது—

22. 15. நல்லது; நான் விவாகத்தில் விருப்பமுள்ளவன்தான். உமது பெண்ணும் (என்னையே நாடி) பிறருக்கு வாக்குதானம் செய்யப்படாதவள். விவாகவிதியில் முதன்மையான இது எங்களிருவருக்கும் பொருத்தமானதேயாம்.

22. 6. அக்ருதாத்மனும்-அவசீக்ருதசித்தானும்.
22. 11. ப்ரதீச்ச—ஸ்வீகுரு
22. 15. அப்ரத்தா — மய்யேவ க்ருதநிச்சயத்வாத் கஸ்மைசித் ப்ரதிச்ருதாசனபவதீத்யர்த்த:।

अतो भजिष्ये समयेन साध्वीं यावत्तेजो बिभृयादात्मनो मे ।
अतो धर्मान् पारमहंस्य-मुख्यान् शुक्ल-प्रोक्तान्
बहुमन्येऽविहिंस्रान् ॥ २२.१९ ॥

मैत्रेयउवाच--

सोऽनुज्ञात्वा व्यवसितं महिष्या दुहितुः स्फुटम् ।
तस्मै गुणगणाढ्याय ददौ तुल्यां प्रहर्षितः ॥ २२.२२ ॥

शतरूपा महाराज्ञी पारिबर्हान्महाधनान् ।
दंपत्योः पर्यदात् प्रीत्या भूषावासःपरिच्छदान् ॥ २२.२३ ॥

प्रत्तां दुहितरं संराट् सदृक्षाय गतव्यथः ।
उपगुह्य च बाहुभ्या-मौत्कण्ठ्योन्मथिताशयः ॥ २२.२४ ॥

---

22. 19. இந்த ஸாதுவான கன்னியை ஒரு நியமத்துடன் அங்கீகரிக்கின்றேன். இவள் என்னிடம் ஸந்தானத்தைப் பெறும்வரை (கிருஹஸ்தாசிரமத்தில்) கூடி யிருப்பேன். அதன்பின் பகவான் கூறியருளியதும் அஹிம்ஸாப் பிரதானமானதுமான பரம ஹம்ஸ ஸந்நியாஸ தருமத்தையே போற்றி யனுஷ்டிக்க விரும்புகின்றேன்.

மைத்திரேயர் கூறியது—

22. 22. பிறகு அவர் (மனு) இதில் தனது மனைவிக்கும் பெண்ணுக்கும் சம்மதம் என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொண்டு சகல குண சம்பன்னரான அம் முனிவருக்குச் சமமான நற்குணங்கள் பொருந்திய தமது பெண்ணைப் பொங்கும் மகிழ்ச்சியுடன் கொடுத்தார்.

22. 23. மகாராணியான சதரூபை தம்பதிகட்கு மிகுந்த அன்புடன் விலையுயர்ந்த ஆபரணங்களையும் ஆடைகளையும் குடும்ப சாமான்களையும் சீராகக் கொடுத்தாள்.

22. 24. சமமான வரனுக்குப்பெண் கொடுக்கப்பட்டதால் கவலை நீங்கிய அரசர் அவளைக் கைகளால் அணைத்து நெஞ்சம் இளகியவராய்

---

22. 19. பஜிஷ்யே - ஸ்வீகரிஷ்யே ; ஸமய :— யாவதபத்யோத்பத்திஸ் - தாவத்கார் ஹஸ்த்யம் தத : பரம் ஸந்ந்யாஸ இதி பாஷாபந்த : ஸமய : : சுக்லேன—ஸ்ரீ விஷ்ணுநா ।

22. 22. கன்னிகாதான சுலோகங்கள் :-
கன்யாம் கனக-ஸம்பன்னும் ஸர்வாபரண பூஷிதாம் । தாஸ்யாமி
விஷ்ணவே துப்யம் ப்ரஹ்மலோக-ஜிகீஷ்யா ॥ விச்வம்பராஸர்வபூதா :
ஸாக்ஷிண : ஸர்வதேவதா : । இமாம் கன்யாம் ப்ரதாஸ்யாமி பித்ருணும்
தாரணுயச ॥

22. 24. ப்ரத்தாம்-தத்தாம் ; ஸத்ருக்ஷாய-ஸத்ருசாய ;

---

22. 19. अतो वरिष्ये ।
22. 23. परिहार्यं महाधनम् ।
22. 24. पिता दुहितरं ।

अशकुर्व-स्तद्विरहं मुंचन् बाष्पकलां मुहुः ।
आसिंचदंब वत्सेति नेत्रोदै-र्दुहितुः शिखाः ॥ २२.२५ ॥

आमंत्र्य तं मुनिवर-मनुज्ञातः सहानुगः ।
प्रतस्थे रथ-मारुह्य सभार्यः स्वपुरं नृपः ॥ २२.२६ ॥

पितृभ्यां प्रस्थिते साध्वी पतिमिङ्गितकोविदा ।
नित्यं पर्यचरत् प्रीत्या भवनीव भवं प्रभुम् ॥ २३.१ ॥

विश्रंभेणात्म-शौचेन गौरवेण दमेन च ।
शुश्रूषया सौहृदेन वाचा मधुरया च भोः ॥ २३.२ ॥

विसृज्य कामं दंभं च द्वेषं लाभ-मघं मदम् ।
अप्रमत्तोद्यता नित्यं तेजीयांस-मतोषयत् ॥ २३.३ ॥

कालेन भूयसा क्षामां कर्शितां व्रतचर्यया ।
प्रेमगद्गदया वाचा पीडितः कृपयाब्रवीत् ॥ २३.५ ॥

---

22. 25. அவளைவிட்டுப் பிரிவதைப் பொறுக்கமாட்டாமல் அடிக்கடி 'அம்மா! குழந்தாய்!' என்று கூறி அழுதுகொண்டு கண்ணீரால் அவள் கூந்தலை நினைத்துவிட்டார்.

22. 26. பின் அரசன் முனிசிரேஷ்டரிடம் சொல்லிக்கொண்டு விடைபெற்றுப் பரிவாரத்துடனும் மனைவியுடனும் தேரிலேறித் தனது நகரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

23. 1. பெற்றோர்கள் சென்ற பின் இங்கிதமறிந்த கற்பரசியானவள் பரமசிவனுக்குப் பார்வதியைப்போல் பதிக்கு நித்தியம் பணிவிடை செய்து வந்தாள்.

23. 2. விதுரரே! விசுவாஸத்துடனும், பரிசுத்த பாவனையுடனும், மரியாதையுடனும், அடக்கத்துடனும், உள்ளன்புடனும் கூடிய இன்சொல்லாலும் பணிவிடையாலும்;

23. 3. காமம், இடம்பம், பகை, லோபம், விசனம், மதம் முதலியவற்றைவிட்டு சிறிதும் கவனக் குறைவின்றி விடாமுயற்சியுடன் தேஜஸ்வியான கணவரைச் சந்தோஷப் படுத்தி வந்தாள்.

23. 5. (இங்ஙனம்) நீண்டகாலம் விரதானுஷ்டானத்தால் இளைத்துப்போன அவளிடம் கிருபையினால் மனம் வருந்திப் பிரேமையினால் தழுதழுத்துக் கர்த்தமர் கூறலுற்றார்.

---

22. 25. ஒ. (வைக்லப்யம் மம தாவதீத்ருசமிதம் ஸ்நேஹா-தரண்யௌகஸ: பீட்யந்தே க்ருஹிண: கதந்நு தனயா-விச்லேஷது:க்கை-நவை:) அரணியத்தில் வாழும் தவசியான எனக்கே சிநேகத்தால் இவ்வளவு மனக்கலக்கம் ஏற்படுகையில் கிருஹஸ்தர்கள் பெண்களை விட்டுப் புதிதாகப் பிரியும் துக்கத்தால் எவ்வளவு வருந்தமாட்டார்கள்?

கண்வமஹரிஷி கூறியது: காளிதாஸன்.

23. 3. தம்பம் - கபடம்; அகம் - நிஷித்தாசரணம்।

---

22. 25. असिञ्चन्निवचात्मेति नेत्रो ।

23. 2. मधुरया तथा ।

कर्दम उवाच--

ये मे स्वधर्मनिरतस्य तपःसमाधि-
विद्यात्म-योग-विजिता भगवत्प्रसादाः।
तानेव ते मदनुसेवनयावरुद्धान्
दृष्टिं प्रपश्य वितराम्यभया-नशोकान् ॥ २३.७ ॥

मैत्रेय उवाच—

प्रियायाः प्रियमन्विच्छन् कर्दमो योगमास्थितः।
विमानं कामगं क्षत्तस्तर्ह्येवाविरचीकरत् ॥ २३.१२ ॥

स तां कृतमलस्नानां विभ्राजन्ती-मपूर्ववत्।
आत्मनो बिभ्रतीं रूपं संवीत-रुचिर-स्तनीम् ॥ २३.३६ ॥

विद्याधरी-सहस्रेण सेव्यमानां सुवाससम्।
जातभावो विमानं तदारोहय-दमित्रहन् ॥ २३.३७ ॥

किं दुरापादनं तेषां पुंसा-मुद्दाम-चेतसाम्।
यैराश्रित-स्तीर्थपद-श्चरणो व्यसनात्ययः ॥ २३.४२ ॥

---

கர்த்தமர் கூறியது :—

23. 7. ஸ்வதருமத்தில் ஆழ்ந்திருந்த எனக்குத் தவம், ஸமாதி, வித்தை ஆத்ம யோகம் முதலியவற்ருல் பகவதனுக்கிரகத்தால் கிடைத்துள்ள சக்திகள் எவையோ பயத்தையும் சோகத்தையும் போக்கும் அவையனைத்தும் எனக்குச் சேவை செய்ததால் உன்னுலும் அடையப் பெற்றனவாய் விட்டன. திவ்ய திருஷ்டியைத் தருகிறேன். அவற்றைப் பார்ப்பாய்.

மைத்திரேயர் கூறியது :-

23. 12. விதுரரே! யோக சித்தரான கர்த்தமர் அன்பிற்குரிய தேவஹூதிக்கு அன்பு செய்ய விரும்பி இஷ்டப்படி செல்லக்கூடிய விமானத்தைத் தோற்றுவித்தார்.

23. 36.-37. பகையொழிந்தவரே! ஸ்நாநத்தால் புனிதமானவளும் எப்போதுமில்லாத புதிய அழகுடன் விளங்குபவளும், மறைக்கப்பட்ட அழகிய ஸ்தனங்களையுடையவளும், அகத்தின் அழகால் பிரகாசிப்பவளும் எண்ணிறந்த வித்தியாதரப் பெண்களால் சேவிக்கப்பட்டவளும் அழகிய வஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்டவளுமான தேவஹூதியை பொங்கும் பிரேமையுடன் அந்த விமானத்திலேற்றி வைத்துக் கொண்டார்.

23. 42. எல்லாத் துன்பங்களையும் போக்குவிக்கும் பகவானுடைய புனிதமான திருவடி எவர்களால் லாகிரயிக்கப்பட்டதோ அந்த தீரர்களால் அடைய முடியாதது ஏது?

---

23. 7. பகவத்ப்ரஸாதா :— திவிஜா | போகா : |

பர்த்தாவுக்குச் செய்த பணிவிடையாலே யோகசித்திகள் தேவஹூதியால் எய்தப் பெற்றன.

ஒ. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. —குறள்

ஒ. கௌசிகப் பிரம்மசாரி கதை. (ம.பா.)

प्रेक्षयित्वा भुवो गोलं पत्न्यै यावान् स्व-संस्थया ।
बह्वाश्चर्यं महायोगी स्वाश्रमाय न्यवर्तत ॥ २३.४३ ॥

तस्या-माधत्त रेतस्तां भावयन्नात्मनात्मवित् ।
नोधा विधाय रूपं स्वं सर्व-सङ्कल्पविद्विभुः ॥ २३.४७ ॥

अतः सा सुषुवे सद्यो देवहूतिः स्त्रियः प्रजाः ।
सर्वा-स्ताश्चारु सर्वाङ्ग्यो लोहितोत्पल-गन्धयः ॥ २३.४८ ॥

पतिं सा प्रव्रजिष्यन्तं तदाऽऽलक्ष्योशतीं सतीं ।
स्मयमाना विक्लवेन हृदयेन विदूयता ॥ २३.४९ ॥

लिखन्त्यधोमुखी भूमिं पदा नखमणि-श्रिया ।
उवाच ललितां वाचं निरुध्याश्रुकलां शनैः ॥ २३.५० ॥

देवहूतिउवाच--

सर्वं तद्भगवन् मह्य-मुपोवाह प्रतिश्रुतम् ।
अथापि मे प्रपन्नाया अभयं दातु-मर्हसि ॥ २३.५ ॥

---

23. 43. இயற்கையமைப்பில் எங்ஙனமமைந்துள்ளதோ அங்ஙனம் வெகு ஆச்சரியமான பூமண்டலம் முழுவதையும் மனைவிக்குச் சுற்றிக் காட்டிவிட்டுத் தமது ஆசிரமத்திற்கு அம்மகா யோகியானவர் திரும்பினார்.

23. 47. ஆத்ம ஞானியும் எல்லோருடைய எண்ணங்களையும் அறியும் சக்தி வாய்ந்தவரும் ஆகிய அம்மகான் தன்னை மனதில் ஒன்பது வடிவாக வகுத்துக்கொண்டு தன்னுடலில் பாதியாகிய அவளிடம் வீரியத்தை வைத்தார்.

23. 48. பின்னர் அந்த தேவஹூதி (ஒன்பது) பெண் குழந்தைகளைப் பெற்றாள். அவர்கள் அனைவரும் அழகிய உறுப்புக்கள் உடையவர்களாகவும் சிவப்பு உத்பல புஷ்பத்தின் இயற்கை மணம் உடையவர்களாகவும் விளங்கினர்.

23. 49-50. அப்போது (முன் பிரதிக்ஞையை நினைத்து) துறவறம் மேற்கொள்ள முயலும் கணவனை நோக்கி உதட்டில் புன்முறுவலையும் உள்ளத்தில் கவலையையுங் கொண்டவளாய், தலை குனிந்து, மணிபோன்ற நகங்களுடைய அழகிய பாதத்தால் தரையைக் கீறுபவளாய், பொங்கிவரும் கண்ணீரை மெதுவாக அடக்கிக்கொண்டு பின்வருமாறு அழகான வார்த்தையைப் பேச ஆரம்பித்தாள்.

தேவஹூதி கூறியது—

23. 51. என்பொருட்டு என்ன பிரதிஜ்ஞை செய்யப்பட்டதோ அதைப் பூர்ணமாக தேவரீர் நிறைவேற்றிவிட்டீர். ஆயினும் தங்களைச் சரணடைந்த எனக்கு அபயத்தை அருளவேண்டும்.

---

23. 47. நோதா-நவதா ; ஸர்வஸங்கல்பவித் - தஸ்யா பஹுவபத்ய-ஸங்கல்பம் ஜானன்; (தஸ்யாமனுஸக்தத்வாத் ஸ்த்ரியோ ஜாதா இதி பாவ:)

23. 48. ஸத்ய:—அனந்தர மேவ; ஏகஸ்மிந்நேவாஹனி.
ஒ. 'ரிஷிகர்ப்பம் இராத் தங்காது.'—(பழமொழி.)

23. 49. ஸ்மயமானா பஹி : அந்தஸ்து வ்யாகுலேன ஸந்தப்யமானேன ஹ்ருதா ।

ब्रह्मन् दुहितृभि-स्तुभ्यं विमृग्याः पतयः समाः ।
कश्चित् स्यान्मे विशोकाय त्वयि प्रव्रजिते वनम् ॥ २३.५२ ॥

एतावतालं कालेन व्यतिक्रान्तेन मे प्रभो ।
इन्द्रियार्थ-प्रसंगेन परित्यक्त-परात्मनः ॥ २३.५३ ॥

इन्द्रियार्थेषु सज्जन्त्या प्रसङ्ग-स्त्वयि मे कृतः ।
अजानन्त्या परं भावं तथाप्यस्त्वभयाय मे ॥ २३.५४ ॥

सङ्गो यः संसृतेर्हेतु-रसत्सु विहितोऽधिया ।
स एव साधुषु कृतो निःसङ्गत्वाय कल्पते ॥ २३.५५ ॥

नेह यत्कर्म धर्माय न विरागाय कल्पते ।
न तीर्थपदसेवायै जीवन्नपि मृतो हि सः ॥ २३.५६ ॥

---

23. 52. பிரம்மஞானியே! உமது புத்திரிகளுக்குரிய பதிகள் தேடப்பட வேண்டும். நீங்கள் வனம் சென்றபின் எனது சோகநிவிருத்திக்காக (புத்திரன்) ஒருவன் உண்டாகவும் வேண்டும்.

23. 53. பிரபுவே! விஷயப்பற்றால் பரமாத்மாவை மறந்துவிட்ட எனக்கு இது வரை காலம் வீணாகக் கழிந்ததுபோலும்.

23. 54. உமது பெருமையை அறிந்துகொள்ளாதவளும் விஷயப்பற்று மிகுந்தவளுமான என்னால் உம்மிடம் பற்றுவைக்கப்பட்டது. ஆயினும் அப்பற்று அபயத்தின் பொருட்டாகடடும்.

23. 55. அஸத்துக்களிடம் அறிவின்மையால் வைக்கப்பட்டபற்று எதுவோ அது ஸம்ஸாரத்துக்குக் காரணமாகும். அதுவே ஸாதுக்களிடம் வைக்கப்பட்டால் பற்று நீங்குதற்குக் காரணமாகும்.

23. 56. இங்கு எவனுடைய கருமம் தருமத்திற்கோ, வைராக்கியத்திற்கோ, பரமபாவன பாதசேவைக்கோ பயன்படவில்லையோ அவன் உயிருடனிருப்பினும் மரித்தவனேயாம்.

---

23. 56. ஓ. ஸா வித்யா யா விமுக்தயே.
ஓ யாஜ்ஞவல்க்ய-மைத்ரேயீ ஸம்வாதம்: ப்ரு. உ. 2. 4.

யா.—ப்ரியே! மைத்ரேயீ, இந்த ஆசிரமத்திலிருந்து நான் ஸந்நியாஸ ஆசிரமத்திற்குப் போக விரும்புகிறேன். ஆகையால் உனக்கும் காத்யாயனிக்கும் பாகம் பிரித்து வைத்து விடுகிறேன்.

மை.—நாதா! செல்வத்தால் நிறைந்த இந்த பூமி எல்லாம் எனக்கிருந்தாலும் அதனால் நான் அமிருதத்துவத்தை அடைவேனா?

யா.—இல்லைதான். செல்வத்தைக்கொண்டு அம்ருதத்வத்துக்கு ஆசைப்படவும் இயலாது.

மை.—எதனால் நான் அம்ருதத்வத்தை அடைய முடியாதோ அதைக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? தாங்கள் எதை அறிவீர்களோ அதையே எனக்குங் கூறியருளுதல் வேண்டும்.

ஓ. (த்வந் நாம ச்ருத்வாऽத்ர பவந்தி பக்தா:। வயம்து த்ருஷ்டவாऽபி ந பக்தியுக்தா:) உன் பெயரைக் கேட்டே இங்கு பலர் பக்தர்களாயினர். நாங்கள் உன்னைப் பார்த்துங்கூட பக்தியுள்ளவர்களாயில்லையே.

—ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்தோத்ரம்: ஸ்வாமி அபேதானந்தர்.

साहं भगवतो नूनं वंचिता मायया दृढम् ।
यत्त्वां विमुक्तिदं प्राप्य न मुमुक्षेय बन्धनात् ॥ २३.५७ ॥

ऋषिरुवाच—

मा खिदो राजपुत्रीत्थ-मात्मानं प्रत्यनिन्दिते ।
भगवां-स्तेऽक्षरो गर्भ-मदूरात् संप्रपत्स्यते ॥ २४.२ ॥

धृतव्रतासि भद्रं ते दमेन नियमेन च ।
तपो-द्रविण-दानैश्च श्रद्धया चेश्वरं भज ॥ २४.३ ॥

स त्वयाऽऽराधितः शुक्लो वितन्वन् मामकं यशः ।
छेत्ता ते हृदय-ग्रन्थि-मौदर्यो ब्रह्मभावनः ॥ २४.४ ॥

मैत्रेय उवाच—

तस्यां बहुतिथे काले भगवान् मधुसूदनः ।
कार्दमं वीर्य-मापन्नो जज्ञेऽग्निरिव दारुणि ॥ २४.६ ॥

तत्कर्दमाश्रमपदं सरस्वत्या परिश्रितम् ।
स्वयंभूः साकमृषिभि-र्मरीच्यादिभि-रभ्ययात् ॥ २४.९ ॥

---

23, 57. முக்தியை யளிக்கும் உம்மை யடைந்தும் நான் ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடாமற்போனால், அப்போது நான் பகவானுடைய மாயையால் நன்ருக வஞ்சிக்கப் பட்டவள் என்பது நிச்சயம்.

ரிஷி (கர்த்தமர்) கூறியது—

24. 2. அரசகுமாரியே! குற்றமற்றவளே! உன்னைக் குறித்து இங்ஙனம் வருந் தாதே. அக்ஷரனை பகவான் சீக்கிரத்தில் உன் கருவில் வரப்போகிருன்.

24. 3. நீ திடமான விரதமுடையவள். உனக்கு மங்களமுண்டாகும். யமம் நியமம் தவம் பொருட்களின் தானம் இவற்ருல் சிரத்தையுடன் ஈசுவரனை உபாசித்து வருவாய்.

24. 4. உன்னல் அங்ஙனம் ஆராதிக்கப்பட்ட பகவான் உனக்குப் பிரம்மோப தேசம் செய்து உனது இருதயக் கிரந்தியைச் சேதிக்கும் பொருட்டு உன் வயிற்றில் தோன்றி என் புகழையும் வளர்க்கப் போகிருன்.

மைத்திரேயர் கூறியது—

24. 6. பலநாட்களுக்குப் பின் பகவான் மதுஸூதனர் கர்த்தமருடைய வீரியத்தில் ஆவிர்ப்பவித்து கட்டையில் அக்னி பிரவேசிப்பதுபோல் அவளிடம் தோன்றினர்.

24. 9. ஸரஸ்வதி நதியால் சூழப்பெற்ற கர்த்தமருடைய ஆசிரமத்துக்கு அப்போது மரீசி முதலிய ரிஷிகளுடன் பிரம்மதேவர் வந்தார்.

---

24. 4. ஹ்ருதயக்ரந்திம் சிஜ்ஜடாத்மக-மஹங்கார- லக்ஷணம் பந்தம் ச்சேத்ஸ்யதி ஔதர்ய: புத்ர: ஸன் ப்ரஹ்ம பாவயத்யுபதிசதி ।

---

24. 3. व्रता सुभद्रं ।

ब्रह्मोवाच—

एष मानवि ते गर्भं प्रविष्टः कैटभार्दनः ।
अविद्या-संशयग्रन्थिं छित्त्वा गां विचरिष्यति ॥ २४.१८ ॥

मैत्रेय उवाच—

गते शतधृतौ क्षत्तः कर्दम-स्तेन चोदितः ।
यथोदितं स्वदुहितॄः प्रादाद्विश्वसृजां ततः ॥ २४.२१ ॥

मरीचये कलां प्रादा-दनसूया-मथात्रये ।
श्रद्धा-मङ्गिरसेऽयच्छत् पुलस्त्याय हविर्भुजम् ॥ २४.२२ ॥

पुलहाय गतिं युक्तां क्रतवे च क्रियां सतीम् ।
ख्यातिं च भृगवेऽयच्छ-द्वसिष्ठाया-प्यरुन्धतीम् ॥ २४.२३ ॥

अथर्वणेऽददाच्छान्तिं यया यज्ञो वितन्यते ।
विप्रर्षभान् कृतोद्वाहान् सदारान् समलालयत् ॥ २४.२४ ॥

ततस्त ऋषयः क्षत्तः कृतदारा निमन्त्र्य तम् ।
प्रातिष्ठन्नन्दि-मापन्नाः स्वं स्वमाश्रम-मण्डलम् ॥ २४.२५ ॥

स चावतीर्णं त्रियुग-माज्ञाय विबुधर्षभम् ।
विविक्त उपसंगम्य प्रणम्य समभाषत ॥ २४.२६ ॥

---

பிரம்மா கூறியது—

24. 18. மனுபுத்திரியே! கைடபாசுரனைக் கொன்ற ஹரியானவர் உனது கர்ப்பத்தில் புகுந்துள்ளார். அஜ்ஞானத்தாலும் அவநம்பிக்கையாலும் ஏற்பட்டுள்ள சிக்கலைப் போக்குபவராய் பூமியில் சஞ்சரிக்கப்போகிறார்.

மைத்திரேயர் கூறியது—

24. 21. விதுரரே! பிரம்மதேவர் சென்றதும் அவரால் கட்டளையிடப்பட்ட கர்த்தமர் தனது பெண்களை வேதமுறைப்படி பிரஜாபதிகளுக்குக் கொடுத்தார்.

24. 22-24. கலையை மரீசிக்கும், அனசூயையை அத்திரிக்கும் கொடுத்தார். சிரத்தையை அங்கிரசுக்கும், ஹவிர்ப்புவைப் புலஸ்தியருக்கும் கொடுத்தார்; புலஹருக்கு அவருக்கு அனுரூபமான கதியையும், கிரதுவுக்கு ஸதியான கிரியையையும், பிருகுவுக்கு கியாதியையும், வசிஷ்டருக்கு அருந்ததியையுங் கொடுத்தார்; எவளால் யஜ்ஞம் விஸ்தாரமாயிற்றோ அந்த சாந்தியை அதர்வணருக்குக் கொடுத்தார் விவாகம் செய்துகொண்ட ரிஷிசிரேஷ்டர்களைப் பத்தினிகளுடன் கௌரவித்துச் சந்தோஷப்படுத்தினார்.

24. 25. விதுரரே! பிறகு பத்தினிகளை யடைந்த அம்மகரிஷிகள் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியுடன் தத்தம் ஆசிரமங்களுக்குப் புறப்பட்டனர்.

24. 26. பின் தேவாதி தேவரும் திரியுகருமான விஷ்ணு அவதரித்ததை யுணர்ந்து தனிமையில் அணுகி நமஸ்கரித்துக் கூறலானார்.

---

24. 21. गते सत्यव्रते । सुदुहितॄः ।
24. 23. ख्यातिं स भृगवे ।

अहो पापच्यमानानां निरये स्वैरमङ्गलैः ।
कालेन भूयसा नूनं प्रसीदन्तीह देवताः ॥ २४.२७ ॥

बहुजन्म-विपक्केन सम्यग्योग-समाधिना ।
द्रष्टुं यतन्ते यतयः शून्यागारेषु यत्पदम् ॥ २४.२८ ॥

स एव भगवानद्य हेलनं न गणय्य नः ।
गृहेषु जातो ग्राम्याणां यः स्वानां पक्षपोषणः ॥ २४.२९ ॥

स्वीयं वाक्य-मृतं कर्तु-मवतीर्णो-सि मे गृहे ।
चिकीर्षु-र्भगवान् ज्ञानं भक्तानां मानवर्धनः ॥ २४.३० ॥

तान्येव तेऽभिरूपाणि रूपाणि भगवं-स्तव ।
यानि यानि च रोचन्ते स्वजनाना-मरूपिणः ॥ २४.३१ ॥

---

24. 27. தமது பாவச் செயல்களால் துககம் நிறைந்த ஸம்ஸாரத்தில் வாட்டப் படுவோரிடம் வெகு காலத்துக்குப் பின்னுவது தேவர்கள் அருள்புரிகின்றனர் என்பது நிச்சயம்.

24. 28-29. பல பிறவிகளில் தொடர்ந்து பழகிப் பக்குவமான யோகஸமாதியால் எவருடைய ஸ்வரூபத்தைக் காண்பதற்கு யதிகள் ஏகாந்தமான இடத்தில் இருந்து கொண்டு முயற்சிக்கின்றார்களோ அந்த பகவானுகிய தாங்கள் இன்று தனது பக்தர் களைப் போஷிப்பவராதலால் எங்களுடைய இழிவான நிலையைப் பொருட்படுத்தாது விஷயப்பற்றில் சுழலும் எங்கள் விடுகளில் அவதரித்துள்ளீர்கள்.

24. 30. ஐயனே! உமது வாக்கை மெய்ப்பிப்பதற்கும் ஸாங்கிய ஞானத்தை விஸ்தாரப்படுத்தும் பொருட்டும் பக்தர்களைப் பெருமைப்படுத்துபவரான நீங்கள் எனது கிருஹத்தில் அவதரித்துள்ளீர்.

24. 31. ஐயனே! அப்பிராகிருதமான உமது ரூபங்கள் எவையோ அவையே உமக்கு உண்மையில் பொருத்தமான ரூபங்களாம். எனினும் உமது அடியார்க்கு எந்தெந்த ரூபங்கள் விருப்பமானவையோ அவையெல்லாம் பிராகிருத வடிவமில்லாத உமக்கும் ருசிக்கின்றன.

---

24. 28. சூன்யாகாரேஷு—விவிக்தஸ்தானேஷு ।
பஹுஜன்மவிபக்வேன—ஒ. பஹூனும் ஜன்மனுமந்தே ஜ்ஞானவான்மாம் ப்ரபத்யதே । கீ. 7.19
தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த : காலேனுத்மனி விந்ததி । கீ. 4.38
சூன்யாகாரேஷு—விவிக்தஸ்தானேஷு ।
24. 30. ஸ்வவாக்யம் தவபுத்ரோ பவிஷ்யாமீதி யத்தத் ஸத்யம் கர்த்தும் ।
24. 31. அலௌகிகானி சதுர்ப்புஜாதி ரூபாணி தேஸபிரூபாணி போக்யானி । அரூபிண: ப்ராக்ருதரூப-ரஹிதஸ்ய ।

ஒ. அவரவர் தமதம தறிவறி வகை வகை அவரவரிறையவரென அடியடைவர்கள்
உளனெனிலுளனவனுருமமிவ்வுருவுகள்
உளனலனெனிலவன் அருவமிவ்வருவுகள்
உளனென விலனென இவை குணமுடைமையில்
உளனிருதகைமையோ டொழிவிலன் பரந்தே. —நம்மாழ்வார்
தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம்தானே.
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்தமையாதிருப்பரோ
அவ்வண்ணமாழியானும்.

---

24. 29. यत् स्वानां ।

आ स्माभिपृच्छेऽद्य पतिं प्रजानां
त्वयावतीर्णर्ण उताप्तकामः ।
परिव्रजत्पदवी-मास्थितोऽहं
चरिष्ये त्वां हृदि युंजन् विशोकः ॥ २४.३४ ॥

श्री भगवानुवाच—

एष आत्मपथोऽव्यक्तो नष्टः कालेन भूयसा ।
तं प्रवर्तयितुं देह-मिमं विद्धि मया भृतम् ॥ २४.३७ ॥

गच्छ कामं मया पृष्टो मयि संन्यस्त-कर्मणा ।
जित्वा सुदुर्जयं मृत्यु-ममृतत्वाय मां भज ॥ २४.३८ ॥

मायात्मानं स्वयंज्योतिः सर्वभूतगुहाशयम् ।
आत्मन्येवात्मना वीक्ष्य विशोकोऽभय-मृच्छसि ॥ २४.३९ ॥

मात्र आध्यात्मिकीं विद्यां शमनीं सर्वकर्मणाम् ।
वितरिष्ये यथा चासौ भयं चातितरिष्यति ॥ २४.४० ॥

---

24. 34. பிரபுவே! இப்பொழுது பிரஜாபதியாகிய உம்மிடம் ஒன்று விஜ்ஞாபனம் செய்துகொள்ளுகிறேன். நீர் அவதரித்ததால் முக்கடன்களும் நீங்கியவனுகவும் ஆசைகள் பூர்த்தியானவனுகவும் உள்ள நான் ஸந்நியாஸமார்க்கத்தை ஏற்று இருதயத்தில் உம்மை தியானித்துக்கொண்டு அதனுல் துன்பத்தைத் துடைத்தவனுய் சஞ்சரிக்க விரும்புகிறேன்.

ஸ்ரீ பகவான் கூறியது—

24. 37. ஆத்மஞானத்தின் ஸூக்ஷ்மமார்க்கமான இந்த ஸாங்கிய யோகம் வெகு காலமாக மறைந்துவிட்டது. அதை மீண்டும் வளர்க்கவே இந்த தேகம் என்னுல் எடுக்கப் பட்டது என்று உணர்வீர்.

24. 38. உமது விருப்பப்படி போகலாம். நான் விடையளிக்கிறேன். என்னிடம் கர்மங்களை அர்ப்பணஞ் செய்து ஜயிக்கமுடியாத ஸம்ஸாரத்தை ஜயித்து மோக்ஷத்தை எய்துதற்கு என்னை பஜிப்பீராக.

24. 39. ஆத்மாவும் ஸ்வயஞ்ஜோதியும் எல்லாப் பிராணிகளுடைய இருதயகுகை யில் வசிப்பவனும் ஆகிய என்னை உம்முடைய உள்ளத்திலேயே உம்முடைய புத்திசக்தி யால் ஸாக்ஷாத்கரித்து சோகமற்றவராய் நிர்ப்பயமான மோக்ஷநிலையை எய்துவீர்.

24. 40. தாயாருக்குக் கருமத் தொடர்பை போக்கும் அத்தியாத்தும வித்தையை உபதேசிக்கப்போகிறேன். அதனுல் அவள் பயங்கரமான ஸம்ஸாரத்தைத் தாண்டப் போகிருள்.

---

24. 34. ஆஸ்மாபிப்ருச்சே—அபிப்ருச்சேஸ்ம, அபிப்ருச்சாமி ।
24. 37. ஒ. ஸகாலேனேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப । கீ. 4.2.
24. 38. ஒ. அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாSம்ருதமச்னுதே । —ஈச. உப.
யஸ்த்வாத்மரதிரேவஸ்யாத் ஆப்தத்ருப்தச்ச மானவ: ।
ஆத்மன்யேவச ஸந்துஷ்டஸ் தஸ்யகார்யம் நவித்யதே ॥ —கீ 3.17

---

24. 37. आत्मपथो नष्टोऽव्यक्तः ।

मैत्रेय उवाच—

एवं समुदितस्तेन कपिलेन प्रजापतिः ।
दक्षिणीकृत्य तं प्रीतो वनमेव जगाम ह ॥ २४.४१ ॥

व्रतं स आस्थितो मौन-मात्मैकशरणो मुनिः ।
निःसङ्गो व्यचरत् क्षोणी-मनग्नि-रनिकेतनः ॥ २४.४२ ॥

इच्छाद्वेष विहीनेन सर्वत्र समचेतसा ।
भगवद्भक्तियुक्तेन प्राप्त भागवती गतिः ॥ २४.४७ ॥

पितरि प्रस्थितेऽरण्यं मातुः प्रिय-चिकीर्षया ।
तस्मिन् बिन्दुसरेऽवात्सीद्भगवान् कपिलः किल ॥ २५.६ ॥

तमासीन-मकर्माणं तत्त्वमार्गाग्रदर्शनम् ।
स्वसुतं देवहूत्याह धातुः संस्मरती वचः ॥ २५.६ ॥

---

மைத்திரேயர் கூறியது—

24. 41. இவ்விதம் கபிலதேவரால் கூறப்பட்ட கர்த்தமப் பிரஜாபதி அவரைப் பிரதக்ஷிணம் செய்துவிட்டு மகிழ்ச்சியுடன் வனமேகினர்.

24. 42. மௌனவிரதம் பூண்டு ஆத்மாவையன்றி வேறு எதிலும் நாட்டமில்லாதவராய்ப்பற்று நீங்கியவராய் அக்கினி யில்லாதவராயும் தங்குமிடமில்லாதவராயும் பூமியில் சஞ்சரித்தார்.

24. 47. இங்ஙனம் விருப்பு வெறுப்பு நீங்கியவரும் எங்கும் ஸமசித்தமுடைய வரும் பகவானிடம் பக்தி நிறைந்தவருமான அவரால் பகவானுடைய பரமபதம் எய்தப் பட்டது.

25. 5. தந்தை வனம்சென்ற பின் தாயாருக்குப் பிரியம்செய்ய எண்ணி பகவான் கபிலர் அந்த பிந்து ஸரஸ்ஸிலேயே வசித்து வந்தார்.

25. 6. தேவஹூதியானவள் பிரம்மதேவரின் வார்த்தையை நினைவிற்கொண்டு (ஒரு சமயம்) செயலடங்கி நிஷ்டையிலிருப்பவரும் தத்துவமார்கத்தின் எல்லையைக் காட்டுபவருமாகிய தன் புத்திரனை நோக்கிப் பின்வருமாறு உறலானள்.

---

24. 42. ஒ. துல்ய நிந்தா ஸ்துதிர்-மௌனீ ஸந்துஷ்டோ யேந கேனசித் |
அநிகேத: ஸ்திரமதிர் பக்திமான் மே ப்ரியோ நர : || கீ. 12. 19.

24. 47. ஒ. இச்சாத்வேஷ-ஸமுத்தேன த்வந்த்வமோஹேன பாரத |
ஸர்வபூதானிஸம்மோஹம் ஸர்க்கே யாந்தி பரந்தப || கீ. 7. 27

25. 0. கபிலேனர்ப்பிதா மாத்ரே கூடபாவ நியந்த்ரிதா |
யோக-மாணிக்ய-மஞ்ஜூஷா ஸ்புடமுத்காட்யதேSதுனா ||

இங்கு யோக மாணிக்கப்பெட்டி தாயிடம் திறந்து கொடுக்கப்படுகிறது.

---

25. 6. तत्त्वमार्ग-प्रदर्शकम् ।

देवहूतिरुवाच—

य आद्यो भगवान् पुंसा-मीश्वरो वै भवान् किल ।
लोकस्य तमसान्धस्य चक्षुः सूर्य इवोदितः ॥ २५.९ ॥

अथ मे देव संमोह-मपाक्रष्टुं त्वमर्हसि ।
योऽवग्रहोऽहं-ममेती-त्येतस्मिन् योजित-स्त्वया ॥ २५.१० ॥

तं त्वा गताहं शरणं शरण्यं स्व-भृत्य-संसार-तरोः कुठारम् ।
जिज्ञासयाहं प्रकृतेः पूरुषस्य नमामि सद्धर्म-विदां वरिष्ठम् ॥ २५.११ ॥

श्री भगवानुवाच—

अथ ते संप्रवक्ष्यामि तत्त्वानां लक्षणं पृथक् ।
यद्विदित्वा विमुच्येत पुरुषः प्राकृतैर्गुणैः ॥ २६.१ ॥

अनादि-रात्मा पुरुषो निर्गुणः प्रकृतेः परः ।
प्रत्यग्धामा स्वयंज्योति-र्विश्वं येन समन्वितम् ॥ २६.३ ॥

---

தேவஹூதி கூறியது—

25. 9. தாங்கள் பகவான், ஆதிபுருஷர், ஜீவர்களுக்கு ஈசுவரன் அக்ஞான இருளில் பார்வை யிழந்த உலகுக்குப் பார்வையளிக்கும் சூரியனைப்போல் உதித்துள்ளீர்.

25. 10. ஆகையால், தேவனே! எனது மோகத்தை நீரே போக்குதற் குரியவர். நான் எனது என்ற துராக்கிரகம் இவ்வுடலிலும் உடைமையிலும் எது உண்டோ அதுவும் உமது செயலே யன்றோ?

25. 11. தமது அடியார்களின் ஸம்ஸார விருக்ஷத்துக்குக் கோடாரிபோன்றவரும், ஞானமார்க்கத்தை அறிந்தவர்களின் தலைவரும், சரணடைதற்குரியவரும் ஆகிய உம்மைப் பரகிருதி புருஷ விவேகத்தை யறிந்துகொள்ளும் பொருட்டு நான் சரணடைகின்றேன்.

ஸ்ரீ பகவான் கூறியது—

26. 1. எதை யறிந்தால் இயற்கைக் குணங்களின் கட்டினின்று ஜீவன் விடுபடுவானோ அந்தத் தத்துவத் தொகுதியின் லக்ஷணத்தை இப்போது உனக்குத் தனித்தனியாக விளக்கிக் கூறுகிறேன்.

26. 3. இவ்வுலகு முழுதும் எவனால் வியாபிக்கப்பட்டுள்ளதோ, எவன் நிர்க்குணனாய்ப் பிரகிருதிக்கும் அப்பாலுள்ளவனோ, ஒவ்வொரு உள்ளத்திலும் உறைபவனோ, வேறு ஒளியின்றித்தானே பிரகாசிப்பவனோ, எவனுக்கு ஆதியில்லையோ அவன்தான் ஆத்மா அல்லது புருஷன் (என்பப்படுபவன்.)

---

25. 11. ஒ. நன்கு திடமாக வேரூன்றிய ஸம்ஸார விருக்ஷத்தைத் திடமான பற்றின்மையென்னும் ஆயுதத்தால் வெட்டி விட்டு, எவனிடமிருந்து அந்த அநாதியான ஸம்ஸாரம் பெருகிற்றோ அந்த ஆதி புருஷனையே சரணமடைகின்றேன் என்று நிச்சயித்து எவ்வழி சென்றோர் மீண்டுந் திரும்புவதில்லையோ அவ்வழியே தேடிச் செல்லுதற்குரியது. கீ. 15. 3-4

कार्य-कारण-कर्तृत्वे कारणं प्रकृतिं विदुः ।
भोक्तृत्वे सुखदुःखानां पुरुषं प्रकृतेः परम् ॥ २६.८ ॥

पंचभिः पंचभि-र्ब्रह्म चतुर्भि-र्दशभि-स्तथा ।
एतच्चतुर्विंशतिकं गणं प्राधानिकं विदुः ॥ २६.११ ॥

एतावानेव संख्यातो ब्रह्मणः सगुणस्य ह ।
सन्निवेशो मया प्रोक्तो यः कालः पंचविंशकः ॥ २६.१५ ॥

अन्तः पुरुषरूपेण कालरूपेण यो बहिः ।
समन्वेत्येष सत्त्वानां भगवानात्ममायया ॥ २६.१८ ॥

दैवात् क्षुभितधर्मिण्यां स्वस्यां योनौ परः पुमान् ।
आधत्त वीर्यं साऽसूत महत्तत्त्वं हिरण्मयम् ॥ २६.१९ ॥

महत्तत्त्वा-द्विकुर्वाणा-द्भगवद्वीर्य-संभवात् ।
क्रियाशक्ति-रहंकार-स्त्रिविधः समपद्यत ॥ २६.२३ ॥

---

26. 8. காரியம் காரணம் கர்த்திருத்துவம் என்பவற்றிற்குப் பிரகிருதியைக் காரணமாகவும், இன்பதுன்ப நுகர்ச்சிக்குப் பிரகிருதிக்குப் பரமானபுருஷனைக் காரண மாகவும் கூறுகின்றனர்.

26. 11. (மஹாபூதம்) ஐந்தும், (தன்மாத்திரைகள்) ஐந்தும் (அந்தக்கரணம்) நான்கும், (இந்திரியங்கள்) பத்தும் ஆகிய இருபத்துநான்கின் தொகுதியைப் (பிரகிருதி அல்லது) பிரதானத்தினின்று தோன்றிய (ஸகுண) பிரம்மவடிவம் எனக் கருதுகின்றனர்.

26. 15. என்னால் இங்ஙனம் (இருபத்துநாலாக) எது வர்ணிக்கப்பட்டதோ அவ் வளவே ஸகுணப் பிரம்மத்தின் ஸந்நிவேசம் என எண்ணப்பட்டிருக்கிறது. காலம் என்பது இருபத்தைந்தாவது தத்துவமாகும்.

26. 18. வெளியில் எது காலரூபமா யிருக்கிறதோ அதுவே உள்ளே புருஷரூபமா யிருப்பதும்; அந்த பகவத் தத்துவம் இங்ஙனம் தன் மாயாசக்தியால் ஸகலப் பிராணிக ளுக்கும் உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கிறது.

26. 19. (ஜீவசமூகத்தின்)அதிருஷ்டகர்மத்தின் உந்துதலால் சலனத்தை யடைந்த தனது பிரகிருதியிடம் பரமபுருஷன் இச்சக்திரூபமான வீரியத்தை வைத்தார். அந்தப் பிரகிருதியானது பொன்போலொளிரும் மஹத்தத்துவத்தைப் பிறப்பித்தது.

26. 23. பகவானுடைய வீரியமான இச்சக்தியினின்று தோன்றிய மஹத்தத்துவம் மாறுதலை யடைந்தபோது கிரியாசக்திப் புரதானமான மூவ்வித அஹங்காரம் உண்டாயிற்று.

---

26. 8. **காரியம்**—சரீரம்; **காரணம்**—இந்த்ரியம்; **கர்த்தா—தே**வதா வர்க்க: **த**த்பாவாபத்தௌ புருஷஸ்ய ப்ரக்ருதிம் காரணம் விது: கூடஸ்தஸ்ய ஸவதோ விகாராபாவாத்। **போக்**த்ருத்வஞ்ச விகாரஸ்ய ஜடாவஸானத்வாத் உபாதிப்ராதான்யம், **போக**ஸ்ய **சித**வஸா னத்வாது பஹிதப்ராதான்யமிதி ॥

26. 19. ஓ. என்னுடைய க்ஷேத்திரம் பெரிதும் எல்லாவற்றையும் தன்னுள் தாங்குவது மான மூலப்பிரகிருதி. அதில் நான் கர்ப்பத்தை வைக்கிறேன். அதினின்று எல்லா உயிர் களும் உற்பத்தியாகின்றன. கீ. 14. 3

वैकारिक-स्तैजसश्च तामसश्च यतो भवः ।
मनसश्चेन्द्रियाणां च भूतानां महतामपि ॥ २६.२४ ॥

सहस्रशिरसं साक्षाद्यमनन्तं प्रचक्षते ।
सङ्कर्षणाख्यं पुरुषं भूतेन्द्रिय-मनोमयम् ॥ २६.२५ ॥

कर्तृत्वं करणत्वं च कार्यत्वं चेति लक्षणम् ।
शान्त-घोर-विमूढत्व-मिति वा स्यादहंकृतेः ॥ २६.२६ ॥

वैकारिका-द्विकुर्वाणान्मनस्तत्त्व-मजायत ।
यत्संकल्प-विकल्पाभ्यां वर्तते कामसंभवः ॥ २६.२७ ॥

यद्विदुर्ह्यनिरुद्धाख्यं हृषीकाणा-मधीश्वरम् ।
शारदेन्दीवरश्यामं संराध्यं योगिभिः शनैः ॥ २६.२८ ॥

तैजसात्तु विकुर्वाणाद् बुद्धितत्त्व-मभूत् सति ।
द्रव्यस्फुरण-विज्ञान-मिन्द्रियाणा-मनुग्रहः ॥ २६.२९ ॥

---

26. 24. அவை வைகாரிகம், தைஜஸம், தாமஸம்; அவற்றினின்று கிரமமாக (வைகாரிகத்தில்) மனதின் உற்பத்தியும், (தைஜஸத்தில்) இந்திரியங்களின் உற்பத்தியும், (தாமஸத்தில்) பஞ்சமஹாபூதங்களின் உற்பத்தியும் ஏற்பட்டன.

26. 25. இந்தப் பஞ்சபூத-இந்திரிய-மனோமயமாய் விரிந்த அஹங்கார தத்துவத்தையே ஸாக்ஷாத்தாக ஆயிரந்தலை படைத்த அனந்தன் என்றும் ஸங்கர்ஷணபுருஷன் என்றும் கூறுகின்றனர்.

26. 26. (தேவதா ரூபத்தினால்) கர்த்திருத்துவமும், (இந்திரிய ரூபத்தினால்) கரணத்துவமும், (பஞ்சபூத ரூபத்தினால்) காரியத்துவமும், அவ்வாறே (ஸத்துவ குணத்தால்) சாந்தியும், (ரஜோகுணத்தால்) சாந்தியிழத்தலும், (தமோகுணத்தால்) அறிவின்மையும் இவ்வஹங்காரத்தின் வடிவங்களாம்.

26. 27. வைகாரிக தத்துவம் (ஸாத்துவிகாஹங்காரம்) மலர்ந்ததால் மனஸ்தத்துவம் தோன்றிற்று; அதினின்று ஸங்கல்ப விகல்பவடிவான ஆசை தோன்றிற்று.

26. 28. இம்மனோதத்துவத்தையே இந்திரியங்களை ஆள்பவரான அநிருத்தன் என்றும், சரத்கால நீலோத்பலம்போல் சியாமளவர்ணனாக யோகிகளால் மெதுவாக மனதை யடக்குதற்குத் தியானத்தற்குரியவன் என்றும் கூறுகின்றனர்.

26. 29. ஸாதுஸ்வரூபியான தாயே! தைஜஸதத்துவம் (ராஜஸாஹங்காரம்) மலர்ந்ததால் புத்தி தத்துவம் தோன்றிற்று. அதனால் பொருள்களைப்பற்றிய அறிவும் இந்திரியங்களினால் உணரும் சக்தியும் உண்டாயிற்று.

---

26. 26. ஒ. மனோரூபேண கர்த்ருத்வம் தேஹரூபேண கார்யதா ।
இந்த்ரியாத்மதயா சைவ கரணத்வ-மஹங்க்ருதே: ॥

---

26. 26. शान्तं घोरं ।
26. 27. कार्यसंभवः । பா. பே.

तामसाच्च विकुर्वाणाद्भगवद्वीर्य-चोदितात् ।
शब्दमात्र-मभूत्तस्मान्नभः श्रोत्रं तु शब्दगम् ॥ २६.३२ ॥

नभसः शब्द-तन्मात्रात् कालगत्या विकुर्वतः ।
स्पर्शोऽभवत्ततो वायु-स्त्वक् स्पर्शस्य च संग्रहः ॥ २६.३५ ॥

वायोश्च स्पर्शतन्मात्राद्रूपं दैवेरितादभूत् ।
समुत्थितं ततस्तेज-श्चक्षू रूपोपलंभनम् ॥ २६.३८ ॥

रूपमात्राद्विकुर्वाणात् तेजसो दैव-चोदितात् ।
रसमात्र-मभूत्तस्मा-दम्भो जिह्वा रसग्रहः ॥ २६.४१ ॥

रसमात्राद्विकुर्वाणा-दम्भसो दैव-चोदितात् ।
गन्धमात्र-मभूत्तस्मात् पृथ्वी घ्राणस्तु गन्धगः ॥ २६.४४ ॥

एतान्यसंहत्य यदा महदादीनि सप्त वै ।
कालकर्मगुणोपेतो जगदादिरुपाविशत् ॥ २६.५० ॥

---

26. 32. பகவானுடைய சிச்சக்தியின் தூண்டுதலால் தாமஸாஹங்காரம் மலர்ந்து சப்த தன்மாத்திரை உண்டாயிற்று. அதினின்று ஆகாசமும் சப்தத்தை யுணரும் சுரோத்திரேந்திரியமும் உண்டாயின.

26. 35. ஆகாசத்தின் சப்த தன்மாத்திரையினின்று நாளடைவில் தோன்றியது ஸ்பர்சதன்மாத்திரை; பின்னர் வாயுவும் ஸ்பர்சத்தை யுணரும் த்வக் இந்திரியமும் உண்டாயின.

26. 38, வாயுவின் ஸ்பர்ச தன்மாத்திரையினின்று காலத்தின் தூண்டுதலால் ரூப தன்மாத்திரை உண்டாயிற்று. அதினின்று ஒளியும் ஒளியை யுணரும் கண்ணும் உண்டாயின.

26. 41. ஒளியின் ரூப தன்மாத்திரையினின்று காலத்தின் தூண்டுதலால் ரஸ தன்மாத்திரை உண்டாயிற்று. அதினின்று அப்புவும் ரஸத்தை யுணரும் (ரஸனேந்திரிய மும்) நாக்கும் உண்டாயின.

26. 44. அப்புவின் ரஸ தன்மாத்திரையினின்று காலத்தின் தூண்டுதலால் கந்த தன்மாத்திரை உண்டாயிற்று. அதனின்று பிருதிவியும் கந்தத்தை யுணரும் (கிராணேந் திரியமும்) மூக்கும் உண்டாயின.

26. 50. மஹத்தத்துவம் (அஹங்காரம், பஞ்சபூதம்) முதலிய ஏழும் ஒன்று சேராமல் (ஆதியில்) இருந்தபோது ஜகத்தின் ஆதிகாரணமான பரமாத்மா, காலம் கருமம் குணம் இவற்றுடன் பிரவேசித்தனர்.

---

26. 50. ஒ. (தத்ஸ்ருஷ்ட்வா । ததேவானுப்ராவிசத் । ததனு ப்ரவிச்ய । ஸச்சத்யச் சாபவத் ।) அங்ஙனம் சிருஷ்டித்து அதனுள் புகுந்தது. அதனுள் புகுந்து உருவாகவும் அரு வாகவும் அதுவே ஆயிற்று. —தை. உப. 2. 6.

---

26. 32. तत्त्वन्नभः । பா. பே.

तत-स्तेनानुविद्धेभ्यो युक्तेभ्योऽण्डमचेतनम् ।
उत्थितं पुरुषो यस्मा-दुदतिष्ठ-दसौ विराट् ॥ २६.५१ ॥

यथा प्रसुप्तं पुरुषं प्राणेन्द्रिय-मनो-धियः ।
प्रभवन्ति विना येन नोत्थापयितु-मोजसा ॥ २६.७१ ॥

तमस्मिन् प्रत्यगात्मानं धिया योगप्रवृत्तया ।
भक्त्या विरक्त्या ज्ञानेन विविच्यात्मनि चिन्तयेत् ॥ २६.७२ ॥

प्रकृतिस्थोऽपि पुरुषो नाज्यते प्राकृतै-र्गुणैः ।
अविकारा-दकर्तृत्वा-न्निर्गुणत्वा-ज्जलार्कवत् ॥ २७.१ ॥

योगस्य लक्षणं वक्ष्ये सबीजस्य नृपात्मजे ।
मनो येनैव विधिना प्रसन्नं याति सत्पथम् ॥ २८.१ ॥

स्वधर्माचरणं शक्त्या विधर्माच्च निवर्तनम् ।
दैवाल्लब्धेन सन्तोष आत्मविच्चरणार्चनम् ॥ २८.२ ॥

---

26. 51. பின் அவரால் ஊடுருவப்பெற்று ஒன்று சேர்க்கப்பட்ட மஹதாதிகளி னின்று ஜடமான அண்டம் உண்டாயிற்று. அதினின்று இந்த விராட்புருஷர் தோன்றினர்.

26. 71-72. பிராணன் இந்திரியங்கள் மனது புத்தியென்ற இவை உறக்கத்தில் ஆழ்ந்த புருஷனைத் தமது சக்தியால்மட்டும் எந்த ஆத்மசக்தியின்றி எழுப்பமாட்டாவோ அந்தப் பிரத்தியகாத்மாவை யோகத்தில் பழகிய புத்தியாலும் பக்தியாலும் வைராக்கியத் துடன் கூடிய ஞானத்தாலும் இச்சரீரத்தில் தனித்து நிற்பதாக நன்குணர்ந்து சிந்திக்க வேண்டும்.

27. 1. ஜலத்தில் பிரதிபலித்த சூரியன், ஜலத்தின் குணங்களால் பற்றப்படாத வாறு பிரகிருதியில்உள்ள புருஷன், மாறுதலின்மையாலும் செயலற்ற தன்மையாலும், குணமின்மையாலும், பிரகிருதியின் குணங்களாலும் பற்றப்படுவதில்லை.

28. 1. ராஜபுத்திரியான தாயே! எந்த யோகவிதிகளைக் கைக்கொண்டால் மனது தெளிவடைந்து நல்லவழியில் செல்லுமோ அந்த யோகத்தின் லக்ஷணத்தை அதன் மூலத்துடன் உனக்குக் கூறுகிறேன்.

28. 2. முமுச்சக்தியுடன் ஸ்வதர்மத்தை யனுஷ்டித்தல், தனக்கு தர்மமல்லாததி லிருந்து விலகுதல், தெய்வவசமாய்க் கிடைத்ததைக்கொண்டு திருப்தி, ஆத்ம ஞானி களின் பாதங்களைப் பூஜித்தல்;

---

26. 72. முதலில் பரமேசுவரனிடம் பக்தி; அதனால் மற்றதில் விரக்தி; அதனால் யோக புத்தியும் ஏகாக்ரசித்தமும்; அதினின்று உதிக்கும் ஞானத்தால் இச்சரீரத்தினின்று பிரித்து ஆத்மாவைச் சிந்தித்துணர்தல்.

ग्राम्यधर्म-निवृत्तिश्च मोक्षधर्मरतिस्तथा ।
मितमेध्यादनं शश्व-द्विविक्त-क्षेमसेवनम् ॥ २८.३ ॥

अहिंसा सत्यमस्तेयं यावदर्थ-परिग्रहः ।
ब्रह्मचर्यं तपः शौचं स्वाध्यायः पुरुषार्चनम् ॥ २८.४ ॥

मौनं सदाऽऽसनजयः स्थैर्यं प्राणजयः शनैः ।
प्रत्याहारश्चेन्द्रियाणां विषयान्मनसा हृदि ॥ २८.५ ॥

स्वधिष्ण्यानामेकदेशे मनसा प्राणधारणम् ।
वैकुण्ठलीलाभिध्यानं समाधानं तथात्मनः ॥ २८.६ ॥

प्रसन्नवदनांभोजं पद्मगर्भारुणेक्षणम् ।
नीलोत्पलदलश्यामं शंखचक्रगदाधरम् ॥ २८.१३ ॥

लसत्पंकज-किंजल्क-पीतकौशेय-वाससम् ।
श्रीवत्सवक्षसं भ्राजत्कौस्तुभामुक्तकंधरम् ॥ २८.१४ ॥

मत्तद्विरेफकलया परीतं वनमालया ।
परार्ध्य-हारवलय-किरीटांगदनूपुरम् ॥ २८.१५ ॥

---

28. 3. விஷயசுகங்களைத் தேடும் காரியங்களிலிருந்து விலகுதல், மோக்ஷ தர்மத்தில் பற்று, பரிசுத்தமான மிதபோஜனம், தனிமையானதும் தொந்திரவற்றதுமான இடத்தில் எப்போதும் வசித்தல்,

28. 4. அஹிம்ஸை, ஸத்தியம், கள்ளத்தனத்தை விடுதல், அவசியமான அளவு மட்டும் பிறருதவியை ஏற்றுக்கொள்ளுதல், பிரம்மசரியம், தவம், பரிசுத்தம், வேதமோதுதல், புருஷோத்தம பூஜை ;

28. 5. மௌனம், ஆஸனத்தில் ஸ்திரமாயிருக்கும் பயிற்சியில் வெற்றி, மெதுவாகப் பிராணவாயுவை ஜயித்தல், இந்திரியங்களை விஷயங்களிலிருந்து மனோசக்தியாலிழுத்து ஹிருதயத்தில் நிறுத்துதல் ;

28. 6. ஆதார சக்கரங்களுள் ஒன்றில் மனதுடன் பிராணனை நிலைத்து நிற்கச் செய்தல், பகவானுடைய லீலைகளை தியானம் செய்தல், அதனால் மனதிற்குச் சமாதானங் காணுதல் (ஆகிய இவை யோகலக்ஷணம்.)

28. 13. பிரஸன்னமான தாமரைபோன்ற முகம், தாமரையினுட்பக்கம்போன்று சிவந்த கண்கள், நீலத்தாமரை யிதழ்போன்ற சியாமளவர்ணம், சங்கு, சக்கரம், கதை ஏந்திய கைகள் ;

28. 14. தாமரையின் மகரந்தக் கேஸரங்களைப்போல் பிரகாசிக்கும் மஞ்சட் பட்டாடை, மார்பில் ஸ்ரீவத்ஸம், கழுத்தில் தொங்கும் கௌஸ்துப மணியின் ஒளி ;

28. 15. வண்டுகள் மொய்க்கும் வனமாலை, முத்துமாலை, தோள்வளை, கிரீடம், கங்கணம், நூபுரம் ;

कांचीगुणोल्लसच्छ्रोणिं हृदयांभोजविष्टरम् ।
दर्शनीयतमं शान्तं मनोनयनवर्धनम् ॥ २८.१६ ॥

अपीच्यदर्शनं शश्वत्सर्वलोक-नमस्कृतम् ।
सन्तं वयसि कैशोरे भृत्यानुग्रह-कातरम् ॥ २८.१७ ॥

कीर्तन्य-तीर्थयशसं पुण्यश्लोक-यशस्करम् ।
ध्यायेद्देवं समग्राङ्गं यावन्न च्यवते मनः ॥ २८.१८ ॥

स्थितं व्रजन्त-मासीनं शयानं वा गुहाशयम् ।
प्रेक्षणीयेहितं ध्याये-च्छुद्धभावेन चेतसा ॥ २८.१९ ॥

तस्मिल्लब्धपदं चित्तं सर्वावयव-संस्थितम् ।
विलक्ष्यैकत्र संयुज्या-दंगे भगवतो मुनिः ॥ २८.२० ॥

संचिन्तयेद्भगवत-श्चरणारविन्दं वज्रांकुशध्वज-सरोरुह-लांछनाढ्यम् ।
उत्तुंग-रक्त-विलस-न्नखचक्रवाल-ज्योत्स्नाभिराहत-महद्धृदयान्धकारम्
॥ २८.२१ ॥

28. 16. இடுப்பில் விளங்கும் தங்க அரைநாண், ஆகிய இவற்றுடன் இருதயத் தாமரையில் நிற்பவரும், கண்ணுக்கினிமை மிக்கவரும், சாந்தரும், மனத்தையும் கண்களையும் மகிழ்விப்பவரும் ;

28. 17. கண்ணைக்கவரும் அழகுடையவரும், என்றும் எல்லா உலகங்களாலும் வணங்கப்பெற்றவரும், என்றும் இளமை வயதினரா யிருப்பவரும், அடியார்களுக் கருள் செய்ய ஆவல்கொண்டவரும் ;

28. 18. புகழ்தற்குரிய பாவனமான கீர்த்தியுடையவரும், புண்ணியம் மிக்கோரின் கீர்த்தியை வளர்ப்பவரும் ஆகிய தேவனை எல்லா அங்கங்களுடன் பரிபூர்ணமாக மனம் நழுவாமலிருக்கும்வரை தியானம் செய்யவேண்டும்.

28. 19. நிற்பவராகவோ, நடப்பவராகவோ, உட்கார்ந்திருப்பவராகவோ, படுத் திருப்பவராகவோ இருதயத்தில் குடிகொண்ட அவருடைய கண்ணுக்கினிய வடிவைப் பரிசுத்தமான பக்தியுடன் கூடிய மனத்தால் தியானம் செய்யவேண்டும்.

28. 20. முனியானவன் அப்படி பகவானுடைய எல்லா அவயவங்களிலும் சேர்த்துச் சித்தம் லயித்திருப்பதைக் கவனித்துப் பின் தனித்தனியாக ஒவ்வொரு அங்கத்திலும் அதைக் கூட்டி நிறுத்தவேண்டும்.

28. 21. வஜ்ரம், அங்குசம், கொடி, தாமரை முதலிய அடையாளங்களுடன் கூடியதும், சிவந்து உயர்ந்து பிரகாசிக்கும் நகங்களாகிற சந்திரமண்டல காந்தியால் இருதயத்தில் குடிகொண்டுள்ள நள்ளிருளைப் போக்குவதும் ஆகிய பகவானுடைய திருவடித் தாமரையைச் சிந்திக்கவேண்டும்.

28. 19. ஒ. நின்றது எந்தை ஊரகத்து(து) இருந்தது எந்தை பாடகத்து
அன்று வெஃகணைக் கிடந்த(து) என்இலாத முன் எலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே.

—திவ்யப் பிரபந்தம்

ध्यानायनं प्रहसितं बहुलाधरोष्ठ-भासारुणायिततनु-द्विजकुन्दपंक्ति ।
ध्यायेत्स्वदेह-कुहरेऽवसितस्य विष्णो-र्भक्त्यार्द्रयार्पितमना
न पृथग्दिदृक्षेत् ॥ २८.३३ ॥

एवं हरौ भगवति प्रतिलब्ध-भावो भक्त्या द्रवद्धृदय उत्पुलकः प्रमोदात् ।
औत्कण्ठ्य-बाष्पकलया मुहुरर्ध्यमान-स्तच्चापि
चित्तबडिशं शनकै-र्वियुंक्ते ॥ २८.३४ ॥

देहं च तं न चरमः स्थितमुत्थितं वा सिद्धो विपश्यति यतोऽध्यगमत्स्वरूपम् ।
दैवादुपेतमथ दैववशादपेतं वासो यथा परिकृतं मदिरा-मदान्धः ॥ २८.३७ ॥

देहोऽपि दैववशगः खलु कर्म यावत् स्वारंभकं प्रतिसमीक्षत एव सासुः ।
तं सप्रपंच-मधिरूढ-समाधियोगः स्वप्नं पुनर्न भजते प्रतिबुद्धवस्तु ः ॥ २८.३८ ॥

---

28. 33. (படிப்படியாகப் பாதம், கணுக்கால், முழங்கால், துடை, இடுப்பு, நாபி, மார்பு, தோள்கள், கண்டம், முகம் ஆகியவற்றை உற்றுநோக்கி மகிழவேண்டும்.) அடியுதட்டின் ஒளிப்பெருக்கால் சிவந்த மல்லிகை மொட்டுகளின் வரிசையைப்போன்ற பற்கள் விளங்கும் புன்முறுவல் தியானத்தின் எல்லே. தனது உடலிலேயே இருதயத்தில் குடிகொண்ட பகவான் விஷ்ணுவினுடைய அந்தப் புன்முறுவலே அன்பு கனிந்த மனத்துடன் தியானம் செய்ய வேண்டும். அதன்பின் வேறொன்றையும் காண விரும்பக் கூடாது.

28. 34. இவ்வாறு பகவான் ஹரியிடம் அன்பு வளரப்பெற்று, பக்தியினல் உள்ளங்கசிந்து ஆனந்தத்தினல் உரோமம் சிலிர்க்க, பொங்கிவரும் ஆனந்தக் கண்ணீரால் அடிக்கடி அபிஷேகம் செய்யப்பெற்று, (பகவானுகிய மீனைப் பிடிப்பதற்கு வீசப்பட்ட) வலேபோன்ற சித்தத்தையும் மெதுவாக பக்தன் இழுத்துக் கொள்கிறன்.

28. 37. குடி வெறியால் கண்ணிழந்தவன் எவ்வாறு அணியப்பட்ட வஸ்திரத்தை (இருக்கிறதா இல்லேயா என்று) அறிவதில்லேயோ அப்படியே இந்த எல்லே நிலத்தை எய்திய சித்த புருஷன் (தன்னுடையதெனப் பிறர் கூறும்) அந்தச் சரீரத்தை அது உட்கார்ந்திருந்தாலும் நின்று கொண்டிருந்தாலும், தெய்வ வசத்தால் வந்தாலும் தெய்வ வசத்தால் போனலும் காண்பதில்லே ; ஏனென்றல் அவன் ஸ்வரூபஸாக்ஷாத்காரத்தையடைந்து விட்டான்.

28. 38. தேகமோ (பூர்வகர்ம ரூபமான) தெய்வ வசமானது; பிராரப்த கர்மம் உள்ளவரை அது இந்திரியங்களுடன் கூடி இருந்து கொண்டிருக்கும்; ஆனல் அந்த தேகத்தையும் அத்துடன் சேர்ந்த பிரபஞ்சத்தையும் ஸமாதியோகமாகிய உயர் நிலேக்கேறியவன் காண்பதில்லே; விழித்துக் கொண்டவன் கனவில் கண்டதை மீண்டும் ஸத்திய புத்தியுடன் கருதுவதில்லேயன்றே ?

---

28. 37. देहं च नश्वरं । न पश्यति । பா. பே.

यथा पुत्राच्च वित्ताच्च पृथङ् मर्त्यः प्रतीयते।
अप्यात्मत्वेनाभिमताद्देहादेः पुरुषस्तथा ॥ २८.३९ ॥

यथोल्मुका-द्विस्फुलिंगाद्-धूमाद्वापि स्वसंभवात्।
अप्यात्मत्वेनाभिमता-द्यथाग्निः पृथगुल्मुकात् ॥ २८.४० ॥

भूतेन्द्रियान्तः-करणात्प्रधाना-ज्जीवसंज्ञितात्।
आत्मा तथा पृथग्द्रष्टा भगवान् ब्रह्मसंज्ञितः ॥ २८.४१ ॥

स्वयोनिषु यथा ज्योति-रेकं नाना प्रतीयते।
योनीनां गुणवैषम्यात्तथाऽऽत्मा प्रकृतौ स्थितः ॥ २८.४३ ॥

तस्मादिमां स्वां प्रकृतिं दैवीं सदसदात्मिकाम्।
दुर्विभाव्यां पराभाव्य स्वरूपेणावतिष्ठते ॥ २८.४४ ॥

देवहूतिरुवाच—

लक्षणं महदादीनां प्रकृतेः पुरुषस्य च।
स्वरूपं लक्ष्यतेऽमीषां येन तत्पारमार्थिकम् ॥ ११.९ ॥

यथा सांख्येषु कथितं यन्मूलं तत्प्रचक्षते।
भक्तियोगस्य मे मार्गं ब्रूहि विस्तरशः प्रभो ॥ २९.२ ॥

---

28. 39. ஒரு மனிதன் (சொந்தமான) புத்திரர்களினின்றும் செல்வத்தினின்றும் வேருனவன் என்பது எப்படி உணரப்படுகிறதோ அப்படியே ஆத்மா என்று அபிமானிக்கப்பட்ட தேகம் முதலியவற்றினின்றும் அதிலுறையும் புருஷன் வேருனவன்.

28, 40.-41. எங்ஙனம் அக்கினியானது தன்னிடமிருந்துண்டாகித் தன்மயமாகவே கருதப்படும் கொள்ளி, பொறி, புகை இவற்றைக் காட்டிலும் கொள்ளிக் கட்டையைக் காட்டிலும் வேரே, அவ்வாறே த்ரஷ்டா என்றும் பகவான் என்றும் பிரம்மம் என்றும் சொல்லப்படும் ஆத்மா, பஞ்சபூதம், இந்திரியம், அந்தக் கரணம் இவற்றைக் காட்டிலும் வேறு.

28. 43. நெருப்பு ஒன்ருயிருந்தும் தனக்காதாரமான கட்டைகளில் அவற்றின் குண வித்தியாஸங்களால் எங்ஙனம் வெவ்வேறு வடிவாகக் காணப்படுகிறதோ அவ்வாறே ஆத்மாவும் பிரகிருதியில் (அதன் குணங்களை யொட்டி) வெவ்வேருகக் காணப்படுகிறது.

28. 44. ஆகையால் தெய்வசக்தி வாய்ந்ததும், காரிய காரண வடிவமா யிருப்ப தும், அறிந்துகொள்ள முடியாததும், தன்னுடைய ஸ்வரூபத்தை மறைப்பதுமான இந்தப் பிரகிருதியை (பகவத் கிருபையால்) ஜயித்து பக்தனுகியவன் தன் ஸ்வரூபத்தில் நிலை பெறுகிருன்.

தேவஹூதி கூறியது—

29. 1-2. மஹத் முதலிய தத்துவங்களின் லக்ஷணமும், பிரகிருதி புருஷலக்ஷண மும் எவ்வாறு ஸாங்கிய சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளனவோ, எதனுல் அவற்றின் உண்மையான ஸ்வரூபம், காணப்படுமோ அவ்வாறு எனக்குக் கூறினீர். பிரபுவே! இதற்கும் வேர்போன்றதாக எது கருதப்படுகிறதோ அந்த பக்தி யோகத்தின் வழியை விரிவாக எனக்கு உபதேசிக்கவேண்டும்.

श्री भगवानुवाच—

भक्तियोगो बहुविधो मार्गै-र्भामिनि भाव्यते ।
स्वभाव-गुणमार्गेण पुंसां भावो विभिद्यते ॥ २९.७ ॥

अभिसन्धाय यो हिंसां दंभं मात्सर्य-मेव वा ।
संरंभी भिन्नदृग्भावं मयि कुर्यात् स तामसः ॥ २९.८ ॥

विषयानभिसन्धाय यश ऐश्वर्य-मेव वा ।
अर्चादा-वर्चयेद्यो मां पृथग्भावः स राजसः ॥ २९.९ ॥

कर्मनिर्हार-मुद्दिश्य परस्मिन् वा तदर्पणम् ।
यजेद्यष्टव्यमिति वा पृथग्भावः स सात्त्विकः ॥ २९.१० ॥

मद्गुण-श्रुति-मात्रेण मयि सर्वगुहाशये ।
मनो-गति-रविच्छिन्ना यथा गङ्गांभसोऽम्बुधौ ॥ २९.११ ॥

लक्षणं भक्तियोगस्य निर्गुणस्य ह्युदाहृतम् ।
अहैतुक्य-व्यवहिता या भक्तिः पुरुषोत्तमे ॥ २९.१२ ॥

---

ஸ்ரீ பகவான் கூறியது—

29. 7. தாயே! பக்தியோகமானது செல்லும் மார்க்கத்தை யொட்டிப் பலவித மாய்க் கருதப்படுகிறது. இயற்கையான குணங்களின் போக்கை யொட்டி மனிதர்களின் பாவனையும் வேறுபடுகிறது.

29. 8. முன்கோபமும் பேதபுத்தியும் உள்ள எவன் இம்சையையோ இடம்பத் தையோ பொறுமையையோ முன்னிட்டுக்கொண்டு என்னை வழிபடுகிறானோ அவன் தாமஸன்.

29. 9. பேதபுத்தியுள்ள எவன் விஷய சுகங்களையோ, புகழையோ, ஐசுவரியத் தையோ முன்னிட்டுக்கொண்டு விக்கிரஹங்களில் என்னைப்பூஜிப்பானோ அவன் ராஜஸன்.

29. 10. பேதபுத்தியுள்ள எவன் பாபத்தைப் போக்கிக்கொள்ளும் கருத்துடனோ, பகவதர்ப்பண புத்தியுடனோ, பூஜிக்கவேண்டியது கடமையென்ற நோக்கத்துடனோ பக்தி செய்கின்றானோ அவன் ஸாத்துவிகன்.

29. 11. எனது குணங்களைக் கேட்டமாத்திரத்திலேயே எல்லோருடைய உள்ளத் திலும் உறைபவனாகிய என்னிடம், ஸமுத்திரத்தை நோக்கி கங்கை ஓடுவதுபோல் மனத் தின் ஓட்டம் இடைவிடாது நிகழ்வதாயும்;

29. 12. காரணமின்றி, இயற்கையாகவும், வேறு நாட்டமில்லாததாகவும், எந்த பக்தி புருஷோத்தமனிடம் உண்டோ அது நிர்க்குண பக்தி யோகத்தின் லக்ஷணம் எனக் கூறப்பட்டுள்ளது.

---

29. 11. सर्वगुणाशये । பா. பே.

अहं सर्वेषु भूतेषु भूतात्मावस्थितः सदा।
तमवज्ञाय मां मर्त्यः कुरुतेऽर्चा-विडंबनम् ॥ २९.२१ ॥

यो मां सर्वेषु भूतेषु सन्त-मात्मान-मीश्वरम्।
हित्वार्चां भजते मौढ्या-द्भस्मन्येव जुहोति सः ॥ २९.२२ ॥

द्विषतः परकाये मां मानिनो भिन्नदर्शिनः।
भूतेषु बद्धवैरस्य न मनः-शान्ति-मृच्छति ॥ २९.२३ ॥

अह-मुच्चावचै-र्द्रव्यैः क्रिययोत्पन्नयानघे।
नैव तुष्येऽर्चितोऽर्चायां भूतग्रामावमानिनः ॥ २९.२४ ॥

अर्चादा-वर्चयेत्ताव-दीश्वरं मां स्वकर्मकृत्।
यावन्न वेद स्वहृदि सर्वभूतेष्ववस्थितम् ॥ २९.२५ ॥

आत्मनश्च परस्यापि यः करोत्यन्तरोदरम्।
तस्य भिन्नदृशो मृत्यु-र्विदधे भय-मुल्बणम् ॥ २९.२६ ॥

---

29. 21. நான் எல்லாப் பிராணிகளிடத்திலும் பூதாத்மாவாக எப்போதும் இருக்கிறேன். அப்படியிருக்கும் என்னை அவமதித்து மனிதன் இடம்பத்துக்காக விக்கிரக ஆராதனை செய்கிறான்.

29. 22. எல்லாப் பிராணிகளிடத்திலும் இருக்கும் ஆத்மாவும் ஈசுவரனுமாகிய என்னைவிட்டு மூடக்கொள்கையால் விக்கிரகத்தை மட்டும் எவன் வழிபடுகிறானோ அவன் சாம்பலிலேயே ஹோமம் செய்கிறான்.

29. 23. பிறர் உடலில் உறையும் என்னைப் பகைப்பவனாய், தன்னையே போற்றிக் கொள்பவனாய், பேதபாவனையுள்ளவனாய் உள்ளவனுடைய மனது ஒருபோதும் சாந்தியை அடையாது.

29. 24. பாவமற்றவளே! பலவகையான திரவியங்களைக்கொண்டு பல கிரியை களின் மூலம் விக்கிரகத்தில் என்னை அர்ச்சித்தபோதிலும் ஜீவ சமுதாயத்தை அவமதிப்ப வர்களாயின் அவர்களது பூஜையால் நான் சந்தோஷமடையமாட்டேன்.

29. 25. எல்லாப் பிராணிகளிடத்தும் உறையும் என்னைத் தனது உள்ளத்தில் எதுவரை கண்டுகொள்ளவில்லையோ அதுவரை (அப்படிக் காண்பதற்குச் சாதனமாக) விக்கிரங்கள் முதலியவற்றில் ஈசுவரனாகிய என்னைத் தனது கடமையைச் செய்துகொண்டு ஒருவன் பூஜிக்கவேண்டும்.

29. 26. தனக்கும் பிறருக்கும் எவன் சிறிதளவேனும் பேதத்தைச் செய்கின் றானோ அந்த பேதபுத்திக்கு நான் மிருத்யுவாகிக் கொடிய பயத்தைத் தருகிறேன்.

---

29. 21. **பூதாத்மா**—உயிர்களுக்குயிராயிருப்பவர். (ஒ. விஷ்ணு ஸஹஸ்ர நாமம்)
ஒ. **பூ**தாத்மா சேந்**த்**ரியாத்மாச ப்ர**தா**னாத்மா ததா **ப**வான்। ஆ**த்**மா ச பரமாத் மா ச த்வமேக: பஞ்ச**தா** ஸ்தி**த**: ॥ —விஷ்ணுபுராணம் 5.18.50

29. 26. ஒ. இப் பரம் பொருளில் எப்போது இவன் ஒரு சிறிதேனும் பேதத்தைச் செய்கிறானோ அப்போதே அவனுக்கு ஜனன மரண ஸம்ஸார பயம் ஏற்படுகிறது. தை. உப. 2. 7.

---

29. 23. क्रियोत्पन्नेश्च मानिनि।
29. 25. सर्वभूतेष्वपि स्थितम्। பா. பே.

अथ मां सर्वभूतेषु भूतात्मानं कृतालयम् ।
अर्हयेद्-दान-मानाभ्यां मैत्र्याभिन्नेन चक्षुषा ॥ २९.२७ ॥

मनसैतानि भूतानि प्रणमेद्बहुमानयन् ।
ईश्वरो जीवकलया प्रविष्टो भगवानिति ॥ २९.३४ ॥

भक्तियोगश्च योगश्च मया मानव्युदीरितः ।
ययोरेकतरेणैव पुरुषः पुरुषं व्रजेत् ॥ २९.३५ ॥

जन्तुर्वै भव एतस्मिन् यां यां योनिमनुव्रजेत् ।
तस्यां तस्यां स लभते निर्वृतिं न विरज्यते ॥ ३०.४ ॥

29. 27. ஆகையால் எல்லாப் பிராணிகளிடத்தும் பூதாத்மாவாகக் குடிகொண்டிருக்கும் என்னை (பிராணிகளுக்குச் செய்யும்) தானத்தாலும் மரியாதையாலும், நட்பாலும், பேதமற்ற நோக்கத்தாலும் பூஜிக்கவேண்டும்.

29. 34. ஸகல கல்யாண குணங்களும் பொருந்திய ஈசுவரன் தனது அம்சத்தால் ஜீவரூபியாக எல்லாப் பிராணிகளிடத்தும் புகுந்துறைகின்றான் என்று இப் பிராணிகளை வெகுமதித்து மனதால் நமஸ்கரிக்கவேண்டும்.

29. 35. மனுபுத்திரியாகிய தாயே! பக்தியோகமும் ஸாங்கிய யோகமும் இங்ஙனம் உனக்குக் கூறப்பட்டன. இவற்றுள் ஒன்றினாலேயே மனிதன் பரமபுருஷனை அடையக் கூடும்.

30. 4. இந்த ஸம்ஸாரத்தில் இந்த ஜீவன் எந்த எந்த யோனியில் பிறக்கிறானோ அதற்குரிய சிற்றின்பத்தை அங்கங்கு அடைபவனாய் (பிறவியில்) வைராக்கியத்தை யடையவில்லை.

---

29. 34. ஒ. தேகமாகிய யந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட பொம்மைகள் போன்ற எல்லாப் பிராணிகளையும் மாயா சக்தியினால் ஆட்டி வைத்துக்கொண்டு ஈசுவரன் எல்லாப் பிராணிகளுடைய இதயத்துள்ளும் உறைகின்றான். எவ்வகையாலும் அவனையே சரணமடைவாயாக. அவனருளால் ஒப்புயர்வற்ற சாந்தியையும் அழிவில்லாத பதவியையும் அடைவாய்.
—கீ. 18·61-62.

ஒ. எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்குமவ்வுயிராய்
அங்கங்கிருப்பது நீயன்றோ பராபரமே. —தாயுமானவர்.

எவர் சிறியரெவர் பெரியர் எவருறவரெவர் பகைஞர்
யாது முனையன்றியுண்டோ? —தாயுமானவர்.

**கேள்வி**—வணங்காத இடம் உண்டா?

**விடை**—இல்லை. சண்டாளரையும் வணங்க வேண்டும். பசு, நாய், கழுதைகளைக் கூட வணங்கவேண்டும்.

**கேள்வி**—பிறர் ஏளனம் செய்யமாட்டார்களா?

**விடை**—தேகாபிமானிகள் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். அவர்களை ஞானி கவனிக்கவேண்டியதில்லை.

**கேள்வி**—எனக்கே வெட்கமா யிராதா?

**விடை**—நீ சரீரமன்று; பிறரும் சரீரமன்று; எல்லோரும் ஆன்ம ஸ்வரூபம்; அதில் உயர்வு தாழ்வில்லை. ஆகையால் வெட்கத்தைவிட்டு எங்கும் நமஸ்காரம் செய். இது உத்தவ கீதையின் (சரமசுலோகம்) முடிவான உபதேசம்.

नरकस्थोऽपि देहं वै न पुमां-स्त्यक्तु-मिच्छति ।
नारक्यां निर्वृतौ सत्यां देवमाया-विमोहितः ॥ ३०.५ ॥

अत्रैव नरकः स्वर्ग इति मातः प्रचक्षते ।
या यातना वै नारक्यस्ता इहाप्युपलक्षिताः ॥ ३०.२९ ॥

एकः प्रपद्यते ध्वान्तं हित्वेदं स्वकलेवरम् ।
कुशलेतर-पाथेयो भूतद्रोहेण यद्भृतम् ॥ ३०.३१ ॥

अधस्तान्नरलोकस्य यावती-र्यातनादयः ।
क्रमशः समनुक्रम्य पुनरत्राव्रजे-च्छुचिः ॥ ३०.३४ ॥

कर्मणा दैवनेत्रेण जन्तु-र्देहोपपत्तये ।
स्त्रियाः प्रविष्ट उदरं पुंसो रेतः कणाश्रयः ॥ ३१.१ ॥

कललं त्वेकरात्रेण पंचरात्रेण बुद्बुदम् ।
दशाहेन तु कर्कन्धूः पेश्यण्डं वा ततः परम् ॥ ३१.२ ॥

---

30. 5. நரகத்திலிருப்பினுங்கூட, புருஷன் சரீரத்தை விடுவிதற்கு விரும்புவதில்லை; ஏனெனில் தேவமாயையால் மோஹமடைந்து நரகத்திலுள்ள (ஆகாரம் முதலியன)வற்றையும் சுகம் எனக்கருதுவதால்.

30. 29. தாயே! நரகமும் ஸ்வர்க்கமும் இங்கேயே இருக்கின்றன என்று கூறுகின்றனர். நரகத்தில் எத்தனை வேதனைகள் உண்டோ அத்தனையும் இங்கேயே காணப்படுகின்றன அல்லவா?

30. 31. பிராணிகளுக்குத் துரோகம் செய்து எந்த உடலானது வளர்க்கப்பட்டதோ அப்படிப்பட்ட தனது இந்த உடலத்தை விட்டுவிட்டு புண்ணியமல்லாத கர்ம மூட்டையையே வழிக்குணவாகக் (கட்டுச் சோறுபோல்) கொண்டு தன்னந் தனியனாய் நரகத்தை யடைகிறான்.

30. 34. மானிடப் பிறவிக்குக் கீழ்ப்பட்ட நிலைகளிலும் பிறவிகளிலும் எத்தனை நரகவேதனைகள் உண்டோ அவற்றையெல்லாம் தொடர்பாக அனுபவித்து அதனால் பாவந்தேய்ந்து மீண்டும் இங்கு மனிதப் பிறவியை யடைகிறான்.

31. 1. பூர்வகர்மவசத்தால் உந்தப்பட்டு ஜீவன் உடலை யெடுத்துக்கொள்ளும் பொருட்டு புருஷனுடைய வீரியத்துளியில் ஒட்டிக்கொண்டு ஸ்திரீயின் கருப்பையில் புகுகிறான்.

31. 2. ஒரு இரவில் சுக்கிலசோணிதக்கலப்பும், ஐந்து இரவுகளில் நுரைபோன்ற வடிவமும், பத்து நாட்களில் இலந்தைப்பழ வடிவமும், பிறகு முட்டை வடிவமும்;

---

31. 1. கர்மணா பூர்வக்ருதேன தைவமீச்வரஸ்-ததேவ நேத்ராம் நேத்ரு ப்ரவர்த்தகம் யஸ்ய ப்ரவிஷ்டோ பவதி ।

---

30. 34. यावती-र्यातनास्तु ताः । பா. பே.

अथ मां सर्वभूतेषु भूतात्मानं कृतालयम् ।
अर्हयेद्दान-मानाभ्यां मैत्र्याभिन्नेन चक्षुषा ॥ २९.२७ ॥

मनसैतानि भूतानि प्रणमेद्बहुमानयन् ।
ईश्वरो जीवकलया प्रविष्टो भगवानिति ॥ २९.३४ ॥

भक्तियोगश्च योगश्च मया मानव्युदीरितः ।
ययोरेकतरेणैव पुरुषः पुरुषं व्रजेत् ॥ २९.३५ ॥

जन्तुर्वै भव एतस्मिन् यां यां योनिमनुव्रजेत् ।
तस्यां तस्यां स लभते निर्वृतिं न विरज्यते ॥ ३०.४ ॥

29. 27. ஆகையால் எல்லாப் பிராணிகளிடத்தும் பூதாத்மாவாகக் குடிகொண்டிருக்கும் என்னை (பிராணிகளுக்குச் செய்யும்) தானத்தாலும் மரியாதையாலும், நட்பாலும், பேதமற்ற நோக்கத்தாலும் பூஜிக்கவேண்டும்.

29. 34. ஸகல கல்யாண குணங்களும் பொருந்திய ஈசுவரன் தனது அம்சத்தால் ஜீவரூபியாக எல்லாப் பிராணிகளிடத்தும் புகுந்துறைகின்றான் என்று இப் பிராணிகளை வெகுமதித்து மனதால் நமஸ்கரிக்கவேண்டும்.

29. 35. மனுபுத்திரியாகிய தாயே! பக்தியோகமும் ஸாங்கிய யோகமும் இங்ஙனம் உனக்குக் கூறப்பட்டன. இவற்றுள் ஒன்றினாலேயே மனிதன் பரமபுருஷனை அடையக் கூடும்.

30. 4. இந்த ஸம்ஸாரத்தில் இந்த ஜீவன் எந்த எந்த யோனியில் பிறக்கிறானோ அதற்குரிய சிற்றின்பத்தை அங்கங்கு அடைபவனாய் (பிறவியில்) வைராக்கியத்தை யடையவில்லை.

---

29. 34. ஒ. தேகமாகிய யந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட பொம்மைகள் போன்ற எல்லாப் பிராணிகளையும் மாயா சக்தியினால் ஆட்டி வைத்துக்கொண்டு ஈசுவரன் எல்லாப் பிராணிகளுடைய இதயத்துள்ளும் உறைகின்றான். எவ்வகையாலும் அவனையே சரணமடைவாயாக. அவனருளால் ஒப்புயர்வற்ற சாந்தியையும் அழிவில்லாத பதவியையும் அடைவாய்.
—கீ. 18·61-62.

ஒ. எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்குமவ்வுயிராய்
அங்கங்கிருப்பது நீயன்றோ பராபரமே.
—தாயுமானவர்.

எவர் சிறியரெவர் பெரியர் எவருறவரெவர் பகைஞர்
யாது முனையன்றியுண்டோ?
—தாயுமானவர்.

**கேள்வி**—வணங்காத இடம் உண்டா?

**விடை**—இல்லை. சண்டாளரையும் வணங்க வேண்டும். பசு, நாய், கழுதைகளைக் கூட வணங்கவேண்டும்.

**கேள்வி**—பிறர் ஏளனம் செய்யமாட்டார்களா?

**விடை**—தேகாபிமானிகள் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். அவர்களை ஞானி கவனிக்கவேண்டியதில்லை.

**கேள்வி**—எனக்கே வெட்கமாயிராதா?

**விடை**—நீ சரீரமன்று; பிறரும் சரீரமன்று; எல்லோரும் ஆன்ம ஸ்வரூபம்; அதில் உயர்வு தாழ்வில்லை. ஆகையால் வெட்கத்தைவிட்டு எங்கும் நமஸ்காரம் செய். இது உத்தவ கீதையின் (சரமசுலோகம்) முடிவான உபதேசம்.

नरकस्थोऽपि देहं वै न पुमां-स्त्यक्तु-मिच्छति ।
नारक्यां निर्वृतौ सत्यां देवमाया-विमोहितः　　॥ ३०.५ ॥

अत्रैव नरकः स्वर्ग इति मातः प्रचक्षते ।
या यातना वै नारक्यस्ता इहाप्युपलक्षिताः　　॥ ३०.२९ ॥

एकः प्रपद्यते ध्वान्तं हित्वेदं स्वकलेवरम् ।
कुशलेतर-पाथेयो भूतद्रोहेण यद्भृतम्　　॥ ३०.३१ ॥

अधस्तान्नरलोकस्य यावती-र्यातनादयः ।
क्रमशः समनुक्रम्य पुनरत्राव्रजे-च्छुचिः　　॥ ३०.३४ ॥

कर्मणा दैवनेत्रेण जन्तु-र्देहोपपत्तये ।
स्त्रियाः प्रविष्ट उदरं पुंसो रेतः कणाश्रयः　　॥ ३१.१ ॥

कललं त्वेकरात्रेण पंचरात्रेण बुद्बुदम् ।
दशाहेन तु कर्कन्धूः पेश्यण्डं वा ततः परम्　　॥ ३१.२ ॥

---

30. 5. நரகத்திலிருப்பினுங்கூட, புருஷன் சரீரத்தை விடுவிதற்கு விரும்புவதில்லை; ஏனெனில் தேவமாயையால் மோஹமடைந்து நரகத்திலுள்ள (ஆகாரம் முதலியன)வற்றையும் சுகம் எனக்கருதுவதால்.

30. 29. தாயே! நரகமும் ஸ்வர்க்கமும் இங்கேயே இருக்கின்றன என்று கூறுகின்றனர், நரகத்தில் எத்தனை வேதனைகள் உண்டோ அத்தனையும் இங்கேயே காணப்படுகின்றன அல்லவா?

30. 31. பிராணிகளுக்குத் துரோகம் செய்து எந்த உடலானது வளர்க்கப்பட்டதோ அப்படிப்பட்ட தனது இந்த உடலத்தை விட்டுவிட்டு புண்ணியமல்லாத கர்ம மூட்டையையே வழிக்குணவாகக் (கட்டுச் சோறுபோல்) கொண்டு தன்னந் தனியனாய் நரகத்தை யடைகிறான்.

30. 34. மானிடப் பிறவிக்குக் கீழ்ப்பட்ட நிலைகளிலும் பிறவிகளிலும் எத்தனை நரகவேதனைகள் உண்டோ அவற்றையெல்லாம் தொடர்பாக அனுபவித்து அதனால் பாவந்தேய்ந்து மீண்டும் இங்கு மனிதப் பிறவியை யடைகிறான்.

31. 1. பூர்வகர்மவசத்தால் உந்தப்பட்டு ஜீவன் உடலை யெடுத்துக்கொள்ளும் பொருட்டு புருஷனுடைய வீரியத்துளியில் ஒட்டிக்கொண்டு ஸ்திரீயின் கருப்பையில் புகுகிறான்.

31. 2. ஒரு இரவில் சுக்கிலசோணிதக்கலப்பும், ஐந்து இரவுகளில் நுரைபோன்ற வடிவமும், பத்து நாட்களில் இலந்தைப்பழ வடிவமும், பிறகு முட்டை வடிவமும்;

---

31. 1. கர்மணா பூர்வக்ருதேன தைவமீச்வரஸ்-ததேவ நேத்ராம் நேத்ரு ப்ரவர்த்தகம் யஸ்ய ப்ரவிஷ்டோ பவதி ।

---

30. 34. यावती-र्यातनास्तु ताः ।　　பா. பே.

मासेन तु शिरो द्वाभ्यां बाह्वङ्घ्र्या-द्यंगविग्रहः ।
नख-लोमास्थि-चर्माणि लिंगच्छिद्रोद्भव-स्त्रिभिः ॥ ३१.३ ॥

चतुर्भि-र्धातवः सप्त पंचभिः क्षुत्तृडुद्भवः ।
षड्भि-र्जरायुणा वीतः कुक्षौ भ्राम्यति दक्षिणे ॥ ३१.४ ॥

आरभ्य सप्तमान्मासा-ल्लब्धबोधोऽपि वेपितः ।
स्तुवीत तं विक्लवया वाचा येनोदरेऽर्पितः ॥ ३१.११ ॥

येनेदृशीं गतिमसौ दशमास्य ईश संग्राहितः पुरुदयेन भवादृशेन ।
स्वेनैव तुष्यतु कृतेन स दीननाथः को नाम तत्प्रति
विनांजलि-मस्य कुर्यात् ॥ ३१.१८ ॥

तस्मादहं विगतविक्लव उद्धरिष्य आत्मान-माशु तमसः सुहृदात्मनैव ।
भूयो यथा व्यसन-मेत-दनेकरन्ध्रं मा मे भविष्य-दुपसादित-
विष्णुपादः ॥ ३१.२१ ॥

---

31. 3. ஒரு மாதத்தில் தலையும், இரண்டு மாதங்களில் கை கால் முதலிய அங்கங்களின் பிரிவும், மூன்று மாதங்களில் நகம், உரோமம், எலும்பு, தோல் முதலியவற்றின் அடையாளங்களும் ஆண் பெண் குறிகளின் துவாரங்களும் ;

31. 4. நான்கு மாதங்களில் தோல், இரத்தம், மாம்ஸம், ஊன், எலும்பு, மூளை, சுக்லம் என்ற தாதுக்களும், ஐந்து மாதங்களில் பசிதாகங்களின் தோற்றமும் ஏற்படுகின்றன. ஆறுமாதத்தில் கருப்பையில் அசைவுற்று வயிற்றின் வலதுபுறத்தில் சுழற்றப் படுகிறான்.

31. 11. ஏழாவதுமாதந் தொடங்கி அறிவு உதிக்க ஆரம்பித்து நடுக்கமுற்றவனாய், எவனால் தாயின் வயிற்றில் புகுத்தப்பட்டானோ அந்தப் பகவானை இளகிய மனத்தினனாய்த் துதிக்கத் தொடங்குகிறான்.

31. 18. (ஈசனே !) தயை மிகுந்தவரும் ஒப்புயர்வற்றவரும் ஆன எவரால் பத்து மாதங்களில் (படிப்படியாக வளர்ந்து) இந்த ஜீவன் இம்மாதிரி நிலையை யடையும்படி செய்யப்பட்டானோ அந்த தீனநாதர் தனது லீலையாகிய இச்செயலால் திருப்தியடையட்டும். அவருக்கு அஞ்ஜலியைத் தவிர வேறு எதைத்தான் எவனும் பிரதியாகச் செய்ய முடியும் ?

31. 21. ஆகையால் நான் வியாகூலத்தைவிட்டு இருதயத்தில் விஷ்ணுவின் திருவடிகளைத் தியானித்து எனது திருந்திய புத்தியையே துணைவனாய்க்கொண்டு வெகு சீக்கிரத்தில் (இந்த ஸம்ஸாரஸாகரத்தினின்று) என்னைக் கரையேற்றிக்கொள்ளப்போகிறேன். மீண்டும் பல யோனித் துவாரங்களில் புகுவதான பிறவித்துன்பம் பின்னர் எனக்கு எங்ஙனம் நேராதோ (அங்ஙனம் செய்யப்போகிறேன்.)

---

31. 11. ஒ. (**அத** நவமே மாஸி ஸர்வலக்ஷண-ஜ்ஞான-கரண-ஸம்பூர்ணோ **பவதி** பூர்வ ஜாதிம் ஸ்மரதி **சுபாசுப**ஞ்ச கர்ம **விந்ததி)** ஒன்பதாவது மாதத்தில் எல்லா லக்ஷணங்களும் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும் பூர்த்தியடைந்தவனாகிறான். முன் ஜன்மத்தை நினைக்கிறான். புண்ணிய பாவங்களை உணர்கிறான்.—ஆனால்பிறந்ததும் இதை மறந்துவிடும்படி மாயை செய்கிறது.
—கர்ப்போபநிஷத்து

31. 21. **அனேகரந்த்ரம்**—நானாகர்ப்பவாஸரூபம்

**ஸுஹ்ருதாத்மனைவ**—ஒ. தன்னாலே தன்னை உயர்த்திக் கொள்ளவேண்டும்; தன்னைத் தாழ்த்திக் கொள்ளக் கூடாது. நிச்சயமாக தானே தனக்கு உறவினன், தானே தனக்குப்பகைவன். —கீ. 6. 5

एवं कृतमति-र्गर्भे दशमास्यः स्तुवन्नृषिः ।
सद्यः क्षिपत्यवाचीनं प्रसूत्यै सूतिमारुतः ॥
रोरूयति गते ज्ञाने विपरीतां गतिं गतः ॥ ३१.२४ ॥

यद्यसद्भिः पथि पुनः शिश्नोदर-कृतोद्यमैः ।
आस्थितो रमते जन्तु-स्तमो विशति पूर्ववत् ॥ ३१.३२ ॥

न तथास्य भवेन्मोहो बन्धश्चान्यप्रसंगतः ।
योषित्संगाद्यथा पुंसो यथा तत्संगिसंगतः ॥ ३१.३५ ॥

तस्मान्न कार्यः सन्त्रासो न कार्पण्यं न संभ्रमः ।
बुद्ध्वा जीवगतिं धीरो मुक्तसंगश्चरेदिह ॥ ३१.४७ ॥

**मैत्रेय उवाच—**

एवं निशम्य कपिलस्य वचो जनित्री सा कर्दमस्य दयिता किल देवहूतिः ।
विस्रस्त-मोहपटला तमभिप्रणम्य तुष्टाव तत्त्व-विषयांकित-
सिद्धिभूमिम् ॥ ३३.१ ॥

---

31. 24. இங்ஙனம் கர்ப்பத்திலேயே நிச்சயமுடையவனுய்ப் பத்துமாதம் நிறைந்த தீர்க்கதர்சியான ஜீவன் ஈசுவரனைத் துதித்துக்கொண்டிருக்கும்போதே, ஸூதிகா வாயுவானது வெளியேற்றுவதற்காக அவனை உந்தித் தலைகீழாகத் தள்ளிவிடுகிறது. (உடனே முன்னிருந்த) அறிவு மறைந்துபோய் விபரீதமான அஞ்ஞான நிலையை யடைந்து வீறிட்டு அழத் தொடங்குகிறுன்.

31. 32. நல்ல வழியில் செல்லும் ஜீவனும் காம நுகர்ச்சிக்கும் வயிற்றை நிரப்புவதற்குமே வாழும் தீயோருடன் கூடி அவர்களைப் பின்பற்றி அதில் மகிழ நேர்ந்தால் முன்போல் மீண்டும் நரகவாசம்போன்ற யோனியை யடைகிறுன்.

31. 35. ஸ்திரீ ஸங்கத்தாலும், ஸ்திரீ ஸங்கிகளின் ஸங்கத்தாலும் ஏற்படுவது போன்ற மதிமயக்கமும் ஸம்ஸாரபந்தமும் வேறு எந்தக் கூட்டுறவினுலும் புருஷனுக்கு உண்டாகவே உண்டாகாது.

31. 47. ஆகையால் (முமுக்ஷுவானவன் எந்நிலையிலும்) பயத்தையோ அல்பத்தனத்தையோ மயக்கத்தையோ அடையக் கூடாது. ஜீவனுடைய கதியை உள்ளபடி உணர்ந்தவனுய்ப் பற்றையொழித்துத் தீரனுய் இங்கு சஞ்சரிக்கவேண்டும்.

மைத்திரேயர் கூறியது—

33. 1. இவ்விதம் கபிலருடைய வார்த்தையைக் கேட்டு அவருடைய தாயும் கர்த்தம பத்தினியுமான தேவஹூதி (ஞானக்கண்ணை மறைக்கும்) மோஹமாகிய திரை நீங்கியவளாய்த் தத்துவஞானத்தின் விளை நிலமாகிய அந்தக் கபிலரை நமஸ்கரித்துத் துதித்தாள்.

---

31. 35. ஒ. இதனுல் காமமும் கோபமும் லோபமும் மதி மயக்கமும் புத்தி நாசமும் ஸமுத்திரத்தில் அலைகள்போல் தொடர்ந்துவரும். —நாரத பக்திஸூத்ரம்
ஆண்களுக்குக் கூறியதைப் பெண்களுக்கும் மாற்றிக் கூறியதாகக்கொள்ள வேண்டும். பெண்களைமட்டும் நிந்தித்ததாகக் கருதக்கூடாது.

---

31. 35. बन्धश्चास्य प्रसङ्गतः । பா. பே.

देवहूति रुवाच—

स त्वं भृतो मे जठरेण नाथ कथं नु यस्योदर एतदासीत् ।
विश्वं युगान्ते वटपत्र एकः शेते स्म मायाशिशु-रंघ्रिपानः ॥ ३३.४ ॥

कपिल उवाच—

मार्गेणानेन मातस्ते सुसेव्येनोदितेन मे ।
आस्थितेन परां काष्ठा-मचिरा-दवरोत्स्यसि ॥ ३३.१० ॥

मैत्रेय उवाच—

इति प्रदर्श्य भगवान् सतीं तामात्मनो गतिम् ।
स्वमात्रा ब्रह्मवादिन्या कपिलोऽनुमतो ययौ ॥ ३३.१२ ॥

सा चापि तनयोक्तेन योगादेशेन योगयुक् ।
तस्मिन्नाश्रम आपीडे सरस्वत्याः समाहिता ॥ ३३.१३ ॥

अभीक्ष्णावगाह-कपिशान् जटिलान् कुटिलालकान् ।
आत्मानं चोग्रतपसा बिभ्रती चीरिणं कृशम् ॥ ३३.१४ ॥

---

தேவஹூதி கூறியது—

33. 4. என்னை ஆட்கொண்டவரே! எவருடைய வயிற்றில் இவ்வுலகெல்லாம் இருந்ததோ அந்த நீர் என் வயிற்றில் தரிக்கப்பட்டது எங்ஙனம்? யுகத்தின் முடிவில் (பிரளய ஜலத்தில்) ஆலிலையில் மாயக் குழந்தையாகக் கட்டைவிரலைப் பானம் செய்து கொண்டு தனியனாய் உறங்கவில்லையா? (அதுபோல் இதுவும் உமது லீலை.)

கபிலர் கூறியது—

33. 10. தாயே! நான் கூறிய இந்த மார்க்கம் அனுஷ்டிப்பதற்கு மிகவும் எளியது; அதில் நிலைபெற்றுச் சீக்கிரமே நீ முக்தியாகிற எல்லை நிலத்தை யடையப் போகிறாய்.

மைத்திரேயர் கூறியது—

33. 12. இங்ஙனம் ஆத்ம மார்க்கத்தை தேவஹூதிக்குக் காட்டிவிட்டுத் தாயும் பிரம்மவாதியுமான அவளால் அனுமதிக்கப் பெற்றுப் பகவான் கபிலர் (அவ்விடம் விட்டு) சென்றார்.

33. 13. அந்த தேவஹூதியும் புத்திரனாலுபதேசிக்கப்பட்ட யோகத்தை அப்பிய சித்து, ஸரஸ்வதி நதிக்குச் சிரோபூஷணம்போலிருந்த அவ்வாசிரமத்தில் தியானத்தி லாழ்ந்தாள்.

33. 14. அடிக்கடி ஸ்நானத்தால் பழுப்பேறினதும், சிக்கானதுமான ஜடைகளை யும் மரவுரியையும் கடுந்தவத்தால் மெலிந்த சரீரத்தையும் தாங்குபவளாய் விளங்கினாள்.

---

33. 10. **பராம் காஷ்டாம்**—ஜீவன்முக்திம். **அவரோத்ஸ்யஸி**—ப்ராப்ஸ்யஸி।
33. 14. **அவகாஹ:**—ஸ்நானம்.

---

33. 13. आपीले ।
33. 14. नीरावगाढकपिशं जटिलं कुटिलालकम् । பா. பே.

वनं प्रव्रजिते पत्यावपत्यविरहातुरा ।
ज्ञात-तत्त्वा-प्यभून्नष्टे वत्से गौरिव वत्सला ॥ ३३-२१ ॥

तमेव ध्यायती देव-मपत्यं कपिलं हरिम् ।
ब्रह्मण्यवस्थित-मति-र्भगवत्यात्म-संश्रये ।
निवृत्त-जीवापत्तित्वात् क्षीणक्लेशाप्त-निर्वृतिः ॥ ३३.२६ ॥

नित्यारूढ-समाधित्वात् परावृत्त-गुण-भ्रमा ।
न सस्मार तदाऽऽत्मानं स्वप्ने दृष्टमिवोत्थितः ॥ ३३.२७ ॥

तद्देहः परतः पोषोऽप्यकृश-श्चाध्यसम्भवात् ।
बभौ मलै-रवच्छिन्नः सधूम इव पावकः ॥ ३३.२८ ॥

स्वांगं तपो-योग-मयं मुक्तकेशं गतांबरम् ।
दैवगुप्तं न बुबुधे वासुदेव-प्रविष्ट-धीः ॥ ३३.२९ ॥

एवं सा कपिलोक्तेन मार्गेणाचिरतः परम् ।
आत्मानं ब्रह्म-निर्वाणं भगवन्त-मवाप ह ॥ ३३.३० ॥

---

33. 21. கணவர் வனம்சென்ற பின் (பிள்ளையால் மனம் தேறியிருந்த தேவஹூதி) இப்போது பிள்ளையும் சென்றுவிட்டதால் பிரிவாற்றுமையால் தத்துவத்தை யுணர்ந்தவளா யிருந்தபோதிலும் கன்றை யிழந்த வாத்ஸல்யமுள்ள பசுப்போலானுள்.

33. 26. தன் புத்திரனுய்க் கபிலதேவனுய் அவதரித்த ஹரியையே இடைவிடாது தியானம் செய்பவளாய், ஜீவனுக்கு அதிஷ்டானமும் பகவானுமான பரப்பிரம்மத்தினிடத்தில் லயித்த மதியுடையவளாய், ஜீவபாவம் நீங்கி எல்லாக் கிலேசங்களினின்றும் விடுபட்டுப் பரமானந்தத்தை எய்தினுள்.

33. 27. நிரந்தரமாய் ஸமாதியில் நிலைத்துவிட்டதால் (விஷயங்களில் ஸத்திய புத்தி) குணப் பிரமை நீங்கி சொப்பனத்தில் கண்ட (சரீரத்தையும்) காட்சியையும் விழித்துக்கொண்டவன் பொருட்படுத்தாதவாறு அவள் தனது சரீரத்தைப்பற்றியும் நினைக்கவில்லை.

33. 28. அச்சரீரமானது பிறரால் (ஆசிரமவாசிகளால்) போஷிக்கப்பட்டு வந்தது; எனினும் அது வாட்டமுரும லிருந்ததற்கு முக்கிய காாணம் மனதில் கிலேசமின்மையே யாகும். அழுக்கால் மூடப்பட்டுப் புகை சூழ்ந்த நெருப்புபோல் அது விளங்கிற்று.

33. 29. வாசுதேவனிடத்தில் லயித்த புத்தியுள்ள அவள், தவமும் யோகமுமே உருவெடுத்தாற் போன்றதும், கேசம் அவிழ்ந்து, வஸ்திரமு மின்றி பிராரப்தத்தால் காக்கப்பட்டு வந்த தனது சரீரத்தை யறியவில்லை.

33. 30, இங்ஙனம் அவள் கபிலராலுபதேசிக்கப்பட்ட மார்க்கத்தால் வெகு விரைவில் எல்லை நிலமும் எல்லோருடைய ஆத்மாவும் எல்லாத் துவந்துவங்களுக்கும் அப்பாற்பட்டவரும் ஆகிய பகவானுடைய பதத்தை யடைந்தாள்.

---

33. 29. சரீரம் தன்னைவிடுமுன்தான் சரீரத்தை விட்டாள்.
33. 30. நிர்வாணம்—நித்யமுக்தம்.

---

33. 26. निवृत्तजीवापत्तित्वाद्धीनक्लेशा । பா. பே.

तद्वीरासीत् पुण्यतमं क्षेत्रं त्रैलोक्य-विश्रुतम् ।
नाम्ना सिद्धिपदं यत्र सा संसिद्धि-मुपेयुषी ॥ ३३.३१ ॥

कपिलोऽपि महायोगी भगवान् पितुराश्रमात् ।
मातरं समनुज्ञाप्य प्रागुदीचीं दिशं ययौ ॥ ३३.३३ ॥

सिद्धचारण-गन्धर्वै-र्मुनिभि-श्चाप्सरो-गणैः ।
स्तूयमानः समुद्रेण दत्तार्हण-निकेतनः ॥ ३३.३४ ॥

आस्ते योगं समास्थाय सांख्याचार्यै-रभिष्टुतः ।
त्रयाणामपि लोकाना-मुपशान्त्यै समाहितः ॥ ३३.३५ ॥

य इदमनुश्रृणोति योऽभिधत्ते कपिलमुने-र्मत-मात्मयोगगुह्यम् ।
भगवति कृतधीः सुपर्णकेता-वुपलभते भगवत्-पदारविन्दम् ॥ ३३.३७ ॥

**इति श्रीमद्भागवते महापुराणे अष्टादश साहस्रिकायां संहितायां पारमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीवब्रह्मविद्यायां तृतीयः स्कन्धः समाप्तः ॥**

---

33. 31. வீர புருஷரே (விதுரரே!) அவள் எந்த இடத்தில் சித்தி யடைந்தாளோ அது சித்திபதம் என்ற பெயருடன் முவ்வுலகிலும் பிரசித்தி பெற்றதாய் புண்ணியத்திற் சிறந்த க்ஷேத்திரமாக ஆயிற்று.

33. 33. மஹாயோகியான கபில பகவான் தாயிடம் உத்திரவு பெற்றுத் தந்தை யின் ஆசிரமத்தினின்று புறப்பட்டவர் வடகிழக்குத் திசையில் சென்றார்.

33. 34-35. சித்தர் சாரணர் கந்தர்வர்கள் முனிவர்கள் அப்ஸர கணங்கள் முதலிய வர்களால் துதிக்கப்படுகின்றவராய்ச் சமுத்திரராஜனால் இடமளித்துப் பூஜிக்கப்பெற்று, ஸாங்கிய ஆசாரியர்களால் போற்றப்பட்டு முவ்வுலகுக்கும் உபசாந்திக்காக யோகநிஷ்டை யில் (இன்றும்) இருக்கிறார்.

33. 37. எவன் ஆத்மயோக ரகசியமான இந்தக் கபில மதத்தைச் சிரத்தையுடன் கேட்கின்றானோ அல்லது பிறர்க்கு அன்புடன் கூறுகின்றானோ அவன் கருடத்துவஜனை பகவானிடம் நிலைத்த புத்தியுடையவனாய்ப் பகவானுடைய பாதாரவிந்தத்தை எளிதில் அடைகிறான்.

---

*இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணாயிரம் சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்மவித்தை எனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் மூன்றாவது ஸ்கந்தம் முற்றும்.*

---

33. 35. लोकानां सुखायास्ते समाहितः । பா. பே.

# ॥ चतुर्थः स्कन्धः ॥

## दक्षयज्ञ-कथा ॥ ८ ॥

**मैत्रेय उवाच—**

मनोस्तु शतरूपायां तिस्रः कन्याश्च जज्ञिरे ।
आकूति-र्देवहूतिश्च प्रसूतिरिति विश्रुताः ॥ १.१ ॥

आकूतिं रुचये प्रादादपि भ्रातृमतीं नृपः ।
पुत्रिकाधर्ममाश्रित्य शतरूपानुमोदितः ॥ १.२ ॥

प्रजापतिः स भगवान् रुचिस्तस्या-मजीजनत् ।
मिथुनं ब्रह्मवर्चस्वी परमेण समाधिना ॥ १.३ ॥

यस्तयोः पुरुषः साक्षा-द्विष्णु-र्यज्ञस्वरूपधृक् ।
या स्त्री सा दक्षिणा भूते-रंश-भूतानपायिनी ॥ १.४ ॥

आनिन्ये स्वगृहं पुत्र्याः पुत्रं विततरोचिषम् ।
स्वायंभुवो मुदा युक्तो रुचिर्जग्राह दक्षिणाम् ॥ १.५ ॥

---

# நான்காவது ஸ்கந்தம்

## 8. தக்ஷயஜ்ஞக் கதை

மைத்திரேயர் கூறியது—

1. 1. (ஸ்வாயம்புவ) மனுவுக்குச் சதரூபையிடத்தில் (பிரியவிரதன், உத்தான பாதன் என்ற இரு புத்திரர்களுடன்) மூன்று புத்திரிகள் பிறந்தனர்; அவர்களே ஆகூதி தேவஹூதி, பிரஸூதி எனப் பிரசித்தமானவர்கள்.

1. 2. ஆகூதியைச் சகோதரருள்ளவளாயினும் புத்ரிகா தர்ம ஒப்பந்தத்துடன் சதரூபையின் சம்மதத்தின் பேரில் ருசி என்ற பிரஜாபதிக்குக் கொடுத்தார்.

1. 3. பரமபுருஷ தியானத்தால் பிரம்மதேஜஸ் நிறைந்தவரும் பிரஜாபதியுமான ருசி பகவான் அவளிடத்தில் பெண்ணும் ஆணுமாக இரண்டு குழந்தைகளை உண்டு பண்ணினர்.

1. 4. அவர்களில் ஆண்குழந்தையாக வந்தது ஸாக்ஷாத் யஜ்ஞ ஸ்வரூபியான விஷ்ணுவே; பெண்குழந்தையாக வந்தது விஷ்ணுவை விட்டுப் பிரியாத மஹாலக்ஷ்மியின் அம்சமான தக்ஷிணை.

1. 5. ஸ்வாயம்புவர் மகிழ்ச்சியுடன் புத்திரியின் பரமதேஜஸ்வியான புத்திரனைத் தனது வீட்டுக்கு எடுத்துவந்தார். ருசி (பெண்ணாகிய) தக்ஷிணையை வைத்துக் கொண்டார்.

---

1. 1. प्रसूतिरिति सुव्रताः । பா. பே.

देवहूतिमदात्तात कर्दमायात्मजां मनुः ।
तत्संबन्धि श्रुतप्रायं भवता गदतो मम ॥ १.१० ॥

प्रसूतिं मानवीं दक्ष उपयेमे ह्यजात्मजः ।
तस्यां ससर्ज दुहितॄः षोडशामल-लोचनाः ॥ १.४७ ॥

त्रयोदशादाद्धर्माय तथैकामग्नये विभुः ।
पितृभ्य एकां युक्तेभ्यो भवायैकां भवच्छिदे ॥ १.४८ ॥

---

1. 10. ஐயனே! ஸ்வாயம்புவ மனு தனது புத்திரியான தேவஹூதியைக் கர்த்தமருக்குக் கொடுத்தார். அவர்கள் சம்பந்தமான வரலாறு வெகுவாக என்னால் கூறப்பட்டு உன்னால் கேட்கப்பட்டது.

1. 47. ஸ்வாயம்புவ மனுவின் மற்றொரு புத்திரியான பிரஸூதியைப் பிரம்மபுத்திரரான தக்ஷப் பிரஜாபதி மணந்தார்; அவளிடத்தில் அவர் கண்ணழகு மிகுந்த பதினாறு பெண்களைப் பெற்றார்.

1, 48. விபுவான தக்ஷர் தருமருக்குப் பதின்மூன்று பெண்களையும், அக்கினிக்கு ஒரு பெண்ணையும், பிதிருகணங்களுக்கு ஒரு பெண்ணையும், பிறவித் துன்பத்தைப் போக்கும் மஹாதேவனுக்கு ஒரு பெண்ணையும் கொடுத்தார்.

---

1. 10. **ச்ருதப்ராயம்—பாஹுல்யேன ச்ருதம்**

**வம்ச விருக்ஷம்**

ஸ்வாயம்புவமனு - சதரூபை



पितर्यप्रतिरूपे स्वे भवायानागसे रुषा ।
अप्रौढैवात्मनात्मान-मजहाद्योगसंयुता ॥ १.६६ ॥

विदुर उवाच—

भवे शीलवतां श्रेष्ठे दक्षो दुहितृवत्सलः ।
विद्वेष-मकरोत् कस्मा-दनादृत्यात्मजां सतीम् ॥ २.१ ॥

कस्तं चराचरगुरुं निर्वैरं शान्तविग्रहम् ।
आत्मारामं कथं द्वेष्टि जगतो दैवतं महत् ॥ २.२ ॥

मैत्रेय उवाच—

पुरा विश्वसृजां सत्रे समेताः परमर्षयः ।
तथामरगणाः सर्वे सानुगा मुनयोऽग्नयः ॥ २.४ ॥

तत्र प्रविष्ट-मृषयो दृष्ट्वार्कमिव रोचिषा ।
भ्राजमानं वितिमिरं कुर्वन्तं तन्महत्सदः ॥ २.५ ॥

उदतिष्ठन् सदस्यास्ते स्वधिष्ण्येभ्यः सहाग्नयः ।
ऋते विरिंचं शर्वं च तद्भासाक्षिप्त-चेतसः ॥ २.६ ॥

सदसस्पतिभि-र्दक्षो भगवान् साधु-सत्कृतः ।
अजं लोकगुरुं नत्वा निषसाद तदाज्ञया ॥ २.७ ॥

---

1. 66. நிரபராதியான மஹாதேவனிடம் தன் தகப்பனுர் கோபங்கொண்டு பிரதி கூலமாக நடந்துகொண்டபோது (மஹாதேவ பத்தினியான ஸதீ) யௌவனத்திலேயே யோகபலத்தால் தானுகவே தேகத்தை விட்டுவிட்டாள்.

விதுரர் கூறியது—

2. 1. சீலவான்களிற் சிறந்தவராகச் சிவனிருக்கப் பெண்ணிடம் அன்பு மிக்கவ ராகத் தக்ஷனிருக்கத் தன் பெண்ணுன ஸதீதேவியை அனுதரவு செய்து எக்காரணத் தால் பகைமை காட்டினுர்?

2. 2. சராசர குருவும், கோபமற்றவரும், சாந்தமே உருவெடுத்தவரும் ஆத்மா ராமரும் உலகம் போற்றுந் தெய்வமுமான மஹாதேவனை எவர்தான், எப்படித்தான் பகைப்பர் ?

மைத்திரேயர் கூறியது—

2. 4. முன்னெருகாலத்தில் பிரஜாபதிகள் செய்த ஸத்திரயாகத்தில் மகரிஷிகளும், தேவகணங்களும், முனிவர்களும், அக்கினிகளும் தத்தம் பரிவாரங்களுடன் கூடி யிருந்தனர்.

2. 5-6. சூரியன் உதித்தால் இருள் நீங்கி ஒளி வீசுவதுபோல் அந்த சபையில் தக்ஷப்பிரஜாபதி பிரவேசித்தபோது ஒளி நிறைந்தது; அவ்வொளியால் கவரப்பட்ட சித்தமுடையவர்களாய் அக்கினிகளுடன் ரிஷிகள் எல்லோரும் அவரவர் ஆசனத்தி லிருந்து எழுந்தனர். பிரம்மதேவனும் மஹாதேவனும் மட்டும் எழவில்லை.

2. 7. ஸபையிலிருந்த பெரியோர்களால் நன்கு மரியாதை செய்யப்பட்ட தக்ஷப் பிரஜாபதி உலக குருவான பிரம்மதேவரை நமஸ்கரித்துவிட்டு அவருடைய கட்டளைப்படி உட்கார்ந்தார்.

प्राङ् निषण्णं मृडं दृष्ट्वा नामृष्यत्तदनादृतः ।
उवाच वामं चक्षुर्भ्या-मभिवीक्ष्य दहन्निव ॥ २.८ ॥

श्रूयतां ब्रह्मर्षयो मे सहदेवाः सहाग्नयः ।
साधूनां ब्रुवतो वृत्तं नाज्ञानान्न च मत्सरात् ॥ २.९ ॥

अयं तु लोकपालानां यशोघ्नो निरपत्रपः ।
सद्भिराचरितः पन्था येन स्तब्धेन दूषितः ॥ २.१० ॥

एष मे शिष्यतां प्राप्तो यन्मे दुहितु-रग्रहीत् ।
पाणिं विप्राग्नि-मुखतः सावित्र्या इव साधुवत् ॥ २.११ ॥

गृहीत्वा मृगशावाक्ष्याः पाणिं मर्कटलोचनः ।
प्रत्युत्थानाभिवादार्हे वाचाप्यकृत नोचितम् ॥ २.१२ ॥

लुप्तक्रियायाशुचये मानिने भिन्नसेतवे ।
अनिच्छन्नप्यदां बालां शूद्रायेवोशतीं गिरम् ॥ २.१३ ॥

---

2. 8. முன்னே உட்கார்ந்திருக்கும் மஹாதேவனைக் கண்டு அவரால் மரியாதை செய்யப்படாததைப் பொறுக்கமாட்டாதவராய் அவரை வக்கிரப் பார்வையால் பொசுக்குபவர்போல் பார்த்துவிட்டுச் சொல்லலானார்.

2. 9. தேவர்களுடனும் அக்கினிகளுடனும் கூடிய பிரம்மரிஷிகள் எனது வார்த்தைக்குச் செவி சாய்க்கவேண்டும். ஸாதுக்களின் நடைமுறையைப்பற்றித்தான் (கூறுகிறேன்); அறியாமையாலோ பொறாமையாலோ கூறவில்லை.

2. 10. இவன் உலகைக் காப்பவரின் புகழை நாசம் செய்பவன்; வெட்கமற்றவன்; ஸாதுக்கள் ஏற்படுத்திய வழி இந்த முரடனால் கெடுக்கப்பட்டது.

2. 11. ஸாவித்திரிபோன்ற எனது பெண்ணைப் பிராம்மணர் முன்னிலையில் அக்கினிசாக்ஷியாகச் சாதுபோல் பாணிக்கிரகணம் செய்துகொண்டதால் இவன் எனக்குச் சிஷ்ய ஸ்தானத்திலுள்ளவன்.

2. 12. மான்விழியாளாகிய என் பெண்ணின் கரத்தைப் பற்றிக்கொண்டு இந்தக் குரங்குக்கண்ணன் எழுந்திருந்து மரியாதை செய்யவேண்டிய என் பொருட்டு வாய் வார்த்தையால்கூட உரிய மரியாதையைக் காட்டவில்லை.

2. 13. கிரியைகளை இழந்தவனும், அசுத்தனும், கருவமுள்ளவனும், சாஸ்திர வரம்பை மீறியவனும், ஆகிய இவனுக்குச் சூத்திரனுக்குப் புனிதமான வேதத்தைக் கொடுப்பதுபோல் இஷ்டமில்லாமலிருந்தும் என் குழந்தையைக் கொடுத்தேன்.

---

2. 9. ஸ்காந்த புராணம் காசீ கண்டத்தில் தக்ஷன் பேச்சு இன்னும் அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. 'என் பெண்ணால் இவனுக்குப் பெருமை; என்ன கோத்ரம்? என்ன ஸூத்ரம்? பிராம்மணனுமல்ல; க்ஷத்ரியனுமல்ல, அழிப்பவன்; வைசியனல்ல, தரித்திர சிகாமணி; சூத்திரனல்ல, நாக யக்ஞோபவீதம் இருக்கிறது; பிரம்மசாரியல்ல, கிருஹஸ்தனல்ல, வானப்ரஸ்தனல்ல, ஸந்நியாசியல்ல; ஸ்திரீயா புருஷனா? பாதிஸ்த்ரீ; மாதா பிதா இல்லை.

பா. பே.

2. 12. पाणि-मर्केन्दुलोचनः ।

प्रेतावासेषु घोरेषु प्रेतै-र्भूतगणै-र्वृतः ।
अट-त्युन्मत्तव-न्नग्नो व्युप्तकेशो हसन् रुदन् ॥ २.१४ ॥

चिताभस्मकृतस्नानः प्रेतस्रङ् न्रस्थिभूषणः ।
शिवापदेशो ह्यशिवो मत्तो मत्तजन-प्रियः
पतिः प्रमथ-भूतानां तमोमात्रात्मकात्मनाम् ॥ २.१५ ॥

तस्मा उन्मादनाथाय नष्टशौचाय दुर्हृदे ।
दत्ता बत मया साध्वी चोदिते परमेष्ठिना ॥ २.१६ ॥

मैत्रेय उवाच—
विनिन्द्यैवं स गिरिश-मप्रतीप-मवस्थितम् ।
दक्षोऽथाप उपस्पृश्य क्रुद्धः शप्तुं प्रचक्रमे ॥ २.१७ ॥

अयं तु देवयजन इन्द्रोपेन्द्रादिभि-र्भवः ।
सह भागं न लभतां देवै-र्देवगणाधमः ॥ २.१८ ॥

---

2. 14. பயங்கரமான சுடுகாடுகளில் பிரேதங்களும் பூதகணங்களுஞ் சூழப் பித்தன் போல் நிர்வாணியாகத் தலைவிரிகோலமாய் சிரித்துக்கொண்டும் அழுதுகொண்டும் திரிகிறான்.

2. 15. சுடுகாட்டுச் சாம்பலில் ஸ்நானம் செய்து, பிரேதமாலையும் மனித எலும்பாபரணமும் அணிந்து அமங்கள ரூபியாயுள்ள இவனுக்குச் சிவன் என்னும் பொருத்தமில்லாத மங்களநாமம் ஏனோ? இவன் மதம் பிடித்தவன், மதம் பிடித்தவர்களுக்குப் பிரியமானவன்; தமோகுணமே உருக்கொண்டவர்களான பிரமத கணங்களுக்கும் பூத கணங்களுக்கும் இவன் பதி.

2. 16. உன்மாத நாதனும், பரிசுத்த மிழந்தவனும், புத்திகெட்டவனும் ஆகிய அவனுக்குப் பிரம்மதேவர் தூண்டுதலினால் ஸாதுவான என் பெண் கொடுக்கப்பட்டாள்; பாவம்!

மைத்திரேயர் கூறியது—

2. 17. சிறிதும் எதிர்பேசாமல் வீற்றிருந்த மஹாதேவனை இவ்வாறு நிந்தித்து விட்டுக் கோபங்கொண்ட தக்ஷர் தண்ணீரைத் தொட்டுச் சாபங்கொடுக்க ஆரம்பித்தார்.

2. 18. "தேவர்களின் ஆராதனையில் இந்திரன் உபேந்திரன் முதலிய தேவர்களுடன், தேவர்களில் கடைப்பட்டவனான இவன் பாகம் பெறாமல் போகட்டும்."

---

2. 16. ஒ. ('அலோக— ஸாமான்ய- மசிந்த்ய- ஹேதுகம் த்விஷந்தி மந்தாச் - சரிதம் மஹாத்மனாம்) உலக நடத்தை போலில்லாததும் காரணத்தை அறிய முடியாததுமான மஹான்களின் நடத்தையை மந்த புத்தியுடையவர்கள் வெறுக்கின்றனர்.

— குமாரஸம்பவம் —(காளிதாஸர்.)

---

2. 18. यज्ञे भागं । பா. பே.

निषिध्यमानः स सदस्यमुख्यै-र्दक्षो गिरित्राय विसृज्य शापम् ।
तस्माद्विनिष्क्रम्य विवृद्धमन्यु-र्जगाम कौरव्य निजं निकेतनम् ॥ २.१९ ॥

विज्ञाय शापं गिरिशानुगाग्रणी-र्नन्दीश्वरो रोषकषाय-दूषितः ।
दक्षाय शापं विससर्ज दारुणं ये चान्वमोदं-स्तदवाच्यतां द्विजाः ॥ २.२० ॥

य एतन्मर्त्य-मुद्दिश्य भगवत्यप्रतिद्रुहि ।
द्रुह्यत्यज्ञः पृथग्दृष्टि-स्तत्त्वतो विमुखो भवेत् ॥ २.२१ ॥

गृहेषु कूटधर्मेषु सक्तो ग्राम्य-सुखेच्छया ।
कर्म-तन्त्रं वितनुते वेदवाद-विपन्नधीः ॥ २.२२ ॥

बुद्ध्या पराभिध्यायिन्या विस्मृतात्मगतिः पशुः ।
स्त्रीकामः सोऽस्त्वतितरां दक्षो बस्त-मुखोऽचिरात् ॥ २.२३ ॥

विद्याबुद्धि-रविद्यायां कर्ममय्या-मसौ जडः ।
संसरन्त्विह ये चामु-मनु शर्वावमानिनम् ॥ २.२४ ॥

---

2. 19. விதுரரே ! அந்த தக்ஷர் ஸபையோர்களில் முக்கியமானவர்களால் தடுக்கப் பட்டும், கேளாமல் இவரைக் குறித்துச் சாபங்கொடுத்துவிட்டுப் பொங்குங் கோபத்துடன் அவ்விடம் விட்டகன்று தம் வீடு சென்றார்.

2. 20. சிவனடியார்களிற் சிறந்தவரான நந்திகேசுவரர் இச் சாபத்தைக் கேட்டுக் கோபத்தின் வேகத்தால் கண் கலங்கியவராய் தக்ஷனைக் குறித்தும் அவரை ஆதரித்துப் பேசிய பிராம்மணர்கள் எவர்களோ அவர்களைக் குறித்தும் கொடுஞ்சாபம் விடுத்தார்.

2. 21. "எவன் அழியும் உடலில் அபிமானங்கொண்டவனாய் எவருக்கும் தீங்கு நினையாத பகவானுக்குத் துரோகஞ் செய்கின்றானோ அந்த அறிவிலி வேற்றுமையில் நோக்கமுள்ளவனாய் தத்துவத்தில் நோக்கமற்றவனாய்ப் போகட்டும்.

2. 22. "சூது கலந்த தர்மமாகிய கிருஹஸ்த வாழ்க்கையில் பற்றுள்ளவனாய் வேத வாதத்தால் மதியிழந்தவனாய்ச் சிற்றின்பத்திற்கு ஆசைப்பட்டு அதற்கான கருமத் தொடர்பைக் கைக்கொள்ளட்டும்.

2. 23. "இதையே பெரிதாய்க் கருதுபவனாய், ஆத்ம வாழ்க்கையை மறந்தவனாய், மிகவும் ஸ்திரீ காமனாய் மிருகத்தைப் போன்றுள்ள இந்த தக்ஷன் விரைவில் ஆட்டின் முகத்தை உடையவனாகவே ஆய்விடப் போகிறான்.

2. 24. "கர்மமயமான அவித்தையில் வித்தை என்ற புத்தியுடைய இவன் ஜடன். சிவனை அவமதிக்கும் இவனைப் பின்பற்றுவோர் எவர்களோ அவர்களும் மீளாது ஸம்ஸாரத்திலுழலட்டும்.

---

2. 20. ஸ்ரீராமன் ருத்ராம்சத்தைத் தன்னிடம் வரவழைத்துக் கொண்டு ராக்ஷஸ ஸம்ஹார காரியத்தைத் தொடங்கியபோது நந்தி தேவருடைய அம்சம் ஆஞ்சனேயரிடம் ஆவிர் பவித்தது போலும்.

ஒ. கிமேஷ பகவான் நந்தீ பவேத் ஸாக்ஷாதிஹாகத : ।
யேன சப்தோ ஽ஸ்மி கைலாஸே மயா ப்ரஹஸிதே புரா ॥—ராவணன் கூறியது.
— (ராமாயணம் 5. 50. 2.)

2. 24. ஒ. அவித்தையினுள் ஆழ்ந்து கிடக்கும் மூடர்கள் தாமே தீரர்கள் என்றும் பண்டிதர்கள் என்றும் நினைத்துக் கொண்டு தடுமாற்ற மடைந்தவர்களாய்க் குருடர்களால் வழி காட்டப் பட்ட குருடர்களைப் போல் சுற்றி சுற்றி வருகின்றனர். — கட. உப. 2. 5.

गिरः श्रुतायाः पुष्पिण्या मधुगन्धेन भूरिणा।
मथ्नाचोन्मथितात्मानः सम्मुह्यन्तु हरद्विषः ॥ २.२५ ॥

सर्वभक्षा द्विजा वृत्त्यै धृतविद्यातपोव्रताः।
वित्तदेहेन्द्रियारामा याचका विचरन्त्विह ॥ २.२६ ॥

तस्यैवं ददतः शापं श्रुत्वा द्विजकुलाय वै।
भृगुः प्रत्यसृजच्छापं ब्रह्मदण्डं दुरत्ययम् ॥ २.२७ ॥

तद्ब्रह्म परमं शुद्धं सतां वर्त्म सनातनम्।
विगर्ह्य यात पाषण्डं दैवं वो यत्र भूतराट् ॥ २.३२ ॥

मैत्रेय उवाच—

तस्यैवं वदतः शापं भृगोः स भगवान् भवः।
निश्चक्राम ततः किंचिद्विमना इव सानुगः ॥ २.३३ ॥

आप्लुत्यावभृतं यत्र गङ्गा यमुनयान्विता।
विरजेनात्मना सर्वे स्वं स्वं धाम ययुस्ततः ॥ २.३५ ॥

---

2. 25. "வேதவிருக்ஷத்தின் சொற்கிளைகளில் உள்ள பலச்ருதியாகிய புஷ்பங்களில் பெருகும் மதுவின் கந்தத்தால் கவரப்பட்ட சித்தத்தையுடைய சிவத் துவேஷிகள் மதிகெட்டு அழியட்டும்.

2. 26. "பிராம்மணர்கள் எதையும் சாப்பிடுபவர்களாயும், வித்தையையும் விரதத்தையும் தவத்தையும் வயிற்றுப் பிழைப்புக்காகக் கொண்டவர்களாயும், பொருள், உடல், இந்திரியங்களாகிய இவற்றிலேயே ரமிக்கின்றவர்களாயும், யாசகர்களாயும் அலையட்டும்."

2. 27. பிராம்மண குலத்துக்கு இவ்விதம் அவர் சொடுத்த சாபத்தைக் கேட்டுப் பிருகுவானவர் கடக்கமுடியாத பிரம்மதண்டரூபமான பிரதிசாபம் கொடுத்தார்.

2. 32. "பரிசுத்தமானதும், பழமையானதும், ஸாதுக்கள் பின்பற்றுவதுமான சிறந்த மார்க்கத்தை நிந்தித்து ஒதுக்கிவிட்டு பூதங்களுக்குப் பதியானவர் எங்கு தெய்வமாய் விளங்குகிறாரோ அந்தப் பாஷண்ட மார்க்கத்தை நீங்கள் அடையுங்கள்."

மைத்திரேயர் கூறியது—

2. 33. அந்த பிருகுவானவர் இங்ஙனம் சாபங் கொடுக்கையில் பகவான் பரமசிவன் சற்று வருந்தியவர்போல் அவ்விடத்திலிருந்து தன் பரிவாரங்களுடன் வெளிச் சென்றார்.

2. 35. (பின் யாகத்தைப் பூர்த்தி செய்து பிரஜாபதிகள்) எல்லோரும் பிரயாகையில் அவபிருத ஸ்நானம் செய்துவிட்டு சுத்தமான மனத்துடன் அவரவர் இடத்துக்குச் சென்றனர்.

---

2. 25. ஒ. அறிவீனர்கள் வேதத்தின் அர்த்த வாதத்தில் பற்றுடையவர்களாய் வேறு இல்லை என்று வாதம் செய்பவர்களாய் ஆசை நிறைந்த மனத்தினராய் ஸ்வர்க்கத்தையே மேலாகக் கொண்டவர்களாய் இன்ப நுகர்ச்சிக்காகவும் உயர் பதவிக்காகவும் ஜன்மத்தையே செயலின் பயனாகக் கொண்ட பல கிரியைகளைப் பற்றி மலர்ந்த பூப் போன்ற வார்த்தைகளைத் தொடர்ந்து பேசுவார்கள். கீ. 2. 42-43.

यदाभिषिक्तो दक्षस्तु ब्रह्मणा परमेष्ठिना ।
प्रजापतीनां सर्वेषा-माधिपत्ये स्मयोऽभवत् ॥ ३.२ ॥

इष्ट्वा स वाजपेयेन ब्रह्मिष्ठानभिभूय च ।
बृहस्पति-सवं नाम समारेभे क्रतूत्तमम् ॥ ३.३ ॥

तदुपश्रुत्य नभसि खेचराणां प्रजल्पताम् ।
सती दाक्षायणी देवी पितुर्यज्ञ-महोत्सवम् ।
पतिं भूतपतिं देव-मौत्सुक्या-दभ्यभाषत ॥ ३.७ ॥

सत्युवाच—

प्रजापतेस्ते श्वशुरस्य साम्प्रतं निर्यापितो यज्ञमहोत्सवः किल ।
वयं च तत्राभिसराम वाम ते यद्यर्थितामी विबुधा व्रजन्ति हि ॥ ३.८ ॥

कथं सुतायाः पितृगेह-कौतुकं निशम्य देहः सुरवर्य नेङ्गते ।
अनाहुता अप्यभियन्ति सौहृदं भर्तु-र्गुरो-र्देहकृतस्य केतनम् ॥ ३.१३ ॥

---

3. 2. (இதற்கு வெகுநாட்களுக்குப் பின்னர்) பரமேஷ்டியான பிரம்மதேவரால் எல்லாப் பிரஜாபதிகளுக்கும் தலைமை வகிக்கும்படி தக்ஷன் அபிஷேகம் செய்யப்பட்ட போது அவருடைய கருவம் அதிகரித்தது.

3. 3. பிரம்ம நிஷ்டர்களை அவமதித்து (அவர்களை யழையாமல்) வாஜபேய யாகம் செய்து பின் பிருஹஸ்பதி ஸவம் என்னும் சிறந்த கிரதுவைச் செய்ய ஆரம்பித்தார்.

3. 7. அப்பொழுது ஆகாய வீதியில் சஞ்சரிப்பவர்கள் பேசிக்கொண்டு போவதிலிருந்து, ஸதீ தாக்ஷாயணீதேவி தனது தகப்பனுர் யஜ்ஞமஹோத்ஸவம் நடத்துவதை யறிந்து, பர்த்தாவும் பூதபதியுமான மஹாதேவரிடம் பின்வருமாறு கூறலானுள்.

ஸதீதேவி கூறியது—

3. 8. வாமதேவரே! இப்போது உம்முடைய மாமனுர் செய்யும் யாகமஹோத்ஸவம் நடந்துகொண்டிருக்கிறதாம். இந்த தேவர்கள் அதற்காகத்தான் போய்க்கொண்டிருக்கிறுர்கள். தாங்கள் விரும்பினுல் நாமும் போகலாம்.

3. 13. தேவசிரேஷ்டரே! தகப்பன் வீட்டில் நடக்கும் உத்ஸவத்தைப்பற்றிக் கேட்ட பின் பெண்ணின் தேகம் எங்ஙனம் சலியாதிருக்கும்? பர்த்தா குரு பிதா நண்பர் முதலியோர் வீட்டுக்கு அழையாமலும் போகலாமன்றே!

---

3. 3. ஒ. தம்மையே மெச்சிக் கொள்பவராய்ப் பூஜைக் குரியவரிடத்தும் வணக்கமில்லாதவராய்ச் செல்வச் செருக்கும் மதமும் படைத்தவராய் அவர்கள் பேர் மட்டில் யக்ஞம் எனும் கிரியையால் முறை தவறிப் பூஜிக்கின்றனர். — கீ. 16. 17.

3. 13. நீங்கள் பிறக்காததால் பிறந்த வீட்டில் அன்பு உங்களுக்குத் தெரியாது.

**श्रीमहादेव उवाच—**

**त्वयोदितं शोभनमेव शोभने अनाहुता अप्यभियन्ति बन्धुषु ।**
**ते यद्यनुत्पादित-दोषदृष्टयो बलीयसानात्म्य-मदेन मन्युना ॥ ३.१६ ॥**

**नैतादृशानां स्वजन-व्यपेक्षया गृहान् प्रतीया-दनवस्थितात्मनाम् ।**
**येऽभ्यागतान् वक्रधियाभिचक्षते आरोपित-भ्रूभि-रमर्षणाक्षिभिः ॥ ३.१८ ॥**

**प्रत्युद्गम-प्रश्रयणाभिवादनं विधीयते साधु मिथः सुमध्यमे ।**
**प्राज्ञैः परस्मै पुरुषाय चेतसा गुहाशयायैव न देहमानिने ॥ ३.२२ ॥**

**तत्ते निरीक्ष्यो न पितापि देहकृद्-दक्षो मम द्विट् तदनुव्रताश्च ये ।**
**यो विश्वसृग्यज्ञगतं वरोरु मा-मनागसं दुर्वचसाकरोत्-तिरः ॥ ३-२४ ॥**

**यदि व्रजिष्यस्यतिहाय मद्वचो भद्रं भवत्या न ततो भविष्यति ।**
**सम्भावितस्य स्वजनात् पराभवो यदा स सद्यो मरणाय कल्पते ॥ ३.२५ ॥**

---

ஸ்ரீ மகாதேவர் கூறியது—

3. 16. மங்கள ஸ்வரூபியே! அழைக்காவிடினும் பந்துக்களிடம் போவரென்று உன்னால் கூறப்பட்ட வார்த்தை மங்களமானதே. ஆனால் அவர்கள் அனுத்ம மதத்தாலும் குரோதத்தாலும் (பிறரிடம்) தோஷத்தைக் கற்பிப்பதில் நோக்கமுடையவர்களாக இல்லாமலிருந்தால்தான் அது கூடும்.

3. 18. எவர்கள் புத்திக் கோணலால் புருவங்களை நெளித்துக்கொண்டு ரோஷப் பார்வையுடன் தம்மிடம் வருபவர்களைப் பார்க்கிறார்களோ அப்படிப்பட்ட நிலையற்ற மதியினரின் வீடுகளுக்கு அவர்கள் பந்துக்கள் என்ற கருத்துடன் போகக் கூடாது.

3. 22. அழகிய இடையுள்ளவளே! (பிரஜாபதிகளின் ஸபையில் நான் ஏன் உன் தகப்பனருக்கு மரியாதை செய்யவில்லை என்றால் அதன் காரணத்தைக் கேள்.) ஒருவரை யொருவர் சந்திக்கும்பொழுது எதிர் கொண்டழைத்தல், வணங்குதல், அபிவாதனம் கூறுதல் என்ற உலக வழக்கு இருதயத்திலுறையும் பரமபுருஷனுக்கே ஞானிகளால் நன்கு செய்யப்படுகின்றனவேயன்றி தேகாபிமானமுடையவர்க்குச் செய்யப் படுவனவன்று.

3. 24. ஆகையால் சிறந்த இடையுள்ளவளே! பிரஜாபதிகளின் யாகத்துக்குச் சென்றிருந்த என்னை ஒரு பிழையுமிழைக்காதபோது தகாத வார்த்தைகளால் திரஸ்காரம் செய்ததால் தக்ஷப் பிரஜாபதி உன்னைப்பெற்ற தந்தை யாயினும் என்னைத் துவேஷிப்பவராதலால் அவரும் அவரைப் பின்பற்றியவர்களும் உன்னால் சென்று பார்க்கக் கூடியவர்களன்று.

3. 25. என் சொல்லைக் கேளாமல் நீ போனால் அதனால் உனக்கு நன்மை உண்டாகாது. நன்மதிப்புடையவர்க்குத் தம்மவரிடமிருந்தே ஏற்படும் அவமதிப்பு மரணத்துக்குக் காரணமாகும்.

---

3. 22. (பரிபூர்ணே தஸ்மின் காயிக- வ்யாபாராயோகாத் அதோ அந்தர்யாமி-த்ருஷ்ட்யா மனஸா ஸர்வம் க்ருத-மிதி பாவ:) பரிபூர்ணராகிய பகவானிடத்தில் சரீர வியாபாரம் பொருந்தாத காரணத்தால் அந்தர்யாமியாகக் கண்டு மனதால் எல்லா மரியாதையும் செய்யப்பட்டதெனக் கருத்து.

---

3. 18. **गृहात् प्रतीयात् ।**

3. 24. **त्वया निरिक्ष्यो ।** பா. பே.

**मैत्रेय उवाच—**

**एतावदुक्त्वा विरराम शंकरः पत्न्यंग-नाशं ह्युभयत्र चिन्तयन् ।**
**सुहृद्दिदृक्षुः परिशंकिता भवा-न्निष्क्रामती निर्विशती द्विधाऽऽस सा ॥ ४.१ ॥**

**ततो विनिःश्वस्य सती विहाय तं शोकेन रोषेण च दूयता हृदा ।**
**पित्रोरगात् स्त्रैण-विमूढधी-र्गृहान् प्रेम्णाऽऽत्मनो योऽर्धमदात्**
**सतां प्रियः ॥ ४.३ ॥**

**तामन्वगच्छन् द्रुतविक्रमां सती-मेकां त्रिनेत्रानुचराः सहस्रशः ।**
**सपार्षद्-यक्षा मणिमन्मदादयः पुरोवृषेन्द्रास्तरसा गतव्यथाः ॥ ४.४ ॥**

**तामागतां तत्र न कश्चनाद्रियद् विमानितां यज्ञकृतो भयाज्जनः ।**
**ऋते स्वसॄर्वै जननीं च सादराः प्रेमाश्रु-कण्ठ्यः परिषस्वजुर्मुदा ॥ ४.७ ॥**

**अरुद्रभागं तमवेक्ष्य चाध्वरं पित्रा च देवे कृतहेलनं विभौ ।**
**अनादृता यज्ञसदस्यधीश्वरी चुकोप लोकानिव धक्ष्यती रुषा ॥ ४.९ ॥**

---

மைத்திரேயர் கூறியது—

4. 1. இங்ஙனம் சொல்லிவிட்டுப் பத்தினியின் உடலுக்கு நாசம் இருவாற்றுனும் ஏற்படும் என்று சிந்தித்துச் சங்கரர் மௌனமா யிருந்தார். ஸதீதேவியும் சிவனுடைய அபிப்பிராயத்தில் சந்தேகங்கொண்டவளாயும் பந்துக்களைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலுடையவளாயும் வெளியில் போவதும் உள்ளே வருவதுமாக ஊசலாடும் மன துடையவளா யிருந்தாள்.

4. 3. முடிவில் பெண் ஸ்வபாவத்தால் சித்தத் தெளிவை யிழந்து, ஸாதுக்களுக் குப் பிரியரான எவர் பிரேமையால் பாதியுடலையுந் தனக்குத் தந்தாரோ அந்த பர்த்தாவை விட்டுச் சோகத்தாலும் கோபத்தாலும் கலங்கிய மனத்துடனும் பெருமூச்சுடனும் பெற்றோர் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

4. 4. ஸதீதேவி தனியாக விரைந்து செல்வதைக் கண்டு முக்கண்ணரின் பணி யாளர் ஆயிரக்கணக்கில் பின் தொடர்ந்தனர். பாரிஷதர்களுடனும் யக்ஷர்களுடனும் மணிமான், மதன் முதலியோர் நந்திதேவரை முன்னிட்டுக்கொண்டு பயமற்றவர்களாய் விரைந்தனர்.

4. 7. யாகசாலையை யடைந்தபோது அங்கு அவளை யாரும் ஆதரித்து வரவேற்க வில்லை. யஜமானனான தக்ஷன் அலக்ஷியஞ் செய்ததால் அவரிடம் பயத்தால் ஜனங்கள் பேசாமலிருந்தனர். சகோதரிகளும் தாயாரும் மட்டும் ஆதரவுடனும், பிரேமையினால் தழுதழுத்த குரலுடனும் பொங்கும் மகிழ்ச்சியுடனும் ஆலிங்கனம் செய்துகொண்டனர்.

4. 9. ருத்திரனுக்குப் பாகமில்லாத அந்த யாகத்தையும் மஹாதேவனுக்குத் தன் தந்தையால் ஏற்பட்ட அவமதிப்பையும் தனக்கு யாகஸபையில் நிகழ்ந்த அனாதரவையுங் கண்டு பரமேசுவரி உலகங்களை எரிப்பவள்போல் கோபங்கொண்டாள்.

---

4. 9. எவர்கள் தங்கள் புகழை நிலை நாட்ட யாகங்களைச் செய்கிறார்களோ அவர்களி டம் தேவி கோபங் கொள்ளுகிறாள். அவர்களுடைய யாகத்தை அழிக்கிறாள்.

ஒ. தாக்ஷாயணீ தைத்யஹந்த்ரீ தக்ஷயஜ்ஞவிநாசினீ । — லலிதாஸஹஸ்ரநாமம்.

---

4. 4. **सपार्षदा वे ।** பா. பே.

देव्युवाच—

न यस्य लोकेऽस्त्यतिशायनः प्रिय-स्तथाप्रियो देहभृतां प्रियात्मनः।
तस्मिन् समस्तात्मनि मुक्तवैरके ऋते भवन्तं कतमः प्रतीपयेत् ॥ ४.११ ॥

यद् द्व्यक्षरं नाम गिरेरितं नृणां सकृत्-प्रसङ्गा-दघमाशु हन्ति तत्।
पवित्रकीर्तिं तमलङ्घ्य-शासनं भवानहो द्वेष्टि शिवं शिवेतरः ॥ ४.१४ ॥

किं वा शिवाख्य-मशिवं न विदुस्त्वदन्ये ब्रह्मादय-स्तमवकीर्य जटाः श्मशाने।
तन्माल्य-भस्म-नृकपाल्यवसत् पिशाचै-र्ये मूर्धभि-र्दधति
तच्चरणावसृष्टम् ॥ ४.१६ ॥

कर्णौ पिधाय निरयाद्यदकल्प ईशे धर्मावितर्य सृणिभि-र्नृभिरस्यमाने।
छिन्द्यात् प्रसह्य रुशती-मसतीं प्रभुश्चेज्जिह्वा-मसूनपि ततो
विसृजेत् स धर्मः ॥ ४.१७ ॥

अत-स्तवोत्पन्न-मिदं कलेबरं न धारयिष्ये शितिकण्ठ-गर्हिणः।
जग्धस्य मोहाद्धि विशुद्धि-मन्धसो जुगुप्सितस्योद्धरणं प्रचक्षते ॥ ४.१८ ॥

---

தேவி கூறியது—

4. 11. பரமசிவனைவிடப் பெரியவர் உலகில் எவருமில்லை. அவர் உடல் படைத்த அனைவருக்கும் பிரியமான ஆத்மா. அவருக்குப் பிரியனுமில்லை. அப்பிரியனுமில்லை. ஆகையால் அவருக்கு எவரிடமும் விரோதமில்லை. உம்மைத் தவிர எவர்தான் அவரிடம் பகைகொள்வர்?

4. 14. 'சிவ' என்ற இரண்டெழுத்துள்ள நாமம் பேச்சின் இடையில் ஒரு தடவை மனிதரால் உச்சரிக்கப்பட்டாலும் விரைவில் பாவத்தைப் போக்கும். பரிசுத்தமான கீர்த்தியுடையவரும், மீறமுடியாத கட்டளை யுடையவருமான அந்தப் பரமசிவனை மங்களத்தை யிழந்துவிட்ட தாங்கள் துவேஷிக்கிறீர்கள்.

4. 16. மயானத்தில் சடைகளை விரித்துக்கொண்டு, அங்குள்ள மாலைகள், சாம்பல், மண்டையோடு இவற்றைத் தரித்துக்கொண்டு பிசாசுகளுடன் வசிக்கும் இவருடைய பாதங்களினின்று நழுவிய நிர்மால்யத்தைச் சிரசில் தரிக்கும் பிரம்மாதி தேவர்கள் எவர்களுண்டோ அவர்கள் உம்மைப்போல் இல்லை; சிவன் என்று பெயருடைய இவர் அசிவம் (அமங்களரூபி) என்று ஏனோ அறியாமற்போனார்கள்.

4. 17. வரம்புமீறி நடக்கும் மனிதர்களால் தர்ம ரக்ஷகரான ஈசுவரன் நிந்திக்கப் பட்டால் அவர்களை யடக்கத் திறமையில்லாதவர் காதுகளைப் பொத்திக்கொண்டு அவ்விடம் விட்டகலவேண்டும்; அடக்குந் திறமையுள்ளவராயின் தகாத வார்த்தையைப் பேசின அந்தக் கொடிய நாக்கை இழுத்து அறுத்துவிடவேண்டும்; பின்னர் (ஈசுவர நிந்தையைக் கேட்டதற்காக) தன் உயிரையும் விடவேண்டும்; அதுதான் தருமம்.

4. 18. ஆகையால் நஞ்சுண்டகண்டனை நிந்திக்கும் உம்மிடமிருந்துதித்த இந்த உடலை நான் தரிக்கப்போவதில்லை. அறியாமையினால் அசுத்தமான அன்னம் சாப்பிடப் பட்டால் அதைக் கக்கிவிடுவதால் சுத்தம் ஏற்படும் என்றல்லவோ கூறுகின்றனர்.

---

4. 18. **நஞ்சுண்டகண்டன்:—**

ஒ. மிக்கா ரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன். —திரு மந்திரம்.

---

பா. பே.

4. 11. **विमुक्तात्मनि।**

गोत्रं त्वदीयं भगवान् वृषध्वजो दाक्षायणी-त्याह यदा सुदुर्मनाः ।
व्यपेत-नर्मस्मित-माशु तद्ध्यहं व्युत्स्रक्ष्य एतत् कुणपं त्वदङ्गजम् ॥ ४.२३ ॥

मैत्रेय उवाच—

इत्यध्वरे दक्षमनूद्य शत्रुहन् क्षितावुदीचीं निषसाद शान्तवाक् ।
स्पृष्ट्वा जलं पीतदुकूल-संवृता निमील्यदृग्योगपथं समाविशत् ॥ ४.२४ ॥

ततः स्वभर्तु-श्चरणाम्बुजासवं जगद्गुरो-श्चिन्तयती न चापरम् ।
ददर्श देहो हतकल्मषा सती सद्यः प्रजज्वाल समाधिजाग्निना ॥ ४.२७ ॥

दक्षं तत्पार्षदा हन्तु-मुदतिष्ठन्नुदायुधाः ।
तेषा-मापततां वेगं निशम्य भगवान् भृगुः ।
यज्ञघ्नघ्नेन यजुषा दक्षिणाग्नौ जुहाव ह ॥ ४.३२ ॥

भवो भवान्या निधनं प्रजापते-रसत्कृताया अवगम्य नारदात् ।
स्वपार्षद-सैन्यं च तदध्वर-र्भुभि-र्विद्रावितं क्रोधमपार-मादधे ॥ ५.१ ॥

---

4. 23. விருஷபத்வஜரான பகவான் விளையாட்டாக 'தாக்ஷாயணி' என்று உமது கோத்ரப் பெயரால் இனி என்னைக் கூப்பிட்டால் நான் கேலியில் ஏற்படக்கூடிய சிரிப்பை யிழந்து விரைவில் மனம் நொந்தவளாவேன். ஆகையால் உமது அங்கத்திலுண்டான இந்தக் கூட்டை நிச்சயமாய் விட்டுவிடப் போகிறேன்.

மைத்திரேயர் கூறியது—

4. 24. பகையை வென்ற விதுரரே! இங்ஙனம் யாகசாலையில் தக்ஷனிடம் கூறி விட்டு, மஞ்சட் பட்டணிந்து, ஆசமனம் செய்துவிட்டு, வாய் பேசாமல், பூமியில் வடக்கு நோக்கியமர்ந்து, கண்களை மூடிக்கொண்டு, யோகமார்க்கத்தில் புகுந்தாள்.

4. 27. கல்மஷமற்ற ஸதீதேவி பின்னர் ஜகத்குருவாகிய தன் பர்த்தாவின் திரு வடியினின்று பெருகும் அமுதத்தைச் சிந்திப்பவளாய் வேறு ஒன்றையுங் காணவில்லை. அவளுடைய உடல் ஸமாதித் தீயால் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது.

4. 32. அப்போது அவளுடைய பாரிஷதர்கள் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு தக்ஷனைக் கொல்லுவதற்குக் கிளம்பினர். விரைந்து எதிர்க்கும் அவர்களுடைய வேகத்தைக் கண்டு பகவான் பிருகுமகரிஷி யாகத்துக்கு இடையூறு செய்பவர்களை யழிக்கக்கூடிய மந்திரத்தினுல் தக்ஷிணுக்கினியில் ஹோமம் செய்தார்.

5. 1. தக்ஷப்பிரஜாபதியினுல் அவமதிக்கப்பட்ட பவானியின் முடிவையும், யாகத் தீயிலிருந்துண்டான ரிபு தேவர்களால் தனது பாரிஷதர்கள் விரட்டப்பட்டதையும் நாரத ரிடமிருந்து கேட்ட மகாதேவன் கரைகடந்த கோபமடைந்தார். (அக்கோபத்திலிருந்து வீரபத்திரர் தோன்றினுர்.)

---

4. 24. ஒ. எல்லா இந்திரிய வாயில்களையுமடைத்து மனத்தையும் இருதயத்தில் நிலை நிறுத்தித் தனது பிராணனைத் தலை உச்சியில் வைத்து யோக தாரணையில் நிலை பெற்றவனுய் ஓம் எனும் பிரம்மவாசக மாகிய ஓரெழுத்தை உச்சரித்துக் கொண்டு என்னை முறைப்படி சிந் தித்தவனுய் உடலை விட்டு எவன் செல்லுகின்ருனே அவன் உயர்ந்த கதியை யடைகிருன்.
— கீ. 8. 13.

5. 1 ருபவ:—யே தபஸா ஸோமம் ப்ராப்தாஸ்-தே ருபவோ நாம தேவா: ।

---

5. 1. तत्पार्षदसैन्यं । பா. பே.

अमर्षयित्वा तमसह्यतेजसं मन्युप्लुतं दुर्विषहं भ्रुकुट्या ।
करालदंष्ट्राभि-रुदस्त-भागणं स्यात् स्वस्ति किं कोपयतो विधातुः ॥ ५.११ ॥

तावत् स रुद्रानुचरै-र्मखो महान् नानायुधै-र्वामनकै-रुदायुधैः ।
पिङ्गैः पिशङ्गै-र्मकरोदराननैः पर्याद्रवद्भि-र्विदुरान्वरुध्यत ॥ ५.१३ ॥

दृष्ट्वा संज्ञपनं योगं पशूनां स पतिर्मखे ।
यजमान-पशोः कस्य कायात्तेनाहर-च्छिरः ॥ ५.२४ ॥

जुहावैतच्छिरस्तस्मिन् दक्षिणाग्नावमर्षितः ।
तद्देव-यजनं दग्ध्वा प्रातिष्ठद्गुह्यकालयम् ॥ ५.२६ ॥

संछिन्न-भिन्न-सर्वांगाः सर्त्विक्-सभ्या भयाकुलाः ।
स्वयंभुवे नमस्कृत्य कार्त्स्न्येनैत-न्न्यवेदयन् ॥ ६.२ ॥

उपलभ्य पुरैवैत-द्भगवानब्ज-संभवः ।
नारायणश्च विश्वात्मा न कस्याध्वर-मीयतुः ॥ ६.३ ॥

तदाकर्ण्य विभुः प्राह तेजीयसि कृतागसि ।
क्षेमाय तत्र सा भूयान्न प्रायेण बुभूषताम् ॥ ६.४ ॥

---

5. 11. எதிர்க்கமுடியாத வீரியமுடையவரும், பொறுக்கமுடியாத கோபம் நிறைந்தவரும், நக்ஷத்திரங்களைச் சிதறடிக்கும் தெற்றிப்பல்லும் வளைந்த புருவமும் உடையவரும் ஆகிய அவருக்குக் கோபத்தை உண்டாக்கிவிட்டால், அங்ஙனம் கோபமூட்டியவன் பிரம்மதேவனாயினுங்கூட அவனுக்கு க்ஷேமமுண்டாகுமா ?

5. 13. விதுரரே ! அப்போது விரைவில் விசாலமான யாகசாலை ருத்திரகணங்களால் சூழப்பட்டது. மகர மீன்போன்ற வயிறும் முகமும் உடையவர்களும், பழுத்த பொன் நிறமானவர்களும், குட்டை வடிவினருமான அவர்கள் வளைத்துக்கொண்டனர்.

5. 24. யாகத்தில் பிராணியின் உயிரை வாங்கும் முறையைக் கண்டு வீரபத்திரர் அதே முறையில் யஜமானப் பசுவாகிய தக்ஷப்பிரஜாபதியின் தலையை உடலிலிருந்து கொய்தார்.

5. 26. கோபம் மிகுந்த அவர் அத்தலையை தக்ஷிணாக்கினியில் ஹோமம் செய்துவிட்டு யாகசாலையையும் எரித்துவிட்டு குஹ்யகர்களின் வாசஸ்தானமான கைலாஸ பர்வதத்திற்குத் திரும்பினார்.

6. 2. ரித்விக்குடனும் ஸபையோருடனும் தேவகணங்கள் எல்லா அங்கங்களிலும் வெட்டுண்டவர்களாய், பயத்தால் பீடிக்கப்பட்டவர்களாய்ப் பிரம்மதேவனை நாடி அவரை வணங்கி நிகழ்ந்தவற்றையெல்லாம் தெரிவித்தனர்.

6. 3. இங்ஙனம் நிகழுமென்று முன்னமேயே அறிந்துதான் பிரம்மதேவனும் விச்வாத்மாவான நாராயணரும் பிரஜாபதியின் யாகத்துக்குச் செல்லவில்லை.

6. 4. (தேவர்கள் கூறிய) அதைக் கேட்ட பிரம்மதேவர் "வீரியம் மிகுந்தவர் பிழையே செய்யினும் அதற்குப் பழிவாங்க எண்ணினால் அங்ஙனம் விரும்புவோரின் எண்ணம் பெரும்பாலும் நன்மை தருவதாகாது.

---

6. 3. तस्याध्वरमीयतुः । பா. பே.

**अथापि यूयं कृतकिल्बिषा भवं ये बर्हिषो भागभाजं परादुः ।**
**प्रसादयध्वं परिशुद्धचेतसा क्षिप्र-प्रसादं प्रगृहीतांघ्रिपद्मम् ॥ ६.५ ॥**

**स इत्थ-मादिश्य सुरानजस्तैः समन्वितः पितृभिः सप्रजेशैः ।**
**ययौ स्वधिष्ण्या-न्निलयं पुरद्विषः कैलासमद्रिप्रवरं प्रियं प्रभोः ॥ ६.८ ॥**

**तस्मिन् महायोगमये मुमुक्षु-शरणे सुराः ।**
**ददृशुः शिवमासीनं त्यक्तामर्ष-मिवान्तकम् ॥ ६.३३ ॥**

**कृत्वोरौ दक्षिणे सव्यं पादपद्मं च जानुनि ।**
**बाहुं प्रकोष्ठेऽक्षमाला-मासीनं तर्क-मुद्रया ॥ ६.३८ ॥**

**स तूपलभ्यागत-मात्मयोनिं सुरासुरेशै-रभिवन्दितांघ्रिः ।**
**उत्थाय चक्रे शिरसाभिवन्दन-मर्हत्तमः कस्य यथैव विष्णुः ॥ ६.४० ॥**

---

6. 5. "நீங்களோ அபராதம் செய்தவர்கள். எவர்கள் யாகத்தில் சிவனுக்குப் பாக மில்லாமல் செய்தார்களோ அவர்களைச் சார்ந்தவர்கள். ஆகையால் நீங்கள் பரிசுத்தமான மனத்துடன் எளிதில் இரங்கும் சிவனுடைய திருவடித் தாமரைகளைப் பிடித்துக்கொண்டு அவருக்குப் பிரீதியைச் செய்யுங்கள்."

6. 8. பிரம்மதேவன் இவ்விதம் தேவர்களுக்கு உத்திரவிட்டு அவர்களுடனும் பிரஜாபதிகளுடனும் பிதிருக்களுடனும் தனதிருப்பிடத்திலிருந்து பிரபுவான மகாதேவனுக்குப் பிரியமான வாசஸ்தானமாகிய சிறந்த கைலாஸ மலையை நோக்கிச் சென்றார்.

63. 33-38. மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்கள் சரண்புகுமிடமும் மகத்தான யோகத்தின் உறைவிடமுமான அங்கு (ஒரு ஆலமரத்தடியில்) இடது பாதகமலத்தை வலது துடையின்மேல் வைத்து, (இடது) முழந்தாள்மேல் (இடது) கையை வைத்து (வலது) மணிக்கட்டில் ஜபமாலையுடனும் (வலது கையில்) சின்முத்திரையுடனும் வீற்றிருப்பவரும் கோபம் நீங்கிய யமனைப்போல் அவர்களுக்குக் காட்சியளிப்பவருமான சிவனைக் கண்ணுற்றனர்.

6. 40. அவரும் பிரம்மதேவர் வந்ததை யுணர்ந்து எழுந்து தலையால் அவருக்கு வணங்கினார். தேவர்களாலும் தேவராஜனாலும் வணங்கப் பெறும் திருவடிகளையுடையவரும் பூஜ்யசிரேஷ்டருமான அவர் அங்ஙனம் வணங்கியது மஹாவிஷ்ணு (வாமனாவதாரத்தில்) காசியபப் பிரஜாபதிக்கு வணங்கியதுபோலிருந்தது.

---

6. 38. ஓ. ஸ்படிக - ரஜத - கௌரம் - மௌக்திகீ-மக்ஷமாலாம்
அம்ருத-கலசவித்யாம் ஜ்ஞான-முத்ராம் கராப்ஜை: ।
தததம் - முரககக்ஷம் சந்த்ரசூடம் த்ரிணேத்ரம்
வித்ருத - விவிதபூஷம் தக்ஷிணாமூர்த்தி - மீடே ॥ —தக்ஷிணாமூர்த்யுபநிஷத் ॥
ஞானத்தின் எல்லை தக்ஷிணாமூர்த்தி வடிவம் ;
ஆனந்தத்தின் எல்லை நடராஜ வடிவம்.

---

6. 5. **परिशुद्धसत्त्वं ।**

6. 34 **सनकाद्यैः ।** பா. பே.

तथापरे सिद्धगणा महर्षिभि-र्ये वै समन्तादनु नीललोहितम् ।
नमस्कृतः प्राह शशाङ्कशेखरं कृतप्रणामं प्रहसन्निवात्मभूः ॥ ६.४१ ॥

ब्रह्मोवाच—

भवांस्तु पुंसः परमस्य मायया दुरन्तयाऽस्पृष्टमतिः समस्तदृक् ।
तयाहतात्मस्वनुकर्मचेतः-स्वनुग्रहं कर्तुमिहार्हसि प्रभो ॥ ६.४९ ॥

कुर्वध्वरस्योद्धरणं हतस्य भोः-स्त्वयासमाप्तस्य मनो प्रजापतेः ।
न यत्र भागं तव भागिनो ददुः कुयज्विनो येन मखो निनीयते ॥ ६.५० ॥

देवानां भग्नगात्राणा-मृत्विजां चायुधाश्मभिः ।
भवतानुगृहीताना-माशु मन्योऽस्त्वनातुरम् ॥ ६.५२ ॥

एष ते रुद्रभागोऽस्तु यदुच्छिष्टोऽध्वरस्य वै ।
यज्ञस्ते रुद्रभागेन कल्पता-मद्य यज्ञहन् ॥ ६.५३ ॥

---

6. 41. இவனைச் சுற்றி வீற்றிருந்த மகரிஷிகளும் சித்தர் கணங்களும் எவர்கள் உண்டோ அவர்களும் நமஸ்கரித்தனர். அங்ஙனம் வந்தனம் செய்யப்பெற்ற பிரம்ம தேவர் அஞ்ஜலிஹஸ்தரான சந்திரமௌளீசுவரரைப்பார்த்துப் புன்னகை செய்பவர்போல் பேசலானார்.

பிரம்மா கூறியது—

6. 49. பிரபுவே! தாங்கள் பரமபுருஷனுடைய எல்லையற்ற மாயையால் பற்றப் படாத மதியுடையவர்; அனைத்தையும் கண்டறிபவர்; அந்த மாயையால் அறிவிழந்து கருமாதீனமான சித்தவிருத்தி யுடையவர்களுக்கு அனுக்கிரகம் செய்வது உமக்குத் தகும்.

6. 50. மந்த்ர ஸ்வரூபியே! எவரால் யாகம் பூரண பலனுடையதாகுமோ அப்படிப்பட்ட உமக்கு எந்த யாகத்தில் கருமவிபாகம் செய்தவர்கள் பாகத்தை யளிக்காமையால் யாகம் உம்மால் அழிக்கப்பட்டுப் பூர்த்தியடையாமல் போயிற்றோ அந்த தக்ஷயாகம் பூர்த்தியாகும்படி அருளவேண்டும்.

6. 52. மன்யுஸ்வரூபியே! ஆயுதங்களாலும் கற்களாலும் அடியுண்டு அங்கஹீனர்களான தேவர்களுக்கும் ரித்விக்குகளுக்கும் உமது அனுக்கிரகத்தால் சீக்கிரம் துன்பம் விலகவேண்டும்.

6. 53. ருத்திரரே! எந்த யாகத்திலும் எஞ்சியது எதுவோ அது ருத்திரபாகமாக ஆகட்டும். (கருவங்கொண்டவரின்) யாகத்தை அழிப்பவரே! இப்போது கல்பிக்கப் பட்ட ருத்திரபாகத்தால் யாகம் பூர்த்தி யடையட்டும்.

---

6. 53. உலகத்தார் வேண்டாது விடுத்தது சிவனுக்கு உகந்ததாகும். துன்பம், சாவு, விஷம், தும்பைப் பூ, எருக்கம் பூ, பில்வம், சுடுகாடு, பனி மலை இவை யெல்லாம் சிவார்ப் பணம். ஒ. மிக்கோ ரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்.

---

பா. பே.

6. 50. भवभागिनो ।

श्रीमहादेव उवाच—

नाघं प्रजेश बालानां वर्णये नानुचिन्तये ।
देवमायाभिभूतानां दण्डस्तत्र धृतो मया ॥ ७.२ ॥

मैत्रेय उवाच—

ततो मीढ्वांसमामन्त्र्य शुनासीराः सहर्षिभिः ।
भूयस्तद् देवयजनं समीढ्वद्वेधसो ययुः ॥ ७.७ ॥

संधीयमाने शिरसि दक्षो रुद्राभिवीक्षितः ।
सद्यः सुप्त इवोत्तस्थौ ददृशे चाग्रतो मृडम् ॥ ७.९ ॥

दक्ष उवाच—

योऽसौ मयाऽविदित-तत्त्व-दृशा सभायां
क्षिप्तो दुरुक्ति-विशिखै-रगणय्य तन्माम् ।
अर्वाक् पतन्त-मर्हत्तमनिन्दयापाद्
दृष्ट्याऽऽर्द्रया स भगवान् स्वकृतेन तुष्येत् ॥ ७.१५ ॥

---

ஸ்ரீ மகாதேவர் கூறியது—

7. 2. பிரஜைகளின் ஈசனே! தேவதேவனுடைய மாயையில் அழுந்திய சிறுவர்களின் அவச் செயலை நான் பேசவுமில்லை, எண்ணவுமில்லை; உரிய தண்டனை மட்டும் என்னால் ஏற்படுத்தப்பட்டது.

மைத்திரேயர் கூறியது—

7. 7. பின்பு தேவர்கள் பரமசிவனையும் உடன் வந்து யாகத்தைப் பூர்த்திசெய்து தரவேண்டுமென்று பிரார்த்தித்துப் பரமசிவனுடனும் பிரம்மாவுடனும் ரிஷிகளுடனும் மீண்டும் அந்த யாகசாலைக்கு வந்து சேர்ந்தனர்.

7. 9. தக்ஷருடைய தலை (மீண்டும் அவருடலில்) பொருத்தப்பட்டு ருத்திரனுடைய கடாக்ஷத்தால் அவர் தூங்கி விழித்தவர்போல் அப்போதே எழுந்து எதிரில் மங்கள ரூபியான மகாதேவனைக் காணப்பெற்றார்.

தக்ஷர் கூறியது—

7. 15. உண்மை யுணர்வில்லாத என்னால் ஸபையில் அம்புபோன்ற கொடுஞ் சொற்களால் எவர் நிந்திக்கப்பட்டும் அதைப் பொருட்படுத்தாமல், பூஜைக்குரியவரை நிந்தித்ததால் ஏற்பட்ட பெரும் பாவத்தால் தலைகீழாக நரகில் விழுந்துகொண்டிருந்த என்னைத் தனது குளிர்ந்த பார்வையால் காத்தருளினாரோ அந்த பகவான் தனது நற் செயலாலேயே திருப்தியடையவேண்டும்.

---

7. 7. **மீட்வாம்ஸம்** - சிவம்; **சுநாஸீரா :** — தேவா :.

7. 15. ஸ்வக்ருதேனைவ பரானுக்ரஹேணைவ துஷ்யேத் ந மயா தத் ப்ரதிகர்த்தும் சக்ய-மித்யர்த்த ;।

---

7. 2. **परेश । दण्डस्तु विधृतो ।**

7. 9. **शीर्ष्णीह दक्षो ।** பா. பே.

**मैत्रेय उवाच—**

क्षमाप्यैवं स मीढ्वांसं ब्रह्मणा चानुमन्त्रितः ।
कर्म-सन्तानयामास सोपाध्याय-र्त्विगादिभिः ॥ ७.१६ ॥

अध्वर्युणात्त-हविषा यजमानो विशांपते ।
धिया विशुद्धया दध्यौ तथा प्रादुरभूद्धरिः ॥ ७.१८ ॥

**श्रीभगवानुवाच—**

अहं ब्रह्मा च शर्वश्च जगतः कारणं परम् ।
आत्मेश्वर उपद्रष्टा स्वयं दृगविशेषणः ॥ ७.५० ॥

आत्ममायां समाविश्य सोऽहं गुणमयीं द्विज ।
सृजन् रक्षन् हरन् विश्वं दध्रे संज्ञां क्रियोचिताम् ॥ ७.५१ ॥

तस्मिन् ब्रह्मण्यद्वितीये केवले परमात्मनि ।
ब्रह्मरुद्रौ च भूतानि भेदेनाज्ञोऽनुपश्यति ॥ ७.५२ ॥

---

மைத்திரேயர் கூறியது—

7. 16. இங்ஙனம் அவர் மகாதேவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு பிரம்ம தேவரின் உத்திரவையும் பெற்று, உபாத்தியாயர், ரித்விக்கு முதலியவர்களுடன் யாக கருமத்தைத் தொடர்ந்து செய்ய ஆரம்பித்தார்.

7. 18. விதுரரே! அத்வர்யுவானவர் கையில் ஹவிஸ்ஸை ஏந்தியபோது யஜமான ராகிய தக்ஷர் பரிசுத்த பாவனையுடன் ஹரியைத் தியானிக்க அவரும் அங்கே ஆவிர்ப்பவித்தார்.

ஸ்ரீ பகவான் கூறியது—

7. 50. ஆத்மா என்றும், ஈசுவரன் என்றும், ஜீவஸாக்ஷி என்றும், ஸ்வயம்பிரகாச னென்றும், நிர்க்குணனென்றும் கூறப்படும் நான்தான் பிரம்மாவும், சிவனும், உலகின் முதற்காரணமு மாகின்றேன்.

7. 51. தக்ஷப் பிரஜாபதியே! எனது குணமயமான மாயையில் புகுந்து உலகை உண்டாக்கியும் காத்தும் அழித்தும், செயலுக்குரிய பெயரைத் தரிக்கிறேன்.

7. 52. அங்ஙனம் கேவலம் பரமாத்மாவாகவும் அனைத்தினின்றும் பிரிதற்ற பிரம்ம மாகவும் நான் இருக்க, பிரம்மாவையும் ருத்திரனையும் ஜீவராசிகளையும் என்னில் வேறாக அறிவிலிகள் கருதுகிறார்கள்.

---

7.50. ஒ. பொன் திகழுமேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும் — என்றும்
இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்
ஒருவனங்கத்துளன். —பொய்கை யாழ்வார்

7. 51. ஒ. தேருங்கால் தேவன் ஒருவனே யென்றுரைப்பர்
ஆருமறியாரவன் பெருமை — ஒரும்
பொருள் முடிவு மித்தனையே யெத்தவம் செய்தார்க்கும்
அருள் முடிவதாழியான் பால்.

7. 52. ஒ. நிறமுயர் கோலமும் பேருருவு மிவையிவை யென்று
அறமுயர் ஞானச் சமயிகள் பேசிலு மங்கங் கெல்லாம்
உறவுயர் ஞானச் சுடர் விளக்காய் நின்ற தன்றி யொன்றும்
பெறமுயன் றாரில்லையால் எம் பெருமான் பெருமையையே. —நம்மாழ்வார்.

---

7. 52. देहात्म-बुद्धि-भूतानि । பா. பே.

यथा पुमान्न स्वाङ्गेषु शिरः पाण्यादिषु क्वचित् ।
पारक्य-बुद्धिं कुरुते एवं भूतेषु मत्परः ॥ ७.५३ ॥

त्रयाणा-मेकभावानां यो न पश्यति वै भिदाम् ।
सर्वभूतात्मनां ब्रह्मन् स शान्ति-मधिगच्छति ॥ ७.५४ ॥

मैत्रेय उवाच—

एवं भगवताऽऽदिष्टः प्रजापतिपति-र्हरिम् ।
अर्चित्वा क्रतुना स्वेन देवानुभयतोऽयजत् ॥ ७.५५ ॥

एवं दाक्षायणी हित्वा सती पूर्व-कलेवरम् ।
जज्ञे हिमवतः क्षेत्रे मेनायामिति शुश्रुम ॥ ७.५८ ॥

तमेव दयितं भूय आवृङ्क्ते पतिमंबिका ।
अनन्य-भावैक-गतिं शक्तिः सुप्तेव पूरुषम् ॥ ७.५९ ॥

---

7. 53. மனிதன் எங்ஙனம் தனது தலை கை முதலிய உறுப்புக்களைத் தன்னில் வேருகக் கருதுவதில்லையோ அங்ஙனமே என்னைப் பரனுகக் கண்டவன் ஜீவர்களை என்னில் வேருகக் கருதுவதில்லை.

7. 54. பிராம்மணரே! அனைத்துலகுக்கும் ஆத்மாவாயும் இயற்கையில் ஒன்ருகவும் உள்ள மும்மூர்த்திகளிடை எவன் வேற்றுமையைக் காண்பதில்லையோ அவனே சாந்தியை யடைவான்.

மைத்திரேயர் கூறியது—

7. 55. இங்ஙனம் பகவானுல் அறிவுறுத்தப்பட்ட தக்ஷர் பகவானுக்குப் பிரியமான கிரதுவால் அவரை ஆராதித்து அதன் அங்கமாகவும் தனிமுறையிலும் தேவர்களையும் பூஜித்தார்.

7. 58. ஸதீ தாக்ஷாயணீ இவ்வாறு முன்சரீரத்தைவிட்டு ஹிமவானுடைய பத்தினியான மேனுதேவியிடம் பிறந்தாள் என்று கேட்டிருக்கிறேம்.

7. 59. (ஸுஷுப்தியில்) லயமடைந்த சக்தி புருஷனைத் திரும்பவும் அடைவது போல் அம்பிகை அனன்னிய பக்தர்களின் ஒரே புகலிடமாய் விளங்கும் அந்தப் பரம சிவனையே மீண்டும் பர்த்தாவாக வரித்தாள்.

**இங்ஙனம் எட்டாவது இதழாகிய தக்ஷயஜ்ஞுக்கதை முற்றும்**

---

7.54. ஒ. ஏகம் ஸத் - விப்ரா பஹுதா வதந்தி । —ரிக்வேதம் 1. 194. 46.
ஒ. ராமேசுவரம் எனும் சொல்லிற்குப் பொருள் கூறுவதில் இந்த ஸமரஸ பாவனையை விளக்குவது வழக்கம். (1) ராமஸ்ய ஈச்வர : (2) ராம : ஈச்வர : யஸ்ய (3) ராமச் ச அஸௌ ஈச்வரச்ச.

7. 58. ஹிமவானிடம் உமா தேவி கூறியது :—
அஹம் வை யாசிதா தேவை: ஸம்ஸ்ம்ருதா கார்ய- கௌரவாத்।
விநிந்த்ய தக்ஷம் பிதரம் மஹேச்வர - விநிந்தகம் ॥
தர்மஸம்ஸ்தாபனர்த்தாய தவாராதன-காரணுத் ।
மேனு-தேஹாத் ஸமுத்பன்ன த்வாமேவ பிதரம் ச்ரிதா ॥ — கூர்ம புராணம்.

---

7. 53. पाण्यादिना ।
7. 55. देवान् भगवतोऽयजत् । பா. பே.

## उत्तानपाद-वंशः ॥ ९ ॥

**मैत्रेय उवाच—**

सनकाद्या नारदश्च ऋभु-र्हंसो-ऽरुणि-र्यतिः ।
नैते गृहान् ब्रह्मसुता ह्यावसन्नूर्ध्वरेतसः ॥ ८.१ ॥

प्रियव्रतोत्तानपादौ शतरूपापतेः सुतौ ।
वासुदेवस्य कलया रक्षायां जगतः स्थितौ ॥ ८.७ ॥

जाये उत्तानपादस्य सुनीतिः सुरुचि-स्तयोः ।
सुरुचिः प्रेयसी पत्यु-र्नेतरा यत्सुतो ध्रुवः ॥ ८.८ ॥

एकदा सुरुचेः पुत्र-मङ्क-मारोप्य लालयन् ।
उत्तमं नारुरुक्षन्तं ध्रुवं राजाभ्यनन्दत ॥ ८.९ ॥

तथा चिकीर्षमाणं तं सपत्न्या-स्तनयं ध्रुवम् ।
सुरुचिः शृण्वतो राज्ञः सेर्ष्य-माहातिगर्विता ॥ ८.१० ॥

---

## 9. உத்தானபாத வம்சம்

மைத்திரேயர் கூறியது—

8. 1. ஸநகாதியர், நாரதர், ரிபு, ஹம்ஸர், அருணி, யதி முதலிய பிரம்மபுத்திரர்கள் நைஷ்டிகப் பிரம்மசாரிகளாகவே இருந்தனர்; கிருஹஸ்தாசிரமத்தை நாடவில்லை.

8. 7. சதரூபையின் பதியான ஸ்வாயம்புவ முனிவரிடம் பிரியவிரதன், உத்தான பாதன் என்ற புத்திரர்கள் தோன்றி வாசுதேவருடைய அம்சமாக உலகைக் காப்பதில் ஈடுபட்டிருந்தனர்.

8. 8. உத்தானபாதருக்கு ஸுநீதி என்றும் ஸுருசி என்றும் இரண்டு மனைவிகள். அவர்களுள் ஸுருசி பதியின் பிரியத்துக்குரியவளா யிருந்தாள். துருவனைப் புத்திரனு யடைந்திருந்த மற்றவள் அங்ஙனமில்லை.

8. 9. ஒரு சமயம் அரசன் ஸுருசியின் புத்திரனை உத்தமனை மடியில்வைத்துக் கொஞ்சிக்கொண்டிருக்கும்போது, தானும் மடியில் ஏற விரும்பிய துருவனை ஏற்று மகிழ்விக்கவில்லை.

8. 10. அங்ஙனம் விரும்பியவனும் சக்களத்தியின் புதல்வனுமான துருவனைப் பொறுமையுடன் நோக்கி மிகுந்த கர்வத்துடன் ஸுருசியானவள் அரசன் காதில் விழும் படி பின்வருமாறு சொல்ல ஆரம்பித்தாள்.

---

8. 1. ह्यवसन्नूर्ध्वे । பா. பே.

न वत्स नृपते-र्धिष्ण्यं भवानारोढु-मर्हति ।
न गृहीतो मया यत्त्वं कुक्षावपि नृपात्मजः ॥ ८.११ ॥

तपसाऽऽराध्य पुरुषं तस्यैवानुग्रहेण मे ।
गर्भे त्वं साधयात्मानं यदीच्छसि नृपासनम् ॥ ८.१३ ॥

मैत्रेय उवाच—

मातुः सपत्न्याः स दुरुक्ति-विद्धः श्वसन् रुषा दण्डहतो यथाहिः ।
हित्वा मिषन्तं पितरं सन्नवाचं जगाम मातुः प्ररुदन् सकाशम् ॥ ८.१४ ॥

तं निःश्वसन्तं स्फुरिताधरोष्ठं सुनीति-रुत्संग उदूह्य बालम् ।
निशम्य तत्पौर-मुखान्निशान्तं सा विव्यथे यद्गदितं सपत्न्या ॥ ८.१५ ॥

दीर्घं श्वसन्ती वृजिनस्य पार-मपश्यती बालक-माह बाला ।
माऽमङ्गलं तात परेषु मंस्था भुङ्क्ते जनो यः परदुःखदस्तत् ॥ ८.१७ ॥

---

8. 11. "குழந்தாய்! நீ ராஜபுத்திரனுயினும் என் வயிற்றில் பிறக்காதலால் அரசனுடைய ஆஸனத்தில் ஏறுவதற்கு உரியவனுகமாட்டாய்.

8. 13. "அரசனுடைய ஆஸனத்தில் ஆசையிருக்குமேயாஞல் தவத்தால் புருஷோத்தமனை ஆராதித்து அவனுடைய அனுக்கிரகத்தால் என் கர்ப்பத்தில் தோன்றும்படியான வழியைத் தேடு."

மைத்திரேயர் கூறியது—

8. 14. சிற்றன்னையின் கொடுஞ்சொல்லால் பிளவுண்ட மனத்தினனுய் துருவன் கோபத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு தடியாலடியுண்ட பாம்புபோல், பேசாமல் பார்த்துக்கொண்டிருந்த தந்தையைவிட்டகன்று தாயின் அருகாமையில் வாய்விட்டமுது கொண்டு சென்றுன்.

8. 15. கீழுதடு துடிப்பவனும், பெருமூச்சு விடுபவனும் ஆன குழந்தையைத் தூக்கி மடியில்வைத்துக்கொண்டு ஸுநீதி அந்தப்புரத்து ஆட்கள் மூலம் சக்களத்தி சொன்னதையும் மற்றும் நிகழ்ந்ததையும் கேட்டு மிகுந்த துன்ப மடைந்தாள்.

8. 17. பேதை ஸுநீதி தன் துன்பத்துக்கு முடிவைக் காணுதவளாய் நெடிய பெருமூச்சுடன் புதல்வனிடம் கூறியதாவது: "அப்பா! பிறருக்குத் துன்பம் விளைக்கும் மக்கள் அதின் பயனை யனுபவிப்பர். நீ பிறருக்கு அமங்களத்தை மனதாலும் எண்ணுதே.

---

8. 13. यदीच्छासि नृपासने ।
8. 15. सुतं निजोत्सङ्ग-मुदूह्य । பா. பே.

सत्यं सुरुच्याभिहितं भवान्मे यद्-दुर्भगाया उदरे गृहीतः।
स्तन्येन वृद्धश्च विलज्जते यां भार्येति वा वोढु-मिडस्पति-र्माम् ॥ ८.१८ ॥

आतिष्ठ तत्तात विमत्सर-स्त्व-मुक्तं समात्रापि यदव्यलीकम्।
आराधया-धोक्षज-पादपद्मं यदीच्छसेऽध्यासन-मुत्तमो यथा ॥ ८.१९ ॥

मैत्रेय उवाच—
एवं संजल्पितं मातु-राकर्ण्यार्थागमं वचः।
संनियम्यात्मनात्मानं निश्चक्राम पितुः पुरात् ॥ ८.२४ ॥

नारद-स्तदुपाकर्ण्य ज्ञात्वा तस्य चिकीर्षितम्।
स्पृष्ट्वा मूर्ध-न्यघघ्नेन पाणिना प्राह विस्मितः ॥ ८.२५ ॥

नारद उवाच—
नाधुना-प्यवमानं ते सम्मानं वापि पुत्रक।
लक्षयामः कुमारस्य सक्तस्य क्रीडनादिषु ॥ ८.२७ ॥

---

8. 18. "ஸுருசி கூறியது உண்மைதான். துர்ப்பாக்கியவதியான என் வயிற்றில் பிறந்து என் பாலை உண்டல்லவா நீ வளர்ந்தாய். என்னை மனைவியென்றோ பணியாள் என்றோ கூட ஏற்றுக்கொள்ள அரசன் வெட்கப்படுகிறானல்லவா?

8. 19. "அப்பா! மாற்றாந்தாய் கூறியதையும் கபடமின்றிப் பொறாமையின்றி உள்ளபடி ஏற்று அதன்படி நில். உத்தமனைப்போல் அரசனுடைய ஆஸனத்தை விரும்பினால் நாராயணனுடைய திருவடிகளைப் பூஜிப்பாயாக."

மைத்திரேயர் கூறியது—

8. 24. விரும்பிய பொருளை யளிக்கவல்ல தாயின் உரையைக் கேட்டு தன்னைத் தானே அடக்கிகொண்டு தந்தையின் தலைநகரத்திலிருந்து துருவன் வெளிக்கிளம்பினான்.

8. 25. நாரதர் இதைக் கேள்வியுற்று அவன் விருப்பத்தையும் உணர்ந்து ஆச்சரியமடைந்தவராய் (அவனை எதிர்கொண்டு வந்து) எல்லாப் பாவத்தையும் போக்கும் தன் கையினால் அவன் சிரத்தைத் தொட்டுக் கூறலானார்.

நாரதர் கூறியது—

8. 27. மகனே! விளையாட்டுப் பொருள்களில் பற்றுள்ள சிறுவனாகிய உனக்கு இப்பருவத்தில் ஸம்மானத்தையோ அவமானத்தையோ நாங்கள் காணவில்லை.

---

8. 18. ஸ்திரீகளுக்கு பர்த்தாவின் அன்பு ஸௌபாக்கியம் எனப்படுவது; அது இல்லாததே தௌர்ப்பாக்கியம்.

8. 25. உபேயமான பகவான் உபாயத்தையுங் காட்ட நாரதராக வந்தார். நாம் பகவானை நோக்கி ஒரு அடி எடுத்துவைத்தால். அவர் நம்மை நோக்கிப் பத்தடி வருவார்.

---

பா. பே.

8. 24. संकल्पितं।

अथ मात्रोपदिष्टेन योगेनावरुरुत्ससि ।
यत्प्रसादं स वै पुंसां दुराराध्यो मतो मम ॥ ८.३० ॥

मुनयः पदवीं यस्य निःसंगेनोरुजन्मभिः ।
न विदु-र्मृगयन्तोऽपि तीव्र-योग-समाधिना ॥ ८.३१ ॥

अतो निवर्तता-मेष निर्बन्ध-स्तव निष्फलः ।
यतिष्यति भवान् काले श्रेयसां समुपस्थिते ॥ ८.३२ ॥

ध्रुव उवाच—

अथापि मेऽविनीतस्य क्षात्रं घोर-मुपेयुषः ।
सुरुच्या दुर्वचो-बाणैर्न भिन्ने श्रयते हृदि ॥ ८.३६ ॥

पदं त्रिभुवनोत्कृष्टं जिगीषोः साधु वर्त्म मे ।
ब्रूह्यस्मत् पितृभि-र्ब्रह्म-न्नन्यै-रप्यनधिष्ठितम् ॥ ८.३७ ॥

नारद उवाच—

धर्मार्थ-काम-मोक्षाख्यं य इच्छे-च्छ्रेय आत्मनः ।
एकमेव हरे-स्तत्र कारणं पादसेवनम् ॥ ८.४१ ॥

---

8. 30-31. முனிவர்கள் கடுமையான யோக ஸமாதியால் பற்றையொழித்துப் பல பிறவிகளில் தேடியும் எவருடைய பதவியை யறிய முடிவதில்லையோ அவருடைய அருளை நீ தாயின் உபதேசத்தால் யோகம் செய்து அடைந்துவிடலாமென்று முற்பட்டிருக்கிறாய். அவரை ஆராதித்தல் வெகு கடினம் என்பது என் அபிப்பிராயம்.

8. 32. ஆகையால் நீ இதைவிட்டுத் திரும்பவேண்டும். உன்னுடைய இப் பிடிவாதம் பயனற்றது. மோக்ஷ தருமத்தைப் பற்றுதற்குரிய காலம் வந்தபின் இதில் நீ முயற்சிக்கலாம். (இப்போது வேண்டாம்.)

துருவன் கூறியது—

8. 36. ரஜோகுணம் மிகுந்த க்ஷத்திரியப் பிறவியடைந்து அடங்காத சுபாவமுடைய என் மனது ஸுருசியின் கொடுஞ்சொல்லாகிய பாணங்களால் பிளவுபட்டிருப்பதால் (நீங்கள் கூறுவது) உண்மை எனினும் பிடிபடவில்லை.

8. 37. ஆகையால் பிரம்மநிஷ்டரே! என் முன்னோர்களாலும் மற்றோர்களாலும் அடையப்படாததும் மூவ்வுலகுக்கும் மேலானதுமான பதவியை அடைய விரும்பும் எனக்கு உபதேசித் தருள்வீர்.

நாரதர் கூறியது—

8. 41. அறம் பொருள் இன்பம் வீடு என்ற உயர்நலத்தை எவன் தனக்கு விரும்புகின்றானோ அவன் அதை யடையவதற்கு ஒரே வழி ஹரியின் திருவடி சேவையேயாம்.

---

8. 32. உபதேசம் பெறுவதற்கு நிச்சயபுத்தி இருக்கிறதா என்று நாரதர் சோதிக்கலானார்.

8. 41. ஒ. தர்மார்த்தீ ப்ராப்னுயாத் தர்ம - மர்த்தார்த்தீ சார்த்த-மாப்னுயாத்| காமானவாப்னுயாத் காமீ ப்ரஜார்த்தீ சாப்னுயாத் ப்ரஜாம்||

—வி. ஸ.

तत्तात गच्छ भद्रं ते यमुनाया-स्तटं शुचि ।
पुण्यं मधुवनं यत्र सान्निध्यं नित्यदा हरेः ॥ ८.४२ ॥

स्नात्वानुसवनं तस्मिन् कालिन्द्याः सलिले शिवे ।
कृत्वोचितानि निवस-न्नात्मनः कल्पितासनः ॥ ८.४३ ॥

प्राणायामेन त्रिवृता प्राणेन्द्रिय-मनोमलम् ।
शनै-र्व्युदस्याभिध्यायेन्-मनसा गुरुणा गुरुम् ॥ ८.४४ ॥

प्रसादाभिमुखं शश्वत् प्रसन्नवदनेक्षणम् ।
सुनासं सुभ्रुवं चारुकपोलं सुरसुन्दरम् ॥ ८.४५ ॥

तरुणं रमणीयांग-मरुणोष्ठेक्षणाधरम् ।
प्रणताश्रयणं नृम्णं शरण्यं करुणार्णवम् ॥ ८.४६ ॥

श्रीवत्सांकं घनश्यामं पुरुषं वनमालिनम् ।
शङ्ख-चक्र-गदा-पद्मै-रभिव्यक्त-चतुर्भुजम् ॥ ८.४७ ॥

---

8. 42. ஆகையால், அப்பனே! புனிதமான யமுனைக்கரைக்குச் செல். உனக்கு நன்மை உண்டாகும். அங்கு புண்ணியமான மதுவனம் இருக்கிறது. ஹரியின் ஸாந்நித்தியம் எப்போதும் அங்குளது.

8. 43-44. மங்களமான அந்த யமுனை நீரில் முப்போதும் நீராடி உரிய கருமங்களைச் செய்துகொண்டு அங்கு வசித்து, சரீரத்துக்குரிய ஆஸனத்தை அமைத்துக் கொண்டு, மூன்று விதமான பிராணாயாமத்தால், பிராணன் இந்திரியங்கள் மனது இவற்றிலுள்ள அழுக்கை மெதுவாக நீக்கி வலிமைபெற்ற மனத்தால் குருவான ஸ்ரீஹரியைத் தியானம் செய்யவேண்டும்.

8. 45. எப்போதும் அருள்புரியக் காத்திருப்பவரும், மகிழ்ச்சி பொங்கும் முகமும் பார்வையும் உடையவரும், அழகிய மூக்கும், அழகிய புருவமும், அழகிய கன்னங்களுமுடையவரும், தேவர்களுள் அழகிற் சிறந்தவரும்;

8. 46. யௌவனத்தால் ரமணீயமான அங்கங்களையுடையவரும், சிவந்த கண்களும் உதடுகளும் உடையவரும், வணங்கியவருக்குச் சாருமிடமும், இன்ப நிலயமும், புகலும், கருணைக்கடலும்.

8. 47. மேகசியாமளவர்ணரும், நான்கு கைகளுடன் கூடிய புருஷ வடிவினரும், ஸ்ரீவத்ஸம், வனமாலை, சங்கு, சக்கரம், கதை, பத்மம், இவைகளால் பிரகாசிப்பவரும்;

---

8. 44. **மலம்** —சாஞ்சல்யம்; **குருணா**-தீரேண; **குரும்**—ஸ்ரீஹரிம்॥

ஒ. மார்வ மென்ப தோர் கோயிலமைத்து
மாதவ னென்னுந் தெய்வத்தை நாட்டி
ஆர்வ மென்பதோர் பூவிட வல்லார்க்கு
அரவ தண்டத்திலுய்யலுமாமே. —பெரியாழ்வார்.

8. 47. கௌஸ்துபம் ஆத்ம தத்துவம், ஸ்ரீ வத்ஸம் பிரகிருதி, கதை புத்தி, சங்கம் சிருஷ்டி தத்துவம், சார்ங்கம் ஞானேந்திரியம், சக்ரம் மனம், வைஜயந்தி மாலை பஞ்சபூதம், கத்தி ஞானம்,

ஒ. அஸ்த்ர-பூஷண-ஸம்ஸ்தான ஸ்வரூபம் ரூப வர்ஜிதः।
பிபர்த்தி மாயா-ரூபோऽஸௌ ச்ரேயஸே ப்ராணினும் ஹரிः॥
—விஷ்ணு புராணம் 1. 22. 76.

---

8. 45. सम्यक्प्रसन्न । பா. பே.

किरीटिनं कुण्डलिनं केयूरवलयान्वितम् ।
कौस्तुभाभरण-ग्रीवं पीतकौशेय-वाससम् ॥ ८.४८ ॥

कांचीकलाप-पर्यस्तं लसत्-कांचन-नूपुरम् ।
दर्शनीयतमं शान्तं मनो-नयन-वर्धनम् ॥ ८.४९ ॥

पद्भ्यां नखमणि-श्रेण्या विलसद्भ्यां समर्चताम् ।
हृत्पद्म-कर्णिका-धिष्ण्य-माक्रम्यात्म-न्यवस्थितम् ॥ ८.५० ॥

स्मयमान-मभिध्यायेत् सानुरागावलोकनम् ।
नियतेनैकभूतेन मनसा वरदर्षभम् ॥ ८.५१ ॥

एवं भगवतो रूपं सुभद्रं ध्यायतो मनः ।
निर्वृत्या परया तूर्णं संपन्नं न निवर्तते ॥ ८.५२ ॥

---

8. 48. கிரீடம், குண்டலம், தோள்வளை, கங்கணம் முதலிய ஆபரணங்களை யணிந்தவரும், கௌஸ்துப மணிக்கு ஆபரணம்போன்ற கழுத்துடையவரும், மஞ்சட் பட்டாடை யணிந்தவரும் ;

8. 49. அரைநாணும் பொன்னாலான பாதஸரமும் அணிந்தவரும், கண்கொள்ளாக் காட்சி யளிப்பவரும், சாந்த ஸ்வரூபரும், மனதுக்கும் கண்ணுக்கும் இனியவரும் ;

8. 50. இரத்தின வரிசைபோல் பிரகாசிக்கின்ற நகங்களுடன் கூடிய திருவடிகளால் பக்தர்களின் இருதய கமலக் கர்ணிகையாகிற வீட்டினுள் புகுந்து அவர்களிடம் நித்தியவாஸம் செய்பவரும் ;

8. 51. புன்சிரிப்பும் அருள் நிறைந்த பார்வையும் உடையவரும் வரன் தருபவர்களில் சிறந்தவரும் ஆன அவரை நன்கு அடக்கப்பட்ட ஏகாக்கிரசித்தத்துடன் தியானம் செய்யவேண்டும்.

8. 52. இங்ஙனம் பரம மங்களமான பகவானுடைய ரூபத்தைத் தியானிக்கும் மனது விரைவில் பரமானந்தத்தால் நிறைந்து அதினின்று நழுவாது.

---

8. 52. **ந நிவர்த்ததே —**

ஒ. நீரிருக்க மடமங்கைமீர் கிளிகள் தாமிருக்க மதுகர மெலா
நிறைந்திருக்க மடவன்ன முன்னம் நிரையாயிருக்க வுரையாமல் யான்
ஆரிருக் கிலு மென்னெஞ்ச மல்லதொரு வஞ்ச மற்ற துணை யில்லையென்
றுதரத்தினொடு தூது விட்டபிழை யாரிடத்துரை செய்தாறுவேன்
சீரிருக்குமறை முடிவு தேடரிய திருவரங்கரை வணங்கியே
திருத்துழாய் தரில் விரும்பியே கொடு திரும்பியே வருதலின்றியே
வாரிருக்கு முலை மலர் மடந்தை யுறை மார்பிலே பெரிய தோளிலே
மயங்கியின்புற முயங்கி யென்னையு மறந்து தன்னையு மறந்ததே.

—பிள்ளைப் பெருமாளையங்கார்: திருவரங்கக் கலம்பகம்.

தோழிகளையும் கிளிகளையும் தேன் வண்டையும் அன்னப் பறவைகளையும் பகவானிடம் தூதனுப்பாமல் தன் மனதைத் தூதாக அனுப்ப அது அவனிடம் மயங்கித் திரும்பி வரவே இல்லை என்கிறார் கவி.

---

8. 50. **समर्चितम् ।** பா. பே.

जप्यश्च परमो गुह्यः श्रूयतां मे नृपात्मज।
यं सप्तरात्रं प्रपठन् पुमान् पश्यति खेचरान् ॥ ८.५३ ॥

"ओं नमो भगवते वासुदेवाय" ॥

मन्त्रेणानेन देवस्य कुर्याद् द्रव्यमयीं बुधः।
सपर्यां विविधैर्द्रव्यै-र्देशकाल-विभागवित् ॥ ८.५४ ॥

इत्युक्तस्तं परिक्रम्य प्रणम्य च नृपार्भकः।
ययौ मधुवनं पुण्यं हरे-श्चरणचर्चितम् ॥ ८.६२ ॥

तत्राभिषिक्तः प्रयत-स्तामुपोष्य विभावरीम्।
समाहितः पर्यचर-दृष्यादेशेन पूरुषम् ॥ ८.७१ ॥

त्रिरात्रान्ते त्रिरात्रान्ते कपित्थ-बदराशनः।
आत्मवृत्त्यनुसारेण मासं निन्येऽर्चयन् हरिम् ॥ ८.७२ ॥

द्वितीयं च तथा मासं षष्ठे षष्ठेऽर्भको दिने।
तृणपर्णादिभिः शीर्णैः कृतान्नोऽभ्यर्चयद्धरिम् ॥ ८.७३ ॥

---

8. 53. அரசகுமாரா! எந்த மந்திரத்தை ஏழுநாள் தொடர்ந்து ஜபம் செய்தால் ஒரு புருஷன் தேவர்களை நேரில் காண்பானோ, அங்ஙனம் சிறந்ததும் இரகசியமானதும் ஜபித்தற் குரியதுமான மந்திரத்தை என்னிடம் கேட்பாய்:

அது "ஓம் நமோ பகவதே வாஸுதேவாய" என்பதாம்.

8. 54. தேசகால விபாகங்களை யறிந்தவன், பலவிதமான திரவியங்களைக்கொண்டு பகவான் வாசுதேவனுக்கு திரவியமயமான பூஜையை இம்மந்திரத்தால் செய்யவேண்டும்.

8. 62. அரசனின் இளவல் இங்ஙனம் உபதேசிக்கப்பெற்று அவரை வலம் வந்து நமஸ்கரித்துவிட்டு, ஹரியின் அடிச் சுவடுகளா லலங்கரிக்கப்பெற்ற புண்ணிய பூமியான மதுவனம் சென்றான்.

8. 71. அங்கு வந்ததும் நீராடி இரவு உபவாசமிருந்து மனதையடக்கி, ரிஷியின் உபதேசப்படி பரமபுருஷனை ஆராதித்தான்.

8. 72. பின்பு மூன்று நாட்களுக் கொருமுறை விளாம்பழமும் இலந்தைப் பழமும் மட்டும் உடல் நிலைக்குற்றவாறு ஆகாரமாகக்கொண்டு ஒரு மாதம் ஹரியை ஆராதித்தான்.

8. 73. ஆறு நாட்களுக்கொருமுறை உதிர்ந்த இலைகளையும் புல்லையும் உணவாய்க் கொண்டு இரண்டாவது மாதத்தைக் கழித்து, குழந்தை ஹரியைப் பூஜித்தான்.

---

8. 53. பனிரண்டெழுத்து மந்திரத்தின் விரிவுரையே பாகவதத்தின் பன்னிரண்டு ஸ்கந்தங்களும்,

8. 73. ஓ. கனியேனும் வறிய செங்காயேனும் உதிர் சருகு கந்த மூலங்களேனும்
கனல்வாதை வந்தெய் தினள்ளிப்புசித்து நான் கண்மூடி மௌனியாகி
தனியேயிருப்பதற் கெண்ணினேன் எண்ணமிது சாமி நீ அறியாததோ ?
—தாயுமானவர்.

பா. பே.

---

8. 73. पर्णादिभि-र्जीर्णैः।

तृतीयं चानयन्मासं नवमे नवमेऽहनि ।
अब्भक्ष उत्तमश्लोक-मुपाधावत् समाधिना ॥ ८.७४ ॥

चतुर्थ-मपि वै मासं द्वादशे द्वादशेऽहनि ।
वायुभक्षो जितश्वासो ध्यायन् देव-मधारयत् ॥ ८.७५ ॥

पंचमे मास्यनुप्राप्ते जितश्वासो नृपात्मजः ।
ध्यायन् ब्रह्म पदैकेन तस्थौ स्थाणु-रिवाचलः ॥ ८.७६ ॥

सर्वतो मन आकृष्य हृदि भूतेन्द्रियाशयम् ।
ध्यायन् भगवतो रूपं नाद्राक्षीत् कंचनापरम् ॥ ८.७७ ॥

स वै धिया योगविपाक-तीव्रया हृत्पद्मकोशे स्फुरितं तडित्प्रभम् ।
तिरोहितं सहसैवोपलक्ष्य बहिःस्थितं तदवस्थं ददर्श ॥ ९.२ ॥

---

8. 74. ஒன்பதுநாட்களுக் கொருமுறை நீர்மட்டும் அருந்தி மூன்ருவது மாதத்தைக் கழித்து உத்தம சுலோகனை பகவானை ஸமாதியில் நின்று வழிபட்டான்.

8. 75. பனிரண்டு நாட்களுக் கொருமுறை காற்றை உணவாகக்கொண்டு நான்காவது மாதத்தை மூச்சை யடக்கிப் பகவத்தியானத்தில் கழித்தான்.

8. 76. ஐந்தாவது மாதம் பிறந்ததும், அரசிளங்குமரன் மூச்சை முழுதுமடக்கிப் பிரம்மத் தியானத்தி லாழ்ந்து, கட்டையைப்போல் அசைவற்று ஒற்றைக்காலில் நின்ருன்.

8. 77. பஞ்சபூதங்களுக்கும் இந்திரியங்களுக்கும் வசப்பட்ட மனத்தை எல்லா வற்றினின்றும் இழுத்து பகவத்ரூபத்தையே தியானித்துக்கொண்டு, வேறு எதையும் காணவில்லை.

9. 2. அவன் தீவிரமான யோகத்தால் பக்குவமடைந்த புத்தியால் இருதயகமலத்தில் மின்னல்கொடிபோல் பிரகாசித்துக்கொண்டிருக்கக் கண்ட உருவம் திடீரென மறையக் கண்டு (கண் விழித்து வெளியே நோக்க) உள்ளே கண்ட அதே உருவம் வெளியே நிற்கக் கண்டான்.

---

9, 2. பகவான் எதிரில் காத்துக் கொண்டிருந்தும் துருவன் கண்ணைத் திறக்காததால், அவன் தன்னைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையால் பகவான் இருதயத்திலிருந்த ரூபத்தை மறைத்தார்.

तद्दर्शनेनागत-साध्वसः क्षिता-ववन्दताङ्गं विनमय्य दण्डवत् ।
दृग्भ्यां प्रपश्यन् प्रपिब-न्निवार्भक-श्चुंबन्निवास्येन भुजैरिवाश्लिषन् ॥ ९.३ ॥
स तद्विवक्षन्त-मतद्विदं हरि-र्ज्ञात्वास्य सर्वस्य च हृद्यवस्थितः ।
कृतांजलिं ब्रह्ममयेन कंबुना पस्पर्श बालं कृपया कपोले ॥ ९.४ ॥

ध्रुव उवाच—

योऽन्तः प्रविश्य मम वाच-मिमां प्रसुप्तां
संजीवय-त्यखिल-शक्तिधरः स्वधाम्ना ।
अन्यांश्च हस्त-चरण-श्रवण-त्वगादीन्
प्राणान्नमो भगवते पुरुषाय तुभ्यम् ॥ ९.६ ॥

---

9. 3. அந்தக் காட்சியினுல் பரபரப்படைந்த அப்பாலன் கண்களால் அவ்வுருவைப் பருகுபவன்போல் பார்த்துக்கொண்டும், முகத்தால் முத்தமிடுபவன்போலும், புஜங்களால் தழுவிக்கொள்பவன்போலும் (அங்கங்கள் சலிக்க) உடலைக் கழியைப்போல் பூமியில் வீழ்த்தி வணங்கினுன்.

9. 4. துருவனுடைய உள்ளத்திலும் எல்லோருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கும் ஹரியானவர் துருவன் தன்னைத் துதிக்க விரும்புவதையும் அதன் வகை யறியாமலிருப்பதையும் உணர்ந்து, கைகூப்பி நிற்கும் பாலனைத் தன் கையிலுள்ள வேதமயமான சங்கத்தினுல் கருணையுடன் கன்னத்தில் தொட்டார்.

துருவன் கூறியது—

9. 6. எல்லாச் சக்திகளையும் தரிக்கின்ற எந்த பகவான் தனது மகிமையால் என்னுள் புகுந்து உறங்கிக்கொண்டிருந்த இந்த எனது வாக்கையும், மற்றும் கை, கால், காது, மெய் முதலிய இந்திரியங்களையும் பிராணசக்திகளையும் உயிர்ப்பிக்கின்ருரோ அந்தப் பகவானும் பரமபுருஷனுமான உமக்கு நமஸ்காரம்.

---

9. 3. ஒ. உடல் குழைய என் பெலா நெக்குருக
　　விழிநீர்களூற்றென வெதும்பியூற்ற
ஊசி காந்தத்தினைக் கண்டணுகல் போலவே
　　ஓருறவு முன்னியுன்னிப்
பட படென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
　　பாடி யாடிக் குதித்துப்
பனி மதி முகத்திலே நிலவனைய புன்னகை
　　பரப்பி யார்த்தார்த் தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித்துக் கூப்பி
　　வானே அவா னினின்ப
மழையே மழைத் தாரை வெள்ளமே
　　நீடூழி வாழி யென வாழ்த்தி யேத்தும்.　　— தாயுமானவர்.

9. 6. ஒ. (கேனேஷிதம் பததி ப்ரேஷிதம் மன: கேன ப்ராண: ப்ரதம: ப்ரைதி யுக்த: | கேனேஷிதாம் வாசமிமாம் வதந்தி சக்ஷு: ச்ரோத்ரம் க உ தேவோ யுனக்தி|) எவரால் விரும்பப் பட்டும் ஏவப்பட்டும் முக்கியப் பிராணன் தன் தொழிலில் பிரவேசிக்கின்றது? எவரால் விரும்பப் பட்டு ஜனங்கள் இம்மாதிரி வார்த்தைகளைப் பேசுகிருர்கள்? எந்த தெய்வம் கண்ணையும் காதையும் தத்தம் தொழிலில் ஏவுகிறது?　　—கேன. உப. 1. 1.

ஒ. மானிட சரீரம் ஒரு பானையைப் போன்றது. மனம் புத்தி இந்திரியங்கள் அப்பானையில் இடப்பட்ட நீர், காய்கறி, அரிசி, முதலியவற்றிற்குச் சமானம். அப்பானையை அடுப்பின் மீது வைத்தால் நெருப்பு பானையிலுள்ளவற்றை வேகச் செய்யும். ஆனுல் வேக வைக்கும் உஷ்ணம் பானையினுடைய தன்று. நீர், காய்கறி, அரிசி இவற்றினுடையது மன்று. அதுபோல சரீரத்தை இயக்குவிக்கும் சக்தி இந்திரியங்க ளுடையதன்று, பரமாத்மாவினுடையதே.　　—ரா. கி.

त्वं नित्यमुक्त-परिशुद्ध-विबुद्ध आत्मा
कूटस्थ आदिपुरुषो भगवां-स्त्र्यधीशः ।
यद्बुद्ध्यवस्थिति-मखण्डितया स्वदृष्ट्या
द्रष्टा स्थिता-वधिमखो व्यतिरिक्त आस्से ॥ ९.१५ ॥

सत्याशिषो हि भगवं-स्तव पादपद्म-
माशी-स्तथानुभजतः पुरुषार्थमूर्तेः ।
अप्येव-मार्य भगवान् परिपाति दीनान्
उस्रेव वत्सक-मनुग्रह-कातरोऽस्मान् ॥ ९.१७ ॥

श्रीभगवानुवाच—

वेदाहं ते व्यवसितं हृदि राजन्य-बालक ।
तत्प्रयच्छामि भद्रं ते दुरापमपि सुव्रत ॥ ९.१९ ॥

इष्ट्वा मां यज्ञहृदयं यज्ञैः पुष्कल-दक्षिणैः ।
भुक्त्वा चेहाशिषः सत्या अन्ते मां संस्मरिष्यसि ॥ ९.२४ ॥

---

9. 15. பிரபுவே! நீர் என்றும் பற்றற்றவராகவும், பரிசுத்தராகவும், ஞானஸ்வரூபியாகவும், ஆத்மாவாகவும் கூடஸ்தராகவும், ஆதிபுருஷராகவும், பகவானுகவும் முக்குணங்களுக்கும் ஈசுவரனுகவும் உள்ளவர். உம்முடைய அகண்டமான சித்சக்தியினுல் புத்தியின் வெவ்வேறு நிலேகளின் ஸாக்ஷியாக விளங்குகிறீர். உலகின் பாலனத்திற்காக அதியஜ்ஞரூபியான விஷ்ணுவாக விளங்குகிறீர்.

9. 17. பகவானே! பரமானந்த மூர்த்தியான உமது பாதகமலங்களேயே விரும்பி எவர்கள் வழிபடுகின்றுர்களோ அவர்கள் விரும்புவதும் அடைவதும் அழியாத மோக்ஷ நலன் ஒன்றே எனினும் ஐயனே! பகவானுன நீர் தீனர்களான எங்களேயும் அப்போதீன்ற கன்றுக்குத்தாய்ப் பசு இரங்குவதுபோல் கருணே சுரந்து பரிபாலிக்கின்றீர்.

ஸ்ரீ பகவான் கூறியது—

9. 19. திடவிரதமுள்ள அரசகுமாரா! உனது இருதயத்திலுள்ள விருப்பத்தை நான் அறிவேன். அடைவதற் கரிதாயினும் அந்த உயர்நலத்தை உனக்கு அளிக்கிறேன்.

9. 24. யஜ்ஞத்தை இருதயமாக உடைய என்னே தக்ஷிணே மிகுந்த யஜ்ஞங்களால் பூஜித்து இங்கு உண்மையாக விரும்பிய போகங்களே யனுபவித்து முடிவில் என்னே நினேப்பாய்.

---

9. 15. **வ்யதிரிக்த:**—நீர் ஜீவனே விட **வி**லக்ஷணராகிறீர். த்வந்து நித்யமுக்த: ஜீவஸ்து த்வத்ப்ரஸா**தா**ன் முச்யதே; த்வம் பரி**சுத்த:** ஸ து மலின:, த்வம் விசு**த்த:** ஸர்வஜ்ஞ: ஸ து கிஞ்சிஜ்ஞ:, த்வம் **ஆத்**மா ஸ து ஜட:, த்வம் கூடஸ்த: ஸ து விகாரீ, த்வம் **ஆதி**புருஷ: ஸ து **ஆதி**மான், த்வம் **பக**வான் ஸ து **பக**ஹீன:, த்வம் த்ரயாணும் **குணு**ணுமதீச; ஸ து பரதந்த்ர:। —ஸ்ரீ.

9. 17. **புருஷார்த்த-மூர்த்தே:**—புருஷார்த்த: பரமானந்த: ஸ ஏவ மூர்த்திர் யஸ்ய। **காதர:**—பரவச:। **உஸ்ரேவ**—நவப்ரஸூதா தேனுரிவ

ஒ, **ப**தரக்ஷிணி வத்ஸலா நிகாமம் ரகுவீரஸ்ய **ப**தாம்**பு**ஜா**த**பி **த்வ**ம்। **ய**தஸௌ **ப**ரதஸ் **த்வ**யாம்**ச**வத்வாந் ந புனஸ்-தா**த்**ருச-மன்வ**பூத்**-வியோகம்॥
—வேதாந்த தேசிகர்: பாதுகா ஸஹஸ்ரம்.

---

9. 17. अप्येवमाद्य । वाग्रेव । பா. பே.

ततो गन्तासि मत्स्थानं सर्वलोक-नमस्कृतम् ।
उपरिष्टा-दृषिभ्य-स्त्वं यतो नावर्तते गतः ॥ ९.२५ ॥

मैत्रेय उवाच—

सोऽपि संकल्पजं विष्णोः पादसेवोपसादितम् ।
प्राप्य संकल्प-निर्वाणं नातिप्रीतोऽभ्यगात्पुरम् ॥ ९.२७ ॥

आकर्ण्यात्मज-मायान्तं संपरेत्य यथाऽऽगतम् ।
निश्चक्राम पुराच्चूर्ण-मात्मजाभीक्षणोत्सुकः ॥ ९.४० ॥

परिरेभेऽङ्गजं दोर्भ्यां दीर्घोत्कण्ठ-मनाः श्वसन् ।
विष्वक्-सेनांघ्रि-संस्पर्श- हताशेषाघ-बन्धनम् ॥ ९.४३ ॥

अभिवन्द्य पितुः पादा-वाशीर्भि-श्चाभिमन्त्रितः ।
ननाम मातरौ शीर्ष्णा सत्कृतः सज्जनाग्रणीः ॥ ९.४५ ॥

सुरुचि-स्तं समुत्थाप्य पादावनत-मर्भकम् ।
परिष्वज्याह जीवेति बाष्प-गद्गदया गिरा ॥ ९.४६ ॥

---

9. 25. பின்பு எல்லா உலகங்களும் போற்றுவதும், ரிஷிகளின் ஸ்தானத்துக்கும் உயர்ந்ததும் ஆகிய எனது ஸ்தானத்தை அடைவாய். அங்கிருந்து திரும்பிவருதல் இல்லை.

மைத்திரேயர் கூறியது—

9. 27. விஷ்ணுவின் திருவடிசேவையால் ஆசைகளற்ற பரமானந்த நிலை கிட்டியும் ஸங்கல்பத்தால் ஏற்பட்ட ஆசையின் பூர்த்தியை ஏற்றுக்கொண்டு துருவன் அதை வெகுவாய் விரும்பாதவன்போல் நகரத்துக்குத் திரும்பினன்.

9. 40. இறந்தவன் திரும்பிவந்தாற்போல் குமாரன் திரும்பிவரும் செய்தி கேட்டு அவனைக்காண ஆவல்கொண்டு அரசன் நகரத்திலிருந்து விரைவாகக் கிளம்பினன்.

9. 43. பகவானுடைய பாதத்தைத் தொட்டுப் பாவத்தையும் பந்தத்தையும் அறவே ஒழித்த புத்திரனைப் பேராவலுடனும் பெருமூச்சுடனும் புயங்களால் இறுகத் தழுவிக்கொண்டான்.

9. 45. ஸாதுக்களிற் சிறந்த துருவன் தந்தையின் பாதங்களில் வணங்கி அவருடைய ஆசிகளையும் ஆதரவையும் பெற்றுத் தாய்மார்களைத் தலையால் வணங்கினன்.

9. 46. பாதத்தில் வணங்கிய பாலகனை ஸுருசி கைகளாலெடுத்து அணைத்துக் கொண்டு கண்களில் நீர் ததும்ப தழுதழுத்த குரலில் 'சிரஞ்ஜீவியாக இரு' என்று வாழ்த்தினள்.

---

9. 27. **ஸங்கல்ப நிர்வாணம்**—ஸங்கல்பஸ்ய ஸமாப்தி:। ஆதியில் சாந்தி யிருந்திருந்தால் முக்தி கிடைத்திருக்கும். ஸங்கல்ப மிருந்ததால் இப்படி யாயிற்றென்று மனக் குறையுடன் திரும்பினர்.

---

9. 25. **नावर्तते यतिः ।**

9. 45. **अभिवाद्य ।**

பா. பே.

त्वं नित्यमुक्त-परिशुद्ध-विबुद्ध आत्मा
कूटस्थ आदिपुरुषो भगवां-स्त्र्यधीशः ।
यद्बुद्ध्यवस्थिति-मखण्डितया स्वदृष्ट्या
द्रष्टा स्थिता-वधिमखो व्यतिरिक्त आस्से ॥ ९.१५ ॥

सत्याशिषो हि भगवं-स्तव पादपद्म-
माशी-स्तथानुभजतः पुरुषार्थमूर्तेः ।
अप्येव-मार्य भगवान् परिपाति दीनान्
उस्रेव वत्सक-मनुग्रह-कातरोऽस्मान् ॥ ९.१७ ॥

श्रीभगवानुवाच—
वेदाहं ते व्यवसितं हृदि राजन्य-बालक ।
तत्प्रयच्छामि भद्रं ते दुरापमपि सुव्रत ॥ ९.१९ ॥

इष्ट्वा मां यज्ञहृदयं यज्ञैः पुष्कल-दक्षिणैः ।
भुक्त्वा चेहाशिषः सत्या अन्ते मां संस्मरिष्यसि ॥ ९.२४ ॥

---

9. 15. பிரபுவே! நீர் என்றும் பற்றற்றவராகவும், பரிசுத்தராகவும், ஞானஸ்வரூபி யாகவும், ஆத்மாவாகவும் கூடஸ்தராகவும், ஆதிபுருஷராகவும், பகவானுகவும் முக்குணங்களுக்கும் ஈசுவரனுகவும் உள்ளவர். உம்முடைய அகண்டமான சித்சக்தியி ஞல் புத்தியின் வெவ்வேறு நிலைகளின் ஸாக்ஷியாக விளங்குகிறீர். உலகின் பாலனத்திற் காக அதியஜ்ஞரூபியான விஷ்ணுவாக விளங்குகிறீர்.

9. 17. பகவானே! பரமானந்த மூர்த்தியான உமது பாதகமலங்களையே விரும்பி எவர்கள் வழிபடுகின்றார்களோ அவர்கள் விரும்புவதும் அடைவதும் அழியாத மோக்ஷ நலன் ஒன்றே எனினும் ஐயனே! பகவானை நீர் தீனர்களான எங்களையும் அப்போ தீன்ற கன்றுக்குத்தாய்ப் பசு இரங்குவதுபோல் கருணை சுரந்து பரிபாலிக்கின்றீர்.

ஸ்ரீ பகவான் கூறியது—

9. 19. திடவிரதமுள்ள அரசகுமாரா! உனது இருதயத்திலுள்ள விருப்பத்தை நான் அறிவேன். அடைவதற் கரிதாயினும் அந்த உயர்நலத்தை உனக்கு அளிக்கிறேன்.

9. 24. யஜ்ஞத்தை இருதயமாக உடைய என்னை தக்ஷிணை மிகுந்த யஜ்ஞங்களால் பூஜித்து இங்கு உண்மையாக விரும்பிய போகங்களை யனுபவித்து முடிவில் என்னை நினைப்பாய்.

---

9. 15. **வ்யதிரிக்த:**—நீர் ஜீவனை விட விலக்ஷணராகிறீர். த்வந்து நித்யமுக்த: ஜீவஸ்து த்வத்ப்ரஸாதான் முச்யதே ; த்வம் பரிசுத்த: ஸ து மலின:, த்வம் விசுத்த: ஸர்வஜ்ஞ: ஸ து கிஞ்சிஜ்ஞ:, த்வம் ஆத்மா ஸ து ஜட:, த்வம் கூடஸ்த: ஸ து விகாரீ, த்வம் ஆதிபுருஷ: ஸ து ஆதிமான், த்வம் பகவான் ஸ து பகஹீன:, த்வம் த்ரயாணும் குணுனுமதீச; ஸ து பரதந்த்ர:। —ஸ்ரீ.

9. 17. **புருஷார்த்த-மூர்த்தே:**—புருஷார்த்த: பரமானந்த: ஸ ஏவ மூர்த்திர் யஸ்ய। **காதர:**—பரவச:। **உஸ்ரேவ**—நவப்ரஸூதா தேனுரிவ

ஓ, பதரக்ஷிணி வத்ஸலா நிகாமம் ரகுவீரஸ்ய பதாம்புஜாதபி த்வம்। யதஸௌ பரதஸ் த்வயாம்சவத்வாந் ந புனஸ்-தாத்ருச-மன்வபூத்-வியோகம்॥
—வேதாந்த தேசிகர்: பாதுகா ஸஹஸ்ரம்.

---

9. 17. अप्येवमाद्य । वाश्रेव । பா. பே.

ततो गन्तासि मत्स्थानं सर्वलोक-नमस्कृतम् ।
उपरिष्टा-दृषिभ्य-स्त्वं यतो नावर्तते गतः ॥ ९.२५ ॥

मैत्रेय उवाच--

सोऽपि संकल्पजं विष्णोः पादसेवोपसादितम् ।
प्राप्य संकल्प-निर्वाणं नातिप्रीतोऽभ्यगात्पुरम् ॥ ९.२७ ॥

आकर्ण्यात्मज-मायान्तं संपरेत्य यथाऽऽगतम् ।
निश्चक्राम पुरात्तूर्ण-मात्मजाभीक्षणोत्सुकः ॥ ९.४० ॥

परिरेभेऽङ्गजं दोर्भ्यां दीर्घोत्कण्ठ-मनाः श्वसन् ।
विष्वक्-सेनांघ्रि-संस्पर्श- हताशेषाघ-बन्धनम् ॥ ९.४३ ॥

अभिवन्द्य पितुः पादा-वाशीर्भि-श्चाभिमन्त्रितः ।
ननाम मातरौ शीर्ष्णा सत्कृतः सज्जनाग्रणीः ॥ ९.४५ ॥

सुरुचि-स्तं समुत्थाप्य पादावनत-मर्भकम् ।
परिष्वज्याह जीवेति बाष्प-गद्गदया गिरा ॥ ९.४६ ॥

---

9. 25. பின்பு எல்லா உலகங்களும் போற்றுவதும், ரிஷிகளின் ஸ்தானத்துக்கும் உயர்ந்ததும் ஆகிய எனது ஸ்தானத்தை அடைவாய். அங்கிருந்து திரும்பிவருதல் இல்லை.

மைத்திரேயர் கூறியது—

9. 27. விஷ்ணுவின் திருவடிசேவையால் ஆசைகளற்ற பரமானந்த நிலை கிட்டியும் ஸங்கல்பத்தால் ஏற்பட்ட ஆசையின் பூர்த்தியை ஏற்றுக்கொண்டு துருவன் அதை வெகுவாய் விரும்பாதவன்போல் நகரத்துக்குத் திரும்பினான்.

9. 40. இறந்தவன் திரும்பிவந்தாற்போல் குமாரன் திரும்பிவரும் செய்தி கேட்டு அவனைக்காண ஆவல்கொண்டு அரசன் நகரத்திலிருந்து விரைவாகக் கிளம்பினான்.

9. 43. பகவானுடைய பாதத்தைத் தொட்டுப் பாவத்தையும் பந்தத்தையும் அறவே ஒழித்த புத்திரனைப் பேராவலுடனும் பெருமூச்சுடனும் புயங்களால் இறுகத் தழுவிக்கொண்டான்.

9. 45. ஸாதுக்களிற் சிறந்த துருவன் தந்தையின் பாதங்களில் வணங்கி அவருடைய ஆசிகளையும் ஆதரவையும் பெற்றுத் தாய்மார்களைத் தலையால் வணங்கினான்.

9. 46. பாதத்தில் வணங்கிய பாலகனை ஸுருசி கைகளாலெடுத்து அணைத்துக் கொண்டு கண்களில் நீர் ததும்ப தழுதழுத்த குரலில் 'சிரஞ்ஜீவியாக இரு' என்று வாழ்த்தினாள்,

---

9. 27. **ஸங்கல்ப நிர்வாணம்**—ஸங்கல்பஸ்ய ஸமாப்தி:। ஆதியில் சாந்தி யிருந்திருந்தால் முக்தி கிடைத்திருக்கும். ஸங்கல்ப மிருந்ததால் இப்படி யாயிற்றென்று மனக் குறையுடன் திரும்பினார்.

---

9. 25. **नावर्तते मतिः ।**

9. 45. **अभिवाद्य ।**

பா. பே.

यस्य प्रसन्नो भगवान् गुणै-र्मैत्र्यादिभि-र्हरिः ।
तस्मै नमन्ति भूतानि निम्न-माप इव स्वयम् ॥ ९.४७ ॥

सुनीति-रस्य जननी प्राणेभ्योऽपि प्रियं सुतम् ।
उपगुह्य जहावाधिं तदङ्गस्पर्श-निर्वृता ॥ ९.४९ ॥

ध्रुवाय पथि दृष्टाय तत्र तत्र पुरस्त्रियः ।
सिद्धार्थाक्षत-दध्यंबु-दूर्वा-पुष्प-फलानि च ॥ ९.५८ ॥

उपजह्रुः प्रयुंजाना वात्सल्या-दाशिषः सतीः ।
शृण्वं-स्तद्वल्गु-गीतानि प्राविशद्भवनं पितुः ॥ ९.५९ ॥

उत्तानपादो राजर्षिः प्रभावं तनयस्य तम् ।
श्रुत्वा दृष्ट्वाद्भुततमं प्रपेदे विस्मयं परम् ॥ ९.६५ ॥

वीक्ष्योढवयसं पुत्रं प्रकृतीनां च सम्मतम् ।
अनुरक्तप्रजं राजा ध्रुवं चक्रे भुवः पतिम् ॥ ९.६६ ॥

आत्मानं च प्रवयस-माकलय्य विशांपतिः ।
वनं विरक्तः प्राविष्ठ-द्विमृश-न्नात्मनो गतिम् ॥ ९.६७ ॥

9. 47. பகவான் ஹரியானவர் எவருடைய நட்பு முதலிய நற்குணங்களால் ப்ரீதியடைகிருரோ அவரை நோக்கிப் பள்ளத்தில் வெள்ளம் பாய்வதுபோல் எல்லாப் பிராணிகளும் தாமே வந்தனம் செய்கின்றன.

9. 49. அவனுடைய தாய் ஸுநீதி பிராணனைவிடப் பிரியமான புத்திரனை இறுகத் தழுவிக்கொண்டு அவனுடைய அங்க ஸ்பர்சத்தாலுண்டான இன்பத்தில் மனக்கவலை நீங்கியவளானுள்.

9. 58-59. நகர ஸ்திரீகள் ஆங்காங்கு வழியில் துருவனைக் கண்டதும் ஒன்றுகூடி அவனிடம் வாத்ஸல்யத்துடன் மங்களமான ஆசீர்வாதங்களைக் கூறி அவன்மேல் வெண் கடுகு, அக்ஷதை, தயிர், ஜலம், அருகம்புல், புஷ்பம், பழம் இவற்றைத் தூவினர்கள். அவர்களுடைய அழகிய பாடல்களைக் கேட்டுக்கொண்டு தந்தையின் அரண்மனையில் பிரவேசித்தான்.

9. 65. இராஜரிஷியான உத்தானபாதர் புத்திரனுடைய அத்யத்புதமான பெருமையைக் கண்டும் கேட்டும் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார்.

9. 66. (நாளடைவில்) அரசன் தனது புத்திரன் துருவன் யௌவனப் பருவம் அடைந்துவிட்டதையும் மக்களுடைய மனதுக்கு உகந்தவனு யிருப்பதையும் கண்டு, பிரஜைகளிடம் பிரீதிமிகுந்த அவனையே பூமிக்குப் பதியாக்கினுர்.

9. 67. பின்பு அரசன் தனக்குக் கிழத்தனம் வந்துவிட்டதை கண்டு தான் செல்ல வேண்டிய கதியைப்பற்றி ஆலோசித்து வைராக்கிய மடைந்து வனம் புகுந்தார்.

9. 47. **நமந்தி—**அனுஸரந்தி.

ஒ. (தந் நம இத்யுபாஸீத । நம்யந்தே஽ஸ்மை காமா:) பிரம்மத்தை 'நம:' என்று உபாசித்தால் உபாசிப்பவனைக் காமங்களெல்லாம் வணங்கி நிற்கும்.

தை.உப. 3. 10.4.

ஒ. (ஸர்வே஽ஸ்மை தேவா பலிமாவஹந்தி) இவனுக்கு எல்லா தேவர்களும் காணிக்கைகளைக் கொண்டு வருகிருர்கள்.

—தை. உப. 1. 5. 3.

9. 66. **वीक्ष्योढवयसं पुत्रं ।**

பா. பே.

उत्तमस्त्वकृतोद्वाहो मृगयायां बलीयसा ।
हतः पुण्यजनेनाद्रौ तन्मातास्य गतिं गता ॥ १०.३ ॥

अथायजत यज्ञेशं क्रतुभि-र्भूरिदक्षिणैः ।
द्रव्य-क्रियादेवतानां कर्म कर्मफलप्रदम् ॥ १२.१० ॥

तमेवं शीलसंपन्नं ब्रह्मण्यं दीनवत्सलम् ।
गोप्तारं धर्मसेतूनां मेनिरे पितरं प्रजाः ॥ १२.१२ ॥

षड्विंशद्वर्ष-साहस्रं शशास क्षितिमण्डलम् ।
भोगैः पुण्यक्षयं कुर्व-न्नभोगै-रशुभक्षयम् ॥ १२.१३ ॥

एवं बहुसवं कालं महात्माऽविचलेन्द्रियः ।
त्रिवर्गौपयिकं नीत्वा पुत्रायादा-न्नृपासनम् ॥ १२.१४ ॥

आत्म-स्त्र्यपत्य- सुहृदो बल-मृद्ध-कोश-मन्तः पुरं
परिविहार-भुवश्च रम्याः ।
भूमण्डलं जलधि-मेखल-माकलय्य
कालोपसृष्ट-मिति स प्रययौ विशालाम् ॥ १२.१६ ॥

---

10. 3. உத்தமன் விவாகமில்லாமலே இருந்தான். (ஒரு சமயம்) வேட்டையாடப் போனபோது (இமய)மலைச் சாரலில் பலசாலியான ஒரு யக்ஷனால் கொல்லப்பட்டான். அவன் தாயும் அவனுடைய கதியையே அடைந்தாள்.

(10 வது, 11 வது அத்தியாயங்களில் துருவன் தன் சகோதரனைக் கொன்ற யக்ஷர்களுடன் செய்த போர் வர்ணிக்கப்படுகிறது.)

12. 10. திரவியம் கிரியை தேவதாராதனை இவற்றுடன் செய்யப்படும் கருமமும் கருமபலனை யளிப்பவருமாக இருக்கும் யஜ்ஞேசுவரரை தக்ஷிணைமிகுந்த யஜ்ஞங்களால் (துருவச் சக்ரவர்த்தி) பூஜித்தார்.

12. 12. எல்லா நற்குணங்களும் பொருந்தியவரும், பிரம்மநிஷ்டர்களைப் போற்றுபவரும், ஏழைகளுக்கு இரங்குபவரும் தருமத்தின் அணைகளைக் காப்பவரும் ஆகிய அவரை மக்கள் தம் தந்தையெனக் கருதினர்.

12. 13. சேமித்த புண்ணியத்தைச் சுகபோகங்களால் செலவிட்டு, விரதானுஷ்டானங்களால் பாவத்தைப் போக்கி இருபத்தாறுயிரம் ஆண்டுகள் பூமண்டலத்தை ஆண்டார்.

12. 14. இங்ஙனம் அம்மகாத்மா ஸ்திதப்ரஜ்ஞராக தர்மார்த்த காமத்திற்குப் பயன்படுமாறு நெடிய பல ஆண்டுகளைக் கழித்த பின் புத்திரனிடம் அரசப்பதவியை ஒப்புவித்தார்.

12. 16. சரீரம், மனைவி, மக்கள், உற்றார், சேனை, நிறைந்த பொக்கிஷம், அந்தப்புரம், அழகிய விளையாட்டு ஸ்தலங்கள், கடல் சூழ்ந்த பூமி இவை யனைத்தும் காலத்தினால் விழுங்கப்படும் என்று சிந்தனையால் தெளிந்து பதரிகாசிரமத்தை நோக்கிப் புறப்பட்டார்.

---

12. 13. **அபோகை:**—யஜ்ஞாத்யனுஷ்டானை: ।

26000 வருஷம்—பூமி தலையாட்டிச் சுழலும் பம்பரம்போன்றது. அது தன்னைத் தானே சுற்றிக்கொள்வதுடன், 26000 வருஷத்திற் கொருமுறை துருவத்தை நோக்கும் அதின் அச்சு ஒரு சிறுவட்டமிடுகிறது என்பது வானசாஸ்திர உண்மை.

12. 14. **பஹுஸவம்—பஹவ:** ஸவா யாகா: ஸம்வத்ஸரா வா யஸ்மின்ஸ்தம் காலம் ।

भक्तिं हरौ भगवति प्रवहन्नजस्र-मानन्द-बाष्पकलया मुहुरर्द्यमानः ।
विक्लिद्यमानहृदयः पुलकाञ्चितांगो नात्मान-मस्मर-दसाविति मुक्तलिंगः ॥ १२.१८ ॥

स ददर्श विमानाग्र्यं नभसोऽवतरद् ध्रुवः ।
विभ्राजय-द्दश दिशो राकापति-मिवोदितम् ॥ १२.१९ ॥

तत्रानु देवप्रवरौ चतुर्भुजौ श्यामौ किशोरा-वरुणांबुजेक्षणौ ।
स्थितावविष्टभ्य गदां सुवाससौ किरीट-हारांगद चारुकुण्डलौ ॥ १२.२० ॥

विज्ञाय तावुत्तमगायकिंकरा-वभ्युत्थितः साध्वस- विस्मृतक्रमः ।
ननाम नामानि गृणन्मधुद्विषः पार्षत्प्रधानाविति संहृतांजलिः ॥ १२.२१ ॥

तं कृष्णपादाभिनिविष्ट-चेतसं बद्धांजलिं प्रश्रय-नम्र-कन्धरम् ।
सुनन्दनन्दा-वुपसृत्य सस्मितं प्रत्यूचतुः पुष्करनाभ-सम्मतौ ॥ १२.२२ ॥

---

12. 18. பகவான் ஹரியினிடம் இடைவிடாது பக்தி பெருகவும், ஆனந்தபாஷ்பம் அடிக்கடி -மெய்மறக்கச் செய்யவும், உள்ளம் உருகவும், உடல் புளகிக்கவும், சரீராபி மானம் விட்டுத் தான் இன்னவன் என்ற எண்ணமில்லாமல் இருந்தார்.

12. 19. உதயமான சந்திரனைப்போல் பத்துத் திக்குகளையும் பிரகாசப்படுத்திக் கொண்டு ஆகாயத்தினின்று இறங்கிய சிறந்ததொரு விமானத்தைத் துருவன் கண்ணுற்றார்.

12. 20. அதில் நான்கு புஜங்களுடனும் சியாமளவர்ணமாகவும் இளமைப்பருவ முடையவர்களாகவும், செந்தாமரைக் கண்களுடன், அழகிய ஆடை, கிரீடம், ஹாரம், தோள்வளை, அழகிய குண்டலம் இவை யணிந்து கதைகளை ஏந்தி நிற்கும் இரண்டு தேவசிரேஷ்டர்களைக் கண்டார்.

12. 21. அவர்கள் உத்தம சுலோகரான பகவானுடைய சேவகர்களான பாரிஷத சிரேஷ்டர்கள் என்றறிந்து எழுந்து ஆச்சரியத்தால் பூஜாக்கிரமத்தை மறந்து மதுஸூதன னுடைய நாமங்களைமட்டும் சொல்லிக்கொண்டு கைகளைக் கூப்பி நமஸ்கரித்தார்.

12. 22. ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடிகளில் நிலைத்த சித்தம் உடையவரும், கைகூப்பியவரும், வினயத்தால் வணங்கிய கழுத்துடையவருமான அவரை யணுகிப் பத்மநாபதாஸர்களான ஸுநந்தர் நந்தர் என்ற அவ்விருவரும் பின் வருமாறு கூறினர்.

---

12. 18. **அஜஸ்ரம்**—நித்யம்; **முக்தலிங்க:**—த்யக்த சரீராபிமான:।
த்ருவோ ऽஹமித்யாத்மானம் ந ஸஸ்மார।

ஒ. 'என்பெலாம் நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்ப உடல்
இளகமன தழலின் மெழுகாய்
இடையறுதுருகவரு மழைபோலிரங்கியே
இருவிழிகள் நீரிறைப்ப' —தாயுமானவர்.

12. 20. இவர்கள் பகவானுடன் ஸாலோக ஸாரூப ஸாமீப முக்தி எய்தியவர்கள்.

---

12. 18. पुलकाञ्चिताङ्गो । मुक्तसर्गः । பா. பே.

**सुनन्द-नन्दावूचतुः**

सुदुर्जयं विष्णुपदं जितं त्वया यत्सूरयोऽप्राप्य विचक्षते परम् ।
आतिष्ठ तच्चन्द्र-दिवाकरादयो ग्रहर्क्षतारा: परियन्ति दक्षिणम् ॥ १२.२५ ॥

एतद्विमानप्रवर-मुत्तमश्लोक-मौलिना ।
उपस्थापित-मायुष्मन्नधिरोढुं त्वमर्हसि ॥ १२.२७ ॥

**मैत्रेय उवाच—**

निशम्य वैकुण्ठ-नियोज्य-मुख्ययो-र्मधुच्युतं वाचमुरुक्रमप्रियः ।
कृताभिषेकः कृतनित्यमंगलो मुनीन् प्रणम्याशिष-मभ्यवादयत् ॥ १२.२८ ॥

तदोत्तानपदः पुत्रो ददर्शान्तक-मागतम् ।
मृत्यो-र्मूर्ध्नि पदं दत्त्वा आरुरोहाद्भुतं गृहम् ॥ १२.३० ॥

स च स्वर्लोक-मारोक्ष्यन् सुनीतिं जननीं ध्रुवः ।
अन्वस्मरदगं हित्वा दीनां यास्ये त्रिविष्टपम् ॥ १२.३२ ॥

---

ஸுநந்த-நந்தர்கள் கூறியது—

12. 25. ஜயிக்கமுடியாத விஷ்ணுபதம் உம்மால் ஜயிக்கப்பட்டது. நித்ய சூரிகளான ஸப்தரிஷிகள்கூட எந்த உயர்பதத்தை யடையமுடியாமல் பார்த்துக்கொண்டு மட்டும் இருக்கிறார்களோ, எதைச் சந்திரன், சூரியன், கிரகங்கள், நக்ஷத்திரங்கள் எல்லாம் வலம் வருகின்றனவோ அந்தப் பதத்தை அடைந்து நீர் அதில் இருக்கலாம்.

12. 27. இச் சிறந்த விமானம் உத்தமசுலோகசிரேஷ்டனான பகவானால் உமக்கு அனுப்பப்பட்டது. குறைவற்ற ஆயுள் படைத்தவரே ! இதில் நீர் ஏறுதற் குரியவர்.

மைத்திரேயர் கூறியது—

12. 28. அவ்வைகுண்ட பக்தசிரேஷ்டர்களின் தேனொழுகும் வார்த்தைகளைப் பகவத் பிரியரான துருவஸ்வாமி கேட்டதும், நீராடி, நித்தியகருமங்களைச் செய்து, முனிவர்களை வணங்கி அவர்களுடைய ஆசியைப் பெற்றார்.

12. 30. அப்போது உத்தானபாத குமாரரான துருவஸ்வாமி யமதர்மராஜன் அருகில் வரக் கண்டார். (அவருடைய வேண்டுகோளுக் கிணங்கி) அவர் சிரத்தில் பாதத்தை வைத்து (ஹிரண்யமயமான திவ்ய சரீரத்துடன்) அத்புதமான விமானத்தி லேறினார்.

12. 32. ஸுவர்லோகம் செல்லவிருக்கையில் துருவஸ்வாமி தனது தாய் ஸுநீதியை நினைத்தார். 'எளியவளான தாயைவிட்டு நான்மட்டும் தனியாகவா அடைதற்கரிய ஸுவர்லோகம் போவேன்' என்று எண்ணினார்.

---

12. 27. ஆயுஷ்மன்னித்யபி ஸசரீர யாநாபிப்ராயமேவ।

12. 32. அகம்—துர்க்கமம்।

---

12. 28. कृतकृत्यमंगलो । பா. பே.

इति व्यवसितं तस्य व्यवसाय सुरोत्तमौ ।
दर्शयामासतुर्देवीं पुरो यानेन गच्छतीम् ॥ १२.३३ ॥

त्रिलोकीं देवयानेन सोऽतिव्रज्य मुनीनपि ।
परस्ताद् यद् ध्रुवगति-र्विष्णोः पदमथाभ्यगात् ॥ १२.३५ ॥

महिमानं विलोक्यास्य नारदो भगवानृषिः ।
आतोद्यं वितुदन् श्लोकान् सत्रेऽगायत् प्रचेतसाम् ॥ १२.४० ॥

नारद उवाच—

यः पंचवर्षो गुरुदार-वाक्शरै-र्भिन्नेन यातो हृदयेन दूयता ।
वनं मदादेशकरोऽजितं प्रभुं जिगाय तद्भक्तगुणैः पराजितम् ॥ १२.४२ ॥

यः क्षत्र-बन्धु-र्भुवि तस्याधिरूढ-मन्वारुरुक्षेदपि वर्ष-पूगैः ।
षट्-पंचवर्षो यदहोभिरल्पैः प्रसाद्य वैकुण्ठ-मवाप तत्पदम् ॥ १२.४३ ॥

---

12. 33. அவருடைய சிந்தனையை உணர்ந்த தேவசிரேஷ்டர்கள் அவருக்கு முன்பாகவே விமானத்தில் செல்லும் ஸுநீதிதேவியைச் சுட்டிக்காட்டினர்.

12. 35. தேவ விமானத்தால் மூவ்வுலகையும், ஸப்தரிஷிமண்டலத்தையும் கடந்து நிலையான கதியாகிய விஷ்ணுபதத்தை யடைந்தார்.

12. 40. இவருடைய மகிமையை நினைத்து, பகவான் நாரதமகரிஷி பிரசேதஸர்களின் ஸத்திரயாகத்தில் வீணகானத்துடன் பின்வரும் சுலோகங்களைப் பாடினர்.

நாரதர் கூறியது—

12. 42. ஐந்து வயதிலேயே சிற்றன்னையின் சொல்லம்பால் இருதயம்பிளவுண்டு மனம் வருந்தி வனம் சென்று என் உபதேசத்தை ஏற்று அனுஷ்டித்து, பக்தனுடைய சீலத்தாலன்றி வேறெதனுலும் ஜயிக்கப்படாத பிரபுவை எவர் ஜயித்தாரோ, (அவர் புகழைப் பாடுவோம்.)

12. 43. எவர் ஐந்தாறுவயதில் வெகு சில நாட்களிலேயே வைகுண்டநாதனைத் திருப்திசெய்து அவருடைய பதத்தை யடைந்தாரோ (அவர் புகழைப் பாடுவோம்). க்ஷத்திரியகுலத் துதித்த வேறு எவனுவது இப்புவியில் பல வருஷங்களிருந்தபோதிலும் அவர் அடைந்த பதவியை அடைய ஆசையாவதுகொள்வாஞ ?

---

12. 33. ஒ. குலம் பவித்ரம் ஜனனீ க்ருதார்த்தா விச்வம்பரா புண்யவதீ ச தேந ।

---

12. 42. तद्भक्तगणैः ।
12. 43. यः पञ्चवर्षो । பா. பே.

**मैत्रेय उवाच—**

**एतत्तेऽभिहितं सर्वं यत्पृष्टोऽहमिह त्वया ।**
**ध्रुवस्योद्दाम-यशस-श्चरितं संमतं सताम्** ॥ १२.४४ ॥

**पौर्णमास्यां सिनीवाल्यां द्वादश्यां श्रवणेऽथवा ।**
**दिनक्षये व्यतीपाते सङ्क्रमेऽर्कदिनेऽपि वा** ॥ १२.४९ ॥

**श्रावयेच्छ्रद्दधानानां तीर्थपादपदाश्रयः ।**
**नेच्छंस्तत्रात्मनात्मानं सन्तुष्ट इति सिद्ध्यति** ॥ १२.५० ॥

**ज्ञान-मज्ञात-तत्त्वाय यो दद्यात् सत्पथेऽमृतम् ।**
**कृपालो-र्दीननाथस्य देवास्तस्यानुगृह्णते** ॥ १२.५१ ॥

---

மைத்திரேயர் கூறியது—

12. 44. ஸாதுக்கள் போற்றும் உத்தம கீர்த்திவாய்ந்த துருவனுடைய சரித்திரம் நீர் கேட்டபிரகாரம் உமக்குச் சொல்லப்பட்டது.

12. 49-50. பௌர்ணமியிலும், சந்திரகலை சிறிது காணப்படும் அமாவாசையிலும், துவாதசியிலும், திருவோண நக்ஷத்திரத்திலும் திதிக்ஷயத்திலும் (பதினேழாவது யோகமாகிய) வியதீபாதத்திலும், சூரியஸங்கிரமண காலத்திலும் ஆதித்தியவாரத்திலும் நிஷ்காமனாக பரமபவித்ரமான பகவானுடைய சரணங்களைச் சேவித்துச் சிரத்தையுள்ளவர்களுக்கு (இந்தச் சரித்திரத்தைச்) சொல்லவேண்டும். அதனால் தன்னுள்ளே தானாகவே ஆனந்தானுபவம் பெற்றவனாகி சித்தி எய்துவான்.

12. 51. எவன் தத்துவத்தை உணராதவர்க்கு பகவத் விஷயமான ஞான அமிர்தத்தை அளிப்பானோ, எளியார்க்கு இரங்கும் அவனுக்கு தேவர்கள் அருள் புரிவர்.

---

12. 51. **दयाल्बुद्ध-धीमते ।**　　பா. பே.

துருவ சரித்திரம் முற்றிற்று.

**मैत्रेय उवाच—**

सुनीथाङ्गस्य या पत्नी सुषुवे वेन-मुल्बणम् ।
यद्दौःशील्यात्स राजर्षि-र्निर्विण्णो निरगात्पुरात् ॥ १३.१८ ॥

कदपत्यं वरं मन्ये सदपत्याच्छुचां-पदात् ।
निर्विद्येत गृहान्मर्त्यो यत्क्लेश-निवहा गृहाः ॥ १३.४६ ॥

एवं स निर्विण्णमना नृपो गृहान्निशीथ उत्थाय महोदयोदयात् ।
अलब्ध-निद्रोऽनुपलक्षितो नृभि-र्हित्वा गतो वेनसुतं प्रसुप्ताम् ॥ १३.४७ ॥

---

**வேனன் சரித்திரம்**

மைத்திரேயர் கூறியது—

13. 18. (துருவனுடைய ஏழாவது தலைமுறையில் தோன்றிய) அங்கனுடைய பத்தினியாகிய ஸுநீதா கொடியவனான வேனனைப் பிள்ளையாகப் பெற்றாள். அவனுடைய துர்நடத்தை காரணமாய் ராஜரிஷியான அங்கன் வெறுப்படைந்து நகரைத் துறந்து வெளியேறினான்.

13. 46-47. '(கெட்ட புத்திரர்களால்) கிருஹங்கள் துன்பத்தை விளைப்பதாலும், துன்பத்திற் கிருப்பிடமான வீட்டிலிருந்து மனிதன் வைராக்கியத்தை யடைவதாலும் கெட்ட புத்திரர்களையே நல்ல புத்திரர்களைவிட மேலாக எண்ணுகிறேன்' என்றிவ் வண்ணம் வைராக்கியமடைந்து அரசன் நடு இரவில் தூக்கம் வராமல் எழுந்து எல்லாச் செல்வங்களும் நிறைந்த அரண்மனையைவிட்டுக் கிளம்பி, தூங்கிக்கொண்டிருந்த வேனனின் தாயையும் விட்டு எம்மனிதர் கண்ணிலும் படாமல் வெளிப் போந்தான்.

---



वीरमातर-माहूय सुनीथां ब्रह्मवादिनः।
प्रकृत्यसंमतं वेन-मभ्यषिंचन् पतिं भुवः ॥ १४.२ ॥

स आरूढ-नृपस्थान उन्नद्धोऽष्ट-विभूतिभिः।
अवमेने महाभागान् स्तब्धः संभावितः स्वतः ॥ १४.४ ॥

न यष्टव्यं न दातव्यं न होतव्यं द्विजाः क्वचित्।
इति न्यवारयद्धर्मं भेरीघोषेण सर्वशः ॥ १४.६ ॥

वेन उवाच--

को यज्ञपुरुषो नाम यत्र वो भक्तिरीदृशी।
भर्तृ-स्नेह-विदूराणां यथा जारे कुयोषिताम् ॥ १४.२५ ॥

तस्मान्मां कर्मभिर्विप्रा यजध्वं गतमत्सराः।
बलिं च मह्यं हरत मत्तोऽन्यः कोऽग्रभुक् पुमान् ॥ १४.२८ ॥

---

14. 2. (அப்போது) முனிவர்கள் வீரமாதாவான ஸுநீதாவை அழைத்து (ஆட்சி நடைபெறும் பொருட்டு) மக்களுக்குப் பிரியமற்றவனுயினும் வேனனையே பூமிக்குப் பதி யாக அபிஷேகம் செய்வித்தனர்.

14. 4. அரச ஸ்தானத்தில் ஏறி அஷ்ட ஐசுவரியங்களுடன் கூடிய அவன் தன்னைத்தானே பெருமைப்படுத்திக்கொள்பவனுய் முரடனுய் மகான்களை அவமதிக்கத் தொடங்கினுன்.

14. 6. "துவிஜர்களே! எவ்விடத்திலும் நீங்கள் இனி யாகம் செய்யக்கூடாது தானம் செய்யக்கூடாது, ஹோமம் செய்யக்கூடாது" என்று பேரிகை கொட்டி எத்திக்கிலும் பறை யறைவித்துத் தருமானுஷ்டானத்தைத் தடுத்தான்.

வேனன் கூறியது—

14. 25. "(துவிஜர்களே!) கணவனிடத்தில் அன்பில்லாத கெட்ட ஸ்தீரீகளுக்குக் கள்ளப் புருஷரிடம் காமம் ஏற்படுவதுபோல் உங்களுக்கு எவனிடத்தில் இம்மாதிரியான பக்தி ஏற்பட்டிருக்கிறதோ அந்த யஜ்ஞபுருஷன் யார்?

14. 28. "பிராம்மணர்களே! (அரசனுகிய) என்னைக்காட்டிலும் முதல் பூஜைக் குரிய வேறு புருஷன் எவன் இருக்கிருன்? ஆகையால் நீங்கள் பொருமையைவிட்டுக் கருமங்களினுல் என்னைப் பூஜியுங்கள். உங்கள் காணிக்கைகளை எனக்குக் கொண்டு வாருங்கள்."

---

14. 25. ஒ. 'காமத்தால் கோபிகளும், பயத்தால் கம்ஸனும், பகையால் சிசுபலான் முதலிய அரசர்களும், உறவால் விருஷ்ணிகளும், சிநேகத்தால் நீங்களும், பக்தியால் நாங்களும் பகவானை யடைந்தவர்கள். இவ்வைந்து வகையில் எதிலும் வேனன் சேர்ந்தவனன்று.' —நாரதர் தர்மபுத்திரரிடம் கூறியது: பாக. 7. 1. 30-31.

---

14. 6. सर्वतः। பா. பே.

**मैत्रेय उवाच—**

**इति तेऽसत्कृता-स्तेन द्विजाः पण्डित-मानिना ।**
**भग्नायां भव्य-याच्ञायां तस्मै विदुर चुक्रुधुः** ॥ १४.३० ॥

**नायमर्हत्यसद्-वृत्तो नरदेव-वरासनम् ।**
**योऽधियज्ञपतिं विष्णुं विनिन्दत्यनपत्रपः** ॥ १४.३२ ॥

**इत्थं व्यवसिता हन्तु मृषयो रूढमन्यवः ।**
**निजघ्नु-र्हुंकृतै-र्वेनं हत-मच्युत-निन्दया** ॥ १४.३४ ॥

**ऋषिभिः स्वाश्रमपदं गते पुत्रकलेवरम् ।**
**सुनीथा पालयामास विद्यायोगेन शोचती** ॥ १४.३५ ॥

---

மைத்திரேயர் கூறியது—

14. 30. விதுரரே! தன்னையே பண்டிதன் என்று எண்ணிக்கொண்ட அவனால் அவமதிக்கப்பட்ட சிறந்த பிராம்மணர்கள் நன்மையைக் கருதி அவனிடம் செய்த வேண்டுகோள் பயன்படாதுபோகவே, அவர்கள் அவனிடம் கோபங்கொண்டனர்.

14. 32-34. எல்லா யஜ்ஞங்களுக்கும் அதிபதியான விஷ்ணுவைக் கூச்சமில்லாமல் நிந்திப்பவனும், கெட்ட நடத்தையுள்ளவனுமான இவன் அரசப் பதவியிலிருத்தற் குரியவனன்று எனக் கண்டு ரிஷிகள் தங்களிடம் மறைந்திருந்த கோபத்தை வெளிக் காட்டிக் கொல்லத் தீர்மானித்து, அச்சுத நிந்தையால் ஏற்கெனவே கொல்லப்பட்ட வேனனை ஹுங்காரத்தினால் கொன்றனர்.

14. 35. ரிஷிகள் தங்கள் ஆசிரமங்களுக்குச் சென்றபின் சோகத்திலாழ்ந்த ஸுநீதா யோகவித்தையின் சக்தியால் புத்திரனுடைய சரீரத்தைக் காப்பாற்றி வந்தாள்.

---

14. 34. பூர்வம் கூட மன்யவ: இதானீம் ரூடமன்யவ:।

---

14. 30. **हव्य-याञ्चायां** । (விஜயத்வஜர்) பா. பே.

ब्राह्मणः समदृक् शान्तो दीनानां समुपेक्षकः ।
स्रवते ब्रह्म तस्यापि भिन्नभाण्डात्पयो यथा ॥ १४.४१ ॥

नांगस्य वंशो राजर्षे-रेष संस्थातु-मर्हति ।
अमोघवीर्या हि नृपा वंशेऽस्मिन् केशवाश्रयाः ॥ १४.४२ ॥

विनिश्चित्यैव-मृषयो विपन्नस्य महीपतेः ।
ममन्थु-रूरुं तरसा तत्रासीद्बाहुको नरः ॥ १४.४३ ॥

काक-कृष्णोऽति-ह्रस्वाङ्गो ह्रस्वबाहु-र्महाहनुः ।
ह्रस्वपान्निम्न-नासाग्रो रक्ताक्ष-स्ताम्र-मूर्धजः ॥ १४.४४ ॥

तस्य वंश्यास्तु नैषादा गिरि-कानन-गोचराः ।
येनाहर-ज्जायमानो वेन-कल्मष-मुल्बणम् ॥ १४.४६ ॥

अथ तस्य पुन-र्विप्रै-रपुत्रस्य महीपतेः ।
बाहुभ्यां मथ्यमानाभ्यां मिथुनं समपद्यत ॥ १५.१ ॥

## பிருது சரித்திரம்

14. 41-42. (அரசனில்லாமமையால் மக்களுக்கு ஏற்படுந் தீங்கைத் தடுக்காவிட்டால் தங்களைப் பாவம் சாரும் என்று எண்ணிய ரிஷிகள் எண்ணியது:) பிராம்மணன் ஸமநோக்குடையவனாயினும், அமைதியுடையவனாயினும், துன்புற்ற எளியவர்களைக் கவனியாமலிருந்தால் அவனுடைய தவம் ஓட்டைக் குடத்தில் வைத்த நீர்போல் ஒழுகிப் போம். ராஜரிஷியான அங்கனுடைய இந்த வம்சம் அழிந்துபோவது தகாது. இவ்வம்சத்தில் பிறந்த அரசர்கள் விஷ்ணுபக்தர்கள்; வீண்போகாத வீரியமுடையவர்கள்.

14. 43. இங்ஙனம் நிச்சயித்து ரிஷிகள் இறந்துபோன அரசனுடைய துடையை விரைவாகக் கடைந்தனர். (அரணிக்கட்டையை அக்னிக்குக் கடைவதுபோல்.) அதிலிருந்து குட்டையான ஒரு மனிதன் தோன்றினான்.

14. 44. அவன் காக்கைபோல் கருத்துக் குறுகிய அவயவங்களுடன் குட்டையான கைகளும் நீண்ட மேல்வாய்க் கட்டையும், குட்டையான கால்களும் சப்பை மூக்கும், சிவந்த கண்களும் செம்பட்டை மயிரும் உடையவனாக இருந்தான்.

14. 46. அவன் பிறக்கும்போது வேனனுடைய கொடிய பாவத்தைக் கவர்ந்து கொண்டதால் அவனுடைய வம்சத்தவர்கள் மலைகளிலும் காடுகளிலும் வசிக்கும் (கொடுந் தொழிலுடைய) நிஷாதர்களானார்கள்.

15. 1. புத்திரனில்லாத அவ்வரசனுடைய கைகளை மீண்டும் பிராம்மணர்கள் கடைய, அப்போது ஆணும் பெண்ணுமாக இருவர் ஒருமிக்கத் தோன்றினர்.

---

14. 44. अतिभ्रुकुटी-कुटिलाननः ।
14. 46. योऽपाहरज्जायमानो । பா. பே.

ऋषय ऊचुः—

एष-विष्णो-र्भगवतः कला भुवनपालिनी ।
इयं च लक्ष्म्याः संभूतिः पुरुषस्यानपायिनी ॥ १५.३ ॥

अयं तु प्रथमो राज्ञां पुमान् प्रथयिता यशः ।
पृथु-र्नाम महाराजो भविष्यति पृथुश्रवाः ॥ १५.४ ॥

मैत्रेय उवाच—

सोऽभिषिक्तो महाराजः सुवासाः साध्वलंकृतः ।
पत्न्यार्चिषालंकृतया विरेजेऽग्निरिवापरः ॥ १५.१३ ॥

एष धर्मभृतां श्रेष्ठो लोकं धर्मेऽनुवर्तयन् ।
गोप्ता च धर्मसेतूनां शास्ता तत्परिपन्थिनाम् ॥ १६.४ ॥

नादण्ड्यं दण्डयत्येष सुत-मात्मद्विषामपि ।
दण्डयत्यात्मजमपि दण्ड्यं धर्मपथे स्थितः ॥ १६.१३ ॥

दृढव्रतः सत्यसन्धो ब्रह्मण्यो वृद्धसेवकः ।
शरण्यः सर्वभूतानां मानदो दीनवत्सलः ॥ १६.१६ ॥

---

ரிஷிகள் கூறியது—

15. 3. இப்புருஷன் பகவான் விஷ்ணுவின் உலக ஸம்ரக்ஷண சக்தியின் அம்சம். இந்த ஸ்திரீ பகவானைவிட்டகலாத லக்ஷ்மியின் அம்சம்.

15. 4. இந்தப் புருஷன் அரசர்களின் புகழைப் பரப்புவதில் முதன்மையானவனாய், மிகுந்த கீர்த்தி வாய்ந்தவனாய், அதனால் ப்ருது என்று பெயர்பெற்ற மகாராஜனாய் விளங்கப்போகிறான்.

மைத்திரேயர் கூறியது—

15. 13. அவர் அப்போதே சிறந்த ஆடைகளாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்று மகாராஜனாக அபிஷேகம் செய்விக்கப் பெற்று நன்கு அலங்கரிக்கப்பெற்ற அர்ச்சிஸ் என்ற தமது பத்தினியுடன் இன்னொரு அக்கினிதேவனோ எனும்படி பிரகாசித்தார்.

16. 4. (முனிவர்களின் அனுமதியால் துதி பாடர்கள் அவரைத் துதிக்கலாயினர்)—தருமத்தை யனுஷ்டிப்பவர்களில் சிறந்த இவர் உலகத்தோரைத் தருமத்தைக் கொள்ளச் செய்து தருமத்தின் கரைகளை யழியாமல் காத்து அதை மீறி நடப்பவர்களைத் தண்டிப்பவராக இருப்பார்.

16. 13. தமது சத்துருவின் புத்திரனாயினும் தண்டிக்கத் தகாதவனை இவர் தண்டிக்கமாட்டார்; தருமமார்கத்தில் நிலைத்த இவர் தன் புத்திரனாயினும் தண்டிக்கத் தக்கவனைத் தண்டிக்கவே செய்வார்.

16. 16. இவர் திடமான விரதமுடையவர், ஸத்திய ஸந்தர், அந்தணர்களிடம் பிரியமுள்ளவர், பெரியோர்களைச் சேவிப்பவர், எல்லாப் பிராணிகளும் நாடியடைதற்குரியவர், பெருமையளிப்பவர், ஏழைகளுக்கிரங்குபவர்.

मातृभक्तिः परस्त्रीषु पत्न्या-मर्ध इवात्मनः।
प्रजासु पितृवत् स्निग्धः किंकरो ब्रह्मवादिनाम् ॥ १६.१७ ॥

देहिना-मात्मवत् प्रेष्ठः सुहृदां नन्दिवर्धनः।
मुक्तसंग-प्रयुक्तोयं दण्डपाणि-रसाधुषु ॥ १६.१८ ॥

दिशो विजित्याप्रतिरुद्ध-चक्रः स्वतेजसोत्पाटित-लोकशल्यः।
सुरासुरेन्द्रै-रुपगीयमान-महानुभावो भविता पति-र्भुवः ॥ १६.२७ ॥

सर्वे स्वमुख्य-वत्सेन स्वे स्वे पात्रे पृथक् पयः।
सर्वकाम-दुघां पृथ्वीं दुदुहुः पृथु-भाविताम् ॥ १८.२६ ॥

ततो महीपतिः प्रीतः सर्वकामदुघां पृथुः।
दुहितृत्वे चकारेमां प्रेम्णा दुहितृ-वत्सलः ॥ १८.२८ ॥

---

16. 17. பிறர் மனைவிகளிடம் தாயிடம்போல் பக்தி செய்பவர், பத்தினியைப் பாதியுடலாய்க் கருதுபவர், பிரஜைகளைத் தகப்பன்போல் நேசிப்பவர், வேதமோதுவோருக்கு வேலையாள் போன்றவர் ;

16. 18. உடல் படைத்தோருக்கு ஆத்மாவைப்போல் அன்புக்குரிய உத்தமர், நண்பர்களுக்கு மகிழ்ச்சியை வளர்ப்பவர், பற்றற்ற ஞானிகளிடம் பற்று மிகுந்தவர், கெட்டவர்களுக்கு யமன் போன்றவர் ;

16. 27. (இவர்) திசைகளை ஜயித்துத் தடையற்ற ஆஜ்ஞாசக்ரமுடையவராய் தனது பாரக்கிரமத்தால் உலக மக்களின் துன்பங்களைத் துடைப்பவராய், தேவ சிரேஷ்டர்களாலும் அசுர சிரேஷ்டர்களாலும் கொண்டாடப்படும் மகிமையுடையவராய்ப் பூமியை ஆளப்போகிறார்.

18. 26. (அவ்வாறே பிருது சக்ரவர்த்தி பூமியை ஆளும்போது) எல்லோரும் பிருதுவால் காப்பாற்றப்பட்ட பூமியைக் காமதேனுவாகவும் தங்கள் ஸ்வதருமத்தை கன்றாகவும் பாவித்து தத்தம் நிலைகளாகிய பாத்திரங்களில் தனித்தனியே விரும்பிய பயனாகிய பாலைக் கறந்தனர்.

18. 28. பிறகு பிருது சக்ரவர்த்தி பிரீதியடைந்தவராய் எல்லா ஆசைகளையும் பூர்த்தி செய்விக்கும் பூதேவியை மிகப் பிரியத்துடன் புத்திரிபோல் நேசித்துப் புத்திரியாகவே ஆக்கிக் கொண்டார்.

---

18. 26. பிருது சக்ரவர்த்தி பஞ்ச பூதங்களையும் ஜயித்தவராக ஆனார். இந்த அவதாரம் வீர்ய கலாவதாரம்.

अथास्मिन् भगवान् वैन्यः प्रजानां वृत्तिदः पिता ।
निवासान् कल्पयांचक्रे तत्र तत्र यथार्हतः ॥ १८.३० ॥

ग्रामान् पुरः पत्तनानि दुर्गाणि विविधानि च ।
घोषान् व्रजान् सशिबिरा-नाकरान् खेट-खर्वटान् ॥ १८.३१ ॥

प्राक्-पृथो-रिह नैवैषा पुरग्रामादि-कल्पना ।
यथा-सुखं वसन्ति स्म तत्र तत्राकुतोभयाः ॥ १८.३२ ॥

गंगा-यमुनयो-र्नद्यो-रन्तरा-क्षेत्र-मावसन् ।
आरब्धानेव बुभुजे भोगान् पुण्य-जिहासया ॥ २१.११ ॥

एकदाऽऽसीन्महासत्र-दीक्षा तत्र दिवौकसाम् ।
समाजो ब्रह्मर्षीणां च राजर्षिणां च सत्तम ॥ २१.१३ ॥

तस्मिन्नर्हत्सु सर्वेषु स्वर्चितेषु यथार्हतः ।
उत्थितः सदसो मध्ये ताराणा-मुडुराडिव ॥ २१.१४ ॥

---

18. 30.-31. வேன புத்திரரான பிருதுபகவான் மக்களுக்குப் பிழைக்கும் வழியைக் காட்டும் பிதாவைப்போல் இப்புவியில் ஆங்காங்கு கிராமங்கள், புரங்கள், பட்டினங்கள், வித விதமான துர்க்கங்கள், இடைச் சேரிகள், பசுக் கொட்டில்கள் மேய்ச்சற்றரைகள், சேனுஸ்தானங்கள், சுரங்கங்கள், வயல்கள், மலை நிவாஸங்கள் என அவரவர்க்குரிய வகையில் வாசஸ்தானங்களைச் சீராக அமைத்தார்.

18. 32. பிருதுவுக்குமுன் இப் புவியில் இம்மாதிரிப் பட்டினம் கிராமம் முதலிய ஒழுங்கான ஏற்பாடு இருக்கவில்லை. (இவ்வேற்பாட்டால் ஜனங்கள்) ஆங்காங்கு ஒரு பயமுமில்லாமல் இஷ்டப்படி இன்பமாய் வாழ்ந்து வந்தனர்.

(19 வது 20 வது அத்தியாயங்களில் பிருது மகாராஜன் செய்த அச்வமேத யாகம் வர்ணிக்கப் படுகிறது.)

21. 11. கங்கை நதிக்கும் யமுனை நதிக்கும் நடுவிலுள்ள க்ஷேத்திரத்தில் வசிப்பவராய்ப் புண்ணியத்திலுள்ள பற்றையும் விடவிரும்பி (அதுவும்) வேறு ஜன்மத்துக்குக் காரணமாகுமென்று தானே பிராரப்தவசமாய் வந்த போகங்களை மட்டும் அனுபவித்தார்.

21. 13. ஸாது சிரேஷ்டரே! ஒரு சமயம் அங்கு மஹத்தரன ஸத்ரயாக தீக்ஷை யானது ஏற்பாடாயிற்று. அதில் தேவர்கள், பிரம்ம ரிஷிகள், ராஜ ரிஷிகள் இவர்களுடைய ஸமாஜம் ஏற்பட்டது.

21. 14. அங்கு பூஜைக்குரிய அனைவரும் அவரவர் தகுதிக்குத் தக்கபடி பூஜிக்கப்பட்டபின் நக்ஷத்திரங்களின் நடுவில் சந்திரனைப்போல் சபை நடுவில் எழுந்து நிற்பவரும்;

---

18. 31. **சிபிரம்** — சேனு நிவாஸஸ்தானம்.

21. 11. ஒ. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்ந்தார் மாட்டு. — குறள்.

---

18. 32. **नैवेमाः पुरग्रामादिकल्पनाः ।**

21. 13. **सा हि दिवौकसाम् ।** பா. பே.

व्यंजिताशेष-गात्रश्री-र्नियमे न्यस्तभूषणः।
कृष्णाजिन-धरः श्रीमान् कुशपाणिः कृतोचितः ॥ २१.१८ ॥

शिशिर-स्निग्ध-ताराक्षः समैक्षत समन्ततः।
ऊचिवानिद-मुर्वीशः सदः संहर्षयन्निव ॥ २१.१९ ॥

पृथुः उवाच—

सभ्याः शृणुत भद्रं वः साधवो य इहागताः।
सत्सु जिज्ञासुभि-र्धर्म-मावेद्यं स्वमनीषितम् ॥ २१.२१ ॥

अहं दण्डधरो राजा प्रजानामिह योजितः।
रक्षिता वृत्तिदः स्वेषु सेतुषु स्थापिता पृथक् ॥ २१.२२ ॥

य उद्धरेत्करं राजा प्रजा धर्मे-ष्वशिक्षयन्।
प्रजानां शमलं भुङ्क्ते भगं च स्वं जहाति सः ॥ २१.२४ ॥

तत् प्रजा भर्तृ-पिण्डार्थं स्वार्थ-मेवानसूयवः।
कुरुताधोक्षज-धियस्तर्हि मेऽनुग्रहः कृतः ॥ २१.२५ ॥

---

21. 18. நியமத்தைக் குறித்து ஆபரணங்களின்மையால் மேனியின் அழகு மறைபடாது முழுதும் நன்கு பிரகாசிப்பவரும், கிருஷ்ணாஜினம் தரித்தவரும், கையில் பவித்திரமுடையவரும், யாக கருமத்தை விதிப்படி செய்து முடித்தவரும், ஸ்ரீமானும்;

21. 19. பூபதியுமான பிருது மகாராஜன் அன்புங் குளிர்ச்சியும் பொருந்திய பார்வையுடன் சபையோர் மகிழும்படி நாற்புறமும் பார்த்து பின்வருமாறு கூறலானார்.

பிருது கூறியது—

21. 21. சபையோர்களே! கேளுங்கள். இங்கெழுந்தருளியுள்ள ஸாதுக்களாகிய உங்கள் எல்லோருக்கும் மங்களம் உண்டாகுக. தருமத்தை அறிய விரும்புவோர் தமது அபிப்பிராயத்தை ஸாதுக்கள் முன்னிலையில் தெரிவித்துக் கொள்ள வேண்டும் (அதனால் பேசத் துணிகின்றேன்).

21. 22. நான் பிரஜைகளைச் சிக்ஷிப்பதற்கும் ரக்ஷிப்பதற்கும் தொழிலைக் கற்பிப்பதற்கும் அவரவர் நிலையில் தவறாது நிலைக்கச் செய்தற்கும் அரசனாக நியமிக்கப் பட்டுள்ளேன்.

21. 24. எந்த அரசன் பிரஜைகளைத் தரும வழியில் நடக்கச் செய்யாமல் கப்பத்தை மட்டும் வாங்கிக் கொள்வானோ அவன் பிரஜைகளின் பாவத்தையனுபவிப்பனாகவும் தனது ஐசுவரியத்தை இழப்பவனாகவும் ஆகின்றான்.

21. 25. ஆகையால் பிரஜைகளே! நீங்கள் அழுக்காறில்லாமல் உங்கள் காவலனான எனக்குப் பிண்டதானம்போல் உங்கள் ஸ்வதர்மத்தை வாசுதேவார்ப்பண புத்தியுடன் அனுஷ்டியுங்கள். அதுவே எனக்குச் செய்யப்பட்ட அனுக்கிரகமாகும்.

---

21. 21. அத: ஜிஜ்ஞாஸைவ க்ரியதே ந து யுஷ்மான் ப்ரதி தர்மப்ரவசனமிதி பாவ:।

---

21. 22. दण्डधरो धाता। 21. 24. भगवन्तं जहाति।

यूयं तदनुमोदध्वं पितृ-देव-र्षयोऽमलाः ।
कर्तुः शास्तु-रनुज्ञातु-स्तुल्यं यत्प्रेत्य तत्फलम् ॥ २१.२६ ॥

गुणायनं शीलधनं कृतज्ञं वृद्धाश्रयं संवृणुतेऽनु संपदः ।
प्रसीदतां ब्रह्मकुलं गवां च जनार्दनः सानुचरश्च मह्यम् ॥ २१.४४ ॥

मैत्रेय उवाच—

इति ब्रुवाणं नृपतिं पितृ-देव-द्विजातयः ।
तुष्टुवु-र्हृष्टमनसः साधुवादेन साधवः ॥ २१.४५ ॥

पुत्रेण जयते लोकानिति सत्यवती श्रुतिः ।
ब्रह्मदण्ड-हतः पापो यद्वेनोऽत्यतरत्तमः ॥ २१.४६ ॥

अद्य नस्तमसः पार-स्त्वयोपासादितः प्रभो ।
भ्राम्यतां नष्ट-दृष्टीनां कर्मभि-र्दैवसंज्ञितैः ॥ २१.५१ ॥

नमो विवृद्ध-सत्त्वाय पुरुषाय महीयसे ।
यो ब्रह्म-क्षत्र-माविश्य बिभर्तीदं स्वतेजसा ॥ २१.५२ ॥

---

21. 26. தூய மனதுள்ள பிதிரர்களும் தேவர்களும் ரிஷிகளும் ஆகிய நீங்கள் என் கோரிக்கையை அனுமோதிக்க வேண்டும். பரலோகத்தில் ஏற்படும் கர்மபலன் கர்த்தாவுக்கும் கட்டளையிடுவோர்க்கும் அனுமோதிப்போர்க்கும் ஸமமானதேயாம்.

21. 44. அந்தணர் குலமும், ஆவின் குலமும், அடியார் குழாத்துடன் ஜனார்த்தனனும் அடியேனுக்கு அருள் புரிய வேண்டும். நற்குணங்களுக்கிருப்பிடமானவனும், நல்லொழுக்கத்தையே செல்வமாய்க்கொண்டவனும், நன்றி மறவாதவனும், பெரியோரைத் துணைக்கொண்டவனுமான மனிதனையே ஸம்பத்துக்கள் நாடி வருகின்றன.

மைத்திரேயர் கூறியது—

21. 45. இவ்வண்ணம் மொழிந்த அரசனிடம் ஸாதுக்களான பிதிரர்களும் தேவர்களும் துவிஜர்களும் மகிழ்ச்சியடைந்து 'நன்று நன்று' என்று அவரைக் கொண்டாடினர்.

21. 46. "பிராம்மண சாபத்தால் உயிரிழந்த பாவியான வேனனும் (உம்மைப் புத்திரனயடைந்ததால்) நரகத்திலிருந்து மீண்டான். அதனால் 'புத்திரனால் நல்ல உலகங்களை ஜயிக்கிறான்' என்ற சுருதி ஸத்தியமென்று நிரூபிக்கப்பட்டது.

21. 51. "பிரபுவே! பிராரப்த கர்மத்தால் அறிவிழந்து ஸம்ஸாரத்தில் சுழலும் நாங்களும் உம்மால் கரையேற்றுவிக்கப் பட்டோம்.

21. 52. "எந்த பகவான் தன் சக்தியால் பிராம்மணரிடம் பிரவேசித்து க்ஷத்திரியரையும் க்ஷத்திரியரிடம் பிரவேசித்துப் பிராம்மணரையும் இருவரிடமும் இருந்துகொண்டு இவ்வுலகையும் இரக்ஷிக்கின்றாரோ அந்த ஸத்துவ குணம் மிகுந்த பரம புருஷரேயான உமக்கு நமஸ்காரம்".

---

21. 52 ஈச்வர புத்தியால் பிராம்மணர்களும் பிருது மகாராஜனை வணங்கினர்.

जनेषु प्रगृणत्स्वेवं पृथुं पृथुल-विक्रमम् ।
तत्रोपजग्मु-र्मुनय-श्चत्वारः सूर्यवर्चसः　　　　॥ २२.१ ॥

गौरवाद्यन्त्रितः सभ्यः प्रश्रयानत-कन्धरः ।
विधिवत् पूजयांचक्रे गृहीताध्यर्हणासनान्　　　　॥ २२.४ ॥

पृथुः उवाच—
अहो आचरितं किं मे मङ्गलं मङ्गलायनाः ।
यस्य वो दर्शनं ह्यासी-द्दुर्दर्शानां च योगिभिः　　　　॥ २२.७ ॥

अधना अपि ते धन्याः साधवो गृहमेधिनः ।
यद्गृहा ह्यर्हवर्याम्बु-तृण-भूमीश्वरावराः　　　　॥ २२.१० ॥

व्यालालय-द्रुमा वै तेऽप्यरिक्ताखिल-सम्पदः ।
यद्गृहा-स्तीर्थपादीय-पादतीर्थ-विवर्जिताः　　　　॥ २२.११ ॥

---

22. 1. பராக்கிரமம் மிகுந்த பிருது மகாராஜனைப் பிரஜைகள் இங்ஙனம் போற்றுகையில் சூரியனுக்கொப்பான தேஜஸ்ஸுடைய முனிவர் நால்வர் அங்கு எழுந்தருளினர்.

22. 4. அர்க்கியம் பாத்தியம் முதலியவற்றால் உபசரிக்கப் பெற்று ஆஸனத்தி லமர்ந்த அவர்களிடம் உள்ள கௌரவ புத்தியால் இயக்குவிக்கப்பட்டு வணங்கிய கழுத்தினராய் அந்த ஸாது சிரேஷ்டர் அவர்களை முறைப்படி பூஜித்தார்.

பிருது கூறியது—

22. 7. மங்களமே உருக்கொண்ட முனிவர்களே! யோகிகளுக்கும் காணக் கிடைக்காத உங்களுடைய தரிசனம் எனக்குக் கிடைத்தது ஆச்சரியம்; அதற்கு என்ன புண்ணியம் செய்தேன்!

22. 10. ஸாதுக்களின் ஆராதனைக்குரிய தீர்த்தமும் தர்ப்பைப் புல் ஆஸனமும் (பரிசுத்தமான) தரையும் பணியாட்களும் யஜமானனும் பொருந்திய கிருஹங்களைப் படைத்த ஸாதுக்களான கிருஹஸ்தர்கள் எவர்களோ அவர்கள் ஏழைகளாயினும் செல்வம் நிறைந்தவர்களே.

22. 11. பகவானுடைய அடியார்களின் திருவடித் தீர்த்தம் கிடைக்கப்பெறாத கிருஹங்கள் எவையோ அவை எல்லா ஸம்பத்துக்களும் குறைவின்றி நிறையப் பெற்றவைகளாயினும் கொடிய பாம்புகள் வசிக்கும் காட்டு மரங்களைப் போன்றவைகளே.

---

22. 1. **முனிவர் நால்வர்** — ஸநகர், ஸநந்தர், ஸநத்குமாரர், ஸநத்ஸுஜாதர்.
22. 10. **ஈச்வர:** — க்ருஹஸ்வாமீ; **அவரா:** — ப்ருத்யாதய:।
22. 11. **அரிக்தா:** — பூர்ண:।

---

22. 10. **भूमीश्वराश्वराः ।**　　　　பா. பே.

स्वागतं वो द्विजश्रेष्ठा यद्व्रतानि मुमुक्षवः ।
चरन्ति श्रद्धया धीरा बाला एव बृहन्ति च ॥ २२.१२ ॥

भवत्सु कुशलप्रश्न आत्मारामेषु नेष्यते ।
कुशलाकुशला यत्र न सन्ति मतिवृत्तयः ॥ २२.१४ ॥

तदहं कृतविश्रम्भः सुहृदो वस्तपस्विनाम् ।
संपृच्छे भव एतस्मिन् क्षेमः केनांजसा भवेत् ॥ २२.१५ ॥

व्यक्त-मात्मवता-मात्मा भगवा-नात्मभावनः ।
स्वाना-मनुग्रहायेमां सिद्धरूपी चरत्यजः ॥ २२.१६ ॥

मैत्रेय उवाच—

पृथो-स्तत्सूक्त-माकर्ण्य सारं सुष्ठु मितं मधु ।
स्मयमान इव प्रीत्या कुमारः प्रत्युवाच ह ॥ २२.१७ ॥

---

22. 12. முனி சிரேஷ்டர்களே! உங்கள் வரவு நல்வரவாகுக! என்றும் பாலர்களாயிருந்துகொண்டே தீரர்களான நீங்கள் முமுக்ஷுக்கள் கைக் கொள்ளும் பெரிய விரதங்களான நைஷ்டிகப் பிரம்மசரியம் முதலிய விரதங்களை சிரத்தையுடன் அனுஷ்டிக்கின்றீர்கள்.

22. 14. நல்லது கெட்டது என்ற வித்தியாஸமான எண்ணங்களே எவர்களிடம் இல்லையோ அப்படிப்பட்ட ஆத்மாராமர்களான உங்களிடம் குசல ப்ரச்னமும் பொருத்த மன்று.

22. 15. தாபத்தையடைந்தவர்களிடம் இரங்கும் உள்ளமுடையவர்கள் நீங்கள். ஆகையால் உங்களிடம் பரம விசுவாசத்துடன் கேட்கிறேன். இச் சம்ஸாரத்தில் எங்ஙனம் எளிய முறையில் க்ஷேமம் உண்டாகும்?

22. 16. ஞான வீரர்களிடம் ஆத்மாவாகவும், பக்தர்களின் உள்ளத்தில் பகவானாகவும் விளங்கும் அவரே பிறவியற்றவராயினும் தனது அடியார்களுக்கு அனுக்கிரகம் செய்யும் பொருட்டு ஸித்தர்கள் வடிவில் சஞ்சரிக்கிறார் என்பது திண்ணம்.

மைத்திரேயர் கூறியது—

22. 17. ஸாரமானதும் தெளிவானதும் சுருக்கமானதும் இனிமையானதுமான பிருதுவின் அவ்வரிய மொழியைக் கேட்டுப் பிரீதியால் மகிழ்ந்து புன்முறுவல் கொண்டவர்போல் ஸநத்குமாரர் மறுமொழி கூறலானார்.

---

22. 14. ஒ. ந த்வேஷ்ட்யகுசலங் கர்ம குசலே நானுஷஜ்ஜதே ।
த்யாகீ ஸத்வ-ஸமாவிஷ்டோ மேதாவீ ச்சின்ன ஸம்சய:॥ —கீ. 18. 10.

22. 15. க்ருத விச்ரம்ப: — க்ருத விச்வாஸ: ।

22. 17. ஸூக்தம் சோபனவசனம், ஸாரம் ந்யாய்யம், ஸுஷ்டு கம்பீரார்த்தம், மிதம் அல்பாக்ஷரம், மது ச்ரோத்ரப்ரியம் ।

22. 17. मितं मधुः । பா. பே.

सनत्कुमार उवाच—

साधु पृष्टं महाराज सर्वभूत-हितात्मना ।
भवता विदुषा चापि साधूनां मति-रीदृशी ॥ २२.१८ ॥

शास्त्रेष्वियानेव सुनिश्चितो नृणां क्षेमस्य सध्र्यग्विमृशेषु हेतुः ।
असंग आत्मव्यतिरिक्त आत्मनि दृढा रति-र्ब्रह्मणि निर्गुणे च या ॥ २२.२१ ॥

सा श्रद्धया भगवद्धर्म-चर्यया जिज्ञासयाऽऽध्यात्मिक-योगनिष्ठया ।
योगेश्वरोपासनया च नित्यं पुण्यश्रवःकथया पुण्यया च ॥ २२.२२ ॥

अर्थेन्द्रियाराम-सगोष्ठ्यतृष्णया तत्सम्मताना-मपरिग्रहेण च ।
विविक्तरुच्या परितोष आत्मन् विना हरे-र्गुणपीयूष-पानात् ॥ २२.२३ ॥

हरे-र्मुहु-स्तत्परकर्णपूर-गुणाभिधानेन विजृंभमाणया ।
भक्त्या ह्यसंगः सदसत्यनात्मनि स्यान्निर्गुणे ब्रह्मणि चांजसा रतिः॥ २२.२५ ॥

---

ஸநத்குமாரர் கூறியது—

22. 18. மகாராஜனே! உம்மால் அறியப்பட்டதேயாயினும் எல்லாருக்கும் நன்மை செய்வதில் விரும்பி நீர் கேட்டது நன்று. ஸாதுக்களின் புத்தி இத்தகையது தான்.

22. 21. அனுத்ம விஷயத்தில் வைராக்கியமும், ஆத்ம ஸ்வருபமான நிர்க்குணப் பிரம்மத்தினிடம் திடமான பற்றும் ஆகிய இதுவே மனிதர்களின் க்ஷேமத்துக்குக் காரணம் என்று ஆராய்ச்சியில் சிறந்த சாஸ்திரங்களின் துணிபு.

22. 22. அது சிரத்தையாலும், பாகவத தர்மானுஷ்டானத்தாலும், தத்துவ விசாரத்தாலும், ஞானயோக நிஷ்டையாலும், யோகேசுவர உபாஸனையாலும், இடைவிடாது பகவத் விஷயத்தைக் கேட்பதாலும் பேசுவதாலும் ;

22. 23. பொருளீட்டுவதிலேயே ரமிப்பவர்களும் அவர்களுக்குப் பிரியமானவர்களும் எவர்களோ அவர்களிடம் பற்றின்மையாலும், அவர்களுக்குப் பிடித்ததில் பிடிப்பின்மையாலும், ஹரிகுணமாகிய அமிருதபானம் இல்லாத ஸமயங்களில் தன்னிடத்திலேயே ரமிக்க ஏகாந்தத்தில் விருப்பத்தாலும் ;

22. 25. பக்தர்களின் செவிகளைப் பூரிக்கச் செய்யும்படியான ஹரிகுணங்களை அடிக்கடி கானம் செய்வதால் வளர்ச்சியுற்ற பக்தியாலும், கார்ய காரணவடிவான பிரபஞ்சத்தில் பற்று நீங்கி நிர்க்குணப் பிரம்மத்திடம் பற்று தானகவே எளிதில் ஏற்படும்.

---

22. 21. **ஸத்ர்யக்—ஸம்யக்**

22. 23. **அர்த்தாராமா:—அர்த்த**நிஷ்டாஸ்தாமஸா: இந்த்ரியாராமா: **காமநிஷ்டா** ராஜஸா: தேஷாஞ்ச யே ஸம்மதா அர்த்தா: காமாச்ச தேஷாம-பரிக்ரஹேணஸக்த்யா ।

**राजोवाच—**

**कृतो मेऽनुग्रहः पूर्वं हरिणार्तानुकंपिना ।**
**तमापादयितुं ब्रह्मन् भगवन् यूयमागताः** ॥ २२.४२ ॥

**निष्पादितश्च कात्स्न्येन भगवद्भि-र्घृणालुभिः ।**
**साधूच्छिष्टं हि मे सर्व-मात्मना सह किं ददे** ॥ २२.४३ ॥

**प्राणा दाराः सुता ब्रह्मन् गृहाश्च सपरिच्छदाः ।**
**राज्यं बलं मही कोश इति सर्वं निवेदितम्** ॥ २२.४४ ॥

**यै-रीदृशी भगवतो गतिरात्मवादे एकान्ततो निगमिभिः प्रतिपादिता नः ।**
**तुष्यन्त्वदभ्र-करुणाः स्वकृतेन नित्यं को नाम**
**तत्प्रतिकरोति विनोदपात्रम्** ॥ २२.४७ ॥

---

பிருது மகாராஜன் கூறியது—

22. 42. பிரம்ம ஸ்வரூபியே! பகவத் ஸ்வரூபியே! எளியார்க்கிரங்கும் பகவாஞல் எனக்கு முன்பு அனுக்கிரஹம் செய்யப்பட்டது. அதை எனக்கு அடைவிக்கும் பொருட்டே நீங்கள் எழுந்தருளினீர்கள்.

22. 43. அன்பு நிறைந்த தேவரீர்களால் அது பரிபூர்ணமாகச் செய்யப்பட்டது. என்னுடையது எல்லாமும் நானும் ஸாதுக்களின் உச்சிஷ்டம். உங்களுக்கு நான் எதைக் கொடுப்பேன் ?

22. 44. பிராணன்கள், பெண்டுகள், மக்கள், வீடுகள், பரிவாரங்கள், ராஜ்யம், பலம், பூமி, பொக்கிஷம் இவையனுத்தும், நிவேதனம் செய்யப்பட்டது.

22. 47. வேதத்தின் முடிவான பொருள் இன்னதென்றுணர்ந்த எவர்களால் எங்களுக்கு பகவானை அடையும் மார்க்கம் இங்ஙனம் உபதேசிக்கப்பட்டதோ அவர்கள் அபரிமிதமான கருணையுடையவர்கள். என்றும் அவர்கள் செயலாலேயே அவர்கள் திருப்தியடையட்டும். அவர்களுக்கு அஞ்ஜலியைத் தவிர்த்து எவன்தான் பிரதிசெய்ய இயலும்?

---

22. 43-44. **ஸாதூச்சிஷ்டம்**—(ஸாதுபி: ஸ்வீயம் ஸன்மஹ்யம் ப்ரஸாதரூபேண தத்த-மதஸ் தத்ர மயி ஸ்வத்வாபாவாத் குருதக்ஷிணார்த்தம் கிம் ததே! நிவேதனந்து ததீயஸ்யைவ ஸமர்ப்பணம் யதா ப்ருத்யோ ராஜ்ஞோ ஸேவாதி-ரூபேண தாம்பூலாதிக-மர்ப்பயதி) எல்லாம் ஸாதுக்கள் அனுக்ரஹரூபமாக என்னிடம் கொடுத்துள்ளதால் என்னுடையதென்று குருதக்ஷிணையாக எதைக் கொடுப்பேன் ? என்றாலும் வேலைக்காரனிடம் கொடுத்த வெற்றிலைப் பெட்டியிலிருந்து வேலைக்காரன் அரசனுக்குத் தாம்பூலம் கொடுப்பதுபோல் நானும் என்னுடைமையை நிவேதனம் செய்கிறேன். —ஸ்ரீ.

ஒ. ஜனகர் குருவாகிய யாஜ்ஞவல்க்யரிடம் கூறியது—(ஸோஹம் பகவதே விதேஹாம் ததாமி மாஞ்சாபி ஸஹ தாஸ்யாயேதி) இங்ஙனம் அருளப்பெறற அடியேன் தேவரீருக்கு விதேக நாடுகளையும் சேவை புரிவதற்காக அடியேனையுந் தருகின்றேன். —ப்ரு. உப. 4. 4-23.

22. 47. (ஸத்யபி ஸ்வத்வே ஸர்வஸ்வேனபி ந குரோ: ப்ரத்யுபகர்த்தும் சக்யமித்யாஹ! உதபாத்ரம் அஞ்ஜலிம் விநா, மயா அஞ்சலிரேவ தேப்யோ பத்த இத்யர்த்த:! யத்வா விநோத பாத்ர-முபஹாஸாஸ்பதம், ப்ரத்யுபகாரே ப்ரவ்ருத்தோ ஜனோ-முபஹாஸாஸ்பதம் பவேதித் யர்த்த:) சொத்துரிமை இருந்தாலுங்கூட அத்தனையுங் கொடுத்தாலும் அது குருவுக்குப் பிரத்யுபகாரமாகாது. (விநா உதபாத்ரம்) அஞ்சலியைத் தவிர என்ன செய்யக்கூடும்? ஆகையால் அஞ்ஜலி யொன்றே செய்கிறேன். அல்லது பிரதிசெய்ய முயன்றல் நான் ஜனங்களுக்கு (விநோத பாத்ரம்) நகைப்புக்கு இடமாவேன். —ஸ்ரீ.

मैत्रेय उवाच—

त आत्मयोगपतय आदिराजेन पूजिताः ।
शीलं तदीयं शंसन्तः खेऽभूवन्मिषतां नृणाम् ॥ २२.४८ ॥

वैन्यस्तु धुर्यो महतां संस्थित्याध्यात्म-शिक्षया ।
आप्तकाम-मिवात्मानं मेन आत्मन्यवस्थितः ॥ २२.४९ ॥

गृहेषु वर्तमानोऽपि स साम्राज्य-श्रियान्वितः ।
नासज्जतेन्द्रियार्थेषु निरहं-मति-रर्कवत् ॥ २२.५२ ॥

एव-मध्यात्मयोगेन कर्माण्यनु-समाचरन् ।
पुत्रानुत्पादयामास पंचार्चि-ष्यात्म-सम्मतान् ॥ २२.५३ ॥

आत्मजेष्वात्मजां न्यस्य विरहाद्रुदतीमिव ।
प्रजासु विमनःस्वेकः सदारोऽगात्तपोवनम् ॥ २३.३ ॥

तितिक्षु-र्यतवाग्दान्त ऊर्ध्वरेता जितानिलः ।
आरिराधयिषुः कृष्णमचरत्तप उत्तमम् ॥ २३.७ ॥

---

மைத்திரேயர் கூறியது—

22. 48. ஆத்மயோகத்தின் அதிபதிகளான அம்முனிவர்கள் ஆதிராஜனை பிருதுவால் பூஜிக்கப்பெற்று அவருடைய நல்லொழுக்கத்தைப் போற்றிக்கொண்டு ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஆகாசமார்க்கமாய்க் கிளம்பினர்.

22. 49. மஹான்களிற் சிறந்த வேனபுத்திரரும் அத்தியாத்ம உபதேசத்தால் ஏற்பட்ட ஸ்திதப்ரஜ்ஞையால் ஆத்மாவிலேயே நிலைபெற்றவராய்த் தன்னை ஆப்தகாமன் எனக் கருதினர்.

22. 52. அவர் கிருஹங்களில் இருந்தபோதிலும், சக்ரவர்த்திப் பதவியிலிருந்த போதிலும் நான் என்ற எண்ணமில்லாதவராய் சூரியனைப்போல் இந்திரிய விஷயங்களில் பற்றற்றிருந்தார்.

22. 53. இவ்விதம் அத்தியாத்ம யோகநிஷ்டராக இருந்துகொண்டே கர்மங்களை அனுஷ்டிக்கின்றவராய்ப் பிருதுமகாராஜா தனது பத்தினியான அர்ச்சிஸ்ஸிடம் தனக்குச் சமமான ஐந்து புத்திரர்களை உண்டாக்கினர்.

23. 3. புத்திரிபோல் பராமரித்த பூமியைப் புத்திரர்களிடம் ஒப்படைத்துவிட்டு, பூதேவி பிரிவாற்றுமையால் வருந்தவும், பிரஜைகள் கவலையுற்றேங்கவும், பத்தினிமட்டும் தொடரத் தனியே தபோவனம் சென்றார்.

23. 7. குளிர் வெப்பம் முதலியவற்றைச் சகித்துக்கொண்டு, மௌனியாய்ப் பிரம்மசரிய விரதமுடையவராய்ப் பிராணாயாமபரராய்க் கிருஷ்ணனை ஆராதித்துக் கொண்டு உத்தமமான தவத்தை யனுஷ்டித்தார்.

---

22. 49. **துர்யோ** முக்ய: ।
**ஆப்தகாம:**—ஒ. ஆப்தகாம - மாத்மகாம - மகாமம் ரூபம் **சோகாந்தரம்** ।
ப்ரு. உப. 4. 3-21.

सनत्कुमारो भगवान् यदाहाध्यात्मिकं परम् ।
योगं तेनैव पुरुष-मभजत् पुरुषर्षभः ॥ २३.९ ॥

एवं स वीरप्रवरः संयोज्यात्मान-मात्मनि ।
ब्रह्मभूतो दृढं काले तत्याज स्वं कलेवरम् ॥ २३.१३ ॥

अर्चि-र्नाम महाराज्ञी तत्पत्न्यनुगता वनम् ।
सुकुमार्यतदर्हा च यत्पद्भ्यां स्पर्शनं भुवः ॥ २३.१९ ॥

अतीव भर्तु-र्व्रतधर्म-निष्ठया शुश्रूषया चारषदेहयात्रया ।
नाविन्दतार्तिं परिकर्शितापि सा प्रेय-स्कर-स्पर्शन-मान-निर्वृतिः ॥ २३.२० ॥

देहं विपन्नाखिल-चेतनादिकं पत्युः पृथिव्या दयितस्य चात्मनः ।
आलक्ष्य किंचिच्च विलप्य सा सती चितामथारोपय-दद्रि-सानुनि ॥ २३.२१ ॥

विधाय कृत्यं ह्रदिनी जलाप्लुता दत्वोदकं भर्तु-रुदारकर्मणः ।
नत्वा दिविस्थां-स्त्रिदशां-स्त्रिः परीत्य विवेश वह्निं ध्यायती भर्तृ-पादौ
॥ २३.२२ ॥

---

23. 9. புருஷசிரேஷ்டரான பிருது எந்த உயர்ந்த அத்தியாத்மயோக மார்க்கத்தைத் தனக்கு பகவான் ஸனத்குமாரர் உபதேசித்தாரோ அதனுலேயே பரமபுருஷனை ஆராதித்தார்.

23. 13. ஞானவீரர்களிற் சிறந்த பிருது தன்னைப் பரமாத்மாவிடத்தில் திடமாக அர்ப்பணம் செய்து பிரம்மபூதனுகி உரியகாலத்தில் தனது சரீரத்தை விட்டார்.

23. 19-20. அவருடைய பத்தினி மஹாராணி அர்ச்சிஸ்தேவியும் பூமியில்பட்டாலும் நோகும்படி மெதுவான பாதங்களையுடையவள் அவருடன் வனத்துக்கு வந்து பர்த்தாவின் விரததர்ம நிஷ்டையாலும் பணிவிடையாலும் ரிஷி நியம வாழ்க்கையாலும் மிகவும் உடல் இளைத்தபோதிலும், பிரியமான பர்த்தாவின் கரஸ்பர்சத்தாலும் வெகுமானத்தாலும் அடைந்த இன்பத்தால் கஷ்டத்தை உணரவில்லை.

23. 21. உலகநாயகனும் தன் பிரியநாயகனுமான பிருதுவின் சரீரம் உணர்விழந்ததைக் கண்டு மகா பதிவிரதையான அவள் சிறிது விலாபித்துவிட்டு மலையின் சரிவில் அதைச் சிதையில் ஏற்றினுள்.

23. 22. மடுவின் ஜலத்தில் ஸ்நாநம் செய்து பின் செய்யவேண்டிய கிருத்தியத்தைச் செய்து கர்மவீரரான பர்த்தாவுக்குத் தர்ப்பணத்தையும் செய்து, வானிலுள்ள தேவர்களை வணங்கி, மூன்று தடவை வலம் வந்து, பர்த்தாவின் பாதங்களைத் தியானித்துக்கொண்டு அக்னியில் பிரவேசித்தாள்.

---

23. 20. कर्षितदेहयात्रया ।

दैव्य ऊचुः—

अहो इयं वधू-र्धन्या या चैवं भूभुजां पतिम् ।
सर्वात्मना पतिं भेजे यज्ञेशं श्रीर्वधूरिव ॥ २३.२६ ॥

मैत्रेय उवाच—

स्तुवती-ष्वमरस्त्रीषु पतिलोकं गता वधूः ।
यं वा आत्मविदां धुर्यो वैन्यः प्रापाच्युताशयः ॥ २३.२९ ॥

इत्थं-भूतानुभावोऽसौ पृथुः स भगवत्तमः ।
कीर्तितं तस्य चरित-मुद्दाम-चरितस्य ते ॥ २३.३० ॥

मैत्रेय उवाच—

विजिताश्वोऽधिराजाऽऽसीत् पृथुपुत्रः पृथुश्रवाः ॥ २४.१ ॥

अन्तर्धानगतिं शक्राल्लब्ध्वान्तर्धान-संज्ञितः ॥ २४.३ ॥

अन्तर्धानो नभस्वत्यां हविर्धान-मविन्दत ॥ २४.५ ॥

बर्हिषत् सुमहाभागो हाविर्धानिः प्रजापतिः ।
क्रियाकाण्डेषु निष्णातो योगेषु च कुरूद्वह ॥ २४.९ ॥

தேவஸ்திரீகள் கூறியது—

23. 26. ஆச்சரியம்! இப்பெண்ணே பாக்கியசாலி. ஸ்ரீதேவி ஸ்ரீமந்நாராயணனை யனுசரிப்பதுபோலல்லவா இவள் ராஜாதிராஜனை தன் பதியை எல்லா வகையிலும் பின்பற்றினள்.

மைத்திரேயர் கூறியது—

23. 29. தேவ ஸ்திரீகள் இங்ஙனம் போற்றுகையில் ஆத்மஞானிகளிற் சிரேஷ்டரும் அச்சுதனிடம் லயித்தவருமான வேனபுத்திரர் எவ்வுலகை அடைந்தாரோ அந்தப் பதி லோகத்தை அப் பத்தினியும் அடைந்தாள்.

23. 30. பரம பாகவதரான பிருது இப்படிப்பட்ட மகிமை பொருந்தியவர். உத்தமமான கீர்த்தி வாய்ந்த அவருடைய சரித்திரம் உமக்குக் கூறப்பட்டது.

பிருதுமகாராஜன் சரித்திரம் முற்றிற்று.

## புரஞ்ஜனோபாக்கியானம்

மைத்திரேயர் கூறியது—

24. 1. புகழ்பெற்ற பிருது புத்திரன் விஜிதாசுவன் சக்ரவர்த்தியானன்.

24. 3. (எவருமறியாது மறைந்துகொள்ளக் கூடிய) அந்தர்த்தான சக்தியை இந்திரனிடமிருந்து பெற்று அந்தர்த்தானன் என்ற சிறப்புப் பெயரை யடைந்தான்.

24. 5. அந்த அந்தர்த்தானன் நபஸ்வதியெனும் மனைவியிடம் ஹவிர்த்தானன் என்ற புத்திரனை யடைந்தான்.

24. 9. விதுரரே! ஹவிர்த்தானன் புத்திரன் பர்ஹிஷத் என்ற அரசன் மிக்க பெருமை வாய்ந்தவன். கரும காண்டங்களிலும் யோகங்களிலும் வெகு ஸமர்த்தன்.

---

23. 29. यो वा ।

23. 30. सोऽभवद्भुत्तमः । பா. பே.

सनत्कुमारो भगवान् यदाहाध्यात्मिकं परम्।
योगं तेनैव पुरुष-मभजत् पुरुषर्षभः ॥ २३.९ ॥

एवं स वीरप्रवरः संयोज्यात्मान-मात्मनि।
ब्रह्मभूतो दृढं काले तत्याज स्वं कलेवरम् ॥ २३.१३ ॥

अर्चि-र्नाम महाराज्ञी तत्पत्न्यनुगता वनम्।
सुकुमार्यतदर्हा च यत्पद्भ्यां स्पर्शनं भुवः ॥ २३.१९ ॥

अतीव भर्तु-र्व्रतधर्म-निष्ठया शुश्रूषया चारषदेहयात्रया।
नाविन्दतार्तिं परिकर्शितापि सा प्रेय-स्कर-स्पर्शन-मान-निर्वृतिः ॥ २३.२० ॥

देहं विपन्नाखिल-चेतनादिकं पत्युः पृथिव्या दयितस्य चात्मनः।
आलक्ष्य किंचिच्च विलप्य सा सती चितामथारोपय-दद्रि-सानुनि ॥ २३.२१ ॥

विधाय कृत्यं ह्रदिनी जलाप्लुता दत्त्वोदकं भर्तु-रुदारकर्मणः।
नत्वा दिविस्थां-स्त्रिदशां-स्त्रिः परीत्य विवेश वह्निं ध्यायती भर्तृ-पादौ ॥ २३.२२ ॥

23. 9. புருஷசிரேஷ்டரான பிருது எந்த உயர்ந்த அத்தியாத்மயோக மார்க்கத்தைத் தனக்கு பகவான் ஸனத்குமாரர் உபதேசித்தாரோ அதனுலேயே பரமபுருஷனை ஆராதித்தார்.

23. 13. ஞானவீரர்களிற் சிறந்த பிருது தன்னைப் பரமாத்மாவிடத்தில் திடமாக அர்ப்பணம் செய்து பிரம்மபூதனுகி உரியகாலத்தில் தனது சரீரத்தை விட்டார்.

23. 19-20. அவருடைய பத்தினி மஹாராணி அர்ச்சிஸ்தேவியும் பூமியில்பட்டாலும் நோகும்படி மெதுவான பாதங்களையுடையவள் அவருடன் வனத்துக்கு வந்து பர்த்தாவின் விரததர்ம நிஷ்டையாலும் பணிவிடையாலும் ரிஷி நியம வாழ்க்கையாலும் மிகவும் உடல் இளைத்தபோதிலும், பிரியமான பர்த்தாவின் கரஸ்பர்சத்தாலும் வெகுமானத்தாலும் அடைந்த இன்பத்தால் கஷ்டத்தை உணரவில்லை.

23. 21. உலகநாயகனும் தன் பிரியநாயகனுமான பிருதுவின் சரீரம் உணர்விழந்ததைக் கண்டு மகா பதிவிரதையான அவள் சிறிது விலாபித்துவிட்டு மலையின் சரிவில் அதைச் சிதையில் ஏற்றினுள்.

23. 22. மடுவின் ஜலத்தில் ஸ்நானம் செய்து பின் செய்யவேண்டிய கிருத்தியத்தைச் செய்து கர்மவீரரான பர்த்தாவுக்குத் தர்ப்பணத்தையும் செய்து, வானிலுள்ள தேவர்களை வணங்கி, மூன்று தடவை வலம் வந்து, பர்த்தாவின் பாதங்களைத் தியானித்துக்கொண்டு அக்னியில் பிரவேசித்தாள்.

23. 20. कर्षितदेहयात्रया।

देव्य ऊचुः—

अहो इयं वधू-र्धन्या या चैवं भूभुजां पतिम्।
सर्वात्मना पतिं भेजे यज्ञेशं श्रीर्वधूरिव ॥ २३.२६ ॥

मैत्रेय उवाच—

स्तुवती-ष्वमरस्त्रीषु पतिलोकं गता वधूः।
यं वा आत्मविदां धुर्यो वैन्यः प्रापाच्युताशयः ॥ २३.२९ ॥

इत्थं-भूतानुभावोऽसौ पृथुः स भगवत्तमः।
कीर्तितं तस्य चरित-मुद्दाम-चरितस्य ते ॥ २३.३० ॥

मैत्रेय उवाच—

विजिताश्वोऽधिराजाऽऽसीत् पृथुपुत्रः पृथुश्रवाः ॥ २४.१ ॥

अन्तर्धानगतिं शक्राल्लब्ध्वान्तर्धान-संज्ञितः ॥ २४.३ ॥

अन्तर्धानो नभस्वत्यां हविर्धान-मविन्दत ॥ २४.५ ॥

बर्हिषत् सुमहाभागो हाविर्धानिः प्रजापतिः।
क्रियाकाण्डेषु निष्णातो योगेषु च कुरूद्वह ॥ २४.९ ॥

தேவஸ்திரீகள் கூறியது—

23. 26. ஆச்சரியம்! இப்பெண்ணே பாக்கியசாலி. ஸ்ரீதேவி ஸ்ரீமந்நாராயணனை யனுசரிப்பதுபோலல்லவா இவள் ராஜாதிராஜனை தன் பதியை எல்லா வகையிலும் பின்பற்றினாள்.

மைத்திரேயர் கூறியது—

23. 29. தேவ ஸ்திரீகள் இங்ஙனம் போற்றுகையில் ஆத்மஞானிகளிற் சிரேஷ்டரும் அச்சுதனிடம் லயித்தவருமான வேனபுத்திரர் எவ்வுலகை அடைந்தாரோ அந்தப் பதி லோகத்தை அப் பத்தினியும் அடைந்தாள்.

23. 30. பரம பாகவதரான பிருது இப்படிப்பட்ட மகிமை பொருந்தியவர். உத்தமமான கீர்த்தி வாய்ந்த அவருடைய சரித்திரம் உமக்குக் கூறப்பட்டது.

பிருதுமகாராஜன் சரித்திரம் முற்றிற்று.

## புரஞ்ஜனோபாக்கியானம்

மைத்திரேயர் கூறியது—

24. 1. புகழ்பெற்ற பிருது புத்திரன் விஜிதாசுவன் சக்ரவர்த்தியானான்.

24. 3. (எவருமறியாது மறைந்துகொள்ளக் கூடிய) அந்தர்த்தான சக்தியை இந்திரனிடமிருந்து பெற்று அந்தர்த்தானன் என்ற சிறப்புப் பெயரை யடைந்தான்.

24. 5. அந்த அந்தர்த்தானன் நபஸ்வதியெனும் மனைவியிடம் ஹவிர்த்தானன் என்ற புத்திரனை யடைந்தான்.

24. 9. விதுரரே! ஹவிர்த்தானன் புத்திரன் பர்ஹிஷத் என்ற அரசன் மிக்க பெருமை வாய்ந்தவன். கரும காண்டங்களிலும் யோகங்களிலும் வெகு ஸமர்த்தன்.

---

23. 29. यो वा।

23. 30. सोऽभवदुत्तमः। பா. பே.

यस्येदं देवयजनमनु यज्ञं वितन्वतः ।
प्राचीनाग्रैः कुशैरासीदास्तृतं वसुधातलम् ॥ २४.१० ॥

प्राचीनबर्हिषं क्षत्तः कर्मस्वासक्त-मानसम् ।
नारदोऽध्यात्मतत्त्वज्ञः कृपालुः प्रत्यबोधयत् ॥ २५.३ ॥

श्रेयस्त्वं कतमद्राजन् कर्मणा आत्मन ईहसे ।
दुःखहानिः सुखावाप्तिः श्रेय-स्तन्नेह चेष्यते ॥ २५.४ ॥

प्राचीन-बर्हिरुवाच—
न जानामि महाभाग परं कर्मापविद्धधीः ।
ब्रूहि मे विमलं ज्ञानं येन मुच्येत कर्मभिः ॥ २५.५ ॥

नारद उवाच—
भो भोः प्रजापते राजन् पशून् पश्य त्वयाऽध्वरे ।
संज्ञापितान् जीवसङ्घा-न्निर्घृणेन सहस्रशः ॥ २५.७ ॥

---

24. 10. ஒன்றின்பின் ஒன்ருகத் தொடர்ந்து யாகங்களைச் செய்து தேவதைகளை யாராதித்த பெருமை இவருடையதாதலால் கிழக்கு நுனியாகப் பரப்பப்பெற்ற தர்ப்பைகளால் பூமி முழுதுமே மூடப்பட்டதுபோலாயிற்று. (இதனுல் இவருக்குப் பிராசீன பர்ஹிஸ் என்று காரணப் பெயர்).

25. 3. விதுரரே! அத்தியாத்துமதத்துவ ஞானியும் பரமதயாளுவுமான நாரதர் கருமத்திலழுந்திய மனமுடைய பிராசீன பர்ஹிஸ்ஸுக்கு ஞானுபதேசம் செய்யலானுர்.

25. 4. "அரசே! கருமத்தால் நீர் அடைய விரும்பும் சிரேயஸ்தான் என்ன? துக்க நிவிருத்தியும் சுகப்ராப்தியுந்தான் சிரேயஸ் எனப்படும். அது இதில் கிட்டாது.

பிராசீனபர்ஹிஸ் கூறியது—

25. 5. மகிமை பொருந்திய முனிவரே! நான் கருமங்களினுல் பிளவுபட்ட புத்தியுடையவனு யிருப்பதால் அதினும் சிறந்ததை அறிந்துகொள்ளவில்லை. ஆகையால் கருமங்களினின்று எதனுல் விடுபடலாமோ அந்தத் தெளிவான ஞானத்தை எனக்கு உபதேசித்தருளல் வேண்டும்.

நாரதர் கூறியது—

25. 7. பிரஜைகளை ஆளும் அரசே! இதோ, இதோ பாரும் இந்த ஜீவக் கூட்டங்களை! தயை யில்லாமல் ஆயிரக்கணக்கில் உம்மால் யாகங்களில் கொல்லப் பட்ட பிராணிகள் இவை.

---

24. 10.

ப்ருது-அர்ச்சிஸ்
|
விஜிதாச்வன்
|
ஹவிர்த்தானன்
|
ப்ராசீன பர்ஹிஸ்
|
ப்ரசேதஸர்கள்

25. 7. நாரதர் —'எதற்காகக் கர்மங்களைச் செய்கிறீர் ?'
பிராசீபைர்ஹிஸ் — 'துக்க நிவிருத்க்காகவும் சுகப்பிராப்திக்காகவும்.'
நாரதர்—'கர்மாவால் நித்ய சுகம் கிடையாது.'
(யோக சக்தியால் அநேக ஆடுகளைக் காட்டினுர்).
பிராசீனபர்ஹிஸ்—'இது என்ன?'
நாரதர்—'இரும்புக் கொம்புடன் உன் குடலைப்பிடுங்க இவை காத்திருக்கின்றன'.

एते त्वां संप्रतीक्षन्ते स्मरन्तो वैशसं तव ।
संपरेतमयः कूटै-श्छिन्दन्त्युत्थित-मन्यवः ॥ २५.८ ॥

अत्र ते कथयिष्येऽमु-मितिहासं पुरातनम् ।
पुरंजनस्य चरितं निबोध गदतो मम ॥ २५.९ ॥

आसीत् पुरंजनो नाम राजा राजन् बृहच्छ्रवाः ।
तस्याविज्ञात-नामाऽऽसीत् सखाऽविज्ञात-चेष्टितः ॥ २५.१० ॥

सोऽन्वेषमाणः शरणं बभ्राम पृथिवीं प्रभुः ।
नानुरूपं यदाविन्द-दभूत् स विमना इव ॥ २५.११ ॥

स एकदा हिमवतो दक्षिणेष्वथ सानुषु ।
ददर्श नवभि-र्द्वार्भिः पुरं लक्षित-लक्षणाम् ॥ २५.१३ ॥

यदृच्छयाऽऽगतां तत्र ददर्श प्रमदोत्तमाम् ।
भृत्यैर्दशभिरायान्ती-मेकैकशत-नायकैः ॥ २५.२० ॥

---

25. 8. இவை உமது கொடுமையை நினைத்துக்கொண்டு, இறந்தபின் வரும் உம்மை இரும்புபோன்ற கொம்புகளால் குத்துவதற்கு மிகுந்த கோபத்துடன் எதிர் பார்த்துக்கொண்டிருக்கின்றன.

25. 9. இவ்விஷயத்தில் உமக்கு (அறிவுறுத்த) பழைமையான இதிஹாஸக் கதை யொன்று சொல்லப்போகிறேன். அது புரஞ்ஜனோபாக்கியானம். அதைக் கூறும் என்னிடம் கவனமாய்க் கேட்டுத் தெளியவேண்டும்.

25. 10. அரசே! மிகுந்த புகழ்பெற்ற பிரசித்தமான அரசன் ஒருவன் புரஞ்ஜனன் என்று இருந்தான். அறியமுடியாத நடத்தையுடைய ஒரு நண்பன் அவனுக்கு உண்டு; அவன் பெயர் அவிஜ்ஞாதன்.

25. 11. பிரபு புரஞ்ஜனன் தனக்குத் தகுந்த ராஜதானியைத் தேடிக்கொண்டு பூமியைச் சுற்றி வந்தான். தகுந்த இடத்தை அடையாமையால் மனக்கவலை மிக்கவன்போலானான்.

25. 13. அவன் ஒரு சமயம் இமயமலையின் தென் சாரலில் ஒன்பது வாயில்களுடையதும் எல்லா லக்ஷணங்களும் பொருந்தியதுமான ஒரு புரத்தைக் கண்டான்.

25. 20. அப்போது எதிர்பாராது தானாகவே அங்கு வந்த ஒரு உத்தம ஸ்திரீயையும் கண்டான். அவளைச் சூழ்ந்து பத்து வேலையாட்கள் இருந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் நூறு மனைவிகள்.

---

25. 10. **புரஞ்ஜன:**—(ஸ்வகர்மபி: புரம் சரீரம் ஜனயதீதி புரஞ்ஜனோ ஜீவ: । ந விஜ்ஞாதம் நாம யஸ்ய ந ச விஜ்ஞாதம் சேஷ்டிதம் யஸ்ய ஸ ஈச்வரஸ் தஸ்ய ஸகா । யத்வா விஜ்ஞாதம் சேஷ்டிதம் ஜீவப்ரேரணாதி லக்ஷணம் யஸ்ய ஜீவ பாரதந்த்ர்யஸ்யானுபவஸித்தத்வாத்) தனது கர்மங்களால் புரமாகிய சரீரத்தை உற்பத்தி செய்விப்பதால் புரஞ்ஜனன் எனப்படுபவன் ஜீவன். எவனுடைய பெயரும் செயலும் தெரியாதோ அந்த ஈசுவரன் நண்பன். அல்லது ஜீவனை ஏவிக்கொண்டிருப்பதும் ஜீவன் அவனிடம் பரதந்திரனாயிருப்பதும் அனுபவஸித்தமாயிருப்பதால் விஜ்ஞாத சேஷ்டிதன் எனலுமாம். —ஸ்ரீ.

ஒ. ஏதவனூர் ஏதவன்பேர்? —திருவெம்பாவை

25. 20. தசபிர்-ஜ்ஞான- கர்மேந்த்ரியை: ஏகைகம் ப்ரத்யேகம் சதமனந்தாவ்ருத்தயஸ்-தா ச நாயகை: ஸஹ பதிபி: பாடாந்தரே நாயிகா: ஸ்த்ரியோ யேஷாம் தை: । —ஸ்ரீ.

---

25. 13. नवभिर्द्वारैः । பா. பே.

पुरंजन उवाच—

का त्वं कंजपलाशाक्षि कस्यासीह कुतः सति ।
इमामुप पुरीं भीरु किं चिकीर्षसि शंस मे ॥ २५.२६ ॥

नारद उवाच—

इत्थं पुरंजनं नारी याचमान-मधीरवत् ।
अभ्यनन्दत तं वीरं हसन्ती वीर-मोहिता ॥ २५.३२ ॥

नारी उवाच—

न विदाम वयं सम्यक्कर्तारं पुरुषर्षभ ।
आत्मनश्च परस्यापि गोत्रं नाम च यत्कृतम् ॥ २५.३३ ॥

एते सखायः सख्यो मे नरा नार्यश्च मानद ।
सुप्तायां मयि जागर्ति नागोऽयं पालयन् पुरीम् ॥ २५.३५ ॥

दिष्ट्यागतोसि भद्रं ते ग्राम्यान् कामा-नभीप्ससे ।
उद्वहिष्यामि तांस्तेऽहं स्वबन्धुभि-ररिन्दम ॥ २५.३६ ॥

---

புரஞ்ஜனன் கூறியது—

25. 26. தாமரை இதழ்போன்ற கண்களை உடையவளே! ஸதி! அச்சங்கொண்டவளே! நீ யார்? யாருடைய பெண்? எங்கிருந்து வருகிறாய்? இந்தப் பட்டணத்துக் கருகில் எதை நாடுகிறாய்? எனக்குக் கூறுவாய்.

நாரதர் கூறியது—

25. 32. அரசே! அந்த ஸ்திரீயும் அவ் வீரனைக்கண்டு மோகித்துப் புன்முறுவல் பூத்துக் கோழைபோல் யாசிக்கும் அவனை (தன் இனிய மொழியால்) மகிழ்வித்தாள்.

ஸ்திரீ கூறியது—

25. 33. புருஷசிரேஷ்டரே! எமக்கோ பிறர்க்கோ கோத்திரமும் பெயரும் எவரால் ஏற்பட்டதோ எவர் எமக்குக் கர்த்தாவோ அவரை நாங்கள் நன்றாகத் தெரிந்து கொள்ளவில்லை!

25. 35. எங்களிடம் நன்மதிப்புக்கொண்டவரே! இம்மனிதர்கள் எனது பணியாட்கள்; இப் பெண்கள் எனது பணிப்பெண்கள். நான் தூங்கும்போது விழித்திருந்து பட்டணத்தைக் காப்பது இந்தப் பாம்பு.

25. 36. சத்துருக்களை அடக்கியாள்பவரே! தெய்வத்தால் நீர் இங்கு வந்தீர். உமக்கு மங்களம் உண்டாகுக! நீர் எச்சிற்றின்பங்களை விரும்புகிறீரோ அவற்றை என் சுற்றத்தாருடன் நான் உமக்குக் கூட்டிவைக்க முயல்வேன்.

---

25. 35. நாகః—ப்ராணః!

ஒ. (ப்ராணாக்னய ஏவைதஸ்மின் புரே ஜாக்ரதி) இந்தச் சரீரமாகிற புரத்தில் பிராணாக்கினிகளே விழித்திருக்கின்றன. —ப்ரச்ன உப. 4. 3.

नारद उवाच—

इति तौ दंपती तत्र समुद्य समयं मिथः ।
तां प्रविश्य पुरीं राजन्मुमुदाते शतं समाः ॥ २५.४३ ॥

एवं कर्मसु संसक्तः कामात्मा वंचितोऽबुधः ।
महिषी यद्यदीहेत तत्तदेवान्ववर्तत ॥ २५.५६ ॥

तयैव रममाणस्य कामकश्मल-चेतसः ।
क्षणार्धमिव राजेन्द्र व्यतिक्रान्तं नवं वयः ॥ २७.५ ॥

पुरीं विहायोपगत उपरुद्धो भुजंगमः ।
यदा तमेवानु पुरी विशीर्णा प्रकृतिं गता ॥ २८.२४ ॥

अनन्तपारे तमसि मग्नो नष्टस्मृतिः समाः ।
शाश्वती-रनुभूयार्तिं प्रमदासङ्ग-दूषितः ॥ २८.२७ ॥

तामेव मनसा गृह्णन् बभूव प्रमदोत्तमा ।
अनन्तरं विदर्भस्य राजसिंहस्य वेश्मनि ॥ २८.२८ ॥

उपयेमे वीर्यपणां वैदर्भीं मलयध्वजः ।
युधि निर्जित्य राजन्यान् पाण्ड्यः पर-पुरंजयः ॥ २८.२९ ॥

---

நாரதர் கூறியது—

25. 43. அரசே! இங்ஙனம் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் ஸங்கேதம் செய்துகொண்டு அப்பட்டணத்தில் புகுந்து நூறு வருஷங்கள் இன்புற்று வாழ்ந்தனர்.

25. 56. இங்ஙனம் (படிப்படியாக) கருமங்களில் பற்றுக்கொண்டவனும் ஆசை வாய்ப்பட்டவனும் ஏமாற்றமடைந்தவனும், அறிவை யிழந்தவனுமான அவன் மனைவி எதெதை விரும்பினளோ அததையே தானும் நாடினன்.

27. 5. இராஜேந்திரா! இங்ஙனம் காமத்தால் கலங்கின சித்தமுடையவனாய் அவளுடன் விளையாடிக்கொண்டிருக்கையில் அரைநொடிபோல் அவனுடைய இளமை நீங்கிவிட்டது.

28. 24. அடக்கிவைக்கப்பட்ட பாம்பு எப்போது பட்டணத்தைவிட்டு கிளம்பிற்றோ அப்போதே தொடர்ந்து பட்டணமும் அழிந்து பஞ்சபூதங்களில் கலந்துவிட்டது.

28. 27. எல்லையற்றதும் கரை காணமுடியாததுமான இருளில் மூழ்கி அறிவிழந்து ஸ்திரீஸங்கத்தால் கலங்கிய மனமுடைய இவன் (புரஞ்ஜனன்) பல ஆண்டுகள் துன்பத்தை யனுபவித்து;

28. 28. (மரணகாலத்தில்) அவளையே மனத்தில்கொண்டு பிறகு விதர்ப்ப நாட்டரசன் வீட்டில் சிறந்த பெண்ணாகப் பிறவி யடைந்தான்.

28. 29. யுத்தத்தில் மற்ற அரசர்களை ஜயித்து பரபுரஞ்ஜயன் என்று பெயர்பெற்ற மலயத்துவஜபாண்டியன் வீரியத்தையே சுல்கமாக விரும்பிய அந்த வைதர்ப்பியை மணந்துகொண்டான்.

तस्यां स जनयांचक्रे आत्मजा-मसितेक्षणाम् ।
यवीयसः सप्त सुतान् सप्त द्रविड-भूभृतः ॥ २८.३० ॥

विभज्य तनयेभ्यः क्ष्मां राजर्षि-र्मलयध्वजः ।
आरिराधयिषुः कृष्णं स जगाम कुलाचलम् ॥ २८.३३ ॥

हित्वा गृहान् सुतान् भोगान् वैदर्भी मदिरेक्षणा ।
अन्वधावत पाण्ड्येशं ज्योत्स्नेव रजनीकरम् ॥ २८.३४ ॥

चीरवासा व्रतक्षामा वेणी-भूत-शिरोरुहा ।
बभावुप पतिं शान्ता शिखा शान्त-मिवानलम् ॥ २८.४४ ॥

अजानती प्रियतमं यदोपरत-मंगना ।
सु स्थिरासन-मासाद्य यथापूर्व-मुपाचरत् ॥ २८.४५ ॥

यदा नोपलभेतांघ्रा-वूष्माणं पत्युरर्चती ।
आसीत् संविग्न-हृदया यूथ-भ्रष्टा मृगी यथा ॥ २८.४६ ॥

पतिता पादयो-र्भर्तु रुदत्यश्रूण्यवर्तयत् ।
चितिं दारुमयीं चित्वा तस्यां पत्युः कलेवरम् ।
आदीप्य चानुमरणे विलपन्ती मनो दधे ॥ २८.५० ॥

---

28. 30. அம் மனைவியிடத்தில் கருவிழியாளான ஒரு பெண்ணையும், அவளுக்கு இளையவர்களாக ஏழு புத்திரர்களையும் அவன் உண்டாக்கினான்; அப் புத்திரர்கள் ஏழு வரும் திராவிடநாட்டரசர்களாயினர்.

28. 33. இராஜரிஷியான மலயத்துவஜன் (நாளடைவில்) பூமியை மக்களுக்குப் பிரித்துக் கொடுத்துவிட்டு ஸ்ரீ கிருஷ்ணனை ஆராதிப்பதற்காக குலாசலத்துக்குச் சென்றான்.

28. 34. மயக்கும் பார்வையுடைய வைதர்ப்பியும் மக்களையும் வீடுகளையும் விட்டு நிலவு சந்திரனைத் தொடர்வதுபோல் பாண்டியராஜனைத் தொடர்ந்தாள்.

28. 44. மரவுரியுடுத்து விரதத்தால் இளைத்து கூந்தல் சடையாகி சாந்தமான தணலின் அடங்கிய ஜ்வாலைபோல் பர்த்தாவின் ஸமீபத்தில் பிரகாசித்தாள்.

28. 45. (ஒரு ஸமயம்) ஸ்திராஸனத்திலமர்ந்து மகா ஸமாதியில் ஆழ்ந்துவிட்ட பிரியமான பர்த்தாவுக்கு அவர் பிரம்மத்தில் கலந்துவிட்டதை உணராமல் முன்போல் பணிவிடை செய்தாள்.

28. 46. பர்த்தாவைப் பூஜிக்கையில் அவர் பாதங்களில் சூடில்லாமலிருக்கக் கண்டு, தன் கூட்டத்தினின்று பிரிந்த பெண் மானைப்போல் சித்தம் கலங்கியவளானாள்.

28. 50. பர்த்தாவின் பாதங்களில் விழுந்து கதறிக் கண்ணீரைப் பெருக்கினாள். கட்டைகளால் சிதை யடுக்கி அதில் பர்த்தாவின் சரீரத்தை வைத்துத் தீயிட்டு அழுது கொண்டே அனுமரணத்தில் மனங்கொண்டாள்.

---

28. 30. द्रमिड भूभृतः । பா. பே.

तत्र पूर्वतरः कश्चित् सखा ब्राह्मण आत्मवान् ।
सान्त्वयन् वल्गुना साम्ना तामाह रुदतीं प्रभो ॥ २८.५१ ॥

ब्राह्मण उवाच—

अपि स्मरसि चात्मान-मविज्ञात-सखं सखे ।
हित्वा मां पदमन्विच्छन् भौम-भोगरतो गतः ॥ २८.५३ ॥

न त्वं विदर्भदुहिता नायं वीरः सुहृत्तव ।
न पतिस्त्वं पुरंजन्या रुद्धो नवमुखे यया ॥ २८.६० ॥

माया ह्येषा मया सृष्टा यत्पुमांसं स्त्रियं सतीम् ।
मन्यसे नोभयं यद्वै हंसौ पश्यावयोर्गतिम् ॥ २८.६१ ॥

अहं भवान् न चान्यस्त्वं त्वमेवाहं विचक्ष्व भोः ।
न नौ पश्यन्ति कवय-श्छिद्रं जातु मनागपि ॥ २८.६२ ॥

यथा पुरुष आत्मान-मेक-मादर्श-चक्षुषोः ।
द्विधा-भूत-मवेक्षेत तथैवान्तर-मावयोः ॥ २८.६३ ॥

---

28. 51. பிரபுவே! அப்போது அங்கு முன் தெரிந்த ஒரு ஆத்மஞானியான பிராம்மண நண்பர் வந்து பிரியமான வார்த்தைகளால் அவளைத் தேற்றி அழுகின்ற அவளிடம் பின்வருமாறு கூறினர்.

பிராம்மணர் கூறியது—

28. 53. 'நண்பரே! (என்னை அறியாவிட்டாலும்) பூமியிலுள்ள போகத்தை விரும்பி நண்பனை என்னை விட்டுவந்த நீர் அறியப்படாத ஒரு நண்பரை முன் உடைய வர் என்றுவது உம்மைப்பற்றி ஞாபகம் வருகிறதா ?

28. 60. 'நீர் விதர்ப்பராஜன் மகளுமன்று; இந்த வீரர் உமது மித்திரருமன்று. ஒன்பது வாயிலுள்ள புரியில் எவளால் அடைபட்டீரோ அந்தப் புரஞ்ஜனியின் பதியுமன்று.

28. 61. '(முன்) புருஷனாகவும் (பின்) பதிவிரதா ஸ்திரீயாகவும் உம்மைக் கருதியது இரண்டும் உண்மையன்று. இது என்னால் சிருஷ்டிக்கப்பட்ட மாயை. நாமிருவரும் ஹம்ஸர்கள். நம்மிருவருடைய போக்கு என்னவென்பதை உற்றுநோக்குவீர்.

28. 62. '(உண்மையில்) நானே நீர்; நீர் வேறன்று; நீரே நான்; இதைக் கண்டு கொள்வீர். ஞானிகள் நம்மிடை சிறிது பேதத்தைக்கூட ஒருபோதும் காணமாட்டார்கள்.

28. 63. 'ஒரு புருஷன் ஒருவனேயாகிய தன்னைக் கண்களால் நேராகவும் கண்ணாடியில் பிரதிபிம்பமாகவும் எப்படி இரண்டுபட்டதாகக் காண்பானோ அப்படிப் பட்டதுதான் நமக்குள் காணப்படும் பேதமும்.'

---

28. 51. பூர்வதரோஜ்ஞாதிரீச்வர: ஸகா த்வாஸுபர்ணாவிதி ச்ருதே:,। ஸாம்னா ப்ரிய வாக்யேன।

28. 62. தத்-த்வம் பதார்த்தயோச்-சிதம்சேனைக்யமாஹ।

ஓ. (உதரமந்தரம் குருதே। அத தஸ்ய பயம் பவதி) எப்போது சிறிதேனும் பேதத்தைச் செய்கிறானோ அப்போது அவனுக்கு பயம் ஏற்படுகிறது. —தை. உப. 2. 7.

एवं स मानसो हंसो हंसेन प्रतिबोधितः ।
स्वस्थ-स्तद्व्यभिचारेण नष्टामाप पुनः स्मृतिम् ॥ २८.६४ ॥

बर्हिष्म-न्नेतदध्यात्मं पारोक्ष्येण प्रदर्शितम् ।
यत्परोक्षप्रियो देवो भगवान् विश्वभावनः ॥ २८.६५ ॥

यदाऽऽत्मान-मविज्ञाय भगवन्तं परं गुरुम् ।
पुरुषस्तु विषज्जेत गुणेषु प्रकृतेः स्वदृक् ॥ २९.२६ ॥

गुणाभिमानी स तदा कर्माणि कुरुतेऽवशः ।
शुक्लं कृष्णं लोहितं वा यथा कर्माभिजायते ॥ २९.२७ ॥

दुःखेष्वेकतरेणापि दैव-भूतात्महेतुषु ।
जीवस्य न व्यवच्छेदः स्याच्चेत्तत्तत् प्रतिक्रिया ॥ २९.३२ ॥

---

28. 64. இங்ஙனம் மானஸஹம்ஸன் (பரம) ஹம்ஸனால் அறிவுறுத்தப் பெற்றுத் தன் ஸ்வரூபத்தில் நிலைத்தவனாய் அதினின்று நழுவியதால் இழந்திருந்த நினைவை மீண்டும் பெற்றான்.

28. 65. பர்ஹிஷ்மானே! ஆதிதேவனும் விச்வபாவனுமான பகவான் மறைந்து றைவதில் பிரியமுள்ளவன்; ஆகையால் இவ்வத்தியாத்ம தத்துவமும் உமக்கு மறை பொருளாகவே காட்டப்பட்டது.

29. 26. புருஷன் தன்னைத்தானே காண்பவனாயினும் பரமகுருவான பகவானைத் தனது ஆத்மாவாக அறிந்துகொள்ளாமல் பிரகிருதியின் குணங்களில் எப்போது பற்றுக் கொள்ளுகின்றானோ;

29. 27. அப்போது குணத்தில் பற்றுக்கொண்ட அவன் தன் வசமின்றிக் கருமங்களைச் செய்கிறான்; வெள்ளையோ கருப்போ சிகப்போ, கருமம் எப்படியோ அப்படிப் பிறவியை யடைகிறான்.

29. 32. ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆத்யாத்மிகம் என்ற துக்கங்களில் ஒன்றாவது ஜீவனுக்கு இல்லாமல் முற்றும் நீங்கிப்போவதில்லை. நீங்குவதாய்த் தோன்றினாலும் அது அப்போதைக் கேற்பட்ட பரிகாரம்.

---

28. 64. மானஸோ ஹம்ஸ: க்ஷேத்ரஜ்ஞ:, ஹம்ஸேன பரமாத்மனா போதித:। நஷ்டாம் ஸ்ம்ருதி-மஹம் ப்ரஹ்மாஸ்மீதி ஜ்ஞானம் புன: ப்ராப்தவான் ॥

ஒ. (ஸத்வசுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி:, ஸ்ம்ருதி-லம்பே ஸர்வக்ரந்தீனாம் விப்ரமோக்ஷ:) அந்தக்கரணம் சுத்தமானால் கடவுளின் நினைவு நிலைபெறும்; நினைவு நிலைபெற்றால் எல்லாக் கட்டுகளும் தளர்ந்துபோம். —சா. உப. 7. 26. 2.

28. 65. ஒ. ('பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா:') —தை. ஸம். தேவர்கள் பரோக்ஷத்தில் பிரியமுள்ளவர்கள்போல் இருக்கின்றனர். அதனாலேயே வேதம் உண்மைகளை மறைபொருளாகக் கூறுவதும் 'மறை' என்ற பெயரைப் பெற்றதும்.

29. 27. வெள்ளை ஸாத்விகம்; வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை. சிகப்பு ராஜஸம்; கருப்பு தாமஸம்.

---

29. 27. लोहितं च यथा समभिजायते ।

यथा हि पुरुषो भारं शिरसा गुरुमुद्वहन् ।
तं स्कन्धेन स आधत्ते तथा सर्वाः प्रतिक्रियाः ॥ २९.३३ ॥

नैकान्ततः प्रतीकारः कर्मणां कर्म केवलम् ।
द्वयं ह्यविद्योपसृतं स्वप्ने स्वप्न इवानघ ॥ २९.३४ ॥

यदा यमनुगृह्णाति भगवानात्मभावितः ।
स जहाति मतिं लोके वेदे च परिनिष्ठिताम् ॥ २९.४६ ॥

तस्मात् कर्मसु बर्हिष्मन्नज्ञानादर्थकाशिषु ।
मार्थदृष्टिं कृथाः श्रोत्रस्पर्शिष्वस्पृष्टवस्तुषु ॥ २९.४७ ॥

स्वं लोकं न विदुस्ते वै यत्र देवो जनार्दनः ।
आहुर्धूम्रधियो वेदं सकर्मकमतद्विदः ॥ २९.४८ ॥

---

29. 33. பெரிய பளுவைத் தலையில் சுமக்கும் ஒருவன் தோளில் மாற்றிக்கொள்வது எப்படியோ அப்படித்தான் எல்லாப் பரிகாரங்களும்.

29. 34. பாவமற்றவனே! கருமம் மட்டும் தனியே (ஞானமில்லாமல்) வேறு கருமங்களுக்கும் பரிகாரமாக முற்றிலும் ஆகாது; ஏனெனில் கனவில் கனவுபோல் இரண்டும் அவித்தைக் குட்பட்டிருப்பதால்.

29. 46. உள்ளத்தில் உபாசிக்கப்பெற்ற பகவான் எப்போது எவனை அனுக்கிரகிக்கின்றாரோ அப்போதே அவன் உலகத்திலும் வேதத்திலும் ஏற்பட்ட ஆழ்ந்த பற்றை விடுகிறான்.

29. 47. ஆகையால், பர்ஹிஷ்மானே! காதில் கேட்பதற்கினிதாயும் பரம்பொருளில் புகாததாயும், பரமார்த்தம்போல் பிரகாசிப்பதாயினும் அஜ்ஞான வடிவினதாயுமுள்ள கருமங்களில் பரமார்த்தம் என்ற நோக்கம் கொள்ளாதீர்.

29. 48. புகை மண்டிய புத்தியுடையவர்கள் வேதத்தை உள்ளபடி உணராதவர்களாய் அதைக் கருமபரம் எனக் கூறுவர். எங்கு ஜனார்த்தனன் ஒருவனே தேவனோ அந்த ஆத்மலோகத்தை அவர்கள் அறியமாட்டார்கள்.

---

29. 46. ஓ. (யः கர்ம பலம் த்யஜதி, கர்மாணி ஸந்ந்யஸ்யதி ததோ நிர்த்வந்த்வோ பவதி। யோ வேதானபி ஸந்ந்யஸ்யதி கேவல-மனுச்சின்னானுராகம் லப்தே। ஸ தரதி ஸ தரதி லோகாம்ஸ்-தாரயதி।)

எவன் கர்மபலனை விடுகிறானோ கர்மங்களையும் விடுகிறானோ, துவந்துவங்களினின்று அப்போது விடுபடுகிறான். எவன் வேதங்களையும் விடுகிறானோ இடைவிடாத பக்தியை பகவானிடம் செய்கிறானோ அவன் பிறவிக்கடலைக் கடக்கிறான், உலகில் பிறரையும் கடத்துவிக்கிறான். —நாரத பக்திஸூத்ரம். 48-49.

29. 47. ஓ. அறிவீனர்கள் வேதத்தின் அர்த்த வாதத்தில் பற்றுடையவராய் வேறு இல்லையென்று வாதஞ்செய்பவராய், ஆசை நிறைந்த மனத்தினராய், ஸ்வர்க்கத்தையே மேலாகக் கொண்டவராய், இன்ப நுகர்ச்சிக்காகவும் உயர் பதவிக்காகவும் ஜன்மத்தையே தொழிலின் பயனைக் கொண்டதும் விசேஷமாய் விரிவான கிரியைகளைப்பற்றியதுமான பூப்போன்ற வார்த்தைகளை இனிதாகத் தொடர்ந்து பேசுவார்கள். —கீ. 2. 42-43.

आस्तीर्य दर्भैः प्रागग्रैः कार्त्स्न्येन क्षितिमण्डलम् ।
स्तब्धो बृहद्वधान्मानी कर्म नावैषि यत्परम् ।
तत्कर्म हरितोषं यत्सा विद्या तन्मति-र्यया ॥ २९.४९ ॥

स वै प्रियतमश्चात्मा यतो न भयमण्वपि ।
इति वेद स वै विद्वान् यो विद्वान् स गुरु-र्हरिः ॥ २९.५१ ॥

प्राचीनबर्हिरुवाच—
श्रुतमन्वीक्षितं ब्रह्मन् भगवान् यदभाषत ।
नैत-ज्जानन्त्युपाध्यायाः किं न ब्रूयु-र्विदु-र्यदि ॥ २९.५६ ॥

मैत्रेय उवाच—
भागवत-मुख्यो भगवा-न्नारदो हंसयोर्गतिम् ।
प्रदर्श्य ह्यमु-मामन्त्र्य सिद्धलोकं ततोऽगमत् ॥ २९.८० ॥

---

29. 49. கிழக்கு நுனியாய் தர்ப்பையைப் பூமண்டலம் முழுதும் நிரப்பிப் பல பிராணிகளைக் கொன்றதால் கர்வங்கொண்டு அடக்கமற்றவரான நீர் கருமத்தையோ அதற்கு மேலானதையோ உணரவில்லை. பகவானுடைய பிரீதி எதனால் ஏற்படுமோ அதுவே கருமம்; பகவானிடத்தில் எதனால் புத்தி நிலைபெறுமோ அதுவே வித்தை.

பிராசீனபர்ஹிஸ் கூறியது—

29. 56. பிரம்மஸ்வரூபியே! தேவரீர் கூறியது கேட்டு ஆராயப்பட்டது. (எனக்குபதேசித்த) உபாத்தியாயர்கள் இதை அறியாதவர்கள் (என எண்ணுகிறேன்). அறிந்திருந்தால் கூறியிருக்கமாட்டார்களா?

மைத்திரேயர் கூறியது—

29. 80. பாகவத முக்கியரான நாரதர் (மீண்டும் தெளிவுற) ஜீவேசுவர ஸ்வரூபத்தை விளங்கவைத்து அவரிடம் விடைபெற்று அங்கிருந்து ஸித்தலோகம் சென்றார்.

---

29. 49. ஓ. (ஸா வித்யா யா விமுக்தயே) எது விடுதலை தருமோ அதுவே வித்தை.

ஓ. (கர்ம தபோ, ப்ரஹ்ம பராம்ருதம்) தவமே கர்மம், பிரம்மமே சிறந்த அமிருதம். —மு. உப. 2. 1-9.

ஓ. தவம் செய்வார் தம் கருமம் செய்வார், மற்றல்லார்
அவம் செய்வார் ஆசையுட்பட்டு. —குறள். 266.

கதை கேட்ட பிராசீனபர்ஹிஸ் புத்திரர்கள் வந்ததும் தவத்திற்குப் போக எண்ணினர். நாரதர் 'அதோ ஒரு மான் ஓடுகிறது பாருங்கள். செந்நாய்கள் துரத்துகின்றன. ஒரு வேடன் கொல்லப் பார்க்கிறான்' என்றார். 'மான் எங்கே?' என்றார். 'நீர் தான்' என்றார் நாரதர். வைராக்கியம் பிறந்தது.

29. 56. ஓ. (ந வை நூநம் பகவந்தஸ்த ஏத-தவேதிஷுர் - யத்த்யேத - தவேதிஷ்யன் கதம் மே நாவக்ஷ்யன்னிதி பகவாம்ஸ்-த்வேவமேதத் ப்ரவீதவிதி) எனது குருமார்களாகிய பெரியோர்கள் இதை அறியமாட்டார்கள் போலும். அறிந்திருந்தால் எனக்குச் சொல்லியிருக்க மாட்டார்களா? ஐயனே! தாங்களே இதை உபதேசிக்கவேண்டும்.

—சுவேதகேது. சா. உப. 6. 1-7.

प्राचीनबर्ही राजर्षिः प्रजासर्गाभिरक्षणे।
आदिश्य पुत्रानगमत् तपसे कपिलाश्रमम् ॥ २९.८१ ॥

तत्रैकाग्रमना धीरो गोविन्द-चरणांबुजम्।
विमुक्त-संगोऽनुभजन् भक्त्या तत्साम्यता-मगात् ॥ २९.८२ ॥

विदुर उवाच—

ये त्वयाभिहिता ब्रह्मन् सुताः प्राचीन-बर्हिषः।
ते रुद्रगीतेन हरिं सिद्धिमापुः प्रतोष्य काम् ॥ ३०.१ ॥

मैत्रेय उवाच—

प्रचेतसोऽन्तरुदधौ पितुरादेशकारिणः।
जपयज्ञेन तपसा पुरंजन-मतोषयन् ॥ ३०.३ ॥

ते च ब्रह्मण आदेशा-न्मारिषा-मुपयेमिरे।
यस्यां महदवज्ञाना-दजन्यजनयोनिजः ॥ ३०.४८ ॥

तत उत्पन्न-विज्ञाना आश्वधोक्षजभाषितम्।
स्मरन्त आत्मजे भार्यां विसृज्य प्राव्रजन् गृहात् ॥ ३१.१ ॥

---

29. 81. இராஜரிஷியான பிராசீன பர்ஹிஸ் பிரஜைகளைப் போற்றிக் காப்பதற்குத் தன் புத்திரர்களை நியமித்துவிட்டுத் தவஞ்செய்வதற்குக் கபிலாசிரமம் சென்றார்.

29. 82. வீரனான பிராசீன பர்ஹிஸ் ஒருமைப்பட்ட மனத்தினராய்ப் பற்றை யொழித்து அங்கு கோவிந்தனுடைய சரண கமலங்களை இடைவிடாது தியானித்து அவரிடம் இரண்டறக் கலந்தார்.

விதுரர் கூறியது—

30. 1. பிரம்மஸ்வரூபியே! நீங்கள் குறிப்பிட்ட பிராசீனபர்ஹிஸ்ஸின் புத்தி ரர்கள் ருத்ரகீதையினால் ஹரியை ஸந்தோஷப்படுத்தி ஸித்தி அடைந்தனர் (எனக் கேட்டுள்ளோம்). அது எவ்வகைத்து ?

மைத்திரேயர் கூறியது—

30. 3. பிரசேதஸர்கள் பிதாவின் கட்டளைப்படி தவஞ்செய்கையில் ஸமுத்திர மத்தியில் (ருத்திரன் உபதேசித்த) ஜபயஜ்ஞமாகிற தவத்தால் புரஞ்ஜனனாகிய பகவானை ஸந்தோஷப் படுத்தினர்.

30. 48. (பகவதனுக்கிரகத்தைப் பெற்று) பிரம்மாவின் உத்திரவுப்படி மாரிஷா என்ற பெண்ணை மணந்தனர். அவளிடத்தில் மஹாதேவனை அவமதித்த குற்றத்தினால் பிரம்ம குமாரனான தக்ஷன் வந்து பிறந்தான்.

31. 1. பின் பிரசேதஸர்கள் விவேகம் உதித்தவர்களாய் பகவான் அதோக்ஷஜர் அருளிய மொழிகளை நினைவில்கொண்டு புத்திரனிடத்தில் மனைவியை விட்டு வீட்டி லிருந்து வெளிக் கிளம்பினர்.

---

30. 48. இது தக்ஷனுடைய இரண்டாவது ஜன்மம். பின்பு ப்ரசேதஸர்கள் ஸத்ர யாகம் செய்தனர். அதில்தான் நாரதர் துருவ சரித்திரம் கதை பண்ணினார்.

तान्निर्जित-प्राण-मनो-वचो-दृशो जितासनान् शान्त-समान-विग्रहान् ।
परेऽमले ब्रह्मणि योजितात्मनः सुरासुरेड्यो ददृशे स्म नारदः ॥ ३१.३ ॥

नारद उवाच—

यथा तरो-र्मूल-निषेचनेन तृप्यन्ति तत्स्कन्ध-भुजोपशाखाः ।
प्राणोपहाराच्च यथेन्द्रियाणां तथैव सर्वार्हण-मच्युतेज्या ॥ ३१.१४ ॥

दयया सर्वभूतेषु सन्तुष्ट्या येन केन वा ।
सर्वेन्द्रियोपशान्त्या च तुष्यत्याशु जनार्दनः ॥ ३१.१९ ॥

न भजति कुमनीषिणां स इज्यां हरि-रधनात्मधनप्रियो रसज्ञः ।
श्रुत-धन-कुल-कर्मणां मदैर्ये विदधति पाप-मकिंचनेषु सत्सु ॥ ३१.२१ ॥

---

31. 3. பிராணன் மனது வாக்கு திருஷ்டி இவைகளை யடக்கி, ஆசன ஜயம் பெற்று நேராக நிமிர்ந்து சாந்தமாக அமைந்த உடல்களுடன் நிர்க்குண பரப்பிரம்மத்தில் நிலைத்த மனத்தினராய் வீற்றிருந்த அவர்களை தேவர்களும் அசுரர்களும் வணங்கும் நாரதமகரிஷி கண்டார்.

நாரதர் கூறியது—

31. 14. ஒரு மரத்தின் வேரில் நீர் வார்த்தால் அடிமரம், கிளை, கொப்பு எல்லாம் திருப்தி யடைவதுபோலும், பிராணனை ஆகாரத்தால் திருப்தி செய்வித்தால் இந்திரியங்கள் திருப்தி யடைவதுபோலும், அச்சுத பூஜையால் அனைவருடைய பூஜையும் செய்ததாகிறது.

31. 19. எல்லா உயிர்களிடத்தும் தயையாலும், எது கிடைத்ததோ அதனுல் திருப்தியாலும், இந்திரியங்களின் அடக்கத்தாலும் ஜனார்த்தனருடைய அருள் விரைவில் ஏற்படும்.

31. 21. எவர்கள் கல்வி செல்வம் குலம் தொழில் இவை மூலம் ஏற்பட்ட கருவத்தால் எளியோரான ஸாதுக்களுக்குத் தீமை இழைக்கின்றனரோ அப்படிப்பட்ட மதியினர்கள் செய்யும் பூஜையை பகவான் ஏற்பதில்லை. ஆத்மாவையே தனமாகவுடையவர்களும் வேறு தனமில்லாதவர்களுமான ஸாதுக்களின் பிரியரான பகவான் சிறந்த ரஸிகர் (பக்திரஸத்தையே போற்றுபவர்).

---

31. 14. (ப்ராணஸ்யோபஹாரோ போஜனம், தஸ்மாத்தேவேந்த்ரியாணாம் த்ருப்திர்-ந து தத்ததிந்த்ரியேஷு ப்ருதக் ப்ருதகன்ன-லேபனேன. ததாச்யுதாராதனமேவ ஸர்வதேவதாராதனம் ந ப்ருதகித்யர்த்த:) அன்னம் பிராணனைத் திருப்தி செய்வதால் எல்லா இந்திரியங்களுக்கும் திருப்தி ஏற்படுகிறது. அந்தந்த இந்திரியங்களுக்குத் தனித்தனி அன்னத்தை ஊட்டுவதில்லை. அவ்வாறே அச்சுதாராதனம் எல்லா தேவதைகளின் ஆராதனமாகின்றது.

—ஸ்ரீ.

मैत्रेय उवाच—

इति प्रचेतसो राजन्नन्याश्च भगवत्कथाः।
श्रावयित्वा ब्रह्मलोकं ययौ स्वायंभुवो मुनिः ॥ ३१.२३ ॥

तेऽपि तन्मुख-निर्यातं यशो लोकमलापहम्।
हरेर्निशम्य तत्पादं ध्यायन्त-स्तद्गतिं ययुः ॥ ३१.२४ ॥

श्रीशुक उवाच—

य एष उत्तानपदो मानवस्यानुवर्णितः।
वंशः प्रियव्रतस्यापि निबोध नृपसत्तम ॥ ३१.२६ ॥

इमां तु कौषारविणोपवर्णितां क्षत्ता निशम्याजितवाद-सत्कथाम्।
प्रवृद्ध-भावोऽश्रुकलाकुलो मुने-र्दधार मूर्ध्ना चरणं हृदा हरेः ॥ ३१.२८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां
संहितायां पारमहंस्यां श्रीवैयासिक्यां हयग्रीव-
ब्रह्मविद्यायां चतुर्थःस्कन्धः समाप्तः॥

---

மைத்திரேயர் கூறியது—

31. 23. அரசே! பிரம்ம குமாரரான நாரதமுனிவர் இவ்விதம் பகவானுடைய பெருமையையும் மற்றும் பகவானுடைய கதைகளையும் பிரசேதஸர்களுக்குச் சொல்லி விட்டுப் பிரம்மலோகம் சென்றார்.

31. 24. பிரசேதஸர்களும் உலகின் பாவத்தைப் பரிகரிக்கும் பகவானுடைய கீர்த்தியை அவர் திருவாய் மலர்ந்தருளக் கேட்டு ஹரிசரணத்தியானத்தால் பரமபதம் எய்தினர்.

ஸ்ரீ சுகர் கூறியது—

31. 26. அரச சிரேஷ்டரே! இங்ஙனம் மனுபுத்திரரான உத்தானபாதரின் வம்ச வரலாறு உமக்கு வர்ணிக்கப்பட்டது. இனிப் பிரிய விரதருடைய வம்சத்தைப்பற்றித் தெரிந்துகொள்ளும்.

31. 28. பகவத் ஸம்வாதமான ஸத்கதையை மைத்திரேயர் இவ்வாறு வர்ணிக்கக் கேட்ட விதுரர் பக்திப் பெருக்கால் கண்ணீர் பெருக மனங்கசிந்து தலையால் முனிவரின் சரணங்களையும் இருதயத்தால் ஹரியின் சரணங்களையும் தரித்தார்.

உத்தானபாத வம்ச வரலாறு முற்றிற்று.

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணாயிரம் சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்மவித்தை எனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மஹா புராணத்தில் நான்காவது ஸ்கந்தம் முற்றும்.

---

31. 28. भावाश्रुकलाकुलो ।

# ॥ पंचमः स्कन्धः ॥

## ॥ प्रियव्रतवंशकथा ॥

राजोवाच—

प्रियव्रतो भागवत आत्मारामः कथं मुने ।
गृहेऽरमत यन्मूलः कर्मबन्धः पराभवः ॥ १.१ ॥

संशयोऽयं महान् ब्रह्मन् दारागारसुतादिषु ।
सक्तस्य यत्सिद्धि-रभूत्कृष्णे च मतिरच्युता ॥ १.४ ॥

श्रीशुक उवाच—

राजन् स राजपुत्रः प्रियव्रतः परम भागवतो नारदस्य चरणोपसेवयांज-सावगत-परमार्थसतत्त्वो ब्रह्मसत्रेण दीक्षिष्यमाणोऽवनितल-परिपालनायाम्नातप्रवर-गुणगणैकान्त-भाजनतया स्वपित्रोपामन्त्रितो वासुदेव एवाव्यवधान-समाधियोगेन समावेशितसकल-कारक-क्रियाकलापो नैवाभ्यनन्दद् यद्यपि तदप्रत्याम्नातव्यं तदधि-करण आत्मनोऽन्यस्मा-दसतोऽपि पराभव-मन्वीक्षमाणः ॥ १.६ ॥

---

# ஐந்தாவது ஸ்கந்தம்

இரண்டாம் நாள் கதை (தொடர்ச்சி)

## பிரியவிரத வம்ச கதை

அரசர் கூறியது—

1. 1. முனிவரே! பிரியவிரதர் பரம பாகவதரும் ஆத்மாவிலேயே இரமிப்பவரும் ஆயிற்றே! எங்ஙனம் கருமக்கட்டுக்கும் வீழ்ச்சிக்கும் காரணமாகும் கிருஹஸ்தாசிரமத்தில் அவர் இரமித்தார்?

1. 4. பிரம்ம ஸ்வரூபியே! எனக்கு இது பெரிய சந்தேகம். மனைவி, வீடு, மக்கள் என்று பற்றிக்கொண்டிருந்தும் கிருஷ்ணனிடத்தில் நழுவாத பக்தியும் முக்தியும் எப்படி இவருக்குச் சித்தியாயிற்று?

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 6. அரசே! இராஜபுத்திரரும் பரமபாகவதருமான பிரியவிரதர் நாரதருடைய சரணஸேவையால் எளிதில் பரமார்த்த ஞானத்தில் நிலைபெற்றவரானார். இடையறாத பிரம்மத் தியானம் என்ற பிரம்ம ஸத்ரயாகத்தையே (வாழ்நாள் முழுதும்) நடத்துவதென்று தீக்ஷை பூண விரும்பி நிற்கையில் அவருடைய பிதா ஸ்வாயம்புவர் அவரிடம் பெரியோர் போற்றும் சிறந்த குணங்கள் அனைத்தும் ஒன்று கூடியிருப்பதைக் கண்டு பூமியைப் பரிபாலிக்கும்படி அவரைக் கட்டளையிட்டார். இடையறாத ஸமாதி யோகத்தால் இந்திரிய வியாபாரங்களனைத்தையும் பகவான் வாசுதேவரிடம் அர்ப்பணம் செய்துவிட்டவராதலால் பிதாவின் கட்டளை மறுக்கக்கூடாததாயினும் அதை ஏற்றுக்கொண்டால் அநாத்ம விஷயங்களாலும் பொய்யான பிரபஞ்ச வாழ்வாலும் ஆத்மஞானத்துக்கு அழிவு ஏற்படுமென்று அஞ்சி அதை விரும்பவில்லை (தவத்துக்குச் சென்றார்).

अथ ह भगवानादिदेव एतस्य गुणविसर्गस्य परिबृंहणानुध्यान-व्यवसित-सकल-जगदभिप्राय आत्मयोनि-रखिल-निगम-निजगण-परिवेष्टितः स्वभवनादवततार ॥ १.७ ॥

ब्रह्मोवाच—

मुक्तोऽपि तावद्बिभृयात्स्वदेह-मारब्ध-मश्नन्नभिमानशून्यः ।
यथानुभूतं प्रतियातनिद्रः किं त्वन्यदेहाय गुणान्न वृङ्क्ते ॥ १.१६ ॥

भयं प्रमत्तस्य वनेष्वपि स्याद् यतः स आस्ते सहषट्-सपत्नः ।
जितेन्द्रियस्यात्मरते-र्बुधस्य गृहाश्रमः किंनु करोत्यवद्यम् ॥ १.१७ ॥

यः षट्-सपत्नान् विजिगीषमाणो गृहेषु निर्विश्य यतेत पूर्वम् ।
अत्येति दुर्गाश्रित ऊर्जितारीन् क्षीणेषु कामं विचरेद्विपश्चित् ॥ १.१८ ॥

---

1. 7. ஸ்வயம்புவும் ஆதிதேவருமான பகவான் பிரம்மா இந்த முக்குண வடிவான சிருஷ்டியை விரிவுபடுத்த எண்ணியவராதலாலும், எல்லா ஜீவராசிகளுடைய எண்ணங்களையும் உணர்பவராதலாலும் (பிரியவிரதருடைய கருத்தை யறிந்து) எல்லா வேதங்களும் உருக்கொண்டு பாரிஷதர்களுடன் புடைசூழத் தனது உலகத்திலிருந்து பூவுலகில (பிரியவிரதர் தவம் செய்யுமிடத்தில்) இறங்கினர். (அங்கு ஏற்கெனவே வந்திருந்த நாரதராலும் பிரியவிரதராலும் பூஜிக்கப் பெற்றார்).

பிரம்மா கூறியது—

1. 16. ஜீவன்முக்தனாயினும் புருஷன் பிராரப்தகருமத்தை அனுபவித்துக் கொண்டு தேகயாத்திரையை நடத்தவேண்டும். ஆனால் தூக்கம் கலைந்தவன் கனவில் கண்டதைக் கருதுவதுபோல் அனுபவத்தில் அபிமான மற்றவனாய், வேறு ஜன்மத்தைத் தரக்கூடிய முக்குண வியாபாரங்களை நாடாதவனாய் இருக்கவேண்டும்.

1. 17. இந்திரியத்தை ஜயிக்காதவனுக்கு வனங்களிலும் (ஸம்ஸார) பயம் கூடவே இருக்கும்; ஏனெனில் ஆறு பகைவர்களுடன் அவன் கூடி வாழ்வதால், இந்திரியத்தை ஜயித்து ஆத்மாவிடம் ரமிக்கும் புத்திமானுக்கு கிருஹஸ்தாசிரமம் என்ன தீங்கு செய்யும்?

1. 18. எவன் ஆறு பகைவர்களையும் ஜயிக்க விரும்புவானோ அவன் முதலில் கிருஹஸ்தாசிரமத்திலிருந்துகொண்டே ஜயிக்க முயலவேண்டும். வலுவாக நிலைத்த சத்துருக்களைக் கோட்டைக்குள்ளிருந்து போர்புரிந்து ஜயிப்பதுபோல் (கிருஹஸ்தாசிரமத்திலிருந்துகொண்டே) ஜயிக்கவேண்டும். சத்துருவின் பலம் நாசமானபின் (வீட்டிலோ வனத்திலோ) ஞானி இஷ்டம்போல் சஞ்சரிக்கலாம்.

---

1. 17. ஒ. காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தை சுற்றி
ஓடே யெடுத்தென்ன உள்ளன்பிலாதவரோங்கு விண்ணோர்
நாடே யிடை மருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே. —பட்டினத்தார்.

त्वं त्वब्जनाभाङ्घ्रि-सरोज-कोश-दुर्गाश्रितो निर्जित-षट् सपत्नः ।
भुङ्क्ष्वेह भोगान् पुरुषातिदिष्टान् विमुक्तसंगः प्रकृतिं भजस्व ॥ १.१९ ॥

श्रीशुक उवाच—

इति समभिहितो भागवतो भगवत-स्त्रिभुवनगुरो-रनुशासनमात्मनो लघु-तयावनत-शिरोधरो बाढमिति सबहुमान-मुवाह ॥ १.२० ॥

अथ च दुहितरं प्रजापते-र्विश्वकर्मण उपयेमे बर्हिष्मतीं नाम । तस्यामु ह वाव आत्मजा-नात्मसमान-शील-गुण-कर्मरूप-वीर्योदारान् दश भावयांबभूव कन्यां च यवीयसीं ऊर्जस्वतीं नाम ॥ १.२४ ॥

एतेषां कवि-र्महावीर-सवन इति त्रय आसन् ऊर्ध्वरेतसस्त आत्मविद्याया-मर्भ-भावादारभ्य कृतपरिचयाः पारमहंसमेवाश्रम-मभजन् ॥ १.२६ ॥

अन्यस्यामपि जायायां त्रयः पुत्रा आसन्नुत्तम-स्तामसो रैवत इति मन्वन्तरा-धिपतयः ॥ १.२८ ॥

---

1. 19. நீயோ பத்மநாபனுடைய சரணாரவிந்தக் கோசமாகிற கோட்டையில் இருந்துகொண்டு ஆறு பகைவர்களையும் ஜயித்துவிட்டவன். ஈசுவரனால் அளிக்கப்பட்ட போகங்களை இங்கு உலகில் கிருஹஸ்தாசிரமத்தில் இருந்து அனுபவித்துவிட்டுப் பிறகு எல்லாப் பற்றுக்களையும் அறவே ஒழித்து ஸஹஜமான ஆத்மநிஷ்டையிலிருக்கலாம்.

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 20. இங்ஙனம் உபதேசிக்கப் பெற்ற மகா பாகவதரான பிரியவிரதர் மூவுலகுக்கும் குருவான பிரம்மதேவரின் கட்டளையைத் தலை வணங்கி ஏற்று மிகுந்த மரியாதையுடன் ‘அவ்விதமே ஆகட்டும்’ என்று கூறினார்.

1. 24. பிறகு பிரஜாபதியான விசுவகர்மாவின் பெண் பர்ஹிஷ்மதியை விவாகம் செய்துகொண்டார். அவளிடத்தில் தனக்குச் சமமான ஒழுக்கம் குணம் கருமம் ரூபம் வீரியம் இவற்றால் சிறந்த பத்துப் புத்திரர்களையும் அவர்களுக்கு இளையவளான ஊர்ஜஸ்வதீ என்ற பெண்ணையும் பெற்றார்.

1. 26. இவர்களுள் கவி, மஹாவீரன், ஸவனன் என்ற மூவர் குழந்தைப் பருவத்திலிருந்தே ஆத்மவித்தையில் பழக்கமுள்ளவர்களாய் ஊர்த்துவரேதஸ்ஸுகளாய்ப் பரமஹம்ஸ ஆசிரமிகளாயினர்.

1. 28. இன்னொரு மனைவியிடத்தில் மூன்று புத்திரர்கள் உண்டாயினர்; இவர்களே உத்தமன், தாமஸன், ரைவதன் என்ற மன்வந்தராதிபதிகள்.

---



जम्ब्वादिषु बर्हिष्मतीपति-रनुव्रतानात्मजान् यथासंख्येनैकस्मिन्नेकमेवाधिपतिं विदधे ॥ १.३३ ॥

दुहितरं चोर्जस्वतीं नामोशनसे प्रायच्छ-द्यस्या-मासीद् देवयानी नाम काव्यसुता ॥ १.३४ ॥

परदेवता-प्रसादाधिगतात्मप्रत्यवमर्शेनानुप्रवृत्तेभ्यः पुत्रेभ्य इमां यथादायं विभज्य भुक्त-भोगां च महिषीं मृतकमिव सहमहाविभूति-मपहाय स्वयं निहित-निर्वेदो हृदि गृहीत-हरिविहारानुभावो भगवतो नारदस्य पदवीं पुनरेवानुससार ॥ १.३८ ॥

एवं पितरि संप्रवृत्ते तदनुशासने वर्तमान आग्नीध्रो जंबूद्वीपौकसः प्रजा औरसवद्धर्मावेक्षमाणः पर्यगोपायत् ॥ २.१ ॥

भगवानादिपुरुषः पूर्वचित्तिं नामाप्सरस-मभियापयामास ॥ २.३ ॥

तस्यामु ह वा आत्मजान् स राजवर आग्नीध्रो नाभि-किंपुरुष-हरिवर्षेलावृत-रम्यक-हिरण्मय-कुरु-भद्राश्व-केतुमाल-संज्ञान् नव पुत्रा-नजनयत् ॥ २.१९ ॥

---

1. 33. ஜம்பூத்விபம் முதலிய ஏழு துவீபங்களிலும் பர்ஹிஷ்மதியின் நாதரான பிரியவிரதர் தன்னை யனுசரித்த தன் புத்திரர்களை ஒவ்வொருவரை ஒவ்வொன்றில் அதிபதியாகச் செய்தார்.

1. 34. ஊர்ஜஸ்வதீ என்ற பெண்ணைச் சுக்ராசாரியருக்குக் கொடுத்தார். அவளிடத்தில் சுக்ராசாரியருக்குத் தேவயானீ என்ற பெண் பிறந்தாள்.

1. 38. பரதெய்வமான ஹரியின் அருளால் அடைந்த ஆத்மஞானத்தால் தன்னை அனுசரித்த புத்திரர்களிடம் இந்த பூமியைப் பங்கிட்டுக்கொடுத்துவிட்டு அனுபவித்த ஸாம்ராஜ்ய ஸம்பத்தையும் மனைவியையும் உயிரற்ற உடல்போல் நீத்து உள்ளத்தில் வைராக்கியம் நிரம்பியவராய், மனத்தில் ஹரியின் லீலைகளைச் சிந்திப்பவராய் பகவான் நாரதர் காட்டிய வழியையே மீண்டும் பின்பற்றினர்.

2. 1. பிதா இங்ஙனம் சென்றபின் அவருடைய கட்டளைப்படி நடந்த ஆக்னீத்ரர் ஜம்பூத்துவீப வாசிகளான பிரஜைகளைத் தன் வயிற்றில் பிறந்த குழந்தைகளைப்போல் தர்மத்துடன் காப்பாற்றினர்.

2. 3. பகவானும் ஆதிபுருஷனுமான பிரம்மா அவருக்குப் பத்தினியாயிருக்கப் பூர்வசித்தி என்ற அப்ஸர ஸ்திரீயை அனுப்பிவைத்தார்.

2. 19. அவளிடம் அந்த அரசசிரேஷ்டனுகிய ஆக்னீத்ரன் நாபி, கிம்புருஷன், ஹரிவர்ஷன், இளாவ்ருதன், ரம்யகன், ஹிரண்மயன், குரு, பத்ராச்வன், கேதுமாலன் என்ற பெயரையுடைய ஒன்பது புத்திரர்களைப் பெற்முன்.

आग्नीध्र-सुतास्ते मातु-रनुग्रहा-दौत्पत्तिकेनैव संहननबलोपेताः पित्रा विभक्ता आत्मतुल्य-नामानि यथा-भागं जंबूद्वीप-वर्षाणि बुभुजुः ॥ २.२१ ॥

नाभि-रपत्यकामोऽप्रजया मेरुदेव्या भगवन्तं यज्ञपुरुषं अवहितात्माऽयजत ॥ ३.१ ॥

तस्य ह वाव श्रद्धया विशुद्धभावेन यजतः प्रवर्ग्येषु प्रचरत्सु द्रव्य-देश-काल-मन्त्र-ऋत्विग्-दक्षिणाविधान-योगोपपत्त्या दुरधिगमोऽपि भगवान् भागवत-वात्सल्यतया सुप्रतीक आत्मान-मपराजितं निजजनाभिप्रेतार्थ-विधित्सया गृहीत-हृदयो हृदयंगमं मनो-नयनानन्दनावयवाभिराम-माविश्चकार ॥ ३.२ ॥

ऋत्विज ऊचुः—

अथायमेव वरो ह्यर्हत्तम यर्हि बर्हिषि राजर्षेर्वरदर्षभो भवान् निज-पुरुषेक्षण-विषय आसीत् ॥ ३.१० ॥

अथ कथंचित् स्खलन-क्षुत्-पतन-जृंभण-दुरवस्थानादिषु विवशानां नः स्मरणाय ज्वर-मरणदशायामपि सकल-कश्मल-निरसनानि तव गुण-कृतनामधेयानि वचनगोचराणि भवन्तु ॥ ३.१२ ॥

---

2. 21. ஆக்னீத்ர புத்திரர்களான அவர்கள் தாயின் அனுக்கிரகத்தால் பிறவியிலிருந்தே அழகிய உறுப்புக்களும் சிறந்த வலிமையும் படைத்தவர்களா யிருந்தனர். பிதா பங்கிட்டுக் கொடுத்ததும் தங்களுடைய பெயராலேயே விளங்குவதுமான ஜம்பூத்துவீபங்களின் வர்ஷங்களை யாண்டனுபவித்தனர்.

3. 1. நாபிதேவர் புத்திரனை விரும்பி, அதுவரை புத்திரப் பேறில்லாத மேரு தேவியுடன் பகவான் யஜ்ஞபுருஷரை ஒருமைப்பட்ட மனத்துடன் யாகத்தால் பூஜித்தார்.

3. 2. சிரத்தையுடனும் பரிசுத்தமான பாவனையுடனும் பூஜிக்கும் அவருடைய அந்த யாகத்தில் திரவியம், தேசம், காலம், மந்திரம், ரித்விக், தக்ஷிணை, விதி முதலிய எல்லாம் ஒருங்கே நன்கு அமைந்திருக்கப் பிரவர்க்கியம் எனும் கிரியை நிகழும்போது அடைதற்கரியவனுயினும் பக்தர்களுக் கிரங்குபவனுகிய பகவான் பிறர் காண்டற்கரிய அழகுமிகுந்த உருக்கொண்டு தன் அடியார்க் கருளவேண்டும் என்ற நோக்கத்தால் உள்ளம் கசிந்தவராய் உள்ளத்தைக் கொள்ளைகொள்வதும் மனதுக் கினியதும் கண்களுக்கு ஆனந்தத்தைத் தருவதுமான அவயவங்களின் சோபையுடன் ஆவிர்ப்பவித்தார்.

ருத்விக்குகள் கூறியது—

3. 10. பூஜ்யசிரேஷ்டரே! வேண்டியவரத்தை யளிப்பவர்களிற் சிறந்தவரான தாங்கள் தங்கள் அடியார்களாகிய எங்களுக்கு இந்த ராஜரிஷியின் யாகத்தில் பிரத்தியக்ஷமானீர் எனும் இதுவே எங்களுக்கு வரம்.

3. 12. இடறினுலும், தும்மினுலும், விழுந்தாலும், கொட்டாவி விட்டாலும், இக்கட்டான நிலைகளிலும் தன் வயமின்றியியங்கும் எங்களுக்கு ஜ்வர மரண நிலைகளிலும் எல்லாப் பாவங்களையும் போக்கும் உமது குணங்களையும் லீலைகளையும் கூறும் நாமதேயங்கள் வாக்கில் தாமாகவே வரவேண்டும்.

---

3. 12. ஒ. துஞ்சும் போதழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லிலும் நன்றும்
நஞ்சுதான் கண்டீர் நம்முடைவினைக்கு
நாராயணு வென்னு நாமம். —திருமங்கையாழ்வார்.

किञ्चायं राजर्षि-रपत्यकामः प्रजां भवादृशी-माशासान ईश्वर-माशिषां स्वर्गापवर्गयोरपि भवन्त-मुपधावति प्रजायामर्थ-प्रत्ययो धनदमिवाधनः फलीकरणम् ॥ ३.१३ ॥

श्रीभगवानुवाच—

अहो बताहमृषयो भवद्भि-रवितथ-गीर्भि-र्वर-मसुलभमभियाचितो यद्मुष्यात्मजो मया सदृशो भूयादिति ममाहमेवाभिरूपः कैवल्या-दथापि ब्रह्मवादो न मृषा भवितु-मर्हति ममैव हि मुखं यद् द्विजदेवकुलम् ॥ ३.१७ ॥

तत आग्नीध्रीये अंशकलयावतारिष्यामि आत्मतुल्य-मनुपलभमानः ॥ ३.१८ ॥

श्रीशुक उवाच—

इति निशामयन्त्या मेरुदेव्याः पतिमभिधायान्तर्दधे भगवान् ॥ ३.१९ ॥

बर्हिषि तस्मिन्नेव विष्णुदत्त! भगवान् परमर्षिभिः प्रसादितो नाभेः प्रियचिकीर्षया तदवरोधायने मेरुदेव्यां धर्मान् दर्शयितुकामो वातरशनानां श्रमणानामृषीणामूर्ध्वमन्थिनां शुक्लया तनुवावततार ॥ ३.२० ॥

---

3. 13. இன்னும் ஒன்று. புத்திரனை விரும்பும் இந்த ராஜரிஷி உம்மைப் போல் ஒரு மகனையடைய ஆசைப்படுகிறார். புத்திரப்பேறே பரம புருஷார்த்தம் என்ற எண்ணத்தில் இம்மைக்கும் மறுமையில் ஸ்வர்க்கத்துக்கும் அதற்கும்பாலுள்ள மோக்ஷத்துக்கும் ஈசுவரனை உம்மை அதற்காகப் பிரார்த்திக்கிறார். அது செல்வத்தையளிக்கக் கூடிய பிரபுவை யண்டி ஒரு ஏழை உமியை யாசிப்பதுபோலிருக்கிறது. (எனினும் அவருக்கு இரங்கி அருள் புரியவேண்டும்).

ஸ்ரீ பகவான் கூறியது—

3. 17. ரிஷிகளே! பழுது படாத சொற்களையுடைய உங்களால் கேட்கப்பட்ட வரம் எளிதானதன்று, இவருக்கு என்னைப்போன்ற புத்திரன் உண்டாகவேண்டும் என்று. என்னைப்போன்றவர் எவருமில்லாததால் எனக்கு நானே ஈடு. எனினும் பிராம்மணர்களின் வாக்குப் பொய்யாவதும் தகுதியன்று. பிராம்மண தேவர்களின் குலம் என் முகமேயாகும்.

3. 18. எனக்கு ஈடு காண முடியாமல் நானே ஆக்னீத்ர குமாரனை நாபியிடத்தில் எனது அம்ச கலையால் அவதரிக்கப் போகிறேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

3. 19. மேருதேவி கேட்டுக்கொண்டிருக்க அவருடைய பர்த்தாவைக் குறித்து இங்ஙனம் அருளிவிட்டு பகவான் அந்தர்த்தான மடைந்தார்.

3. 20. பரீக்ஷித்தே! அந்த யாகத்தில் ரிஷி சிரேஷ்டர்களால் பிரஸன்னமாகச் செய்யப்பெற்ற பகவான் நாபிக்கு அனுக்கிரகம் செய்யக் கருதியும் திகம்பரர்களும் தபஸ்விகளும் ரிஷிகளும் ஊர்த்துவரேதர்களும் அனுஷ்டித்தற்குரிய தருமங்களை உலகுக்கு எடுத்துக்காட்டவும், நாபியின் அந்தப்புர மஹிஷியான மேருதேவியிடம் அவதரித்தார்.

---

3. 20. **அவரோதாயனே**—அந்த:புரே, **சுக்லயா—சுத்த** ஸத்வமய்யா, **ச்ரமணாம்**—தபஸ்விநாம், **ருஷீணாம்**—ஜ்ஞானிநாம், **ஊர்த்வமந்திநாம்**—நைஷ்டிக ப்ரஹ்மசாரிநாம்.

नाभिस्तु यथाभिलषितं सुप्रजास्त्व-मवरुध्या-तिप्रमोदभर-विह्वलो गद्गदा-क्षरया गिरा स्वैरं गृहीत-नरलोकसधर्मं भगवन्तं पुराणपुरुषं मायाविलसित-मति-र्वत्स तातेति सानुराग-मुपलालयन् परां निर्वृति-मुपगतः ॥ ४.४ ॥

अथ ह भगवान् ऋषभदेवः स्ववर्षं कर्मक्षेत्र-मनुमन्यमानः प्रदर्शित-गुरुकुल-वासो लब्धवरै-र्गुरुभि-रनुज्ञातो गृहमेधिनां धर्मा-ननुशिक्षमाणो जयन्त्या-मिन्द्र-दत्ताया-मुभयलक्षणं कर्म-समाम्नायाम्नात-मभियुंजन् आत्मसमानानां शतं जनयामास ॥ ४.८ ॥

येषां खलु महायोगी भरतो ज्येष्ठः श्रेष्ठगुण आसीद्येनेदं वर्षं भारतमिति व्यपदिशन्ति ॥ ४.९ ॥

ऋषभ उवाच—

नायं देहो देहभाजां नृलोके कष्टान् कामानर्हते विड्भुजां ये ।
तपो दिव्यं पुत्रका येन सत्त्वं शुद्ध्येद्यस्माद् ब्रह्मसौख्यं त्वनन्तम् ॥ ५.१ ॥

महत्सेवां द्वारमाहु-र्विमुक्ते-स्तमोद्वारं योषितां सङ्गिसङ्गम् ।
महान्तस्ते समचित्ताः प्रशान्ता विमन्यवः सुहृदः साधवो ये ॥ ५.२ ॥

---

4. 4. நாபி சக்கரவர்த்தி தன் மனோரதப்படி ஸத் புத்திரனைப் பெற்றதால் அளவுகடந்த மகிழ்ச்சியில் மெய்ம்மறந்து தழுதழுத்த வார்த்தையினால், தானே விரும்பி மனித உருவையும் அதற்குரிய செயல்களையும் ஏற்று அவதரித்த ஆதி புருஷனாகிய பகவானை (பகவானெனக் காணமாட்டாதவராய்) மாயையால் மறைக்கப்பட்ட மதியினராய் 'குழந்தாய்! அப்பனே!' என அன்பு பொங்க (தன் மகன் எனச்) சீராட்டிப் பரமானந்தத்தை யடைந்தார்.

4. 8. பிறகு பகவான் ரிஷப தேவர் தனது பாரத வர்ஷம் கர்ம க்ஷேத்திர மென்பதை எண்ணி குருகுல வாசத்தை அனுஷ்டித்துக் காட்டி குரு தக்ஷிணை யளித்துக் குருமார்களின் அனுமதி பெற்று கிருஹஸ்த தருமங்களை யனுஷ்டித்துக் காட்ட விரும்பி, இந்திரன் கொடுத்த ஜயந்தி தேவியை மணந்து, அவளுடன் கூடி (சுருதி ஸ்மிருதிகள் விதிக்கும்) இருவித கருமங்களையும் செவ்வனே அனுஷ்டிக்கின்றவராய்த் தன்னைப் போன்ற நூறு புத்திரர்களைப் பெற்றார்.

4. 9. அவர்களுள் மூத்தவரும் சிறந்த குணமுள்ளவருமாக இருந்தவர் மஹா யோகி பரதர். அவரால் தான் இந்நாடு பாரதம் எனப் பெயர் பெற்றது.

ரிஷபர் கூறியது—

5. 1. புத்திரர்களே! மனித உலகில் உடலெடுத்தவர்க்கு இந்த உடல் மலத்தை உண்டு வாழும் அற்ப ஜந்துக்களுக்கே உரித்தானதும் துன்ப வடிவானதுமான சிற்றின்பங்களை நுகர்வதற்காக அன்று. எதனால் சித்தம் நிர்மலமாகி அதன் மூலம் அளவற்ற பிரம்மானுபவ சுகம் உண்டாகுமோ அந்த திவ்வியமான தவத்தைச் செய்வீர்களாக.

5. 2. மகான்களின் ஸேவையை மோக்ஷ வாயில் என்றும், ஸ்திரீ ஸங்கிகளின் ஸங்கத்தை அஜ்ஞான வாயில் என்றும் கூறுவர். எவர்கள் ஸம சித்தர்களும், சாந்தமானவர்களும் கோபமற்றவர்களும் எல்லோரையும் நேசிப்பவர்களும் நல்லொழுக்கமுடையவர்களுமாக உள்ளவர்களோ அவர்களே மகான்கள்.

पुंसः स्त्रिया मिथुनीभावमेतं तयोर्मिथो हृदयग्रन्थिमाहुः ।
अतो गृहक्षेत्र-सुताप्तवित्तै-र्जनस्य मोहोऽयमहं ममेति ॥ ५.८ ॥

सर्वत्र मद्भाव-विचक्षणेन ज्ञानेन विज्ञान-विराजितेन ।
योगेन धृत्युद्यम-सत्त्वयुक्तो लिंगं व्यपोहेत् कुशलोऽहमाख्यम् ॥ ५.१३ ॥

पुत्रांश्च शिष्यांश्च नृपो गुरुर्वा मल्लोककामो मदनुग्रहार्थः ।
इत्थं विमन्यु-रनुशिष्या-दतज्ज्ञान् न योजयेत् कर्मसु कर्ममूढान् ॥ ५.१५ ॥

गुरुर्न स स्यात्स्वजनो न स स्यात् पिता न सस्यात् जननी न सा स्यात् ।
दैवं न तत्स्यान्न पतिश्च स स्यान्न मोचयेद्यः समुपेतमृत्युम् ॥ ५.१८ ॥

तस्माद्भवन्तो हृदयेन जाताः सर्वे महीयांसममुं सनाभम् ।
अक्लिष्टबुद्ध्या भरतं भजध्वं शुश्रूषणं तद्भरणं प्रजानाम् ॥ ५.२० ॥

---

5. 8. ஸ்திரீ புருஷ ஸங்கத்தால் அவர்களிடை பரஸ்பர மேற்படும் பற்றுதலையே ஹிருதயக் கிரந்தி என்பர். அந்தப் பற்றினின்றே வீடு, வயல், மக்கள், சுற்றம், செல்வம் முதலியவற்றால் மனிதர்க்கு நான் என்றும் என்னுடையது என்றும் (படிப்படியாக) மதிமயக்கம் வளர்கின்றது.

5, 13. எங்கும் என்னைக் காணும் அனுபவத்தால் பிரகாசிக்கும் தெளிந்த ஞானத்தாலும் தைரியம், விடா முயற்சி, விவேகம் இவற்றுடன் கூடினவனாய் யோகத்தாலும் அகங்காரம் எனப்படுவதை அடையாளமின்றிப் போக்கவேண்டும்.

5. 15. என்னுலகை விரும்புபவனும் எனது அனுக்கிரகத்தையே பரம புருஷார்த்தமாகக் கருதுபவனும் (பிதாவாயின்) புத்திரர்களையும், குருவாயின் சிஷ்யர்களையும், அரசனாயின் பிரஜைகளையும் தத்துவத்தை அறியாதவர்களை இதுவரை கூறிய வகையில் கோபத்தை யடையாமல் புத்தி புகட்டி நல்வழிப்படுத்த வேண்டும். இயற்கையாகவே காமிய கருமத்தினால் மதி கெட்டவர்களை மீண்டும் அக் கருமங்களிலேயே புகுத்தக்கூடாது.

5. 18 எவர் மிருத்யுவை யடைந்தவனை விடுவிக்க வில்லையோ அவர் குருவுமல்லர், பந்துவுமல்லர், தந்தையு மல்லர், தாயுமல்லர், தெய்வமு மல்லர், பதியுமல்லர்.

5, 20. எனதுள்ளத்துக்கு உகந்தவர்களாய்ப் பிறந்த நீங்கள் எல்லோரும் உங்களது உத்தம ஸகோதரனாகிய பரதனைப் பொறாமையில்லாமல் பரிசுத்த பாவனையுடன் பின்பற்றி நடக்கவேண்டும். அதனால் எனது பணிவிடையையும் பிரஜைகளின் பாலனத்தையும் செய்தவர்களாவீர்கள்.

---

5. 15. **விமன்யு:—சி**க்ஷிதஸ்யாப்யகரணே கோபசூன்ய:,
மதனுக்ரஹ ஏவ அர்த்தோ யஸ்ய ।

ஒ. மகனே ஒன்றையாக்குதல் மாற்றுதல்
அழித்திடலெல்லாம் நின் செயலன்று காண்
தோற்றேனென நீ உரைத்திடும் பொழுதிலே வென்றாய்.
உலகினில் வேண்டிய தொழிலெலாம்
ஆசையும் தாபமு மகற்றியே புரிந்து வாழ்க நீ. —பாரதி.

**श्रीशुक उवाच—**

**एवमनुशास्यात्मजान् स्वयमनुशिष्टानपि लोकानुशासनार्थं महानुभावः परमसुहृद्भगवान् ऋषभापदेश उपशमशीलानां उपरतकर्मणां महामुनीनां भक्तिज्ञान-वैराग्य-लक्षणं पारमहंस्य-धर्म-मुपशिक्षमाणः स्वतनयशतज्येष्ठं परम - भागवतं भगव-ज्जन-परायणं भरतं धरणिपालनायाभिषिच्य स्वयं भवन एवोर्वरित-शरीरमात्र परि ग्रह उन्मत्त इव गगन-परिधानः प्रकीर्णकेश आत्मन्यारोपिताहवनीयो ब्रह्मावर्तात् प्रवव्राज ॥ ५.२८ ॥**

**जडान्ध-मूक-बधिर-पिशाचोन्मादकव-द्वधूतवेषोऽभिभाष्यमाणोऽपि जनानां गृहीत-मौनव्रत-स्तूर्ष्णीं बभूव ॥ ५.२९ ॥**

**भगवति वासुदेवे आत्मनोऽव्यवधानानन्तरोदरभावेन सिद्ध समस्तार्थ-परि-पूर्णो योगैश्वर्याणि वैहायस-मनोजवान्तर्धान-परकायप्रवेश-दूरग्रहादीनि यदृच्छयोप-गतानि नांजसा नृप हृदयेनाभ्यनन्दत् ॥ ५.३५ ॥**

**तस्य ह वा एवं मुक्तलिंगस्य भगवत ऋषभस्य योगमायावासनया देह इमां जगती-मभिमानाभासेन संक्रममाणः कोंक-वेंक-कुटकान्—दक्षिणकर्णाटकान् देशान् यदृच्छयोपगतः कुटकाचलोपवन आस्यकृताश्मकवल उन्माद इव मुक्तमूर्धजो असंवीत एव विचचार ॥ ६.७ ॥**

ஸ்ரீ சுகர் கூறியது—

5. 28. இயற்கையாகவே அவர்கள் இங்ஙனம் நடப்பவர்களாயினும் உலகிற்கு நீதியைப் புகட்டுவதற்காக மகானுபாவரும் எவ்வுயிர்க்கும் நண்பரும் ரிஷபர் என்று உலகில் அறியப்பட்டவருமான பகவான் புத்திரர்களுக்கு இவ்வாறு கட்டளையிட்டு விட்டு, புலன்களையடக்கிச் செயலற்று நிவிருத்தி மார்க்கத்தில் நிற்கும் முனிசிரேஷ்டர்களுக்கு பக்தி ஞான வைராக்கியத்தை ஸ்வரூபமாக உடைய பரமஹம்ஸ தர்மத்தை அனுஷ்டித்துக் காட்டும் பொருட்டு, தனது புத்திரர் நூற்றுவரில் முதல்வனும், பரமபாகவதனும், அடியார்களுக்கடியவனும் ஆன பரதனைப் பூமியை ஆளும்படி அபிஷேகம் செய்வித்து, வீட்டுடன் அனைத்தையும் துறந்து உடல் ஒன்றையே உடைமையாய்க் கொண்டு உன்மத்தனைப்போல், ஆகாயமே ஆடையாய் விரிசடையினராய், ஆத்மாவில் ஆஹவனீயாக்னியை ஆரோபித்தவராய், பிரம்மாவர்த்த தேசத்திலிருந்து வெளிக் கிளம்பினார்.

5. 29. மூடன், குருடன், ஊமை, செவிடன், பேயன், பித்தன் ஆகியோரைப் போல் அவதூத வேஷத்தினராய் மௌனவிரதம் மேற்கொண்டு ஜன சமூகத்தில் பிறர் பேசினாலும் பேசாமலிருந்தார்.

5. 35. அரசே! பகவான் வாசுதேவரிடம் தமக்கு அபேத பாவனையால் இடையில் தடையாக உடல் முதலிய உபாதிகளின்மையால், எல்லா அர்த்தங்களிலும் பரிபூர்ண சக்தி எய்தியவராய், ஆகாய ஸஞ்சாரம், மனோவேகஸஞ்சாரம், மறைந்துபோதல், பிறர் உடலில் புகுதல், தூரத்திலுள்ளதை உணர்தல் முதலிய யோக ஐசுவரியங்கள் தற்செயலாக வந்தபோதிலும் உண்மையில் அவைகளைப்பற்றி உள்ளத்தில் மகிழவில்லை.

6. 7. குறியுங் குணமுமற்றவரான அந்த ரிஷப தேவருடைய சரீரம் யோக மாயா வாசனையால் அபிமானமுள்ளது போல் இவ்வுலகில் நடமாடுவதாய்க் கொங்கம், வெங்கம், குடகு, தென் கன்னடம் முதலிய நாடுகளைக் காரணமின்றிக் கடந்து, குடகுமலைக் காடுகளில் தலை விரி கோலமாய், ஆடையேதுமின்றி, பித்தனைப்போல் வாயில் கற்களைப் போட்டு மென்று கொண்டு (ஒரு சமயம்) சஞ்சரித்துக் கொண்டிருந்தார்.

—கீ. 14. 22-26.

6. 7. ஒ. குணாதீதலக்ஷணம்.

अथ समीरवेगविधूत-वेणु-विकर्षण-जातोग्र-दावानलस्तद्वन-मालेलिहानः सह तेन ददाह　॥ ६.८ ॥

अयमवतारो रजसोपप्लुत-कैवल्योप-शिक्षणार्थः　॥ ६.१२ ॥

राजन् पति-गुरु-रलं भवतां यदूनां
　दैवं प्रियः कुलपतिः क्व च किंकरो वः ।
अस्त्वेव-मङ्ग भगवान् भजतां मुकुन्दो
　मुक्तिं ददाति कर्हिचित् स्म न भक्तियोगम्　॥ ६.१८ ॥

नित्यानुभूत-निजलाभ-निवृत्ततृष्णः
　श्रेयस्यतद्रचनया चिरसुप्त-बुद्धेः ।
लोकस्य यः करुणया भय-मात्मलोक-
　माख्यान्नमो भगवते ऋषभाय तस्मै　॥ ६.१९ ॥

---

6. 8. அப்போது காற்றின் வேகத்திஞல் மூங்கில்கள் உராய்ந்து, அதினின்று தோன்றிய கடுமையான காட்டுத்தீ அக்காட்டை நாற்புரமும் சூழ்ந்து எரிக்க, அவர் சரீரமும் அதில் எரிந்து மறைந்தது.

6. 12. இந்த அவதாரம் இரஜோகுணம் மேலிட்டவர்களுக்கு கைவல்ய மார்க்கத்தை விளக்கிக் காட்டுவதற்கேயாம்.

6. 18. அரசே! உங்களுக்கும் யாதவர்களுக்கும் இரக்ஷகனும் குருவும் தெய்வமும் நண்பனும் குலபதியுமாக முழுதும் விளங்கிய பகவான் வேலைக்காரனுமாக அல்லவா இருந்தான். அன்பனே! அது அங்ஙனமே இருக்கத்தக்கது. பகவான் முகுந்தன் தன்னை நாடுவோர்க்கு முக்தியைக் கொடுப்பான்; ஆஞல், ஒரு போதும் (எளிதில்) பக்தி யோகத்தை மட்டும் கொடுக்கமாட்டான்.

6, 19. சிற்றின்பங்களி லாழ்ந்து நெடுங்காலமாய் மதியிழந்து உறங்கிக் கிடக்கும் உலகிற்கு அறிவுறுத்தி ஆத்ம லாபத்தால் ஆசைகளற்று ஆனந்தானுபவத்தில் நின்ற எந்த ரிஷபதேவர் பயமற்ற ஆத்ம உலகைக் காட்டி யருளிஞரோ அவருக்கு நமஸ்காரம்.

---

6. 8. ஞானிகள் உடலை விடுவதற்கு தேசகால நிமித்தம் கிடையாது. பாம்பின் சட்டை ஏற்கெனவே தேகத்திலிருந்து விலகினது ஏதோ ஒரு முள்ளில் சிக்கி உரிந்துபோவதுபோல் ஞானிகளின் உடல் கழன்றுபோம்.

ஒ. ஸதாத்மனி ப்ரஹ்மணி திஷ்டதோ முனே:
　பூர்ணத்வயானந்த-மயாத்மனு ஸதா ।
ந தேச-காலாத்-யுசித-ப்ரதீக்ஷா
　த்வங்-மாம்ஸ-விட்-பிண்ட-விஸர்ஜனுய ॥　—விவேக சூடாமணி 558.

## जडभरतोपाख्यानम् ॥

भरतस्तु महाभागवतो यदा भगवतावनितल-परिपालनाय संचिन्तित-स्तदनु-शासनपरः पञ्चजनीं विश्वरूप-दुहितरमुपयेमे ॥ ७.१ ॥

तस्यामुह वा आत्मजान् कार्त्स्न्येनानुरूपान् आत्मनः पञ्च जनयामास भूतादिरिव भूतसूक्ष्माणि ॥ ७.२ ॥

स वहुविन्महीपतिः पितृ-पितामहव-दुरुवत्सलतया स्वे स्वे कर्मणि वर्त-मानः प्रजाः स्वधर्म-मनुवर्तमानः पर्यपालयत् ॥ ७.४ ॥

एवं कर्मविशुद्ध्या विशुद्धसत्त्वस्यांतर्हृदयाकाश शरीरे - ब्रह्मणि भगवति वासुदेवे महापुरुषरूपोपलक्षणे श्रीवत्सकौस्तुभ-वनमालाऽरिदर-गदादिभि-रुपलक्षिते निजपुरुषहृल्लेखितेनात्मनि पुरुषरूपेण विरोचमान उच्चैस्तरां भक्ति-रनुदिन-मेधमान-रयाऽजायत ॥ ७.७ ॥

एवं कर्मनिर्वाणावसरोऽधिभुज्यमानं स्वतनयेभ्यो रिक्थं पितृपैतामहं यथा-दायं विभज्य स्वयं सकलसंपन्निकेतात् पुलहाश्रमं प्रवव्राज ॥ ७.८ ॥

---

### ஜட பரத உபாக்கியானம்

7. 1. மகா பாகவதரான பரதர் பூமியைத்தான் பரிபாலிக்க வேண்டும் என்பது பகவத் ஸங்கல்பம் என்று எப்பொழுது உணர்ந்தாரோ அப்பொழுது அக்கடமையை நிறைவேற்றுவதில் முழு மனத்தையும் வைத்து விசுவரூபரின் பெண்ணான பஞ்ச ஜனியை மணந்து கொண்டார்.

7. 2. அஹங்கார தத்துவம் ஐந்து தன்மாத்திரைகளைத் தோற்றுவித்தாற்போல் பரதர் பஞ்சஜனியிடம் தனக்கு முற்றிலும் நிகரான ஐந்து புத்திரர்களை உண்டாக்கினர்.

7. 4. விரிவாய்க் கற்றுணர்ந்த அவர் தன் தகப்பனையும் பாட்டனையும்போல் தன்னுடைய தருமத்தில் தவறாதவராய்ப் பிரஜைகளை அவரவர் தருமங்களில் நிலைபெறச் செய்து தந்தையைப்போல் மிகுந்த அன்புடன் பரிபாலித்து வந்தார்.

7. 7. இங்ஙனம் பரிசுத்தமான கர்மாவால் பரிசுத்தமான உள்ளம் படைத்த பரதருக்கு இருதயாகாசத்தின் உருக்கொண்டு விளங்கும் பரப்பிரம்மமும், பகவானும், மகா புருஷ லக்ஷணங்கள் விளங்க ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், வனமாலை, சக்கரம், சங்கம், கதை முதலியவற்றுடன், (நாரதர் முதலிய) பக்தர்களின் இருதயத்தில் எழுதப்பட்ட சித்திரம் போல் அசைவற்று நிற்கும் அந்தர்யாமியுமான வாசுதேவனிடத்தில் நாள்தோறும் மேன்மேலும் ஓங்கி வளரும் பக்தியுண்டாயிற்று.

7. 8. இவ்வாறாகக் கருமத்தினின்று விடுதலையடையும் நிலையை எய்திய அவர் பாட்டன் தகப்பன் வழி பெற்றுத் தான் ஆண்டு அனுபவித்த அரசையும் செல்வத்தையும் தாயபாகப்படி தன் மக்களுக்குப் பிரித்துக் கொடுத்து விட்டு ஸகல ஐசுவரியங்களும் நிறைந்த அரண்மனையினின்று புலஹாசிரமம் சென்றார்.

---

7. 7. **கர்ம விசுத்த்யா**—கர்ம சுத்தியாவது எல்லாக் கர்மங்களையும் ஏகரூபமாகச் செய்தல்; சாப்பாடெல்லாம் ஒரே வயிற்றிக்குப் போகிறது என்று உணர்வதுபோல், எல்லா தேவதைகளுக்கும் செய்யும் பூஜையும் பிரம்மார்ப்பணம் என்ற புத்தி.

7. 8. **புலஹாசிரமம்**—கண்டகீ நதீ தீரம், ஸாலக்ராம உத்பத்தி ஸ்தானம்.

तस्मिन् वाव किल स एकलः पुलहाश्रमोपवने विविधकुसुम-किसलय-तुलसिकाम्बुभिः कन्दमूलफलोपहारैश्च समीहमानो भगवत आराधनं विविक्त उपरत-विषयाभिलाष उपभृतोपशमः परां निर्वृति-मवाप ॥ ७.११ ॥

तयेत्थ-मविरत-पुरुषपरिचर्यया भगवति प्रवर्धमानानुरागभरद्रुत-हृदय-शैथिल्यः प्रहर्षवेगेनात्मन्युद्भिद्यमानरोमपुलक-कुलक औत्कण्ठ्य-प्रवृत्त-प्रणय-बाष्प-निरुद्धावलोकनयन एवं निजरमणारुण-चरणारविन्दानुध्यानपरिचित-भक्तियोगेन परिप्लुत-परमाह्लाद-गंभीर-हृदय-ह्रदावगाढधिषणस्तामपि क्रियमाणां भगवत्-सपर्यां न सस्मार ॥ ७.१२ ॥

इत्थं धृत-भगवद्व्रत ऐणेयाजिन-वाससानुसवनाभिषेकार्द्रकपिश-कुटिल-जटाकलापेन च विरोचमानः सूर्यर्चा भगवन्तं हिरण्मयं पुरुषमुज्जिहाने सूर्यमण्डलेऽभ्यु पतिष्ठन्नेतदुहोवाच ॥ ७.१३ ॥

परोरजः सवितु-र्जातवेदो देवस्य भर्गो मनसेदं जजान । सुरेतसादः पुनरा-विश्य चष्टे हंसं गृध्राणं नृषद्रिंगिरामिमः ॥ ७.१४ ॥

---

7. 11. அங்கு புலஹாசிரம உபவனத்தில் பரதர் ஏகாந்தமாக இருந்து கொண்டு விதவிதமான புஷ்பங்கள், துளிர்கள், துளஸி, தீர்த்தம், கிழங்கு, வேர், பழம் முதலிய உபஹாரங்களால் பகவானை ஆராதிக்கின்றவராய்ப் பற்றற்றவராய், விஷயங்களில் ஆசை நீங்கியவராய்ப் பரம சாந்தராய்ப் பரமானந்தத்தை யடைந்தார்,

7. 12. இவ்விதம் இடையறாது நிகழ்ந்த பரம புருஷ ஆராதனையால் பகவானிடத்தில் பிரேமை பெருக்கெடுத்து உள்ளம் கரைய, உடலும் மயிர்க்கூச்சால் புளகிப்ப ஆனந்தக் கண்ணீர் பார்வையை மறைக்க, மனது ஆத்மாராமனான பகவானுடைய சிவந்த சரணாரவிந்தத் தியானத்தி லாழ்ந்து நிற்க, பக்தி யோகத்தால் பரமானந்த வெள்ளம் பாய்ந்து செல்லும் இருதயமாகிற ஆழ்ந்த மடுவில் புத்தியும் மூழ்கிப்போகத் தன்னையும் மறந்து தான் செய்யும் பகவதாராதனையையும் மறந்தார்.

7. 13. இங்ஙனம் விரதம் பூண்ட பரதர், மான் தோல் ஆடையுடனும் வேளைக்கு வேளை நீராடுவதால் செம்பட்டை பாய்ந்து பின்னலிட்ட ஜடையுடனும் பிரகாசிப்பவராய்ப் பொன்போ லொளிரும் பரம புருஷனைச் சூரிய மண்டலத்தில் சூரிய ரிக் மந்திரத்தால் வழி படுகின்றவராய் பின் வருமாறு போற்றினார்.

7. 14. 'எந்த பரஞ்ஜோதி ஸங்கல்ப மாத்திரத்தால் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்ததோ, எது சிருஷ்டியில் அந்தர்யாமி வடிவில் பிரவேசித்து விஷயத்தில் அலைகின்ற ஜீவனைத் தனது சிச் சக்தியால் இரக்ஷிக்கின்றதோ, அப்படிப்பட்ட சுத்த ஸத்துவ மானதும் புத்தி சக்தியைத் தூண்டுவதுமான ஸவித்ரு தேவனுடைய தேஜஸ்ஸை சரண் அடைகின்றோம்.

---

7. 14. **பரோரஜ:**—ரஜஸ: ப்ரக்ருதே; பரம் **சுத்த** - ஸத்வாத்மகம்; **ஜாதவேத:**- கர்மபல**த:** ஜாதம் வேதோ தனம் யஸ்மாத்; **ஸுரேதஸா**-சிச்சக்த்யா; **அத:**-ஸ்ருஷ்டம் விச்வம்; **சஷ்டே**-பச்யதி, பாலயதி; **க்ருத்**ராணம்-காங்க்ஷந்தம்; **ஹம்ஸம்**-ஜீவம்; ந்ருஷு ஸீதத் உபாதிதயா திஷ்டதீதி ந்ருஷத்**புத்தி**: தஸ்யா: ருங்கி ருங்கணம் கதிம் ராதீதி ந்ருஷத்ரிங்கிராம் வா; **இம:**-சரணம் வ்ரஜாம: ॥

एकदा तु महानद्यां कृताभिषेक-नैयमिकावश्यको ब्रह्माक्षरमभिगृणानो मुहूर्तत्रय-मुदकान्त उपविवेश ॥ ८.१ ॥

तत्र तदा राजन् हरिणी पिपासया जलाशयाभ्याश-मेकैवोपजगाम ॥ ८.२ ॥

तया पेपीयमान उदके तावदेवाविदूरेण नदतो मृगपतेरुन्नादो लोकभयंकर उदपतत् ॥ ८.३ ॥

तमुपश्रुत्य सा मृगवधूः प्रकृतिविक्लवा चकितनिरीक्षणा सुतरामपि हरि-भयाभिनिवेशव्यग्र-हृदया पारिप्लवदृष्टिरगततृषा भयात्सहसैवोच्चक्राम ॥ ८.४ ॥

तस्या उत्पतन्त्या अन्तर्वत्न्या उरुभयावगलितो योनिनिर्गतो गर्भः स्रोतसि निपपात ॥ ८.५ ॥

तत्प्रसवोत्सर्पण-भय-खेदातुरा स्वगणेन वियुज्यमाना कस्यांचिद्दर्यां कृष्ण-सार-सती निपपात च ममार ॥ ८.६ ॥

तं त्वेण-कुणकं कृपणं स्रोतसाऽनूह्यमान-मभिवीक्ष्यापविद्धं बन्धु-रिवानुकंपया राजर्षि-र्भरत आदाय मृतमातरमित्याश्रमपद-मनयत् ॥ ८.७ ॥

---

8. 1. ஒரு சமயம் மகா நதியில் நீராடிவிட்டு நித்திய நைமித்திக அவசிய காரியங்களை முடித்துப் பிரணவ ஜபம் செய்து கொண்டு மூன்று முகூர்த்தம் வரை நதிக்கரையில் அமர்ந்திருந்தார்.

8. 2. அரசே! அப்போது அங்கு ஒரு பெண்மான் நீரருந்துவதற்கு நதிக்கரைக்குத் தனியே வந்தது.

8. 3. அது நீரருந்தும்போது அருகில் சிங்கத்தின் கர்ஜனை முழக்கம் உலகனைத்தையும் நடுங்க வைப்பது போல் உண்டாயிற்று.

8. 4. அதைக்கேட்டு பயந்த ஸ்வபாவமும் மிரண்ட பார்வையுமுடைய அப்பெண் மான் சிங்க பயத்தால் பயம் உள்ளத்தில் ஊடுருவ வெகுவாய்க்கலங்கி அரண்ட பார்வையுடன் தாக சாந்தி செய்து கொள்ளாமலேயே பயத்தினால் விரைவில் குதித்தது.

8. 5. கருத்தரித்திருந்த அம்மான் அங்ஙனம் தாண்டுகையில் பயத்தின் மிகுதியால் கருவிலிருந்த சிசு நழுவி யோனியின் வாயிலாக வெளிப்போந்து நீரோட்டத்தில் விழுந்தது.

8. 6. உயர்ந்த ஜாதி கிருஷ்ண மிருக பத்தினியான அம்மான் கரு நழுவியதால் பயமும் துன்பமும் இன்னும் அதிகமாய்ப் பீடிக்கத் தன் கூட்டத்தினின்று பிரிந்து எதோ ஒரு குகைக்குள் விழ்ந்து இறந்தது.

8. 7. உற்றுருறவினரின்றி நீரோட்டத்தில் கவர்ந்துசெல்லப்படுகின்ற அநாதையான மான் குட்டியைக் கண்ணுற்று அந்த ராஜரிஷி பரதர் பந்துவைப்போல் மிகுந்த கருணையுடன் அதை எடுத்துத் தாயில்லாத குழந்தை எனும் எண்ணத்துடன் ஆசிரமத்துக்குக் கொண்டு போனார்.

---

8. 4. மானுக்கு பயமும், பாம்புக்குக் கோபமும், கழுகுக்குப் பசியும் பிரசித்தி.

तस्य हवा एणकुणक उच्चैरेतस्मिन् कृतनिजाभिमानस्याहरहस्तत्पोषण-पालन-लालन-प्रीणनानुध्यानेनात्म-नियमाः सह यमाः पुरुष-परिचर्यादय एकैकशः कतिपयेनाहर्गणेन वियुज्यमानाः किल सर्व एवोदवसन् ॥ ८.८ ॥

इति कृतानुषङ्ग आसन-शयनाटन-स्थानाशनादिषु सह मृगजहुना स्नेहानुबद्धहृदय आसीत् ॥ ८.११ ॥

क्रियायांनिर्वर्त्य मानाया-मन्तरालेऽप्युत्थायोत्थाय यदैन-मभिचक्षति तर्हि वाव स वर्षपतिः प्रकृतिस्थेन मनसा तस्मा आशिष आशास्ते स्वस्ति स्याद्वत्स ते सर्वत इति ॥ ८.१४ ॥

अन्यदा भृशमुद्विग्नमना नष्टद्रविण इव कृपणः सकरुण-मतितर्षेण हरिण-कुणकविरह-विह्वल-हृदय-सन्ताप-स्तमेवानुशोचन् किल कश्मलं महदभिरंभित इति होवाच ॥ ८.१५ ॥

अपि क्षेमेणास्मिन्नाश्रमोपवने शष्पाणि चरन्तं देवगुप्तं द्रक्ष्यामि ॥ ८.१७ ॥

---

8. 8. அவருக்கு அம்மான் குட்டியிடம் ஏற்பட்ட அதிகமான அபிமானத்தால் நாள்தோறும் போஷித்தல் காப்பாற்றுதல் சீராட்டுதல் கொஞ்சி விளையாடுதல் அவற்றைப் பற்றி நினைத்தல் முதலியவற்றால் தன்னுடைய இயம நியமங்களும் ஈசுவராராதனைகளும் ஒவ்வொன்றாக சில நாட்களில் விலகிப்போய் முடிவில் எல்லாம் போய் விட்டன.

8. 11. இங்ஙனம் ஏற்பட்ட பற்றுதலால் உட்காரும்போதும் படுக்கும்போதும், நடக்கும்போதும் நிற்கும்போதும் சாப்பிடும்போதும் மான் குட்டியை விட்டுப் பிரியமாட்டாதவராகச் சிநேகத்தினால் கட்டுண்ட மனத்தினரானார்.

8. 14. ஆராதனக் கிரியைகளைக் கவனித்துக் கொண்டிருக்கும் போதும் இடையிடையே எழுந்து இந்த மான்குட்டியைப் பார்ப்பார். அப்படிப் பார்க்கும்போதெல்லாம் இந்த பூபதி கவலை நீங்கிய மனத்துடன் "குழந்தாய், உனக்கு எங்கும் மங்களம் உண்டாக வேண்டும்" என்று அதை ஆசீர்வதிப்பார்.

8. 15. மற்றும் ஒருபோது காணவிட்டால் மிகவும் கலங்கினவராய், சொத்தைப் பறி கொடுத்த லோபியைப்போல், மனத்தில் ஆசை பொங்க, மான்குட்டியின் பிரிவாற்றாமையால் தவிப்பவராய், அதையே நினைந்து வருந்தி மதிமயங்கிப் பின் வருமாறு பிரலாபிப்பார்.

8. 17. "ஐயோ! தெய்வத்தால் ரக்ஷிக்கப்பட்டு ஆசிரமத்தின் உபவனத்தில் அது புல் மேய்வதை நான் மீண்டும் காண்பேனா ?"

---

8. 8. **நியமா:**—ஸ்நானாதய:, **யமா:**—அஹிம்ஸாதய:।
இராஜ்யத்தையும் மனைவி மக்களையும் விட்ட இவருக்கு மான் குட்டியிடம் பாசம் பிராரப்தத்தால் ஏற்பட்டது.

ஒ. 'ஸ்நேஹ பாச-மிமம் ச்சிந்தி'—குந்தியின் பிரார்த்தனை.

ஞானம் வந்தபின் கர்மம் ஒன்றும் செய்யாது. அதற்குமுன் கர்மத்தால் பந்தம் வரும். ஆனதால் அஜாக்கிரதை கூடாது.

**एवमघटमान-मनोरथाकुलहृदयो मृगदारकाभासेन स्वारब्धकर्मणा योगारंभणतो विभ्रंशितः स योगतापसो भगवदाराधन-लक्षणाच्च, कथमितरथा जात्यन्तर एणकुणक आसङ्गः साक्षान्निःश्रेयस-प्रतिपक्षया प्राक् परित्यक्त-दुस्त्यज-हृदयाभिजातस्य तस्यैव-मन्तराय विहत-योगारंभणस्य राजर्षे-र्भरतस्य तावन्मृगार्भक-पोषण-लालनानुषङ्गेणाविगणयत आत्मान-महिरिवाखुबिलं दुरतिक्रमः कालः करालरभस आपद्यत ॥ ८.२६ ॥**

**तदानीमपि पार्श्व-वर्तिन-मात्मजमिवानुशोचन्त-मभिवीक्षमाणो मृग एवाभिनिवेशित-मना विसृज्य लोकमिमं सह मृगेण कलेवरं मृतमनु न मृतजन्मानुस्मृति-रितरवत् मृगशरीरमवाप ॥ ८.२७ ॥**

**तस्मिन्नपि कालं प्रतीक्षमाणः संगाच्च भृश-मुद्विग्न आत्मसहचरः शुष्क-पर्ण-तृण-वीरुधा वर्तमानो मृगत्व-निमित्तावसानमेव गणयन्मृगशरीरं तीर्थोदक-क्लिन्न-मुत्ससर्ज ॥ ८.३१ ॥**

8. 26. இவ்விதம் முரண்பாடான மனோரதத்தால் உள்ளங் கலங்கிய யோகியும் தவசியுமான அவர் மான்குட்டி வடிவில் வந்து சேர்ந்த பிராரப்த கருமத்தால் யோகானுஷ்டானத்திலிருந்தும் பகவதாராதனைக் கைங்கரியங்களி லிருந்தும் நழுவியவரானார். அங்ஙனமில்லாவிடில், ஏற்கெனவே எளிதில் விடமுடியாத தன் மக்களையே மோக்ஷ வழிக்குப் பிரதிகூலமென்று விலக்கி விட்டு வந்த இவருக்கு மனிதப்பிறவி யல்லாத மான்குட்டியினிடத்தில் அவ்வளவு பற்று எப்படி ஏற்படும் ? இவ்விதம் யோக முயற்சி தடைபட்டுப் போய் மான்குட்டியைப் போஷித்தல், காப்பாற்றுதல், சீராட்டுதல், கொஞ்சி விளையாடுதல் முதலியவற்றிலுள்ள பற்றுதலினால் ஆத்ம சிந்தனையை யிழந்துவிட்ட இராஜரிஷி பரதரை நாடிக் கடக்க முடியாத மரணகாலம் வெகு வேகத்துடன் எலி வளையில் பாம்பு நுழைவது போல் வந்து விட்டது.

8. 27. அப்போது கூட அருகிலிருந்து கொண்டு புத்திரனைப்போல் துக்கப்படும் மானையே பார்த்துக்கொண்டு, அதனிடமே ஆழ்ந்த பற்றுடைய மனத்தினராய், இந்த உலகை விட்டு, அத்துடன் மானையும் விட்டு, உடலையும் விட்டுப் பிறரைப்போல் (அந்திய கால ஸ்மிருதிக் கிணங்க) மான் பிறவியை யடைந்தார்; எனினும் இறந்து போன ஜன்மத்தைப்பற்றிய ஞாபகத்தை (மான் பிறவியிலும் பிறரைப்போல்) இழந்துவிடவில்லை.

8. 31. அப்பிறவியிலும் ஸங்கத்தில் மிகுந்த பயங்கொண்டு தன்னொருவனையே தனக்குத் துணையாய்க் கொண்டு காய்ந்து போன இலையையும் புல்லையும் கொடியையும் தின்று ஜீவித்து, மான் பிறவிக்குக் காரணமான பிராரப்த கருமத்தின் முடிவையும் மரணத்தையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்து, அவர் (அந்தியகாலம் கிட்டியபோது அதை யுணர்ந்து) பரிசுத்தமான நீரில் முழுக்காட்டி மான் உடலை நீத்தார்.

8. 27. ஒ. கடைசியில் எந்தெந்த நினைவை நினைத்துக்கொண்டு உடலை விட்டாலும் எப்போதும் அந் நினைவையே நினைத்ததால் அதையே அடைகிறான். —கீ. 8. 6.

ஆனால் குண்டலினி சக்தியை யோகமுயற்சியால் ஒருமுறை தட்டி எழுப்பிவிட்டால் பின் அது உறங்காது வேலை செய்துகொண்டே இருக்கும். இவனை அது இயக்குவிக்கும். ஒரு ஜன்மத்தில் விடுதலை ஏற்படாவிட்டால் அடுத்த ஜன்மத்தில் அதன் வேலையைத் தொடர்ந்து செய்யும்.

ஒ. தத்ர தம் **புத்தி** ஸம்யோகம் லபதே பௌர்வ-**தே**ஹிகம் ।
யததே ச ததோ **பூ**ய: ஸம்ஸித்**தௌ** குருநந்தன ॥ —கீ. 6-43.

8. 31. **தீர்த்தோதகக்லின்னம்**—ஆர்**த்**ரம் அர்**த்தோத**கஸ்தம்.
ஒ. 'யன்மரணம் ததவப்ருத:' —தை. உப.

अथ कस्यचिद् द्विजवरस्यांगिरः-प्रवरस्य शम-दम-तपः - स्वाध्यायाध्ययन-त्याग-सन्तोष-तितिक्षा-प्रश्रयविद्यानसूयात्मज्ञानानन्द - युक्तस्यात्मसदृश-श्रुत-शीला-चाररूपौदार्य-गुणा नव सोदर्या अङ्गजा बभूवु-र्मिथुनं च यवीयस्यां भार्यायाम् ॥९.१॥

यस्तु तत्र पुमांसं परम - भागवतं राजर्षि-प्रवरं भरतमुत्सृष्ट-मृगशरीरेण विप्रत्वं गतमाहुः ॥ ९.२ ॥

तत्रापि स्वजनसङ्गाच्च भृशमुद्विजमानो भगवतः कर्मबन्धविध्वंसन-श्रवण-गुणविवरण-चरणारविन्दयुगलं मनसा विदधदात्मनः प्रतिघात-माशंकमानो भगव-दनुग्रहेणानुस्मृत-स्वपूर्व-जन्मावलि-रात्मान-मुन्मत्त-जडान्ध-बधिरस्वरूपेण दर्शया-मास लोकस्य ॥ ९.३ ॥

तस्यापि ह वा आत्मजस्य विप्रः पुत्रस्नेहानुबद्धमना आसमावर्तनात् संस्का-रान् यथोपदेशं विदधान उपनीतस्य च पुनः शौचाचमनादीन् कर्मनियमाननभिप्रेता-नपि समशिक्षय-दनुशिष्टेन हि भाव्यं पितुः पुत्रेणेति ॥ ९.४ ॥

---

9. 1–2. பிறகு ஆங்கிரஸ கோத்திரத்தில் உதித்தவர்களில் சிறந்தவரும், புலன்களையும் பொறிகளையும் அடக்கித் தவஞ் செய்பவரும், ஓதுதல் ஓதுவித்தல், தானம், ஸந்தோஷம், பொறுமை, வணக்கம், வித்தை, அழுக்காறுமை, ஆத்ம ஞானம், ஆத்மானந்தானுபவம் முதலிய நற்குண நற்செயல்கள் நிறைந்தவரும் ஆகிய ஒரு பிராம்மணோத்தமருக்கு முதல் மனைவியிடத்தில் அவருக்குச் சமமான கல்வியும் கேள்வியும் குணமும் ஒழுக்கமும் ரூபமும் பரந்த மனமும் படைத்த ஒன்பது புத்திரர்களும், இளையாளிடத்தில் ஆணும் பெண்ணுமாக இரட்டைக் குழந்தைகளும் தோன்றினர் என்றும் அவ்விரட்டையரில் ஆணாகப் பிறந்தவரே பரம பாகவதரும் ராஜரிஷி சிரேஷ்டரும், மான் உடலை நீத்துக் கடைசி பிறவியில் பிராம்மண குலத்தில் தோன்றியவருமான பரதர் என்று கூறுகின்றனர்.

9. 3. அப்பிறவியிலும் உறவினர்களுடைய பற்றுதலில் மிகவும் பயந்தவராய்க் கேட்டாலும், நினைத்தாலும், பெருமையைப் பேசினாலும் கருமத்தளைகளை நீக்கும் பகவானுடைய சரண கமலங்களிரண்டையுமே மனத்தில் பதிய வைத்துக் கொண்டவராய், பகவானுடைய அனுக்கிரகத்தால் தனது முற்பிறவித் தொடர்பின் ஞாபகமுடையவராய்த் தனக்கு மீண்டும் பற்றினால் ஏற்படக் கூடிய விபத்துக்கு அஞ்சியவராய்த் தன்னைப் பித்தன், ஜடன், குருடன், செவிடன் போல் உலகுக்குக் காட்டிக் கொண்டார்.

9. 4. புத்திரவாத்ஸல்யத்தினால் கட்டுண்ட பிராம்மணர் தனது குமாரனுக்கு ஸமாவர்த்தனம் வரை சாஸ்திரப்படி செய்ய வேண்டிய ஸம்ஸ்காரங்களைச் செய்விக்க வேண்டுமென்று விரும்பியவராய், உபநயனத்துக்குப் பின் சௌசம் ஆசமனம் முதலிய கரும நியமங்களை பரதர் ஏற்காவிடினும் பிதா புத்திரனை நல்வழிப்படுவது கடமையென்று கட்டாயப்படுத்திக் கற்பித்தார்.

---

9. 1. ஒ. அதவா யோகினாமேவ குலே பவதி தீமதாம்। கீ. 6. 42.

9. 3. நன்றாய் நீந்தத் தெரிந்தவனும் ஸமுத்திரத்தில் மூழ்கிவிடுவதுபோல் யோகியுங்கூட ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிவிடக்கூடும். அதற்கு பயந்து பரதயோகி எட்டி நின்றார்.

ஒ. பாலரொடு பேயர் பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர் தஞ் செய்கை பராபரமே. —தாயுமானவர்.

9. 4. ஸமாவர்த்தனம் வரை ஸம்ஸ்காரங்களைச் செய்துவைக்கவேண்டியது பிதாவின் கடமை. அதற்குமேல் விவாகமோ வைராக்கியமோ புத்திரனுடைய இஷ்டம்.

स चापि तदुह पितृसन्निधावेवासध्रीचीनमिव स्म करोति छंदांस्यध्यापयिष्यन् सह व्याहृतिभिः सप्रणवशिरस्त्रिपदीं सावित्रीं ग्रैष्म-वासन्तिकान् मासा-नधीयान-मप्यसमवेतरूपं ग्राहयामास ॥ ९.५ ॥

एवं स्वतनुज आत्मन्यनुरागावेशित-चित्तः…असदाग्रहः पुत्रमनुशास्य स्वयं तावद् अनधिगत-मनोरथः कालेनाप्रमत्तेन स्वयं गृह एव प्रमत्त उपसंहृतः ॥ ९.६ ॥

पितर्युपरते भ्रातर एन-मतत्प्रभाविद्-स्त्रय्यां विद्यायामेव पर्यवसित-मतयो न परविद्यायां जडमतिरिति भ्रातुरनुशासननिर्बन्धान्न्यवृत्सन्त ॥ ९.८ ॥

रजसा महामणिरिवानभिव्यक्त-ब्रह्मवर्चसः कुपटावृत-कटिरुपवीतेनोरुमषिणा द्विजातिरिति ब्रह्मबन्धुरिति संज्ञयाऽतज्ज्ञजनावमतो विचचार ॥ ९.१० ॥

यदा तु परत आहारं कर्मवेतनत ईहमानः स्वभ्रातृभिरपि केदार-कर्मणि निरूपित-स्तदपि करोति किन्तु न समं विषमं न्यून-मधिकमिति वेद कण-पिण्याक-फलीकरणकुल्माष-स्थालीपुरीषादीन्यप्यमृतवदभ्यवहरति ॥ ९.११ ॥

---

9. 5. ஆனால் அவரோ பிதாவின் முன்னிலையிலேயே (கற்பித்ததற்கு) நேர்மாறாக நடந்து கொண்டார். (உபநயனத்துக்குப் பின்) வேதங்களைச் சொல்லி வைக்க ஆரம்பித்து, வஸந்த ருது க்ரீஷ்மருது முடிய நாலு மாதங்கள் சொல்லி வைத்தும் வியாஹ்ருதியுடனும் பிரணவ சிரஸுடனும் மூன்றடியுள்ள காயத்ரீ மந்திரத்தைக் கூடப் பிதா ஒழுங்காகக் கற்பிக்க முடியவில்லை.

9. 6. தன் வயிற்றில் பிறந்த புத்திரன் என்ற அபிமானத்தால் அனுராகமும் கடுமையான ஆக்ரஹமும் உடையவராய். இவ்விதம் புத்திரனுக்குச் சிக்ஷித்தும் தன்னுடைய மனோரதம் நிறைவேறாதவராக கிருகத்தில் தன்னை மறந்து உழன்று கொண்டிருக்கையில், மறதியில்லாத காலனால் கொண்டு போகப்பட்டார்.

9. 8. பிதா மரித்ததும், கரும காண்டத்தில் மட்டுமே பயிற்சியுடையவர்களும் ஆத்ம ஞானத்தை உணராதவர்களும் இவருடைய மஹிமையை அறிய மாட்டாதவர்களுமான சகோதரர்கள் அவரை முட்டாளெனக் கொண்டு அவரைப் படிப்பிக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தத்திலிருந்து விலகிக்கொண்டனர்.

9. 10. அழுக்கால் பிரகாசிக்காத மாணிக்கத்தைப்போல வெளிப்படையாய்த் தெரியாத பிரம்மதேஜஸ் உடையவராயும், இடுப்பில் மலினமான ஆடையுடையவராயும், அழுக்கால் மிகவும் கருத்த பூணூலால் துவிஜன் என்றும், பிராம்மண அதமன் என்றும் அவருடைய பெருமையை அறியாத ஜனங்களால் ஸமிக்ஞையால் அவமதிக்கப்பட்டவராயும் சஞ்சரித்தார்.

9. 11. எப்பொழுதாவது பிறரிடமிருந்து அவர் ஆகாரத்தை வேலைக்குக் கூலியாக ஏற்றுக் கொண்டால் அப்போது (அதைக்கண்ட) தன் சகோதரர்களாலும் வயல் வேலைகளில் ஏவப்பட்டு அதைச் செய்வார்; ஆனால் சமதரையோ, மேடுபள்ளமோ, குறைவோ அதிகமோ தெரியாது; நொய்யோ, பிண்ணாக்கோ, தவிடோ, சொத்தை உளுந்தோ, சமையல் பாத்திரத்தில் அடிப்பிடித்ததோ எதுவானாலும் அமுதம்போல் ஏற்றுக்கொள்வார்.

---

9. 6. ஒ. (நிராசீர்-நிர்மமோ பூத்வா யுத்த்யஸ்வ விகதஜ்வர:) ஆசையில்லாதவனாய் என்னுடையது என்ற பற்றில்லாதவனாய் இருந்துகொண்டு மனக்கொதிப்பு முற்றும் நீங்கியவனாய்ப் போர் புரிவாய். —கீ. 3. 37.

பிள்ளைகளைச் சீர்திருத்துவதிலும் ஆக்ரஹம் கூடாது.

9. 8. பரதனுடைய தாயார் பர்த்தாவுடன் ஸஹகமனம் செய்தாள்.

ஒ. 'அத்தா அரியே என்றுன்னை யழைக்கப்
பித்தா என்று பேசுகின்றார் பிறரென்னை' —திருமங்கையாழ்வார்.

சகோதரர்களுக்கு இவரிடம் அன்புமில்லை, மதிப்புமில்லை.

**अथ कदाचित्कश्चिद् वृषलपति-र्भद्रकाल्यै पुरुषपशुमालभतापत्यकामः ॥ ९.१२ ॥**

**तस्य ह दैवमुक्तस्य पशोः पदवीं तदनुचराः परिधावन्तो निशि निशीथ-समये तमसावृतायामनधिगतपशव आकस्मिकेन विधिना केदारान् वीरासनेन मृगवराहादिभ्यः संरक्षमाण-मङ्गिरः प्रवर-सुत-मपश्यन् ॥ ९.१३ ॥**

**अथ त एनमनवद्यलक्षण-मवमृश्य भर्तृ-कर्म-निष्पत्तिं मन्यमाना बद्ध्वा रशनया चंडिका-गृह-मुपनिन्यु-र्मुदा विकसित-वदनाः ॥ ९.१४ ॥**

**अथ पणय-स्तं स्वविधिनाभिषिच्याहतेन वाससाऽऽच्छाद्य भूषणलेप-स्रक्-तिलकादिभि-रुपस्कृतं पुरुषपशुं भद्रकाल्याः पुरत उपवेशयामासुः ॥ ९.१५ ॥**

**अथ वृषलराजपणिः पुरुष-पशोरसृगासवेन देवीं भद्रकालीं यक्ष्यमाण-स्तदभि-मन्त्रित-मसि-मतिकरालनिशित-मुपाददे ॥ ९.१६ ॥**

---

9. 12-13. பின்பு ஒரு சமயம் திருடர் கூட்டத் தலைவனொருவன் தனக்குப் பிள்ளை பிறப்பதற்காக பத்ரகாளிக்கு நரபலி கொடுக்க ஏற்பாடு செய்தான். பலிக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மனிதன் அதிருஷ்டவசமாய்த் தப்பித்து ஓடிவிட்டதால் அவனைத் தேடிக்கொண்டு இருள் சூழ்ந்த இரவில் நடுநிசியில் இங்குமங்கும் சென்ற வேலைக்காரர்கள் பலிபுருஷனைக் காணமல், ஏதோ விதிவசத்தால் வீராசனத்திலமர்ந்து மான், காட்டுப்பன்றி முதலியவற்றினின்று வயல்களைக் காத்துவரும் ஆங்கிரஸகுலப் பிராம்மண குமாரனாகிய பரதரைக் கண்ணுற்றனர்.

9. 14. பிறகு அவர்கள் இவரைச் சிறந்த லக்ஷணமுடையவராகக் கண்டு யஜமானருடைய கர்மம் ஸபலம் என்ற எண்ணங்கொண்டு மகிழ்ச்சியால் மலர்ந்த நேத்திரமுடையவர்களாய்க் கயிற்றால் கட்டிச் சண்டிகையின் ஆலயத்திற்குக் கூட்டிச் சென்றார்கள்.

9. 15. பின் அத்திருடர்கள் தமது முறைப்படி அவருக்கு நீராட்டுவித்துக் கோடி யுடுத்தி ஆபரணம், சந்தனம், மாலை, திலகம் முதலியவற்றால் அலங்கரித்து நரபலியாக பத்திரகாளியின் முன் உட்காரவைத்தனர்.

9. 16. அதன்மேல் திருடர் தலைவனின் புரோஹிதன் பலி புருஷனுடைய இரத்தத்தைப் பானமாகப் பத்ரகாளி தேவிக்கு அளித்துப் பூசிப்பதற்காக அதற்குரிய மந்திரத்தால் மந்திரிக்கப்பட்டதும் கொடியதும் கூரியதுமான கத்தியைக் கையிலெடுத்தான்.

---

9. 12. பரதர் பரணில் காவலிருந்தபோதும் பிரம்மானுபவத்தி லிருந்தார். ஞானிக்கு எந்தக் காரியத்திலிருந்தாலும் பிரம்மானுபவக் குறைவு ஏற்படாது.

ஒ. எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே.

ஒ. பாலைக் கடைந்து வெண்ணெயை நீரிலோ மோரிலோ போட்டுவைத்தாலும் மறுபடி நீருடனும் மோருடனும் அது கலக்காது; மேலேயே மிதக்கும். ஞானி எங்கிருந்தாலும் அவனுடைய மனம் சுற்றிலுமுள்ள பொருள்களுடன் கலக்காமல் பகவானிடமே திரண்டு நிலைபெறும். —ரா. கி.

9. 16. தலையை வெட்ட வந்தபோதும் அசையாமலிருந்தார். இவர் அசையாமலிருந்தது ஞானத்தாலா அக்ஞானத்தாலா என்பதை மேலே வரும் வரலாறு விளக்கும்.

निर्वैरस्य सर्वभूत-सुहृदः सूनाया-मप्यननुमत-मालंभनं तदुपलभ्य ब्रह्मतेज-सातिदुर्विषहेण दन्दह्यमानेन वपुषा सहसोच्चचाट सैव देवी भद्रकाली ॥ ९.१७ ॥

भृश-ममर्ष-रोषावेश-रभस-विलसित-भ्रुकुटि-विटप-कुटिल-दंष्ट्रारुणेक्षणा-टोपाति-भयानकवदना हन्तुकामेवेदं महाट्टहास-मतिसंरंभेण विमुंचन्ती तत उत्पत्य पापीयसां दुष्टानां तेनैवासिना विवृक्ण-शीर्ष्णां गलात् स्रवन्त-मसृगासव-मत्युष्णं सह गणेन निपीयातिपानमदविह्वलोच्चैस्तरां स्वपार्षदैः सह जगौ ननर्त च विजहार च शिरः कन्दुकलीलया ॥ ९.१८ ॥

एवमेव खलु महदभिचारातिक्रमः कात्स्न्येनात्मने फलति ॥ ९.१९ ॥

अथ सिन्धुसौवीरपते रहूगणस्य व्रजत इक्षुमत्या-स्तटे तत्कुलपतिना शिबिका-वाह-पुरुषान्वेषण-समये दैवेनोपसादितः स द्विजवर उपलब्ध एष पीवा युवा संहननाङ्गो गोखरवद्धुरं वोढुमल-मिति पूर्व-विष्टि-गृहीतैः सह गृहीतः प्रसभ-मतदर्ह उवाह शिबिकां स महानुभावः ॥ १०.१ ॥

---

9. 17. சாஸ்திரம் அனுமதிக்காத இம்சையாகின்ற இதைக்கண்டு பத்திரகாளியானவள் வைர மில்லாதவரும் எல்லாப் பிராணிகளிடத்தும் நட்புக்கொண்டவருமான அம்மகானுடைய சகிக்கவொண்ணாத பிரம்ம தேஜஸ்ஸால் தகிக்கப்பட்டு விக்கிரகத்தினின்று வெளிப்பட்டாள்.

9. 18. பொறுக்க முடியாத கோபாவேசத்தின் வேகத்தினால் நெரித்த புருவங்களும், வளைந்த தெற்றிப் பற்களும், சிவந்த கண்களின் சலனத்தால் மிகவும் பயங்கர மான முகமும் உடையவளாய் இவ்வுலகையே யழித்து விட எண்ணியவள்போல் மிகுந்த கோபத்துடன் கர்ஜிக்கின்றவளாய் அங்கிருந்து வெளிப்போந்து பாவிகளும் கொடியவர்களுமான அவர்களை அவர்களுடைய கத்தியினாலேயே தலையை வெட்டி அவர்கள் கழுத்தினின்று பெருகுகிற சூடான இரத்தத்தைத் தனது பரிவாரங்களுடன் பருகி வெறி பிடித்தவளைப் போல் பாரிஷதர்களுடன் கூடிப் பாடியும் ஆடியும் வெட்டுண்டவர்களின் தலைகளைப் பந்தாகக் கொண்டு விளையாடினாள்.

9. 19. இப்படித்தான் மகான்களுக்குச் செய்யப்படும் அபசாரமும் கெடுதலும் முழுதும் தன்னிடமே பலித்து விடும்.

10. 1. இதற்குப் பின் ஒரு சமயம் ஸிந்து ஸௌவீர தேசாதிபதியான ரஹூகணன் இக்ஷுமதி நதிக்கரையில் (பல்லக்கில்) போய்க் கொண்டிருக்கையில், பல்லக்குத் தூக்குவோரின் தலைவன் பல்லக்குத்தூக்க ஆள் தேட வேண்டிவர, அப்போது தெய்வ வசத்தால் இந்தப் பிராம்மண சிரேஷ்டர் அகப்பட்டார். "இந்த ஆள் பருத்த சரீர முடையவனும் யுவனும் திடமான அங்கங்களை யுடையவனும் மாடுபோலும் கழுதை போலும் சுமை தாங்கக்கூடியவனாயு மிருக்கிறான்!' என்று ஏற்கெனவே வெட்டியாளாகச் சேர்க்கப்பட்டிருந்தவர்களுடன் பலாத்காரமாய்ச் சேர்க்கப்பட்ட இம்மகானுபாவர் அத்தொழிலுக்குச் சிறிதும் தகாதவராயினும் பல்லக்கைச் சுமந்தார்.

---

9. 17. ஒ. இடம்பமும் அகங்காரமும் மிக்கோரும், காமமும் பற்றும் தடித்தவருமாகிய மதியீனர்களாய் உடலிலுள்ள இந்திரியங்களையும் உடலுள் உறையும் என்னையும் வருத்தி சாஸ்திரத்தில் கூறப்படாத கொடுமையான தவத்தை எவர்கள் செய்கிறார்களோ அவர்களை அசுர வழியில் துணிந்தவர்களாய் அறி. —கீ. 17. 5-6.

9. 18. ஒ. சத்திப்பேய்தான் தலையொடு தலைகள் முட்டிச்சட்டச் சடசட சட்டென்றுடைபடுதாளங் கொட்டி—அங்கே எத்திக்கினிலும் நின்விழியனல்போய் எட்டித் தானே எரியுங் கோலங்கண்டே சாகுங்காலம்—அன்னை அன்னை ஆடுங்கூத்தை நாடச் செய்தா யென்னை.

—பாரதி

अथ पुनः स्वशिबिकायां विषम-गतायां प्रकुपित उवाच रहूगणः किमिद-मरे त्वं जीवन्मृतो मां कदर्थी-कृत्य भर्तृ-शासन-मतिचरसि प्रमत्तस्य च ते करोमि चिकित्सां दण्डपाणिरिव जनताया यथा प्रकृतिं स्वां भजिष्यस इति ॥ १०.७ ॥

ब्राह्मण उवाच—

विशेष-बुद्धे-र्विवरं मनाक् च पश्याम यन्न व्यवहारतोऽन्यत्।
क ईश्वर-स्तत्र किमीशितव्यं तथापि राजन् करवाम किं ते ॥ १०.१२ ॥

उन्मत्त-मत्त-जडवत्-स्वसंस्थां गतस्य मे वीर चिकित्सितेन।
अर्थः कियान् भवता शिक्षितेन स्तब्ध-प्रमत्तस्य च पिष्टपेषः ॥ १०.१३

श्रीशुक उवाच—

एतावदनुवाद-परिभाषया प्रत्युदीर्य मुनिवर उपशमशील उपरतानात्म्य-निमित्त उपभोगेन कर्मारब्धं व्यपनयन् राजयानमपि तथोवाह ॥ १०.१४ ॥

---

10. 7. அப்பொழுது மீண்டும் மீண்டும் தனது பல்லக்கு வக்கிரமாய்ப் போவதைக் கண்டு கோபங்கொண்ட ரஹூகணன் "அடே, இது என்ன! நீ உயிருள்ள பிணமாயிருக்கின்றாய். என்னைப் பொருட்படுத்தாது அரசனாகிய என் கட்டளையை மீறி நடக்கிறாய். மதியீனனான உனக்கு எவ்விதம் செய்தால் புத்தி வருமோ அவ்விதம், அதாவது யமன் ஜனங்களைத் தண்டிப்பது போல், உனக்குச் சிகிச்சை செய்யப்போகிறேன்.

பிராம்மணர் (ஜடபரதர்) கூறியது—

10. 12. எவன் ஆள்பவன்? எவன் அடிமை? பேத புத்தியுள்ளவனுடைய வியவகாரத்தைத் தவிர இவ்வேற்றுமைக்கு வேறு காரணத்தை நான் காணவில்லை. எனினும், அரசே! உமக்கு நான் என்ன செய்யவேண்டும்?

10. 13. வீரனே! எனது இயற்கையில் நிலைத்துப் பித்தனைப்போலும் ஜடனைப் போலுமுள்ள என்னைக் கண்டிப்பதால் உமக்கு என்ன பயன்? உணர்ச்சியற்றவனும் மதியற்றவனுமான என்னைச் சிக்ஷிப்பது பிசைந்ததையே திரும்பிப் பிசைவது போலாகும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

10. 14. வைராக்கிய சீலரும், உடலைப்பற்றிய உணர்ச்சியில்லாதவரும் ஆகிய முனி சிரேஷ்டர் இங்ஙனம் அனுவாதமாகவும் பரிபாஷையாகவும் பதில் கூறிவிட்டு பிராரப்தத்தை அனுபவித்து முடிப்பவராய் அரசன் பல்லக்கையும் முன்போல் சுமந்து கொண்டே போனார்.

---

10. 12. 'எவர் சிறியரெவர் பெரியர் எவருறவர் எவர் பகைஞர்
யாது முனையன்றி யுண்டோ?' —தாயுமானவர்

பெற்றோரிடமும் வாய் திறவாத ஜடபரதர் ரஹூகணனிடம் வாய் திறந்து பேசியது அவனுடைய அதிர்ஷ்டம்.

स चापि पाण्डवेय! सिन्धुसौवीरपति-स्तत्त्वजिज्ञासायां सम्यक् श्रद्धयाधि-कृताधिकार-स्तद्धृदय-ग्रन्थि-मोचनं द्विजवच आश्रुत्य बहुयोग-ग्रन्थ-सम्मतं त्वर-यावरुह्य शिरसा पादमूल-मुपसृतः क्षमापयन् विगत-नृपदेवस्मय उवाच ॥ १०.१५ ॥

कस्त्वं निगूढ-श्चरसि द्विजानां बिभर्षि सूत्रं कतमोऽवधूतः।
कस्यासि कुत्रत्य इहापि कस्मात् क्षेमाय नश्चेदसि नोत शुक्लः
॥ १०.१६ ॥

नाहं विशङ्के सुरराजवज्रान्न त्र्यक्षशूलान्न यमस्य दण्डात्।
नाग्न्यर्क-सोमानिल-वित्तपास्त्रात् शंके भृशं ब्रह्मकुलावमानात्
॥ १०.१७ ॥

अहं च योगेश्वर-मात्मतत्त्वविदां मुनीनां परमं गुरुं वै।
प्रष्टुं प्रवृत्तः किमिहारणं तत् साक्षाद्धरिं ज्ञानकलावतीर्णम् ॥ १०.१९ ॥

स वै भवाल्लोक-निरीक्षणार्थ-मव्यक्तलिंगो विचरत्यपि स्वित्।
योगेश्वराणां गति-मन्धबुद्धिः कथं विचक्षीत गृहानुबन्धः ॥ १०.२० ॥

---

10. 15. பரீக்ஷித்தரசே, அந்த ஸிந்து ஸௌவீரபதி தத்துவ விசாரத்தில் சிரத்தை மிகுந்த அதிகாரியாதலால், பல யோகக் கிரந்தங்களின் ஸாரமாயும் இருதயக் கிரந்தியைச் சேதிப்பதாயு முள்ள விப்பிரவாக்கியத்தைக் கேட்டு விரைவில் கீழிறங்கி வந்து தலையால் அவருடைய பாத மூலத்தைத் தொட்டு வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தான் அரசன் என்ற கர்வம் நீங்கியவனாய்ப் பின் வருமாறு கூறினான்.

10. 16. பிராம்மணர்க்குரிய பூணூலைத் தரித்திருப்பதால் தங்களை அவதூத வேஷத்தில் மறைந்து சஞ்சரிப்பவராய் ஊகிக்கின்றேன், தாங்கள் யார்? (தத்தாத்தி ரேயர் முதலிய அவதூத சிரேஷ்டர்களுள்) எப்படி நான் தங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்? தாங்கள் யாருடைய புத்திரர்? எந்தப் பிரதேசத்தில் பிறந்தவர்? எக்கார ணம்பற்றி இங்கு வந்தீர்கள்? எங்களுக்கு அனுக்கிரகம் செய்ய வந்த பகவான் கபில ரேயா அல்லது வேறு மகாபுருஷரா?

10. 17. பிராம்மண குலத்தை அவமதிப்பதில் நான் எவ்வளவு அதிகமாய் அஞ்சு கிறேனோ அவ்வளவு இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கும் முக்கண்ணன் சூலாயுதத் திற்கும் யமனுடைய தண்டத்திற்கும் அக்கினி, சூரியன், ஸோமன், வாயு, குபேரன் இவர்களுடைய அஸ்திரத்திற்கும் அஞ்சவில்லை.

10. 19. யோகேசுவரரும் ஆத்ம தத்துவ முணர்ந்த முனிவர்களின் பரமகுருவும் ஞான கலையால் அவதரித்த ஸாக்ஷாத் ஹரியுமான கபில தேவரை நாடி இங்கு நமக்குப் புகலிடம் எது என்று கேட்டுத் தெளிவதற்காகப் புறப்பட்டவன் நான்.

10. 20. தாங்கள் அவர் தானா? உலகைக் கடாக்ஷிப்பதற்காக அடையாளங் காணமுடியாமல் சஞ்சரிக்கின்றீர்களா? கிருஹஸ்தாசிரமத்தில் ஆழ்ந்த பற்றுதலால் அறிவாகிய கண்ணை இழந்து விட்டவன் யோகேசுவரர்களின் போக்கை எப்படிக் காண முடியும்?

स्थाल्यग्नि-तापात् पयसोऽभिताप-स्तत्तापत-स्तण्डुल-गर्भ-रन्धिः ।
देहेन्द्रियास्वाशय-सन्निकर्षात् तत्संसृतिः पुरुषस्यानुरोधात् ॥ १०.२२ ॥

तन्मे भवान् नरदेवाभिमान-मदेन तुच्छीकृत-सत्तमस्य ।
कृषीष्ट मैत्रीदृश-मात्मबन्धो यथा तरे सदवध्यान-मंहः ॥ १०.२४ ॥

ब्राह्मण उवाच—

अकोविदः कोविद-वाद-वादान् वदस्यथो नातिविदां वरिष्ठः ।
न सूरयो हि व्यवहारमेनं तत्त्वावमर्शेन सहामनन्ति ॥ ११.१ ॥

तथैव राजन्नुरु-गार्हमेध-वितान-विद्योरु-विजृंभितेषु ।
न वेदवादेषु हि तत्त्ववादः प्रायेण शुद्धो नु चकास्ति साधुः ॥ ११.२ ॥

न तस्य तत्त्वग्रहणाय साक्षाद् वरीयसीरपि वाचः समासन् ।
स्वप्ने निरुक्त्या गृहमेधिसौख्यं न यस्य हेयानुमितं स्वयं स्यात् ॥ ११.३ ॥

---

10. 22. (உலையில் ஏற்றின) தவலையின் சூட்டினுல் பால் (அல்லது நீர்) சூடாகிறது. அச்சூட்டினுல் அரிசியினுட்பகுதியும் பக்குவமாகிறது. (உலகில் ஏறிய) உடலின் தாபம் இந்திரியத்திலும் பிராணனிலும் மனதிலும் உள்ளுறைபவனிடத்தும் தொடர்ந்து ஏற்படுகிறது.

10. 24. நொந்தவர்களின் பந்துவே! அரசன் என்ற அபிமானத்தால் மதிகெட்டு ஸாது சிரேஷ்டர்களை அவமதித்த என்னைத் தாங்கள் கிருபையுடன் கடாக்ஷித்து ஸாதுக்களை அவமதித்த பாவத்தை நான் எதனுல் கடப்பேனே அங்ஙனம் அருளவேண்டும்.

பிராம்மணர் (ஜடபாரதர்) கூறியது—

11. 1. நீ அறியாதவன்; அறிந்தவர்களின் பேச்சுக்களைப் பேசுகின்றுய்; அதனுல் நன்குணர்ந்தவர்களில் சிறந்தவனுகிவிட மாட்டாய். (அரசன் என்றும் அபிமானம் என்றும் பலவாறுக நீ பேசும்) இந்த மாதிரி வியவஹாரத்தைத் தெளிந்த ஞானிகள் தத்துவ விசாரத்துடன் ஒன்று படுத்திப் பேசமாட்டார்கள். (இந்த உலக வியவஹாரம் எல்லாம் பொய்).

11. 2. அரசே! அவ்வாறே கிருஹஸ்தாசிரமத்தில் செய்யப்படும் யாகம் முதலிய கருமங்களை விளக்கி விவரித்துப் புகழ்ந்து பேசும் வேத வாதங்கள் மிகுந்த இடத்தில் வெகுவாகத் தத்துவ விசாரம் செம்மையாய்ச் சுத்தமாய் விளங்காது.

11. 3. கனவுக்கு நிகரான கிருஹஸ்தாசிரம ஸுகம் தள்ளத்தக்கது என எவனுக்குத் தானுகவே தோற்றம் ஏற்படவில்லையோ அவனுக்கும் தலை சிறந்த வேதாந்த வாக்கியங்களும் உள்ளபடி தத்துவ ஞானத்தை உண்டாக்கப் பயன்படமாட்டா.

---

11. 2. ஒ. யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்-யவிபச்சித:। —கீ. 2. 42.
வேதவாதரதா: பார்த்த நான்யதஸ்தீதி வாதின:॥

ஒ. கழுகு ஆகாயத்தில் வெகு உயரத்தில் பறக்கின்றது. ஆயினும் அது எந்தக் குழியில் எந்தப் பிணம் கிடக்கிறதென்று கீழ்நோக்கிய வண்ணமாக இருக்கும். அதுபோலச் சாஸ்திரங்களைக் கற்றவராயிருப்பினும் பலர் கீழ்நோக்குடையவராய்ப் பெண்ணுசை பொன்னுசைளாகிற உலகப் பற்றுகளால் பந்தப்பட்ட மனமுடையவராக இருக்கின்றனர். ஆதலால் அவர்கள் உண்மை ஞானத்தைப் பெறுவதில்லை. —ரா, கி.

भ्रातृव्य-मेनं तदद्भ्र-वीर्य-मुपेक्षयाध्येधित-मप्रमत्तः ।
गुरो-र्हरेश्चरणोपसनास्त्रो जहि व्यलीकं स्वय-मात्म-मोषम् ॥ ११.१७ ॥

रहूगण उवाच—

नमो नमः कारण-विग्रहाय स्वरूप-तुच्छीकृत-विग्रहाय ।
नमोऽवधूत – द्विजबन्धु-लिङ्ग-निगूढ-नित्यानुभवाय तुभ्यम् ॥ १२.१ ॥

ज्वरामयार्तस्य यथागदं सत् निदाघदग्धस्य यथा हिमांभः ।
कुदेहमानाहि-विदष्टदृष्टेः ब्रह्मन् वचस्तेऽमृत-मौषधं मे ॥ १२.२ ॥

तस्माद्भवन्तं मम संशयार्थं प्रक्ष्यामि पश्चादधुना सुबोधम् ।
अध्यात्मयोग-ग्रथितं तवोक्त-माख्याहि कौतूहल-चेतसो मे ॥ १२.३ ॥

ब्राह्मण उवाच—

शोच्या-निमांस्त्व-मधिकष्ट-दीनान् विष्ट्या निगृह्णन्निरनुग्रहोऽसि ।
जनस्य गोप्तास्मि विकत्थमानो न शोभसे वृद्धसभासु दुष्टः ॥ १२.७ ॥

11. 17. ஆகவே பொய்யேயாயினும் வீரியம் மிக்கதும் அலக்ஷியம் செய்ததால் மிகவும் வலுத்து விட்டதும் ஆத்மாவைத் திருடிவிட்டதுமாகிய உடன் பிறந்த மனம் என்ற இச்சத்துருவை குருவாகிய ஸ்ரீ ஹரியின் பாதசேவை எனும் பிரம்மாஸ்திரத்தைக் கொண்டு தவறாது நாசம் செய்வாய்.

ரஹூகணன் கூறியது—

12. 1. உலகை உய்விக்க வேண்டிய காரணம் பற்றி உடலெடுத்த பரம புருஷராகிய உமக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம். ஆத்ம நிஷ்டையில் நின்று சரீரத்தை இகழ்ந்து விட்டவரும், ஜடனை பிராம்மண வேஷத்தில் தமது இடைவிடாத ஆத்மானுபவத்தை மறைத்துக் கொண்டு அவதூதராய்த் தோன்றுபவருமாகிய உமக்கு நமஸ்காரம்.

12. 2. பிரம்மஸ்வரூபியே! ஜ்வரநோயால் பீடிக்கப்பட்டவனுக்கு நல்ல மருந்து போலும், வெயிலால் பொசுக்கப்பட்டவனுக்கு பனியினின்று பெருகும் கங்கை நீர் போலும், இழிவான உடற்பற்றாகிய விஷப்பாம்பால் கடியுண்டு விவேக திருஷ்டியை இழந்த எனக்கு உமது வார்த்தை அமுதம் போன்ற ஔஷதமாகின்றது.

12. 3. எனக்குள்ள ஸந்தேகத்தைப் பற்றித் தங்களைப் பின்னர் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்போது அத்தியாத்ம யோகத்துடன் தாங்கள் செய்த உபதேசத்தை சித்தத்தில் ஆவல் கொண்ட எனக்கு மீண்டும் நன்கு விளங்கும்படி கூறியருளுதல் வேண்டும்.

பிராம்மணர் (ஜட பரதர்) கூறியது—

12. 7. மிகுந்த கஷ்டத்தினால் மெலிந்தவர்களும் இரங்கத்தக்கவர்களும் ஆகிய இவர்களை வெட்டியாட்களாகப் பிடித்து வைத்துக்கொண்டுள்ள நீ கருணை சிறிதுமில்லாதவன். எனினும் 'நான் ஜனங்களின் இரக்ஷகன்' என்று பேசும் துஷ்டனாகிய நீ பெரியோர்களின் சபையில் பிரகாசிக்கமாட்டாய்.

ज्ञानं विशुद्धं परमार्थ-मेक-मनन्तरं त्वबहि-र्ब्रह्म सत्यम् ।
प्रत्यक् प्रशान्तं भगवच्छब्दसंज्ञं यद्वासुदेवं कवयो वदन्ति ॥ १२.११ ॥

रहूगणैतत्तपसा न याति न चेज्यया निर्वपणाद् गृहाद्वा ।
न छन्दसा नैव जलाग्निसूर्यै-र्विना महत्पादरजोऽभिषेकम् ॥ १२.१२ ॥

यत्रोत्तमश्लोक-गुणानुवादः प्रस्तूयते ग्राम्यकथा-विघातः ।
निषेव्य-माणोऽनुदिनं मुमुक्षो-र्मतिं सतीं यच्छति वासुदेवे ॥ १२.१३ ॥

अहं पुरा भरतो नाम राजा विमुक्त-दृष्ट-श्रुत-सङ्ग-बन्धः ।
आराधनं भगवत ईहमानो मृगोऽभवं मृगसङ्गाद्धतार्थः ॥ १२.१४ ॥

सा मां स्मृति-र्मृगदेहेऽपि वीर कृष्णार्चन-प्रभवा नो जहाति ।
अतो अहं जनसङ्गा-दसङ्गो विशङ्कमानोऽविवृतश्चरामि ॥ १२.१५ ॥

---

12. 11. பிரம்மம் ஒன்றே ஸத்யம்; அது விசுத்தமான ஞானமாய், என்றும் உள்ளதாய், உள்ளென்றும் வெளியென்றும் வேறுபாடில்லாததாய் ஸர்வ ஸாக்ஷியாய் சாந்தமாய் விளங்குவது; அதுவே பகவத் சப்தத்தின் முடிவான பொருள்; அதையே தீர்க்க தரிசிகள் வாஸுதேவன் என்று பேசுகின்றனர்.

12. 12. ரஹூகணனே! மகான்களுடைய பாததூளியால் அபிஷேகம் பெற்றாலன்றி இந்த ஞானத்தைத் தவத்தாலும், இஷ்டிகளாலும் கிருஹஸ்த தருமங்களைச் செவ்வனே அனுஷ்டித்தலாலும் வேதமோதுதலாலும், ஜலம் அக்கினி சூரியன் முதலியவற்றை உபாசித்தலாலும் அடைந்துவிட முடியாது.

12. 13. எங்கு உத்தமசுலோகனை பகவானுடைய பெருமையைப் பற்றிய பேச்சு நிகழ்வதால் உலகப்பேச்சு ஒழிந்து போயிற்றோ அவ்விடத்தை (மகான்களின் ஸங்கத்தை) நாள்தோறும் நாடினால் அது மோக்ஷத்தை விரும்பியவனுக்கு வாசுதேவனிடத்தில் நன்கு நிலைபெற்ற மதியை அளிக்கின்றது.

12. 14. நானும் முன் பரதன் என்ற அரசனாக இருந்தவன். கண்டதிலும் கேட்டதிலும் உள்ள பற்றை ஒழித்து பகவதாராதனையில் முயன்று வந்த போதிலும் ஒரு மானிடம் ஏற்பட்ட பற்றினால் பிறவிப் பயனை இழந்து மானாய்ப் பிறந்தேன்.

12. 15. வீரனே! ஆனால் கிருஷ்ணனை அரச்சித்ததால் ஏற்பட்டிருந்த நன்னினைவு மான் உடலை எடுத்தபோதும் என்னை விட்டகலவில்லை. அதனால் நான் இப்போது ஜனஸங்கத்தில் அச்சங்கொண்டவனாய் எதிலும் பற்றின்றி என்னை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சஞ்சரிக்கின்றேன்.

---

12. 11. ஒ. சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி அருவுருவத் தன்மை நாமம்
ஏதுமின்றி எப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவற நின்றியக்கம் செய்யும்
சோதியை மாத்தூவெளியை மனதவிழ நிறைவான துரிய வாழ்வைத்
தீதில் பரமாம் பொருளைத் திருவருளே நினைவாகச் சிந்தை செய்வாம்.
—தாயுமானவர்.

12. 12. ஒ. தத்ஸாதனனி காயந்த் - யாசார்யா:। தத்து விஷய-த்யாகாத் ஸங்கத்யாகாச்ச। அவ்யாவ்ருத்த-பஜனாத்। லோகேபி பகவத்குண-ச்ரவண-கீர்த்தனாத்। முக்யதஸ்து மஹத்க்ருபயைவ பகவத்க்ருபா-லேசாத்வா। தத்தேவ ஸாத்யதாம் தத்தேவ ஸாத்யதாம்॥
—நாரதபக்தி ஸூத்ரம்.

तस्मान्नरोऽसङ्ग-सुसङ्ग-जात-ज्ञानासिनेहैव विवृक्णमोहः ।
हरिं तदीहा-कथन-श्रुताभ्यां लब्धस्मृति-र्यात्यतिपार-मध्वनः ॥ १२.१६ ॥

राजोवाच—

नह्यद्भुतं त्वच्चरणाब्ज-रेणुभि-र्हतांहसो भक्तिरधोक्षजेऽमला ।
मौहूर्तिकाद्यस्य समागमाच्च मे दुस्तर्क-मूलोऽपहतोऽविवेकः ॥ १३.२२ ॥

नमो महद्भ्योऽस्तु नमः शिशुभ्यो नमो युवभ्यो नम आवटुभ्यः ।
ये ब्राह्मणा गामवधूतलिङ्गा-श्चरन्ति तेभ्यः शिवमस्तु राज्ञाम् ॥ १३.२३ ॥

श्रीशुक उवाच—

इत्येवमुत्तरामातः! स वै ब्रह्मर्षिसुतः सिन्धुपतय आत्मसतत्त्वं विगणयतः परानुभावः परमकारुणिकतयोपदिश्य रहूगणेन सकरुण-मभिवन्दित-चरण आपूर्णार्णव इव निभृतकरणोर्म्याशयो धरणिमिमां विचचार ॥ १३.२४ ॥

---

12. 16. ஆகவே மனிதன் (உலகிற்)பற்றின்மையாலும் மகான்களிடம் பற்றினுலும் கிடைத்த ஞானமாகிற வாளினுல் மதிமயக்கத்தைச் சேதித்து பகவானுடைய லீலைகளைப் பேசுவதாலும் கேட்பதாலும் ஸ்வரூப ஞானம் நிலைபெற்றவனுய் ஸம்ஸார ஸாகரத்தின் அக்கரையை அடைகிருன்.

அரசன் (ரஹூகணன்) கூறியது—

13. 22. தங்களுடைய பாத கமல தூளியால் பாபந் தேய்ந்தவர்கள் பகவானிடத்தில் நிர்மலமான பக்தியை யடைவதில் ஆச்சரியமில்லை. ஒரு முகூர்த்தம் உங்களுடன் கூடியதாலேயே என்னுடைய குதர்க்கத்துக்கு மூலமாகிய அவிவேகம் அடியோடு அழிந்து விட்டதல்லவா?

13. 23. மகான்களுக்கு நமஸ்காரம்; குழந்தைகளுக்கும் நமஸ்கார மிருக்கட்டும், இளைஞர்களுக்கும் நமஸ்காரம் இருக்கட்டும்; பாலர்கள் வரை எல்லோருக்கும் நமஸ்காரம் இருக்கட்டும். (எந்த ரூபத்தில் ஞானிகள் வருவரோ அறியோம்). அடையாளங் கண்டு கொள்ள முடியாமல் எந்தப் பிரம்ம ஞானிகள் பூமியில் சஞ்சரிக்கின்ருர்களோ (அவர்களை அவமதிப்பதால் தீமை ஏற்படாமல் எம் போன்ற) அரசர்களுக்கு நன்மை ஏற்படவேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

13. 24. உத்தரையின் புத்திரனை பரீக்ஷித்தே! மகானுபாவரும் அந்தப் பிரம்மரிஷி குமாரருமான பரதர், தன்னை அவமதித்த ஸிந்துநாட்டரசனுகிய ரஹூகணனுக்கும் மிகுந்த கருணையுடன் ஆத்ம தத்துவத்தை உபதேசித்து, ரஹூகணனுல் பாத பூஜை செய்யப்பெற்று பரிபூர்ணமான ஸமுத்திரம் போல் அடங்கிய அந்தக்கரணமுடையவராய் இப்பூமியில் சஞ்சரித்தார்.

---

12. 16. ஒ. பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. —குறள்.
அற்றது பற்றெனில் உற்றது வீடு. —நம்மாழ்வார்.
'அஸங்க சஸ்த்ரேண த்ருடேன ச்சித்வா' —கீ. 15. 3.

13. 23. ஒ. விருபேப்யோ விச்வரூபேப்யச்ச வோ நமோ
நமோ மஹத்ப்ய: க்ஷுல்லகேப்யச்ச வோ நமோ நம:। —ருத்ரம்.

13. 24. ஆபூர்ணார்ணவ இவ —ஒ. கீ. 2. 70.

सौवीरपतिरपि सुजन-समवगत-परमात्म-सतत्त्व आत्मन्यविद्यारोपितां च देहात्ममतिं विससर्ज । एवं हि भगवताश्रिताश्रितानुभावः ॥ १३.२५ ॥

य इदं भागवत-सभाजितावदात-गुणकर्मणो राजर्षे-र्भरतस्यानु चरितं स्वस्त्ययन-मायुष्यं धन्यं यशस्यं स्वर्ग्यापवर्ग्यं वाऽनुशृणोत्याख्यास्यत्यभिनन्दति च सर्वा एवाशिष आत्मन आशास्ते न कांचन परत इति ॥ १४.४६ ॥

प्रैयव्रतं वंशमिमं विरजश्चरमोद्भवः ।
अकरोदत्यलं कीर्त्या विष्णुः सुरगणं यथा ॥ १५.१६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां संहितायां पारमहंस्यां वैयासिक्यां श्री हयग्रीवब्रह्मविद्यायां पंचमस्कन्धे प्रियव्रतवंशानुकीर्तनं नाम पंचदशोऽध्यायः ॥

---

13, 25. ஸௌவீரபதியும் ஸாது ஸங்கத்தால் ஏற்பட்ட பரமாத்ம ஞானத்தால் தன்னிடம் பொய்யாகக் கற்பிக்கப்பட்டிருந்த தேகமே ஆத்மா என்ற எண்ணத்தை விட்டார். பகவானைச் சார்ந்தாரைச் சார்வோரின் பெருமையும் அத்தகையது.

14, 46. பாகவதர்கள் போற்றிக் கொண்டாடும் குணங்களும் செயல்களும் உடைய இராஜரிஷி பரதரின் சரித்திரம் மங்களத்தையும் ஆயுளையும் செல்வத்தையும் புகழையும் சுவர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அளிக்கக் கூடியது. இதை எவன் கேட்கிருனே சொல்லுகிருனே அல்லது இதில் ருசியை வளர்க்கிருனே அவன் எல்லா ஆசைகளின் பூர்த்தியையும் எய்தியவனுய்ப் பிறரிடமிருந்து எதையும் விரும்புவதில்லை.

15. 16. பிரியவிரதனுடைய வம்சத்தில் கடைசியாய்த் தோன்றியவர் விரஜர் என்பவர். மகா விஷ்ணுவால் தேவர்குலம் புகழ் பெற்றது போல் இவருடைய கீர்த்தியாலும் இக்குலம் அளவு கடந்த பெருமையுடையதாயிற்று.

**இங்ஙனம் பத்தாவது இதழாகிய பிரியவிரத வம்ச வரலாறு முற்றும்.**

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம்
சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை எனப் படுவதுமான
ஸ்ரீமத் பாகவத மகா புராணத்தில் ஐந்தாவது ஸ்கந்தத்தில்
பிரிய விரத வம்சவர்ணனை என்னும் பதினைந்தாவது
அத்தியாயம் முற்றும்.

இரண்டாம் நாள் கதை முற்றும்.

# ஸ்ரீமத் பாகவதஸாரம்

## மூன்றுவது நாள் கதை (5·16—8·12)

(உலகவர்ணனையிலிருந்து அமிருதமதனம் முடிய)

11. **உலக வர்ணனை** – பூகோள வர்ணனை—துவீபங்களும் வர்ஷங்களும்—ககோள வர்ணனை—நரக வர்ணனை, அத். 5.16—5.26.

12. **அஜாமிளோபாக்கியானம்** — அஜாமிளன் வரலாறு – விஷ்ணுதூத யமதூத ஸம்வாதம்–பிராயச்சித்த விமர்சனம்—தர்மராஜ உபதேசம்—பகவந்நாம மகிமை. அத். 6.1—6.3.

13. **தக்ஷ வம்சம்**—தக்ஷ புத்திரர்களின் விரக்தி—நாரத தக்ஷ ஸம்வாதம் — தக்ஷ கன்னிகைகள் மூலம் வம்ச விஸ்தாரம்—குருவை அவமதித்ததால் இந்திரனுக்கு ஏற்பட்ட விபத்து—விசுவரூபன் தேவகுருவாதல்—விசுவரூபவதம்—விருத்திராஸுரனின் உற்பத்தி—வஜ்ராயுதத்தின் வரலாறு—விருத்திராஸுர வதம்—சித்திர கேது உபாக்கியானம்—மருத்துக்களின் உற்பத்தியும் பும்ஸவன விரதமும். அத். 6.4—6.19.

14. **பிரஹ்லாத சரித்திரம்**—ஜய விஜயர் கதை–ஹிரண்ய கசிபுவின் தவமும் பிரஹ்லாதன் பிறப்பும்–பிரஹ்லாதன் குருகுல வாஸம்–அவனது ஹரி பக்தியை ஹிரண்யகசிபு கண்டித்துத் தண்டித்தல்—மீண்டும் குருகுலவாஸம்–பாலர்களுக்குப் பிரஹ்லாத உபதேசம்–நரசிம்மாவதாரம்—பிரஹ்லாத பட்டாபிஷேகம். அத். 7.1—7.10.

15. **கஜேந்திர மோக்ஷம்**—பிரவிருத்தி தர்மம்—நிவிருத்தி தர்மம்—மன்வந்தர வர்ணனை–கஜேந்திர மோக்ஷம். அத். 7.11—8.4.

16. **அமிருத மதனம்** – பாற்கடலைக் கடைய முயற்சி – பரமசிவன் விஷபானம் செய்தல்–ரத்னோத்பத்தியும் லக்ஷ்மியின் ஆவிர்ப்பாவமும்–தன்வந்தரி அவதாரமும் அமிருத கலசமும்–மோஹினி அவதாரம் – அமிருத விநியோகம் – விஷ்ணு மாயையில் சிவனும் மயங்குதல். அத். 8.5—8.12.

# ॥ श्रीमद्भागवतसारः ॥

## ॥ लोकवर्णनम् ॥

राजोवाच—

भगवतो गुणमये स्थूलरूप आवेशितं मनो ह्यगुणेऽपि सूक्ष्मतम आत्मज्योतिषि परे ब्रह्मणि भगवति वासुदेवाख्ये क्षममावेशितुं तदु हैतद् गुरोऽर्हस्यनुवर्णयितुमिति ॥ १६.३ ॥

श्रीशुक उवाच—

न वै महाराज भगवतो मायागुण-विभूतेः काष्ठां मनसा वचसा वाधिगन्तुमलं विबुधायुषापि पुरुष-स्तस्मात् प्राधान्येनैव भूगोळकविशेषं नाम-रूप-मान-लक्षणतो व्याख्यास्यामः ॥ १६.४ ॥

---

# ஸ்ரீமத் பாகவதஸாரம்

மூன்றும் நாள் கதை

## 11. உலக வர்ணனை

அரசன் கூறியது—

16. 3. குருதேவரே! பகவானுடைய குணமயமான ஸ்தூல ரூபத்தில் ரமிக்கும் மனது தான் நிர்க்குணமானதும் மிகவும் சூக்ஷ்மமானதும் ஆத்ம ஜோதி வடிவானதும், பகவான் வாசுதேவன் என்று பேசப்படுவதுமான பரப்பிரம்மத்தினிடம் பிரவேசிக்கச் சக்தி யுடையதாகும். அதை விரிவாய் விளக்கி யருளுதற்கு நீரே தகுதியுள்ளவர்.

ஸ்ரீ சுகர் கூறியது—

16. 4. மகாராஜனே! பகவானுடைய மாயாகுண விபூதியின் எல்லையை எப்புருஷனும் தேவர்களின் ஆயுளைப் பெற்றாலும் வாக்காலோ மனத்தாலோ எட்டிப் பிடிக்க இயலாது. ஆகையால் (முதலில்) பூகோள விசேஷத்தை, முக்கியமான சில பெயர்கள், வடிவம் அளவை, அடையாளங்களுடன் கூறுவோம்.

ஜம்பூத்வீபம் (ஆசியா கண்டம்)

1. குரு வர்ஷம் (மங்கோலியா)
2. ஹிரண்மயம் (மஞ்சூரியா)
3. ரம்யகம் (ருஷ்யா, சைபீரியா)
4. இலாவ்ருதம் (இமயம் திபேத்)
5. பத்ராச்வம் (சைனு)
6. ஹரிவர்ஷம் (அரேபியா)
7. கேதுமாலம் (பாரசீகம், துருக்கி)
8. கிம்புருஷம் (இமயத் தாழ்வாரம்)
9. பாரதம் (இந்தியா)

यो वायं द्वीपः कुवलय-कमल-कोशाभ्यन्तर-कोशो नियुत-योजन-विशालः समवर्तुलो यथा पुष्करपत्रम् ॥ १६.५ ॥

यस्मि-न्नव वर्षाणि नवयोजन-सहस्रायामा-न्यष्टभि-र्मर्यादागिरिभिः सुविभक्तानि भवन्ति ॥ १६.६ ॥

एषां मध्ये इलावृतं नामाभ्यन्तरवर्षं यस्य नाभ्यामवस्थितः सर्वतः सौवर्णकुलगिरिराजो मेरु-र्द्वीपायाम-समुन्नाहः कर्णिका-भूतः कुवलयकमलस्य ॥ १६.७ ॥

तत्रापि भारतमेव वर्षं कर्मक्षेत्रं अन्यान्यष्टवर्षाणि स्वर्गिणां पुण्यशेषोपभोगस्थानानि भौमानि स्वर्गपदानि व्यपदिशन्ति ॥ १७.११ ॥

नवस्वपि वर्षेषु भगवान् नारायणो महापुरुषः पुरुषाणां तदनुग्रहायात्मतत्त्वव्यूहेनात्मनाद्यापि संनिधीयते ॥ १७.१४ ॥

इलावृते तु भगवान् भव एव पुमान् न ह्यन्य-स्तत्रापरो निर्विशति भवान्याः शापनिमित्तज्ञो यत्प्रवेक्ष्यतः स्त्रीभावस्तत् पश्चाद्वक्ष्यामि ॥ १७.१५ ॥

---

16. 5. இந்த (ஜம்பூ) த்வீபம் குவலயக் கமல கோசத்தின் உட்கோசம், ஒரு லக்ஷம் யோசனை பரப்புடையது ; தாமரையிலை போன்ற சம வட்ட வடிவினது.

16. 6. இதில் ஒன்பதாயிரம் யோஜனை நீளமுள்ள ஒன்பது வர்ஷங்கள் எட்டு எல்லை மலைகளால் நன்கு பிரிக்கப்பட்டுள்ளன.

16. 7. இவற்றின் நடுவில் இலாவிருதம் எனப் பெயர் பெற்ற வர்ஷம் உளது. அதின் நடுவில் எங்கும் பொன்போல் ஒளி வீசும் குலபர்வதங்களுக்கரசான மேரு பர்வதம் உளது. அது நீளத்துக்கேற்ற உயரமுள்ளதாயும், குவலயக் கமலத்தின் கர்ணிகை போன்றும் இருக்கிறது.

17. 11. (மற்ற வர்ஷங்கள் குரு, ஹிரண்மயம், ரம்யகம்; பத்ராச்வம். ஹரி, கேதுமாலம், கிம்புருஷம், பாரதம் எனப் பெயருடையன). அவற்றுள் பாரத வர்ஷமே கர்ம க்ஷேத்திரம். மற்ற எட்டு வர்ஷங்களும் ஸ்வர்க்கவாசிகளிடம் எஞ்சியுள்ள புண்ணியம் அனுபவிக்கப்படும் பூலோக ஸ்வர்க்கம் எனக் கூறுகின்றனர்.

17. 14. ஒன்பது வர்ஷங்களிலும் வசிக்கும் புருஷர்களுக்கு அனுக்கிரகம் செய்யும்பொருட்டு மஹாபுருஷரான பகவான் நாராயணர் தாமாகவே தமது மூர்த்தி பேதங்களைப் பரப்பி வைத்து இன்னும் பிரசன்னமாயிருக்கிறார்.

17. 15. **இலாவிருதத்தில்** பகவான் பரமசிவன் ஒருவரே புருஷர் ; பவானியின் சாபநிமித்தத்தை யறிந்த வேறு இரண்டாவது புருஷன் எவனும் அங்கு பிரவேசிக்க மாட்டான் ; ஏனெனில் பிரவேசித்தால் பெண்ணாகி விடுவான் ; அதை மேலே கூறுவோம்.

भवानी-नाथैः स्त्रीगणार्बुद-सहस्रै-रवरुध्यमानो भगवत-श्चतु-मूर्तै-र्महापुरुषस्य तुरीयां तामसीं मूर्तिं प्रकृति-मात्मनः संकर्षण-संज्ञां आत्म-समाधिरूपेण संनिधाप्यैत-दभिगृणन् भव उपधावति ॥ १७.१६ ॥

ओं नमो भगवते महापुरुषाय सर्वगुण-संख्यानाय अनन्ताय अव्यक्ताय नम इति ॥ १७.१७ ॥

तथा च भद्रश्रवा नाम धर्मसुत-स्तत्कुलपतयः पुरुषा भद्राश्ववर्षे साक्षाद्भग-वतो वासुदेवस्य प्रियां तनुं धर्ममयीं हयशीर्षाभिधानां परमेण समाधिना संनिधा-प्येत-दभिगृणन्त उपधावन्ति ॥ १८.१ ॥

ओं नमो भगवते धर्मायात्मविशोधनाय नम इति ॥ १८.२ ॥

हरिवर्षे चापि भगवान्नरहरिरूपेणास्ते ॥ तद्दयितं रूपं महापुरुष-गुणभाजनो महा-भागवतो दैत्य-दानव-कुल-तीर्थीकरण-शीलाचरितः प्रह्लादोऽव्यवधानानन्य-भक्ति-योगेन सह तद्वर्षपुरुषै-रुपास्ते इदं चोदाहरति ॥ १८.७ ॥

---

17. 16. பதினையிரங் கோடிக்கணக்கான சேடியர்களுடன் கூடிய பவானியால் சேவிக்கப் பெற்று, மஹா புருஷனுன பகவானுடைய நான்கு வியூகங்களில் நாலாவதும் தனது இயற்கையின் மூலஸ்தானமும் ஸங்கர்ஷணன் எனப்படுவதுமான தாமஸ மூர்த்தியை ஆத்ம தியானத்தால் தன்னுள்ளத்தில் கொண்டு பரமசிவன் பின்வரும் மந்திர ஜபத்துடன் ஆராதிக்கிருர்.

17. 17. "ஓம் நமோ பகவதே மஹா புருஷாய ஸர்வகுண ஸங்க்யானய அநந் தாய அவ்யக்தாய நம:" (பிரணவப் பொருளும் மஹா புருஷனும் குணங்கள் மலரு மிடமும், அனந்தனும், இந்திரியங்களுக் கெட்டாதவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம்).

18. 1. அவ்வரறே **பத்ராச்வ வர்ஷத்தில்** தருமரின் புத்திரனை பத்ரசிரவசும் அவருடைய முக்கியமான பரிவார புருஷர்களும் ஸாக்ஷாத் பகவான் வாசுதேவனுடைய பிரியத்துக்குகந்ததும் தரும வடிவானதுமான ஹயக்கிரீவ மூர்த்தியை உயர்ந்த ஸமாதி யோகத்தால் ஸாக்ஷாத்கரித்துப் பின்வரும் மந்திரஜபத்துடன் ஆராதிக்கிருர்.

18. 2. 'ஓம் நமோ பகவதே தர்மாயாத்மவிசோதனய நம:' (பிரணவப்பொரு ளும் சித்தத்தைச் சோதிப்பவரும் தருமஸ்வரூபியுமான பகவானுக்கு நமஸ்காரம்).

18. 7. **ஹரிவர்ஷத்திலோவெனில்** பகவான் நரஹரி வடிவில் இருக்கிருர். அந்தப் பிரியத்துக்குகந்த மூர்த்தியை மஹாபுருஷ குணபூர்த்தியுள்ளவரும் மஹாபாகவத ரும் தைத்தியதானவ குலத்தைத் தன் குணத்தாலும் செயலாலும் புனிதமாக்கியவரு மான பிரஹ்லாதன் பயனைக் கருதாததும் வேறு நாட்டமில்லாததுமான பக்தியோகத்தால் அவ்வர்ஷ புருஷர்களுடன் கூடி ஆராதிக்கிருர். பின் வரும் மந்திரத்தையும் (துதியை யும்) கூறுகிருர்.

ओं नमो भगवते नरसिंहाय नमस्तेजस्तेजसे आविराविर्भव वज्रनख वज्रदंष्ट्र कर्माशयान् रन्धय रन्धय तमो ग्रस ग्रस ओं स्वाहा ॥ अभय-मभय-मात्मनि भूयिष्ठा ओं क्ष्रौम् ॥ १८.८ ॥

स्वस्त्यस्तु विश्वस्य खलः प्रसीदतां ध्यायन्तु भूतानि शिवं मिथो धिया ।
मनश्च भद्रं भजता-दधोक्षजे आवेश्यतां नो मतिरप्यहैतुकी ॥ १८.९ ॥

हरिर्हि साक्षाद्भगवान् शरीरिणा-मात्मा झषाणामिव तोयमीप्सितम् ।
हित्वा महांस्तं यदि सज्जते गृहे तदा महत्त्वं वयसा दंपतीनाम् ॥ १८.१३ ॥

तस्माद्रजो-राग-विषाद-मन्यु-मान-स्पृहा-भय-दैन्याधिमूलम् ।
हित्वा गृहं संसृति-चक्रवालं नृसिंहपादं भजताकुतोभयम् । इति ॥ १८.१४ ॥

---

18. 8. "ஓம் நமோ பகவதே நரஸிஹ்மாய நமஸ்தேஜஸ் தேஜஸே ஆவிராவிர்ப்பவ வஜ்ரநக, வஜ்ரதம்ஷ்ட்ர, கர்மாசயான் ரந்தய, ரந்தய, தமோ க்ரஸ க்ரஸ, ஓம் ஸ்வாஹா ! அபயமபய-மாத்மனி பூயிஷ்ட்டா ஓம் க்ஷ்ரௌம்!!" (பிரணவப்பொருளே, ஒளிக்கும் ஒளியே நரசிம்மமே, பகவானே, உமக்கு நமஸ்காரம். வயிர நகங்களும் வயிரம் பாய்ந்த கோரப் பற்களும் உடையவரே, எங்கள் கண்முன் காட்சியளிக்க வேண்டும். கரும வாஸனைகளைப் போக்கியருள்வீர், போக்கியருள்வீர். அஞ்ஞான இருளை விழுங்கியருள்வீர், விழுங்கியருள்வீர். ஓம் ஸ்வாஹா. எங்களுக்கு அபயமளித்து உள்ளத்தில் இடையருது விளங்கிக் கொண்டிருக்க வேண்டும். ஓம் க்ஷ்ரௌம்.)

18. 9. "உலகிற்கு நன்மை உண்டாகுக. துஷ்டன் மனது தெளிவடையட்டும். எல்லாப்பிராணிகளும் ஒருவருக்கொருவர் நன்மையையே உள்ளுர விரும்பட்டும். மனது மங்களத்திலேயே நாட்டமுடையதா யிருக்கட்டும். நம்மெல்லோருடைய மதியும் காரணமின்றி (வேறு ஆசையின் நிமித்தமில்லாமலேயே) அதோக்ஷஜரிடம் புகலடையட்டும்.

18. 13. "மீன்களுக்கு நீர் எப்படி வேண்டப்படுவதோ அப்படியன்றோ உடல் படைத்த அனைவர்க்கும் பிரத்தியக்ஷமான ஆத்மாவாகிய பகவான் ஹரி விளங்குகின்றார். ஆகையால் எவ்வளவு பெருமை படைத்தவனு யிருந்தபோதிலும் ஒருவன் அந்த பகவானை விட்டு கிருஹத்தில் பற்றுக்கொண்டால் அப்போது ஆண் பெண்களுக்கு வயதினால் மட்டும் ஏற்படும் பெருமையைத் தவிர வேறு பெருமையில்லை.

18. 14. "ஆகவே ஆசை, விருப்பம், துக்கம், கோபம், அபிமானம், பற்று, பயம், நொய்மை முதலிய மனோவியாதிக்கு மூல காரணமும் ஸம்ஸார சக்கரத்தைச் சுழற்று வதுமான கிருஹத்தை விட்டு, எத்திக்கினின்றும் பயமணுகாமற் செய்யும் நரசிம்மனுடைய பாதத்தை நாடுங்கள்."

---

18. 8. **ஆவிராவிர்ப்பவ**—அதி ப்ரகடோபவ।

18. 9. ஒ. ஸர்வஸ்தரது **துர்க்கா**ணி ஸர்வோ **ப**த்ராணி பச்யது । ஸர்வஸ்-**தத்புத்தி**-**மாப்னோது** ஸர்வ: ஸர்வத்ர நந்தது ॥

18. 13. ஒ: நீருள வெனினுள மீனுநீலமும்
பாருள வெனினுள யாவும் பார்ப்புறி
லாருள தனுவாய் நானுஞ் சீதையு
மாருள ரெனினுள மருளுவா யென்றான்.

—லக்ஷ்மணன் கூறியது : கம்பராமாயணம்.

பா. பே.

---

18. 8. कर्मा श्यान् ।

केतुमालेऽपि भगवान् कामदेवस्वरूपेण लक्ष्म्याः प्रियचिकीर्षया प्रजापते-र्दुहितॄणां पुत्राणां तद्वर्षपतीनां पुरुषायुषाहोरात्र-परिसंख्यानां यासां गर्भा महा-पुरुषमहास्त्रतेजोद्वेजित-मनसां विध्वस्ता व्यसवः संवत्सरान्ते विनिपतन्ति ॥ १८.१५ ॥

तद्भगवतो मायामयं रूपं परमसमाधियोगेन रमादेवी संवत्सरस्य रात्रिषु प्रजापते-र्दुहितृभि-रुपेताहःसु च तद्भर्तृभि-रुपास्ते इदं चोदाहरति ॥ १८.१७ ॥

ओं ह्रां ह्रीं ह्रूं ओं नमो भगवते हृषीकेशाय सर्वगुण-विशेषै-र्विलक्षितात्मने आकूतीनां चित्तीनां चेतसां विशेषाणां चाधिपतये षोडशकलाय-छन्दोमयाय अमृतमयाय सर्वमयाय सहसे ओजसे बलाय कान्ताय कामाय नमस्ते उभयत्र भूयात् ॥ १८.१८ ॥

18. 15. **கேதுமாலவர்ஷத்தில்** லக்ஷ்மீதேவிக்கும் (ஸம்வத்ஸரன் என்ற) பிரஜாபதியின் புத்திரர்களுக்கும் புத்திரிகளுக்கும் பிரியத்தைச் செய்ய விரும்பி பகவான் காமதேவஸ்வருபத்தில் இருக்கிறார். இராத்திரி தேவதைகளான அப்புத்திரிகளும் பகல் தேவதைகளான அப்புத்திரர்களும் அவ்வர்ஷத்தை ஆள்பவர்கள். அவர்களின் எண்ணிக்கை மனித ஆயுளில் (நூறு வருஷங்களில்) உள்ள இரவு பகல்கள். மனம் வெதும்பிய அவர்களுடைய கருக்கள் மகாபுருஷனுடைய கால சக்கிரமாகிய அஸ்திரத்தால் சிதைவுற்று ஸம்வத்ஸர முடிவில் வீழ்ந்து அழிகின்றன.

18. 17. லக்ஷ்மீதேவியானவள் ஸம்வத்ஸரத்தின் இரவுகளில் பிரஜாபதியின் புத்திரிகளுடனும் பகல்களில் அவற்றின் பதிகளான புத்திரர்களுடன் கூடிச் சிறந்த ஸமாதி யோகத்தால் பகவானுடைய மாயா மயமான அந்த ரூபத்தை பின்வரும் மந்திரத்தைச் சொல்லி உபாசிக்கிறாள்.

18. 18. "ஓம் ஹ்ராம், ஹ்ரீம், ஹ்ரூம், ஓம் நமோ பகவதே ஹ்ருஷீகேசாய ஸர்வ குணவிசேஷைர்-விலக்ஷிதாத்மனே, ஆகூதீனாம் சித்தீனாம் சேதஸாம் விசேஷாணாஞ் சாதி பதயே ஷோடச கலாய, சந்தோ மயாயாம்ருதமயாய, ஸர்வமயாய ஸஹஸே ஓஜஸே பலாய காந்தாய காமாய நமஸ்தே உபயத்ர பூயாத்" (ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் ஓம் என்ற பீஜாக்ஷரங்களின் பொருளாகிய பகவான் ஹ்ருஷீகேசருக்கு நமஸ்காரம். சிறந்த குணங்களுக்கிருப்பிடமான பொருள்களனைத்துக்கும் மூலஸ்தானமாகியவரும், கிரியா சக்தி ஞானசக்தி ஸங்கல்பம் நிச்சயம் முதலிய மனோ வியாபாரங்களின் நியந்தாவும், பதினாறு கலை வடிவானவரும், வேதமயமானவரும், அமிர்தமயமானவரும், ஸர்வ மயமானவரும் இந்திரிய வன்மை மனோ வன்மை உடல் வன்மை வடிவினரும், உள்ளத்தைக் கவரும் காம வடிவினரும் ஆகிய உமக்கு உள் வெளியாகிய இருபுறத்தும் நமஸ்காரம் நிகழ்ந்து கொண்டே இருக்கட்டும்).

---

18. 15. ப்ரஜாபதி : ஸம்வத்ஸர : ஸம்வத்ஸரோ வை ப்ரஜாபதிரிதி ச்ருதே :, தஸ்ய **துஹிதரோ** ராத்ர்யபிமானின்யோ **தேவதா** :, புத்ரா : **திவஸாபி**மானினோ **தேவதா** :

15. 18. **ஆகூதீனாம்** க்ரியாணாம். **சித்தீனாம்**—ஞானானாம், **சேதஸாம்**—ஸங்கல்பாத் யவஸாயாதீனாம் ।

**பதினாறு கலைகள்**—பதினொரு இந்திரியங்களும் ஐந்து விஷயங்களும்.

18. 19. உயர்ந்த பக்திக்குப் பயன் பகவானேயன்றி அவன் கொடுக்கும் பொருள் எதுவுமன்று.

स्त्रियो व्रतै-स्त्वा हृषीकेश्वरं स्वतो
ह्याराध्य लोके पतिमाशासतेऽन्यम्।
तासां न ते वै परिपान्त्यपत्यं ॥ १८.१९ ॥
प्रियं धनायूंषि यतोऽस्वतन्त्राः

स वै पतिः स्यादकुतोभयः स्वयं समन्ततः पाति भयातुरं जनम्।
स एक एवेतरथा मिथो भयं नैवात्म-लाभादधि मन्यते परम् ॥ १८.२० ॥

मत्प्राप्तयेऽजेश-सुरासुरादय-स्तप्यन्त उग्रं तप ऐन्द्रियेधियः।
ऋते भवत्-पादपरायणान्न मां विन्दन्त्यहं त्वद्धृदया यतोऽजित ॥ १८.२२ ॥

रम्यके च भगवतः प्रियतमं मात्स्य-मवताररूपं तद्वर्ष-पुरुषस्य मनोः प्राक्
प्रदर्शितं स इदानीमपि महता भक्तियोगेन आराधयति इदं चोदाहरति ॥ १८.२४ ॥

ओं नमो भगवते मुख्यतमाय नमः सत्त्वाय प्राणायौजसे सहसे बलाय
महामत्स्याय नम इति ॥ १८.२५ ॥

18. 19. உலகில் பெண்கள் இயற்கையாகவே இந்திரியங்களின் பதியாகிய உம்மை விரதங்களால் ஆராதித்து வேறு பதியை வேண்டுகின்றனர். அங்ஙனமடைந்த பதிகள் சுதந்தர மற்றவர்களாதலின் அவர்களுடைய பிரியத்துக்கிடமான மக்கள், பொருள், ஆயுள் இவற்றை இரக்ஷிக்கத் திறமையற்றவர்களா யிருக்கின்றனர்.

18. 20. இயற்கையாகவே எவர் எத்திக்கினின்றும் பயமற்றவராய் இருந்து கொண்டு எங்கும் சூழ்ந்த பயத்தினுல் பீடிக்கப்பட்ட ஜனங்களை இரக்ஷிக்கிருரோ அவரே பதியாவார். அப்படிப்பட்ட பதி நீர் ஒருவரே. ஆத்ம லாபத்தைக் காட்டிலும் பிறிதொன்றை மேலாகக் கருதாதவர்க்கே பயமில்லை. (ஏனையோர்க்குப் பிறரிடமிருந்து ஒருவருக்கொருவர் பயம் இயற்கையாக இருக்கவே இருக்கும்.)

18. 22. ஜயிக்கப்படாதவரே! பிரம்மா, ருத்திரன், தேவர்கள், அசுரர்கள் முதலிய எல்லோரும் இந்திரியங்களில் புத்தியைச் செலுத்தியவர்களாய் என்னை (என்னுலளிக்கப் படும் ஐசுவரியத்தை) அடையும் பொருட்டு கடுந்தவம் புரிகின்றனர். நானே உம்மிடத் திலேயே உள்ளம் பொருந்தியவளாதலால் உம்முடைய பாதத்தில் நாட்டமுடையவர்கள் நீங்கலாக மற்றெவரும் என்னை அடைவதில்லை.

18. 24. **ரம்யகத்தில்** அவ்வர்ஷத்தின் பதியான (வைவஸ்வத) மனுவிற்கு பகவானுடைய பிரியம் மிகுந்த மத்ஸ்யாவதார ரூபம் (பிரளயத்திற்கு) முன்பு காண்பிக்கப் பட்டது. அவர் இப்போதும் (அந்த ரூபத்தை) மகத்தான பக்தி யோகத்தால் பின்வரும் மந்திரத்தைச் சொல்லி ஆராதிக்கிருர்.

18. 25. 'ஓம் நமோ பகவதே முக்யதமாய நம : ஸத்வாய, ப்ராணுய, ஓஜஸே, ஸஹஸே, பலாய, மஹாமத்ஸ்யாய நம,' (பிரணவப் பொருளும், முதன்மைக்கும் முதலாகியவரும், ஸத்வ மூர்த்தியும், முக்கியப் பிராண வடிவினரும், இந்திரிய வன்மை மனோ வன்மை, உடல் வன்மை வடிவினரும் ஆகிய பகவான் மஹாமத்ஸ்யருக்கு நமஸ்காரம்).

---

18. 22. **பவத்பாத** - பராயணுத்ருதே மாம் ந விந்தந்தி மத்கடாக்ஷ - விலஸிதா **விபூதீர்**—ந லபந்தே।

अन्त-र्बहिश्चाखिललोकपालकै-रदृष्टरूपो विचरस्युरुस्वनः ।
स ईश्वर-स्त्वं य इदं वशोऽनय-न्नाम्ना यथा दारुमयीं नरः स्त्रियम् ॥ १८.२६ ॥

हिरण्मयेऽपि भगवान्निवसति कूर्मतनुं बिभ्राणस्तस्य तत्प्रियतमां तनु-मर्यमा सह वर्षपुरुषैः पितृगणाधिपति-रुपधावति मन्त्रमिमं चानुजपति ॥ १८.२९ ॥

ओं नमो भगवते अकूपाराय सर्व-सत्त्वगुण-विशेषणाया-नुपलक्षितस्थानाय नमो वर्ष्मणे नमो भूम्ने नमो नमोऽवस्थानाय नमस्ते ॥ १८.३० ॥

यस्मिन्नसंख्येय-विशेष-नाम-रूपाकृतौ कविभिः कल्पितेयम् ।
संख्या यया तत्त्वदृशापनीयते तस्मै नमः सांख्यनिदर्शनाय ते ॥ १८.३३ ॥

---

18. 26. கட்டையாலான பெண் பொம்மையை ஒரு (ஸூத்ரதாரி) மனிதன் எப்படி ஆட்டுவிப்பானே அப்படி இவ்வுலகை எவன் நாமத்தால் தன் வயமாக்கிக் கொண்டு ஆட்டுவிக்கின்றானே அந்த ஈசுவரன் நீர் தான். நீர் லோகபாலர்கள் எவராலும் காணப்படாத வடிவினர் எனினும், (ஸகலப் பிராணிகளிடத்தும் உள்ளே பிராணனாகவும் வெளியே வாயுவாகவும்) உள்ளும் புறம்பும் இடைவிடாது சப்தித்துக் கொண்டு சஞ்சரிக் கின்றீர்.

18. 29. **ஹிரண்மயவர்ஷத்தில்** கூர்ம வடிவெடுத்த பகவான் வாஸம் செய்கிறார். அவருடைய பிரியம் மிகுந்த அவ்வடிவைப் பிதிரு கணங்களின் பதியான அர்யமா அவ்வர்ஷ புருஷர்களுடன் பின்வரும் மந்திரத்தை ஜபித்து உபாசிக்கின்றார்.

18. 30. 'ஓம் நமோ பகவதே அகூபாராய ஸர்வ ஸத்வகுண - விசேஷணாய அனுபலக்ஷிதஸ்தானாய நமோ வர்ஷ்மணே நமோ பூம்னே நமோ நமோ ऽவஸ்தானாய நமஸ்தே' (பிரணவப் பொருளும் ஸத்துவ குண பரிபூரணராய்க் காணமுடியாத நிலையுள்ளவரும் ஆகிய பகவானுக்கு நமஸ்காரம். காலத்தைக் கடந்தவர்க்கு நமஸ் காரம். எங்கும் நிறைந்து எல்லையற்றவருக்கு நமஸ்காரம். அனைத்துக்கும் உறைவிட மாகிய உமக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.)

18. 33. எண்ணிறந்த பேரும் வடிவும் மூர்த்தியும் ஞானக்கண் படைத்தவர்களால் எவரிடம் காணப்பட்டதோ, எவரிடத்தில் (இருபத்து நான்கு முதலிய தத்துவங்களின்) எண்ணிக்கையே உண்மை உணர்வால் மறைந்து போகின்றதோ அந்த ஸாங்கிய தர்சன ஞானஸ்வரூபியான உமக்கு நமஸ்காரம்.

---

18. 29. பண்டைக்காலத்தில் சீனாவில் அரசனுடைய அரண்மனையில் ஆமை வடிவில் ஆண்டவன் பூஜிக்கப்பட்டு வந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. இந்து நாகரிகம் ஒரு காலத்தில் உலகெங்கும் பரவியிருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்க இடமிருக்கிறது. மடகாஸ்கர் தீவில் முக்கால்வாசி ஸம்ஸ்கிருதப் பெயர்களும், மெக்ஸிகோவில் ராமஸீதா உத்ஸவமும், ஆஸ்திரேலியாவில் சிவ நடனமும், கிழக்கிந்தியத் தீவுகளில் இந்துக் கோயில் களும் இன்றும் காணப்படுகின்றன.

उत्तरेषु च कुरुषु भगवान् यज्ञपुरुषः कृत-वराह-रूप आस्ते तं तु देवी हैषा भूः सह कुरुभि-रस्खलित-भक्तियोगेनोपधावति इमां च परमा-मुपनिषद्-मावर्तयति ॥ १८.३४ ॥

ओं नमो भगवते मन्त्र-तत्त्व-लिंगाय यज्ञक्रतवे महाध्वरावयवाय महापुरुषाय नमः कर्मशुक्लाय त्रियुगाय नमस्ते ॥ १८.३५ ॥

द्रव्य-क्रिया-हेत्वयनेशकर्तृभि-र्मायागुणै-र्वस्तु-निरीक्षितात्मने ।
अन्वीक्षयाङ्गातिशयात्म-बुद्धिभि-र्निरस्त-मायाकृतये नमो नमः ॥ १८.३७ ॥

किंपुरुषे वर्षे भगवन्तमादिपुरुषं लक्ष्मणाग्रजं सीताभिरामं रामं तच्चरण-सन्निकर्षणाभिरतः परमभागवतो हनुमान् सह किंपुरुषै-रविरत-भक्तिरुपास्ते ॥ १९.१ ॥

आर्ष्टिषेणेन सह गन्धर्वै-रनुगीयमानां परमकल्याणीं भर्तृ-भगवत्कथां समुप-शृणोति स्वयं चेदं गायति ॥ १९.२ ॥

18. 34. **உத்தரகுரு வர்ஷத்தில்** வராஹ ரூபமெடுத்த பகவான் யஜ்ஞபுருஷர் வாசம் செய்கிறார். அவரை இந்த பூதேவி குருவர்ஷத்தாருடன் பழுது படாத பக்தி யோகத்தால் ஆராதிப்பவளாய்ப் பின்வரும் மேலான உபநிஷத்தை ஆவிருத்தி செய்கிறாள்.

18. 35. பிரணவப் பொருளும், வேத மந்திரங்களின் குறிப்பால் அறியப்படுபவரும், யஜ்ஞமும் கிரதுவுமே வடிவெடுத்தவரும், மஹத்தான யாகங்களை அவயவங்களாய்க் கொண்டவரும் ஆகிய புருஷோத்தமருக்கு நமஸ்காரம். பரிசுத்தமான கருமஸ்வரூபியும் மூன்று யுக ஸ்வரூபியும் ஆகிய உமக்கு நமஸ்காரம்.

18. 37. திரவியம், கிரியை, ஹேது, அயனம், காலம், கர்த்தா இவை வடிவான மாயா குணங்களால் வஸ்துவாகக் காணப்பட்ட ஸ்வரூபத்தை உடையவரும், ஆராய்ச்சி யாலும், (யம நியமம் முதலிய) யோகத்தின் விசேஷப் பயிற்சியாலும் திருந்திய புத்தி யுடையவர்களால் மாயா வடிவம் நீங்கியவராய் அறியப்படுபவரும் ஆகியவருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

19. 1. **கிம்புருஷ வர்ஷத்தில்** ஆதி புருஷனும், பகவானும், லக்ஷ்மணன் தமய னும் ஸீதையின் உள்ளத்தில் ரமிப்பவனும் ஆகிய ஸ்ரீராமனை அவருடைய திருவடியின் அருகிலிருப்பதிலேயே திருப்தியடையும் பரம பாகவதரான ஹனுமான் கிம்புருஷர் களுடன் இடைவிடாத பக்தி யோகத்தால் உபாசிக்கிறார்.

19. 2. கந்தர்வர்களுடன் (கிம்புருஷவர்ஷத்தின் புருஷ சிரேஷ்டரான) ஆர்ஷ்டி ஷேணரால் கானம் செய்யப்பட்டதும் பரம மங்களகரமானதும் தனது நாயகனைப் பற்றியதுமான பகவத் கதையை மனமுவந்து கேட்டுத் தானும் பின்வருமாறு பாடுகிறார்.

18. 35. **த்ரியுகாய—க்ருதயுகே** யக்ஞாபாவாத் யத்வா கலியுகே ச்சன்னத்வாத் ।

ओं नमो भगवते उत्तमश्लोकाय नम आर्यलक्षण-शीलव्रताय नम उपशिक्षितात्मन उपासित-लोकाय नमः साधुवाद-निकषणाय नमो ब्रह्मण्य-देवाय महापुरुषाय महाराजाय नम इति ॥ १९.३ ॥

मर्त्यावतार-स्त्विह मर्त्यशिक्षणं रक्षोवधायैव न केवलं विभोः ।
कुतोऽन्यथा स्याद्रमतः स्व आत्मनः सीताकृतानि व्यसनानीश्वरस्य ॥ १९.५ ॥

न जन्म नूनं महतो न सौभगं न वाङ् न बुद्धि-र्नाकृतिस्तोषहेतुः ।
तै-र्यद्विसृष्टानपि नो वनौकस-श्चकार सख्ये बत लक्ष्मणाग्रजः ॥ १९.७ ॥

भारतेऽपि वर्षे भगवान्नरनारायणाख्य आकल्पान्त-मुपचित-धर्म-ज्ञान-वैराग्यैश्वर्योपशमोपरमात्मो-पलंभन-मनुग्रहायात्मवता-मनुकंपया तपोऽव्यक्त-गति-श्चरति ॥ १९.९ ॥

---

19. 3. " ஓம் நமோ பகவதே உத்தமச்லோகாய நம ஆர்யலக்ஷண - சீலவ்ரதாய நம உபசிக்ஷிதாத்மனே உபாஸித லோகாய நம: ஸாது - வாத - நிகஷணய நமோ பரஹ்மண்யதேவாய, மஹா புருஷாய மஹா ராஜாய நம:" (பிரணவப் பொருளும் உத்தம சுலோகருமான பகவானுக்கு நமஸ்காரம். ஸத் புருஷர்களின் லக்ஷணம் சீலம் விரதம் இவற்றின் உறைவிடமாகியவருக்கு நமஸ்காரம். உள்ளத்தை அடக்கி உலகின் நன்மையைப் போற்றியவருக்கு நமஸ்காரம். ஸாதுக்களின் தன்மைக்கு உரைகல் போன்றவருக்கு நமஸ்காரம். பிராம்மணர்களைத் தெய்வமாய்க் கொண்டவருக்கு நமஸ்காரம். மகாராஜாவும் மஹா புருஷரும் ஆகியவருக்கு நமஸ்காரம்.

19. 5. (ஸ்ரீராமசந்திர) பிரபுவின் மனுஷ்யாவதாரம் இங்கு மனிதர்களுக்கு நல்வழி காட்டுவதற்காகவேயன்றி ராக்ஷஸ வதம் ஒன்றிற்காக மட்டும் அன்று; அப்படியில்லாவிட்டால் தனது ஸ்வரூபத்தில் இரமிக்கின்ற ஜகதீசுவரனுத்கு ஸீதையின் விசனத் தொடர்பு எங்ஙனம் கூடும்?

19. 7. அவருடைய ஸந்தோஷத்திற்கு உயர் குலப் பிறப்பும், செல்வமும் வாக்கின் வன்மையும், புத்தி சக்தியும், உடல் வனப்பும் காரணமாகா; இது நிச்சயம். ஏனெனில் அவை யொன்றுமில்லாத காட்டு மிராண்டிகளான எங்களையுமல்லவா இலக்ஷ்மணனுக்குத் தமயனை எம்பெருமான் நட்புக்குரியவர்களாக்கிக் கொண்டார்.

19. 9. **பாரத வர்ஷத்தில்** பகவான் நரநாராயணர் என்ற பெயருடன் கல்பத்தின் முடிவு வரை தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், சாந்தி, அடக்கம் இவற்றை வளர்த்து ஆத்மஸ்வரூபத்தை யடைவிக்கும் தவத்தை ஆத்மவான்களிடம் கருணையால் கண்டு கொள்ள முடியாத வழியில் செய்கிறார்.

---

19. 7. **ஸ்ரீராமருடைய நட்பு—**
ஒ. தோழமை என்றவர் சொல்லிய சொல் ஒரு சொல்லன்றோ?
—குகன்: கம்பராமாயணம்.

19. 9. பாரத வர்ஷமானது இமயம், ஸ்ரீசைலம், வேங்கடம் போன்ற மலைகளாலும், கங்கை, யமுனை கோதாவரி, காவேரி போன்ற நதிகளாலும், காசி, காஞ்சி போன்ற க்ஷேத்திரங்களாலும், வேதகர்மாக்களாலும் சிறப்புற்று விளங்குவது. அங்கு தேவர்களும் வந்து பிறக்க ஆசைப்படுகின்றனர். எங்கு பகவத் கதையில்லையோ அங்கிருந்தென்ன பயன்?

तं भगवान्नारदो वर्णाश्रमवतीभि-र्भारतीभिः प्रजाभिः भगवत्प्रोक्ताभ्यां सांख्ययोगाभ्यां भगवदनुभावोपवर्णनं सावर्णे-रुपदेक्ष्यमाणः परम-भक्ति-भावेनोपसरति इदं चाभिगृणाति ॥ १९.१० ॥

ओं नमो भगवते उपशमशीलायोपरतानात्म्याय नमोऽकिंचन-वित्ताय ऋषिऋषभाय नरनारायणाय परमहंस-परमगुरवे आत्मारामाधिपतये नमो नम इति ॥ १९.११ ॥

गायति चेदम्—

कर्तास्य सर्गादिषु यो न बध्यते न हन्यते देहगतोऽपि दैहिकैः।
द्रष्टुर्न दृग्यस्य गुणैर्विदुष्यते तस्मै नमोऽसक्त-विविक्त-साक्षिणे ॥ १९.१२ ॥

एतदेव हि देवा गायन्ति—

न यत्र वैकुण्ठ-कथा-सुधापगा न साधवो भागवता-स्तदाश्रयाः।
न यत्र यज्ञेशमखा महोत्सवाः सुरेशलोकोऽपि न वै स सेव्यताम् ॥ १९.२४ ॥

---

19. 10. அவரை நாரத பகவான் வர்ணாசிரம தருமங்களுடன் கூடிய பாரத மக்களுடன் பரம பக்தியால் வழி படுகிறார். பகவானால் உபதேசிக்கப்பட்டு ஸாங்கியத்தையும் யோகத்தையும் பகவானுடைய பெருமையையும் வினக்குவதாய் உள்ள (பாஞ்சராத்ர) ஆகமத்தை ஸாவர்ணி மனுவுக்கு உபதேசிக்கப் போகின்றார். பின்வரும் மந்திரத்தையும் ஜபிக்கின்றார்.

19. 11. "ஓம் நமோ பகவதே உபசம - சீலாய உபரத - அனாத்ம்யாய, நமோ அகிஞ்சன - வித்தாய, ரிஷிரிஷபாய. நரநாராயணாய பரமஹம்ஸ - பரமகுரவே ஆத்மாராமாதிபதயே நமோ நம: (பிரணவப் பொருளாகியவரும். வைராக்கிய சீலரும், தேஹாத்ம எண்ணம் இல்லாதவரும். ஏது மில்லாதார்க்கு எல்லாமாகிய செல்வமும் ரிஷிசிரேஷ்டரும் பரமஹம்ஸர்களின் பரம குருவும் ஆத்மாராமர்களின் அதிபதியும் ஆன பகவான் நர நாராயணருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.")

19. 12. இதையும் கானம் செய்கிறார்; " சிருஷ்டி முதலியவற்றிற்குக் கர்த்தாவாயினும் எவர் பற்றடைவதில்லையோ உடலில் உறைந்த போதிலும் உடலின் பீடைகளால் பீடிக்கப்படுவதில்லையோ பார்க்கும் எவருடைய பார்வையானது பார்ப்பவற்றின் குண தோஷங்களால் கெடுவதில்லையோ அப்படிப்பட்ட பற்றற்றவரும் தனித்து நிற்பவரும் ஸாக்ஷியுமான அவருக்கு நமஸ்காரம்.

19. 24. வைகுண்ட நாதனுடைய கதையமுதம் பாய்ந்தோடும் நதிகள் எங்கு இல்லையோ அவற்றையண்டி வாழும் ஸாதுக்களான பாகவதர்கள் எங்கு இல்லையோ யஜ்ஞேசனுடைய ஆராதனைகளும் உத்ஸவங்களும் எங்கு இல்லையோ அது இந்திர லோகமாயினும் அதைச் சேவிக்க வேண்டாம்.

---

19. 24. ஒ. பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரரேறே ஆயர்தங் கொழுந்தே யென்னு
மிச்சுவை தவிர யான் போய் இந்திர லோக மாளு
மச்சுவை பெறினும் வேண்டே னரங்கமா நகருளானே.—திவ்யப்ரபந்தம்.

---

19. 11. परमगुरवरायात्मारामाधिपतये। பா. பே.

सत्यं दिशत्यर्थित-मर्थितो नृणां नैवार्थदो यत्पुनरर्थिता यतः।
स्वयं विधत्ते भजता-मनिच्छता-मिच्छा-पिधानं निजपादपल्लवम् ॥ १९.२७ ॥

यद्यत्र नः स्वर्ग-सुखावशेषितं
स्विष्टस्य सूक्तस्य कृतस्य शोभनम्।
तेनाजनाभे स्मृतिमज्जन्म नः स्याद्
वर्षे हरि-र्यद्भजतां शं तनोति ॥ १९.२८ ॥

श्रीशुक उवाच—

प्रियव्रतात्मज इध्मजिह्वः स्वं द्वीपं सप्तवर्षाणि विभज्य सप्तवर्षनामभ्य आत्मजेभ्य आकलय्य स्वयमात्मयोगेन उपरराम ॥ २०.२ ॥

सहस्रायुषो विबुधोपम-सन्दर्शन-प्रजननाः स्वर्गद्वारं त्रय्या विद्यया भगवन्तं त्रयीमयं सूर्य-मात्मानं यजन्ते ॥ २०.४ ॥

---

19. 27. மனிதர்களால் பிரார்த்திக்கப்பட்டு அவர்கள் பிரார்த்தித்ததை பகவான் அளிக்கிறார் என்பது உண்மை எனினும் அவர்கள் மீண்டும் அதை யாசிப்பவர்களாகவே இருப்பதால் அர்த்தத்தை உண்மையில் அறிந்தவராகமாட்டார். ஆனால் எதையும் விரும்பாமல் பஜிப்பவர்களுக்கு ஆசைக்கு மூடிபோன்ற தமது பாத பல்லவத்தைத் தாமாகவே அளிக்கிறார்.

19. 28. யாகம் முதலிய நற்கருமங்களாலும் பகவத் கதை போன்ற நற்பேச்சுகளாலும் சேமிக்கப்பட்ட புண்ணியம் சுவர்க்கத்தில் அனுபவித்த பின் இங்கு ஸஞ்சிதமாயிருக்குமாயின் அதன் பயனாக அஜநாபம் என்ற இந்த பாரத வர்ஷத்தில் ஹரிஸ்மரணையுடன் கூடின பிறவி நமக்குக் கிடைக்கவேண்டும். ஹரியானவர் தம்மை பஜிப்பவர்க்கு இவ்வர்ஷத்தில் விசேஷமான மங்களத்தை அருள்கிறார்.

ஸ்ரீ சுகர் கூறியது—

20. 2. பிரியவிரதருடைய குமாரராகிய இத்மஜிஹ்வர் தனது (ப்லக்ஷ) த்வீபத்தை ஏழு வர்ஷங்களாகப் பிரித்து அவ்வர்ஷங்களின் பெயராலேயே விளங்கிய தனது புத்திரர்களிடம் ஒப்படைத்து விட்டுத் தான் ஆத்ம யோகத்தில் ஆழ்ந்தார்.

20. 4. (ப்லக்ஷத்வீபத்திலுள்ள நான்கு ஜாதி ஜனங்கள்) ஆயிரம் வருஷம் ஆயுளுள்ளவர்களாகவும் தேவர்களைப் போல் பார்வையால் பிரஜோத்பத்தி செய்யக் கூடியவர்களாகவும் இருந்து கொண்டு வானவர் நாட்டுக்கு வழி விடுபவரும் மூன்று வேதங்களின் ஸ்வரூபியும் ஆன சூரிய பகவானை மூன்று வேதங்களினாலும் பூஜிக்கின்றனர்.

---

19. 28. सुज्यसुखावशेषितं।

प्रत्नस्य विष्णो रूपं यत्सत्यस्यर्तस्य ब्रह्मणः।
अमृतस्य च मृत्योश्च सूर्य-मात्मान-मीमहीति ॥ २०.५ ॥

अण्डमध्यगतः सूर्यो द्यावा-भूम्यो-र्यदन्तरम्।
सूर्याण्ड-गोलयो-र्मध्ये कोट्यः स्युः पंचविंशतिः ॥ २०.४३ ॥

देव-तिर्यङ्-मनुष्याणां सरीसृपसवीरुधाम्।
सर्वजीव-निकायानां सूर्य आत्मा दृगीश्वरः ॥ २०.४६ ॥

यथा कुलाल-चक्रेण भ्रमता सह भ्रमतां तदाश्रयाणां पिपीलिकादीनां गति-रन्यैव प्रदेशान्तरे-ष्वप्युपलभ्यमानत्वादेवं नक्षत्रराशिभिरुपलक्षितेन कालचक्रेण ध्रुवं मेरुं च प्रदक्षिणेन परिधावता सह परिधावमानानां तदाश्रयाणां सूर्यादीनां ग्रहाणां गतिरन्यैव नक्षत्रान्तरे राश्यन्तरे चोपलभ्यमानत्वात् ॥ २२.२ ॥

उशना पुरतः पश्चात् सहैव वार्कस्य शैघ्र्य-मान्द्य-साम्याभिर्गतिभि-रर्कवच्चरति लोकानां नित्यदानुकूल एव प्रायेण वर्षयंश्चारेणानुमीयते स वृष्टिविष्टम्भ-ग्रहोपशमनः ॥ २२.१२ ॥

---

20. 5. வியவகார ஸத்தியத்திற்கும் பாரமார்த்திக ஸத்தியத்திற்கும், சித்துக்கும் ஜடத்திற்கும் ஆத்மாவாகியவரும் புராண புருஷரும் மஹா விஷ்ணு ஸ்வரூபியும் ஆகிய சூரிய பகவானைச் சரண் அடைகின்றேம்.

20. 43. வானுலகிற்கும் பூவுலகிற்கும் மத்தியில் அண்டகோளத்தின் மத்தியாக சூரியன் விளங்குகிறார். சூரியனுக்கும் அண்டகோளத்திற்கும் இடையிலுள்ள தூரம் இருபத்தைந்து கோடி யோஜனை.

20. 46. தேவர், மனிதர், விலங்குகள், ஊர்வன, மரம், செடி கொடி முதலிய எல்லா ஜீவராசிகட்கும் சூரியனே ஆத்மாவும் (அனைத்தையும் காணும்) கண்ணும் ஆகிறார்.

22. 2. குயவனுடைய சக்கரம் சுற்றும்போது அதை யண்டி அத்துடன் சுற்றும் எறும்பு முதலியவற்றின் சலனம் சக்கரத்தின் பிரதேசத்தினுள்ளும் தனியாகக் காணப் படுவதால் வேருவது போல மேருவையும் துருவத்தையும் பிரதக்ஷிணமாகச் சுற்றும் கால சக்கரத்தை யண்டி அத்துடன் சுற்றும் சூரியன் முதலிய கிரகங்களின் சலனம் நக்ஷத்திரங்களிடையும் ராசிகளிடையும் காணப்படுவதால் வேருக இருக்கிறது.

22. 12. சீக்கிரமாகவும் மெதுவாகவும் ஸமமாகவும் உள்ள கதியுடன் சுக்கிரன் சூரியனுக்கு முந்தியும் பிந்தியும் ஸமமாகவும் சூரியனைப் போலவே செல்லுகிறான். மழையை உண்டு பண்ணி உலகிற்குப் பெரும்பாலும் நன்மை பயப்பவனாகவே இருக் கின்றான். அவன் செல்லுதலால் மழையைத் தடை செய்யும் கிரகத்தைச் சாந்தப்படுத்து பவனாக ஊகிக்கப் படுகிறான்.

उशनसा बुधो व्याख्यात-स्तत उपरिष्टाद् द्विलक्षयोजनतो बुधः सोमसुत उपलभ्यमानः प्रायेण शुभकृद्यदार्काद् व्यतिरिच्येत तदातिवाताभ्रप्रायानावृष्ट्यादि-भयमाशंसते ॥ २२.१३ ॥

अत ऊर्ध्व-मङ्गारकोऽपि योजनलक्षद्वितय उपलभ्यमान-स्त्रिभि-स्त्रिभिः पक्षै-रेकैकशो राशीन् द्वादशानुभुङ्क्ते यदि न वक्रेणाभिवर्तते, प्रायेणाशुभग्रहोऽघशंसः ॥ २२.१४ ॥

तत उपरिष्टाद्द्विलक्ष-योजनान्तरगतो भगवान् बृहस्पति-रेकैकस्मिन् राशौ परिवत्सरं परिवत्सरं चरति यदि न वक्रः स्यात्, प्रायेणानुकूलो ब्राह्मणकुलस्य ॥ २२.१५ ॥

तत उपरिष्टाद्योजनलक्षद्वयात्प्रतीयमानः शनैश्चर एकैकस्मिन् राशौ त्रिंशन्मा-सान् विलंबमानः सर्वानेवानुपर्येति तावद्भिरनुवत्सरैः, प्रायेण हि सर्वेषा-मशान्ति-करः ॥ २२.१६ ॥

तत उत्तरस्मादृषय एकादशलक्षयोजनान्तर उपलभ्यन्ते य एवं लोकानां शमनु-भावयन्तो भगवतो विष्णो -र्यत्परमं पदं प्रदक्षिणं प्रक्रमन्ति ॥ २२.१७ ॥

---

22. 13. சுக்கிரனே வர்ணித்தது புதனுக்கும் பொருந்தும். சுக்கிரனுக்கும் அப்பால் இரண்டு லக்ஷம் யோஜனே தூரத்தில் சந்திரனுடைய புத்திரனை புதன் காணப் படுகின்றவனுய்ப் பெரும்பாலும் நன்மை பயப்பவனுயிருக்கின்ருன். எனினும் சூரியனே விட்டு விலகும்போது பெரும்பாலும் காற்றிலடிபட்ட மேகத்தாலும் மழையின்மையாலும் பயம் ஊகிக்கப்படும்.

22. 14. அதற்கும் அப்பால் இரண்டு லக்ஷம் யோஜனே தூரத்தில் காணப்படும் செவ்வாய் வக்கிரமாய்ச் சலிக்காத போது ஒவ்வொரு ராசியிலும் மும்மூன்று பக்ஷங்கள் இருந்துகொண்டு பன்னிரண்டு ராசிகளேயும் அனுபவிக்கிருன். பெரும்பாலும் அமங் களத்தைச் செய்யும் கிரகமாயும், துன்பத்தைக் குறிப்பவனுயுமிருக்கிருன்.

22. 15. அதற்கும் அப்பால் இரண்டு லக்ஷம் யோஜனே தூரத்தில் பிருஹஸ்பதி பகவான் வக்கிரமாய்ச் செல்லாத போது ஒவ்வொரு ராசியிலும் ஒரு பரிவத்ஸரம் வீதம் தங்கிச் செல்லுகிருர். பெரும்பாலும் பிராம்மண குலத்துக்கு நன்மை பயப்பவர்.

22. 16. அதற்கும் அப்பால் இரண்டு லக்ஷம் யோஜனே தூரத்தில் காணப்படும் சனேச்சரர் ஒவ்வொரு ராசியிலும் முப்பது மாதங்கள் தாமதிக்கின்றவராய் எல்லா ராசிகளேயும் அவ்வளவு (முப்பது) அனுவத்ஸரங்களில் கடந்து செல்லுகிருர். பெரும் பாலும் எல்லோருக்கும் அமைதி யின்மை உண்டாக்குபவர்.

22. 17. அதற்கும் அப்பால் பதினெரு லக்ஷம் யோஜனே தூரத்தில் காணப்படும் ஸப்த ரிஷிகள், உலகங்களுக்கு நன்மையை வளர்ப்பவர்களாய், பகவான் மகா விஷ்ணுவின் பரம பதத்தை (துருவத்தை) பிரதக்ஷிணம் செய்கின்றனர்.

अथ तस्मात्परतस्त्रयोदश-लक्षयोजनान्तरतो यत्तद्विष्णोः परमं पदमभिवदन्ति यत्र ह महाभागवतो ध्रुव औत्तानपादि-रग्निनेन्द्रेण प्रजापतिना कश्यपेन धर्मेण च समकालयुग्भिः सबहुमानं दक्षिणतः क्रियमाण इदानीमपि कल्पजीविना-माजीव्य उपास्ते तस्येहानुभाव उपवर्णितः ॥ २३.१ ॥

स हि सर्वेषां ज्योतिर्गणानां ग्रहनक्षत्रादीना-मनिमिषेणा-व्यक्तरंहसा भगवता कालेन भ्राम्यमाणानां स्थाणुरिवावष्टम्भ ईश्वरेण विहितः शश्व-दवभासते ॥ २३.२ ॥

एतदुहैव भगवतो विष्णोः सर्वदेवतामयं रूपमहरहः सन्ध्यायां प्रयतो वाग्यतो निरीक्षमाण उपतिष्ठेत नमो ज्योतिर्लोकाय कालायनाया-निमिषां पतये महापुरुषायाभिधीमहीति ॥ २३.८ ॥

ग्रहर्क्ष-तारा-मय-माधिदैविकं पापापहं मन्त्रकृतां त्रिकालम् ।
नमस्यतः स्मरतो वा त्रिकालं नश्येत तत्कालजमाशु पापम् ॥ २३.९ ॥

राजोवाच—

इति नरका वा नाम किं देशविशेषा अथवा बहिस्त्रिलोक्या आहोस्विदन्तराल इति ॥ २६.४ ॥

---

23. 1, அதற்கப்பால் பதின்மூன்று லக்ஷம் யோஜனை தூரத்தில் எதை விஷ்ணு பதம் என்கின்றனரோ அந்த துருவ மண்டலம் உளது. அங்கு உத்தானபாதரின் குமாரரும், மகா பாகவதரும் ஆன துருவர் அக்கினி, இந்திரன், பிரஜாபதி, கசியபர், தருமர் முதலியவர்களால் ஸமகாலத்தில் மிகுந்த மரியாதையுடன் பிரதக்ஷிணம் செய்யப் படுபவராய் இப்போதும் கல்பாந்தம் ஜீவிப்பவர்களுக்கு உயிர் ஸ்தானமாய் விளங்கு கின்றார். அவருடைய பெருமை ஈங்கு முன்பே வர்ணிக்கப்பட்டுள்ளது.

23. 2. காணுதற்கரிய சக்தி வாய்ந்தவரும் கண் மூடாதவருமான காலபகவானால் இயக்குவிக்கப்படும் கிரகங்கள் நக்ஷத்திரங்கள் முதலிய ஒளி கணங்கள் அனைத்திற்கும் அந்த துருவ ஸ்தானமே அச்சுப்போல் ஈசுவரனால் அமைக்கப் பெற்றதாய்ப் பிரகாசிக் கின்றது.

23. 8. பகவான் விஷ்ணுவினுடைய ஸர்வ தேவதா மயமான இந்த ரூபத்தை ஒவ்வொரு நாளும் ஸந்தியா காலத்தில் பரிசுத்தனாயும் வாக்கை யடக்கியவனாயும் தரிசித்துப் பின் வருமாறு தியானித்து வணங்க வேண்டும். "ஒளி யுலக வடிவின னையும், தேவாதி தேவனையும் உள்ள மஹா புருஷனைத் துதித்து வணங்குகின்றோம்."

23. 9. கிரகங்களையும் நக்ஷத்திரங்களையும் வடிவாய்க்கொண்ட இந்த அதி தெய்வ ரூபம் முக்காலத்திலும் போற்றுவார்க்குப் பாவத்தைப் போக்குவது. முக்காலத் திலும் நமஸ்கரிப்பவர்க்கும், நினைப்பவர்க்கும் அந்தந்தக் காலம் வரை உண்டாகிய பாவம் விரைவில் நாசமடைந்து விடும்.

(24, 25 அத்தியாயங்களில் அதலம் முதலிய கீழ் உலக வர்ணனை)

அரசன் கூறியது—

26. 4. நரகங்கள் என்பன தனிப்பட்ட இடங்களா ? (ஆம் எனின்) மூவுலகங் களுக்கும் அப்பால் உள்ளவையா அல்லது உள்ளே அடங்கியவையா எனக்கூறி யருளவேண்டும்.

श्रीशुक उवाच—

अन्तराल एव त्रिजगत्यास्तु ॥ २६.५ ॥

यत्र ह वाव भगवान् पितृराजो वैवस्वतः स्वविषयं प्रापितेषु स्वपुरुषै-र्जन्तुषु संपरेतेषु यथाकर्मावद्यं दोषमेवानुल्लङ्घित-भगवच्छासनः सगणो दमं धारयति ॥ २६.६ ॥

यस्तु परवित्तापत्य-कलत्राण्यपहरति, यस्त्विह एतदहमिति ममेदमिति भूतद्रोहेण केवलं स्वकुटुंबमेवानुदिनं प्रपुष्णाति, यस्त्विह उग्रः पशून् पक्षिणो वा प्राणत उपरन्धयति, यास्त्विह वै राजा राजपुरुषो वा अदण्ड्ये दण्डं प्रणयति, यस्त्विह वा असंविभज्याश्नाति, यत्किंचनोपनत-मनिर्मितपंचयज्ञो वायससंस्तुतः, ये त्विह वै दांभिका दंभयज्ञेषु पशून् विशसन्ति, यस्त्विह आढ्याभिमति-रहंकृति-स्तिर्यक्-प्रेक्षणः सर्वतोऽभिविशंकी अर्थव्यय-नाश-चिन्तया परिशुष्यमाण-हृदयवदनो निर्वृति-मनवगतो ग्रह इवार्थ-मभिरक्षति, सर्व एव अधर्मवर्तिनो ये केचिदिहोदिता अनुदिता-श्चावनिपते पर्यायेण नरके विशन्ति। तथैव धर्मानुवर्तिन इतरत्र, इह तु पुनर्भवे त उभयशेषाभ्यां निविशन्ति ॥ २६.८-३७ ॥

---

ஸ்ரீஷி கூறியது—

26. 5. அவை மூவுலகங்களுக்குட்பட்டவையே.

26. 6. அங்கு பித்ரு கணங்களின் அரசராகிய வைவஸ்வத பகவான் தமது பரிவாரங்களுடன் விளங்குகிறார். பகவானுடைய கட்டளையை மீறாமல் செலுத்தி வைப்பவராய் இறந்து போனவர்களில் தமது நாட்டுக்குத் தமது புருஷர்களால் கொண்டு வந்து சேர்க்கப்பட்டவர்களுக்கு அவரவர் பாவச் செயலாகிற குற்றத்துக்குத் தக்கபடி தண்டனை விதிக்கிறார்.

26. 8-37. எவன் பிறருடைய பொருளையும், மக்களையும், மனைவியையும் அபகரிக்கிறானோ; எவன் இங்கு 'இது நான், இது என்னுடையது' என்று எண்ணிப் பிராணிகளுக்குத் துரோகம் செய்து தனது குடும்பம் ஒன்றையே தினந்தோறும் போஷித்து வளர்க்கின்றானோ; எவன் கொடியவனாய் இங்கு மிருகங்களையும் பறவைகளையும் உயிருடன் கூடியவற்றை உணவாக்கிக் கொள்ளுகின்றானோ; அரசனோ அவனுடைய அதிகார புருஷனோ, எவன் இங்கு தண்டிக்கத்தகாதவனைத் தண்டிக்கிறானோ; எவன் தனக்குக் கிடைத்ததை பிறர்க்குப் பகிர்ந்து கொடாமலும் பஞ்ச யஜ்ஞமில்லாமலும் காக்கையே மேல் என எண்ணும்படி புசிக்கிறானோ; எவர்கள் இங்கு இடம்பம் மிகுந்தவர்களாய் இடம்பத்துக்குச் செய்யப்படும் யாகங்களில் மிருகங்களை வதைக்கின்றார்களோ; எவன் இங்கு தான் பணக்காரன் என்று கருவித்து அஹங்காரத்தால் வக்கிரப்பார்வையுடையவனாய், எங்கும் சந்தேகங் கொண்டவனாய் பொருள் செலவாகிப்போம், நஷ்டமாகிப் போம் என்ற சிந்தனையால் உலர்ந்துபோன அகமும் முகமும் உடையவனாய்ச் சாந்தியற்றவனாய் பூதத்தைப் போல் பொருளைக்காப்பவனாய் இருக்கின்றானோ; அரசே! இங்ஙனம் கூறப்பட்டவர்களும் கூறப்படாதவர்களுமாகிய எவர்கள் அதரும வழியில் செல்லுபவர்களோ அவர்கள் எல்லோருமே முறையே நரகத்தில் புகுகின்றனர்; அவ்வாறே தரும வழியில் செல்லுபவர் அதற்கு மாறான சுவர்க்கத்தை யடைகின்றனர்; எஞ்சிய புண்ணிய பாவத்தின் பயனாய் மீண்டும் பிறவியடையும்போது திரும்பவும் இவ்வுலகில் புகுகின்றனர்.

श्रुत्वा स्थूलं तथा सूक्ष्मं रूपं भगवतो यतिः।
स्थूले निर्जित-मात्मानं शनैः सूक्ष्मं धिया नयेदिति ॥ २६.३९ ॥

भू-द्वीप-वर्ष-सरि-दद्रि-नभः-समुद्र-पाताल-दिङ्-नरक-
भागण-लोक-संस्था।
गीता मया तव नृपाद्भुत-मीश्वरस्य स्थूलं वपुः
सकलजीव-निकाय-धाम ॥ २६.४० ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां संहितायां
पारमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीवब्रह्मविद्यायां
पंचमः स्कन्धः समाप्तः ॥

---

26. 39. முக்திக்காக முயல்பவன் இங்ஙனம் பகவானுடைய ஸ்தூலரூபத்தையும். அவ்வாறே ஸூக்ஷ்ம ரூபத்தையும் பற்றிக் கேட்டறிந்து, ஸ்தூல தாரணையால் ஜயிக்கப் பட்ட மனதை மெதுவாக புத்தி சக்தியைக் கொண்டு ஸூக்ஷ்மத்தில் செலுத்த வேண்டும்.

26. 40. அரசே! பூமி, துவீபம், வர்ஷம், நதி, மலை, ஆகாயம், சமுத்திரம், பாதாளம், திக்கு, நரகம், ஜோதிர்கணங்கள் முதலியவற்றைக் கொண்ட உலக அமைப்பு உனக்கு என்னால் இதுவரை கூறப்பட்டது. இது ஸகல ஜீவராசிகளுக்கும் உறைவிடமாய் விளங்கும் ஈசுவரனுடைய அற்புதமான ஸ்தூல சரீரம்.

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸ புத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம்
சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்ரீவப் பிரம்ம வித்தை எனப்படுவதுமான
ஸ்ரீமத் பாகவத மகா புராணத்தில் ஐந்தாவது ஸ்கந்தம் முற்றும்.

## ॥ षष्ठः स्कन्धः ॥

### ॥ अजामिलोपाख्यानम् ॥ १२ ॥

श्रीशुक उवाच—

न चेदिहैवापचितिं यथांहसः कृतस्य कुर्यान्मन-उक्ति-पाणिभिः ।
ध्रुवं स वै प्रेत्य नरकानुपैति ये कीर्तिता मे भवत-स्तिग्मयातनाः ॥ १.७ ॥

तस्मात् पुरैवाश्विह पाप-निष्कृतौ यतेत मृत्यो-रविपद्यताऽऽत्मना ।
दोषस्य दृष्ट्वा गुरु-लाघवं यथा भिषक् चिकित्सेत रुजां निदानवित् ॥ १.८ ॥

---

## ஆறுவது ஸ்கந்தம்

(மூன்றும் நாள் கதைத் தொடர்ச்சி)

### 12. அஜாமிளோபாக்கியானம்

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 7. ஒருவன் மனதாலும் வாக்காலும் கைகளாலும் செய்த பாவத்துக்குத் தக்க முறையில் இங்கேயே பிராயச் சித்தத்தைச் செய்யாமற்போனல் கொடிய வேதனைகளை விளைக்கும் நரகங்கள் எவற்றைப்பற்றி உனக்குக் கூறினேனே அவற்றை அவன் இறந்த பின் அடைவது நிச்சயம்.

1. 8. ஆகையால் நோயின் நிதானத்தை யறிந்த வைத்தியன் எங்ஙனம் சிகிச்சை செய்வானே அங்ஙனம் இங்கேயே மரணம் வருவதற்கு முன் விபத்தில்லாத போதே மனதை யடக்கி தோஷத்தின் வலிமையையும் எளிமையையும் ஆராய்ந்து பாவத்தைப் போக்குவதில் சீக்கிரமாக முயற்சி செய்யவேண்டும்.

---

1. 8. . ஒ காலன் வருமுன்னே கண்பஞ்சடை முன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல் விழுந்தே
உற்று ரழுமுன்னே ஊரார் சுடு முன்னே
குற்றலத் தானையே கூறு. —பட்டினத்தார்.

**நிஷ்க்ருதௌ**—ப்ராயச்சித்தே । **ருஜாம்**—ரோகாணும் ।

**ஆறுவது ஸ்கந்தம்**—

அத்யாயைகோநவிம்சத்யா ஷஷ்டே போஷண - முச்யதே ।
அதிலங்கித - மர்யாத - பக்தரக்ஷண லக்ஷணம் ॥

இந்த ஸ்கந்தத்தில் ' போஷணம் ' என்னும் பக்தரக்ஷணமாகிய பாகவதத்தின் நாலாவது லக்ஷணம் விளக்கப்படுகிறது.

राजोवाच—

दृष्ट-श्रुताभ्यां यत्पापं जानन्नप्यात्मनोऽहितम् ।
करोति भूयो विवशः प्रायश्चित्तमथो कथम् ॥ १.९ ॥

क्वचिन्निवर्ततेऽभद्रात् क्वचिदाचरते पुनः ।
प्रायश्चित्त-मथो व्यर्थं मन्ये कुञ्जरशौचवत् ॥ १.१० ॥

श्रीशुक उवाच—

कर्मणा कर्मनिर्हारो न ह्यात्यन्तिक इष्यते ।
अविद्वदधिकारित्वात् प्रायश्चित्तं विमर्शनम् ॥ १.११ ॥

नाश्नतः पथ्यमेवान्नं व्याधयोऽभिभवन्ति हि ।
एवं नियमकृद्राजन् शनैः क्षेमाय कल्पते ॥ १.१२ ॥

---

அரசன் கூறியது—

1. 9. எது பாவமோ அது தனக்குத் துன்பத்தைக் கண்கூடாக இங்கும், கேள்வியால் உணரப்பட்ட முறையில் அங்கும் விளைக்கும் என்பதை அறிந்தும் ஒருவன் தன்வயமின்றித் திரும்பவும் (பிராயச்சித்தம் செய்த பின்னும்) பாவத்தைச் செய்கிறுன். ஆகையால் பிராயச்சித்தம் (திருத்துவதாக அமைவது) எங்ஙனம்?

1. 10. சில சமயம் கெட்ட காரியத்திலிருந்து ஒருவன் திரும்புகிறுன்; சில சமயம் மறுபடி அதையே செய்கிறுன். ஆகையால் பிராயச்சித்தமானது யானையைக் குளிப்பாட்டுவது போல் வீண் என்று எண்ணுகிறேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 11. கருமத்தாலேயே கருமநாசம் முற்றும் ஏற்படுவதாக ஒப்புக் கொள்ளப்படுவதில்லை; ஏனெனில் (பாவத்தொழிலும் பிராயச்சித்தச் சடங்கும்) அஞ்ஞானியையே அதிகாரியாய்க் கொண்டிருத்தலா லென்க; ஞானத்தாலேற்படும் மனத் தெளிவே (உண்மையான) பிராயச்சித்தம்.

1. 12. அரசே! பத்தியமான உணவையே உண்கின்றவனை நோய்கள் எங்ஙனம் ஆட்கொள்வதில்லையோ அங்ஙனம் நியமத்தைக் கைக் கொண்டவன் (பாவத்துக் காளாகாமல்) படிப்படியாக உயர்நல மெய்துதற்குரியவனுகின்றுன்.

---

1. 9. ஒரு பாவத்துக்கு ஒரு பிராயச்சித்தமாகச் சொல்லிக் கொண்டே போனுல் அதற்கு முடிவேயில்லை. ஸஞ்ஜீவினி மாதிரி எல்லா நோய்களும் பரவ வாஸனைகளும் போக மருந்துண்டா?

1. 11. இரவில் பழுதையைக் கண்டு பாம்பென்று பயந்த குழந்தைக்குப் பாடம் போட்டால் பயம் நீங்காது. விளக்கைக் கொண்டு வந்து அது பாம்பல்ல வென்று காட்டினுல் தான் உண்மையில் பயம் நீங்கும்.

---

1. 11. कर्मनिर्वेगो

तपसा ब्रह्मचर्येण शमेन च दमेन च ।
त्यागेन सत्यशौचाभ्यां यमेन नियमेन च ॥ १.१३ ॥

देहवाग्बुद्धिजं धीरा धर्मज्ञाः श्रद्धयान्विताः ।
क्षिपन्त्यघं महदपि वेणुगुल्ममिवानलः ॥ १.१४ ॥

न तथा ह्यघवान् राजन् पूयेत तप आदिभिः ।
यथा कृष्णार्पितप्राण-स्तत्पूरुष-निषेवया ॥ १.१६ ॥

प्रायश्चित्तानि चीर्णानि नारायण-पराङ्मुखम् ।
न निष्पुनन्ति राजेन्द्र सुराकुम्भ-मिवापगाः ॥ १.१८ ॥

सकृन्मनः कृष्णपदारविन्दयो-र्निवेशितं तद्गुणरागि यैरिह ।
न ते यमं पाशभृतश्च तद्भटान् स्वप्नेऽपि पश्यन्ति हि
चीर्ण-निष्कृताः ॥ १.१९ ॥

---

1. 13-14. தருமமறிந்த தீரர்கள் சிரத்தையுடன் கூடியவர்களாய்த் தவத்தாலும், பிரம்மசரியத்தாலும், மனோ ஜயத்தாலும், புலனடக்கத்தாலும், தியாகம், ஸத்தியம், சௌசம், இயமம், நியமம் முதலியவற்றாலும், மூங்கிற் புதரை (அதிலுண்டான) நெருப்பு எரிப்பது போல், உடல், உரை, உள்ளம் இவற்றில் பிறந்த பாவத்தை எத்துணை பெரிதாயினும் போக்கி விடுகின்றனர்.

1. 16. அரசே! பாகவத சேவையின் மூலம் கிருஷ்ணனிடம் வாழ்க்கையை அர்ப்பணம் செய்வதால் எங்ஙனம் பாவியான ஒருவன் பரிசுத்தனாவானோ அங்ஙனம் தவம் முதலியவற்றால் ஆகமாட்டான்.

1. 18. இராஜேந்திரரே! கள்குடத்தை நதியின் தீர்த்தம் பாவனமாக்காதவாறு நாராயணனிடம் பக்தியில்லாதவனைப் பிராயச்சித்தச் சடங்குகள் புனிதமாக்க மாட்டா.

1. 19. இங்கு கிருஷ்ணனுடைய குணங்களால் கவரப்பட்டு எவர்களுடைய மனம் ஒரு தடவையாவது கிருஷ்ணனுடைய பாத கமலங்களில் வைக்கப்பட்டதோ அவர்களே பிராயச்சித்தம் அனுஷ்டித்தவர்களாகி யமனையோ பாசக் கயிறு கொண்டு வரும் யமபடர்களையோ கனவிலும் காண்பதில்லை.

---

1. 19. **யைரிஹ**—யைரிஹேதி ஸாமான்ய-வாசிப்யாம் ஸர்வநாமப்யாம் மனோநிவேசனே ஜாதி-தேச-விசேஷானபேக்ஷத்வம் கம்யதே ।

---

1. 16. **प्राणस्तत्परस्य तु सेवया ।**

अत्र चोदाहरन्तीम-मितिहासं पुरातनम् ।
दूतानां विष्णुयमयोः संवादस्तं निबोध मे ॥ १.२० ॥

कान्यकुब्जे द्विजः कश्चिद्दासीपतिरजामिलः ।
नाम्ना नष्टसदाचारो दास्याः संसर्गदूषितः ॥ १.२१ ॥

बन्द्यक्ष-कैतवै-श्चौर्यै-गर्हितां वृत्तिमास्थितः ।
बिभ्रत् कुटुंब-मशुचि-र्यातयामास देहिनः ॥ १.२२ ॥

एवं निवसतस्तस्य लालयानस्य तत्सुतान् ।
कालोऽत्यगान्-महान् राजन्नष्टाशीत्यायुषः समाः ॥ १.२३ ॥

तस्य प्रवयसः पुत्रा दश तेषां तु योऽवमः ।
बालो नारायणो नाम्ना पित्रोश्च दयितो भृशम् ॥ १.२४ ॥

स बद्धहृदय-स्तस्मि-न्नर्भके कलभाषिणि ।
निरीक्षमाण-स्तल्लीलां मुमुदे जरठो भृशम् ॥ १.२५ ॥

---

1. 20. இதற்கு உதாரணமாகப் பின்வரும் பழைய சரித்திரம் கூறப்படுகிறது. விஷ்ணு தூதர்களுக்கும் யமதூதர்களுக்கும் நிகழ்ந்த அந்த ஸம்வாதத்தையும் என்னிடம் கேட்டறிவாய்.

1. 21. கான்யகுப்ஜ தேசத்தில் அஜாமிளன் என்ற பெயருடைய ஒரு பிராமணன் இருந்தான், அவன் ஒரு தாசிக்குப் புருஷனுகி நல்லொழுக்கத்தைத் துறந்து தாசியின் உறவால் கெட்டுப் போனுன்.

1. 22. பயமுறுத்திப் பணம் பறித்தல், சூதாடுதல், ஏமாற்றுதல், திருடுதல் முதலிய வெறுக்கத்தக்க ஜீவனோபாயத்தைக் கைக்கொண்டு குடும்பத்தைக் காப்பாற்றுபவனுய் அசுத்தனுய், பிராணி ஹிம்ஸை செய்பவனுய் இருந்தான்.

1. 23. அரசே! அந்த தாசியின் புத்திரர்களைச் சீராட்டிப் பாராட்டி அவர்களுடன் வசித்து வருவதிலேயே அவனுடைய ஆயுளின் பெரும்பகுதி, எண்பத்தெட்டு வருஷம், கழிந்து போயிற்று.

1. 24, வயது கடந்த அவனுக்குப் புத்திரர்கள் பத்துப்பேர். அவர்களுள் எவன் கடைசியோ அந்த பாலனுடைய பெயர் நாராயணன். தாய் தந்தையர்க்கு அவனிடம் மிகவும் பிரியம்.

1. 25. இனிமையாய்ப் பேசுகின்ற அக் குழந்தையிடம் ஆழ்ந்த அன்பு கொண்ட அவன் அவனுடைய விளையாட்டுகளைக் கண்டு மூப்பு மிகுந்த நிலையில் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான்.

---

1. 22. वृत्तिमाश्रितः ।

भुंजानः प्रपिबन् खादन् बालकस्नेह-यन्त्रितः ।
भोजयन् पाययन् मूढो न वेदागत-मन्तिकम् ॥ १.२६ ॥

स एवं वर्तमानोऽज्ञो मृत्युकाल उपस्थिते ।
मतिं चकार तनये बाले नारायणाह्वये ॥ १.२७ ॥

स पाशहस्तां-स्त्रीन् दृष्ट्वा पुरुषान् भृशदारुणान् ।
वक्रतुण्डानूर्ध्व-रोम्ण आत्मानं नेतुमागतान् ॥ १.२८ ॥

दूरे क्रीडनकासक्तं पुत्रं नारायणाह्वयम् ।
प्लावितेन स्वरेणोच्चै-राजुहावाकुलेन्द्रियः ॥ १.२९ ॥

निशम्य म्रियमाणस्य ब्रुवतो हरि-कीर्तनम् ।
भर्तु-र्नाम महाराज पार्षदाः सहसाऽपतन् ॥ १.३० ॥

विकर्षतोऽन्तर्हृदया-द्दासीपति-मजामिलम् ।
यमप्रेष्यान् विष्णुदूता वारयामासु-रोजसा ॥ १.३१ ॥

---

1. 26. பாலகனிடம் அன்பின் மிகுதியால் இயக்குவிக்கப்பட்டு அவன் புசிக்கும் போது பாலகனைப் புசிக்கச் செய்தும், பருகும்போது பருகச்செய்தும், உண்ணும்போது உண்ணச் செய்தும் வந்தானேயன்றி அம் மூடன் தனக்குச் சாவு நெருங்கிவிட்டதை உணரவில்லை.

1. 27. அங்ஙனம் அறிவு கெட்ட முறையில் காலங்கழித்து வந்த அவன் மரண சமயம் கிட்டியபோது நாராயணன் என்ற தனது பாலகுமாரனிடம் மனதைச் செலுத்தினன்.

1. 28-29. பாசத்தைக் கையிற் கொண்டு, வக்கிர முகத்துடனும், குத்திட்ட ரோமத்துடனும் மிகவும் கடுமையாய்க் காணப்பட்ட மூன்று புருஷர்கள் தன்னைக்கொண்டு போக வந்திருப்பதைக் கண்டு, தூலையில் விளையாடிக் கொண்டிருந்த நாராயணன் என்ற தன் மகனைப் பொறிகள் கலக்கமடைந்து உறத்த குரலில் கூவியழைத்தான்.

1. 30. அரசே! மரிக்கும்போது அங்ஙனம் அவன் ஹரியின் நாமத்தைச் சொல்ல, விஷ்ணு பாரிஷதர்கள் தங்கள் யஜமானரின் பெயரைக் கேட்டு அங்கு விரைந்து வந்தனர்.

1. 31. தாசியின் பதியான அஜாமிளனை (அவனுடைய ஸூக்ஷ்ம சரீரத்தை) அவனுடைய இருதயத்துள்ளிருந்து இழுக்கின்ற யமதூதர்களை விஷ்ணு தூதர்கள் தமது சக்தியால் தடுத்தனர்.

---

1. 30. ஒ. நம்பி பிம்பி யென்று நாட்டு மானிடப் பேரிட்டால்
நம்பும் பிம்பு மெல்லாம் நாலுநாளில் மழுங்கிப்போம்
செம்பெருந் தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாள் நாரணன்தம் அன்னை நரகம் புகாள். —பெரியாழ்வார்.

---

1. 30. मुखतो हरिकीर्तनम् ॥

ऊचु-र्निषेधितास्तां-स्ते वैवस्वत-पुरस्सराः ।
के यूयं प्रतिषेद्धारो धर्मराजस्य शासनम् ॥ १.३२ ॥

विष्णुदूता ऊचुः—

यूयं वै धर्मराजस्य यदि निर्देश-कारिणः ।
ब्रूहि धर्मस्य नस्तत्त्वं यच्च धर्मस्य लक्षणम् ॥ १.३८ ॥

कथं स्विद् ध्रियते दण्डः किं वास्य स्थान-मीप्सितम् ।
दण्ड्याः किं कारिणः सर्वे आहोस्वित् कतिचिन्नृणाम् ॥ १.३९ ॥

यमदूता ऊचुः—

सूर्योऽग्निः खं मरुद्गावः सोमः सन्ध्याहनी दिशः ।
कं कुः कालो धर्म इति ह्येते दैह्यस्य साक्षिणः ॥ १.४२ ॥

एतै-रधर्मो विज्ञातः स्थानं दण्डस्य युज्यते ।
सर्वे कर्मानुरोधेन दण्डमर्हन्ति कारिणः ॥ १.४३ ॥

सम्भवन्ति हि भद्राणि विपरीतानि चानघाः ।
कारिणां गुणसङ्गोऽस्ति देहवान् न ह्यकर्मकृत् ॥ १.४४ ॥

---

1. 32. தடுக்கப்பட்ட அந்த யமதூதர்கள் அவர்களைப் பார்த்து, "தர்மராஜனுடைய கட்டளையைத் தடுக்கின்ற நீங்கள் யார்?" எனக் கேட்டனர்.

விஷ்ணு தூதர்கள் கூறியது—

1. 38. நீங்கள் தர்மராஜனுடைய கட்டளையைச் செலுத்துபவர்கள் எனின் தர்மத்தின் தத்துவத்தையும் தர்மத்தின் லக்ஷணத்தையும் எங்களுக்குக் கூறுங்கள்.

1. 39. தண்டனை எங்ஙனம் விதிக்கப்படுகிறது? அதற்குரியதாய்க் கருதப்பட்ட இடம் எது? எச் செயலைச் செய்தவர்கள் தண்டனைக்குரியவர்கள்? எல்லோருமே தண்டிக்கத் தக்கவர்களா அல்லது மனிதர்களில் சிலர் மட்டுமா?

யமதூதர்கள் கூறியது:—

1. 42. சூரியன், அக்கினி, ஆகாயம், வாயு, பசுக்கள், சந்திரன், ஸந்தியை, இரவு பகல், திசைகள், நீர், பூமி, காலம், தர்மம் என்ற இவை உடல் படைத்தோர்க்குச் சாக்ஷிகள்,

1. 43. இவற்றால் அதருமம் உணரப்பட்டு தண்டனைக்கு இடமாயமைகின்றது. தீச் செயலைச் செய்கின்ற எல்லோருமே தண்டனைக் குரியவர்கள் தான்.

1. 44. குற்றமற்றவர்களே! செயல் புரிவோர்க்குக் குணங்களுடன் தொடர்பிருப்பதால் நன்மைகளும் தீமைகளும் வந்தே தீரும். உடல் படைத்தவன் செயல் புரியாமலிருக்கவும் இயலாது.

---

1. 42. कालः स्वयं धर्म इति ।

येन यावान् यथाऽधर्मो धर्मो वेह समीहितः।
स एव तत्फलं भुङ्क्ते तथा तावदमुत्र वै ॥ १.४५ ॥

एष प्रकृतिसंगेन पुरुषस्य विपर्ययः।
आसीत् स एव न चिरा-दीशसंगाद्विलीयते ॥ १.५५ ॥

अयं हि शीलसंपन्नः शीलवृत्त-गुणालयः।
धृतव्रतो मृदु-र्दान्तः सत्यवान् मन्त्रविच्छुचिः ॥ १.५६ ॥

गुर्वग्न्यतिथि-वृद्धानां शुश्रूषु-र्निरहंकृतः।
सर्वभूत-सुहृत् साधु-र्मितवा-गनसूयकः ॥ १.५७ ॥

एकदासौ वनं यातः पितृसन्देशकृद् द्विजः।
आदाय तत आवृत्तः फलपुष्प-समित्-कुशान् ॥ १.५८ ॥

ददर्श कामिनं कंचिच्छूद्रं सह भुजिष्यया।
पीत्वा च मधु मैरेयं मदाघूर्णित-नेत्रया ॥ १.५९ ॥

---

1. 45. எவனால் எவ்வாறு எத்தகைய அதருமமோ தருமமோ செய்யப்பட்டதோ, அவனால் அதற்குரிய பலன் அதற்கான வகையில் பின்னர் அனுபவிக்கவே படுகின்றது.

1. 55. இயற்கைப்பற்றால் ஜீவனுக்கு ஏற்பட்டது இழிவு ; இறைவனிடம் பற்றால் அது விரைவில் கரைந்து போகின்றது.

1. 56. இவன் நல்ல இயற்கைக்கும் நல்ல நடத்தைக்கும் நல்ல குணங்களுக்கும் இருப்பிடமாயிருந்தவன் ; விரதங்களை யனுஷ்டித்தவன் ; சாந்தனாகவும், புலன்களை யடக்கியவனாகவும் உண்மையே பேசுபவனாகவும், மந்திர மறிந்தவனாகவும், பரிசுத்த னாகவும் இருந்தவன்.

1. 57. குருவையும் அக்கினியையும் அதிதிகளையும் பெரியோர்களையும் வழிபடு பவனாகவும் அகங்காரமற்றவனாகவும் எல்லாப் பிராணிகளிடத்தும் அன்புடையவனாகவும் ஸாதுவாகவும் அதிகம் பேசாதவனாகவும் பொறாமையற்றவனாகவும் இருந்தவன்.

1. 58-59. ஒரு ஸமயம் இந்தப் பிராம்மணன் தந்தையின் கட்டளைக்குப் பணிந்து காடு சென்று பழம் புஷ்பம் ஸமித்து தர்ப்பை இவற்றைச் சேகரித்துக்கொண்டு திரும்பி வருகையில் சாராயத்தைக் குடித்து மதத்தால் சுழலும் கண்களையுடைய ஒரு வேசியை யும் அவளுடன் கூடிச் சுகித்துக் கொண்டிருந்த காமியான ஒரு சூத்திரனையும் கண்டான்.

---

1. 55. ஒ. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. —குறள்.

---

1. 58. पितृसन्देशकृच्छुचिः। பா. பே.

मत्तया विश्लथन्नीव्या व्यपेतं निरपत्रपम्।
क्रीडन्तमनु-गायन्तं-हसन्त-मनयान्तिके ॥ १.६० ॥

दृष्ट्वा तां कामलिप्तेन बाहुना परिरम्भिताम्।
जगाम हृच्छयवशं सहसैव विमोहितः ॥ १.६१ ॥

स्तम्भयन्नात्मनात्मानं यावत्सत्त्वं यथा श्रुतम्।
न शशाक समाधातुं मनो मदनवेपितम् ॥ १.६२ ॥

तन्निमित्त-स्मर-व्याज-ग्रहग्रस्तो विचेतनः।
तामेव मनसा ध्यायन् स्वधर्मा-द्विरराम ह ॥ १.६३ ॥

तामेव तोषयामास पित्र्येणार्थेन यावता।
ग्राम्यै-र्मनोरमैः कामैः प्रसीदेत यथा तथा ॥ १.६४ ॥

---

1. 60-61. மதியிழந்தவளும் சேலை நழுவியவளுமாகிய அவளுடன் கூடி வெட்க. மற்று விளையாடிக் கொண்டும் பாடிக் கொண்டும் இருந்த அவனையும் அவனருகில் காமத்திற்குகந்த கந்தம் பூசிய கைகளால் தழுவப்பெற்ற அவளையும் பார்த்து மோகித்து விரைவில் இவனும் காம வசப்பட்டான்.

1. 62. தன் கேள்வியின் பலத்தைக் கொண்டு தன்னாலானவரை அடக்க முயன்றும் காமனால் பீடிக்கப்பட்ட மனதை அடக்க அவனால் முடியவில்லை.

1. 63. அதன் காரணமாய் ஏற்பட்ட காமவேதனை என்ற பிசாசால் பீடிக்கப்பட்டு அறிவையிழந்து அவளையே மனதால் இடைவிடா தெண்ணுபவனாய் ஸ்வதர்மத்தினின்று ஓய்வடைந்தான்.

1. 64. இழிவான முறைகளில் மனதுக்கினிய காம நுகர்ச்சிகளால் எப்படியெல்லாம் அவள் பிரீதியடைவாளோ அப்படியெல்லாம் பிதாவின் சொத்து அவ்வளவையுங் கொண்டு அவளை மகிழ்வித்தான்.

---

1. 60-61. ஒ. 'பலவானிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபி கர்ஷதி'। இந்திரியக்கூட்டம் மிகுந்த பலமுடையது ; அது வித்வானையும் வலிய இழுத்துச் செல்லும்.

ஒ. யானைக்கும் அடி சருக்கும். ஆகையால் கெட்ட விஷயங்கள் கண்முன் வந்தாலும் பாராமல் திருஷ்டியைத் திருப்பிக் கொள்ளவேண்டும்.

1. 62. ஒ. அர்ஜுனன்:—விருப்பமில்லாதவனாயினும் எதனால் ஏவப்பட்டு பலாத்காரமாய்ப் புகுத்தப்பட்டவன்போல் இவன் பாவத்தைச் செய்கிறான் ?

பகவான்.—இது காமம், இது கோபம், ரஜோ குணத்தில் உதித்தது. பெருந்தீனி வேண்டுவது, கொடிய பாவத்தை விளைப்பது ; இவ்வுலகில் இதைச் சத்துருவாக அறிவாய்.
—கீ. 3. 36—37.

ஒ. யமனுக்கும் காமனுக்கும் விசாரிக்குமிடத்து மிகுந்த தாரதம்யம் உண்டு. யமன் பிரியமற்றவனைப் போலிருந்து இவனுக்கு நன்மையைச் செய்கிறான் ; காமன் பிரியமுள்ளவனைப்போலிருந்து தீமையைச் செய்கிறான்.
—சங்.

1. 63. இந்த வீழ்ச்சியிலிருந்து விழிப்படையுமுன் அஜாமிளனுடைய ஆயுளே முடிந்துவிட்டது. என்றாலும் பூர்வபுண்ணியம் சாகுந்தருவாயில் உதவக் காத்துக்கொண்டிருந்தது.

विप्रां स्वभार्या-मप्रौढां कुले महति लम्भिताम्।
विससर्जाचिरात् पापः स्वैरिण्यापाङ्ग-विद्धधीः ॥ १.६५ ॥

यतस्ततश्चोपनिन्ये न्यायतोऽन्यायतो धनम्।
बभारास्याः कुटुम्बिन्याः कुटुम्बं मन्दधी-रयम् ॥ १.६६ ॥

यदसौ शास्त्र-मुल्लङ्घ्य स्वैरचार्यविगर्हितः।
अवर्तत चिरं काल-मघायु-रशुचि-र्मलात् ॥ १.६७ ॥

तत एवं दण्डपाणेः सकाशं कृतकिल्बिषम्।
नेष्यामोऽकृतनिर्वेशं यत्र दण्डेन शुद्ध्यति ॥ १.६८ ॥

श्रीशुक उवाच—

एवं ते भगवद्दूता यमदूताभिभाषितम्।
उपधार्याथ तान् राजन् प्रत्याहु-र्नयकोविदाः ॥ २.१ ॥

विष्णुदूता ऊचुः—

सर्वेषामप्यघवता-मिदमेव सुनिष्कृतम्।
नाम-व्याहरणं विष्णो-र्यत-स्तद्विषया मतिः ॥ २.१० ॥

---

1. 65. அடக்குவாரற்ற அந்த விபசாரியின் கடைக்கண்ணுகிய அம்பினுல் மதியிழந்த அந்தப் பாவி உயர்ந்த விப்பிரகுலத்திலிருந்து மணந்து கொள்ளப்பட்டவளும் காமத்தை யுணராதவளுமாகிய தன் சொந்த மனைவியை விரைவில் கைவிட்டான்.

1. 66. புத்தி மழுங்கிய இவன் இங்குமங்குமலைந்து நியாயமாகவோ அநியாயமாகவோ பொருளைக் கொணர்ந்து குடும்பத்தைப் பெருக்கிய அந்த தாசியின் குடும்பத்தைக் காப்பாற்றினுன்.

1. 67. சாஸ்திர மரியாதையை மீறிப் பெரியோர்களால் வெறுக்கப்பட்டு இஷ்டப்படி நடப்பவனுய் இவன் நெடுங்காலம் வாழ்ந்ததால் பாவமே உருவெடுத்த ஆயுளையுடையவனுகவும் கூட்டுறவின் தோஷத்தால் அழுக்கடைந்தவனுகவும் இருக்கின்ருன்.

1. 68. பாவத்தைச் செய்தவனும் அதற்குப் பிராயச்சித்தத்தைத் தேடிக்கொள்ளாதவனும் ஆகிய இவனை யமதர்மனிடம் அழைத்துச் செல்லப் போகிறோம். அங்கு தண்டனையால் சுத்தியடைவான்.

ஸ்ரீ சுகர் கூறியது—

2. 1. அரசே! நியாயமறிந்த அந்த பகவத் பாரிஷதர்கள் யமதூதர்கள் கூறியதை நன்ருக மனதில் வாங்கிக்கொண்டு பின்னர் பதில்கூறத் தொடங்கினர்.

விஷ்ணு தூதர்கள் கூறியது—

2. 10. பாவஞ் செய்த எல்லோருக்குமே விஷ்ணுவின் நாமத்தை உச்சரித்தலாகிய இதுவே சிறந்த பிராயச்சித்தம். அதனுல் பகவானைப்பற்றிய எண்ணம் (அவனையறியாமல்) அவன் மனதில் ஏற்படுகின்றது.

---

1. 68. अकृतनिर्वेद्।    2. 1. प्रीत्याऽऽहुर्नयकोविदाः।    பா. பே.

नैकान्तिकं तद्धि कृतेऽपि निष्कृते मनः पुन-र्धावति चेदसत्पथे।
तत्कर्म-निर्हार-मभीप्सतां हरे-र्गुणानुवादः खलु सत्त्व-भावनः ॥ २.१२ ॥

अथैनं मापनयत कृताशेषाघ-निष्कृतम्।
यदसौ भगवन्नाम म्रियमाणः समग्रहीत् ॥ २.१३ ॥

सांकेत्यं पारिहास्यं वा स्तोभं हेलन-मेव वा।
वैकुण्ठ-नाम-ग्रहण-मशेषाघहरं विदुः ॥ २.१४ ॥

पतितः स्खलितो भग्नः सन्दष्ट-स्तप्त आहतः।
हरि-रित्यवशेनाह पुमान् नार्हति यातनाम् ॥ २.१५ ॥

---

2. 12. பிராயச்சித்தம் செய்த பின்னும் மனம் கெட்ட வழியில் செல்லுமாயின் அந்தப்பிராயச்சித்தம் முழுப்பயனளிப்பதாகாது. பாபச் செயல்களின் வாசனையையும் அறவே ஒழிக்க விரும்புவோர்க்கு ஹரியின் குணங்களைப் பேசுவதுதான் சித்த சுத்தியைத் தருவதாகும்.

2. 13. இவன் இறக்குந் தருவாயில் பகவானுடைய நாமத்தை நன்ருக உச்சரித்தமையால் எல்லாப் பாவங்களுக்கும் பிராயச்சித்தம் செய்தவனுகிவிட்டான் ; ஆகையால் இவனை நீங்கள் கொண்டு போகாதீர்கள்.

2. 14. வேறு எண்ணத்தைக் குறிப்பிடவோ, பரிகாசமாகவோ, பாட்டின் ஆலாபனத்திலோ, அவமதிப்பாகவோகூட பரமபாவனமான நாம உச்சாரணம் செய்யப் பட்டால் அது எல்லாப் பாவங்களையும் போக்கும் என்று பெரியோர் அறிகின்றனர்.

2. 15. விழுந்தாலும், இடறினுலும், முறிபட்டாலும், கடி பட்டாலும், எரிக்கப்பட்டாலும் அடிக்கப்பட்டாலும் தன் வயமின்றி 'ஹரி' என்று ஒரு புருஷன் கூறுவானுயின் அவன் யமதண்டனைக் குரியவனுகான்.

---

2. 12. ஒ. ச்ருதிஸ்ம்ருதிப்யாம் விஹிதா வ்ரதாதய: புனந்தி பாபம் ந லுனந்தி வாஸனும்। அனந்த-ஸேவா து நிக்ருந்ததி த்வயீ-மிதி ப்ரபோ த்வத் புருஷா பபாஷிரே ॥
—நாராயணீயம்.

2. 13. உ—ம் ஒருவன் குஷ்டரோகி. பிராணனை விட எண்ணினுன். எதிரே ஒருவர் அமிர்தம் கொண்டுவந்தார், 'என்ன ?' என்ருன். 'விஷம்' என்ருர். சாப்பிட்டு விட்டான் : வியாதி போய்விட்டது. 'ஏன் சாப்பிட்டீர், ?' 'ஏன் விஷமென்று சொன்னீர் ?' தெரியாமல் சாப்பிட்டாலும் வியாதியை அமிர்தம் போக்கினதுபோல் பகவந் நாமம்.

சொன்னல் பாவம் போகும். ஆனுல் சொல்லப் புண்ணியம் வேண்டும். 'ராம என்று சொல்' என ஒரு நோயாளியிடம் ஒரு நண்பர் கூறினுர். 'முடிந்தால் சொல்லமாட்டேனு ?' 'ராம என்று சொல்லேன்.' 'என் கழுத்தை அறுக்காதே ?' இத்தனை பேசுபவனுக்கு 'ராம' என்று சொல்ல வராதது அவன் செய்த பாவம்.

அஜாமிளனுக்கு இடையில் பாவ மேற்பட்டிருந்தாலும் பூர்வ புண்ணிய மிருந்ததால் பகவானுடைய நாமத்தைச் சொல்லும் பாக்கியம் கிட்டிற்று.

2. 14. பாண வேடிக்கை பார்க்கப்போய் பகவானைத் தரிசித்தாலும் புண்ணியமுண்டு.

2. 15. ஒ. துஞ்சும் போதழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லிலும் நன்றும்,
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணு என்னும் நாமம்.
—திருமங்கையாழ்வார்,

गुरूणां च लघूनां च गुरूणि च लघूनि च।
प्रायश्चित्तानि पापानां ज्ञात्वोक्तानि महर्षिभिः ॥ २.१६ ॥

तैस्तान्यघानि पूयन्ते तपो-दान-जपादिभिः।
नाधर्मजं तद्धृदयं तदपीशांघ्रि-सेवया ॥ २.१७ ॥

अज्ञाना-दथवा ज्ञाना-दुत्तमश्लोक-नाम यत्।
संकीर्तित-मघं पुंसो दहे-देधो यथानलः ॥ २.१८ ॥

यथागदं वीर्यतम-मुपयुक्तं यदृच्छया।
अजानतोऽप्यात्मगुणं कुर्यान्मन्त्रोऽप्युदाहृतः ॥ २.१९ ॥

श्रीशुक उवाच—

त एवं सुविनिर्णीय धर्मं भागवतं नृप।
तं याम्य-पाशान्निर्मुच्य विप्रं मृत्यो-रमूमुचन् ॥ २.२० ॥

---

2. 16. பெரிதும் சிறிதுமான பாவங்களுக்குப் பெரிதும் சிறிதுமான பிராயச்சித்தங்கள் தரமறிந்து மகரிஷிகளால் விதிக்கப்பட்டுள்ளன.

2. 17. தவம், தானம், ஜபம் முதலியவற்ருல் அந்தந்தப் பாவங்கள் நசிக்கின்றன; அதர்மத்தினுல் இருதயத்திலுண்டான வாசனை நசிப்பதில்லை; பகவானுடைய பாத ஸேவையால் பாவத்துடன்கூட வாசனையும் நசித்துப்போகின்றது.

2. 18. உத்தம சுலோகனுடைய நாம ஸங்கீர்த்தனம் அறிந்து செய்யப்பட்டாலும் அறியாமல் செய்யப்பட்டாலும், நெருப்பு விறகை எரிப்பதுபோல் ஒரு புருஷனுடைய பாவத்தை எரித்து விடும்.

2. 19. சிறந்த வீரியமுள்ள மருந்து தானுகக் கிடைக்கப்பெற்று அதன் பெருமையை யறியாமல் ஒருவன் உண்டாலும், அது எப்படி தன் குணத்தைக் காட்டுமோ, அப்படியே (பகவந்நாம) மந்திரமும் செய்யும் என்று பெரியோர்களால் கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீ சுகர் கூறியது—

2. 20. அரசே! அவர்கள் இங்ஙனம் பாகவத தருமத்தைச் செவ்வனே விளக்கிக் கூறி அந்தப் பிராம்மணனை யம பாசத்தினின்று விடுவித்து மரணத்தினின்றும் காத்தனர்.

---

2. 18. ஒ. குலந்தருஞ் செல்வந் தந்திடும் அடியார்படு துயராயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்றதாயினுமாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணுவென்னும்நாமம்.
—திருமங்கையாழ்வார்.

इति प्रत्युदिता याम्या दूता यात्वा यमान्तिके ।
यमराज्ञे यथा सर्व-माचचक्षु-ररिन्दम ॥ २.२१ ॥

द्विजः पाशाद्विनिर्मुक्तो गतभीः प्रकृतिं गतः ।
ववन्दे शिरसा विष्णोः किंकरान् दर्शनोत्सवः ॥ २.२२ ॥

तं विवक्षु-मभिप्रेत्य महापुरुष-किंकराः ।
सहसा पश्यतस्तस्य तत्रान्तर्दधिरेऽनघ ॥ २.२३ ॥

अजामिलोऽप्यथाकर्ण्य दूतानां यमकृष्णयोः ।
धर्मं भागवतं शुद्धं त्रैविद्यं च गुणाश्रयम् ॥ २.२४ ॥

भक्तिमान् भगवत्याशु माहात्म्य-श्रवणाद्धरेः ।
अनुतापो महानासीत् स्मरतोऽशुभमात्मनः ॥ २.२५ ॥

अहो मे परमं कष्ट-मभूदविजितात्मनः ।
येन विप्लावितं ब्रह्म वृषल्यां जायताऽऽत्मना ॥ २.२६ ॥

धिङ् मां विगर्हितं सद्भि-र्दुष्कृतं कुलकज्जलम् ।
हित्वा बालां सतीं योऽहं सुरापा-मसती-मगाम् ॥ २.२७ ॥

---

2. 21. சத்துருக்களை அடக்கியவரே ! இவ்விதம் மறுமொழி கூறப்பட்ட யம தூதர்கள் யமலோகம் சென்று யமதர்மராஜனிடம் எல்லாவற்றையும் உள்ளபடி தெரிவித்தனர்.

2. 22. யம பாசத்தினின்று விடுதலை பெற்ற பிராம்மணன் பயம் நீங்கியவனுய்த் தன்னியற்கை நிலையடைந்து விஷ்ணு தூதர்களைத் தரிசித்த பேருவகையால் அவர்களைச் சிரசால் வணங்கினன்.

2. 23. பாவமற்றவரே ! மஹா புருஷரின் அடியார்கள் அவன் எதோ சொல்ல விரும்பியதையறிந்து விரைவில் அவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அங்கேயே மறைந்தனர்.

2. 24-25 அப்போது அஜாமிளன் யமதூதர்களுக்கும் விஷ்ணு தூதர்களுக்குமிடை நிகழ்ந்த சம்பாஷணையை,-மூன்று வேதங்களில் கூறிய முக்குண வடிவான தர்மத்தைப் பற்றியதையும் சுத்தமான பாகவத தர்மத்தைப் பற்றியதையும்-கேட்டதை நினைந்து ஹரியின் மாஹாத்மிய சிரவணத்தால் விரைவில் பகவத் பக்தியுடையவனுயினன். தன்னுடைய கேட்டை நினைந்த அவனுக்கு மிகுந்த அனுதாபம் உண்டாயிற்று.

2. 26. தாழ்ந்த ஜாதி ஸ்திரீயிடம் தன்னையே மகனுய்ப்பெற்ற என்னுல் பிராம்மணப் பிறவி வீணுக்கப்பட்டது. ஐயோ ! தன்னடக்கமற்ற எனக்கு விளைந்த துன்பம் மிகப் பெரிது.

2. 27. இள வயதினளான பதிவிரதையைக் கைவிட்டுக் குடிகாரியான விபசாரியைச் சேர்ந்தவனும் குலத்தைக் கெடுக்கும் தீமை செய்தவனும் நல்லோர்களால் இகழப்பட்டவனுமாகிய என்னை வெறுக்கவேண்டும்.

---

பா. பே.

2. 22. दर्शनोत्सुकः ।

वृद्धावनाथौ पितरौ नान्यबन्धू तपस्विनौ ।
अहो मयाधुना त्यक्ता-वकृतज्ञेन नीचवत् ॥ २.२८ ॥

सोऽहं व्यक्तं पतिष्यामि नरके भृशदारुणे ।
धर्मघ्नाः कामिनो यत्र विन्दन्ति यमयातनाः ॥ २.२९ ॥

किमिदं स्वप्न आहो स्वित् साक्षाद् दृष्ट-मिहाद्भुतम् ।
क्व याता अद्य ते ये मां व्यकर्षन् पाशपाणयः ॥ २.३० ॥

अथ ते क्व गताः सिद्धा-श्चत्वार-श्चारुदर्शनाः ।
व्यमोचय-न्नीयमानं बद्ध्वा पाशै-रधो भुवः ॥ २.३१ ॥

अथापि मे दुर्भगस्य विबुधोत्तम-दर्शने ।
भवितव्यं मङ्गलेन येनात्मा मे प्रसीदति ॥ २.३२ ॥

अन्यथा म्रियमाणस्य नाशुचे-र्वृषलीपतेः ।
वैकुण्ठ-नामग्रहणं जिह्वा वक्तुमिहार्हति ॥ २.३३ ॥

---

2. 28. வயது சென்றவர்களும், கதியற்றவர்களும், வேறு உறவினரில்லாதவர் களும், தவத்தில் நிற்பவர்களுமாகிய தாய் தந்தையர் நன்றி கெட்டவனும் இழிவானவனு மாகிய என்னால் ஐயோ ! அப்போதே விடப்பட்டனர்.

2. 29. தர்மத்தைக் கொன்றவர்களும் காமத்தின் வயப்பட்டவர்களும் எங்கு சென்று யமதண்டனைகளுக் குள்ளாகின்றார்களோ அந்தக் கொடிய நரகத்தில் நான் விழுவது நிச்சயம்.

2. 30. இங்கு இப்பொழுது கண்ணாரக்கண்ட அற்புதம் கனவா? கயிற்றைக் கையில் கொண்டு என்னை இழுத்தவர்கள் இப்பொழுது எங்கு சென்றனர் ?

2. 31. பிறகு கயிற்றால் பிணித்துப் பூமிக்குக் கீழ் எங்கோ கொண்டு போகப்பட்ட என்னை விடுவித்தவர்களும் காட்சிக்கினியவர்களுமான ஸித்தர்கள் நால் வரும் எங்கு சென்றனர் ?

2. 32. பாவியாகிய எனக்கும் என் மனதைத் தெளிவிக்கும் தேவசிரேஷ்டர்களின் தரிசனம் கிட்டுவதற்கு ஏதோ பூர்வ புண்ணியம் இருந்திருக்க வேண்டும்.

2. 33. இல்லாவிடின் சாகுந் தருவாயிலுள்ளவனும் அசுத்தனும் இழிகுலப்பெண் ணின் பதியுமான என்னுடைய நாவானது மனதுக்கினிய பகவந் நாமத்தை உச்சரிக்க எங்ஙனம் தகுதியுடையதாகும் ?

---

2. 28. **அதுனா**—தத்க்ஷணமேவ ; அதவா அத்ர ஜன்மனி

2. 32, ஒ. மஜ்ஜன்மாந்தர-புண்யபாக-பலதஸ்-த்வம் சர்வ ஸர்வாந்தர :
திஷ்டஸ்யேவ ஹி தேன வா பசுபதே தே ரக்ஷணீயோ஽ஸ்ம்யஹம் ॥
—சிவானந்தலஹரீ.

क्व चाहं कितवः पापो ब्रह्मघ्नो निरपत्रपः ।
क्व च नारायणेत्येत-द्भगवन्नाम-मङ्गलम् ॥ २.३४ ॥

सोऽहं तथा यतिष्यामि यत-चित्तेन्द्रियानिलः ।
यथा न भूय आत्मान-मन्धे तमसि मज्जये ॥ २.३५ ॥

विमुच्य तमिमं बन्ध-मविद्या-काम-कर्मजम् ।
सर्वभूत-सुहृच्छान्तो मैत्रः करुण आत्मवान् ॥ २.३६ ॥

मोचये ग्रस्त-मात्मानं योषिन्मय्यात्ममायया ।
विक्रीडितो ययैवाहं क्रीडामृग इवाधमः ॥ २.३७ ॥

ममाहमिति देहादौ हित्वा मिथ्यार्थधी-र्मतिम् ।
धास्ये मनो भगवति शुद्धं तत्कीर्तनादिभिः ॥ २.३८ ॥

---

2. 34. சூதாடியும், பாவியும், பிராம்மண தர்மத்தைக் கொன்றவனும் வெட்கங் கெட்டவனுமான நான் எங்கே ? 'நாராயணு' என்னும் பரம மங்களமான பகவந்நாமம் எங்கே ?

2. 35. இனி எங்ஙனம் செய்தால் மீண்டும் ஆத்மாவைக் காரிருளில் முழுகாமல் காக்கலாமோ அங்ஙனம் மனத்தையும் இந்திரியங்களையும் பிராணனையும் அடக்க முயற்சி செய்யப் போகிறேன்.

2. 36-37. அறிவின்மையாலும் காமத்தாலும் அதைத் தொடர்ந்த கர்மத்தின் விளைவாலும் உண்டான இத்தளையைத் தகர்த்து, எவ்வுயிர்க்கும் நன்மையை நாடுபவனுகவும் சாந்தனுகவும் நண்பனுகவும் கருணை காட்டுபவனுகவும் தன்னடக்கம் உடையவனுகவும் இருந்து கொண்டு இதுவரை ஒரு விளையாட்டு மிருகத்தைப்போல் எந்தப்பெண் வடிவு கொண்ட ஆத்ம மாயையால் ஆட்டிவைக்கப் பட்டேனே எந்த மாயையால் விழுங் கப்பட்டேனே அந்த மாயையினின்று இழிந்தவனுகிய நான் என்னை விடுவித்துக் கொள்ளப் போகிறேன்.

2. 38. பொய்யை மெய்யெனக் கருதிக் கெட்ட நான் இனி உடலை நான் என்றும் என்னுடையது என்றும் எண்ணுவதை விட்டு அவனுடைய நாம கீர்த்தனுதிகளால் பரிசுத்தமான மனதைப் பகவானிடம் அர்ப்பணம் செய்யப்போகிறேன்.

---

2. 34. ஒரு பிராம்மணன் சாகுங்காலம். பகவந்நாமமே சொல்லமாட்டார். சிநேகிதர் ஒருவர் அவரைச் சொல்லவைக்க வேண்டுமென்று வந்தார். 'உம் பிள்ளைகள் எத்தனை பேர் ?' 'மூன்று பேர்,' இரண்டு பெயர் பகவந் நாமம் இல்லை. அவைகளைச் சொல்லி விட்டார், 'சுக்கு' 'மக்கு' என்று. மூன்ருவது கிருஷ்ணன். அவனை நண்பர் கூப்பிட்டு, இவன் யார் ?' என்ருர். 'இவன்தான் கடைசிப்பிள்ளை.' பிராணன் போய்விட்டது. அந்தப் பேரைச் சொல்லப் புண்ணியமில்லை.

2. 37. ஒ. முக்குண வடிவான என் மாயை தெய்வ பக்தி வாய்ந்தது. தாண்டுதற் கரியது. எவர்கள் என்னையே சரணடைகின்ருர்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டு கிருர்கள் : —கீ. 7-14.

2. 38. ஒ. தீயொழுக்கம் மிக்கவனுங்கூட வேருெரு நாட்டமின்றி என்னைப்போற்று வானெனில் அவன் நன்னடக்கையுள்ளவன் என்றே கருதற்குரியவன் ; அவன் நன்ருக நிச்ச யித்தவன் ஆதலின் விரைவில் தரும சிந்தையுடையவனுகின்ருன், அழியாத சாந்தியை யடைகின்ருன். குந்தீ புத்திரனே ! என்னுடைய பக்தன் நாசமடையமாட்டான் என்று உண்மையில் உணர்ந்து உலகுக்குரைப்பாய். —கீ. 9 : 30-31.

ஒ. பிராயச்சித்தம் அவசியமில்லாத 99 புண்ணியசாலிகளைவிடப் பிராயச் சித்தத்தால் புனிதனை ஒரு பாவியைக்கண்டு வானுலக வாசிகள் அதிகமான மகிழ்ச்சியடை கின்றனர். (இழந்த தனத்தை மீண்டும் பெற்றதுபோல்). —இயேசு நாதர்

श्रीशुक उवाच--

इति जात-सुनिर्वेदः क्षणसंगेन साधुषु।
गंगाद्वार-मुपेयाय मुक्त-सर्वानुबन्धनः ॥ २.३९ ॥

स तस्मिन् देवसदन आसीनो योगमाश्रितः।
प्रत्याहृतेन्द्रियग्रामो युयोज मन आत्मनि ॥ २.४० ॥

ततो गुणेभ्य आत्मानं वियुज्यात्म-समाधिना।
युयुजे भगवद्धाम्नि ब्रह्मण्यनुभवात्मनि ॥ २.४१ ॥

यर्ह्युपारतधी-स्तस्मि-न्नद्राक्षीत् पुरुषान् पुरः।
उपलभ्योपलब्धान् प्राग् ववन्दे शिरसा द्विजः ॥ २.४२ ॥

हित्वा कलेवरं तीर्थे गंगायां दर्शनादनु।
सद्यः स्वरूपं जगृहे भगवत्-पार्श्व-वर्तिनाम् ॥ २.४३ ॥

साकं विहायसा विप्रो महापुरुष-किंकरैः।
हैमं विमान-मारुह्य ययौ यत्र श्रियःपतिः ॥ २.४४ ॥

एवं स विप्लावित-सर्वधर्मा दास्याः पतिः पतितो गर्ह्य-कर्मणा।
निपात्यमानो निरये हतव्रतः सद्यो विमुक्तो भगवन्नाम गृह्णन् ॥ २.४५ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

2. 39. இங்ஙனம் அவன் ஒருகண நேரம் ஸாது ஸங்கம் கிட்டியதால் திட வைராக்கியம் உண்டாகியவனாகி, எல்லாத் தளைகளினின்றும் விடுபட்டு கங்காத் துவாரத்தையடைந்தான்.

2. 40. அங்கு தேவாலயத்திலமர்ந்து, யோகத்தைக் கைக்கொண்டு, இந்திரியக் கூட்டத்தை வசப்படுத்தி, மனதைப் பரமாத்மாவிடம் வைத்தான்.

2. 41. பிறகு ஆத்ம சிந்தனையால் புத்தியை முக்குணமயமான விஷயங்களினின்று பிரித்து தன்னுள்ளேயே பிரம்மானுபவ ரூபமாய் விளங்கும் பகவத் ஸ்வரூபத்தில் லயிக்கச் செய்தான்.

2. 42. எப்போது புத்தி இங்ஙனம் நிலைபெற்றதோ அப்போது முன்கண்ட புருஷர்களைத் தன் முன்பு காணப்பெற்றான். காணப்பெற்று அந்தப் பிராம்மணன் அவர்களைத் தலையால் வணங்கினான்.

2. 43. அந்த தரிசனத்திற்குப் பிறகு உடலைப் புனிதமான கங்கையில் விட்டுப் பகவானுடைய பக்கத்திலிருப்போரின் ஸ்வரூபத்தை அப்போதே யடைந்தான்.

2. 44. பரம புருஷனுடைய அடியார்களுடன் அந்தப் பிராம்மணன் ஆகாய மார்க்கமாகத் தங்க விமானத்திலேறி ஸ்ரீகாந்தனுடைய ஸ்தானமாகிய வைகுண்டத்தை யடைந்தான்.

2. 45. எல்லா தர்மங்களையும் கை விட்டவனும், தாசியின் பதியும், இழி தொழிலால் வீழ்ச்சியுற்றவனும், விரதங்களைக் கொன்றவனும், நரகத்தை நோக்கி உந்தப்பட்டவனுமாகிய அவன் பகவந் நாமத்தை உச்சரித்ததால் விரைவில் முக்தனானான்.

नातः परं कर्मनिबन्धकृन्तनं मुमुक्षतां तीर्थपदानुकीर्तनात् ।
न यत्पुनः कर्मसु सज्जते मनो रजस्तमोभ्यां कलिलं ततोऽन्यथा ॥ २.४६ ॥

य एवं परमं गुह्य-मितिहास-मघापहम् ।
शृणुयाच्छ्रद्धया युक्तो यश्च भक्त्यानुकीर्तयेत् ॥ २.४७ ॥

न वै स नरकं याति नेक्षितो यमकिंकरैः ।
यद्यप्यमङ्गलो मर्त्यो विष्णुलोके महीयते ॥ २.४८ ॥

म्रियमाणो हरेर्नाम गृणन् पुत्रोपचारितम् ।
अजामिलोप्यगाद्धाम किं पुनः श्रद्धया गृणन् ॥ २.४९ ॥

राजोवाच—

निशम्य देवः स्वभटोपवर्णितं प्रत्याह किं तान् प्रति धर्मराजः ॥ ३.१ ॥

श्रीशुक उवाच—

भगवत्पुरुषै राजन् याम्याः प्रतिहतोद्यमाः ।
पतिं विज्ञापयामासु-र्यमं संयमनीपतिम् ॥ ३.३ ॥

---

2. 46. முக்தியை விரும்புவோரின் கர்மத்தளையைப் போக்குவதற்கு பகவந்நாம கீர்த்தனத்தினும் சிறந்தது வேறொன்றும் கிடையாது. அதனுல் மீண்டும் ரஜோகுண தமோ குணங்களால் கலங்கிய மனம் கருமத்தில் பற்றடையாமல் பரிசுத்தமாகிறது. மற்ற எதனுலும் அப்படியாவதில்லை.

2. 47-48 இங்ஙனம் பரம ரகசியமானதும், பாவத்தைப் போக்குவதுமான இந்தச் சரித்திரத்தை எவன் சிரத்தையுடன் கேட்பானே பக்தியுடன் பிறர்க்கெடுத்துரைப்பானே அம்மனிதன் பாவியாயினும் ஒருகாலும் நரகம் புகான்; யமகிங்கரர்களால் பார்க்கவும் படான்; விஷ்ணு லோகத்தில் போற்றப்படுவான்.

2. 49, புத்திரனுக்குப் பெயராயமைந்த ஹரிநாமத்தைச் சாகுந்தருவாயில் உச்சரித்து அஜாமிளனும் பரமபதமடைந்தான் எனின், சிரத்தையுடன் நாமகீர்த்தனம் செய்பவர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமா?

அரசன் கூறியது—

3, 1. (அஜாமிளனிடமிருந்து திரும்பிய) தனது பணியாட்கள் கூறியதைக்கேட்டு யமதர்மராஜன் அவர்களுக்கு என்ன பதில் கூறினர்?

ஸ்ரீ சுகர் கூறியது—

3. 3. அரசே! பகவத் பாரிஷதர்களால் தங்கள் முயற்சி தடுக்கப்பெற்ற யமபடர்கள் ஸம்யமனீபுரத்தின் பதியும் தங்கள் நாயகனுமான யமதர்மராஜனிடம் பின்வருமாறு விஜ்ஞாபனம் செய்து கொண்டனர்.

---

2. 47. य इमं। 2. 48. निष्कृतो यमकिङ्करैः ।
2. 49. गृणन् पुत्रप्रचारितम् । பா. பே.

यमदूता ऊचुः—

कति सन्तीह शास्तारो जीवलोकस्य वै प्रभो ।
त्रैविध्यं कुर्वतः कर्म फलाभिव्यक्ति-हेतवः ॥ ३.४ ॥

अतस्त्वमेको भूतानां सेश्वराणा-मधीश्वरः ।
शास्ता दण्डधरो नृणां शुभाशुभ-विवेचनः ॥ ३.७ ॥

तस्य ते विहतो दण्डो न लोके वर्ततेऽधुना ।
चतुर्भि-रद्भुतैः सिद्धै-राज्ञा ते विप्रलम्भिता ॥ ३.८ ॥

नीयमानं तवादेशा-दस्माभि-र्यातनागृहान् ।
व्यमोचयन् पातकिनं छित्त्वा पाशान् प्रसह्य ते ॥ ३.९ ॥

तांस्ते वेदितु-मिच्छामो यदि नो मन्यसे क्षमम् ।
नारायणेत्यभिहिते मा भैरित्याययु-र्द्रुतम् ॥ ३.१० ॥

---

யமதூதர்கள் கூறியது—

3. 4. பிரபுவே! (புண்ணியம், பாவம், இவைகளின் கலப்பு என்ற) மூன்று வகையான கர்மங்களைச் செய்யும் இந்த ஜீவலோகத்திற்குக் கர்ம பலன்களைக் காட்டித்தரும் காரண புருஷர்களாயும் சிக்ஷிக்கும் அதிகாரிகளாயும் எத்தனை பேர் இருக்கிறார்கள்?

3. 7. தாங்கள் ஒருவரேயன்றோ ஜீவராசிகளுக்கும் அவர்களை ஆள்பவர்களுக்கும் அதீசுவரர்? மனிதர்களின் புண்ணியத்தையும் பாவத்தையும் பகுத்துணர்ந்து சிக்ஷிப்பவரும் தண்டிப்பவரும் தாங்களே யன்றோ?

3. 8. அப்படிப்பட்ட தங்களுடைய கட்டளை நிராகரிக்கப்பட்டு இப்போது உலகில் செல்லவில்லை. அத்புதமான நான்கு ஸித்தர்களால் தங்களுடைய கட்டளை தடுக்கப்பட்டது.

3. 9. தங்கள் கட்டளைப்படி யாதனா கிருஹத்திற்குக் கடத்திவரப்பட்ட பாவியை அவர்கள் பலாத்காரமாய்க் கட்டவிழ்த்து விடுவித்து விட்டனர்.

3. 10. 'நாராயணா' என்று சொல்லப்பட்டவுடன் 'பயப்படாதே!' என்று கூறிக்கொண்டு விரைவில் அவர்கள் வந்து விட்டனர். அவர்கள் யாவர் என நாங்கள் அறியக்கூடும் என்று தாங்கள் கருதினால் அவர்களைப்பற்றி தங்களிடமிருந்து அறிய விரும்புகிறோம்.

**यम उवाच—**

**परो मदन्यो जगत-स्तस्थुषश्च ओतं प्रोतं पटवद्यत्र विश्वं ।**
**यदंशतोऽस्य स्थिति-जन्म-नाशा नस्योतवद् यस्य वशे च लोकः ॥ ३.१२ ॥**

**धर्मं तु साक्षाद्भगवत्प्रणीतं न वै विदु-र्ऋषयो नापि देवाः ।**
**न सिद्धमुख्या असुरा मनुष्याः कुतश्च विद्याधर-चारणादयः ॥ ३.१९ ॥**

**स्वयंभू-र्नारदः शंभुः कुमारः कपिलो मनुः ।**
**प्रह्लादो जनको भीष्मो बलि-र्वैयासकि-र्वयम् ॥ ३.२० ॥**

**द्वादशैते विजानीमो धर्मं भागवतं भटाः ।**
**गुह्यं विशुद्धं दुर्बोधं यं ज्ञात्वामृत-मश्नुते ॥ ३.२१ ॥**

**एतावानेव लोकेऽस्मिन् पुंसां धर्मः परः स्मृतः ।**
**भक्तियोगो भगवति तन्नामग्रहणादिभिः ॥ ३.२२ ॥**

---

யமன் கூறியது—

3. 12. எனக்கும் மேலான ஒருவன் உண்டு. அவனிடம் இச்சராசரப் பிரபஞ்ச மனைத்தும் வஸ்திரத்தில் குறுக்கும் நெடுக்குமாகச் செல்லும் இழைகளைப்போல் கோக் கப்பட்டுள்ளது. அவனுடைய அம்சத்தில் தோன்றியவர்களாலேயே இவ்வுலகின் சிருஷ்டி ஸ்திதியும் லயமும் ஏற்படுகின்றன. மூக்கணாங் கயிற்றால் வசப்படுத்தப்பட்ட காளையைப்போல் இவ்வுலகு அவன் வயப்பட்டே இயங்குகிறது.

3. 19. தருமம் நேரில் பகவானால் ஏற்படுத்தப்பட்டது. அதை ரிஷிகளும் அறி யார்கள், தேவர்களும் அறியார்கள். ஸித்தர் முதலியோரும் அறியார்கள், வித்யாதர சார ணர் முதலியவர்களோ அசுரர்களோ, மனிதர்களோ எங்ஙனம் அறிவர் ?

3. 20-21. தூதுவர்களே! பிரம்மா, நாரதர், மகாதேவர், ஸனத்குமாரர். கபிலர், மனு, பிரஹ்லாதர், ஜனகர், பீஷ்மர், பலி, சுகர், நாம் (யமன்)—நாங்கள் பன்னிருவர் தாம் தருமத்தை உணர்வோம். எதை யறிந்தால் சாகா நிலை எய்தப்படுமோ அந்தப் பரிசுத்தமான தருமம் ரகசியமானது, எளிதில் அறிய முடியாதது.

3. 22. அவனுடைய நாமோச்சாரணம் முதலியவற்றால் பகவானிடம் செய்யப்படும் பக்தி யோகமாகிய இதுவே இவ்வுலகில் மனிதர்க்குப் பரம தருமமாகக் கூறப்பட் டுள்ளது.

---

3. 12. ஒ. எந்தப் பரமாத்மாவுக்கு யமனும் ஊறுகாய் போன்றவனோ அந்தப் பரமாத் மாவை எவன் அறிவான் ? —கட. உப. 2-2-25.

ஒ. (பீஷாஸ்மாத் வாத : பவதே) அவனிடம் பயத்தாலேயே காற்றும் வீசுகிறது. —தை. உப.

नामोच्चारण-माहात्म्यं हरेः पश्यत पुत्रकाः ।
अजामिलोऽपि येनैव मृत्युपाशादमुच्यत ॥ ३.२३ ॥

ते देवसिद्ध-परिगीत-पवित्रगाथा ये साधवः समदृशो भगवत्प्रपन्नाः ।
तान्नोपसीदत हरे-र्गदयाभिगुप्तान् नैषां वयं न च वयः प्रभवाम दण्डे
॥ ३.२७ ॥

श्रीशुक उवाच--

तस्मात् संकीर्तनं विष्णो-र्जगन्मङ्गल-मंहसाम् ।
महतामपि कौरव्य विद्ध्यैकान्तिक-निष्कृतिम् ॥ ३.३१ ॥

कृष्णाङ्घ्रि-पद्म-मधुलिण् न पुन-र्विसृष्ट-मायागुणेषु रमते वृजिनावहेषु ।
अन्यस्तु कामहत आत्मरजः प्रमार्ष्टु-
मीहेत कर्म यत एव रजः पुनः स्यात् ॥ ३.३३ ॥

---

3. 23. புதல்வர்காள்! ஹரிநாமோச்சாரண மாஹாத்மியத்தைப் பார்த்தீர்களா? அஜாமிளனுமல்லவா யமபாசத்தினின்று விடுபட்டான்!

3. 27. தேவர்களும் ஸித்தர்களும் புகழ்பாடும் பவித்திரமான சரித்திரத்தை யுடையவர்கள் ஸாதுக்களும் ஸமதர்சிகளும் பகவத் பக்தர்களும். அவர்கள் ஹரியின் கதாயுதத்தால் ரக்ஷிக்கப்படுகின்றனர். நீங்கள் அவர்களை அணுகாதீர்கள். அவர்களைச் சிக்ஷிக்க நாம் சக்தர்களல்லோம். காலமும் சக்தி யுடையதன்று.

ஸ்ரீ சுகர் கூறியது—

3. 31. குருவம்சத்தோனே! ஜகன்மங்களமான விஷ்ணுவின் கீர்த்தனம் மஹா பாதகங்களுக்குங் கூட முடிவான பிராயச்சித்தம் என்று அறிந்து கொள்வாய்.

3. 33. ஸ்ரீ கிருஷ்ண சரணாரவிந்தங்களில் பெருகும் மதுவைப் பருகியவன் பாவத்தைப் பெருக்கும் மாயா குணங்களைவிட்டு விலகிய பின் மீண்டும் அதில் களிப்புறான். அங்ஙனம் பக்தியில்லாதவனோ எனின், காமத்தினால் கொல்லப்பட்டவனாய்த் தனது மனத்தழுக்கைக் கழுவிக் கொள்ளப் பிராயச்சித்த கருமத்தைத் தேடுவான். அதினின்று மீண்டும் அழுக்கே உண்டாகும்.

---

3. 27. வய:—காலோ ஹி ந ப்ரபவதி।

3. 33. ஓ. தவாம்ருதஸ்யந்தினி பாதபங்கஜே
நிவேசிதாத்மா கதமன்ய-திச்சதி।
ஸ்திதேऽரவிந்தே மகரந்த-நிர்ப்பரே
மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥

—ஸ்தோத்ரரத்னம்—ஆளவந்தார்.

**इत्थं स्व-भर्तृ-गदितं भगवन्महित्वं संस्मृत्य विस्मितधियो यमकिंकरास्ते ।**
**नैवाच्युताश्रयजनं प्रतिशंकमाना द्रष्टुं च बिभ्यति ततः प्रभृति**
**स्म राजन् ॥ ३.३४ ॥**

**इतिहास-मिमं गुह्यं भगवान् कुंभसंभवः ।**
**कथयामास मलय आसीनो हरिमर्चयन् ॥ ३.३५ ॥**

---

3. 34. அரசே! இங்ஙனம் தமது நாயகனை யமதர்ம ராஜனால் உபதேசிக்கப்பட்ட பகவானுடைய மகிமையை நினைத்து நினைத்து ஆச்சரியமடைந்தவர்களாய் அந்த யம கிங்கரர்கள் அச்சுதனுடைய அடியார்களிடமிருந்து தமக்கு என்ன நேர்ந்து விடுமோ என்று சங்கை கொண்டவர்களாய் மட்டுமல்லாமல் அவர்களைப் பார்ப்பதற்கும் அன்று முதல் அஞ்சுகின்றனர்.

3. 35. இந்த ரகசியமான சரித்திரத்தை அகஸ்திய பகவான் மலய பர்வதத்தில் ஹரியைப் பூஜித்துக் கொண்டிருக்கையில் எனக்குக் கூறியருளினார்.

இங்ஙனம் பன்னிரண்டாவது இதழாகிய அஜாமிளோபாக்கியானம்

முற்றும்.

## ॥ दक्षवंशः ॥ १३ ॥

राजोवाच—

देवासुर-नृणां सर्गो नागानां मृगपक्षिणाम् ।
सामासिकस्त्वया प्रोक्तो यस्तु स्वायंभुवेन्तरे ॥ ४.१ ॥

तस्यैव व्यासमिच्छामि ज्ञातुं ते भगवन् यथा ।
अनुसर्गं यथा शक्त्या ससर्ज भगवान् परः ॥ ४.२ ॥

श्रीशुक उवाच—

यथा ससर्ज भूतानि दक्षो दुहितृ-वत्सलः ।
रेतसा मनसा चैव तन्ममावहितः शृणु ॥ ४.१८ ॥

मनसैवासृजत् पूर्वं प्रजापति-रिमाः प्रजाः ।
देवासुर-मनुष्यादीन् नभस्थल-जलौकसः ॥ ४.१९ ॥

---

## 13. தக்ஷ வம்சம்

அரசன் கூறியது—

4. 1-2. பகவத்ஸ்வரூபியான குருவே! ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் தேவர்களும் அசுரர்களும் மனிதர்களும், நாகங்களும் மிருகங்களும் பக்ஷிகளும் எங்ஙனம் சிருஷ்டிக்கப் பட்டனரென்று உம்மால் பொதுப்படக் கூறப்பட்டது. அதையே பாகுபடுத்திச் சற்று விளக்கமாகவும், பகவான் பரம புருஷன்எந்த சக்தியைக் கொண்டு எதெதை எவ்வாறு தொடர்ந்து சிருஷ்டித்தார் என்பதையும் அறிய விரும்புகிறேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 18. (பிராசீனபர்ஹிஸ்ஸின் புத்திரர்கள் பத்துப்பேர் பிரசேதஸர்கள். அவர்களுக்கு ஒரு மனைவியிடம் தோன்றிய புத்திரன் பிராசேதஸன் முன் தக்ஷப் பிரஜாபதியாக இருந்து, மீண்டும் அரசனாக ஜனித்தவன். அவன் மூலம் தோன்றிய பிரஜைகள் மூவ்வுலகத்திலும் பரவினர்). தக்ஷன் தன் பெண்களிடம் மிகுந்த பிரியம் வைத்தவன். அவன் வீரியத்தாலும் மனதாலும் ஜீவராசிகளை எங்ஙனம் சிருஷ்டித்தானோ அதைச் சாவதானமாய் என்னிடம் கேட்பாயாக!

4. 19. தக்ஷப் பிரஜாபதியானவர் ஆகாயத்திலும் பூமியிலும் ஜலத்திலும் வாழும் பிராணிகளையும் தேவர்களையும் அசுரர்களையும் மனிதர்களையும் ஆதியில் மனத்தினாலேயே சிருஷ்டித்தார்.

---

3. 35. इतिहासमिमं मह्यं । பா. பே.

तमबृंहित-मालोक्य प्रजासर्गं प्रजापतिः ।
विन्ध्यपादानुपव्रज्य सोऽचरद् दुष्करं तपः ॥ ४.२० ॥

श्रीभगवानुवाच—

प्राचेतस महाभाग संसिद्ध-स्तपसा भवान् ।
यच्छ्रद्धया मत्परया मयि भावं परं गतः ॥ ४.४३ ॥

तपो मे हृदयं ब्रह्मन् तनुर्विद्या क्रियाऽऽकृतिः ।
अंगानि क्रतवो जाता धर्म आत्माऽऽसवः सुराः ॥ ४.४६ ॥

एषा पंचजनस्यांग दुहिता वै प्रजापतेः ।
असिक्नी नाम पत्नीत्वे प्रजेश प्रतिगृह्यताम् ॥ ४.५१ ॥

त्वत्तोऽधस्तात् प्रजाः सर्वा मिथुनीभूय मायया ।
मदीयया भविष्यन्ति हरिष्यन्ति च मे बलिम् ॥ ४.५३ ॥

श्रीशुक उवाच—

तस्यां स पांचजन्यां वै विष्णुमायोपबृंहितः ।
हर्यश्वसंज्ञानयुतं पुत्रा-नजनय-द्विभुः ॥ ५.१ ॥

---

4, 20. பிரஜைகளின் சிருஷ்டி பெருகாதத்தைக்கண்டு அவர் விந்திய மலைச்சாரலில் அரிய தவமிருந்தார்.

ஸ்ரீ பகவான் கூறியது—

4. 43. பெருமை மிக்க பிராசேதஸரே! நீர் என்னிடம் பரம பக்தியுடனும் சிரத்தையுடனும் தவத்திலாழ்ந்து நின்றதால் ஸித்தி பெற்றவராகின்றீர்.

4. 46. தக்ஷரே! தவம் எனது இருதயம், வித்தை சரீரம், கிரியைகள் வடிவம், கிரதுக்கள் அங்கங்கள், தர்மம் மனது, பிராணன்கள் தேவர்கள்.

4. 51. எனக்குப் பிரியமானவரே! இதோ பாரும்! இப்பெண் பஞ்சஜனன் எனும் பிரஜாபதியின் குமாரி. அஸிக்னி என்பது இவளுடைய பெயர். பிரஜைகளுக் கதிபதியே! இவள் உம்மால் பத்தினியாக ஏற்றுக்கொள்ளப்படவேண்டும்.

4. 53. உனக்குப்பின் எல்லாப் பிரஜைகளும் என் மாயா வசத்தால் ஸ்திரீ புருஷ ஸம்போகத்தை நாடி உண்டாகப் போகின்றனர். என்னை ஆராதிக்கவும் போகின்றனர்.

ஸ்ரீ சுகர் கூறியது—

5. 1. விஷ்ணு மாயையால் ஏவப்பட்டு பாஞ்சஜனியிடம் அந்த தக்ஷப்பிரஜாபதி ஹர்யச்வர் எனப் பெயர் கொண்ட பதினாயிரம் புத்திரர்களை உண்டாக்கினர்.

---

4. 53. त्वत्तो हि वंशजाः सर्वा । பா. பே.

तेपिरे तप एवोग्रं पित्रादेशेन यन्त्रिताः ।
प्रजा-विवृद्धये यत्तान् देवर्षि-स्तान् ददर्श ह ॥ ५.५ ॥

उवाच चाथ हर्यश्वाः कथं स्रक्ष्यथ वै प्रजाः ।
अदृष्ट्वान्तं भुवो यूयं बालिशा बत पालकाः ॥ ५.६ ॥

कथं स्वपितुरादेश-मविद्वांसो विपश्चितः ।
अनुरूप-मविज्ञाय अहो सर्गं करिष्यथ ॥ ५.९ ॥

तन्निशम्याथ हर्यश्वा औत्पत्तिकमनीषया ।
वाचः कूटं तु देवर्षेः स्वयं विममृशु-र्धिया ॥ ५.१० ॥

भूक्षेत्रं जीवसंज्ञं यदनादि निजबन्धनम् ।
अदृष्ट्वा तस्य निर्वाणं किमसत्कर्मभि-र्भवेत् ॥ ५.११ ॥

शास्त्रस्य पितुरादेशं यो न वेद निवर्तकम् ।
कथं तदनुरूपाय गुण-विश्रम्भ्युपक्रमेत् ॥ ५.२० ॥

---

5. 5. பிதாவின் கட்டளையால் ஏவப்பட்டு அவர்கள் கடுமையான தவத்தைச் செய்தனர். பிரஜாவிருத்திக்கு முயலும் அவர்களை தேவரிஷியான நாரதர் கண்ணுற்றார்.

5. 6. "ஹர்யச்வர்களே! பிரஜைகளைப் பாலிப்பவராயினும் பூமியின் முடிவைக் காணமல் ஒன்றுமறியாச் சிறுவர்களாகிய நீங்கள் எங்ஙனம் சிருஷ்டித் தொழிலில் புகுகின்றீர்கள்? அது வருந்தத்தக்கது" என அவர் கூறினார்.

5. 9. "ஸர்வஜ்ஞரான பிதாவினுடைய கட்டளையைத் தனக்கு அனுகூலமானதென அறிந்து கொள்ளாமல் எங்ஙனம் சிருஷ்டியைச் செய்யப் போகிறீர்கள்? இது ஆச்சரியம்."

5. 10. ஹர்யச்வர்கள் அவர்களுடைய வார்த்தையைக் கேட்டுப் பிறவியிலேயே பெற்றிருந்த கூர்மையான புத்தி சக்தியால் அந்த தேவரிஷியின் வார்த்தையில் மறைந்திருந்த கருத்தைத் தாங்களாகவே ஆலோசிக்கத் தொடங்கினர்.

5. 11. பூமி என்றது ஜீவன் எனப் பெயர் கொண்ட க்ஷேத்திரம். அதுவே அநாதியான தனது பந்தத்திற்குக் காரணம். அதனுடைய முடிவைக் காணமல் நிலையற்ற கர்மங்களால் ஆவது என்ன?

5. 20. சாஸ்திரமே உத்தம பிதா. அவருடைய நிவிருத்தி மார்க்கமான கட்டளையை எவன் தனக்கனுகூலமானதென அறிந்து கொள்ளவில்லையோ அவன் குணமயமான பிரவிருத்தியில் விசுவாஸம் வைத்து எங்ஙனம் முயற்சிக்கலாம்?

---

5. 5. तेपुस्ते । 5. 6. उवाच तान् स । பா. பே.
5. 11. किं नु स्यात्कर्म ।

इति व्यवसिता राजन् हर्यश्वा एकचेतसः ।
प्रययु-स्तं परिक्रम्य पन्थान-मनिवर्तनम् ॥ ५.२१ ॥

नाशं निशम्य पुत्राणां नारदाच्छील-शालिनाम् ।
अन्वतप्यत कः शोचन् सुप्रजास्त्वं शुचां पदम् ॥ ५.२३ ॥

स भूयः पांचजन्याया-मजेन परिसान्त्वितः ।
पुत्रा-नजनयद् दक्षः शबलाश्वान् सहस्रशः ॥ ५.२४ ॥

तेऽपि पित्रा समादिष्टाः प्रजा सर्गे धृतव्रताः ।
नारायणसरो जग्मु-र्यत्र सिद्धाः स्वपूर्वजाः ॥ ५.२५ ॥

तेऽपि चान्वगमन् मार्गं भ्रातॄणामेव मारिष ।
सध्रीचीनं प्रतीचीनं परस्यानुपथं गताः ।
नाद्यापि ते निवर्तन्ते पश्चिमा यामिनीरिव ॥ ५.३३ ॥

एतस्मिन् काल उत्पातान् बहून् पश्यन् प्रजापतिः ।
पूर्ववन्नारदकृतं पुत्रनाश-मुपाश्रृणोत् ॥ ५.३४ ॥

---

5. 21. அரசே! இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு ஹர்யச்வர்கள் ஒரு மனத்தினராய் அவரைப் பிரதக்ஷிணம் செய்து திரும்ப வருதலில்லாத மோக்ஷ மார்க்கத்தை யடைந்தனர்.

5. 23. குணவான்களான புத்திரர்களின் அழிவை நாரதரிடமிருந்து கேட்டு தக்ஷப்பிரஜாபதி ஸத்புத்திரர்கள் துன்பத்திற்குக் காரணம் என்று எண்ணி வருந்தினுர்.

5. 24. பிரம்மாவால் தேற்றுவிக்கப்பட்டு மீண்டும் பாஞ்சஜனியிடம் சபளாச்வர் என்ற ஆயிரம் புத்திரர்களை தக்ஷர் உண்டாக்கினுர்.

5. 25. அவர்களும் தந்தையால் ஏவப்பட்டுப் பிரஜைகளைச் சிருஷ்டிப்பதில் திடமான எண்ணமுடையவர்களாய் எங்கு தங்கள் தமயன்மார்கள் சித்தியடைந்தனரோ அந்த நாராயணஸரஸிற்கே சென்றனர்.

5. 33. சித்தம் அழகியவரே! அவர்களும் (நாரதருடைய உபதேசத்தைப் பெற்று) தங்கள் தமயன்மார்கள் சென்ற வழியையே பின்பற்றினர். ஒழுங்கானதும் உள் நோக்கால் அடைதற்குரியதுமான பிரம்ம மார்க்கத்தில் சென்ற அவர்கள் கடந்து போன இரவுகளைப்போல் இதுவரை திரும்பி வரவில்லை.

5. 34. பிரஜாபதியோ (அவர்கள் மறைந்து போன) அக்காலத்தில் பல துச்சகுனங்களைக் கண்டு முன் போலவே நாரதர் செயலால் புத்திரர்கள் அழிவுற்றதைக் கேள்விப்பட்டார்.

---

5. 24. ततः स पांच । பா. பே.

चुक्रोध नारदायासौ पुत्रशोक-विमूर्च्छितः।
देवर्षि-मुपलभ्याह रोषाद्विस्फुरिताधरः ॥ ५.३५ ॥

दक्ष उवाच—

अहो असाधो साधूनां साधुलिंगेन नस्त्वया।
असाध्वकार्यर्भकाणां भिक्षो-र्मार्गः प्रदर्शितः ॥ ५.३६ ॥

ऋणै-स्त्रिभि-रमुक्ताना-ममीमांसित-कर्मणाम्।
विघातः श्रेयसः पाप लोकयो-रुभयोः कृतः ॥ ५.३७ ॥

एवं त्वं निरनुक्रोशो बालानां मतिभिद्धरेः।
पार्षद्-मध्ये चरसि यशोहा निरपत्रपः ॥ ५.३८ ॥

ननु भागवता नित्यं भूतानुग्रहकातराः।
ऋते त्वां सौहृदघ्नं वै वैरं-कर-मवैरिणाम् ॥ ५.३९ ॥

नेत्थं पुंसां विरागः स्यात् त्वया केवलिना मृषा।
मन्यसे यद्युपशमं स्नेहपाश-निकृन्तनम् ॥ ५.४० ॥

---

5. 35. புத்திர சோகத்தால் அறிவிழந்த அவர் நாரதரிடத்தில் மிகுந்த கோபங் கொண்டார். அப்போது அங்கு வந்த அந்த தேவரிஷியைக் கண்டு கோபத்தால் உதடு துடிக்கப் பின் வருமாறு கூறலானுர்.

தக்ஷன் கூறியது—

5. 36. அந்தோ ! (நாரதரே !) கொடியவரே ! நல்லவர் போல் வேஷம் பூண்ட உம்மால் நல்லவர்களாகிய எங்களுக்குத் தீமை விளைக்கப்பட்டது. (ஒன்று மறியாத) குழந்தைகளுக்குப் பிச்சைக்காரர்களின் (ஸந்நியாஸிகளின்) வழி காட்டப்பட்டது.

5. 37. பாவியே ! முவ்விதமான கடன்களினின்றும் விடுபடாதவர்களும், கர்மங்களின் போக்கை ஆராய்ந்தறியாதவர்களுமான இவர்களுடைய நலனை இகத்தும் பரத்தும் இருவகையிலும் கொன்றவராகின்றீர்.

5. 38, இங்ஙனம் குழந்தைகளின் புத்தியைப் பேதலிக்கச் செய்த நீர் நெஞ்சில் ஈரமற்றவர் ; பகவானுடைய பாரிஷதர்களின் இடையில் வெட்கமின்றிச் சஞ்சரிக்கிறீர் ; பகவானுடைய பெருமைக்குப் பங்கம் விளைப்பவராகின்றீர்.

5. 39. பாகவதர்கள் என்றும் எல்லாவுயிர்களிடத்தும் அன்பு செய்பவர்கள் என்று பிரசித்தமாயிற்றே. தீமை நினையாதார்க்கும் தீமை செய்பவரும் நட்பைக் கொன்றவருமாகிய நீர் அதற்கு விலக்காகிறீர்.

5. 40. தனியாகத் திரியும் உம்மால் ஸ்நேஹபாசத்தைக் கொல்லுதலே சாந்தி நிலை எனக் கருதப்படுமானல் அது முற்றும் பொய். இந்த மாதிரி மனிதர்க்கு வைராக்கியம் வந்து விடாது.

नानुभूय न जानाति पुमान् विषयतीक्ष्णताम् ।
निर्विद्येत स्वयं तस्मान्न तथा भिन्नधीः परैः ॥ ५.४१ ॥

यन्न-स्त्वं कर्मसन्धानां साधूनां गृहमेधिनाम् ।
कृतवानसि दुर्मर्षं विप्रियं तव मर्षितम् ॥ ५.४२ ॥

तन्तुकृन्तन यन्नस्त्व-मभद्र-मचरः पुनः ।
तस्माल्लोकेषु ते मूढ न भवेद् भ्रमतः पदम् ॥ ५.४३ ॥

श्रीशुक उवाच—

प्रतिजग्राह तद् बाढं नारदः साधुसत्तमः ।
एतावान् साधुवादो हि तितिक्षेतेश्वरः स्वयम् ॥ ५.४४ ॥

ततः प्राचेतसोऽसिक्न्या-मनुनीतः स्वयंभुवा ।
षष्टिं संजनयामास दुहितॄः पितृवत्सलाः ॥ ६.१ ॥

---

5. 41. அனுபவிக்காமல் ஒரு புருஷனும் புலன்களின் கொடுமையை உணர்ந்து கொள்ள முடியாது. (அனுபவித்தவன்) தானுகவே அவற்றினின்று விலகி வைராக்கிய மடைவான், பிறரால் புத்தி பேதம் செய்யப்பட்டவன் அவ்வாறு வைராக்கிய மடைய இயலாது.

5. 42. கர்மானுஷ்டானத்தில் ஈடுபட்டவர்களும் நன்மையையே நாடுபவர்களும் கிருஹஸ்தர்களுமாகிய எங்களுக்கு நீர் வெறுக்கத்தக்கதும் பொறுக்கத் தகாததுமான செயலைச் செய்தவராயினும் அதையும் பொறுத்துக் கொண்டோம்.

5. 43. ஸந்ததியாகிய நூலை அறுத்தவரே! மூடரே! நீர் மீண்டும் எங்களுக்கு அமங்கலத்தை நினைத்ததால் உலகங்களில் சுற்றும் உமக்குத் தங்குமிடம் இல்லாமற் போகக் கடவது.

ஸ்ரீ சுகர் கூறியது—

5. 44. ஸாதுக்களிற் சிறந்த நாரதர் "அங்ஙனமே ஆகுக!" என்று அதை ஏற்றுக் கொண்டார். தான் ஈசுவரனுயினும் (பிரதி சாபம் கொடுக்க வல்லவனுயினும்) பொறுத்துக் கொள்வதே ஸாதுக்களின் இயற்கையன்றோ?

6. 1. பிறகு தக்ஷப் பிரஜாபதி பிரம்மாவால் தேற்றப்பட்டு அஸிக்னியிடம் அறுபது பெண்களைப் பெற்றுர். அவர்கள் தந்தையிடம் அன்புமிக்கவர்களா யிருந்தனர்.

---

5. 41. 'அனுபவித்தே அறிய வேண்டும் என்பவர்கள் மதியீனர்கள். நான் பிறர் அனுபவத்தால் அறிவு பெறுகின்றேன்' என்று கூறினுர் ஒரு பெரியார்.

5. 44. ஒ. சாந்தனையுந் தீயனவே செய்திடினு மாங்கவரை
ஆந்தனையுங் காப்ப ரறிவுடையோர்.

दश धर्माय कायेन्दो-र्द्विषट्ट्‌ त्रिणव दत्तवान्।
भूताङ्गिरः कृशाश्वेभ्यो द्वे द्वे तार्क्ष्याय चापराः ॥ ६.२ ॥

अथातः श्रूयतां वंशो योऽदितेरनुपूर्वशः।
यत्र नारायणो देवः स्वांशेनावातरद्विभुः ॥ ६.३८ ॥

विवस्वानर्यमा पूषा त्वष्टाथ सविता भगः।
धाता विधाता वरुणो मित्रः शक्र उरुक्रमः ॥ ६.३९ ॥

विवस्वतः श्राद्धदेवं संज्ञासूयत वै मनुम्।
मिथुनं च महाभागा यमं देवं यमीं तथा ॥ ६.४० ॥

त्वष्टु-र्दैत्यानुजा भार्या रचना नाम कन्यका।
संनिवेश-स्तयो-र्जज्ञे विश्वरूपश्च वीर्यवान् ॥ ६.४४ ॥

तं वव्रिरे सुरगणा स्वस्रीयं द्विषतामपि।
विमतेन परित्यक्ता गुरुणाऽऽङ्गीरसेन यत् ॥ ६.४५ ॥

---

6. 2. தர்மப் பிரஜாபதிக்குப் பத்துப் பெண்களையும், கசியபருக்குப் பதின் மூவரையும், சந்திரனுக்கு இருபத்தெழுவரையும், பூதன், அங்கிரஸ், கிருசாச்வன் இவர்கள் ஒவ்வொருவருக்கும் இரண்டு பெண்களையும், மீண்டும் தார்க்ஷ்யர் என்ற கசியபருக்கே மற்றவர்களையும் (நால்வரையும்) கன்னிகாதானம் செய்தவராக தக்ஷர் விளங்கினார்.

6. 38. விபுவான நாராயணதேவர் எந்த வம்சத்தில் தனது அம்சாவதாரத்தைச் செய்தாரோ அந்த அதிதி தேவியின் வம்சமானது கிரமமாகக் கேட்கப்படட்டும்.

6. 39. விவஸ்வான், அர்யமா, பூஷா, த்வஷ்டா, ஸவிதா, பகன், தாதா, விதாதா வருணன், மித்திரன், சக்ரன், உருக்கிரமன் இவர்கள் எல்லோரும் அதிதியின் புத்திரர்கள்.

6. 40. விவஸ்வானிடமிருந்து மகா பாக்கியவதியான ஸம்ஜ்ஞாதேவியானவள் சிராத்த தேவர் என்ற (வைவஸ்வத) மனுவையும் யமன், யமீ, என்ற இரட்டையர்களையும் பெற்றாள்.

6. 44. த்வஷ்டாவானவர் ரசனை என்ற கன்னியை மனைவியாக அடைந்தார். அவள் ஒரு அசுரனுடைய தங்கை. அவர்களுக்குப் பிறந்தவர்கள் ஸந்நிவேசனும் வீரியவானான விசுவரூபனுமாவர்.

6. 45. அவமதிப்படைந்த தேவகுருவான ஆங்கிரசரால் கைவிடப்பட்ட தேவகணங்கள் சத்துருவம்சத்துப்பெண்ணின் புதல்வனாயிருந்தபோதிலும் (பொருட் படுத்தாமல்) அந்த விசுவரூபனைத் தங்கள் புரோஹிதரா யிருக்கும்படி கேட்டுக் கொண்டனர்.

---

6. 2. காய—கச்யபாய; த்விஷடேகாஞ்ச த்ரயோதசேத்யர்த்த :।

---

6. 2. कश्यपाय द्विषट्ट्‌। 6. 40. सुषुवे शुचिः।

6. 44. भार्या चरमा।

**राजोवाच—**

कस्य हेतोः परित्यक्ता आचार्येणात्मनः सुराः ।
एतदाचक्ष्व भगवन् शिष्याणा-मक्रमं गुरौ ॥ ७.१ ॥

**श्रीशुक उवाच—**

इन्द्र-स्त्रिभुवनैश्वर्य-मदोल्लङ्घित-सत्पथः ।
स यदा परमाचार्यं देवाना-मात्मनश्च ह
नाभ्यनन्दत संप्राप्तं प्रत्युत्थानासनादिभिः ॥ ७.७ ॥

वाचस्पतिं मुनिवरं सुरासुर-नमस्कृतम् ।
नोच्चचालासना-दिन्द्रः पश्यन्नपि सभागतम् ॥ ७.८ ॥

ततो निर्गत्य सहसा कविराङ्गिरसः प्रभुः ।
आययौ स्वगृहं तूष्णीं विद्वान् श्रीमदविक्रियाम् ॥ ७.९ ॥

---

அரசன் கூறியது—

7. 1. பகவத்ஸ்வரூபியே! எக்காரணத்தால் தனது சிஷ்யர்களான தேவர்கள் குருவால் கைவிடப்பட்டனர்? சிஷ்யர்களின் அபராதம் என்னவென்று விளக்கிக் கூறுங்கள்.

ஸ்ரீ சுகர் கூறியது—

7. 7-9. முவ்வுலகங்களையும் தான் ஆளுபவன் என்ற கர்வத்தால் நல்வழியினின்று நழுவிய இந்திரன் ஒரு சமயம் தேவர்களுக்கும் தனக்கும் பரமாசாரியரும் முனி சிரேஷ்டரும் தேவர்களும் அசுரர்களும் வணங்குதற்குரியவருமான பிருஹஸ்பதியானவர் சபைக்கு எழுந்தருளியபோது அவரை எதிர்கொண்டழைத்து ஆசனமளித்து மகிழ்விக்காமலிருந்தமையாலும், அவரைக் கண்ணுற்ற பின்னும் தனது ஆசனத்திலிருந்து கூட அசையாமலிருந்தமையாலும், தீர்க்க தரிசியும் மகானுமான ஆங்கிரஸர் அது செல்வத்தின் திமிரினுல் ஏற்பட்ட செயலென்றுணர்ந்து அங்கிருந்து மௌனமாக விரைவில் வெளிப்போந்து தனது வீட்டையடைந்தார்.

---

தக்ஷன் = அஸிக்னி

10 பேர் = தர்மர் (பானு, லம்பா, விச்வா, ஸாத்யா வஸு....) — விச்வேதேவர், ஸாத்யர்கள் அஷ்டவசுக்கள்

13 பேர் = கச்யபர் (அதிதி-திதி-தனு-காஷ்டா-அரிஷ்டா-ஸுரஸா-இலா-முனி:-க்ரோதவயா-தாம்ரா-ஸுரபி-ஸரமா-திமி.) — அப்ஸரர்கள், கந்தர்வர்கள், அசுரர்கள், தேவர்கள்.

27 பேர் = சந்திரன் (அச்வினி, பரணி...) புத்ரர்கள் இல்லை

2 ஸ்வதா, ஸதி = அங்கிரஸ் — பிதிருக்கள் அதர்வர்

2 அர்ச்சிஸ், திஷணை. = கிருசாச்வர் — தேவலர்

2 ஸரூபா, அஜா = பூதர் — பூதங்கள் ருத்ர கணங்கள்

4 பேர் விநதை, கத்ரு பதங்கி, யாமினீ = தார்க்ஷ்யன் என்ற கசியபர் — கருடன், நாகர்

---

7. 1. यस्य....सुता ।

तदैव प्रतिबुद्ध्येन्द्रो गुरुहेलन-मात्मनः ।
गर्हयामास सदसि स्वयमात्मान-मात्मना ॥ ७.१० ॥

एवं चिन्तयत-स्तस्य मघोनो भगवान् गृहात् ।
बृहस्पति-र्गतोऽदृष्टां गति-मध्यात्म-मायया ॥ ७.१६ ॥

गुरो-र्नाधिगतः संज्ञां परीक्षन् भगवान् स्वराट् ।
ध्यायन् धिया सुरैर्युक्तः शर्म नालभतात्मनः ॥ ७.१७ ॥

---

7. 10. அப்போது இந்திரன் சபையில் தன்னால் குருவுக்கு ஏற்பட்ட அவமதிப்பை உணர்ந்து தன்னைத் தனக்குள்ளேயே நிந்தித்துக் கொண்டான்,

7. 16. இங்ஙனம் இந்திரன் சிந்தித்துக் கொண்டிருக்கையில் ப்ருஹஸ்பதி பகவான் ஆத்ம மாயா சக்தியால் பிறர் காணமுடியாதபடி தன் வீட்டிலிருந்தும் மறைந்து போனார்.

7. 17. குருவை மீண்டும் அடையும் வழியைப்பற்றித் தேவர்களுடன் கூடிப் பலவாறாய் ஆராய்ந்தும், புத்திக் கெட்டியவரை யோசித்தும் ஒன்றும் விளங்காதவனாய் மனதில் அமைதி யற்றிருந்தான்.




பா. பே.

---

7. 17. शुचा युक्तः ।

तच्छ्रुत्वैवासुराः सर्व आश्रित्यौशनसं मतम् ।
देवान् प्रत्युद्यमं चक्रु-र्दुर्मदा आततायिनः ॥ ७.१८ ॥

तैर्विसृष्टेषुभि-स्तीक्ष्णै-र्निर्भिन्नोरु-बाहवः ।
ब्रह्माणं शरणं जग्मुः सहेन्द्रा नतकन्धराः ॥ ७.१९ ॥

ब्रह्मोवाच—

अहो बत सुरश्रेष्ठा ह्यभद्रं वः कृतं महत् ।
ब्रह्मिष्ठं ब्राह्मणं दान्त-मैश्वर्या-न्नाभ्यनन्दत ॥ ७.२१ ॥

तद् विश्वरूपं भजताशु विप्रं तपस्विनं त्वाष्ट्रमथात्मवन्तम् ।
सभाजितोऽर्थान् स विधास्यते वो यदि क्षमिष्यध्व-मुतास्य कर्म ॥ ७.२५ ॥

श्रीशुक उवाच—

त एवमुदिता राजन् ब्रह्मणा विगतज्वराः ।
ऋषिं त्वाष्ट्र-मुपव्रज्य परिष्वज्येद-मब्रुवन् ॥ ७.२६ ॥

---

7. 18. இந்த வரலாற்றைக் கேட்டுக் கொடுஞ் செயலாளர்களும் கொழுப்பேறியவர்களுமான அசுரர்களனைவரும் சுக்ராசாரியரின் அனுமதியைப் பெற்று தேவர்களை எதிர்த்துப் போர் தொடுக்க ஆயத்தமாயினர்.

7. 19. அவர்களால் விடப்பட்ட கூரிய பாணங்களால் புயங்களும் துடைகளும் பிளவு பட்டு (அவமானத்தால்) தலை குனிந்து இந்திரனுடன் கூடிய தேவர்கள் பிரம்மாவைச் சரணடைந்தனர்.

பிரம்மா கூறியது—

7. 21. தேவ சிரேஷ்டர்களே! சாந்தரும் பிரம்மநிஷ்டருமான பிராம்மணரை ஐசுவரிய மதத்தால் நீங்கள் வரவேற்கவில்லை யன்றோ! அது வருந்துதற்குரியது. உங்களால் செய்யப்பட்ட அப்பிழை மிகப்பெரிது.

7. 25. ஆகவே (இப்போதுள்ள நிலையில்) நீங்கள் தபஸ்வியும் மனோஜயமுள்ளவனும், பிராம்மணனும் த்வஷ்டாவின் குமாரனுமாகிய விசுவரூபனை விரைவில் நாடிச் சேவித்தல் வேண்டும். சேவிக்கப்பெற்ற அவர் உங்களுடைய விருப்பங்களையளிப்பார். ஆனால் அவர் செயல் எதுவாயினும் நீங்கள் பொறுத்துக் கொள்ளவேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

7. 26. அரசே! பிரம்ம தேவனால் இவ்விதம் உபதேசிக்கப்பெற்று மனக்குழப்பம் நீங்கியவர்களாய் அவர்கள் த்வஷ்டாவின் புத்திரராகிய ரிஷியை அடைந்து அவரை இறுகத் தழுவிக்கொண்டு பின் வருமாறு கூறினர்கள்.

---

7. 19. तैर्विसृष्टेषुभिस्तिग्मैः । பா. பே.

देवा ऊचुः—

वयं तेऽतिथयः प्राप्ता आश्रमं भद्रमस्तु ते ।
कामः संपाद्यतां तात पितॄणां समयोचितः ॥ ७.२७ ॥

आचार्यो ब्रह्मणो मूर्तिः पिता मूर्तिः प्रजापतेः ।
भ्राता मरुत्पते-र्मूर्ति-र्माता साक्षात् क्षिते-स्तनुः ॥ ७.२९ ॥

दयाया भगिनीमूर्ति-र्धर्मस्यात्मातिथिः स्वयम् ।
अग्ने-रभ्यागतो मूर्तिः सर्वभूतानि चात्मनः ॥ ७.३० ॥

तस्मात् पितॄणा-मार्तानां-मार्तिं परपराभवम् ।
तपसापनयंस्तात सन्देशं कर्तु-मर्हसि ॥ ७.३१ ॥

वृणीमहे त्वोपाध्यायं ब्रह्मिष्ठं ब्राह्मणं गुरुम् ।
यथांजसा विजेष्यामः सपत्नां-स्तव तेजसा ॥ ७.३२ ॥

न गर्हयन्ति ह्यर्थेषु यविष्ठांघ्र्यभिवन्दनम् ।
छन्दोभ्योऽन्यत्र न ब्रह्मन् वयो ज्यैष्ठ्यस्य कारणम् ॥ ७.३३ ॥

---

தேவர்கள் கூறியது—

7. 27. ஐயனே! நாங்கள் அதிதிகளாய் உன்னுடைய ஆசிரமத்தை நாடி வந்திருக்கின்றோம். உனக்கு மங்களமுண்டாகட்டும். உனது பெற்றோர்களைப் போன்ற எங்களுடைய மனோ விருப்பத்தைச் சமயத்திற்குத் தகுந்த வகையில் பூர்த்தி செய்து வைக்கவேண்டும்.

7. 29. ஆசிரியன் வேதமே உருவெடுத்தவன்; தந்தை பிரஜாபதியின் வடிவம்; சகோதரன் மருத்துக்களின் பதியான இந்திரஸ்வரூபி; தாயானவள் நேரில் காணும் பூதேவியின் உருத் தாங்கியவள்.

7. 30. சகோதரி தயையே வடிவானவள்; அதிதியானவன் தர்ம தேவதை தானேயாகின்றான். நாடி வந்தவன் அக்னிஸ்வரூபி; எல்லா உயிர்களும் பரமாத்மாவின் வடிவங்கள்.

7. 31. ஆகவே, ஐயனே, துன்புற்ற உனது தந்தைமார்களுக்கு எதிரிகளால் ஏற்பட்டுள்ள அவமானமாகிய துன்பத்தை உனது தவத்தால் போக்கி அவர்களது வேண்டுகோளைப் பூர்த்தி செய்வித்தற்கு உரியவனாகின்றாய்.

7. 32. பிரம்மநிஷ்டனும் பிராம்மணனுமாகிய உன்னைக் குருவாகவும் புரோகிதனாகவும் வரிக்கின்றோம். உன்னுடைய வீரியத்தால் விரைவில் நாங்கள் எங்ஙனம் எதிரிகளை ஜயிப்போமோ அங்ஙனம் நீ செய்தல் வேண்டும்.

7. 33. பிரம்மஸ்வரூபியே? காரியங் கைகூடுதற்கு வயதில் சிறியோனை வணங்குதலையும் (பெரியோர்கள்) நிந்திக்கமாட்டார்கள். வேத ஞானமில்லாதவர்களிடத்திலேயே வயது முதுமைக்குக் காரணமாகும். வேத ஞானமுள்ளவர்களிடத்திலன்று.

विश्वरूप उवाच—

विगर्हितं धर्मशीलै-ब्रह्मवर्च-उपव्ययम् ।
कथं नु मद्विधो नाथा लोकेशै-रभियाचितम् ॥
प्रत्याख्यास्यति तच्छिष्यः स एव स्वार्थ उच्यते ॥ ७.३५ ॥

अकिंचनानां हि धनं शिलोञ्छनं तेनेह निर्वर्तित-साधु-सत्क्रियः ।
कथं विगर्ह्यं नु करोम्यधीश्वराः पौरोधसं हृष्यति येन दुर्मतिः ॥ ७.३६ ॥

तथापि न प्रतिब्रूयां गुरुभिः प्रार्थितं कियत् ।
भवतां प्रार्थितं सर्वं प्राणै-रर्थैश्च साधये ॥ ७.३७ ॥

श्रीशुक उवाच—

तेभ्य एवं प्रतिश्रुत्य विश्वरूपो महातपाः ।
पौरोहित्यं वृतश्चक्रे परमेण समाधिना ॥ ७.३८ ॥

सुरद्विषां श्रियं गुप्ता-मौशनस्यापि विद्यया ।
आच्छिद्यादान्महेन्द्राय वैष्णव्या विद्यया विभुः ॥ ७.३९ ॥

விசுவருபன் கூறியது—

7. 35. பெரியோர்களே! (புரோஹிதத் தொழில்) பிரம்ம தேஜஸ்ஸை அழித்திடுவதுபற்றி நிந்திக்கப்படும். எனினும் உலகையாள்பவர்களால் வேண்டப்படும்போது என்போன்ற சிஷ்யன் எங்ஙனம் மறுக்க இயலும்? அதைச் செய்தலே சுய நலமளிக்கும் கடமையெனப் படுகின்றது.

7. 36. உலகையாள்பவர்களே! ஏதுமற்ற ஏழைகளுக்குப் பொருளாவது நெற்களத்திலும் நெல் வயலிலும் அறுவடைக்குப் பின் இறைந்து கிடைப்பதைப் பொறுக்குவதால் கிடைப்பதேயாம். அதைக்கொண்டே நற்கருமங்களைச் செய்து வாழ்க்கை நடத்தும் நான் இழிவான புரோகிதத் தொழிலை எவ்விதம் செய்வேன்! மதி கெட்டவர்களன்றோ அதில் மகிழ்வார்கள்.

7. 37. எனினும் (ஏற்கெனவே கூறியவாறு) பெரியோர்களால் பிரார்த்திக்கப் பட்ட இச்சிறு காரியத்தை நான் மறுக்கப் போவதில்லை. உங்களால் பிரார்த்திக்கப்பட்ட அனைத்தையும் என் பொருளாலும் ஆவியாலும் முடித்துத் தருகின்றேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

7. 38. அவர்களுக்கு இங்ஙனம் மறுமொழி கூறிவிட்டுப் பெருந்தவமுடைய விசுவருபன் முழு மனத்துடனும் முயற்சியுடனும் வேண்டிக் கொள்ளப்பட்ட வண்ணம் புரோகிதக் காரியங்களை நடத்தி வந்தான்.

7. 39. வல்லவனான விசுவருபன் சுக்ராசாரியருடைய வித்யா பலத்தால் காக்கப் பட்டிருந்த அசுர ஸாம்ராஜ்யத்தை மகா விஷ்ணுவின் உபாஸனை பலத்தால் அவர்களிடமிருந்து கவர்ந்து தேவேந்திரனுக்குக் கொடுத்தான்.

பா. பே.

7. 36. येन दुर्मनाः ।

यया गुप्तः सहस्राक्षो जिग्येऽसुर-चमू-र्विभुः ।
तां प्राह स महेन्द्राय विश्वरूप उदारधीः ॥ ७.४० ॥

राजोवाच—

भगवंस्तन्ममाख्याहि वर्म नारायणात्मकम् ।
यथाऽऽततायिनः शत्रून् येन गुप्तोऽजयन्मृधे ॥ ८.२ ॥

श्रीशुक उवाच—

वृतः पुरोहित-स्त्वाष्ट्रो महेन्द्रायानुपृच्छते ।
नारायणाख्यं वर्माह तदिहैकमनाः शृणु ॥ ८.३ ॥

विश्वरूप उवाच—

धौतांघ्रिपाणि-राचम्य सपवित्र उदङ्मुखः ।
कृतस्वांग करन्यासो मन्त्राभ्यां वाग्यतः शुचिः ॥
नारायणमयं वर्म सन्नह्येद् भय आगते ॥ ८.४ ॥

आत्मानं परमं ध्यायेद् ध्येयं षट्शक्तिभिर्युतम् ।
विद्या-तेज-स्तपो-मूर्ति-मिमं मन्त्र-मुदाहरेत् ॥ ८.११ ॥

---

7. 40. விபுவான இந்திரன் எந்த மந்திர சக்தியால் காக்கப்பட்டு அசுரசேனைகளை ஜயித்தானோ அந்த மந்திரத்தை உதார குணமுள்ள விசுவரூபன் இந்திரனுக்கு உபதேசித்தான்.

அரசன் கூறியது—

8, 2. பகவத்ஸ்வரூபியே! (இந்திரன்) போரில் கொடிய பகைவர்களைப் பெற்று எதனால் காக்கப்பெற்று ஜயித்தானோ அந்த நாராயண கவசத்தை அடியேனுக்குக் கூறியருளுதல் வேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

8. 3. த்வஷ்டாவின் குமாரனை விசுவரூபன் புரோகிதப் பதவியை ஏற்றுக் கொண்ட பின் தேவேந்திரனால் பிரார்த்திக்கப்பட்டு அவனுக்குபதேசித்த இந்த நாராயண கவசத்தை ஒருமைப்பட்ட மனத்துடன் கேட்பாயாக.

விசுவரூபன் கூறியது—

8. 4. கால் கைகளைச் சுத்தம் செய்து கொண்டு, ஆசமனம் செய்து, பவித்திர மணிந்து, வாக்கை யடக்கி, வடக்கு முகமாக அமர்ந்து, பரிசுத்தனாய் மந்திரங்களால் தனது உடலில் அங்கநியாஸத்தையும் கரநியாஸத்தையும் செய்துகொண்டு, பயம் அணுகியபோது ஒருவன் நாராயண கவசத்தை அணிந்து கொள்ள வேண்டும்.

8. 11. ஆறு சக்திகளுடன் கூடியவரும் தியானித்தற்குரியவருமான பரமாத்மாவைத் தியானிக்க வேண்டும், இந்த மந்திரத்தை உச்சரிக்க வேண்டும்.

---

8, 4. **மந்த்ராப்யாம்—**அஷ்டாக்ஷர-த்வாதசாக்ஷராப்யாம் ।
**ஸந்நஹ்யேத்—**பத்னீயாத் :

---

8. 2. **ममाचक्ष्व ।** 8. 11. **मन्त्रमुदीरयेत् ।**

ओं हरि-र्विदध्यान्-मम सर्वरक्षां न्यस्तांघ्रिपद्मः पतगेन्द्रपृष्ठे ।
दरारि-चर्मासि-गदेषु-चाप-पाशान् दधानोऽष्टगुणोऽष्टबाहुः ॥ ८.१२ ॥

चक्रं युगान्तानल-तिग्म-नेमि भ्रमत् समन्ताद् भगवत्प्रयुक्तम् ।
दन्दग्धि दन्दग्ध्यरि-सैन्य-माशु कक्षं यथा वातसखो हुताशः ॥ ८.२३ ॥

गदेऽशनि-स्पर्शन-विस्फुलिंगे निष्पिण्ढि निष्पिण्ढ्यजित-प्रियासि ।
कूष्माण्ड-वैनायिक-यक्ष-रक्षो-भूतग्रहां-श्चूर्णय चूर्णयारीन् ॥ ८.२४ ॥

त्वं यातुधान-प्रमथ-प्रेत-मातृ-पिशाच-विप्रग्रह-घोरदृष्टीन् ।
दरेन्द्र विद्रावय कृष्णपूरितो भीमस्वनोऽरेर्हृदयानि कम्पयन् ॥ ८.२५ ॥

त्वं तिग्मधारासिवरारिसैन्य-मीशप्रयुक्तो मम छिन्धि छिन्धि ।
चक्षूंषि चर्मन् शतचन्द्र छादय द्विषामघोनां हर पापचक्षुषाम् ॥ ८.२६ ॥

---

8. 12. ஓம். பக்ஷிராஜன் முதுகில் வைத்த பரத கமலங்களும், சங்கு, சக்கரம், சர்மம், கத்தி, கதை. பாணம், வில், பாசம் முதலிய ஆயுதங்களை ஏந்திய அஷ்ட புஜங்களும், (அணிமாதி) அஷ்டகுணங்களும் உடைய ஹரியானவர் எனக்கு எல்லா ரக்ஷையையும் அளிக்கவேண்டும்.

8. 23. யுகத்தின் முடிவில் ஜ்வலிக்கும் காலாக்கினி போன்று கூறிய விளிம்புடன் பிரகாசிக்கும் சக்கரம் பகவானல் ஏவப்பட்டு எங்கும் சுழல்வதாய்க் காற்றின் உதவியால் அக்கினி ஒரு முட்புதரைப் பொசுக்குவது போல் விரைவில் சத்துரு சைனியங்களைப் பொசுக்கட்டும், பொசுக்கட்டும்.

8. 24. இடி போன்று தொட்டதை யழிக்கும் பொறிகளைக் கக்கும் கதையே! நீ அச்சுதனுக்குப் பிரியையாகின்ருய். கூஷ்மாண்டர், வைநாயிகர், யக்ஷர், ராக்ஷஸர், பூதக்கிரகங்கள் முதலியவர்களைப் பிழிந்து விடு, பிழிந்து விடு. சத்துருக்களைப் பொடியாக்கி விடு, பொடியாக்கிவிடு.

8. 25. சிறந்த சங்கமே! கிருஷ்ணனல் ஊதப்பட்டு பயங்கரமான நாதத்தையுண்டாக்கிச் சத்துருக்களின் இருதயங்களை நடுங்கச் செய்து கொண்டு நீ ராக்ஷஸ, ப்ரமத, ப்ரேத, மாத்ரு, பிசாச, பிரம்மராக்ஷஸ கணங்களையும் இன்னும் கொடும்பார்வையுடைய பிறரையும் விரட்டியடிப்பாயாக.

8. 26. கொடியதும் கூர்மை வாய்ந்ததுமான கத்தியே! நீ பகவானல் வீசப்பட்டு என்னுடைய சத்துரு சேனையை விரைவில் நாசம் செய்வாயாக, நாசம் செய்வாக. நூறு சந்திரர்களைப்போல விளங்கும் சர்மமே, கொடும் பாவிகளான எதிரிகளின் கண்களை மறைத்துவிடு. அவர்கள் கண்களைப் பிடுங்கி விடு.

---

8. 12, **அஷ்டகுண** :—அணிமாத் யைச்வர்ய-யுக்த :|

8. 23. ஒ. ஆழியெழச் சங்கும் வில்லு மெழத்திசை
வாழியெழத் தண்டும் வாளுமெழ அண்டம்
மோழையெழ முடிபாதமெழ அப்பன்
ஊழியெழ வுலகங் கொண்ட வாறே.

8. 24. பஞ்சாயுதங்களில் சக்கரம் துள்ளி யெழுந்து பகையனைத்தையும் விரட்டுகின்றது. கதை யக்ஷராக்ஷஸர்களையும், சங்கு பூதப்ரேத பிசாசங்களையும், கத்தி அசுரர்களையும்; சந்திர கலைவடிவான கேடயம் பாவிகளின் கொடுமைகளனைத்தையும் ஒழிக்கின்றன.

यन्नो भयं ग्रहेभ्योऽभूत् केतुभ्यो नृभ्य एव च ।
सरीसृपेभ्यो दंष्ट्रिभ्यो भूतेभ्योंऽहोभ्य एव वा　　॥ ८.२७ ॥

सर्वाण्येतानि भगवन्नाम-रूपास्त्र-कीर्तनात् ।
प्रयान्तु संक्षयं सद्यो ये नः श्रेयः-प्रतीपकाः　　॥ ८.२८ ॥

विदिक्षु दिक्षूर्ध्वमधः समन्ता-दन्त-र्बहि-र्भगवान् नारसिंहः ।
प्रहापयँ-ल्लोकभयं स्वनेन स्वतेजसा ग्रस्त-समस्त-तेजाः　　॥ ८.३४ ॥

मघवन्निद-माख्यातं वर्म नारायणात्मकम् ।
विजेष्यस्यंजसा येन दंशितोऽसुरयूथपान्　　॥ ८.३५ ॥

श्रीशुक उवाच—

एतां विद्या-मधिगतो विश्वरूपाच्छतक्रतुः ।
त्रैलोक्य-लक्ष्मीं बुभुजे विनिर्जित्य मृधेऽसुरान्　　॥ ८.४२ ॥

तस्यासन् विश्वरूपस्य शिरांसि त्रीणि भारत ।
सोमपीथं सुरापीथ-मन्नाद-मिति शुश्रुम　　॥ ९.१ ॥

8. 27-28. எங்களுக்குக் கிரகங்களினின்றும், கேதுக்களினின்றும், மனிதர்களின் மிருந்தும், பாம்புகளிட மிருந்தும், கடிக்கும் ஜந்துக்களிட மிருந்தும் பூதங்களிடமிருந்தும், பாவச் செயல்களினின்றும் எந்த பயம் ஏற்பட்டுளதோ, எவை எங்கள் நன்மைக்கு ஊறு விளைப்பவைகளோ அவை யாவும் பகவானுடைய நாமம், ரூபம், அஸ்திரம் இவற்றின் கீர்த்தனத்தால் விரைவில் அழிவடையட்டும்.

8. 34. திக்குகளிலும் மூலைகளிலும், மேலும், கீழும், எங்கும் உள்ளும் புறமும் பகவான் நரசிம்மர் தனது பிரகாசத்தால் எல்லாப் பிரகாசத்தையும் விழுங்குபவராயும் தனது கர்ஜனையால் உலக பயத்தைப் போக்குபவராயும் எங்களைக் காத்தருள வேண்டும்.

8. 35. இந்திரனே! இங்ஙனம் உமக்குரைக்கப்பட்டது நாராயணாத்மகமான கவசம். இதனால் காக்கப்பட்டு எளிதில் நீர் அஸுர வீரர்களை ஜயிப்பவராவீர்.

ஸ்ரீ சுகர் கூறியது—

8. 42. இந்திரன் இம்மந்திரத்தை விசுவரூபனிட மிருந்து அடைந்து, போரில் அசுரர்களை ஜயித்து மூவ்வுலக ஸாம்ராஜ்யச் செல்வத்தை அனுபவித்தான்.

9. 1. பரத வம்சத்தோனே! அந்த விசுவரூபனுக்கு மூன்று தலைகள், ஸோம பானம் செய்வது ஒன்று, ஸுராபானம் செய்வது ஒன்று, அன்னத்தைப் புசிப்பது ஒன்று எனக் கேள்விப்பட்டுள்ளோம்.

---

8. 27. அம்ஹோப்ய: —பாபேப்ய: ।
8. 34. ஒ. **நரசிம்ம காயத்ரி**—வஜ்ரநகாய வித்மஹே தீக்ஷ்ணதம்ஷ்ட்ராய தீமஹி । தந்நோ நாரஸிம்ஹ: ப்ரசோதயாத் ॥
8. 35. **தம்சித** :—கவசித :।
8. 36. **ஸாத்வஸாத்** :—பயாத் ।

---

8. 27. **भूतेभ्यो घोरेभ्य एव च ।**　　பா. பே.

स वै बर्हिषि देवेभ्यो भागं प्रत्यक्ष-मुच्चकैः ।
अवदद् यस्य पितरो देवाः सप्रश्रयं नृप ॥ ९.२ ॥

स एव हि ददौ भागं परोक्ष-मसुरान् प्रति ।
यजमानोऽवहद् भागं मातृ-स्नेह-वशानुगः ॥ ९.३ ॥

तद् देवहेलनं तस्य धर्मालीकं सुरेश्वरः ।
आलक्ष्य तरसा भीत-स्तच्छीर्षाण्यच्छिनद् रुषा ॥ ९.४ ॥

हतपुत्र-स्तत-स्त्वष्टा जुहोवेन्द्राय शत्रवे ।
इन्द्रशत्रो विवर्धस्व मा चिरं जहि विद्विषम् ॥ ९.११ ॥

अथान्वाहार्यपचना-दुत्थितो घोरदर्शनः ।
कृतान्त इव लोकानां युगान्तसमये यथा ॥ ९.१२ ॥

येनावृता इमे लोका-स्तमसा त्वाष्ट्रमूर्तिना ।
स वै वृत्र इति प्रोक्तः पापः परमदारुणः ॥ ९.१८ ॥

---

9. 2. அரசே! தேவர்களைப் பிதிரர் ஸ்தானத்தில் உடைய அவன் யாகம் செய்யும் போது விநயத்துடன் வெளிப்படையாக உறக்கக் கூவியழைத்து தேவர்களுக்கு பாகத்தை யளித்தரன்.

9. 3. தாயிடமுள்ள அன்பின் வசத்தால் அவனே யாகம் செய்கையில் இரகசிய மாக அசுரர்களுக்கும் பாகத்தை யளித்தான்.

9. 4. தேவேந்திரன் அவனுடைய கபட தர்மத்தால் தேவர்களுக்கு ஏற்பட்ட அவமதிப்பை உணர்ந்து பயமடைந்து கோபத்தால் உடனே அவனுடைய தலைகளை வெட்டினன்.

9. 11. புத்திரனை இழந்த தவஷ்டா அதன் பின் இந்திரனைக் கொல்லும் சத்து ருவை உண்டாக்கக் கருதி "இந்திர சத்துருவே! விருத்தியடைவாய்! விரைவில் எதிரியைக் கொல்வாயாக!" என்று ஹோமம் செய்தான்.

9. 12. பின்னர் பிரளய காலத்தில் உலகங்களை யழிக்கத் தோன்றிய யமன்போல் கோரமான உருத்தாங்கிய ஒருவன் தக்ஷிணக்கினியிலிருந்து எழுந்தான்.

9. 18. த்வஷ்டாவின் (மானஸ) புத்திரனை இவனல் உலகங்கள் இருளால் மூடப்பட்டன. மிகக் கொடியவனும் பாவியுமான அவன் விருத்திரன் எனப்படுகிறன். தேவர்கள் கூறியது (பகவானிடம் பிரார்த்தனை)—

---

9. 11. **இந்த்ர சத்ரோ விவர்த்தஸ்வ**—அத்ர-சேந்த்ர-சத்ரு பதஸ்யாத் யுதாத்தத்வாத் பஹுவ்ரீஹீ : இந்த்ர ஏவ தஸ்ய சத்ருரபூத் ।

ஒ. மந்த்ரோ ஹீன : ஸ்வரதோ வர்ணதோ வா மித்யா-ப்ரயுக்தோ ந தமர்த்த மாஹ । ஸ வாக்வஜ்ரோ யஜமானம் ஹிநஸ்தி யதேந்த்ரசத்ரு : ஸ்வரதோ ऽபராதாத் ॥

—சிக்ஷை.

9. 12. **அன்வாஹார்யபசனத்**—தக்ஷிணக்னே :।

---

9. 18. **तपसा त्वाष्ट्रमूर्तिना ।** பா. பே.

देवा ऊचुः—

ओं नमस्तेऽस्तु भगवन् नारायण वासुदेवादिपुरुष, महापुरुष, महानुभाव परममंगल, परमकल्याण, परमकारुणिक, केवल जगदाधार, लोकैकनाथ, सर्वेश्वर, लक्ष्मीनाथ, परमहंसपरिव्राजकैः परमेणात्मयोगसमाधिना परिभावित-परिस्फुट-पारमहंस्य-धर्मेणोद्घाटित-तमः कपाटद्वारे चित्तेऽपावृत आत्मलोके स्वयमुपलब्ध-निजसुखानुभवो भवान् ॥ ९.३३ ॥

अथ भगवन् सर्वप्रत्यय-साक्षिण आकाश-शरीरस्य साक्षात्परब्रह्मणः परमात्मनः कियानिह वा अर्थ-विशेषो विज्ञापनीयः स्यात् ॥ ९.४२ ॥

श्रीभगवानुवाच—

मघवन् यात भद्रं वो दध्यंच-मृषिसत्तमम् ।
विद्या-व्रत-तपः-सारं गात्रं याचत मा चिरम् ॥ ९.५१ ॥

युष्मभ्यं याचितोऽश्विभ्यां धर्मज्ञोऽङ्गानि दास्यति ।
तत-स्तै-रायुधश्रेष्ठो विश्वकर्म-विनिर्मितः ।
येन वृत्रशिरो हर्ता मत्तेज उपबृंहितः ॥ ९.५४ ॥

---

தேவர்கள் கூறியது—

9. 33. பகவானும் நாராயணரும், வாசுதேவரும், ஆதி புருஷரும், மஹாபுருஷரும், மஹானுபாவரும், பரம மங்களரும், பரம கல்யாணஸ்வரூபியும், பரம கருணைநிதியும், தனியொருவராக உலகிற் காதாரமாகியவரும், உலகிற்கொரு நாயகரும், ஸர்வேசுவரரும், லக்ஷ்மீ நாதனும், பரமஹம்ஸ ஸந்நியாஸிகளால் சிறந்த ஆத்மயோகத்தாலும், ஸமாதியாலும், போற்றப்பட்டவரும் ஆகிய நீங்கள் பரமஹம்ஸ தர்மத்தால் அஞ்ஞானமாகிய கதவு திறக்கப் பெற்றவர்களின் உள்ளத்தில் அவர்களது காட்சிககு உரியவராய் உங்கள் ஆத்மானந்தானுபவ வடிவாய் விளங்குகின்றீர்கள்.

9. 42. பகவானே! பரமாத்மாவாயும், ஸாக்ஷாத் பரப்பிரம்மாவாயும் மனோவியாபார மனைத்திற்கும் ஸாக்ஷியாயும், ஆகாயம்போல் எங்கும் பரந்து பற்றற்று நிற்பவராயும் உள்ள உங்களிடம் (நீங்களறியாமல் நாங்கள்) தெரிவித்துக் கொள்ள வேண்டிய விசேஷமான விருப்பம் இங்கு என்னதான் உளது ?

ஸ்ரீ பகவான் கூறியது—

9. 51. தேவேந்திரனே! உங்களுக்கு க்ஷேமமுண்டாகும். நீங்கள் ரிஷி சிரேஷ்டரான ததீசியைக் கால தாமதமின்றி அடையுங்கள். வித்தையாலும், விரதத்தாலும், தவத்தாலும் வயிரம் பாய்ந்துள்ள அவருடைய உடலை யாசியுங்கள்.

9. 54. (அவருடைய பிரிய சிஷ்யர்களான) அசுவினீ தேவர்களால் யாசிக்கப்பட்டால் அவர் உங்களுக்குத் தமது அங்கங்களைக் கொடுத்து விடுவார். அவர் தர்மத்தின் மர்ம மறிந்தவர். அவரது அங்கங்களால் (எலும்புகளால்) விசுவகர்மா சிறந்த (வஜ்ர) ஆயுதத்தைச் செய்து கொடுக்க, அதனால் நீ (இந்திரன்) எனது சக்தியுடன் கூடி விருத்திரனுடைய தலையை வாங்குவாய்.

---

9. 54. **அச்வினீ தேவர்கள்**—இவர்கள் தேவ வைத்தியர்கள்: (தத்யங்) ததீசிமுனிவரிடம் இவர்கள் முன்னொரு கால் சிஷ்யர்களாய்ச் சென்றனர். இந்திரன் அவர்களுக்குபதேசிக்கக்கூடாதென்று தடுத்தான். மீறினால் சிரச்சேதம் செய்வதாய்க் கூறினான்: அச்வனீ தேவர்கள் குருவிடம் ஒரு உபாயம் கூறினர். "பகவான் ஹயக்ரீவருக்குப் போல் உங்களுக்குக் குதிரைத் தலையை வைக்கிறோம், அதனால் உபதேசம் செய்யுங்கள். இந்திரன் அந்தத் தலையை வாங்குவான். பின்னர் உங்கள் தலையை மீண்டும் உமதருளால் பொருத்திவிடுகிறோம்' என்றனர். முனிவர்; ப்ரவர்க்யம், பிரம்மவித்தை இரண்டையும் உபதேசித்தார். அதனால் இதற்கு **அச்வசிரவஸ்** என்ற பெயர் ஏற்பட்டது.

श्रीशुक उवाच--

तथाभियाचितो देवै-ऋषि-राथर्वणो महान्।
मोदमान उवाचेदं प्रहसन्निव भारत ॥ १०.२ ॥

जिजीविषूणां जीवाना-मात्मा प्रेष्ठ इहेप्सितः।
क उत्सहेत तं दातुं भिक्षमाणाय विष्णवे ॥ १०.४ ॥

देवा ऊचुः--

किं नु तद् दुस्त्यजं ब्रह्मन् पुंसां भूतानुकम्पिनाम्।
भवद्विधानां महतां पुण्यश्लोकेड्य-कर्मणाम् ॥ १०.५ ॥

ऋषिरुवाच--

धर्मं वः श्रोतुकामेन यूयं मे प्रत्युदाहृताः।
एष वः प्रिय-मात्मानं त्यजन्तं संत्यजाम्यहम् ॥ १०.७ ॥

योऽध्रुवेणात्मना नाथा न धर्मं न यशः पुमान्।
ईहेत भूतदयया स शोच्यः स्थावरै-रपि ॥ १०.८ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

10. 2. பாரதரே! அவ்வாறே தேவர்களால் யாசிக்கப்பட்ட அந்த ஆதர்வண மஹரிஷி மகிழ்ச்சியுற்று அவர்களைப் பரிகசிப்பவர் போல் பின் வருமாறு கூறினர்.

10. 4. 'ஜீவித்திருப்பதிலேயே விருப்பமுள்ள ஜீவர்களுக்கு இங்கு விரும்பத் தக்க எல்லாவற்றிலும் மிகவும் பிரியமானது தனது சரீரமேயன்றோ! விஷ்ணுவே யாசித்தாலுங் கூட எவன் தான் அதைத் தியாகம் செய்ய முற்படுவான்?'

தேவர்கள் கூறியது—

10. 5. பிரம்மஸ்வரூபியே! எவ்வுயிர்க்கு மிரங்குபவர்களும், பெருங் கீர்த்தி வாய்ந்த மகான்களால் போற்றப்படும் அருஞ்செயல்களை யியற்றுபவர்களும், தங்களைப் போன்றவர்களுமான புருஷர்களுக்கு விடமுடியாதது என்று சொல்லக்கூடிய அது எது?

ரிஷி கூறியது—

10. 7. உங்களிடமிருந்து நான் தர்மத்தைக் கேட்க விரும்பியதால் நீங்கள் என்னால் மறுத்துரைக்கப்பட்டீர்கள். நீங்கள் வேண்டும் இவ்வுடலோ என்னை விட்டு விட இருக்கின்றது. அதை நானே (முன்னடியாக) முழுமனத்துடன் விடுகின்றேன்.

10. 8. தேவநாதர்களே! எந்தப் புருஷன் உயிர்களுக்கிரங்கி நிலையற்ற உடலால் தர்மத்தையும் புகழையும் தேடிக் கொள்ளவில்லையோ அவன் தாவரங்களாலும் இரங்கு தற்குரியவன்.

---

10. 8. इच्छेत भूतदयया।

श्रीशुक उवाच—

एवं कृतव्यवसितो दध्यङ्ङाथर्वण-स्तनुम् ।
परे भगवति ब्रह्मण्यात्मानं सन्नयञ्जहौ ॥ १०.११ ॥

यताक्षासु-मनो-बुद्धि-स्तत्त्वदृग् ध्वस्त-बन्धनः ।
आस्थितः परमं योगं न देहं बुबुधे गतम् ॥ १०.१२ ॥

अथेन्द्रो वज्र-मुद्यम्य निर्मितं विश्वकर्मणा ।
मुनेः शक्तिभि-रुत्सिक्तो भगवत्तेजसान्वितः ॥ १०.१३ ॥

वृतो देवगणैः सर्वै-र्गजेन्द्रोपर्यशोभत ।
स्तूयमानो मुनिगणै-स्त्रैलोक्यं हर्षयन्निव ॥ १०.१४ ॥

ततः सुराणा-मसुरै रणः परमदारुणः ।
त्रेतामुखे नर्मदाया-मभवत् प्रथमे युगे ॥ १०.१६ ॥

सर्वे प्रयासा अभवन् विमोघाः कृताः कृता देवगणेषु दैत्यैः ।
कृष्णानुकूलेषु यथा महत्सु क्षुद्रैः प्रयुक्ता रुशती रूक्षवाचः ॥ १०.२८ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

10. 11. இங்ஙனம் நிச்சயித்த ததீசி முனிவர் பகவானாகிய பரப்பிரம்மத்தினிடம் தன்னை ஒடுக்கிக் கொண்டு உடலை நீத்தார்.

10. 12. இந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி இவற்றை யடக்கியவராய்த் தளைகள் நீங்கியவராய்த் தத்துவத்தையே காண்பவராய், யோகத்தின் உச்சியில் நிற்பவராய் விளங்கிய இவர் தேகம் நீங்கியதை உணரவே இல்லை.

10. 13-14. பின் இந்திரன் விசுவகர்மாவால் செய்து கொடுக்கப்பட்ட வஜ்ரத்தை உயரத்தூக்கியவனாய், முனிவருடைய சக்திகளால் ஊக்கம் மிகுந்தவனாய் பகவத்கிருபையுடன் கூடியவனாய், தேவகணங்களால் சூழப்பெற்று, முனி கணங்களால் துதிக்கப்பெற்று, மூவ்வுலகையும் மகிழ்விப்பவன் போல் ஐராவதத்தின் மேல் விளங்கினான்.

10. 16. பிறகு தேவர்களுக்கு அசுரர்களுடன் மிகக்கொடிய போர் ஆரம்பமாயிற்று. இது (இம்மன்வந்தரத்தின்) முதல் சதுர்யுகத்தில் திரேதாயுக ஆரம்பத்தில் நர்மதா நதிக்கரையில் நிகழ்ந்தது.

10. 28. கிருஷ்ணனால் ரக்ஷிக்கப்பட்ட மகான்களிடம் அற்பர்களால் கூறப்பட்ட கொடுஞ்சொற்கள் எங்ஙனம் வீணாகின்றனவோ அங்ஙனம் தேவகணங்களிடம் அசுரர்கள் செய்த முயற்சிகளெல்லாம் முற்றும் வீணாயின.

दृष्ट्वातप्यत संक्रुद्ध इन्द्रशत्रु-रमर्षितः ।
तान् निवार्यौजसा राजन् निर्भर्त्स्येद-मुवाच ह ॥ ११.३ ॥

वृत्र उवाच—
दिष्ट्या भवान् मे समवस्थितो रिपु-
र्यो ब्रह्महा गुरुहा भ्रातृहा च ।
दिष्ट्यानृणोऽद्याह-मसत्तम त्वया
मच्छूल-निर्भिन्न-दृषद्-धृदाचिरात् ॥ ११.१४ ॥

पुंसां किलैकान्तधियां स्वकानां
यास्संपदो दिवि भूमौ रसायाम् ।
न राति ता यद्द्वेष उद्वेग आधि-
र्मदः कलिर्व्यसनं संप्रयासः ॥ ११.२२ ॥

त्रैवर्गिकायास-विघात-मस्मत्-पतिर्विधत्ते पुरुषस्य शक्र ।
ततोऽनुमेयो भगवत्प्रसादो यो दुर्लभोऽकिंचन-गोचरोऽन्यैः ॥ ११.२३ ॥

---

11. 3. அரசே! இந்திர சத்துருவான விருத்திராஸுரன் இதைக் கண்டு மனமெரிந்து அடங்காக் கோபங்கொண்டான். அவர்களை (தேவர்களை) தனது வீரியத்தால் தடுத்தும் ஏசியும் பின்வருமாறு கூறுவான்.

விருத்திரன் கூறியது—

11. 14. பிரம்மஹத்தியும், ப்ராத்ருஹத்தியும், குருஹத்தியும் செய்த தாங்கள் என் சத்துருவாக என்முன் நிற்பது என் பாக்கியமே. தீயோரிற்கடைப்பட்டவரே! கல்லுக்கொப்பான உமது மார்பை எனது சூலத்தால் தாமதமின்றிப் பிளந்து நான் இப்போது கடனைத் தீர்த்துக்கொண்டவனுகப் போகின்றேன்.

11. 22. பகவான் தம்மைச் சார்ந்த நிச்சய புத்தி உடைய பக்தர்களுக்கு ஸ்வர்க்கத்திலோ பூமியிலோ பாதாளத்திலோ ஸம்பத்துக்களைக் கொடுக்கமாட்டார். ஏனெனில் அவற்றால் பகை, வருத்தம், கவலை, கொழுப்பு, கஷ்டம், விபத்து, பிரயாஸம் முதலியன உண்டாகின்றன.

11. 23. இந்திரனே! எங்கள் பிரபு (பகவான் ஸங்கர்ஷணர்) அறம் பொருள் இன்பமெனும் இம்மூன்றுக்காகச் செய்யப்படும் முயற்சிகளுக்கு இடையூறு விளைவிப்பார். அதனாலேயே பகவானுடைய அருள் ஊகிக்கப்பட வேண்டும். அது ஏதுமற்றவர்களால் அடைதற்குரியது; மற்றவர்களால் அடைதற்கரியது.

---

11. 23. அத: ஸம்யக் பகவத்ப்ரஸா**தாபா**வாத் தவ ஸம்ப**தோ** ப**விஷ்யந்தீதி** **பாவ**: ||

अहं हरे तव पादैकमूल-दासानुदासो भवितास्मि भूयः।
मनः स्मरेतासुपते-र्गुणांस्ते गृणीत वाक् कर्म करोतु कायः ॥ ११.२४ ॥

न नाकपृष्ठं न च पारमेष्ठ्यं न सार्वभौमं न रसाधिपत्यम्।
न योग-सिद्धी-रपुनर्भवं वा समंजस त्वा विरहय्य कांक्षे ॥ ११.२५ ॥

अजातपक्षा इव मातरं खगाः स्तन्यं यथा वत्सतरा क्षुधार्ताः।
प्रियं प्रियेव व्युषितं विषण्णा मनोऽरविन्दाक्ष दिदृक्षते त्वाम् ॥ ११.२६ ॥

ममोत्तमश्लोकजनेषु सख्यं संसारचक्रे भ्रमतः स्वकर्मभिः।
त्वन्माययाऽऽत्मात्मज-दार-गेहे-ष्वासक्त-चित्तस्य न नाथ भूयात् ॥ ११.२७ ॥

---

11. 24. ஹரியே! உன்னுடைய திருவடியொன்றிலேயே நாட்டமுள்ள அடியார்க்குமடியனுய் மீண்டும் நான் ஆகுமாறு அருள்புரிய வேண்டும். பிராணநாதனுன உன்னுடைய குணங்களையே என் மனது நினைக்கட்டும்; வாக்குப் பேசட்டும்; காயம் உனது கைங்கரியத்தையே செய்யட்டும்.

11. 25. எல்லாச் செல்வங்களுக்கும் உறைவிடமே! நான் உன்னைவிட்டு ஸ்வர்க்கத்தையோ, பிரம்மலோகத்தையோ, பூமண்டலாதிபத்தியத்தையோ, பாதாள உலகின் ஆட்சியையோ, யோக ஸித்திகளையோ, மீளாத முக்திநிலையையோ வேண்டேன்.

11. 26. கமலக்கண்ணனே! இரக்கை முளைக்காத பறவைகள் தாயை நோக்கி அவாவுவதுபோலும், பசியினுல் வருந்தும் இளங்கன்றுகள் ஊட்டுவதற்கு அவாவுவதுபோலும், மனங்கலங்கிய மனைவி தூரதேசம் சென்ற கணவனைக் காண அவாவுவதுபோலும் என் மனம் உன்னைக் காண அவாவுகிறது.

11. 27. பிரபுவே! என் கர்ம வசத்தால் பிறவிச் சக்கரத்தில் சுழலுகையில் எனக்கு உத்தமமான உன்னுடைய புகழைப் பேசும் பக்தர்களுடைய நட்பு ஏற்பட வேண்டும். மாயாபலத்தால் பிள்ளை, பெண்டு, வீடு என்பவற்றில் ஆழ்ந்த பற்றுள்ள எனக்கு அதே பற்று மீண்டும் ஏற்பட வேண்டாம்.

---

11. 24. ஒ. த்வத்ப்ருத்ய-ப்ருத்ய-ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோகநாத ॥
—முகுந்தமாலை

11. 25. ஒ. நாஸ்தா தர்மே ந வஸுநிசயே நைவ காமோபபோகே யத்யத்பவ்யம் பவது பகவன் பூர்வகர்மானுருபம் । ஏதத்ப்ரார்த்யம் மம பஹுமதம் ஜன்ம ஜன்மாந்தரேபி த்வத்பாதாம்போருஹயுககதா நிச்சலா பக்தி-ரஸ்து ॥
—முகுந்தமாலை.

11. 26. ஒ. அங்கோலம் நிஜபீஜஸந்ததி-ரயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்வீ நைஜவிபும் லதா க்ஷிதிருஹம் ஸிந்து: ஸரித்வல்லபம்
ப்ராப்னோதீஹ யதா ததா பசுபதே: பாதாரவிந்தத்வயம்
சேதோவ்ருத்தி-ருபேத்ய திஷ்டதி ஸதா ஸா பக்திரித்யுச்யதே ॥
—சிவானந்தலஹரீ: சங்.

इन्द्र उवाच—

अहो दानव सिद्धोऽसि यस्य ते मतिरीदृशी ।
भक्तः सर्वात्मनाऽऽत्मानं सुहृदं जगदीश्वरम् ॥ १२.१९ ॥

श्रीशुक उवाच—

इति ब्रुवाणावन्योन्यं धर्म-जिज्ञासया नृप ।
युयुधाते महावीर्या-विन्द्रवृत्रौ युधांपती ॥ १२.२३ ॥

दोर्भ्यां-मुत्कृत्त-मूलाभ्यां बभौ रक्तस्रवोऽसुरः ।
छिन्नपक्षो यथा गोत्रः खाद् भ्रष्टो वज्रिणा हतः ॥ १२.२६ ॥

गिरिराट् पादचारीव पद्भ्यां निर्जरयन् महीम् ।
जग्रास स समासाद्य वज्रिणं सहवाहनम् ॥ १२.२९ ॥

निगीर्णोऽप्यसुरेन्द्रेण न ममारोदरं गतः ।
महापुरुष-सन्नद्धो योगमाया-बलेन च ॥ १२.३१ ॥

भित्वा वज्रेण तत्कुक्षिं निष्क्रम्य बलभिद् विभुः ।
उच्चकर्त शिरः शत्रो-र्गिरिश्रृंग-मिवौजसा ॥ १२.३२ ॥

---

இந்திரன் கூறியது—

12. 19. அசுரனே! உலகிற்கீசுவரனும், உயிர்களுக்குயிரும், நண்பருமான பகவானிடம் எல்லா வகையிலும் நீ பக்தனுக விளங்குகின்ருய். அப்படிப்பட்ட மதியுடன் கூடிய நீ ஸித்த புருஷன் ஆகின்ருய். இது அதிசயிக்கத்தக்கது.

ஸ்ரீ சுகர் கூறியது—

12. 23. அரசே! சிறந்த போர் வீரர்களும், பராக்கிரமம் மிக்கவர்களுமான இந்திரனும் விருத்திரனும் தருமத்தை ஆராய்வதில் விருப்பமுள்ளவர்களாய் இவ்வாறு பேசிக்கொண்டே போர் புரிந்தனர்.

12. 26. இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் அடிபட்டு விருத்திராசுரன் தோள் பட்டைகள் இரண்டும் வெட்டுண்டு, இரத்தந் தோய்ந்தவனுய், இறக்கைகள் வெட்டுண்டு ஆகாயத்தினின்று வீழ்த்தப்பட்ட மலைபோல் காணப்பட்டான்.

12. 29. காலால் நடக்கும் பெரிய மலையைப்போல் அவன் பூமியதிரும்படி நடந்து வந்து இந்திரனையணுகி வாகனத்துடன் அவனை விழுங்கிவிட்டான்.

12. 31. விருத்திராசுரனுல் விழுங்கப்பட்டு அவனுடைய வயிற்றினுள் சென்ற போதும் இந்திரன் யோகமாயா பலத்தாலும் நாராயண கவசத்தால் ரக்ஷிக்கப்பட்டிருந் தமையாலும் மரணத்தை யடையவில்லை.

12. 32. விபுவான இந்திரன் வஜ்ராயுதத்தால் அவனுடைய வயிற்றைப் பிளந்து கொண்டு வேகமாய் வெளிவந்து, மலைச் சிகரம் போன்ற சத்துருவின் சிரத்தைத் தனது சக்தியால் வெட்டித் தள்ளினுன்.

वृत्रस्य देहान्निष्क्रान्त-मात्मज्योति-ररिन्दम ।
पश्यतां सर्वलोकाना-मलोकं समपद्यत ॥ १२.३५ ॥

वृत्रे हते त्रयो लोका विना शक्रेण भूरिद ।
सपाला ह्यभवन् सद्यो विज्वरा निर्वृतेन्द्रियाः ॥ १३.१ ॥

ब्रह्महत्या हते तस्मिन्नाससाद वृषाकपिम् ॥ १३.१० ॥

तां ददर्शानुधावन्तीं चाण्डालीमिव रूपिणीम् ।
जरया वेपमानांगीं यक्ष्मग्रस्ता-मसृक्पटाम् ॥ १३.१२ ॥

विकीर्य पलितान् केशां-स्तिष्ठ तिष्ठेति भाषिणीम् ।
मीनगन्ध्यसुगन्धेन कुर्वतीं मार्गदूषणम् ॥ १३.१३ ॥

नभो गतो दिशः सर्वाः सहस्राक्षो विशांपते ।
प्रागुदीचीं दिशं तूर्णं प्रविष्टो नृप मानसम् ॥ १३.१४ ॥

स आवसत् पुष्कर-नाल-तन्तू-नलब्ध-भोगो यदिहाग्निदूतः ।
वर्षाणि साहस्र-मलक्षितोऽन्तः स चिन्तयन् ब्रह्मवधाद् विमोक्षम् ॥ १३.१५ ॥

---

12. 35. சத்துருவை ஜயித்தவனே! விருத்திரனுடைய உடலினின்று கிளம்பிய ஆத்ம ஜோதி எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே உலகங்கடந்த பரஞ் ஜோதியில் கலந்தது.

13. 1. வள்ளலே! விருத்ரன் கொல்லப்பட்டதும் மூன்றுலகங்களும் லோக பாலர்களுடன் தாபம் நீங்கி இன்பமெய்தினர். இந்திரன் மட்டும் இன்புறவில்லை.

13. 10. (ஏனெனில்) விருத்திரன் கொல்லப்பட்டபோது (அதனால் ஏற்பட்ட) பிரம்மஹத்திப் பிசாசு இந்திரனை வந்தடைந்தது.

13. 12-13. மூப்பால் நடுங்கும் அங்கங்களுடனும் க்ஷயத்தால் பீடிக்கப்பட்டும் இருமிக்கொண்டும் இரத்தம்போல 'சிவந்த' வஸ்திரமணிந்தும், நரைத்த விரிதலையுடன், தன்னைப் பின் தொடர்ந்து, "நில், நில்" என்று சொல்லுகிறதும், மீன் வாடை வீசும் மூச்சுக் காற்றினால் வரும் வழியிலுள்ள காற்றைக் கெடுத்துக்கொண்டு சண்டாள ஸ்திரீ வடிவத்தில் தோன்றியதுமான அதைக் கண்டான்.

13. 14. அரசே! இந்திரன் ஆகாயத்தில் கிளம்பி எல்லாத் திசைகளிலும் ஓடி, முடிவில் வடகிழக்குத் திசையில் விரைந்து மானஸ ஸரஸ்ஸில் புகுந்தான்.

13. 15. அக்கினியைத் தூதனாக உடைய அவன் அங்கு யோகத்தை யிழந்தவனாய்த் தாமரைத் தண்டின் நூலினுள் மறைந்து எவர் கண்ணிலும் படாமல், பிரம்மஹத்திதோஷத்தினின்று விடுதலையைச் சிந்தித்துக்கொண்டு ஆயிரமாண்டு வசித்தான்.

तावत् त्रिणाकं नहुषः शशास विद्यातपो-योगबलानुभावः ।
स संपदैश्वर्य-मदान्धबुद्धि-र्नीत-स्तिरश्चां गतिमिन्द्रपत्न्या ॥ १३.१६ ॥

ततो गतो ब्रह्मगिरोपहूतः ऋतंभरध्यान-निवारिताघः ।
पापस्तु दिग्देवतया हतौजास्तं नाभ्यभूदवितं विष्णुपत्न्या ॥ १३.१७ ॥

तं च ब्रह्मर्षयोऽभ्येत्य हयमेधेन भारत ।
यथावद्दीक्षयांचक्रुः पुरुषाराधनेन ह ॥ १३.१८ ॥

स वाजिमेधेन यथोदितेन वितायमानेन मरीचिमिश्रैः ।
इष्ट्वाधियज्ञं पुरुषं पुराण-मिन्द्रो महानास विधूत-पापः ॥ १३.२१ ॥

पठेयु-राख्यान-मिदं सदा बुधाः शृण्वन्त्यथो पर्वणि पर्वणीन्द्रियम् ।
धन्यं यशस्यं निखिलाघमोचनं रिपुंजयं स्वस्त्ययनं तथाऽऽयुषम् ॥ १३.२३ ॥

---

13. 16. அதுவரை தேவலோகத்தை நஹுஷன் ஆண்டுவந்தான். அவன் வித்தையும் தவமும் யோகபலமும் வாய்ந்தவன். (ஆனால்) ஐசுவரியத்தாலும் ஸம்பத்தாலும் ஏற்பட்ட கொழுப்பால் அறிவாகிய கண்ணை இழந்து அவன் இந்திரனுடைய மனைவியால் பாம்புப் பிறவியில் புகுத்தப்பட்டான்.

13. 17. ஸத்ய நாராயணரின் தியானத்தால் பாவத்தினின்று விடுபட்ட இந்திரன் அப்போது பிரம்மதேவருடைய சொல்லால் மீண்டும் அழைக்கப்பட்டான். பிரம்மஹத்திப் பிசாசு திக்தேவதையால் வீரியமிழந்தமையாலும், இந்திரன் (மானஸ ஸரஸ்ஸில்) மகாலக்ஷ்மியால் காக்கப்பட்டமையாலும் அது அவனை அப்போது பீடிக்க இயலவில்லை.

13. 18. பாரதரே! பின்னர் பிரம்ம ரிஷிகள் இந்திரனை வரவேற்று பகவதாராதன ரூபமான அசுவமேதயாகத்திற்கு முறைப்படி தீக்ஷைபெறும்படி செய்தனர்.

13. 21. மரீசி முதலிய ரிஷிகளால் முறைப்படி செய்விக்கப்பெற்ற அசுவமேத யாகத்தால் புராண புருஷனாகிய யஜ்ஞநாராயணனை ஆராதித்துப் பெருமைவாய்ந்த இந்திரன் பாவத்தினின்று முற்றும் விடுபட்டவனானான்.

13. 23. இந்திரனைப் பற்றிய இவ் வரலாற்றை எப்போதும் புத்திமான்கள் படிக்க வேண்டும். விசேஷமாகப் பருவந்தோறும் கேட்க வேண்டும். இது செல்வத்தையும் புகழையும், பாவத்தினின்று மீட்சியையும், சத்துரு ஜயத்தையும், மங்களத்தையும், ஆயுளையும் அளிக்கவல்லது.

---

13. 16. **த்ரிநாகம்**—ந அகம் து:க்கம் யஸ்மின் இதி நாக: புண்ய லோக:, த்ருதீயம் நாகம் ஸ்வர்க்கம் ।

**கதை**—நஹுஷன் சசியை இச்சித்தான். சசி ப்ருஹஸ்பதியைச் சரணடைந்தாள். "பிராம்மணர் பல்லக்குத் தூக்கிவர என்னை அணுகினால் சம்மதிப்பேன் என்று சொல்!" என உபாயம் சொல்லிக் கொடுத்தார். அகஸ்தியர் முதலியோர் பல்லக்குத் தூக்க நஹுஷன் சசியிடம் சென்றான். 'ஸர்ப்ப, ஸர்ப்ப' விரைந்து செல்லுங்கள் என்று அகஸ்தியரைப் பாதத்தால் தீண்டினான், 'நீ ஸர்ப்பமாய்க் கீழே விழு' என்று அகஸ்தியர் சபித்தார்.

13. 17. **ருதம்பர**: ஸத்யபாலகோ ஹரி: தஸ்ய த்யானேன ।

राजोवाच—

रजस्तमःस्वभावस्य ब्रह्मन् वृत्रस्य पाप्मनः।
नारायणे भगवति कथमासीद् दृढा मतिः ॥ १४.१ ॥

श्रीशुक उवाच—

शृणुष्वावहितो राजन्नितिहास-मिमं यथा।
श्रुतं द्वैपायनमुखा-न्नारदा-द्देवलादपि ॥ १४.९ ॥

आसीद्राजा सार्वभौमः शूरसेनेषु वै नृप।
चित्रकेतु-रिति ख्यातो यस्यासीत् कामधुङ्महो ॥ १४.१० ॥

तस्यैकदा तु भवन-मङ्गिरा भगवान् ऋषिः।
लोका-ननुचरन्नेता-नुपागच्छद्यदृच्छया ॥ १४.१४ ॥

तं पूजयित्वा विधिवत् प्रत्युत्थानार्हणादिभिः।
कृतातिथ्य-मुपासीदत् सुखासीनं समाहितः ॥ १४.१५ ॥

चित्रकेतुरुवाच—

लोकपालैरपि प्रार्थ्याः साम्राज्यैश्वर्य-संपदः।
न नन्दयन्त्यप्रजं मां क्षुत्तृट्-काम-मिवापरे ॥ १४.२५ ॥

---

அரசன் கூறியது—

14. 1. பிரம்ம ஸ்வரூபியே! இரஜோ குணமும் தமோ-குணமும் இயற்கையிலே மிகுந்து, பாவியாயிருந்த விருத்திரனுக்கு பகவான் நாராயணனிடத்தில் நிலைபெற்ற மதி எங்ஙனம் உண்டாயிற்று?

ஸ்ரீ சுகர் கூறியது—

14. 9. அரசே! துவைபாயனர் வாயாலும், நாரதரிடமிருந்தும், தேவலரிடமிருந்தும் நான் கேட்டுள்ள பிரகாரம் இவ் வரலாற்றை நீர் ஒருமைப்பட்ட மனத்துடன் கேளும்.

14. 10. அரசே! சூரசேன தேசத்தில் சித்திரகேது என்று பெயர் பெற்ற ஒரு சக்கரவர்த்தி இருந்தான். அவனுக்கு பூமி வேண்டியதை யெல்லாம் அளிக்கும் காமதேனுவைப் போலிருந்தது.

14. 14. பகவான் அங்கிரஸ மஹரிஷி இவ்வுலகங்களைச் சுற்றிவருகையில் ஒரு சமயம் அவனுடைய அரண்மனைக்குத் தாமாகவே வந்தார்.

14. 15. எதிர்கொண்டழைத்து முறைப்படி அவரை யுபசரித்து அதிதி பூஜை செய்வித்துப் பின்னர் அவர் ஆஸனத்திலமர்ந்திருக்க அவரருகில் அமரிக்கையாக உட்கார்ந்தான்.

சித்திரகேது கூறியது—

14. 25. பசி தாகங்களினால் அன்னபானங்களில் விருப்பமுள்ளவனை மற்ற எவையும் மகிழ்விக்காதவாறு லோக பாலர்களாலும் விரும்பத்தக்க ஸாம்ராஜ்ய ஐசுவரிய ஸம்பத்துக்கள் புத்திரனில்லாத எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை.

ततः पाहि महाभाग पूर्वैः सह गतं तमः ।
यथा तरेम दुस्तारं प्रजया तद्विधेहि नः ॥ १४.२६ ॥

श्रीशुक उवाच—

इत्यर्थितः स भगवान् कृपालु-र्ब्रह्मणः सुतः ।
श्रपयित्वा चरुं त्वाष्ट्रं त्वष्टार-मयजद्विभुः ॥ १४.२७ ॥

ज्येष्ठा श्रेष्ठा च या राज्ञो महिषीणां च भारत ।
नाम्ना कृतद्युति-स्तस्यै यज्ञोच्छिष्टमदाद् द्विजः ॥ १४.२८ ॥

अथाह नृपतिं राजन् भवितैक-स्तवात्मजः ।
हर्ष-शोक-प्रद-स्तुभ्य-मिति ब्रह्मसुतो ययौ ॥ १४.२९ ॥

अथ काल उपावृत्ते कुमारः समजायत ॥ १४.३२ ॥

कृतद्युतेः सपत्नीनां प्रजाकामज्वरोऽभवत् ॥ १४.३७ ॥

विद्वेष-नष्टमतयः स्त्रियो दारुण-चेतसः ।
गरं ददुः कुमाराय दुर्मर्षा नृपतिं प्रति ॥ १४.४३ ॥

---

14. 26. ஆகையால், மகானுபாவரே! முன்னோர்களுடன் துக்கத்தையடைந்துள்ள என்னைக் காத்தருளும். கடத்தற்கரிய துன்பத்தைப் பிரஜையால் எங்ஙனம் கடப்போமோ அங்ஙனம் எங்களுக்கு அருள்புரிய வேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

14. 27. இவ்விதம் பிரார்த்திக்கப்பட்டவரும், கிருபையுடையவரும் எல்லாமறிந்தவரும் பிரம்ம குமாரருமாகிய அந்த அங்கிரஸ பகவான் த்வஷ்டாவை தேவதையாக உடைய சருவைக் கல்பித்து அதனால் த்வஷ்டாவைக் குறித்து யாகம் செய்தார்.

14. 28. பாரதரே! அந்தப் பிராம்மணர் யாகசேஷத்தை அரசனுடைய மஹிஷிகளில் மூத்தவளும் சிறந்தவளுமான கிருதத்யுதி என்றவளுக்குக் கொடுத்தார்.

14. 29. "அரசே! உனக்கு ஒரு குமாரன் உண்டாவான். அவன் உனக்கு ஸந்தோஷத்தைத் தருபவனாகவும், சோகத்தைத் தருபவனாகவும் இருப்பான்" என்று பிரம்ம குமாரர் அரசனை நோக்கிக் கூறிவிட்டுச் சென்றார்.

14. 32. உரிய காலத்தில் (கிருதத்யுதிக்கு) குமாரன் பிறந்தான்.

14. 37. கிருதத்யுதியின் சக்களத்திகளுக்குப் பிள்ளையில்லாத தாபம் வளர்ந்தது.

14. 43. பகையால் மதிகெட்டவர்களும், கொடியவர்களுமான அந்த ஸ்திரீகள் அரசனிடம் பொறுமையிழந்தவர்களாய்க் குழந்தைக் விஷத்தைக் கொடுத்தனர்.

---

14. 26. त्वन्नः पाहि । பா. பே.

तयोर्विलपतोः सर्वे दंपत्यो-स्तदनुव्रताः ।
रुरुदुः स्म नरानार्यः सर्व-मासीदचेतनम् ॥ १४.६० ॥

एवं कश्मल-मापन्नं नष्ट-संज्ञ-मनायकम् ।
ज्ञात्वाङ्गिरा नाम मुनिराजगाम सनारदः ॥ १४.६१ ॥

अङ्गिरा उवाच—

अनुग्रहाय भवतः प्राप्ता-वावा-मिह प्रभो ।
ब्रह्मण्यो भगवद्भक्तो नावसीदितु-मर्हति ॥ १५.१९ ॥

अधुना पुत्रिणां तापो भवतैवानुभूयते ।
एवं दारा गृहा रायो विविधैश्वर्य-संपदः ॥ १५.२१ ॥

सर्वेऽपि शूरसेनेमे शोक-मोह-भयार्तिदाः ।
गन्धर्वनगर-प्रख्याः स्वप्न-माया-मनोरथाः ॥ १५.२३ ॥

---

14. 60. அரசனும் மனைவியும் (துக்கந்தாளாமல்) அழும்பொழுது பரிஜனங்களாகிய ஆண்கள் பெண்கள் எல்லோரும் அழுதனர். அனைத்தும் அசேதனம் போலாயிற்று.

14. 61. இங்ஙனம் அரசன் மனங்கலங்கி அறிவிழந்து ஆறுதலளிப்பாரற்று இருப்பதை அறிந்து அங்கிரஸ முனிவர் நாரதருடன் அங்கு வந்தார்.

அங்கிரஸ் கூறியது—

15. 19. பிரபுவே! உமக்கு அனுக்கிரகம் செய்ய நாங்கள் இங்கு வந்துள்ளோம். பிரம்மநிஷ்டர்களைத் துணைகொண்டவனும் பகவானிடம் பக்தி செய்பவனும், மனமுடைந்து வருந்தற்குரியவனல்லன்.

15. 21. சூரசேனரே! புத்திரனைப் பெற்றவர்களுக்கேற்படும் தாபம் உம்மால் இப்போது அனுபவிக்கப்படுகிறது. இவ்வாறே மனைவி, வீடுகள், செல்வம், பலவகைப் பட்ட ஐசுவரியம் ஸம்பத்து என்ற இவையெல்லாம் துன்பத்தையும் மதிமயக்கத்தையும் பயத்தையும் அளிப்பவையே. இவை கந்தர்வ நகரத்துக்கும், கனவுக்கும், மாயைக்கும், மனோரதத்துக்கும் ஒப்பானவை.

---

15. 21. ஒ. மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு நாளுந்துன்பம்
விதலை நோயடையிற் றுன்பம் வியன் பருவத்துந் துன்பம்
கதமுறு காலர் வந்து கைப்பற்றிற் கணக்கில் துன்பம்
இதமுற லெந்நாள் சேயால் எற்றைக்குந் துன்பமாலல்.

—குசேலோபாக்கியானம்.

பா. பே.

---

15. 21. गृहा रामा ।

तस्मात् स्वस्थेन मनसा विमृश्य गति-मात्मनः ।
द्वैते ध्रुवार्थ-विश्रंभं त्यजोपशम-माविश ॥ १५.२६ ॥

नारद उवाच—
जीवात्मन् पश्य भद्रं ते मातरं पितरं च ते ।
सुहृदो बान्धवा-स्तप्ताः शुचा त्वत्कृतया भृशम् ॥ १६.२ ॥

कलेवरं स्वमाविश्य शेषमायुः सुहृद्वृतः ।
भुङ्क्ष्व भोगान् पितृप्रत्ता-नधितिष्ठ नृपासनम् ॥ १६.३ ॥

जीव उवाच—
बन्धु-ज्ञात्यरि-मध्यस्थ-मित्रोदासीन-विद्विषः ।
सर्व एव हि सर्वेषां भवन्ति क्रमशो मिथः ॥ १६.५ ॥

---

15. 26. ஆகையால் உன்னிடமே ஆழ்ந்து நிலைபெற்ற மனதால் உன்னுடைய உண்மையான போக்கை ஆலோசித்தறிந்து, துவைதப் பிரபஞ்சத்தில் இது நிலையானது என்ற புத்தியைவிட்டு வைராக்கியத்தை அடைவாயாக.

நாரதர் கூறியது—

16. 2. ஜீவாத்மாவே! உனக்கு மங்களமுண்டாகட்டும். உன் தாயையும் தந்தையையும் உற்ருர் உறவினரையும் கண் திறந்து பார். அவர்கள் உன்னைப் பற்றிய துக்கத்தால் மிகவும் தவிக்கின்ருர்கள்.

16. 3. உனது உடலில் மீண்டும் புகுந்து மிகுதியுள்ள ஆயுளை உன் பிதா உனக்குக் கூட்டிவைத்துள்ள போகங்களை அனுபவித்துக்கொண்டு உற்ருருடன் கழிப்பாயாக. சிம்மாஸனத்திலிருந்து அரசாட்சியும் புரிவாயாக.

ஜீவன் கூறியது—

16. 5. எல்லோரும் எல்லோருக்கும் மாறிமாறித் தொடர்ந்து பந்துக்களாகவும், ஞாதிகளாகவும், சத்துருக்களரகவும், மத்தியஸ்தர்களாகவும், மித்திரர்களாகவும், உதாசீனர்களாகவும் துவேஷிகளாகவும் ஆகின்றனர்.

---

15. 26. ஒ. (பராச: காமானனுயந்தி பாலாஸ்தே ம்ருத்யோர் யந்தி விததஸ்ய பாசம் அததீரா அம்ருதத்வம் விதித்வா த்ருவமத்ருவேஷ்விஹ நப்ரார்த்தயந்தே॥)

அறிவிற் சிறியோர் வெளியிலுள்ள இன்ப நுகர்ச்சிகளையே தொடர்ந்து செல்லுகின்றனர். அவர்கள் விரிந்து கிடக்கும் மரண வலையில் விழுகின்றனர். தீரர்களோ அழிவற்ற உண்மைப் பொருளை யறிந்து நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையில் நிலையுண்டென்று எதையும் நாடுவதில்லை. —கட. உப. 4. 2.

ஓ, ஊரனந்தம் பெற்ற பேரனந்தம் சுற்றுமுறவனந்தம் வினையினால்
உடலனந்தம் செயும் வினையனந்தங் கருத்தோவனந்தம் பெற்றபேர்
சீரனந்தம் சொர்க்க நரகமுமனந்தம் —தாயுமானவர்.

यथा वस्तूनि पण्यानि हेमादीनि ततस्ततः ।
पर्यटन्ति नरेष्वेवं जीवो योनिषु कर्तृषु ॥ १६.६ ॥

नित्यस्यार्थस्य संबन्धो ह्यनित्यो दृश्यते नृषु ।
यावद्यस्य हि संबन्धो ममत्वं तावदेव हि ॥ १६.७ ॥

एवं योनिगतो जीवः स नित्यो निरहंकृतः ।
यावद्यत्रोपलभ्येत तावत् स्वत्वं हि तस्य तत् ॥ १६.८ ॥

न ह्यस्यातिप्रियः कश्चिन्नाप्रियः स्वः परोऽपि वा ।
एकः सर्वधियां द्रष्टा कर्तृणां गुणदोषयोः ॥ १६.१० ॥

श्रीशुक उवाच—
इत्युदीर्य गतो जीवो ज्ञातय-स्तस्य ते तदा ।
विस्मिता मुमुचुः शोकं छित्त्वाऽऽत्मस्नेह-शृंखलाम् ॥ १६.१२ ॥

---

16. 6. எங்ஙனம் பண்டமாற்றுக்குப் பயன்படும் பொன் முதலிய பொருள்கள் ஆங்காங்கு மனிதர்களிடை மாறிமாறி வருகின்றனவோ அங்ஙனமே ஜீவனும் வெவ்வேறு பிறவியிலுள்ள மாதா பிதாக்களிடம் மாறிமாறி வருகின்றது.

16. 7. நீடித்திருக்கும் சொத்திலும்கூட சம்பந்தம் அநித்தியமென்பது மனிதர்களிடை காணவே படுகின்றது. எவனுக்கு எதுவரை ஸம்பந்தமோ அதுவரைதான் 'என்னுடையது' என்பதும்.

16. 8. இவ்விதமே பிறவியடைந்த ஜீவனும் நித்தியமானவன், அஹங்காரமில்லாதவன். எங்கு (எந்தப் பெற்றோரிடம்) எதுவரை காணப்படுகிறானோ அதுவரைதான் அவர்களுக்கு அவனிடத்தில் "நம்முடையவன்" என்ற உறவு ஏற்படுகிறது.

16. 10. இவனுக்கு அதிகம் பிரியமானவனும், பிரியமில்லாதவனும் எவனும் இல்லை. தன்னுடையவனுமில்லை, பிறனுமில்லை. நன்மைக்கும் தீமைக்கும் கர்த்தாக்களான எல்லோருடைய புத்திக்கும் ஒரே ஸாக்ஷியாக விளங்குபவன் அன்றோ இவன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

16. 12. இவ்விதம் கூறிவிட்டு அந்த ஜீவன் போய்விட்டான். அவனுடைய ஞாதிகள் அப்போது ஆச்சரியமுற்றவர்களாய் அவனுடன் தங்களைப் பிணைத்திருந்த நேசச் சங்கிலியை அறுத்துச் சோகத்தினின்றும் விடுபட்டனர்.

---

16. 10. ஒ. அநித்ய-மஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ —கீ, 9. 33.

16. 12. ஒ. அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ அப்பனெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னை யெத்தனை யெத்தனை சன்மமோ மூடனா யடியேனு மறிந்திலேன்
இன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ என்செய்வேன் கச்சியேகம்பநாதனே.
—பட்டினத்தார்.

स इत्थं प्रतिबुद्धात्मा चित्रकेतु-र्द्विजोक्तिभिः ।
गृहान्धकूपान्निष्क्रान्तः सरः पङ्कादिव द्विपः ॥ १६.१५ ॥

कालिन्द्यां विधिवत् स्नात्वा कृतपुण्यजलक्रियः ।
मौनेन संयतप्राणो ब्रह्मपुत्राववन्दत ॥ १६.१६ ॥

अथ तस्मै प्रपन्नाय भक्ताय प्रयतात्मने ।
भगवान्नारदः प्रीतो विद्यामेता-मुवाच ह ॥ १६.१७ ॥

ओं नमस्तुभ्यं भगवते वासुदेवाय धीमहि ।
प्रद्युम्नायानिरुद्धाय नमः सङ्कर्षणाय च ॥ १६.१८ ॥

नमो विज्ञानमात्राय परमानन्दमूर्तये ।
आत्मारामाय शान्ताय निवृत्तद्वैतदृष्टये ॥ १६.१९ ॥

आत्मानन्दानुभूत्यैव न्यस्तशक्त्यूर्मये नमः ।
हृषीकेशाय महते नमस्ते विश्वमूर्तये ॥ १६.२० ॥

---

16. 15. இங்ஙனம் சித்திரகேதுவும் அங்கிரசின் உபதேசங்களால் புத்தி தெளிந்தவனுய், ஒரு யானையானது குளத்தின் சேற்றினின்று மீண்டாற்போல், பாழுங் கிணறு போன்ற வீட்டினின்று வெளியேறினுன்.

16. 16. யமுனையில் முறைப்படி நீராடி, புண்ணிய தீர்த்தத்தில் செய்தற்குரிய கிரியைகளை முடித்து, இந்திரியங்களையடக்கி மௌனமாயிருந்துகொண்டு பிரம்ம குமாரர்களை (நாரதரையும், அங்கிரசரையும்) வந்தனம் செய்தான்.

16. 17. இந்திரியங்களை யடக்கியவனும் பக்தனும் சரண்புகுந்தவனுமான அவனிடம் நாரத பகவான் ஸந்தோஷமடைந்து அவனுக்குப் பின்வரும் வித்தையை உபதேசித்தார்.

16. 18 ('ஓம் நமஸ்துப்யம் பகவதே வாஸுதேவாய தீமஹி | ப்ரத்யும்னுயாநிருத்தாய நம: ஸங்கர்ஷணுய ச ||) ஓங்கார ஸ்வரூபியான பகவானே உனக்கு நமஸ்காரம். வாசுதேவனுகிய உன்னை மனதார வாழ்த்துகின்றேன். பிரத்யும்னனும், அநிருத்தனும், ஸங்கர்ஷணனும் ஆகிய உனக்கு நமஸ்காரம்.

16. 19. விஜ்ஞான ஸ்வரூபியும், பரமானந்த மூர்த்தியும் ஆத்மாராமனும், சாந்தனும், துவைத பாவனையற்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம்.

16. 20. ஆத்மானந்தானுபவத்தாலேயே மாயாசக்தியின் (விருப்பு வெறுப்பெனும்) மாறுதல்களைக் கடந்துநிற்கும் உனக்கு நமஸ்காரம். இந்திரியங்களை இயக்குவிப்பவனும், மகாபுருஷனும், விசுவமூர்த்தியுமாகிய உனக்கு நமஸ்காரம்.

वचस्युपरतेऽप्राप्य य एको मनसा सह।
अनामरूप-श्चिन्मात्रः सोऽव्यान्नः सदसत्परः ॥ १६.२१ ॥

यस्मिन्निदं यतश्चेदं तिष्ठत्यप्येति जायते।
मृण्मयेष्विव मृज्जाति-स्तस्मै ते ब्रह्मणे नमः ॥ १६.२२ ॥

यन्न स्पृशन्ति न विदु-र्मनो-बुद्धीन्द्रियासवः।
अन्त-र्बहिश्च विततं व्योमव-त्तन्नतोऽस्म्यहम् ॥ १६.२३ ॥

देहेन्द्रिय-प्राणमनो-धियोऽमी यदंशविद्धाः प्रचरन्ति कर्मसु।
नैवान्यदा लोहमिवाप्रतप्तं स्थानेषु तद् द्रष्टृपदेश-मेति ॥ १६.२४ ॥

---

16. 21. மனதுடன்கூட வாக்கும் எதை அடையமாட்டாமல் திரும்பி விடுகிறதோ அந்த நாமரூப மற்றதும் அறிவு மயமானதும், காரியத்துக்கும் காரணத்துக்கும் அப்பாற்பட்டதுமான ஒன்று எங்களைக் காப்பாற்றட்டும்.

16. 22. மண்ணினுலாகியவை மண்ணில் தோன்றியொடுங்குமாப்போல் இவ்வுலகு எதனிடம் நிலைபெறுகிறதோ, ஒடுங்குகிறதோ, எதினின்று உண்டாயதோ, அந்தப் பிரம்மமாகிய உமக்கு நமஸ்காரம்.

16. 23. மனதும், புத்தியும், இந்திரியங்களும் பிராண சக்திகளும் எவனைத் தொடமாட்டாவோ, எவனை அறியமாட்டாவோ, எவன் ஆகாயம்போல் உள்ளும் புறமும் பரவி நீக்கமறநிறைந்து நிற்பவனோ அவனை நான் நமஸ்கரிக்கின்றேன்.

16. 24. (ஜாக்கிரத்திலும், ஸ்வப்னத்திலும்) தேகம், இந்திரியம், பிராணன் மனது, புத்தி முதலிய சக்திகள் எதனுடைய சைதன்ய அம்சம் தம்மிடம் பிரதிபலித்தலினுல் செயல்களில் பிரவிருத்திக்கும் திறமை பெறுகின்றனவோ, வேறு சமயங்களில் (சுஷுப்தியிலும் மூர்ச்சையிலும்) தீயுடன் சம்பந்தமில்லாத உலோகம் போல் செயலில் திறமை பெறுவதில்லையோ, அந்த சைதன்யமே (திரஷ்டா) பார்ப்பவன் என்ற பெயர் கொண்டு விளங்குவதாம்.

---

16. 21. ஒ. எது வாக்கால் விளக்கப் பெருதோ, ஆனுல் வாக்கு எதனுல் விளக்கம் பெறுமோ அதுவே பிரம்மம் என்று நீ அறி. -கேன. உப. 1-4

16. 22. ஒ. குழந்தாய்! எங்ஙனம் ஒரு பிடி மண்ணினுல் மண்ணுலாகிய அனைத்தும் அறியப்பட்டதாகுமோ: வேறுபாடெல்லாம் பேசுமிடத்துப் பெயரளவிலேயோ, மண் ஒன்றே. உண்மையோ அங்ஙனம். —சா. உப. 6. 1. 4,

16. 24. ஒ. (யோsந்த: ப்ரவிச்ய மம வாசமிமாம் ப்ரஸுப்தாம் ஸஞ்ஜீவயதி) எவன் என்னுட்புகுந்து தூங்கியிருந்த எனது வாக்கை உயிர்ப்பித்தானே. —பாக. 4. 9. 6.

ஒ. மானிட சரீரம் ஒரு பானையைப்போன்றது. மனம் புத்தி இந்திரியங்கள் அப்பானையிலிட்ட நீர், காய்கறி, அரிசி, முதலியவற்றிற்குச் சமானம். அப்பானையை அடுப்பின் மீது வைத்தால் நெருப்புப் பானையிலுள்ளவற்றை வேகச் செய்யும். ஆனுல், வேகவைக்கும் உஷ்ணம் பானையினுடையதன்று. நீர், காய் கறி, அரிசி இவற்றினுடையது மன்று. அது போலச் சரீரத்தை இயக்குவிக்கும் சக்தி இந்திரியங்களுடைய தன்று, ஆத்மாவினுடையதே. —ரா.கி.

**யதம்சவித்தா:**—யச்சைதன்யாம்சேனுவிஷ்டாஸ்ஸந்த:|

ओं नमो भगवते परमपुरुषाय, महानुभावाय, महाविभूतिपतये, सकल-सत्त्व-परिबृढ-निकर-करकमल-कुड्मलोपलालित-चरणारविन्दयुगल, परम, परमेष्ठिन् नमस्ते ॥ १६.२५ ॥

श्रीशुक उवाच—

भक्तायैतां प्रपन्नाय विद्यामादिश्य नारदः।
ययावाङ्गिरसा साकं धाम स्वायंभुवं प्रभो ॥ १६.२६ ॥

चित्रकेतुस्तु विद्यां तां यथा नारद भाषिताम्।
धारयामास सप्ताह-मब्भक्षः सुसमाहितः ॥ १६.२७ ॥

ततश्च सप्त-रात्रान्ते विद्यया धार्यमाणया।
विद्याधराधिपत्यं स लेभेऽप्रतिहतं नृपः ॥ १६.२८ ॥

ततः कतिपयाहोभि-र्विद्ययेद्ध-मनोगतिः।
जगाम देवदेवस्य शेषस्य चरणान्तिकम् ॥ १६.२९ ॥

श्रीभगवानुवाच—

यन्नारदांगिराभ्यां ते व्याहृतं मेऽनुशासनम्।
संसिद्धोऽसि तया राजन् विद्यया दर्शनाच्च मे ॥ १६.५० ॥

---

16. 25. ஓங்கார ஸ்வரூபியும் பகவானும் பரம புருஷனும், மஹானுபாவனும் வைகுண்டநாதனும் ஆகிய உனக்கு நமஸ்காரம். தாமரைத் தளிர்போன்ற கைகளால் ஸாது ஸங்கங்களால் வருடப்பெற்ற பாதகமலம் படைத்தவனும், பரமபுருஷனும், ஸர்வேசுவரனுமாகிய உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ சுகர் கூறியது—

16. 26. பிரபுவே! நாரதர் இந்த வித்தையைப் பக்தனும் சரண்புகுந்தவனுமான சித்திரகேதுவுக்கு உபதேசித்துவிட்டு அங்கிரஸுடன் பிரம்ம லோகம் சென்றார்.

16. 27. சித்திரகேதுவும் நாரதர் உபதேசித்த பிரகாரம் அவ் வித்தையை ஏழுநாள் நிலைபெற்ற மனதுடன் ஜலபானம் மட்டும் செய்துகொண்டு ஜபம் செய்தான்.

16. 28. ஏழாவது இரவின் முடிவில் மந்திர ஜபத்தின் மகிமையால் அவ்வரசன் எங்குந் தடையற்ற வித்தியாதரர்களை யாளும் பதவியை யடைந்தான்.

16. 29. அதற்குச் சில நாட்களுக்குப்பின் மந்திர சக்தியால் பிரகாசிக்கின்ற மனோகதியையுடையவனாய், தேவதேவனான ஆதிசேஷனுடைய சரணகமலங்களின் ஸமீபத்தை யடைந்தான்.

ஸ்ரீ பகவான் கூறியது—

16. 50. அரசே! நாரதராலும் அங்கிரஸாலும் என்னைப் பற்றிய உபதேசம் உனக்கு எது அளிக்கப்பட்டதோ அந்த வித்தையாலும் என்னுடைய தரிசனத்தாலும் நீ ஸித்தனாய் விளங்குகின்றாய்.

एकदा स विमानेन विष्णुदत्तेन भास्वता ।
गिरिशं ददृशे गच्छन् परीतं सिद्ध-चारणैः ॥ १७.४ ॥

आलिंग्यांकीकृतां देवीं बाहुना मुनिसंसदि ।
उवाच देव्याः शृण्वत्या जहासोच्चै-स्तदन्तिके ॥ १७.५ ॥

चित्रकेतुरुवाच—

एष लोकगुरुः साक्षाद्धर्मं वक्ता शरीरिणाम् ।
आस्ते मुख्यः सभायां वै मिथुनी-भूय भार्यया ॥ १७.६ ॥

जटाधर-स्तीव्रतपा ब्रह्मवादी सभापतिः ।
अंकीकृत्य स्त्रियं चास्ते गतह्रीः प्राकृतो यथा ॥ १७.७ ॥

प्रायशः प्राकृताश्चापि स्त्रियं रहसि बिभ्रति ।
अयं महाव्रतधरो बिभर्ति सदसि स्त्रियम् ॥ १७.८ ॥

श्रीशुक उवाच—

भगवानपि तच्छ्रुत्वा प्रहस्यागाध-धी-र्नृप ।
तूष्णीं बभूव सदसि सभ्याश्च तदनुव्रताः ॥ १७.९ ॥

---

17. 4-5. ஒரு ஸமயம் அவன் விஷ்ணுவின் வரப்பிரஸாதத்தால் பெற்ற ஒளி மிகுந்த விமானத்தில் ஏறிச் செல்லுகையில் ஸித்த சாரணர்கள் சூழவீற்றிருப்பவரும் தேவியை மடியில் வைத்துக்கொண்டு கைகளால் அணைத்துக்கொண்டிருப்பவருமாகிய மலைக்கடவுளைக் கண்ணுற்றான். தேவியின் காதில் விழும்படி அவரருகில் உரக்கச் சிரித்துப் பின்வருமாறு கூறினான்.

சித்திரகேது கூறியது—

17. 6. இவர் உலகிற்கெல்லாம் பிரத்தியக்ஷமான குரு; உடல் படைத்தோர்க்கெல்லாம் தருமத்தை உபதேசிப்பவர்; ஆனால் ஸபையில் முதல்வராய் வீற்றிருக்கையிலும் மனைவியைக் கட்டிக்கொண்டிருக்கிறார்.

17. 7-8. ஜடை தரிப்பவராயும், கடுந்தவஞ் செய்பவராயும், வேதத்தை வெளியிடுபவராயும் ஸபாநாயகராயும் இருந்தும் மூடனைப்போல் வெட்கமின்றி ஸ்திரீயை மடியில் வைத்துக்கொண்டிருக்கிறார். பண்பற்றவர்கள் கூட ஸ்திரீயை ரகசியமாகத் தாங்குகிறார்கள். மகாவிரதத்தைக் கைக்கொண்ட இவர் ஸபையில் ஸ்திரீயைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ சுகர் கூறியது—

17. 9. அரசே! ஆழங் காணமுடியாத அறிவுடைய பகவானே அதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டு ஸபையில் பேசாமலிருந்து விட்டார். ஸபையிலுள்ளவர்களும் அவரைப் பின்பற்றினர்.

---

17. 7. இப்படியே கிருஷ்ணனையும் சிலர் பக்குவ மின்மையால் தூஷிக்கின்றனர்.

---

பா. பே.

17. 6. आर्यमुख्यः सत्सभायां । 17. 9. सभास्थास्तदनुव्रताः ।

इत्यतद्वीर्य-विदुषि ब्रुवाणे बह्वशोभनम् ।
रुषाऽऽह देवी धृष्टाय निर्जितात्माभिमानिने ॥ १७.१० ॥

पार्वत्युवाच--

अयं किमधुना लोके शास्ता दण्डधरः प्रभुः ।
अस्मद्विधानां दुष्टानां निर्लज्जानां च विप्रकृत् ॥ १७.११ ॥

न वेद धर्मं किल पद्मयोनि-र्न ब्रह्मपुत्रा भृगुनारदाद्याः ।
न वै कुमारः कपिलो मनुश्च ये नो निषेधन्त्यतिवर्तिनं हरम् ॥ १७.१२ ॥

एषा-मनुध्येय-पदाब्ज-युग्मं जगद्गुरुं मंगलमंगलं स्वयम् ।
यः क्षत्रबन्धुः परिभूय सूरीन् प्रशास्ति धृष्ट-स्तदयं हि दण्ड्यः ॥ १७.१३ ॥

---

17. 10. இங்ஙனம் அவருடைய பெருமையை அறியமாட்டாது அமங்களமான வார்த்தைகளை வெகுவாய்ப் பேசினவனும் தான் தன்னடக்கமுடையவன் என்று கருவித்தவனுமான சித்திரகேதுவை நோக்கிக் கோபித்துத் தேவியானவள் கூறுவாள்.

பார்வதி கூறியது—

17. 11. நம்மைப் போன்ற துஷ்டர்களுக்கும், வெட்கமற்றவர்களுக்கும் சிக்ஷிப் பவனும் தண்டிப்பவனும் தடுப்பவனும் ஆகிய பிரபு இப்போது இவன் தானே ?

17. 12. பிரம்ம தேவரும், பிரம்ம புத்திரர்களான பிருகு நாரதர் முதலியோரும், ஸனத்குமாரரும், கபிலரும், மனுவும் தருமத்தை யறியவில்லை போலும். ஏனெனில் அவர்கள் வரம்பைக் கடந்த ஹரனைத்தடுக்கவில்லை யல்லவா ?

17. 13. இவர்களால் தியானித்துப் போற்றற்குரிய பாதங்களையுடையவரும், மங்களங்களுக்கெல்லாம் தானே மங்களமாகியவரும் ஆகிய ஜகத்குருவை க்ஷத்திரியப் பதரும் நிலையற்ற சித்தமுடையவனுமாகிய இந்தச் சித்திரகேது மகான்களையும் அவமதித்து அடக்க முற்பட்டதால் இவன் தண்டித்தற்குரியவனுவான்.

---

17. 10. ஒ. (அலோக - ஸாமான்ய-மசிந்த்ய - ஹேதுகம் த்விஷந்தி மந்தாச் - சரிதம் மஹாத்மனும்) உலக நடத்தை போலில்லாததும் காரணத்தை அறிய முடியாததுமான மகான்களின் நடத்தையை அறிவிலிகள் வெறுக்கின்றனர். —காளிதாஸர்.

**நிர்ஜிதாத்மாபிமானினே**—நான் இந்திரியங்களை ஜயித்தவன், நான் பக்தன் என்றெல்லாம் ஏற்படும் கர்வம் அறிவாளிகளிடமும் காணப்படுகிறது.

17. 11. **விப்ரக்ருத்—விருத்தம்** ப்ரகர்ஷேண கரோதீதி விப்ரக்ருத் : (சிக்ஷை செய்யும் பிரபு)

17. 12. **விஷ்ணுவிடம்** உண்மையான பக்தியுடையவர்கள் பரமசிவனை தூஷிக்கமாட்டார்கள்.

17. 13. உமாதேவி தாக்ஷாயணியாக அவதரித்த போது சிவநிந்தை பொறுமல் சரீரத் தியாகம் செய்தவள்.

---

17. 12. कुमारो मुनिवृन्दवन्द्यो । 17. 13. यत् क्षत्रबन्धुः ।

नाय-मर्हति वैकुण्ठ-पाद-मूलोपसर्पणम् ।
संभावित-मतिः स्तब्धः साधुभिः पर्युपासितम् ॥ १७.१४ ॥

अतः पापीयसीं योनि-मासुरीं याहि दुर्मते ।
यथेह भूयो महतां न कर्ता पुत्र किल्बिषम् ॥ १७.१५ ॥

श्रीशुक उवाच—

एवं शप्त-श्चित्रकेतु-र्विमाना-दवरुह्य सः ।
प्रसादयामास सतीं मूर्ध्ना नम्रेण भारत ॥ १७.१६ ॥

चित्रकेतुरुवाच—

प्रतिगृह्णामि ते शाप-मात्मनोऽञ्जलिनाम्बिके ।
देवै-र्मर्त्याय यत्प्रोक्तं पूर्वदिष्टं हि तस्य तत् ॥ १७.१७ ॥

गुणप्रवाह एतस्मिन् कः शापः कोन्वनुग्रहः ।
कः स्वर्गो नरकः को वा किं सुखं दुःखमेव वा ॥ १७.२० ॥

---

17. 14. அஹங்காரம் மிக்கவனும், வணக்கமற்றவனுமாகிய இவன் ஸாதுக்களால் பரிவுடன் போற்றப்படும் வைகுண்டநாதனுடைய திருவடிகளை நெருங்குவதற்கு உரியவனுகான்.

17. 15. ஆகவே மகனே! மதிகெட்டவனே! எவ்வாற்ருல் மீண்டும் இங்கு மஹான்களுக்குப் பிழை செய்யமாட்டாயோ அவ்வாறு (வருந்தித் திருந்தும் பொருட்டு) பாவம் மிகுந்த அசுரப் பிறவியை யடைவாயாக.

ஸ்ரீ சுகர் கூறியது—

17. 16. பாரதரே! இவ்விதம் சபிக்கப்பட்ட அந்தச் சித்திரகேது விமானத்தினின்று இறங்கி வணங்கிய சிரத்துடன் தேவியைச் சாந்தப்படுத்தலானுன்.

சித்திரகேது கூறியது—

17. 17. அம்பிகையே! உமது சாபத்தை இரு கைகளையும் கூப்பி ஏற்றுக் கொள்ளுகிறேன். தேவர்களால் மனிதர்க்குக் கூறப்படுவது எதுவோ அது அவர்க்கு முன் வினைப்பயனுய் ஊழ்கூட்டி வைப்பதே யாகும்.

17. 20. குணங்களின் பிரவாகமாயமைந்துள்ள இந்தச் சம்சாரத்தில் எது சாபம், எது அனுக்கிரஹம்? எது ஸ்வர்க்கம், எது நரகம்? எது சுகம், எதுதான் துக்கம்?

---

17. 14. ஜய விஜயர்கள் ஸநகாதியர்களை அவமதித்ததால் வீழ்ச்சியுற்றது போல் சித்ரகேது சிவநிந்தையால் வீழ்ந்தான்.

பா. பே.

17. 14. संभावितोऽतिसंस्तब्धः ।

एकः सृजति भूतानि भगवानात्म-मायया ।
एषां बन्धं च मोक्षं च सुखं दुःखं च निष्कलः ॥ १७.२१ ॥

न तस्य कश्चि-द्दयितः प्रतीपो न ज्ञाति-बन्धु-र्न परो न च स्वः ।
समस्य सर्वत्र निरंजनस्य सुखे न रागः कुत एव रोषः ॥ १७.२२ ॥

तथापि तच्छक्ति-विसर्ग एषां सुखाय दुःखाय हिताहिताय ।
बन्धाय मोक्षाय च मृत्युजन्मनोः शरीरिणां संसृतयेऽवकल्पते ॥ १७.२३ ॥

अथ प्रसादये न त्वां शापमोक्षाय भामिनि ।
यन्मन्यसे असाधूक्तं मम तत्क्षम्यतां सति ॥ १७.२४ ॥

श्रीशुक उवाच—

इति प्रसाद्य गिरिशौ चित्रकेतु-ररिन्दम ।
जगाम स्वविमानेन पश्यतोः स्मयतो-स्तयोः ॥ १७.२५ ॥

---

17. 21. பரிபூர்ணரும் பற்றற்றவருமான பகவான் ஒருவரே தனது மாயையால் பிராணிகளைச் சிருஷ்டிக்கிறார். அவற்றிற்கு பந்தத்தையும் மோக்ஷத்தையும், சுகத்தையும் துக்கத்தையும் கற்பிக்கிறார்.

17. 22. அவருக்கு எவனும் வேண்டியவருமில்லை வேண்டாதவருமில்லை, ஞாதியுமில்லை பந்துவுமில்லை, அன்னியருமில்லை தன்னவருமில்லை. களங்கமற்றவரும் எல்லோரிடமும் ஸமமானவரும் ஆகிய அவருக்குச் சுகத்தில் பற்றில்லாதபோது கோபம் எங்கிருந்து வரும் ?

17. 23. ஆயினும், அவருடைய மாயாசக்தியாலேற்பட்ட (புண்ணிய பாவமயமான) விஸர்க்கம் உடல் படைத்தோர்க்குச் சுகத்திற்கும் துக்கத்திற்கும், நன்மைக்கும் தீமைக்கும், பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும், இறப்பிற்கும் பிறப்பிற்கும் இடையறாது தொடர்ந்துவரக் காரணமாகின்றது.

17. 24. பாமினி! பதிபக்தியிற் சிறந்தவளே! சாபத்தினின்று விடுதலை பெறுவதற்காக நான் உங்களை வழிபடவில்லை. எனினும் நான் கூறியதில் எதைத் தகாதெனக் கருதுகின்றீர்களோ அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

17. 25. சத்துருக்களை ஜயித்தவரே! சித்திரகேது பார்வதி பரமேசுவரர்களை இங்ஙனம் வேண்டிக்கொண்டு, அவர்கள் வியப்புடன் பார்த்துக்கொண்டிருக்கத் தன் விமானத்துடன் சென்று விட்டான்.

---

17. 22. ஒ. வேண்டுதல் வேண்டாமையிலா னடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்பையில. —குறள்.

இதை விஷ்ணுவிடங் கண்டவன் சிவனிடங் காணாததால் சாபமேற்பட்டது. பேதஞ்செய்பவன் பாவஞ் செய்பவனாகின்றான்.

---

17. 22. समस्य सर्वस्य । 17. 24. अतः प्रसादये । பா. பே.

ततस्तु भगवान् रुद्रो रुद्राणी-मिद-मब्रवीत् ।
देवर्षि-दैत्य-सिद्धानां पार्षदानां च शृण्वताम् ॥ १७.२६ ॥

श्रीरुद्र उवाच—

दृष्टवत्यसि सुश्रोणि हरे-रद्भुत-कर्मणः ।
माहात्म्यं भृत्य-भृत्यानां निस्पृहाणां महात्मनाम् ॥ १७.२७ ॥

नारायणपराः सर्वे न कुतश्चन बिभ्यति ।
स्वर्गापवर्ग-नरकेष्वपि तुल्यार्थ-दर्शिनः ॥ १७.२८ ॥

देहिनां देहसंयोगाद् द्वन्द्वानीश्वरलीलया ।
सुखं दुःखं मृति-र्जन्म शापोऽनुग्रह एव च ॥ १७.२९ ॥

वासुदेवे भगवति भक्तिमुद्वहतां नृणाम् ।
ज्ञान-वैराग्य-वीर्याणां नेह कश्चिद्व्यपाश्रयः ॥ १७.३१ ॥

नाहं विरिंचो न कुमारनारदौ न ब्रह्मपुत्रा मुनयः सुरेशाः ।
विदाम यस्येहित-मंशकांशका न तत्स्वरूपं पृथगीश-मानिनः ॥ १७.३२ ॥

17. 26. பின்னர் ருத்திர பகவான், தேவர்களும், அசுரர்களும், ரிஷிகளும் ஸித்தர்களும், பாரிஷதர்களும் கேட்கும்படி ருத்திராணியிடம் இங்ஙனம் கூறினர்.

ஸ்ரீ ருத்திரர் கூறியது—

17. 27. இடையழகியவளே! அதிசயச் செயல் மிகுந்த ஹரியின் அடியார்க்கடியார்களும் பற்றற்றவர்களுமாகிய மஹாத்மாக்களின் பெருமையைப் பார்த்தாயா ?

17. 28. ஸ்வர்க்கத்திலும் மோக்ஷத்திலும் நரகத்திலும் ஸமமான பயனே காணும் நாராயண பக்தர்கள் அனைவரும் எதினின்றும் பயமடைவதில்லை.

17. 29. உடல் படைத்தோர்க்கு உடலின் உறவால் சுகமும் துக்கமும், இறப்பும் பிறப்பும், சாபமும் அனுக்கிரகமும் ஆகிய துவந்துவங்கள் ஈசுவர லீலையால் ஏற்படுகின்றன.

17. 31. பகவான் வாசுதேவனிடத்தில் பக்திப் பெருக்குடையவர்களும், ஞான வைராக்கிய வீரியமுடையவர்களுமான மனிதர்க்கு நாடியடைய வேண்டியது இங்கு எதுவுமில்லை.

17. 32. எவருடைய உள்ளக் கிடக்கையை (லீலா ரகசியத்தை) நானும் பிரம்மாவும் ஸநத்குமாரரும் நாரதரும் பிரம்மபுத்திரர்களும், முனிவர்களும், தேவசிரேஷ்டர்களும் அறியமாட்டோமோ அவருடைய ஸ்வரூபத்தைத் தாங்கள் தனித்தனியே ஈசுவரர்கள் என்று அபிமானங் கொண்டவர்கள் அவருடைய அம்சாம்ச பூதர்களாயினும் எங்ஙனம் அறிவார்கள் ?

---

17. 28. ஒ. நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்திலிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்பமில்லை. —அப்பர்.

17. 31. பரமசிவன் தன்னை நிந்தித்தவனையும் துதிக்கிறார்.

**न ह्यस्यास्ति प्रियः कश्चि-न्नाप्रियः स्वः परोऽपि वा ।**
**आत्मत्वात् सर्वभूतानां सर्वभूत-प्रियो हरिः** ॥ १७.३३ ॥

**तस्य चायं महाभाग-श्चित्रकेतुः प्रियोऽनुगः ।**
**सर्वत्र समदृक् शान्तो ह्यहं चैवाच्युत-प्रियः** ॥ १७.३४ ॥

**तस्मान्न विस्मयः कार्यः पुरुषेषु महात्मसु ।**
**महापुरुष-भक्तेषु शान्तेषु समदर्शिषु** ॥ १७.३५ ॥

**श्रीशुक उवाच—**

**इति श्रुत्वा भगवतः शिवस्योमाभिभाषितम् ।**
**बभूव शान्तधी राजन् देवी विगत-विस्मया** ॥ १७.३६ ॥

**जज्ञे त्वष्टु-र्दक्षिणाग्नौ दानवीं योनि-माश्रितः ।**
**वृत्र इत्यभिविज्ञातो ज्ञान-विज्ञान-संयुतः** ॥ १७.३८ ॥

17. 33. இவருக்குப் பிரியனுமில்லை, அப்பிரியனுமில்லை, தன்னவனுமில்லை அன்னியனுமில்லை. எல்லா உயிர்களுக்கும் ஆத்மாவாயிருப்பதால் ஹரியானவர் எல்லா உயிர்களுக்கும் பிரியமானவர்.

17. 34. எங்கும் சமதிருஷ்டியுடையவனும் சாந்தனும் மஹாபாக்கியசாலியுமான இந்தச் சித்திரகேது அந்த பகவானுடைய பிரியனும் பின் தொடர்பவனுமாவான். அங்ஙனமேதான் நானும் அச்சுதப் பிரியன்.

17. 35. ஆகையால் மஹாபுருஷ பக்தர்களும், சாந்தர்களும் ஸமதர்சிகளும் மஹாத்மாக்களுமான புருஷர்களிடம் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.

ஸ்ரீ சுகர் கூறியது—

17. 36. அரசே! சிவபிரான் கூறியதை உமாதேவி கேட்டு வியப்பு நீங்கிச் சாந்தமதியுடையவளானாள்.

17. 38. ஞானத்துடனும் விஞ்ஞானத்துடன் கூடிய அவன்தான் அசுரப் பிரகிருதியை யடைந்து த்வஷ்டா செய்த யாகத்தில் தக்ஷிணாக்கினியில் தோன்றி விருத்திரன் எனப் பெயர் பெற்றவனானான்.

---

17. 33. ஒ. (**அவிபக்தம் விபக்தேஷு** தஜ்ஜ்ஞானம் **வித்தி** ஸாத்விகம்) வேற்றுமைகளில் ஒற்றுமையைக் காண்பதே ஸாத்விக ஞானம் என்று அறிவாய்.
—கீ. 18. 20.

விபக்தி வேற்றுமை யுணர்வு, பக்தி ஒற்றுமை யுணர்வு.

17. 34. '**சிவ**ஸ்ய ஹ்ருதயம் விஷ்ணு: விஷ்ணோஸ்து ஹ்ருதயம் **சிவ:**' என்னும் உண்மையை இவ்வரலாறு விளக்குகிறது.

17. 36. பார்வதீ தேவி சிவனுடைய பத்னியும் சிஷ்யையும் ஆகிறாள்.

एतत्ते सर्व-माख्यातं यन्मां त्वं परिपृच्छसि ।
वृत्रस्यासुरजातेश्च कारणं भगवन्मतेः ॥ १७.३९ ॥

इतिहास-मिमं पुण्यं चित्रकेतो-र्महात्मनः ।
माहात्म्यं विष्णुभक्तानां श्रुत्वा बन्धाद्विमुच्यते ॥ १७.४० ॥

श्रीशुक उवाच—

अथ कश्यपदायादान् दैतेयान् कीर्तयामि ते ।
यत्र भागवतः श्रीमान् प्रह्लादो बलिरेव च ॥ १८.१० ॥

मरुतश्च दितेः पुत्रा–श्चत्वारिंश–न्नवाधिकाः ।
त आसन्नप्रजाः सर्वे नीता इन्द्रेण सात्मताम् ॥ १८.१९ ॥

---

17. 39. பகவத் பக்தியுள்ள விருத்திரன் அசுரப் பிரவி எய்தக் காரணத்தை நீ என்னிடம் கேட்டதற்கு இது அனைத்தும் உனக்கு விளக்கிக் கூறப்பட்டது.

17. 40. மஹாத்மாவான சித்திரகேதுவின் புண்ணியமான இந்தச் சரித்திரத்தையும் விஷ்ணு பக்தர்களின் மாஹாத்மியத்தையும் கேட்பவன் (ஸம்ஸாரத்) தடைகளினின்று விடுபடுகிறான்.

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 10. இனி உனக்குக் கசியபருடைய வம்சத்தினர்களாகத் தோன்றிய தைத்தியர்களைப் பற்றிக் கூறுகிறேன். அந்த வம்சத்தில்தான் பக்திச் செல்வம் நிறைந்த பிரஹ்லாதனும் பலியும் தோன்றினார்கள்.

18. 19. மருத்துக்கள் நாற்பத்தொன்பது பேர். அவர்கள் திதி தேவியின் புத்திரர்கள். இந்திரனால் தனக்குச் சமமாக அவர்கள் அழைத்துக்கொள்ளப்பட்டனர். அவர்களுக்குப் பிரஜைகள் இல்லை.

---

18. 10.



राजोवाच—

कथं त आसुरं भाव-मपोह्यौत्पत्तिकं गुरो ।
इन्द्रेण प्रापिताः सात्म्यं किं तत्साधुकृतं हि तैः ॥ १८.२० ॥

श्रीशुक उवाच—

हतपुत्रा दितिः शक्रपार्ष्णि-ग्राहेण विष्णुना ।
मन्युना शोकदीप्तेन ज्वलन्ती पर्यचिन्तयत् ॥ १८.२३ ॥

कदा नु भ्रातृहन्तार-मिन्द्रियाराम-मुल्बणम् ।
अक्लिन्नहृदयं पापं घातयित्वा शये सुखम् ॥ १८.२४ ॥

दितिरुवाच—

वरदो यदि मे ब्रह्मन् पुत्रमिन्द्रहणं वृणे ॥ ॥ १८.३७ ॥

कश्यप उवाच—

पुत्रस्ते भविता भद्रे इन्द्रहा देवबान्धवः ।
संवत्सरं व्रतमिदं यद्यंजो धारयिष्यसि ॥ १८.४५ ॥

அரசன் கூறியது—

18. 20. குரு தேவரே! அவர்கள் பிறவியிலேற்பட்ட அசுரத் தன்மையை விட்டு இந்திரனால் தெய்வத் தன்மை அடைவிக்கப் பெற்றது எங்ஙனம்? அவர்களால் அதற்காகச் செய்யப்பட்ட நற்கருமம் என்ன?

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 23. இந்திரன் பக்கத்தை ஆதரித்த விஷ்ணுவால் தன் புத்திரர்களை இழந்த திதி சோகத்தினால் மூண்ட கோபம் கொழுந்துவிட்டெறிய பின்வருமாறு சிந்திக்கலானாள்.

18. 24. 'சகோதரனைக் கொன்றவனும், சிற்றின்பங்களிலுழல்பவனும், கொடியவனும், நெஞ்சில் ஈரமற்றவனும், பாவியுமான இந்திரனை மடியச் செய்து நான் எப்போது சுகமாய்ப் படுப்பேன்?'

திதி கூறியது (பர்த்தாவான கசியபரிடம்)—

18. 37. பிரம்மஸ்வரூபியே! தாங்கள் என் விருப்பத்தைப் பூர்த்தி செய்வீர்கள் எனில், இந்திரனைக் கொல்லும் புத்திரனையே நான் வேண்டுகிறேன்.

கசியபர் கூறியது—

18. 45. மங்களஸ்வரூபியே! உனக்குப் புத்திரன் உண்டாவான். (நான் கூறப் போகும்) இந்த விரதத்தை ஒரு வருஷம் தவறுதலின்றி அனுஷ்டித்தால் இந்திரனைக் கொல்பவனாக இருப்பான்; (இன்றேல் அவன்) தேவர்களுக்கு அனுகூலனாய் விடுவான்.

न हिंस्याद्भूत-जातानि न शपेन्नानृतं वदेत्।
नच्छिन्द्यान्नखरोमाणि न स्पृशेद्यदमंगलम् ॥ १८.४७ ॥

नाप्सु स्नायान्न कुप्येत न संभाषेत दुर्जनैः।
न वसीताधौतवासः स्रजं च विधृतां क्वचित् ॥ १८.४८ ॥

नोच्छिष्टं चण्डिकान्नं च सामिषं वृषलाहृतम्।
भुंजीतोदक्यया दृष्टं पिबे-दंजलिना-त्वपः ॥ १८.४९ ॥

नोच्छिष्टास्पृष्ट-सलिला संध्यायां मुक्त-मूर्धजा।
अनर्चिताऽसंयतवाङ् नासंवीता बहिश्चरेत् ॥ १८.५० ॥

नाधौतपादाप्रयता नार्द्रपान्नो उदक्शिराः।
शयीत नापराङ् नान्यै-र्न नग्ना न च सन्ध्ययोः ॥ १८.५१ ॥

धौतवासाः शुचिर्नित्यं सर्वमंगल-संयुता।
पूजयेत्प्रातराशात्-प्राग्-गोविप्राञ्श्रियमच्युतम् ॥ १८.५२ ॥

स्त्रियो वीरवती-श्चार्चेत्स्रग्गन्ध-बलिमण्डनैः।
पतिं चार्च्योपतिष्ठेत ध्यायेत् कोष्ठगतं च तम् ॥ १८.५३ ॥

---

18. 47-49. (விரதமாவது)உயிர்களை இம்சிக்கக் கூடாது; பிறரைச் சபிக்கக் கூடாது; பொய் பேசக் கூடாது; நகத்தையும், உரோமத்தையும்·சேதிக்கக் கூடாது; அமங்களமான (எலும்பு முதலிய) பொருள்களைத் தொடக் கூடாது; நீரில் இறங்கி ஸ்நாநம் செய்யக் கூடாது; கோபித்தல் கூடாது; துர் நடத்தையுடையவர்களுடன் பேசக்கூடாது; சுத்தம் செய்யாத வஸ்திரத்தைத் தரிக்கக்கூடாது; தரித்துக் களைந்த பூமாலையை மறுபடி தரிக்கக் கூடாது; ஒருவர் சாப்பிட்டு மீதி வைத்ததைச் சாப்பிடக் கூடாது; சண்டிகைக்கு நிவேதனம் செய்ததும், மாமிசம் கலந்ததுமான அன்னத்தைச் சாப்பிடக் கூடாது. இழிகுலத்தோரால் கொண்டுவரப்பட்டதையோ ரஜஸ்வலையால் பார்க்கப்பட்டதையோ சாப்பிடக்கூடாது. கையினுல் ஏந்தி ஜலத்தைப் பருகலாகாது.

18. 50. அசுத்தமாகவும், ஆசமனம் செய்யாமலும் ஸந்தியா காலத்திலும், விரிதலையுடனும், அலங்கரித்துக் கொள்ளாமலும், வாக்கையடக்காமலும் வெளியில் செல்லக் கூடாது.

18. 51. கால்களைச் சுத்தம் செய்து கொள்ளாமலும், அசுத்தமாகவும், ஈரக்கால் களுடனும், வடக்கோ மேற்கோ தலை வைத்துக் கொண்டும், பிறருடனும், வஸ்திரமில் லாமலும், ஸந்தியா காலத்திலும் சயனிக்கக் கூடாது.

18. 52. சுத்த வஸ்திரமணிந்து, எப்பொழுதும் பரிசுத்தமாகவும், மங்கள ஸ்வபாவமுடையவளாகவுமிருந்து கொண்டு காலையில் சாப்பிடுவதற்கு முன் பசுவையும் பிராம்மணர்களையும் லக்ஷ்மீ தேவியையும் நாராயணனையும் பூஜிக்க வேண்டும்.

18. 53. சுமங்கலிகளை மாலை சந்தனம் நைவேத்யம் பூஷணம் முதலியவற்றால் பூஜிக்க வேண்டும். பார்த்தாவையும் பூஜித்து உபசரிக்க வேண்டும். அவரைத் தன் வயிற்றினுள் புகுந்தவராய்ப் பாவிக்க வேண்டும்.

---

18. 51. नार्द्रपादा।

सांवत्सरं पुंसवनं व्रतमेत दविप्लुतम् ।
धारयिष्यसि चेत्तुभ्यं शक्रहा भविता सुतः ॥ १८.५४ ॥

श्रीशुक उवाच--

बाढमित्यभिप्रेत्याथ दिती राजन् महामनाः ।
काश्यपं गर्भमाधत्त व्रतं चांजो दधार सा ॥ १८.५५ ॥

मातृष्वसु-रभिप्राय-मिन्द्र आज्ञाय मानद ।
शुश्रूषणेनाश्रमस्तां दितिं पर्यचरत् कविः ॥ १८.५६ ॥

एकदा सा तु संध्याया-मुच्छिष्ठा व्रत-कर्शिता ।
अस्पृष्ट्वा-र्यधौतांघ्रिः सुष्वाप विधिमोहिता ॥ १८.६० ॥

लब्ध्वा तदन्तरं शक्रो निद्रापहृत-चेतसः ।
दितेः प्रविष्ट उदरं योगेशो योगमायया ॥ १८.६१ ॥

चकर्त सप्तधा गर्भं वज्रेण कनकप्रभम् ।
रुदन्तं सप्तधैकैकं मा रोदीरिति तान् पुनः ॥ १८.६२ ॥

---

18. 54. பும்ஸவனம் என்னும் இந்த விரதத்தைத் தவறுதலின்றி ஒரு வருஷம் பூர்த்தியாகும் வரை அனுஷ்டித்தால் உனக்கு இந்திரனைக் கொல்லக்கூடிய புத்திரன் உண்டாவான்,

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 55. அரசே! புத்தி சக்தி வாய்ந்த திதி 'அங்ஙனமே' என்று அங்கீகரித்துக் கசியபரிடம் கருவைத் தரித்து விரதத்தையும் ஒழுங்காக அனுஷ்டிக்கலானாள்.

18. 56. பெருமைப் படுத்துவோனே! எல்லாமறிந்த இந்திரன் சிற்றன்னையாகிய திதியின் நோக்கத்தை யுணர்ந்து அவளிருக்கும் ஆசிரமம் வந்து அவளுக்குப் பணிவிடை செய்யத் தலைப்பட்டான்.

18. 60. ஒரு ஸமயம் அவள் விரதத்தினால் களைப்படைந்து கால் அலம்பாமலும் ஆசமனம் செய்யாமலும் அசுத்தமாகவே ஸந்தியா வேளையில் விதிவசமாய்த் தூங்கி விட்டாள்.

18. 61-62 யோகேசுவரனை இந்திரன் (தன்னுடைய நோக்கத்தைப்பூர்த்தி செய்துகொள்ள) அந்த ஸந்தர்ப்பத்தையடைந்து நித்திரையால் அறிவிழந்த திதியின் கருப்பையில் யோகமாயையால் பிரவேசித்து பொன் நிறமான கருவை வஜ்ராயுதத்தால் ஏழு துண்டாக்கினான். அழத்தொடங்கிய அவற்றை, ஒவ்வொன்றையும், "அழாதே!" என்று சொல்லிக் கொண்டே மீண்டும் ஏழு துண்டாக்கினான்.

---

18. 59. பும்ஸவனம்—புத்ரோத்பத்திகரம்।

न ममार दिते-र्गर्भः श्रीनिवासानुकंपया ।
बहुधा कुलिशक्षुण्णो द्रौण्यस्त्रेण यथा भवान् ॥ १८.६५ ॥

सजूरिन्द्रेण पंचाशद्देवास्ते मरुतोऽभवन् ।
व्यपोह्य मातृदोषं ते हरिणा सोमपाः कृताः ॥ १८.६७ ॥

राजोवाच--
व्रतं पुंसवनं ब्रह्मन् भवता यदुदीरितम् ।
तस्य वेदितु-मिच्छामि येन विष्णुः प्रसीदति ॥ १९.१ ॥

श्रीशुक उवाच--
शुक्ले मार्गशिरे पक्षे योषिद्भर्तुरनुज्ञया ।
आरभेत व्रत-मिदं सार्वकामिक-मादितः ॥ १९.२ ॥

निशम्य मरुतां जन्म ब्राह्मणाननुमन्त्र्य च ।
स्नात्वा शुक्लदती शुक्ले वसीतालंकृतांबरे ।
पूजयेत् प्रातराशात् प्राग् भगवन्तं श्रिया सह ॥ १९.३ ॥

---

18. 65. தாங்கள் எங்ஙனம் துரோணபுத்திரருடைய அஸ்திரத்தால் மரணமடைய வில்லேயோ அங்ஙனமே ஸ்ரீநிவாஸனுடைய அனுக்கிரகத்தால் திதியின் கருவும் வஜ்ராயுதத்தால் வெகுவாய்ச் சிதைக்கப்பட்டும் மரிக்கவில்லே.

18. 67. அம்மருத்துக்கள் இந்திரனுடன் கூடி ஐம்பது தேவர்களாக மாறி விட்டனர். தாயிடமேற்பட்டிருந்த தோஷமாகிய இந்திரப்பகை ஹரியின் கிருபையால் விலகப்பெற்று அவர்கள் ஸோமபானம் செய்யும் தேவர்களாக்கப்பட்டனர்.

அரசன் கூறியது—

19. 1. பிரம்மஸ்வரூபியே! பும்ஸவனம் என்ற எந்த விரதமானது உம்மாலுப தேசிக்கப்பட்டதோ எதனுல் ஸ்ரீ விஷ்ணுவானவர் ஸந்தோஷமடைந்து அருள்புரிவாரோ அதை (இன்னும் விரிவாக) அறிய விரும்புகிறேன்,

ஸ்ரீ சுகர் கூறியது—

19. 2. மார்கழி மாதத்தில் சுக்லபக்ஷப் பிரதமையில் பதிவிரதா ஸ்தீரி பர்த்தாவின் அனுமதியைப் பெற்று எல்லா ஆசைகளேயும் பூர்த்தி செய்விக்கும் பும்ஸவனம் என்ற இவ்விரதத்தை ஆரம்பிக்கலாம்.

19. 3. மருத்துக்களின் ஜனனத்தைப்பற்றிய கதையைப் பிராம்மணர்கள் சொல்லக் கேட்டுவிட்டு, அவர்களுடைய அனுமதிபெற்று, ஸ்நாநம் செய்து, வெண்பல்லுடைய வளாகவும், இரண்டு வெள்ளே ஆடைகளே அணிந்து அலங்கரித்துக் கொண்டவளாகவும் காலே உண்டிக்கு முன் ஸ்ரீ தேவியுடன் கூடிய பகவானேப் பூஜிக்க வேண்டும்.

---

18. 67. ஸஜூரிந்த்ரேண—இந்த்ரேண ஸஹ।

ஒ. திதி தேவி இந்திரனேக் கொல்ல முயன்ற போதிலும் பகவானேச் சேவித்த தால் தன் விருப்பத்துக்கு மாருக இந்திரனுக்குச் சிநேகிதர்களான மருத்துக்களே யடைந்தாள். பகவானுடைய சேவை கெட்ட எண்ணமுடையவர்களிடத்திலும் நன்மையைக் கொடுப்ப தாகவே இருக்கிறது. (துஷ்டாசயேऽபி சுபதைவ பவந்நிஷேவா) —நாராயணீயம் 23-11.

19. 3. ஒ. நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம். —திருப்பாவை.

ओं नमो भगवते महापुरुषाय महानुभावाय महाविभूतिपतये सह महाविभूतिभि-र्बलिमुपहराणीति । अनेनाहरह-र्मन्त्रेण विष्णो-रावाहनार्घ्य-पाद्योपस्पर्शन-वास-उपवीत-भूषण-गन्ध-पुष्प-धूप-दीपो-पहाराद्युपचारांश्च समाहित उपाहरेत्
॥ १९.७ ॥

हविः शेषं तु जुहुया-दनले द्वादशाहुतीः ।
ओं नमो भगवते महापुरुषाय महाविभूतिपतये स्वाहा इति ॥ १९.८ ॥

श्रियं विष्णुं च वरदा-वाशिषां प्रभवा-वुभौ ।
भक्त्या संपूजयेन्नित्यं यदीच्छेत्सर्वसंपदः ॥ १९.९ ॥

प्रणमेद्दण्डवद्भूमौ भक्तिप्रह्वेण चेतसा ।
दशवारं जपेन्मन्त्रं तत-स्तोत्र-मुदीरयेत् ॥ १९.१० ॥

युवां तु विश्वस्य विभू जगतः कारणं परम् ।
इयं हि प्रकृतिः सूक्ष्मा माया-शक्ति-र्दुरत्यया ॥ १९.११ ॥

---

19. 7. (ஓம் நமோ பகவதே மஹாபுருஷாய, மஹானுபாவாய, மஹாவிபூதிபதயே ஸஹ மஹாவிபூதிபிர்-பலி-முபஹராணி) பிரணவஸ்வரூபியும் மஹா புருஷரும், மஹானுபாவரும், மஹா விபூதி (லக்ஷ்மீ) பதியுமான பகவானுக்கு நமஸ்காரம். மஹா விபூதிகளுடன் (ஸகல ஸௌபாக்கிய ஸாமக்ரிகளுடன்) ஆராதனையை ஸமர்ப்பிக்கின்றேன்" என்ற இம் மந்திரத்துடன் ஸ்ரீ விஷ்ணுவுக்கு நாள்தோறும் ஆவாஹனம், அர்க்கியம் பாத்யம், ஆசமனம், ஸ்நாநம், வஸ்திரம், உபவீதம், பூஷணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் முதலிய உபசாரங்களை ஒருமைப்பட்ட மனத்துடன் அடக்கமாகச் செய்யவேண்டும்.

19. 8. ஹோமத்திற்கென எடுத்து வைக்கப்பட்ட ஹவிஸ்ஸைக் கொண்டு அக்கினியில் பன்னிரண்டு ஆஹுதிகள் 'ஓம் நமோ பகவதே மஹாபுருஷாய மஹா விபூதிபதயே ஸ்வாஹா' எனும் மந்திரத்தால் செய்ய வேண்டும்.

19. 9. ஸகல ஸம்பத்துக்களையும் ஒருவன் விரும்பினால், ஸகலஸம்பத்துக்களையும் அளிப்பவர்களும் ஆசைகளையெல்லாம் பூர்த்தி செய்விப்பவர்களுமான ஸ்ரீதேவி மஹாவிஷ்ணு என்ற இருவரையும் பக்தியுடன் செவ்வனே நாள்தோறும் (இங்ஙனம்) பூஜித்தல் வேண்டும்.

19. 10. அன்பு நிறைந்த மனத்துடன் பூமியில் தண்டத்தைப்போல் உடலைக் கிடத்தி நமஸ்கரிக்க வேண்டும், பத்துத் தடவை மந்திர ஜபம் செய்து, பின்வரும் ஸ்தோத்திரத்தையும் சொல்ல வேண்டும்.

19. 11. "நீர் அகில ஜகத்திற்கும் மூல காரணரும் அகில ஜகத்திலும் நிறைந்தவருமாவீர். இந்த லக்ஷ்மியோ ஸூக்ஷ்மப் பிரகிருதியும் கடக்க முடியாத மாயா சக்தியுமாவாள்.

तस्या अधीश्वरः साक्षात्त्वमेव पुरुषः परः ।
त्वं सर्वयज्ञ इज्येयं क्रियेयं फलभुग्भवान् ॥ १९.१२ ॥

गुण-व्यक्ति-रियं देवी व्यंजको गुणभुग्भवान् ।
त्वं हि सर्व-शरीर्यात्मा श्रीः शरीरेन्द्रियाशया ॥
नामरूपे भगवती प्रत्यय-स्त्व-मपाश्रयः ॥ १९.१३ ॥

यथा युवां त्रिलोकस्य वरदौ परमेष्ठिनौ ।
तथा म उत्तमश्लोक सन्तु सत्या महाशिषः ॥ १९.१४ ॥

इत्यभिष्टूय वरदं श्रीनिवासं श्रिया सह ।
तन्निःसार्योपहरणं दत्त्वाचमन-मर्चयेत् ॥ ॥ १९.१५ ॥
यज्ञोच्छिष्ट-मवघ्राय पुनरभ्यर्चयेद्धरिम् ।

पतिं च परया भक्त्या महापुरुष-चेतसा ॥ १९.१६ ॥
प्रियै-स्तै-स्तै-रुपनमेत् प्रेमशीलः स्वयं पतिः ।
बिभृयात् सर्वकर्माणि पत्न्या उच्चावचानि च ॥ १९.१७ ॥

---

19. 12. "நீரே அம் மாயா சக்திக்கு அதீசுவரரும் பரம புருஷரும் ஆகின்றீர்; நீர் யஜ்ஞம், இவள் யஜ்ஞவிதானம்; இவள் செயல் வடிவினள், தாங்கள் பயனை யனுபவிப்பர்.

19. 13. "இந்த தேவியானவள் குணங்களின் விமரிசை, தாங்கள் குணங்களை விளங்கவைப்பவரும் அனுபவிப்பருமாகின்றீர்கள். நீர் அனைத்தையும் உடலாய்க் கொண்ட ஆத்மா, ஸ்ரீதேவியோ உடலுக்கும் இந்திரியங்களுக்கும் மூலஸ்தானம். நாம ரூப வடிவினள் பகவதி, அவற்றின் குறிப்பும் ஆதாரமும் நீர்.

19. 14. உத்தம சுலோகரே! நீங்கள் முவ்வுலகுக்கும் உயர் நலன்களை யளிப்பவர் களாகவும், பரம பூஜ்யர்களாகவும் உள்ளது எங்ஙனம் ஸத்தியமோ, அங்ஙனம் எனது உயர்வான விருப்பங்கள் ஸத்தியமாக வேண்டும்."

19. 15. ஸ்ரீதேவியுடன் ஸ்ரீநிவாஸனை இங்ஙனம் பரிவுடன் வேண்டிக்கொண்டு, அந்த நைவேத்தியத்தை அப்புறப்படுத்தி விட்டு, ஆசமனம் அளித்து அர்ச்சிக்க வேண்டும்.

19. 16-17. யாக சேஷத்தை முகர்ந்து பார்த்து மறுபடியும் ஹரியை அர்ச்சிக்க வேண்டும். (பத்தினியானவள்) பதியைப் பரம பக்தியுடனும் மஹாபுருஷ பாவனையுடனும் பிரியமான பொருள்களைக் கொண்டு உபசரித்து நமஸ்கரிக்க வேண்டும். பதியும் உள்ளன்புடன் பத்தினியின் எல்லாக்காரியங்களிலும், உயர்ந்ததாயினும் தாழ்ந்ததாயினும் அனுகூலனாக இருந்து நடத்தித்தர வேண்டும்.

---

19. 13. ப்ரத்யய: நாம ரூபயோ: ப்ரகாச: । உபாச்ரய: தயோராதார: ।

19. 14. ஒ. உடையாள் உந்தன் நடுவிருக்கும், உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரு மிருப்பதனால் அடியேன் உன்
அடியார் நடுவுள்ளிருக்கும் அருளைப் புரியாய் பொன்னம்பலத் தெம்
முடியா முதலே என் கருத்து முடியும் வண்ணம் முன் நின்றே.
—திருவாசகம்.

19. 17, ஒ. விவாகமந்திரம்—'த்யௌரஹம் ப்ருதிவீ த்வம்; ரேதோ஽ஹம் ரேதோ ப்ருத் த்வம்; மனோஹமஸ்மி வாக் த்வம்; ஸாமாஹமஸ்மி ருக்த்வம்; ஸா மாமனுவ்ரதா பவ ||

कृत-मेकतरेणापि दंपत्योरुभयोरपि ।
पत्न्यां कुर्या-दनर्हायां पतिरेतत् समाहितः ॥ १९.१८ ॥

एतेन पूजाविधिना मासान् द्वादश हायनम् ।
नीत्वाथोपचरेत् साध्वी कार्तिके चरमेऽहनि ॥ १९.२१ ॥

श्वोभूतेऽप उपस्पृश्य कृष्णमभ्यर्च्य पूर्ववत् ।
पयः-श्तेन जुहुयाच्चरुणा सह सर्पिषा ॥ १९.२२ ॥

पाकयज्ञ-विधानेन द्वादशैवाहुतीः पतिः ।
ब्राह्मणान् भोजयेद्भक्त्या स्वन्नाद्यैर्द्वादशात्मवान् ॥ १९.२३ ॥

आचार्य-मग्रतः कृत्वा वाग्यतः सह बन्धुभिः ।
दद्यात्पत्न्यै चरोः शेषं सुप्रजस्त्वं सुसौभगम् ॥ १९.२४ ॥

एतच्चरित्वा विधिवद्व्रतं विभो-रभीप्सितार्थं लभते पुमानिह ।
स्त्री त्वेतदास्थाय लभेत सौभगं श्रियं प्रजां जीवपतिं यशो गृहम्
॥ १९.२५ ॥

---

19. 18. தம்பதிகளில் ஒருவர் செய்தபோதிலும், பலன் இருவருக்குமே யாகும். பத்தினி பூஜை செய்யத் தகுதியில்லாதபோது, பதியே பொறுப்புடனும் முழுமனத் துடனும் இதைச் செய்ய வேண்டும்.

19. 21-23. இந்தப் பூஜாநியமத்துடன் பன்னிரண்டு மாதங்கொண்ட வருஷம் கழிந்தபின் கார்த்திகைக் கடைசி நாளன்று பதிவிரதையானவள் விடியற்காலையில் ஸ்நாநம் செய்து, வழக்கம்போல் கிருஷ்ணனைப் பூஜித்துப் பாலில் பக்குவம் செய்து திட்டமாக்கிய சருவை நெய்யுடன் கலந்து பதியானவன் பாகயஜ்ஞ முறைப்படிப் பன்னிரண்டு ஆஹுதிகளைச் செய்ய வேண்டும். நல்ல மனதுடன் சிறந்த அன்னம் முதலியவற்றால் பன்னிரண்டு பிராம்மணர்களுக்கு போஜனம் செய்வித்தல் வேண்டும்.

19. 24. ஆசாரியனை முன்னிட்டுக்கொண்டு பந்துக்களுடன் கூடி மௌனியாக இருந்து கொண்டு நல்ல ஸௌபாக்கியத்தையும் ஸத்புத்திரனையு மளிக்கவல்ல சருசேஷத்தைப் பத்தினிக்குக் கொடுக்க வேண்டும்,

19. 25. இந்த விரதத்தை முறைப்படி அனுஷ்டித்த புருஷன் பகவானிடமிருந்து இச்சித்த பொருளையடைவான். இதை அனுஷ்டித்த ஸ்திரீயானவள் ஸௌபாக்கியத் தையும், ஸம்பத்தையும், நன் மக்களையும், வாழ்க்கை முழுவதும் பதியுடன் கூடியிருந் தலையும், புகழையும், (இன்பம் நிறைந்த) வீட்டையும் அடைவாள்.

---

19. 23. **பாகயஜ்ஞவிதானேன**—பார்வண-ஸ்தாலீ-பாக-**விதா**னேன ।
19. 25. 'போஷணம்' எனும் லக்ஷணத்தை விளக்கும் ஆறுவது ஸ்கந்தத்திற்கு மகுடம் வைத்தாற்போல் இந்த விரதம் அமைகிறது. விரத மனுஷ்டித்தல் நம் கடன். நம்மைப் போஷித்தல் நாராயணன் கடன்.

பா. பே.

---

19. 23. **प्रणाम्य शिरसा भक्त्या भुञ्जीत तदनुज्ञया ।**

कन्या च विन्देत समग्रलक्षणं वरं त्ववीरा हतकिल्बिषा गतिम् ।
मृतप्रजा जीवसुता धनेश्वरी सुदुर्भगा सुभगा रूपमग्र्यम् ॥ १९.२६ ॥

विन्देद्विरूपा विरुजा विमुच्यते य आमयावीन्द्रिय-कल्पदेहम् ।
एतत् पठन्नभ्युदये च कर्मण्यनन्त-तृप्तिः पितृदेवतानाम् ॥ १९.२७ ॥

तुष्टाः प्रयच्छन्ति समस्त-कामान् होमावसाने हुतभुक् श्रीहरिश्च ।
राजन् महन्मरुतां जन्म पुण्यं दितेर्व्रतं चाभिहितं महत्ते ॥ १९.२८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां संहितायां
पारमहंस्यां श्रीवैयासिक्यां हयग्रीवब्रह्मविद्यायां
षष्ठः स्कन्धः समाप्तः ॥

---

19. 26-27. கன்னிகை எல்லா லக்ஷணங்களும் நிறைந்த சிறந்த கணவனை யடைவாள். புருஷனை யிழந்தவள் பூஜித்தால் பாவந்தேயப் பெற்று நற்கதியை யடைவாள். குழந்தைகளையிழந்தவள் பூஜித்தால் ஆயுள் மிக்க குழந்தைகளைப் பெறுவாள். செல்வமிருந்து கணவனுடைய அன்பைப் பெருதவள் அந்த ஸௌபாக் கியத்தைப் பெறுவாள். அழகில்லாதவள் அழகில் சிறந்தவளாவாள். நோய்வாய்ப் பட்டவர் நோயினின்று விடுபட்டு இந்திரிய வன்மை வாய்ந்த உடலைப் பெறுவர். மங்கள காரியங்களில் இதைப் படித்தால் பிதிருக்களுக்கும் தேவர்களுக்கும் அளவு கடந்த திருப்தி உண்டாகும்.

19. 28. அரசே! யஜ்ஞபோக்தாவான நாராயணனும் லக்ஷ்மீதேவியும் ஹோமத் தின் முடிவில் ஸந்தோஷமடைந்து எல்லா விருப்பங்களின் பூர்த்தியையும் அருள்வர். இங்ஙனம் மருத்துக்களின் ஜன்மமும், புண்ணியமும் சிறப்பும் வாய்ந்த திதியின் விரதமும் உனக்குக் கூறப்பட்டது.

**தக்ஷ வம்ச வரலாறு முற்றிற்று.**

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம் சுலோ கங்கள்அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை எனப்படுவதுமான

ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் ஆருவது ஸ்கந்தம் முற்றும்.



# ॥ सप्तमः स्कन्धः ॥

## ॥ प्रह्लादचरितम् ॥ १४ ॥

राजोवाच—

समः प्रियः सुहृद्ब्रह्मन् भूतानां भगवान् स्वयम् ।
इन्द्रस्यार्थे कथं दैत्यान् अवधी-द्विषमो यथा ॥ १.१ ॥

न ह्यस्यार्थः सुरगणैः साक्षान्निःश्रेयसात्मनः ।
नैवासुरेभ्यो विद्वेषो नोद्वेगश्चागुणस्य हि ॥ १.२ ॥

इति नः सुमहाभाग नारायण-गुणान् प्रति ।
संशयः सुमहान् जातस्तद्भवांश्छेत्तु-मर्हति ॥ १.३ ॥

---

# ஏழாவது ஸ்கந்தம்

## 14. பிரஹ்லாத சரித்திரம்

அரசன் கூறியது—

1. 1. பிரம்ம ஸ்வரூபியே! பகவான் எல்லா உயிர்களுக்கும் உண்மையில் சமமானவரும் பிரியமானவரும் உள்ளன்புடையவருமன்றோ? விஷம ஸ்பாவமுடைய வரைப்போல் இந்திரனுக்காக எங்ஙனம் தைத்தியர்களைக் கொன்ருர்?

1. 2. முற்றும் ஆத்மானந்த வடிவினரான இவருக்கு தேவர்களால் ஆக வேண்டியது ஒன்றுமில்லை. குண ஸம்பந்தமற்றவரான இவருக்கு அசுரர்களிடம் பகையோ கோபமோ இருக்கவும் இடமில்லையன்றோ?

1. 3. மகாபாகரே! நாராயணனுடைய குணங்களைப் பற்றி எங்களுக்கு இம் மாதிரியான பெரிய சந்தேகம் ஏற்பட்டுள்ளது. அதைத் தாங்களே போக்குவதற் குரியவர்.

---

1. 0. ஸ்வபக்த-பக்ஷபாதேன தத்விபக்ஷ-விதாரணம் ।
ந்ருஸிஹ்ம-மத்புதம் வந்தே பரமானந்த-விக்ரஹம் ॥
ஊதி : பஞ்சதசாத்யாயைஸ்-ஸப்தமே வர்ண்யதே ஸதுஞ ॥
ஊதிச்ச வாஸனு ப்ரோக்தா தத்தத்-கர்மானுஸாரிணீ ॥
அசுபா ச சுபாசேதி த்விதா ஸா ஹேது-பேதத:
அசுபா மஹதாம் கோபாச் சுபா மஹதனுக்ரஹாத் ॥
ஹரேர்-த்வாரபயோர்-யத்வத்-வைகுண்டே வஸதோரபி ।
சது:ஸந-ருஷா விஷ்ணுத்வேஷாத்யசுபவாஸனு ॥
யதா ஹி-தைத்ய-கர்ப்பே s பி ப்ரஹ்லாதஸ்ய ஸத: ஸ்திரா ।
நாரதானுக்ரஹாதாஸ விஷ்ணௌ ஸத்பக்தி-வாஸனு ॥
ஸ்வபக்தந்து ஸதா விஷ்ணுர்-த்விஷந்தமபி ரக்ஷதி ॥
த்ருதீயேsத பவேத்-த்வாஸ்தா-வகரோ-தாத்மஸாத் புன: ॥
அதோ மனீஷிணு யத்ன: கார்யோ மஹதனுக்ரஹே ।
இத்யேத-தர்த்த-மூதீஞ-மத்ர லக்ஷண-முச்யதே ॥

श्रीशुक उवाच—

साधु पृष्टं महाराज हरेश्चरित-मद्भुतम् ।
यत्र भागवत-माहात्म्यं भगवद्भक्ति-वर्धनम् ॥ १.४ ॥

निर्गुणोऽपि ह्यजोऽव्यक्तो भगवान् प्रकृतेः परः ।
स्वमाया-गुण-माविश्य बाध्य-बाधकतां गतः ॥ १.६ ॥

अत्रैवोदाहृतः पूर्व-मितिहासः सुरर्षिणा ।
प्रीत्या महाक्रतौ राजन् पृच्छतेऽजातशत्रवे ॥ १.१२ ॥

दृष्ट्वा महाद्भुतं राजा राजसूये महाक्रतौ ।
वासुदेवे भगवति सायुज्यं चेदिभूभुजः ॥ १.१४ ॥

तत्रासीनं सुरऋषिं राजा पाण्डुसुतः क्रतौ ।
पप्रच्छ विस्मितमना मुनीनां शृण्वता-मिदम् ॥ १.१४ ॥

युधिष्ठिर उवाच—

अहो अत्यद्भुतं ह्येतद्दुर्लभैकान्तिना-मपि ।
वासुदेवे परे तत्त्वे प्राप्तिश्चैद्यस्य विद्विषः ॥ १.१५ ॥

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 4. அரசே! எங்கு பாகவத மாகாத்மியமும் பகவத் பக்தியின் பெருக்கும் விளங்குமோ அந்த அத்புதமான ஹரி லீலையைப் பற்றி நீர் வினவியது மிக நன்று.

1. 6. பிரகிருதியைக் கடந்தவனும், பிறவியற்றவனும், வெளிப்படையாய்த் தோன்ருதவனும், நிர்க்குணனும் ஆயினும் பகவான் தனது மாயா குணங்களில் புகுந்து நின்று ஒழித்தற்குரியவர்களை ஒழிப்பவனுகிருன்.

1. 12. அரசே! இவ் விஷயத்தில் தேவரிஷியாகிய நாரதரால் முன்னொருகால், மஹத்தான (ராஜசூய) யாகத்தில் பகைவரற்ற தருமபுத்திரர் பிரீதியுடன் வினவுகையில் எடுத்துரைக்கப்பட்ட சரித்திரம் ஒன்றுளது.

1. 13-14. இராஜசூய மஹாயக்ஞத்தில் சேதியரசனுகிய சிசுபாலன் பகவான் வாசுதேவனிடத்தில் ஸாயுஜ்யத்தையடைந்த அத்யத்புத நிகழ்ச்சியைக் கண்ணுற்றுப் பாண்டு புத்திரரான தருமபுத்திர மகாராஜன் அங்கு யாகத்தில் வீற்றிருந்த முனிவர்கள் கேட்டுக்கொண்டிருக்க, மனதில் திகைப்புடையவராய்ப் பின்வருமாறு தேவரிஷியாகிய நாரதரிடம் வினவினுர்.

யுதிஷ்டிரர் கூறியது—

1. 15. அந்தோ! ஏகாந்த பக்தர்களாலும் அடைவதற்கரிய பரதத்துவமான வாசுதேவனிடத்தில் ஸாயுஜ்யம் வைரியான சேதியரசனுக்குக் கிடைத்தது மிகவும் விந்தையாகவல்லவோ இருக்கிறது.

---

1. 13. चेदिभूभृतः ।

एतद्वेदितु-मिच्छामः सर्व एव वयं मुने।
भगवन्निन्दया वेनो द्विजै-स्तमसि पातितः ॥ १.१६ ॥

श्रीशुक उवाच—

राज्ञस्तद्वच आकर्ण्य नारदो भगवान् ऋषिः।
तुष्टः प्राह तमाभाष्य शृण्वंत्या-स्संसदः कथाः ॥ १.२१ ॥

नारद उवाच—

निन्दन-स्तव-सत्कार-न्यक्कारार्थं कलेवरम्।
प्रधान-परयो राजन्नविवेकेन कल्पितम् ॥ १.२२ ॥

तथा न यस्य कैवल्या-दभिमानोऽखिलात्मनः।
परस्य दमकर्तु-र्हि हिंसा केनास्य कल्प्यते ॥ १.२४ ॥

---

1. 16. வேனன் பகவானை நிந்தித்ததால் பிராம்மணர்களால் நரகில் வீழ்த்தப் பட்டான். முனிவரே! (அது அப்படியிருக்க இவன் எங்ஙனம் ஸாயுஜ்யப் பதவி பெற்றான் என்ற) இதை நாங்களனைவரும் அறிய விரும்புகிறோம்.

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 21. அரசரின் அவ் வார்த்தையைக் கேட்டு பகவான் நாரத மகரிஷி மகிழ்ச்சி யடைந்தவராய்த் தருமபுத்திரரை விளித்துச் சபையோர் கேட்டுக்கொண்டிருக்கக் கதை களைச் சொல்லலானார்.

நாரதர் கூறியது—

1. 22. அரசே! நிந்தை, துதி, மரியாதை, அவமானம் இவற்றிற்குப் பொரு ளாவது சரீரம். இது பிரகிருதி புருஷ விவேகமின்மையால் கற்பிக்கப்பட்டது.

1. 24. இரண்டற்றவராய் அனைத்துக்கும் ஆத்மாவாய்ச் சரீராபிமானமில்லாமல் இருந்துகொண்டு எவர் எல்லோரையும் சிக்ஷிக்கின்றாரோ அந்தப் பரம புருஷனுக்கு இம்சை எவரால் கல்பிக்க இயலும்?

---

1. 16. **சிசுபாலன் வரலாறு**:—(ம. பா. ஸபாபர்வம் அத். 66. பீஷ்மர் கூறியது).
இவன் சேதிராஜனுக்குப் புத்திரனாக மூன்று கண்களும் நான்கு கைகளும் உடையவ
னாய்க் கழுதைபோல் கத்திக்கொண்டு பிறந்தான். அரசனும் தாய்மாரும் இவனை வனத்
தில் எறிந்துவிட எண்ணினர். அப்போது அசரீரி "இவனுக்கு இப்போது மரணமில்லை,
இவனைக் கொல்லப்போகிறவன் வேறு" என்று கூறிற்று. அவன் யார் என்று வினவ
அதே அசரீரி "எவன் மடியில் எடுத்துக் கொள்ளப்பட்டபோது இந்தக்குழந்தையின் அதிகக்
கண்ணும் கைகளும் மறைந்து போமோ அவனே யமனாவான்" என்று கூறிற்று. இவ்வதிச
யக் குழந்தையைக் காண வந்தவர் மடியிலெல்லாம் குழந்தை வைக்கப்பட்டது. இவனு
டைய மாமன் மகனான கிருஷ்ணன் மடியில் வைக்கப்பட்டபோது அதிகக் கண்ணும் கைக
ளும் மறைந்தன. அப்போது சிசுபாலனுடைய தாயார், "கிருஷ்ணா! எனக்கொரு வரம்
தரவேண்டும். சிசுபாலன் செய்யும் பிழைகளைப் பொறுக்கவேண்டும்" என்றாள். கிருஷ்
ணன், "கொல்லத்தக்க குற்றம் செய்யினும், நூறு பிழைகளைப் பொறுப்பேன்" என்று
கூறினார்.

1. 24. யஸ்மாத்-பகவதோ நிந்தாதிக்ருதம் வைஷம்யம் நாஸ்தி தஸ்மாத்-யேந-கேநாப்-யுபாயேன த்யாயத: தேனைவ நிந்தாதி க்ருத-பாபஸ்யாபி நாசாத் தத் ஸாயுஜ்யம் யுக்தம்।

तस्माद्वैरानुबन्धेन निर्वैरेण भयेन वा ।
स्नेहात् कामेन वा युंज्यात् कथंचिन्नेक्षते पृथक् ॥ १.२५ ॥

यथा वैरानुबन्धेन मर्त्य-स्तन्मयता-मियात् ।
न तथा भक्तियोगेन इति मे निश्चिता मतिः ॥ १.२६ ॥

कामाद् द्वेषाद्भयात् स्नेहाद्यथा भक्त्येश्वरे मनः ।
आवेश्य तदघं हित्वा बहव-स्तद्गतिं गताः ॥ १.२९ ॥

गोप्यः कामाद्भयात् कंसो द्वेषाच्चैद्यादयो नृपाः ।
संबन्धाद् वृष्णयः स्नेहाद्यूयं भक्त्या वयं विभो ॥ १.३० ॥

कतमोऽपि न वेनः स्यात् पंचानां पुरुषं प्रति ।
तस्मात् केनाप्युपायेन मनः कृष्णे निवेशयेत् ॥ १.३१ ॥

---

1. 25. ஆகையால் தொடர்ந்த பகைமையாலோ, பகைமையின் ஒழிவாலோ, பயத்தாலோ, நட்பாலோ, காமத்தாலோ, (பகவானிடத்தில்) ஒருவன் மனதைச் செலுத்தட்டும். அப்போது பிரிதொன்றைக் காணுன்.

1. 26. எங்ஙனம் தொடர்ந்த பகைமையால் மனிதன் தன்மயனுய்விடுகிருனே அங்ஙனம் பக்தி யோகத்திஞலும் ஆகமாட்டான் என்பது என்னுடைய நிச்சயமான கொள்கை.

1. 29. காமத்தாலும் துவேஷத்தாலும் பயத்தாலும், நட்பாலும் ஈசுவரனிடம் மனதைப் புகுத்தி அதுதன் நிமித்தமான குறைகளைப் போக்கிப் பக்தியிஞல் போலவே பலர் அவரை நாடி நற்கதி யடைந்திருக்கின்றனர்.

1. 30. பிரபுவே! காமத்தால் கோபியர்களும், பயத்தால் கம்ஸனும், துவேஷத்தால் சிசுபாலன் முதலிய அரசர்களும், உறவால் விருஷ்ணி குலத்தாரும் (அவனையடைந்தனர்); நட்பால் நீங்கள் (அடைந்திருக்கிறீர்கள்); பக்தியால் நாங்கள் (அடைந்துள்ளோம்).

1. 31. வேனன் இவ் வைந்து வகை மக்களில் எவ் வகையிலும் சேர்ந்தவனல்லன். (அதஞல்தான் அவனுக்கு நற்கதி கிட்டவில்லை). ஆகையால் எவ் வுபாயத்தாலாவது மனதை ஒருவன் கிருஷ்ணனிடம் நிலைபெறச் செய்யட்டும்.

---

1. 25. உதாரணமாகப் புருஷனும் மனைவியும் ஒருவர்க்கொருவர் உறவை மட்டும் மறவாமலிருக்கட்டும். சண்டையிட்டதஞல் தவறில்லை. ஊடலுக்குப் பின் கூடல் இனிமையாகவே இருக்கும்.

1. 30. நாமும் துவேஷித்து பகவானை அடையலாமா என்ருல், அவனுக்கு அது பொருந்தியது பூர்வ கர்ம வசத்தால் என்று விளக்க வரலாறு கூறப்படுகிறது.

---

1. 30. भक्त्या वयं नृप ॥

मातृष्वसेयो वश्चैद्यो दन्तवक्त्रश्च पाण्डव ।
पार्षद-प्रवरौ विष्णो-र्विप्रशापात् पदाच्च्युतौ ॥ १.३२ ॥

वैरानुबन्ध-तीव्रेण ध्यानेनाच्युत-सात्मताम् ।
नीतौ पुनर्हरेः पार्श्वं जग्मतु-र्विष्णुपार्षदौ ॥ १.४६ ॥

युधिष्ठिर उवाच—

विद्वेषो दयिते पुत्रे कथमासीन्महात्मनि ।
ब्रूहि मे भगवन् येन प्रह्लादस्याच्युतात्मता ॥ १.४७ ॥

नारद उवाच—

हिरण्यकशिपू राजन्नजेयमजरामरम् ।
आत्मान-मप्रतिद्वन्द्व-मेकराजं व्यधित्सत ॥ ३.१ ॥

1. 32. பாண்டு புத்திரரே! உங்களுக்குச் சிறிய தாயார் மக்களாகிய சிசு பாலனும் தந்தவக்திரனும் விஷ்ணுவின் பார்ஷத சிரேஷ்டர்களாயிருந்து பிராம்மண சாபத்தால் அப் பதத்தினின்று நழுவியவர்களாவர்.

1. 46. தீவிரமான பகைமையின் தொடர்பால் ஏற்பட்ட தியானத்தின் பயனுய் அச்சுதனிடமிருந்து பிரியாத நிலைமைக்கு அழைத்துக் கொள்ளப்பட்டனர். மீண்டும் ஹரியின் பக்கத்தையடைந்து விஷ்ணு பார்ஷதர்களாய் விட்டனர்.

யுதிஷ்டிரர் கூறியது—

1. 47. பகவானே! மகாத்மாவும் அன்புக்குரியவனுமான புத்திரனிடத்தில் ஹிரண்யகசிபுவுக்குப் பகை எதனுலுண்டாயிற்று? பிரஹ்லாதனுக்கு அச்சுதனிடத்தில் அனன்ய பக்தி எதனுலுண்டாயிற்று? அதைக் கூறியருளவேண்டும்.

நாரதர் கூறியது—

3. 1. அரசே! ஹிரணியகசிபு பிறரால் ஜயிக்கமுடியாதவனுகவும் மூப்பும் மரணமு மற்றவனுகவும், எதிரியற்ற ஒரே அரசனுகவும் தன்னை ஆக்கிக்கொள்ள விரும்பினுன்.

1. 32. சூரன் = மாரீஷா

| | | | | |
|---|---|---|---|---|
| வசுதேவன் = தேவகி | ப்ருதை = பாண்டு | ச்ருததேவா = சால்வன் | ச்ருதச்ரவஸ் = தமகோஷன் | ச்ருதகீர்த்தி = த்ருஷ்டகேது |
| கிருஷ்ணன் | மூன்று பாண்டவர் | தந்தவக்த்ரன் | சிசுபாலன் | கைகயர்கள் |

ஒ. தத: ஸூக்ஷ்மதமம் ஜ்யோதி: க்ருஷ்ண-மாவிச-தத்புதம் |
பச்யதாம் ஸர்வபூதானும் யதா சைத்யபதோ்-ந்ருப || —பாக.10. 78. 10.

தந்தவக்த்ரன் துவாரகையில் யுத்தம் செய்து இறந்தான். சிசுபாலனைப் போலவே அவனிடமிருந்தும் ஒரு ஒளி கிளம்பி கிருஷ்ணனிடம் புகுந்ததை எல்லோரும் கண்டனர்.

1. 32. पदच्युतौ । பா. பே.

स तेपे मन्दरद्रोण्यां तपः परमदारुणम् ।
ऊर्ध्वबाहु-र्नभो-दृष्टिः पादांगुष्ठावाश्रितावनिः ॥ ३.२ ॥

स निरीक्ष्यांबरे देवं हंसवाह-मवस्थितम् ।
ननाम शिरसा भूमौ तद्दर्शन-महोत्सवः ॥ ३.२४ ॥

हिरण्यकशिपु-रुवाच—
नम आद्याय बीजाय ज्ञानविज्ञानमूर्तये ।
प्राणेन्द्रिय-मनो-बुद्धि-विकारै-र्व्यक्ति-मीयुषे ॥ ३.२८ ॥

---

3. 2. அவன் கைகளை உயரத் தூக்கிக் கண்களால் வானத்தை நோக்கிக் கால் கட்டை விரல்களால் பூமியில் நின்றுகொண்டு மந்தரமலைச் சாரலில் மிகக் கடுமையான தவத்தைச் செய்யலானான்.

3. 24. (தவத்தின் பயனாய் நீண்ட காலத்திற்குப் பின்) அவன் ஹம்ஸ வாகனத்தில் வானவெளியில் எழுந்தருளிய பிரம்ம தேவரைக் கண்ணுற்று, அத் தரிசனத்தால் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கப் பூமியில் தலைபடிய வணங்கினான்.

ஹிரணியகசிபு கூறியது—

3. 28. உலகின் வித்தும், ஞானமும் விஞ்ஞானமுமே வடிவாகியவரும் பிராணன் இந்திரியங்கள் மனம் புத்தியாகிய மாறுபாடுகளில் வடிவுடன் வெளித் தோன்றுபவரும் ஆகிய ஆதிபுருஷருக்கு நமஸ்காரம்.

---

**இரண்டாவது அத்தியாயம் :—**

தம்பியாகிய ஹிரண்யாக்ஷனை வராஹ மூர்த்தியாகிய பகவான் வதஞ் செய்ததைதும் கோபங்கொண்ட ஹிரண்யகசிபு தைத்தியர்களை நோக்கி, "விஷ்ணுவுக்கு பலமாயிருப்பது வேதியர்களுடைய யாகக்கிரியைகள். ஆகையால் வேதாத்தியயனமும் தர்மானுஷ்டானமும் எங்கு வளர்கிறதோ, வேதியர்கள் எங்குள்ளார்களோ அங்கெல்லாம் சென்று அவர்களைப் பொசுக்குங்கள், வெட்டுங்கள்" என்றான்.

யத்ர யத்ர த்விஜா காவோ வேதா வர்ணாச்ரம-க்ரியா : ।
தம் தம் ஜனபதம் யாத ஸந்தீபயத வ்ருச்ச்யத ॥

பிறகு அவன் தன் தாயாரையும் தம்பி மனைவியையும் தம்பியின் புத்திரர்களையும் ஞானம் பேசிச் சமாதானம் செய்தான். "ஜீவர்கள் கூடுவதும் பிரிவதும் வழிப்போக்கர்கள் தண்ணீர்ப்பந்தலில் சேருவதும் பிரிவதும் போலவே. உசீனர தேசத்தில் ஸுயஜ்ஞன் என்று ஒரு அரசன் இருந்தான், அவனை யுத்தத்தில் எதிரிகள் கொன்று விட்டனர். அவனுடைய மனைவிகள் அவன் பாதங்களில் விழுந்து புரண்டழுதார்கள். அப்போது யமதர்மராஜன் அங்கே ஒரு சிறுவனாகத் தோன்றி அவர்களிடம் கூறியதாவது : 'தாய் தந்தையரை யிழந்த சிறுவனாகிய நான் கவலையற்றிருக்கிறேன். வழியில் நழுவின பொருள் ஈசனால் காப்பாற்றப் படுகிறது. வீட்டிலிருப்பது நாசமடைகிறது. அப்படி நாதனற்ற நான் ஜீவிக்கிறேன். வீட்டில் பந்துக்களுடன் இருப்பவன் சாகிறான். நீங்கள் துக்கிப்பது வீண். நூறு வருஷம் அழுதாலும் இவனை மீண்டு அடையப்போவதில்லை' யமன் இவ்வாறு கூறிவிட்டு அங்கேயே மறைந்தான். பிறகு பந்து ஜனங்கள் மனந்தேறினர். நீங்களும் அவ்வாறே எண்ணி மனத்தைத் தேற்றிக் கொள்ளவேண்டும்" என்று கூறினான்.

यदि दास्य-स्यभिमतान् वरान् मे वरदोत्तम ।
भूतेभ्य-स्त्वद्विसृष्टेभ्यो मृत्युर्मा भून्मम प्रभो ॥ ३.३५ ॥

नान्त-र्बहि-र्दिवा-नक्त-मन्यस्मादपि चायुधैः ।
न भूमौ नांबरे मृत्युर्न नरैर्न मृगैरपि ॥ ३.३६ ॥

व्यसुभि-र्वासुमद्भिर्वा सुरासुर-महोरगैः ।
अप्रतिद्वन्द्वतां युद्धे ऐकपत्यं च देहिनाम् ॥ ३.३७ ॥

सर्वेषां लोकपालानां महिमानं यथाऽऽत्मनः ।
तपो योगप्रभावाणां यन्न रिष्यति कर्हिचित् ॥ ३.३८ ॥

ब्रह्मोवाच—

तातेमे दुर्लभाः पुंसां यान् वृणीषे वरान् मम ।
तथापि वितराम्यंग वरान् यदपि दुर्लभान् ॥ ४.२ ॥

नारद उवाच—

स इत्थं निर्जित-ककुबेकरा-ड्विषयान् प्रियान् ।
यथोपजोषं भुंजानो नातृप्य-दजितेन्द्रियः ॥ ४.१९ ॥

---

3. 35. பிரபுவே! வரமளிப்பவரிற் சிறந்தவரே! விரும்பும் வரனே எனக்குக் கொடுப்பதானல், உம்மால் சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளிடமிருந்து எனக்கு மரண முண்டாகாமலிருக்க வேண்டும்.

3. 36. மற்றவைகளினின்றும், ஆயுதங்களாலும், உள்ளோ, வெளியோ, பகலோ, இரவோ, பூமியிலோ, ஆகாயத்திலோ, மனிதர்களாலோ, மிருகங்களாலோ மரணம் உண்டாகக்கூடாது.

3. 37. உயிரற்றவைகளாலோ, உயிருள்ளவைகளாலோ, தேவர்களாலோ, அசுரர் களாலோ, மகா நாகர்களாலோ (மரணம் உண்டாகக்கூடாது) உடல் படைத்த அனே வரையும் ஒருவனுகவே அடக்கியாளும் வல்லமையையும், போரில் எதிர்க்கக்கூடியவரே இல்லாமையையும் அளிக்கவேண்டும்.

3. 38. (இந்திரன் முதலிய) எல்லா லோகபாலர்களிடம் விளங்கும் உமது பெருமையும், தவமும் யோக மகிமையும் உடையவர்களிடம் எப்போதும் விலகா துறையும் (அணிமாதி) சித்திகளும் (எனக்கு அளிக்கவேண்டும்.)

பிரம்மா கூறியது—

4. 2. மகனே! நீ என்னிடம் வேண்டும் வரங்கள் எவையோ அவை புருஷர் களுக்கு அடைதற்கரியவை. அரியவை எனினும் அவ் வரங்களை உனக்களிக்கின்றேன்.

நாரதர் கூறியது—

4. 19. அவன் இவ்விதம் திசையனைத்தும் ஜயித்த ஒரே அரசனுயிருந்தும் விரும்பிய விஷயங்களையெல்லாம் அனுபவிப்பவனுயினும், இந்திரிய ஜயமில்லாமையால் திருப்தியடையவில்லை.

---

4. 19. ஒ. ஹிரண்யகசிபு விஷ்ணுவுடன் போர் புரியவேண்டும் என்று அவரைத் தேடி எங்கும் காணுமல் வைகுண்டம் சென்றபோது அங்கும் காணவில்லை.— அவனுடைய இருத யத்தில் மறைந்து விட்டதால், அவர் பயந்து ஒளிந்து விட்டதாய் எண்ணித் தான் ஜயித்து விட்டதாக அபிமானங்கொண்டு அவன் திரும்பினுன்.

---

4. 2. वितराम्यद्य वरान् यद्यपि ।

एव-मैश्वर्यमत्तस्य दृप्तस्योच्छास्त्र-वर्तिनः।
कालो महान् व्यतीयाय ब्रह्मशाप-मुपेयुषः ॥ ४.२० ॥

तस्योग्र-दण्ड-संविग्नाः सर्वे लोकाः स-पालकाः।
अन्यत्रालब्ध-शरणाः शरणं ययु-रच्युतम् ॥ ४.२१ ॥

तेषा-माविरभूद्वाणी अरूपा मेघ-निस्वना।
सन्नादयन्ती ककुभः साधूना-मभयंकरी ॥ ४.२४ ॥

मा भैष्ट विबुध-श्रेष्ठाः सर्वेषां भद्रमस्तु वः।
मद्दर्शनं हि भूतानां सर्व-श्रेयोपपत्तये ॥ ४.२५ ॥

ज्ञातं मे तस्य दौरात्म्यं दैतेयापसदस्य च।
तस्य शान्तिं करिष्यामि कालं तावत् प्रतीक्षत ॥ ४.२६ ॥

यदा देवेषु वेदेषु गोषु विप्रेषु साधुषु।
धर्मे मयि च विद्वेषः स वा आशु विनश्यति ॥ ४.२७ ॥

---

4. 20. ஐசுவரியத்தால் மதங்கொண்டவனும், கருவம் மிகுந்தவனும், சாஸ்திர மரியாதையை மீறியவனும் பிரம்ம ஸ்வரூபிகளான ஸநகாதியர்களின் சாபத்துக்குட்பட்டவனுமான அவனுக்கு இவ்வாறு வெகுகாலம் சென்றது.

4. 21. அவனுடைய கொடுங்கோன்மையால் வாடிய உலகனைத்தும் உலக பாலகர்களுடன் வேறு புகலிடத்தைக் காணுதவர்களாய் அச்சுதனைச் சரணுக அடைந்தனர்.

4. 24. அப்போது அவர்களிடை உருவந்தோன்ருமல் மேகத்தின் ஒலி போன்ற ஒரு வாக்குக் கேட்டது. அது திசையெங்கும் ஒலிப்பதாய்ச் சாதுக்களுக்கு அபயமளிப்பதாய் விளங்கிற்று.

4. 25. "தேவ சிரேஷ்டர்களே! பயப்படாதீர்கள். உங்கள் அனைவருக்கும் க்ஷேமமுண்டாகும். என்னைத் தரிசிப்பது பிராணிகளுக்கு உயர்வற உயர் நலமனைத்தையும் அளிப்பதாகுமன்ரோ?

4. 26. "இவ் வசுரப் பதரின் கொடுந்தன்மை எனக்குத் தெரிந்ததே. அதற்குச் சாந்தி செய்கிறேன். அக்காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருங்கள்.

4. 27. "எப்போது தேவர்களிடத்தும், வேதங்களிடத்தும், பசுக்களிடத்தும், பிராம்மணர்களிடத்தும், ஸாதுக்களிடத்தும், தர்மத்தினிடத்தும், என்னிடத்தும் துவேஷம் வளர்கிறதோ அப்போது அவன் விரைவில் விநாசமடைவான்.

---

4. 26. அநீதி செழிப்பது போல் தோன்றி வேரோடு அழியும்.

---

பா. பே.

4. 26. प्रतीक्षताम्।

निर्वैराय प्रशान्ताय स्वसुताय महात्मने।
प्रह्लादाय यदा द्रुह्येद्धनिष्येऽपि वरोर्जितम् ॥ ४.२८ ॥

नारद उवाच—

तस्य दैत्यपतेः पुत्रा-श्चत्वारः परमाद्भुताः।
प्रह्लादोऽभून्महांस्तेषां गुणै-र्महदुपासकः ॥ ४.३० ॥

ब्रह्मण्यः शीलसंपन्नः सत्यसन्धो जितेन्द्रियः।
आत्मवत्सर्व-भूताना-मेकः प्रियसुहृत्तमः ॥ ४.३१ ॥

दासवत् सन्नतार्यांघ्रिः पितृवद्दीनवत्सलः।
भ्रातृवत् सदृश-स्निग्धो गुरुष्वीश्वर-भावनः।
विद्यार्थरूप-जन्माढ्यो मानस्तंभ-विवर्जितः ॥ ४.३२ ॥

नोद्विग्न-चित्तो व्यसनेषु निस्पृहः श्रुतेषु दृष्टेषु गुणेष्ववस्तुदृक्।
दान्तेन्द्रिय-प्राण-शरीर-धीः सदा प्रशान्त-कामो रहितासुरोऽसुरः
॥ ४.३३ ॥

---

4. 28. "வைரமற்றவனும், சாந்தனும், மகாத்மாவும் ஆகிய தன் குமாரன் பிரஹ்லாதனுக்கு அவன் துரோகம் செய்யப்போகிறன். வரத்தில் நிலே பெற்றவனுயினும் அவனே அப்போது கொல்லுவேன்"

நாரதர் கூறியது—

4. 30. அந்த அசுரராஜனுக்கு மிகவும் வியக்கத்தக்க புத்திரர்கள் நால்வர் இருந்தனர். அவர்களுள் பிரஹ்லாதன் குணங்களால் சிறந்தவன், மகான்களேச் சேவிப்பவன்.

4. 31. அவன் பிராம்மணர்களே வழிபடுவனுகவும், சீரிய ஒழுக்கமுடைய வனுகவும், ஸத்தியஸந்தனுகவும், இந்திரியங்களே வென்றவனுகவும், ஒன்றேயான ஆத்மாவைப்போல் எல்லாப் பிராணிகளுக்கும் பிரியனுகவும் நட்பிற் சிறந்தவனுகவும் இருந்தான்.

4. 32. பெரியோர்கள் பாதங்களில் அடிமைபோல் வணங்குபவனுகவும், ஏழைகளிடம் பெற்றோர்களேப்போல் வாத்ஸல்ய முடையவனுகவும், ஸமமானவர்களிடம் ஸஹோதர வாஞ்சையுடையவனுகவும், குருமார்களிடம் ஈசுவரபாவனே உடையவனுகவும் கல்வியும் செல்வமும் அழகும் உயர் பிறப்பும் ஒருங்கே கூடியவனுயினும் தற்பெரு மையும் செருக்கும் இல்லாதவனுயுமிருந்தான்.

4. 33. விசனத்தில் கலங்காத சித்தமுடையவனுகவும். பற்றற்றவனுகவும் கண்டதுங் கேட்டதுமான குணங்களேப் பொருளெனக் கருதாதவனுகவும், இந்திரியங் களேயும் பிராணனேயும் சரீரத்தையும் புத்தியையும் அடக்கியவனுகவும், எப்போதும் ஆசைகளேயடக்கியவனுகவும், அசுரனுயினும் அசுர ஸ்பாவம் இல்லாதவனுகவும் விளங்கினன்.

---

4. 28. (ஸர்வம் அஹம் ஸஹே ந மத்பக்த-த்ரோஹமிதி பாவ:) எல்லாவற்றையும் நான் பொறுப்பேன்; என் பக்தனுக்குத் துரோகம் செய்வதைப் பொறுக்கமாட்டேன்.

4. 30. பிரஹ்லாதனுடைய சகோதரர்கள் ஹ்லாதன், அனுஹ்லாதன், ஸம்ஹ்லாதன் என்ற மூவர்:

---

4. 32. विद्यार्थ-जन-रूपाढ्यैः। பா. பே.

न्यस्त-क्रीडनको बालो जडवत्तन्मयस्तथा।
कृष्णग्रह-गृहीतात्मा न वेद जगदीदृशम् ॥ ४.३७ ॥

आसीनः पर्यटन्नश्नन् शयानः प्रपिबन् ब्रुवन्।
नानुसन्धत्त एतानि गोविन्द-परिरंभितः ॥ ४.३८ ॥

क्वचिद्रुदति वैकुण्ठ-चिन्ता-शबल-चेतनः।
क्वचिद्धसति तच्चिन्ता-ह्लाद उद्गायति क्वचित् ॥ ४.३९ ॥

नदति क्वचिदुत्कण्ठो विलज्जो नृत्यति क्वचित्।
क्वचित्तद्भावनायुक्त-स्तन्मयोऽनु चकार ह ॥ ४.४० ॥

क्वचिदुत्पुलक-स्तूष्णी-मास्ते संस्पर्श-निर्वृतः।
अस्पन्द-प्रणयानन्द-सलिला-मीलितेक्षणः ॥ ४.४१ ॥

तस्मिन् महाभागवते महाभागे महात्मनि।
हिरण्यकशिपू राजन्नकरो-दघ-मात्मजे ॥ ४.४३ ॥

---

4. 37. குழந்தையாயினும் அவன் விளையாட்டுப் பொருள்களைவிட்டுக் கிருஷ்ணன் என்ற கிரகத்தினால் பிடிக்கப்பட்டவனாய்த் தன்மயனாகி ஜடனைப்போல் உலகம் இன்னதென்றுணரவில்லை.

4. 38. உட்கார்ந்தாலும் நடந்தாலும் சாப்பிட்டாலும் குடித்தாலும் படுத்தாலும் பேசினாலும் கோவிந்த சிந்தனையில் ஆழ்ந்து இவற்றை உணரவில்லை.

4. 39. வைகுண்டநாதனைப் பற்றிய சிந்தனையால் மனங்கசிந்து ஒரு சமயத்தில் அழுவான்; அதே சிந்தனையால் ஆனந்தம் பொங்க ஒரு சமயம் சிரிப்பான், ஒரு சமயம் உறக்கப் பாடுவான்.

4. 40. ஒரு சமயம் உறக்கக் கதறுவான்; ஒரு சமயம் வெட்கமின்றிக் கூத்தாடுவான்; ஒரு சமயம் தன்னைக் கிருஷ்ணனாகவே பாவித்தவனாய் அவருடைய லீலைகளைச் செய்வான்.

4. 41. ஒரு சமயம் உணர்விழந்து புளகாங்கிதனாய் ஆனந்த பரவசனாய் மூடிய கண்களினின்று பாஷ்பம் பெருக அசைவின்றி மௌனமாயிருப்பான்.

4. 43. அரசே! மகா பாக்கியசாலியும் மகாத்மாவும் மகா பாகவதனுமான அந்தப் புத்திரனிடம் ஹிரண்யகசிபு தீங்கிழைத்தான்.

---

4. 39. ஒ. 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' —தேவாரம்.
4. 40. ஒ. பாலரொடு பேயர் பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே. —தாயுமானவர்.
4. 41. ஒ. உடல் குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள்
ஊற்றென வெதும்பியூற்ற —தாயுமானவர்.

---

பா. பே.

4. 38. नानुसन्बुध।

पौरोहित्याय भगवान् वृतः काव्यः किलासुरैः ।
चण्डामर्कौ सुतौ तस्य दैत्यराजगृहान्तिके ॥ ५.१ ॥

तौ राज्ञा प्रापितं बालं प्रह्लादं नय-कोविदम् ।
पाठयामासतुः पाठ्या-नन्यांश्चासुर-बालकान् ॥ ५.२ ॥

यत्तत्र गुरुणा प्रोक्तं शुश्रुवेऽनु पपाठ च ।
न साधु मनसा मेने स्वपरासद्ग्रहाश्रयम् ॥ ५.३ ॥

एकदा सुरराट् पुत्र-मंक-मारोप्य पाण्डव ।
पप्रच्छ कथ्यतां वत्स मन्यते साधु यद्भवान् ॥ ५.४ ॥

प्रह्लाद उवाच—

तत्साधु मन्येऽसुरवर्य देहिनां सदा समुद्विग्न-धिया-मसद्-ग्रहात् ।
हित्वाऽऽत्मपातं गृहमन्धकूपं वनं गतो यद्धरि-माश्रयेत ॥ ५.५ ॥

---

5. 1. தீர்க்கதரிசியாகிய சுக்கிர பகவான் அசுரர்களால் புரோகிதராக வரிக்கப் பட்டிருந்தார் என்பது பிரசித்தம். அவருடைய புத்திரர்களான சண்டனும் அமர்க்கனும் அசுர ராஜனுடைய அரண்மனையருகில் வசித்தனர்.

5. 2. அவர்கள் அரசனால் தங்களிடம் ஒப்புவிக்கப்பட்ட பாலனாகிய பிரஹ் லாதனை (அசுர) நீதியில் நிபுணனாக்கப் பாடம் கற்பித்து வந்தனர். படிப்பிக்க வேண்டிய மற்ற அசுர பாலகர்களையும் படிப்பித்தனர்.

5. 3. அப்போது எது குருவால் கற்பிக்கப்பட்டதோ அதைக் கேட்டு அதற்கிணங் கப்படித்து வந்தான். (ஆயினும்) தான் என்றும் பிறனென்றும் பொய்யான அபிமானத் திற்கிடமாயிருந்த அக் கல்வியை அவன் நல்லதென்று மனதில் கொள்ளவில்லை.

5. 4. பாண்டவரே! ஒரு சமயம் அசுர ராஜன் தன் புத்திரனை மடியிலிருத்திக் கொண்டு, "குழந்தாய்! நீ எதை நல்லதெனக் கருதுகிறாயோ அதைக் கூறுவாய்" எனக் கேட்டான்.

பிரஹ்லாதன் கூறியது—

5. 5. அசுர சிரேஷ்டராகிய தந்தையே! பொய்யை மெய்யெனக் கொண்டதால் எப்போதும் துன்பத்தால் இடிந்த புத்தியையுடைய ஜீவர்களுக்குத் தமது வீழ்ச்சிக்குக் காரணமாகியதும் பாழுங் கிணற்றைப் போன்றதுமான வீட்டைவிட்டு வனம் சென்று ஹரியை நாடுதலையே நல்லதென்று கருதுகிறேன்.

---

5. 2. तौ तु राज्ञार्पित ।

नारद उवाच—

श्रुत्वा पुत्रगिरो दैत्यः परपक्ष-समाहिताः।
जहास बुद्धि-र्बालानां भिद्यते परबुद्धिभिः ॥ ५.६ ॥

संयग्विधार्यतां बालो गुरुगेहे द्विजातिभिः।
विष्णुपक्षैः प्रतिच्छन्नैर्न भिद्यतास्य धीर्यथा ॥ ५.७ ॥

तं निर्भत्स्याथ कुपितः स दीनो राजसेवकः।
आनीयता-मरे वेत्र-मस्माक-मयशस्करम् ॥
कुलांगारस्य दुर्बुद्धे-श्चतुर्थोऽस्योदितो दमः ॥ ५.१६ ॥

दैतेय-चन्दनवने जातोऽयं कण्टकद्रुमः।
यन्मूलोन्मूलपरशो-र्विष्णोर्नालायितोऽर्भकः ॥ ५.१७ ॥

इति तं विविधोपायै-र्भीषयं-स्तर्जनादिभिः।
प्रह्लादं ग्राहयामास त्रिवर्गस्योपपादनम् ॥ ५.१८ ॥

तत एनं गुरु-र्ज्ञात्वा ज्ञातज्ञेय-चतुष्टयम्।
दैत्येन्द्रं दर्शयामास मातृमृष्टमलंकृतम् ॥ ५.१९ ॥

---

நாரதர் கூறியது—

5. 6. அசுர ராஜன் தனது மகனுடைய வார்த்தையைக் கேட்டு அவை தனது வைரியின் பக்ஷத்தைச் சார்ந்தவையாயிருக்கக் கண்டு, 'பிறருடைய புத்திகளால் சிறுவர்களுடைய புத்தியானது பேதலிக்கின்றது' என்று கூறிச் சிரித்தான்.

5. 7. 'விஷ்ணுவிடம் பக்ஷம் வைத்து மறைந்து வாழும் பிராம்மணர்களால் இவனுடைய புத்தி இனி பேதலிக்காதிருக்கும் வண்ணம் குருவின் வீட்டில் குழந்தை நன்கு காக்கப்படவேண்டும்' என்று கூறினன்.

5. 16. பிறகு மனம் நொந்தவனும் கோபங் கொண்டவனும் அரச சேவையிற் கட்டுப்பட்டவனுமான அந்த குருபுத்திரன் பிரஹ்லாதனை (வீட்டுக்கழைத்துப்போய்) அதட்டி, 'அடே! கொண்டுவா பிரம்பை! புத்தி கெட்டவனும் குலத்தைப் பொசுக்குந் தீ போன்றவனுமான இவனுக்கு நான்காவது உபாயமாகிய தண்டமே தகுதியெனக் கூறப்பட்டுள்ளது.

5. 17. 'இவன் சந்தன வனமாகிய அசுர குலத்தில் முளைத்த முள் மரம். இவ் வனத்தை யழிக்கும் விஷ்ணுவாகிய கோடாரிக்கு இச் சிறுவன் காம்பாகின்றான்' எனக் கூறினன்.

5. 18. இவ்விதம் அதட்டுதல் முதலிய பல உபாயங்களால் பிரஹ்லாதனை மிரட்டி (அறம் பொருள் இன்பம் என்ற) முவ் வர்க்கத்தைக் கற்பிக்க குருபுத்திரன் முயன்றான்.

5. 19. பின்னர் அறியவேண்டிய (ஸாம தான பேத தண்டம் எனும்) நான்கையும் அறிவிக்கப்பட்டவன் என எண்ணி ஆசிரியன் இவனுக்குத் தாயைக் கொண்டு எண்ணெய்க் குளிப்பாட்டி நன்கு அலங்கரித்து ஹிரண்யகசிபுவின் தரிசனத்துக்கு அழைத்துச் சென்றான்.

हिरण्यकशिपु-रुवाच—

प्रह्लादानूच्यतां तात स्वधीतं किंचिदुत्तमम् ।
कालेनैतावताऽऽयुष्मन् यदशिक्षद् गुरोर्भवान् ॥ ५.२२ ॥

प्रह्लाद उवाच—

श्रवणं कीर्तनं विष्णोः स्मरणं पादसेवनम् ।
अर्चनं वंदनं दास्यं सख्य-मात्मनिवेदनम् ॥ ५.२३ ॥

इति पुंसार्पिता विष्णौ भक्तिश्चे-न्नवलक्षणा ।
क्रियते भगवत्यद्धा तन्मन्येऽधीत-मुत्तमम् ॥ ५.२४ ॥

निशम्यैतत्सुतवचो हिरण्यकशिपु-स्तदा ।
गुरुपुत्र-मुवाचेदं रुषा प्रस्फुरिताधरः ॥ ५.२५ ॥

ब्रह्मबन्धो किमेतत्ते विपक्षं श्रयताऽसता ।
असारं ग्राहितो बालो मामनादृत्य दुर्मते ॥ ५.२६ ॥

---

ஹிரண்யகசிபு கூறியது—

5. 22. குழந்தாய்! நீண்ட ஆயுளுடன் வாழ்வாயாக! இவ்வளவு நாட்களாகக் குருவிடம் நீ எதைக் கற்றுக்கொண்டாயோ அதில் நன்கு அத்தியயனம் செய்யப் பட்டதும் மிகச் சிறந்ததுமான ஒரு சிறிது கூறு பார்க்கலாம்.

பிரஹ்லாதன் கூறியது—

5. 23-24. விஷ்ணுவின் சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாத ஸேவை, அர்ச்சனம், வந்தனம், பணிவிடை, நட்பு, ஆத்ம நிவேதனம் என ஒன்பது வகைப்பட்ட பக்தி ஒருபுருஷனால் விஷ்ணுவிடம் நேரில் அர்ப்பணபுத்தியுடன் செய்யப்படுமானால் அதையே தலைசிறந்த அத்தியயனம் என நான் கருதுகிறேன்.

5. 25. ஹிரண்யகசிபு தன் புத்திரன் கூறிய இவ்வார்த்தையைக் கேட்டு அப்போது கோபத்தினால் உதடு துடிக்க குருபுத்திரனை நோக்கிப் பின்வருமாறு சொல்லலுற்றான்.

5. 26. 'பிராமணப்பதரே! மதிகெட்டவனே! இது என்ன? எதிரிபக்கத்தைச் சார்ந்த அஸத்தாகிய உன்னால் நான் அலக்ஷியம் செய்யப்பட்டு இந்த பாலன் மற்றதைக் கற்பிக்கப் பட்டிருக்கிறான்.'

---

5. 23. ஒ. ஸ்ரீ விஷ்ணோ; ச்ரவணே பரீக்ஷிதபவத் வையாஸகி : கீர்த்தனே
ப்ரஹ்லாத : ஸ்மரணே ததங்க்ரிபஜனே லக்ஷ்மீ : ப்ருது : பூஜனே ।
அக்ரூரஸ்த்வபிவந்தனே ஹனுமான் தாஸ்யேsத ஸக்யேsர்ஜுன :
* ஸர்வஸ்வாத்ம-நிவேதனே பலிரபூத் கைவல்ய மேஷாம் பதம் ॥
* (தஸ்மின்னாத்மனி வேதனே ச ஸததம் ராஜாம்பரீஷோ மஹான் ॥)

गुरुपुत्र उवाच—

न मत्प्रणीतं न परप्रणीतं सुतो वदत्येष तवेन्द्रशत्रो ।
नैसर्गिकीयं मतिरस्य राजन् नियच्छ मन्युं कददाः स्म मा नः ॥ ५.२८ ॥

नारद उवाच—

गुरुणैवं प्रतिप्रोक्तो भूय आहासुरः सुतम् ।
न चेद्गुरुमुखीयं ते कुतोऽभद्रासती मतिः ॥ ५.२९ ॥

प्रह्लाद उवाच—

मतिर्न कृष्णे परतः स्वतो वा मिथोऽभिपद्येत गृहव्रतानाम् ।
अदान्तगोभि-र्विशतां तमिस्रं पुनः पुन-श्चर्वित-चर्वणानाम् ॥ ५.३० ॥

न ते विदुः स्वार्थगतिं हि विष्णुं दुराशया ये बहिरर्थमानिनः ।
अन्धा यथान्धै-रुपनीयमाना वाचीशतन्त्र्या-मुरुदाम्नि बद्धाः ॥ ५.३१ ॥

---

குருபுத்திரன் கூறியது—

5. 28. இந்திரசத்துருவே! அரசே! உமது புத்திரன் இங்ஙனம் கூறுதல் என் ஏவுதலாலுமன்று பிறர் ஏவுதலாலுமன்று. இந்த மதியானது இவனுக்குப் பிறவிக் குணம். கோபத்தைத் தாங்கள் அடக்கிக்கொள்ள வேண்டும். எங்களிடம் தோஷத்தைக் கற்பிக்கலாகாது.

நாரதர் கூறியது—

5. 29. குருவினால் இங்ஙனம் மறுமொழி கூறப்பெற்ற அசுரன் தன் மகனைப்பார்த்துக் கூறுவான்: அமங்களத்தை நாடுபவனே! இந்தக்கெட்ட மதியானது, குருமுகமாய் ஏற்பட்டதல்ல வெனின் எங்கிருந்து தோன்றிற்று?

பிரஹ்லாதன் கூறியது—

5. 30. குடும்ப போஷணையையே விரதமாய்க் கொண்டவர்களுக்கும் இந்திரிய அடக்கமற்றவர்களுக்கும், மென்றதையே மீண்டும் மென்று கொண்டு (அறியாமை எனும்) இருளில் புகுபவர்களுக்கும் கிருஷ்ணனிடத்தில் மதி கூட்டுறவால் பிறரிடமிருந்தும் வராது, தானாகவும் வராது.

5. 31. துராசையால் வெளிப்பொருள்களையே மதிப்பவர்களும், குருடர்களைப்பின் பற்றிச் செல்லும் குருடர்களைப் போன்றவர்களும், வேதவாதமாகிய நெடுங்கயிற்றால் பிணைக்கப்பட்டவர்களுமாகிய அவர்கள் தம்மகத்தே பரம்பொருளாய் உறையும் விஷ்ணுவை அறிய மாட்டார்கள்.

---

5 28. நோ஽ஸ்மப்யம், கத் குத்ஸிதம் தோஷம், மாஸ்மதா: அடாகம ஆர்ஷ; மயி தோஷாரோபம் மா க்ருதா இத்யர்த்த:॥

5. 30. பகவத் கிருபையால் தான் இந்த புத்திவரும்: மற்ற வகையில் ஏற்படாது.

5. 31. ஒ. அவித்யாயா-மந்தரே வர்த்தமானா: ஸ்வயந்தீரா: பண்டிதம்-மன்யமானா:। தந்த்ரம்யமானா: பரியந்தி மூடா அந்தேனைவ நீயமானா யதாந்தா:॥ -கட- உப 2.5.

नैषां मतिस्ताव-दुरुक्रमांघ्रिं स्पृशत्यनर्थापगमो यदर्थः ।
महीयसां पादरजोऽभिषेकं निष्किंचनानां न वृणीत यावत् ॥ ५.३२ ॥

नारद उवाच –

इत्युक्त्वोपरतं पुत्रं हिरण्यकशिपू रुषा ।
अन्धीकृतात्मा स्वोत्संगा-न्निरस्यत महीतले ॥ ५.३३ ॥

आहामर्षरुषाविष्टः कषायी–भूतलोचनः ।
वध्यता-माश्वयं वध्यो निःसारयत नैर्ऋताः ॥ ५.३४ ॥

परोऽप्यपत्यं हितकृद्यथौषधं स्वदेहजोऽप्यामयवत् सुतोऽहितः ।
छिन्द्यात्तदंगं यदुतात्मनोऽहितं शेषं सुखं जीवति यद्विवर्जनात् ॥ ५.३७ ॥

नदन्तो भैरवान्नादां-श्छिन्धि भिन्धीति वादिनः ।
आसीनं चाहनञ् शूलैः प्रह्लादं सर्व–मर्मसु ॥ ५.४० ॥

---

5. 32. உடைமைகளை முற்றத் துறந்த மகான்களின் பாததூளியைச் சிரசில் தரிக்க எண்ணுதவரை இவர்களுடைய புத்தி உருக்கிரமனுன பகவானுடைய திரு வடியைத் தொடமுடியாது. ஆனல் அதைத் தொட்டால்தான் பிறவிப் பிணியாகிய அனர்த்தம் நீங்கும்.

நாரதர் கூறியது—

5. 33. இவ் வண்ணம் கூறி மௌனமாயிருந்த புத்திரனை ஹிரண்யகசிபு கோபத்தால் அகக் கண் இருண்டு தன் மடியிலிருந்து தரையில் தள்ளினன்.

5. 34. கோபத்தின் வசப்பட்டுக் கலங்கிய கண்களுடன் அவன் பின்னுங் கூறுவான்:—'அரக்கர்களே! இவனை வெளியேற்றுங்கள். இவன் வதைக்குரியவன். விரைவில் கொல்லப்படட்டும்.'

5. 37. 'அயலானுயினும் மருந்துபோல் நன்மை பயப்பவனே மகனுவான். தன்னுடலிற்றேன்றிய மகனுயினும் நலமற்றவனுயின் நோய் போன்றவனே. தன்னுடைய அங்கமாயினும் கெடுதியுள்ளதாயின் அதை நீக்கிவிடுவதால் மிகுதியான உடல் சுகமாக ஜீவிக்குமாதலால் அதைக் களைந்து விடவேண்டும்'

5. 40. (அவன் சொற்படி) அரக்கர்கள், 'வெட்டு, பிள' என்று பயங்கரமாய்க் கூவிக்கொண்டு அங்கு உட்கார்ந்திருந்த பிரஹ்லாதனை எல்லா மர்மங்களிலும் சூலங் களால் குத்தினர்.

---

5. 32. தஸ்யா: ஸாதனானி காயந்த்யாசார்யா:। தத்து விஷய-த்யாகாத் ஸங்க த்யாகாச்ச। அவ்யாவ்ருத்த-பஜனாத்। லோகேऽபி பகவத்குண-ச்ரவண-கீர்த்தனாத்। முக்யதஸ்து மஹத்க்ருபயைவ பகவத்க்ருபா-லேசாத் வா॥ —நாரத பக்தி ஸூத்ரம்

---

5. 34. **कषायीकृत ।**

परे ब्रह्मण्यनिर्देश्ये भगवत्यखिलात्मनि ।
युक्तात्मन्यफला आस-न्नपुण्यस्येव सत्क्रियाः ॥ ५.४१ ॥

दिग्गजै-र्दन्तशूकैश्च अभिचारावपातनैः ।
मायाभिः संनिरोधैश्च गरदानै-रभोजनैः ॥ ५.४३ ॥

हिम-वाय्वग्नि-सलिलैः पर्वताक्रमणै-रपि ।
न शशाक यदा हन्तु-मपाप-मसुरः सुतम् ॥
चिन्तां दीर्घतमां प्राप्त-स्तत्कर्तुं नाभ्यपद्यत ॥ ५.४४ ॥

अप्रमेयानुभावोऽय-मकुतश्चिद्भयोऽमरः ।
नून-मेत-द्विरोधेन मृत्युर्मे भविता न वा ॥ ५.४७ ॥

इति तं चिन्तया किंचिन्म्लान-श्रिय-मधोमुखम् ।
चण्डामर्का-वौशनसौ विविक्त इति होचतुः ॥ ५.४८ ॥

---

5. 41. அங்கிங் கெனுதபடி எங்கும் நிறைந்த பரம்பொருளும் எவ் வுயிர்க்கும் உயிராகிய பகவானிடத்தில் நிலைத்த மனத்தினனுன அவனிடம் அவர்களுடைய செயல்கள் புண்ணியமற்றவனுடைய சடங்குகளைப்போல் பயனற்றவையாயின.

5. 43. திக்கஜங்களினலும் விஷப் பாம்புகளாலும் அபிசார கிருத்தியங் களாலும், மலையுச்சியினின்று விழ்த்துதலாலும், மாயைகளினுலும், குழியில் தள்ளி மூடுவதாலும், விஷங்கொடுத்தலாலும் பட்டினி போடுதலாலும்;

5. 44. பனி, காற்று, நெருப்பு, நீர் இவற்ருலும், பாராங்கல்லால் மூடுதலாலும் அவ் வசுரன் பாவமற்ற தன் மகனைக் கொல்ல முடியாமற் போகவே முடிவற்ற கவலை யடைந்தானேயொழிய நினைத்த காரியத்தைச் செய்ய முடியவில்லை.

5. 47-48. 'இவன் அளவிடற்கரிய மகிமையுடையவனுயிருக்கின்ருன். எதி னின்றும் அவனுக்குப் பயமில்லை, மரணமுமில்லை. இவனுடன் விரோதத்தால்தான் எனக்கு நிச்சயம் மரணமேற்படப் போகிறது. இல்லாவிட்டால் மரணமேற்படாது' என்று இங்ஙனம் எண்ணிக் கலையிழுந்து முகங் கவிழ்ந்து வீற்றிருந்த இவனிடம் தனிமையில் சென்று சுக்கிராசாரியரின் புத்திரர்களான சண்டனும் அமர்க்கனும் பின் வருமாறு கூறினர்.

---

5. 41. ஒ. ஏவம் ஸஞ்சிந்தயன் விஷ்ணு-மபேதேநாத்மனோ த்விஜ ।
தன்மயத்வ-மவாப்யக்ர்யம் மேனே சாத்மான-மச்யுதம் ॥
விஸஸ்மார ததாத்மானம் நான்யத் கிஞ்சி-தஜானத ।
அஹமேவாவ்யயோऽனந்த: பரமாத்மேத்யசிந்தயத் ॥
—விஷ்ணு புராணம் 1-20. 1-2

5. 43-44. பிராம்மணர்கள் ஹிரண்யகசிபுவின் சொல்லைக் கேட்டுப் பிரஹ்லாதனைக் கொல்ல அபிசார ஹோமம் செய்து ஒரு பூதத்தைக் கிளப்பினுர்கள். அது பிராம்மணர் களையே திருப்பிப் பிடித்தது. யார் காப்பாற்றுவர்? பகவானைக் கூப்பிட்டால் காப்பாற்ற மாட்டார். பிரஹ்லாதனையே சரணடைந்தார்கள். அவன் தன் புண்ணியத்தைக் கொடுத்துக் காப்பாற்றினுன்.

ஒ. யே ஹந்து-மாகதா தத்தம் யைர்விஷம் யைர்ஹுதாசன: ।
யைர்-திக்கஜை-ரஹம் க்ஷுண்ணோ தஷ்ட: ஸர்ப்பைச்ச யைரபி ॥
தேஷ்வஹம் மித்ரபாவேன ஸம: பாபோऽஸ்மி ந க்வசித் ।
யதா தேனுத்ய ஸத்யேன ஜீவந்த்வஸுர-யாஜகா: ॥
—விஷ்ணு புராணம் 1. 19

इमं तु पाशै-र्वरुणस्य बद्ध्वा निधेहि भीतो न पलायते यथा ।
बुद्धिश्च पुंसो वयसाऽऽर्यसेवया यावद्गुरु-र्भार्गव आगमिष्यति ॥ ५.५० ॥

तथेति गुरुपुत्रोक्त-मनुज्ञायेद-मब्रवीत् ।
धर्मा-ह्यस्योपदेष्टव्या राज्ञां ये गृहमेधिनाम् ॥ ५.५१ ॥

यथा त्रिवर्गं गुरुभि-रात्मने उपशिक्षितम् ।
न साधु मेने तच्छिक्षां द्वन्द्वारामोपवर्णिताम् ॥ ५.५३ ॥

यदाचार्यः परावृत्तो गृहमेधीय-कर्मसु ।
वयस्यै-र्बालकै-स्तत्र सोपहूतः कृतक्षणैः ॥ ५.५४ ॥

अथ तान् श्लक्ष्णया वाचा प्रत्याहूय महाबुधः ।
उवाच विद्वां-स्तन्निष्ठां कृपया प्रहसन्निव ॥ ५.५५ ॥

प्रह्लाद उवाच—

न पुरापि वयं बाला आत्मनोऽथ प्रियैषिणः ।
गुरूक्तमपि न ग्राह्यं यदनर्थेऽर्थकल्पनम् ॥ ६.२ ॥

5. 50. 'இவனை வருண பாசங்களால் பிணித்துப் பயத்தால் தப்பி ஓடிவிடா வண்ணம் சுக்கிராசாரியர் வரும்வரை காவலில் வைக்கவேண்டும். வயதின் முதிர்ச்சியாலும் பெரியோர்களின் சேவையாலும் புத்தி வரலாம்.'

5. 51. குருபுத்திரர்கள் கூறியதை ஏற்றுக்கொண்டு அவன் இங்ஙனம் கூறினன்: 'அங்ஙனமே ஆகட்டும். இல்லற தர்மங்களையும் அரச தர்மங்களையும் இவனுக்குப் புகட்டவேண்டும்.'

5. 53. அங்ஙனம் அறம் பொருளின்பமெனும் மூன்றும் குருமார்களால் தனக்கு உபதேசிக்கப்பட்டதெனினும் அது துவந்துவங்களில் இன்புறுவோரால் வர்ணிக்கப்பட்டமையின் அதை நன்றென அவன் (பிரஹ்லாதன்) கருதவில்லை.

5. 54-55. ஆசிரியர் வீட்டுக் காரியமாக வெளிப் போயிருந்தபோது (கூடி விளையாட) அவகாசம் பெற்ற தோழச் சிறுவர்களால் அவன் அழைக்கபட்டால் அப்போது அவர்களைத் திருப்பியழைப்பவனும் மகா புத்திமானும் வித்துவானுமான அவன் அவர்களை நோக்கிச் சிரிப்பவன்போல் அழகிய சொற்களால் இங்ஙனம் அவர்கள் இருக்கவேண்டிய நிலையை விளக்கிக் கூறுவான்.

பிரஹ்லாதன் கூறியது—

6. 2. நாம் முன்பும் சிறுவர்களல்லர்; ஆத்மாவுக்கு நன்மையை விரும்பியவர்களுக்கு அனர்த்தத்தை அர்த்தமாகக் கற்பித்துக் கூறுவது குரு கூறியதானாலும் ஏற்கத்தக்கதல்ல.

6. 2. பரதன் வசிஷ்டர் சொன்னதைக் கேட்கவில்லை; பலி சுக்ராசாரியர் சொன்னதைக் கேட்கவில்லை.

ஒ. குருர் ந ஸ: ஸ்யாத் ஸ்வஜனோ ந ஸ: ஸ்யாத்
பிதா ந ஸ: ஸ்யாத் ஜனனீ ந ஸா ஸ்யாத் |
தைவம் ந தத் ஸ்யாத் ந பதிச்சஸ: ஸ்யாத்
ந மோசயேத் ய: ஸமுபேத-ம்ருத்யும் || பாக. 5-5-18

कौमार आचरेत् प्राज्ञो धर्मान् भागवता-निह ।
दुर्लभं मानुषं जन्म तदप्यध्रुव-मर्थदम् ॥ ६.६ ॥

न ह्यच्युतं प्रीणयतो बह्वायासोऽसुरात्मजाः ।
आत्मत्वात् सर्वभूतानां सिद्धत्वा-दिह सर्वतः ॥ ६.२७ ॥

तस्मात् सर्वेषु भूतेषु दयां कुरुत सौहृदम् ।
आसुरं भाव-मुन्मुच्य यया तुष्यत्यधोक्षजः ॥ ६.३४ ॥

श्रुत-मेतन्मया पूर्वं ज्ञानं विज्ञान-संयुतम् ।
धर्मं भागवतं शुद्धं नारदाद् देवदर्शनात् ॥ ६.३८ ॥

दैत्यपुत्रा ऊचुः—

प्रह्लाद त्वं वयं चापि न तेऽन्यं विद्महे गुरुम् ।
एताभ्यां गुरुपुत्राभ्यां बालानामपि हीश्वरौ ॥ ६.३९ ॥

---

6. 6. மனித ஜன்மம் அடைதற்கரிது. புருஷார்த்தத்தை யளிக்கக் கூடியது. ஆனால் நிலையற்றதாயிருப்பதால் புத்தியுள்ளவன் இளமையிலேயே பாகவத தருமங்களை யனுஷ்டிக்கவேண்டும்.

6. 27. அசுரப் புதல்வர்காள்! அச்சுதனைப் பிரீதி செய்பவர்களுக்கு அம் முயற்சி கடினமானதன்று. ஏனெனில் பகவான் எல்லா உயிர்க்கும் ஆத்மாவும் எங்கும் இங்கும் எல்லா உறுப்புக்களின் இயக்கத்தின் மூலமாகவும் கண்டு அடையப் பெற்ற வரேயாகின்றார்.

6. 34. ஆகையால் அசுர ஸ்பாவத்தினின்று விலகி எல்லா உயிர்களிடத்தும் அன்பையும் இரக்கத்தையும் காட்டுங்கள். அதனால் அதோக்ஷஜர் திருப்தியடைவார்.

6. 38. தெளிந்த அனுபவத்துடன் கூடிய இந்த ஞானமும் பரிசுத்தமான பாகவத தர்மமும் பகவத் ஸாக்ஷாத்காரம் பெற்ற நாரதரிடமிருந்து என்னால் கேட்கப் பட்டது.

அசுர புத்திரர்கள் கூறியது—

6. 39. பிரஹ்லாதா! நீயோ நாங்களோ இந்த குருபுத்திரர்களன்றி வேறு குருவை அறியமாட்டோம். அவர்கள் இருவருந்தான் பால்யத்திலிருந்தே நம்மை யடக்கி ஆள்கின்றனர்.

---

6. 6. காலையில் தயிரைக்கடைந்து வெண்ணெயெடுப்பது போலும் வாடிப்போவதற்கு முன் பூஜைக்குப் பூ வெடுப்பதுபோலும் இளமையிலேயே மனதை இறைவனிடம் வைக்க வேண்டும்.

6. 27. ஒ. இது நேரில் கண்டனுபவிக்கக் கூடியது, தர்மத்தினின்று பிறழாதது, அனுஷ்டித்தற்கு மிகஎளியது, என்றும் அழியாதது. — கீ. 9.2.

---

6. 39. बालानामृत ईश्वरौ ।

बालस्यान्तःपुरस्थस्य महत्संगो दुरन्वयः ।
छिन्दि नः संशयं सौम्य स्याच्चे-द्विश्रंभ-कारणम् ॥ ६.४० ॥

प्रह्लाद उवाच--

पितरि प्रस्थितेऽस्माकं तपसे मन्दराचलम् ।
युद्धोद्यमं परं चक्रु-र्विबुधा दानवान् प्रति ॥ ७.२ ॥

इन्द्रस्तु राजमहिषीं मातरं मम चाग्रहीत् ।
नीयमानां भयोद्विग्नां रुदतीं कुररीमिव ॥
यदृच्छयाऽऽगत-स्तत्र देवर्षि-र्ददृशे पथि ॥ ७.७ ॥

प्राह मैनां सुरपते नेतु-मर्हस्यनागसम् ।
मुंच मुंच महाभाग सतीं परपरिग्रहम् ॥ ७.८ ॥

इन्द्र उवाच—

आस्तेऽस्य जठरे वीर्य-मविषह्यं सुरद्विषः ।
आस्यतां यावत् प्रसवं मोक्ष्येऽर्थ-पदवीं गतः ॥ ७.९ ॥

---

6. 40. அந்தப்புறத்திலிருப்பவனும் பாலனுமான உனக்கு மகான்களின் கூட்டுறவு கிடைத்ததென்பது பொருத்தமாக இல்லை. சித்தம் அழகியவனே! எங்கள் சந்தேகத்தைத் தீர்த்து நம்பிக்கை தரக்கூடிய காரணமிருந்தால் கூறுவாய்—

பிரஹ்லாதன் கூறியது—

7. 2. எங்கள் தகப்பனர் மந்தரமலைக்குத் தவத்திற்குச் சென்றிருக்கையில் தேவர்கள் அசுரர்கள்மேல் படையெடுத்தனர்.

7. 7. இந்திரன் ராஜமஹிஷியான என் தாயாரை எடுத்துச் சென்றன். பயத்தினல் மனமிடிந்தவளும் குரரிப் பறவைபோல் கதறுகின்றவளுமான அவள் கவர்ந்து செல்லப்படுகையில் வழியில் அங்கு எதிர்பாராமல் வரநேர்ந்த தேவரிஷியான நாரதர் காணப்பட்டார்.

7. 8. நாரதர் கூறுவார்: "தேவர்கள் நாயகா! குற்றமற்ற இவளை நீ கவர்ந்து செல்வது தகுதியன்று. பெருமை படைத்தவனே! பிறன் மனைவியும் பதிவிரதையுமான இவளை விட்டுவிடு."

இந்திரன் கூறியது—

7. 9. "இவள் வயிற்றில் சகிக்க முடியாத அசுர வீரியம் இருக்கிறது. பிரசவிக்கும் வரை என்னிடம் இருக்கட்டும். என் எண்ணம் பூர்த்தியான பிறகு இவளை விட்டு விடுகிறேன்."

---

7. 7. देवर्षिर्दृष्टवान् पथि ।

नारद उवाच—

अयं निष्किल्बिषः साक्षान्महाभागवतो महान् ।
त्वया न प्राप्स्यते संस्था-मनन्तानुचरो बली ॥ ७.१० ॥

इत्युक्तस्तां विहायेन्द्रो देवर्षे-र्मानयन् वचः ।
अनन्तप्रिय-भक्त्यैनां परिक्रम्य दिवं ययौ ॥ ७.११ ॥

ततो नो मातर-मृषिः समानीय निजाश्रमम् ।
आश्वास्येहोष्यतां वत्से यावत् ते भर्तु-रागमः ॥ ७.१२ ॥

ऋषिं पर्यचरत् तत्र भक्त्या परमया सती ।
अन्तर्वत्नी स्वगर्भस्य क्षेमायेच्छा-प्रसूतये ॥ ७.१४ ॥

ऋषिः कारुणिक-स्तस्याः प्रादा-दुभय-मीश्वरः ।
धर्मस्य तत्त्वं ज्ञानं च मामप्युद्दिश्य निर्मलम् ॥ ७.१५ ॥

---

நாரதர் கூறியது—

7. 10. "இவன் தீங்கற்றவன்; உண்மையில் மகா பாகவதன்; மகா புருஷன்; அனந்தனுகிய பகவானை அனுசரிப்பவன்; மிகுந்த பலம் வாய்ந்தவன்; உன்னால் முடிவை அடையமாட்டான்."

7. 11. இங்ஙனம் கூறப்பெற்ற இந்திரன் தேவரிஷியின் சொல்லுக்கு மரியாதை செய்பவனுய் அவளை விடுவித்து பகவானிடம் பிரியம் வைத்தவர்களிடம் உள்ள பக்தியால் (என்னையும் சேர்த்து) அவளை வலம் வந்து தேவலோகம் சென்றான்.

7. 12. பிறகு ரிஷியானவர் எங்கள் தாயாரைத் தமது ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்று அவளுக்குத் தேறுதலளித்து 'குழந்தாய்! உன் கணவன் வரும் வரை நீ இங்கே இருக்கலாம்' என்று கூறினர்.

7. 14. வயிற்றில் குழந்தையை வளர்த்த பதிவிரதையாகிய அவளும் தனது கருவிலுள்ள சிசுவின் க்ஷேமத்தையும், விரும்பியபோது பிறக்கவேண்டும் என்றதையும் கருதி, அங்கு மிகுந்த பக்தியுடன் ரிஷியைப் பூஜித்து அவருக்குப் பணிவிடை செய்து வந்தாள்.

7. 15. கருணை மிக்கவரும் எல்லாம் வல்லவருமான ரிஷியும் அவளுக்கு இரு வரன்களையும் அளித்தார். தருமத்தின் தத்துவத்தையும் நிர்மலமான ஞானத்தையும் என்னையும் உத்தேசித்து அளித்தார்.

---

7. 10. **ஸாக்ஷாத்**— ஸ்வகுணைரேவ மஹான், ந பித்ராதி-ஸம்பந்தாத்।

---

பா பே.

7. 15. **प्रादादभयमीश्वरः ।**

तच्च कालस्य दीर्घत्वात् स्त्रीत्वान्मातु-स्तिरोदधे ।
ऋषिणानुग्रहीतं मां नाधुनाप्यजहात् स्मृतिः ॥ ७.१६ ॥

भवतामपि भूयान्मे यदि श्रद्दधे वचः ।
वैशारदी-धीः श्रद्धातः स्त्रीबालानां च मे यथा ॥ ७.१७ ॥

स्वर्णं यथा ग्रावसु हेमकारः क्षेत्रेषु योगै-स्तदभिज्ञ आप्नुयात् ।
क्षेत्रेषु देहेषु तथाऽऽत्मयोगै-रध्यात्मविद् ब्रह्मगतिं लभेत ॥ ७.२१ ॥

हरिः सर्वेषु भूतेषु भगवानास्त ईश्वरः ।
इति भूतानि मनसा कामैस्तैः साधुमानयेत् ॥ ७.३२ ॥

नालं द्विजत्वं देवत्व-मृषित्वं वासुरात्मजाः ।
प्रीणनाय मुकुन्दस्य न वृत्तं न बहुज्ञता ॥ ७.५१ ॥

---

7. 16. பெண்தன்மையால் நெடுங்காலப் போக்கில் தாய்க்கு அது மறைந்து போயிற்று. ரிஷியால் அனுக்கிரகிக்கப் பெற்ற என்னைவிட்டு அந்த நன்னினைவு இன்றும் நீங்கவில்லை.

7. 17. என் வார்த்தையில் நம்பிக்கை கொள்வீர்களேயானல் உங்களுக்கும் (தரும தத்துவ விளக்கமும் ஞானமும்) ஏற்படும். சிரத்தையின் மூலம் தெளிவான புத்தி ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்குங்கூட எனக்குண்டானதுபோல் உண்டாகும்.

7. 21. முறையறிந்து பொன் எடுப்பவன் பொன் விளையும் பூமிகளில் உள்ள சுரங்கக் கட்டிகளினின்று எங்ஙனம் அதற்குரிய முறைகளால் பொன்னை அடைவானே, அங்ஙனமே உடல்களாகிய பூமிகளில் அத்தியாத்ம ஞானி ஆத்ம ஸாதனங்களால் பிரம்மகதியை யடைவான்.

7. 32. ஈசுவரனும் பகவானுமான ஹரி எல்லா உயிர்களிடத்தும் உறைகின்ருர் என்ற மனத்துடன் அவற்றைத் திருப்தி செய்விக்கும் ஸாதனங்களால் செவ்வனே போற்றவேண்டும்.

7. 51. அசுர குமாரர்களே! முகுந்தனைப் பிரீதி செய்வதற்கு துவிஜத் தன்மையோ தேவத் தன்மையோ ரிஷித் தன்மையோ, நடத்தையோ, விரிந்த அறிவோ போது மானவை யாகமாட்டா.

---

7. 17. ஒ. 'சிலர் நினைக்கலாம்; அந்த உயர் நிலை தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் ஸாத்தியமாயிருந்தது, நம்மைப்போன்றவர்களுக்கு ஸாத்தியமில்லையென்று. இதில் வாமதேவர் போன்ற ரிஷிகளுக்கும் நமக்கும் வித்தியாஸமில்லை. தேவாதி தேவர்களும் முமுக்ஷுவை ஞானமடைவதினின்று தடுக்கமுடியாது. — சங்

7. 32. ஒ. ஈசுவரன் எல்லாப் பிராணிகளுடைய இருதயத்துள்ளும் நிற்கின்ருன். எல்லாவகையாலும் அவனையே சரணமடைவாயாக. அவனருளால் ஒப்புயர்வற்ற சாந்தியையும் அழிவில்லாத பதவியையும் அடைவாய்.— கீ. 18. 61-62.

---

7. 21. हेमं यथा । பா. பே.

न दानं न तपो नेज्या न शौचं न व्रतानि च।
प्रीयतेऽमलया भक्त्या हरिरन्य-द्विडम्बनम् ॥ ७.५२ ॥

ततो हरौ भगवति भक्तिं कुरुत दानवाः।
आत्मौपम्येन सर्वत्र सर्वभूतात्मनीश्वरे ॥ ७.५३ ॥

दैतेया यक्षरक्षांसि स्त्रियः शूद्रा व्रजौकसः।
खगा मृगाः पापजीवाः सन्ति ह्यच्युततां गताः ॥ ७.५४ ॥

एतावानेव लोकेऽस्मिन् पुंसः स्वार्थः परः स्मृतः।
एकान्त-भक्ति-र्गोविन्दे यत् सर्वत्र तदीक्षणम् ॥ ७.५५ ॥

नारद उवाच--

अथ दैत्यसुताः सर्वे श्रुत्वा तदनुवर्णितम्।
जगृहु-र्निरवद्यत्वा-न्नैव गुर्वनुशिक्षितम् ॥ ८.१ ॥

---

7. 52. தானம் போதாது, தவம் போதாது, யாகம் போதாது, சௌசம் போதாது, விரதங்களும் போதுமானவையாகா. ஹரியானவர் களங்கமற்ற பக்தியால் மட்டுமே பிரீதியடைகின்றார். மற்றவை வெளி வேஷமே.

7. 53. தானவர்களே! ஆகையால் தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் கருதி உயிர்களனைத்திற்கும் உயிரும் ஈசுவரனும் பகவானுமாகிய ஹரியினிடம் பக்தியைச் செய்யுங்கள்.

7. 54. தைத்தியர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், ஸ்திரீகள், சூத்திரர்கள், இடையர்கள், பறவைகள், மிருகங்கள், இழிபிறவியனராயினும் அச்சுத பக்தியால் அவனை யடைந்திருக்கின்றனர்.

7. 55. கோவிந்தனிடம் ஏகாந்த பக்தியும் எங்கும் அவனையே காணுதலும் எதுவோ அதுவே இவ் வுலகில் ஒரு புருஷனுக்கு உயர்ந்த தன்னலம் எனப் பெரியோர் கருதுகின்றனர்.

நாரதர் கூறியது—

8. 1. (இங்ஙனம் உபதேசிக்கப் பெற்ற) தைத்திய குமாரர்கள் அனைவரும் களங்கமற்ற சிறுவர்களாதலால் பிரஹ்லாதன் உபதேசித்ததைக் கேட்டு அதைக் கிரகித்துக் கொண்டனர். குருமார்களின் சிக்ஷையை ஏற்கவில்லை.

---

7. 54. விருத்ராசுரன், பிரஹ்லாதன், விருஷபர்வா, பலி, பாணன், மயன், விபீஷணன், ஸுக்ரீவன், ஹனுமான், ஜாம்பவான், கஜேந்திரன், ஜடாயு, வியாதன், கோபிகைகள், யஜ்ஞபத்னிகள் இங்ஙனம் வெகு பேர்கள் அந்தந்த யுகத்தில் ஸாதுக்களின் சேர்க்கையால் என் ஸ்தான மடைந்தார்கள். இவர்களிற் பலர் வேதங்களை அத்தியயனம் செய்தவர்களல்லர், பெரியோர்களை உபாசித்தவர்களல்லர், விரதங்களை யனுஷ்டித்தவர்களல்லர், தவஞ்செய்தவர்களல்லர், ஸாதுக்களின் சேர்க்கை மாத்திரத்தினுல் ஏற்பட்ட ப்ரீதியால் என்னை அடைந்தார்கள். —பாக. 11. 12. 5-8.

ஒ. வ்யாதஸ்யாசரணம் த்ருவஸ்ய ச வயோ வித்யா கஜேந்த்ரஸ்ய கா, கா ஜாதிர்-விதுரஸ்ய, யாதவபதே-ருக்ரஸ்ய கிம் பௌருஷம்। குப்ஜாயா: கமனீய-ரூபமதிகம் கிம் தத் ஸுதாம்னோ தனம் பக்த்யா துஷ்யதி கேவலம் ந து குணைர்-பக்திப்ரியோ மாதவ:॥

ஒ. நாஹம் வேதைர் ந தபஸா ந தானேன ந சேஜ்யயா। —கீ. 11. 53.

7. 52. ஒ. (தத்கர்ம யந் ந பந்தாய, ஸா வித்யா யா விமுக்தயே) எது கட்டுப்படுத்தாதோ அதுவே செய்யத்தக்க கர்மம், எது முக்தியளிக்குமோ அதுவே வித்தை.

7. 55. பகவத்பக்தி பலவிதமான பிரியங்களுள் ஒன்றன்று; அனைத்திற்கும் மேலானதும் அப்பாற்பட்டதும்.

अथाचार्यसुत-स्तेषां बुद्धिमेकान्त-संस्थिताम् ।
आलक्ष्य भीत-स्त्वरितो राज्ञ आवेदयद् यथा ॥ ८.२ ॥

श्रुत्वा तदप्रियं दैत्यो दुःसहं तनयानयम् ।
कोपावेशचलद्गात्रः पुत्रं हन्तुं मनो दधे ॥ ८.३ ॥

क्षिप्त्वा परुषया वाचा प्रह्लाद-मतदर्हणम् ।
आहेक्षमाणः पापेन तिरश्चीनेन चक्षुषा ॥ ८.४ ॥

प्रश्रयावनतं दान्तं बद्धांजलि-मवस्थितम् ।
सर्पः पदाहत इव श्वसन् प्रकृति-दारुणः ॥ ८.५ ॥

हे दुर्विनीत मन्दात्मन् कुलभेदकराधम ।
स्तब्धं मच्छासनोद्धूतं नेष्ये त्वाद्य यमक्षयम् ॥ ८.६ ॥

क्रुद्धस्य यस्य कंपन्ते त्रयो लोकाः सहेश्वराः ।
तस्य मेऽभीतवन्मूढ शासनं किं बलोऽत्यगाः ॥ ८.७ ॥

---

8. 2. அவர்களுடைய புத்தியின் ஏகாந்த நிலையைக் கண்டு பயந்த குருபுத்திரன் விரைவில் அரசனிடம் (பிரஹ்லாதனுடன்) சென்று உள்ளதை உள்ளபடி தெரிவித்தான்.

8. 3. தைத்திய ராஜன் தனக்குப் பிரியமில்லாத அச் செய்தியையும் சகிக்கொணுத தன் மகனுடைய துர்நடத்தையையும் கேட்டு வெகுளியால் உடல் துடிக்கத் தன் மகனை (எப்படியாவது) கொன்றுவிடவேண்டும் என்று எண்ணினுன்.

8. 4-5. இயற்கையாகவே வணக்கமுள்ளவனும், அடக்கமுள்ளவனும், கை கூப்பி நிற்பவனும், கடுமையாய் நடத்தத் தகாதவனுமாகிய பிரஹ்லாதனைக் கொடுமை மிக்க வக்கிரக் கண்ணுல் பார்த்துக் கடுஞ் சொற்களால் திட்டிக் கொடுமையே இயற்கையாகக் கொண்ட அசுர ராஜன் காலால் மிதிபட்ட பாம்புபோல் சீறிக்கொண்டு பின் வருமாறு கூறினுன்.

8. 6. "வினயங்கெட்டவனே! மதி மழுங்கியவனே! குலத்தையழிக்கப் பிறந்த பதரே! என் கட்டளையை மீறியவனும் திமிர்பிடித்தவனுமான உன்னை இப்போதே யம புரத்திற்கு அனுப்பி வைக்கிறேன்.

8. 7. மூடா! எவனுடைய கோபத்தால் மூவுலகும் அவ் வுலக பதிகளுடன் நடுங்குகின்றனவோ அப்படிப்பட்ட என்னுடைய கட்டளையை எந்த பலத்தால் பயமற்றவன்போல் மீறினுய்?"

---

8. 7. ஒ. துரௌபதி கூறியது— த்வயா நாதேந தேவேச ஸர்வாபத்ப்யோ பயம் ந ஹி। ஒ. (பலம் பலவதாமஸ்மி) பலவான்களுடைய பலமாக நான் இருக்கிறேன்.

—கீ. 7. 11.

---

8. 2. अवेदयत्तदा । 8. 3. दैत्यो गुरुणोक्तं सुतानयम् ।
8. 6. त्वां तु मच्छासनोद्वृत्तं नेष्याम्यद्य । பா. பே.

प्रह्लाद उवाच--

न केवलं मे भवतश्च राजन् स वै बलं बलिनां चापरेषाम्।
परेऽवरेऽमी स्थिरजङ्गमा ये ब्रह्मादयो येन वशं प्रणीताः ॥ ८.८ ॥

स ईश्वरः काल उरुक्रमोऽसावोजः सहः सत्त्वबलेन्द्रियात्मा।
स एव विश्वं परमः स्वशक्तिभिः सृजत्यवत्यत्ति गुणत्रयेशः ॥ ८.९ ॥

हिरण्यकशिपु-रुवाच--

व्यक्तं त्वं मर्तु-कामोऽसि योऽतिमात्रं विकत्थसे।
मुमूर्षूणां हि मन्दात्मन् ननु स्यु-र्विक्लवा गिरः ॥ ८.१२ ॥

यस्त्वया मन्दभाग्योक्तो मदन्यो जगदीश्वरः।
क्वासौ यदि स सर्वत्र कस्मात् स्तंभे न; दृश्यते ॥ ८.१३ ॥

பிரஹ்லாதன் கூறியது—

8. 8. "அரசே! பிரம்மாதி தேவர் முதல் இங்கு காணும் ஸ்தாவர ஜங்கமங்கள் வரை உயர்ந்தவர்களோ, தாழ்ந்தவர்களோ எவரெவருண்டோ, அவர்களெல்லாம் எவரால் அடக்கி ஆளப்படுகின்றனரோ, அவரே எனக்குமட்டுமல்லாமல் தங்களுக்கும் மற்றுமுள்ள எல்லா பலசாலிகளுக்கும் பலமாக விளங்குகிறார்.

8. 9. "அவரே ஈசுவரர். அனைத்தையும் அளவிடும் காலஸ்வரூபி. அவரே சரீர பலம், இந்திரிய சக்தி, மனோவன்மை அனைத்திற்கும் ஆத்மா. முக் குணங்களுக்கும் ஈசுவரனும் அவைகளைக் கடந்தவனுமான அப் பரம புருஷனே இப் பிரபஞ்சத்தைத் தன் சக்திகளால் ஆக்கியளித்து விழுங்குகிறார்."

ஹிரண்யகசிபு கூறியது—

8. 12. "புத்தி மழுங்கியவனே! வெகு அதிகமாகப் பிதற்றும் நீ சாக விரும்புகிறாய் என்று தெளிவாகிறது. சாகும் நிலை எய்தியவர்களின் பேச்சு பிதற்றலாகத் தானே இருக்கும்.

8. 13. "பாக்கியங் குறைந்த உன்னால் சொல்லப்பட்டபடி எனக்கும் வேறாக ஒரு உலக நாயகன் உண்டு என்றால் அவன் எங்கே? அவன் எங்குமிருக்கிறான் என்றால் இத் தூணில் ஏன் இல்லை?" பிரஹ்லாதன் "காணப்படுகிறானே" என்றான்.

8. 9. **ஓஜ :**— இந்த்ரியபாடவம் ; **ஸஹ :**— மநஸ: பாடவம் |

8. 13. ஒ. "சாணினு முளனோர்தன்மை அணுவினைச்சத கூறிட்ட கோணினுமுள்ளன் மாமேருக் குன்றினுமுள நின்னின்ற தூணினுமுளன் முன்சொன்ன சொல்லினுமுளன் இத்தன்மை காணுதி விரைவில்" என்றான்.

8. 9. **उरुक्रमोह्यजसाह्योजः।** 8. 12. **नानास्युर्विक्लवा।**

8. 13. **यदिह सर्वत्र।**

अथाचार्यसुत-स्तेषां बुद्धिमेकान्त-संस्थिताम् ।
आलक्ष्य भीत-स्त्वरितो राज्ञ आवेदयद् यथा ॥ ८.२ ॥

श्रुत्वा तदप्रियं दैत्यो दुःसहं तनयानयम् ।
कोपावेशचलद्गात्रः पुत्रं हन्तुं मनो दधे ॥ ८.३ ॥

क्षिप्त्वा परुषया वाचा प्रह्लाद-मतदर्हणम् ।
आहेक्षमाणः पापेन तिरश्चीनेन चक्षुषा ॥ ८.४ ॥

प्रश्रयावनतं दान्तं बद्धांजलि-मवस्थितम् ।
सर्पः पदाहत इव श्वसन् प्रकृति-दारुणः ॥ ८.५ ॥

हे दुर्विनीत मन्दात्मन् कुलभेदकराधम ।
स्तब्धं मच्छासनोद्धूतं नेष्ये त्वाद्य यमक्षयम् ॥ ८.६ ॥

क्रुद्धस्य यस्य कंपन्ते त्रयो लोकाः सहेश्वराः ।
तस्य मेऽभीतवन्मूढ शासनं किं बलोऽत्यगाः ॥ ८.७ ॥

---

8. 2. அவர்களுடைய புத்தியின் ஏகாந்த நிலையைக் கண்டு பயந்த குருபுத்திரன் விரைவில் அரசனிடம் (பிரஹ்லாதனுடன்) சென்று உள்ளதை உள்ளபடி தெரிவித்தான்.

8. 3, தைத்திய ராஜன் தனக்குப் பிரியமில்லாத அச் செய்தியையும் சகிக்கொணுத தன் மகனுடைய துர்நடத்தையையும் கேட்டு வெகுளியால் உடல் துடிக்கத் தன் மகனை (எப்படியாவது) கொன்றுவிடவேண்டும் என்று எண்ணினுன்.

8. 4-5. இயற்கையாகவே வணக்கமுள்ளவனும், அடக்கமுள்ளவனும், கை கூப்பி நிற்பவனும், கடுமையாய் நடத்தத் தகாதவனுமாகிய பிரஹ்லாதனைக் கொடுமை மிக்க வக்கிரக் கண்ணுல் பார்த்துக் கடுஞ் சொற்களால் திட்டிக் கொடுமையே இயற்கையாகக் கொண்ட அசுர ராஜன் காலால் மிதிபட்ட பாம்புபோல் சீறிக்கொண்டு பின் வருமாறு கூறினுன்.

8. 6. "வினயங்கெட்டவனே! மதி மழுங்கியவனே! குலத்தையழிக்கப் பிறந்த பதரே! என் கட்டளையை மீறியவனும் திமிர்பிடித்தவனுமான உன்னை இப்போதே யமபுரத்திற்கு அனுப்பி வைக்கிறேன்.

8. 7. மூடா! எவனுடைய கோபத்தால் மூவுலகும் அவ் வுலக பதிகளுடன் நடுங்குகின்றனவோ அப்படிப்பட்ட என்னுடைய கட்டளையை எந்த பலத்தால் பயமற்றவன்போல் மீறினுய்?"

---

8. 7. ஒ. துரௌபதி கூறியது— த்வயா நாதேச தேவேச ஸர்வாபத்ப்யோ பயம் ந ஹி।
ஒ. (பலம் பலவதாமஸ்மி) பலவான்களுடைய பலமாக நான் இருக்கிறேன்.
—கீ. 7. 11.

---

8. 2. अवेदयत्तदा । 8. 3. दैत्यो गुरुणोक्तं सुतानयम् ।
8. 6. त्वां तु मच्छासनोद्वृत्तं नेष्याभ्यद्य । பா. பே.

प्रह्लाद उवाच—

न केवलं मे भवतश्च राजन् स वै बलं बलिनां चापरेषाम्।
परेऽवरेऽमी स्थिरजङ्गमा ये ब्रह्मादयो येन वशं प्रणीताः ॥ ८.८ ॥

स ईश्वरः काल उरुक्रमोऽसावोजः सहः सत्त्वबलेन्द्रियात्मा।
स एव विश्वं परमः स्वशक्तिभिः सृजत्यवत्यत्ति गुणत्रयेशः ॥ ८.९ ॥

हिरण्यकशिपु-रुवाच—

व्यक्तं त्वं मर्तु-कामोऽसि योऽतिमात्रं विकत्थसे।
मुमूर्षूणां हि मन्दात्मन् ननु स्यु-र्विक्लवा गिरः ॥ ८.१२ ॥

यस्त्वया मन्दभाग्योक्तो मदन्यो जगदीश्वरः।
क्वासौ यदि स सर्वत्र कस्मात् स्तंभे न; दृश्यते ॥ ८.१३ ॥

---

பிரஹ்லாதன் கூறியது—

8. 8. "அரசே! பிரம்மாதி தேவர் முதல் இங்கு காணும் ஸ்தாவர ஜங்கமங்கள் வரை உயர்ந்தவர்களோ, தாழ்ந்தவர்களோ எவரெவருண்டோ, அவர்களெல்லாம் எவரால் அடக்கி ஆளப்படுகின்றனரோ, அவரே எனக்குமட்டுமல்லாமல் தங்களுக்கும் மற்றுமுள்ள எல்லா பலசாலிகளுக்கும் பலமாக விளங்குகிறார்.

8. 9. "அவரே ஈசுவரர். அனைத்தையும் அளவிடும் காலஸ்வரூபி. அவரே சரீர பலம், இந்திரிய சக்தி, மனோவன்மை அனைத்திற்கும் ஆத்மா. முக் குணங்களுக்கும் ஈசுவரனும் அவைகளைக் கடந்தவனுமான அப் பரம புருஷனே இப் பிரபஞ்சத்தைத் தன் சக்திகளால் ஆக்கியளித்து விழுங்குகிறார்."

ஹிரண்யகசிபு கூறியது—

8. 12. "புத்தி மழுங்கியவனே! வெகு அதிகமாகப் பிதற்றும் நீ சாக விரும்பு கிறாய் என்று தெளிவாகிறது. சாகும் நிலை எய்தியவர்களின் பேச்சு பிதற்றலாகத் தானே இருக்கும்.

8. 13. "பாக்கியங் குறைந்த உன்னால் சொல்லப்பட்டபடி எனக்கும் வேறாக ஒரு உலக நாயகன் உண்டு என்றால் அவன் எங்கே? அவன் எங்குமிருக்கிறான் என்றால் இத் தூணில் ஏன் இல்லை?" பிரஹ்லாதன் "காணப்படுகிறானே" என்றான்.

---

8. 9. ஓஜ :— இந்த்ரியபாடவம்; ஸஹ :— மநஸ: பாடவம்।

8. 13. ஒ. "சாணினு முளனோர்தன்மை அணுவினைச்சத கூறிட்ட கோணினுமுள்ளன் மாமேருக் குன்றினுமுள நின்னின்ற தூணினுமுளன் முன்சொன்ன சொல்லினுமுளன் இத்தன்மை காணுதி விரைவில்" என்றான்.

---

8. 9. उरुक्रमोऽजसाद्योजः। 8. 12. नानास्युर्विक्लवा।

8. 13. यदिह सर्वत्र।

सोऽहं विकत्थमानस्य शिरः कायाद्धरामि ते
गोपायेत हरि-स्त्वाद्य यस्ते शरण-मीप्सितम् ॥ ८.१४ ॥

एवं दुरुक्तै-र्मुहु-रर्दयन् रुषा सुतं महाभागवतं महासुरः ।
खड्गं प्रगृह्योत्पतितो वरासनात् स्तंभं तताडातिबलः स्वमुष्टिना ॥ ८.१५ ॥

तदैव तस्मिन् निनदोऽति-भीषणो बभूव येनाण्डकटाहमस्फुटत् ।
यं वै स्वधिष्ण्योपगतं त्वजादयः श्रुत्वा स्वधामात्यय-मङ्ग मेनिरे ॥ ८.१६ ॥

सत्यं विधातुं निजभृत्य-भाषितं व्याप्तिं च भूते-ष्वखिलेषु चात्मनः ।
अदृश्यतात्यद्भुत-रूप-मुद्वहन् स्तंभे सभायां न मृगं न मानुषम् ॥ ८.१८ ॥

कराल-दंष्ट्रं करवाल-चंचल-क्षुरान्त-जिह्वं भ्रुकुटी-मुखोल्बणम् ।
स्तब्धोर्ध्व-कर्णं गिरि-कन्दराद्भुत-व्यात्तास्यनासं हनु-भेद-भीषणम् ॥ ८.२१ ॥

---

8. 14. "பிதற்றும் உன்னுடைய தலையை உடலிலிருந்து நான் நீக்கிவிடப் போகிறேன். உன்னல் சரணடையப்பட்ட ஹரி எவனே அவன் இப்போது உன்னைக் காப்பாற்றட்டும்" என்ருன்.

8. 15. இங்ஙனம் மகா பாகவதனை புத்திரனைக் கடுஞ் சொற்களால் மேன் மேலும் தாக்கிக்கொண்டு பலம் மிகுந்த அக் கொடிய அசுரன் வாளை எடுத்துக் கொண்டு சிம்மாஸனத்தினின்று பாய்ந்து தன் முஷ்டியால் தூணில் குத்தினுன்.

8. 16. அன்பரே! அப்போதே அண்டகடாஹம் வெடித்தாற் போன்ற அதி பயங்கரமான சப்தம் உண்டாயிற்று. பிரம்மா முதலியவர்கள் அவரவர் ஸ்தானத்தை எட்டிய அச் சப்தத்தைக் கேட்டுத் தங்கள் உலகம் அழிந்துவிட்டதாகக் கருதினர்.

8. 18. (பகவான்) தன் அடியார் கூறியதை உண்மையென நிரூபிக்கவும், தன்னுடைய நிறைவு எல்லாப் பொருள்களிலும் உள்ளது உண்மையென நிரூபிக்கவும், மிருகமுமல்லாமல் மனிதனுமல்லாமல் அதியற்புதமான வடிவு கொண்டு சபை நடுவில் தூணில் தோன்றினுர்.

8. 21. பயங்கரமான தெற்றிப் பற்களும், கொடியதுங் கூரியதுமான வாள்போல் சுழலும் நாக்கும், நெரிந்த புருவத்துடன் கூடிய பயங்கரமான முகமும், அசைவற்று உயரத் தூக்கிய காதுகளும், மலையின் குகைபோல் அகன்ற அற்புதமான வாயும் மூக்கும், பயங்கரமாய்ப் பிளந்த தாடையும்;

---

8. 15. ப்ரஹ்லாதேன மூர்த்னி பத்தாஞ்ஜலிஞ நிரீக்ஷமாணம் ஸ்தம்பம் தாடிதவான் |

8. 18. நிஜப்ருத்யேன ப்ரஹ்லாதேன யத்பாஷிதம் த்ருச்யத இதி தத் ஸத்யம் விதாதும் கர்த்தும் | ததா அகிலேஷு பூதேஷு ஸ்வாத்மனே வ்யாப்திஞ் ச ஸத்யம் கர்த்தும் ஸ்தம்பே அத்ருச்யத | நிஜப்ருத்யை: ஸநகாதிபி: சாபானந்தர-மனுதப்தைர்-யத்-பாஷிதம் த்ரிபிர் ஜன்மபி: சாபமோக்ஷோ பவத்விதி தத்ஸத்யம் கர்த்தும் | நாந்தர்-ந பஹிரிதி, ந நரைர்-ந ம்ருகை-ரிதி ச ப்ரஹ்மணு ச நிஜப்ருத்யேன யத்பாஷிதம் தத்ஸத்யம் கர்த்தும் | யச்ச நாரதேன ஸ்வயமிந்த்ரம் ப்ரதி 'அயம் மஹான் ஸம்ஸ்தாம் ந ப்ராப்ஸ்யதி அனந்தானுசர' இதி யத்பாஷிதம் தச்ச ஸத்யம் கர்த்தும் | 'கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த: ப்ரணச்யதி' —ஸ்ரீ 'தேஷாமஹம் ஸமுத்தர்த்தா' இத்யாதி ச ஸத்யம் கர்த்தும் ||

8. 21. ஒ. 'தம்ஷ்ட்ராகராலானி ச தே முகானி த்ருஷ்ட்வைவ காலானல-ஸந்நிபானி' —கீ. 11. 25.

ஸடா :— ஜடா; கரவாள: கட்க: தத்வத் சஞ்சலா க்ஷுராந்தவத் தீக்ஷ்ணா ஜிஹ்வா யஸ்மின் |

---

8. 15. तताडोरुबलः । பா. பே.

दुरासदं सर्व-निजेतरायुध-प्रवेक-विद्रावित-दैत्य-दानवम् ।
प्रायेण मेऽयं हरिणोरुमायिना वधः स्मृतोऽनेन समुद्यतेन किम् ॥ ८.२३ ॥

एवं ब्रुवं-स्त्वभ्यपतद् गदायुधो नदन् नृसिंहं प्रति दैत्यकुंजरः ।
अलक्षितोऽग्नौ पतितः पतङ्गमो यथा नृसिंहौजसि सोऽसुरस्तदा ॥ ८.२४ ॥

तं विक्रमन्तं सगदं गदाधरो महोरगं तार्क्ष्यसुतो यथाग्रहीत् ।
स तस्य हस्तोत्कलित-स्तदासुरो विक्रीडतो यद्वदहि-र्गरुत्मतः ॥ ८.२६ ॥

विष्वक् स्फुरन्तं ग्रहणातुरं हरि-र्व्यालो यथाऽऽखुं कुलिशाक्षत-त्वचम् ।
द्वार्यूरुमापात्य ददार लीलया नखै-र्यथाहिं गरुडो महाविषम् ॥ ८.२९ ॥

---

8. 23. நெருங்க முடியாததாயும், சொந்தமானதும் பிறவுமான ஆயுதங்களால் தைத்திய தானவர்களேயெல்லாம் விரட்டுவதாயும் உள்ள அந்த ரூபத்தைப் பார்த்து 'மகா மாயாவியான ஹரியினால் என்னுடைய வதம் ஏற்படும் என்று கூறப்பட்டுள்ளதெனினும், இங்கு தோன்றும் இந்த வடிவால் என்ன செய்துவிட முடியும்?'

8. 24. என்று கூறிக்கொண்டும் கர்ஜித்துக்கொண்டும் கதாயுதத்தைத் தூக்கிக்கொண்டு நரசிங்கத்தை நோக்கி அசுரயானை போன்ற ஹிரண்யகசிபு பாய்ந்தான். தீயில் விழுந்த விட்டிற் பூச்சிபோல் அவ் வசுரன் அப்போதே நரசிங்க ஜோதியில் மறைந்து போனான்.

8. 26. (அடுத்த நிமிஷம்) பெரிய பாம்பைக் கருடன் பிடித்தாற்போல் கதாதரராகிய விஷ்ணு கதையைத் தூக்கிக்கொண்டு பாய்ந்த அவனைப் பிடித்தார். விளையாடும் கருடனிடமிருந்து பாம்பு நழுவினாற்போல் அப்போது அவ் வசுரன் அவருடைய கையிலிருந்து நழுவினான்.

8. 29. பிடியினால் துன்புற்று நாற்றிசையிலும் சுழலும் அவனைப் பாம்பு எலியைப் பிடிப்பதுபோல் (மீண்டும் பிடித்தார்). வஜ்ராயுதத்தாலும் காயப்படாத தோல் படைத்த அவனை வாயிற்படியில் துடைமேல் வீழ்த்தி கொடிய விஷப் பாம்பைக் கருடன் கிழிப்பதுபோல் விளையாட்டாக கிழித்தார்.

---

8. 23. நிஜானி — சக்ராதீனி, இதராணி — வஜ்ராதீனி த ஏவ ஆயுதப்ரவேகா: சஸ்த்ரோத்தமா: தைர்-வித்ராவிதா தைத்யதானவா: யேந தத் ரூபம் ।

8. 29. ஒ. அந்த: க்ருபாஸூதா பூர்ணோ பஹி: க்ரோதோ ந்ருகேஸரீ। தைத்யேந்த்ர-மரிபாவேன பஜந்தம் ஸ்வ-மகாதயத் ॥ —ஸ்ரீதரர்

ஒ. 'ஞாயிறே! இருளை என்ன செய்து விட்டாய்? ஓட்டினாயா, கொன்றாயா? விழுங்கிவிட்டாயா? கட்டி முத்த மிட்டு நின்கதிர்களாகிய கைகளால் மறைத்து விட்டாயா? இருள் நினக்குப்பகையா, நின் உணவுப்பொருளா அல்லது நின் காதலியா?' —பாரதி

த்வாரி ஸபாயாம் நாந்தர்-பஹி:, ஊரும்-ஊரௌ நிபாத்ய, ந பூமௌ ந சாம்பரே, நகை: ந வ்யஸூமத்பி-ரஸூமத்பிர்வா, ஏவம்-திவாநக்த-பரிஹாராய ஸந்த்யாயாம் ।

---

8. 24. एवं विमृश्य स्वभ्यपतत् ।		பா. பே.

तत्रोपव्रज्य विबुधा ब्रह्मेन्द्र-गिरिशादयः।
ऋषयः पितरः सिद्धा विद्याधर-महोरगाः॥
ईडिरे नरशार्दूलं नातिदूरचराः पृथक् ॥ ८.३९ ॥

एवं सुरादयः सर्वे ब्रह्मरुद्र-पुरस्सराः।
नोपैतु-मशकन् मन्युसंरंभं सुदुरासदम् ॥ ९.१ ॥

साक्षाच्छ्रीः प्रेषिता देवै-र्दृष्ट्वा तन्महदद्भुतम्।
अदृष्टाश्रुत-पूर्वत्वात् सा नोपेयाय शङ्किता ॥ ९.२ ॥

प्रह्लादं प्रेषयामास ब्रह्मावस्थित-मन्तिके।
तात प्रशमयोपेहि स्वपित्रे कुपितं प्रभुम् ॥ ९.३ ॥

तथेति शनकै राजन् महाभागवतोऽर्भकः।
उपेत्य भुवि कायेन ननाम विधृतांजलिः ॥ ९.४ ॥

---

8. 39. அங்கு பிரம்மா, இந்திரன், சிவன் முதலிய தேவர்களும், ரிஷிகளும், பிதிருக்களும், ஸித்தர்களும், வித்தியாதரர்களும், நாகர்களும் தோன்றிச் சற்று விலகி நின்று தனித்தனியே புருஷோத்தமனைத் துதித்தனர்.

9. 1. பிரம்மாவையும், சிவனையும் முன்னிட்டே தேவர் முதலிய அனைவரும் (இங்ஙனம் துதித்தனர் எனினும்) கோபாவேசத்திலுள்ளவரும் நெருங்க முடியாதவரு மாக இருந்த அவரை அணுகத் துணியவில்லை.

9. 2. கண்முன் நிற்கும் ஸ்ரீதேவியும் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்ட போதிலும் அந்த ஆச்சரியம் மிக்க ரூபத்தைக் கண்டு, அது முன்னர் காணப்படாததும் கேட்கப் படாததுமாயிருந்ததால் அணுக அஞ்சினர்.

9. 3. பின்னர் பிரம்மதேவர் அருகில் நின்ற பிரஹ்லாதனை நோக்கி 'குழந்தாய்! உன் தந்தையிடம் கோபங் கொண்ட பிரபுவை யணுகிச் சமாதானம் செய்' என்று ஏவினர்.

9. 4. அரசே! 'அங்ஙனமே ஆகட்டும்' என்று மகா பாகவதனுகிய அச் சிறுவன் மெதுவாகப் பக்கத்தில் சென்று கைகளைக் கூப்பிக்கொண்டு தரையில் உடலை வீழ்த்தி நமஸ்கரித்தான்.

---

9. 1. உக்ரோஸப்யனுக்ர ஏவாயம் ஸ்வபக்தானும் ந்ருகேஸரீ। கேஸரீவ ஸ்வபோதானைமன்யேஷா-முக்ர விக்ரஹ ; । —ஸ்ரீ

9. 3. ஒ. 'அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வா பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே। —கீ. 11. 45.

---

8. 39. तमुपव्रज्य। 9. 4. समुपेत्य। பா. பே.

स्वपादमूले पतितं तमर्भकं विलोक्य देवः कृपया परिप्लुतः।
उत्थाप्य तच्छीर्ष्ण्यदधात् करांबुजं कालाहि-वित्रस्त-धियां कृताभयम् ॥ ९.५ ॥

स तत्कर-स्पर्श-धुताखिलाशुभः सपद्यभिव्यक्त-परात्म-दर्शनः।
तत्पादपद्मं हृदि निर्वृतो दधौ हृष्यत्तनुः क्लिन्नहृदश्रु-लोचनः ॥ ९.६ ॥

अस्तौषीद्धरि-मेकाग्रमनसा सुसमाहितः।
प्रेमगद्गदया वाचा तन्न्यस्त-हृदयेक्षणः ॥ ९.७ ॥

प्रह्लाद उवाच—

ब्रह्मादयः सुरगणा मुनयोऽथ सिद्धाः सत्त्वैकतानमतयो वचसां प्रवाहैः।
नाराधितुं पुरुगुणै-रधुनापि पिप्रुः किं तोष्टु-मर्हति स मे
हरि-रुग्रजातेः ॥ ९.८ ॥

---

9. 5. பகவான் தன் பாத மூலத்தில் கிடந்த அச்சிறுவனைப் பார்த்துக் கிருபையால் இளகியவராய் அவனைத் தூக்கிக் கால ஸர்ப்பத்தினிடம் பயந்து சரணடையும் மதிமான்களுக்கு அபயமளிக்கும் தனது கரகமலத்தை அவன் சிரத்தில் வைத்தார்.

9. 6. அந்தக் கரஸ்பர்சத்தால் அசுபமனைத்துங் களையப்பெற்றவனும், அப்போதே பிரத்தியக்ஷமாகப் பரமாத்மதரிசனத்தைப் பெற்றவனுமாகிய அவன் புளகாங்கிதமெய்தி, உள்ளம் நெகிழ்ந்து, கண்ணீர் பெருக அவருடைய சரணாரவிந்தத்தை இருதயத்தில் கொண்டு பரமானந்த மெய்தினன்.

9. 7. மெய்மறந்து ஒருமைப்பட்ட மனத்துடன், அவரிடமே பார்வையை வைத்து உள்ளத்தை நிறுத்தி, அன்பினால் தழதழத்த சொற்களால் பகவானைத் துதிக்கலானான்.

பிரஹ்லாதன் கூறியது—

9. 8. பிரம்மாதி தேவர்களும், முனிவர்களும், சித்தர்களும் ஸத்துவ குணத்தில் ஆழ்ந்த மனமுடையவர்களாயினும் அளவற்ற குணங்களால் சொற்களின் பெருக்கைக் கொண்டு இதுவரை (இப் பரம புருஷனை) ஆராதிக்கும் ஆற்றலைப் பெறவில்லை. (அவ்வளவு பெருமை வாய்ந்த) அவர் தீய பிறப்புடைய என்னிடம் எங்ஙனம் பிரீதி கொள்ளத் தக்கவரானார் ?

---

9. 5. ஒ. ஸ த்வம் மமாப்யச்யுத சீர்ஷ்ணி வந்திதம் கராம்புஜம் யத் த்வததாயி ஸாத்வதாம் ‖
லக்ஷ்மீதேவீ : பாக 5. 18. 23.

9. 8. ஒ. யத்வா ச்ரமாவதி யதாமதி வாப்யசக்த : ஸ்தௌம்யேவ-மேவ கலு தேடபி ஸதா ஸ்துவந்த:। வேதாச்-சதுர்முக-முகாச்ச மஹார்ணவாந்த: கோ மஜ்ஜதோ-ரணுகுலாசலயோர்-விசேஷ :‖
ஸ்தோத்ரரத்னம்— ஆளவந்தார்.

**मन्ये धनाभिजन-रूप-तपःश्रुतौज-स्तेजः प्रभाव-बल-पौरुष-बुद्धियोगाः ।**
**नाराधनाय हि भवन्ति परस्य पुंसो भक्त्या तुतोष भगवान्**
**हरियूथपाय ॥ ९.९ ॥**

**विप्राद् द्विषड्गुण-युता-दरविन्दनाभ-पादारविन्द-विमुखा-च्छ्वपचं वरिष्ठम् ।**
**मन्ये तदर्पित-मनोवचनो-हितार्थ-प्राणं पुनाति स कुलं**
**न तु भूरिमानः ॥ ९.१० ॥**

**नाहं बिभेम्यजित तेऽतिभयानकास्य-जिह्वार्क-नेत्र-भ्रुकुटी-रभसोग्र-दंष्ट्रात् ।**
**आन्त्रस्रजः क्षतज-केसर-शङ्कुकर्णा-न्निर्ह्राद-भीत-**
**दिगिभा-दरिभिन्नखाग्रात् ॥ ९.१५ ॥**

---

9. 9. உடைமையும், உற்றுரும், உருவமும், தவமும், கேள்வியும், ஆற்றலும், வீரியமும் கீர்த்தியும், பலமும், முயற்சியும், புத்தியும், யோகமும் பரம புருஷனுடைய வழிபாட்டிற்குப் பயன்படா என்றே நான் கருதுகிறேன். பக்தியாலன்றோ பகவான் கஜேந்திரனுக்கு அருள் புரிந்தார்.

9. 10. (மேற் கூறிய) பன்னிரண்டு குணங்களும் வாய்ந்தவனுயினும் ஒரு பிராம்மணன் பகவானுடைய பாதாரவிந்தத்தில் பக்தியில்லாதவனுயின், மனமும் வாக்கும் செயலும் பொருளும் பிராணனும் பகவானிடம் அர்ப்பணம் செய்த சண்டாளனே அவனைவிட மேலானவன் எனக் கருதுகிறேன். ஏனெனில் அச் சண்டாளன் தன் குலத்தைப் புனிதமாக்கி விடுவான் ; கருவங்கொண்ட பிராம்மணன் எதையும் புனிதமாக்கான்.

9. 15. ஜயிக்கப்படாதவனே ! உம்முடைய மிகவும் பயங்கரமான முகம், நாக்கு, சூரியன்போல் ஜ்வலிக்கும் கண், நெரித்த புருவம், தெற்றிப் பல் இவற்றி னின்றும், நரம்பு மாலை, ரத்தந் தோய்ந்த பிடறி, உயர்ந்த காது, திக்கஜங்களை நடுங்கச் செய்யும் கர்ஜனை, எதிரிகளைப் பிளக்கும் கூரிய நகம் இவற்றினின்றும் நான் பயப்படவில்லை.

---

9. 9. 'நாஹம் வேதைர்-ந தபஸா ந தானேன ந சேஜ்யயா' —கீ. 11: 53

9. 10. பாதியாய் அழுகிய கால் கையரேனும் பழிகுலமும் இழிதொழிலும் படைத்தா ரேனும் ஆதியாய் அரவணையாய் என்பராகில் அவரன்றே யாம் வணங்கும் அடிகளாவார், சாதியாலொழுக்கத்தால் மிக்கோரேனும் சதுர்மறையால் வேள்வியாற்றக்கோ ரேனும் போதில் நான்முகன் பணியப் பள்ளி கொள்வான் பொன்னரங்கம் போற்றுதார் புலையர் தாமே
—திருவரங்கக் கலம்பகம்

**பூரிமான** :— (**கர்**வோ யஸ்ய ஸ து விப்ர : ஆத்மானமபி ந :புனுதி குத: குலம்) கர்வமுடையவன் பிராம்மணனுயினும் தன்னையே புனிதமாக்கமாட்டான், குலத்தை எங்ஙனம் புனிதமாக்குவான் ? —ஸ்ரீ

பா. பே.

---

9. 9. **प्रतापबल ।**

त्रस्तोस्म्यहं कृपण-वत्सल दुःसहोग्र-संसारचक्र-कदनाद् ग्रसतां प्रणीतः।
बद्धः स्वकर्मभि-रुशत्तम तेऽङ्घ्रिमूलं प्रीतो-पवर्ग-
शरणं ह्वयसे कदा नु ॥ ९.१६ ॥

क्वाहं रजः प्रभव ईश तमोऽधिकेऽस्मिन् जातः सुरेतरकुले क्व तवानुकंपा।
न ब्रह्मणो न तु भवस्य न वै रमाया यन्मेऽर्पितः
शिरसि पद्मकरः प्रसादः ॥ ९.२६ ॥

नैवोद्विजे पर दुरत्यय-वैतरण्या-स्त्वद्वीर्य-गायन-महामृत-मग्न-चित्तः।
शोचे ततो विमुखचेतस इन्द्रियार्थ-मायासुखाय
भरमुद्वहतो विमूढान् ॥ ९.४३ ॥

प्रायेण देव मुनयः स्वविमुक्तिकामा मौनं चरन्ति विजने न परार्थ-निष्ठाः।
नैतान्विहाय कृपणान्विमुमुक्ष एको नान्यं त्वदस्य
शरणं भ्रमतोऽनुपश्ये ॥ ९.४४ ॥

---

9. 16. எளியோர்க்கிரங்குபவரே! உத்தமரே! சகிக்க முடியாததும் கொடியதுமான ஸம்ஸார சக்கரத் துன்பத்தைக் கண்டு நான் நடுக்க மடைகிறேன். என் செயல்களாலேயே பிணிக்கப்பட்டுக் கொடியவர்களிடை தள்ளப்பட்டவனுயிருக்கிறேன் என்னிடம் பிரீதி வைத்து மோக்ஷ வடிவான ரக்ஷையளிக்கும் உங்கள் பாத மூலத்திற்கு எப்போது அழைத்துக் கொள்ளப் போகிறீர்கள்?

9. 26. அனைத்தையும் ஆள்வோரே! தமோகுணம் மிக்கதும் ரஜோகுணம் குடிகொண்டதுமான இந்த அசுர குலத்தில் தோன்றிய நான் எங்கே? பிரம்மாவுக்கும் சிவனுக்கும், லக்ஷ்மிக்கும்கூடக் கிடைக்காத பிரஸாதமாகிய உமது கரகமலம் எனது சிரத்தில் பொருத்தப்பட்டதே அந்த உம்முடைய கருணை எங்கே?

9. 43. அனைத்தையுங் கடந்தவரே! உமது பெருமையைப் பாடும் அளவு கடந்த அமிருதத்தில் மூழ்கிய சித்தத்தையுடைய நான் கடத்தற்கரிய வைதரிணியைக் கண்டு பயப்படவில்லை. உம்மிடத்தில் நோக்கமில்லாதவர்களாய், இந்திரிய விஷயங்களில் தோன்றும் பொய்யான சுகத்திற்காகப் பெருஞ் சுமையைச் சுமக்கும் மூடர்களைக் குறித்தே வருந்துகிறேன்.

9. 44. தேவரே! பெரும்பாலும் முனிவர்கள் தாம் முக்தியடைதலை விரும்பியவர்களாய் ஜன ஸஞ்சாரமற்ற இடங்களில் மௌனிகளாய்த் தவம் புரிகின்றனர்; பிறர் நன்மையில் நாட்டங் கொள்வதில்லை. எளியவர்களான இம்மக்களை விட்டுவிட்டுத் தனியே நான் ஒருவனாக மோக்ஷமடைய விரும்பவில்லை. இங்கு சுழலும் இவர்களுக்கு உம்மைத் தவிர வேறு புகலிடத்தை நான் காணவில்லை.

---

9. 44. **பாடபேதம்**— 'அவிமுக்தகாமா:'— 'பரமார்த்த நிஷ்டா:'— முனிவர் பலர் விடுதலையடையாதவர்களிடம் கருணையால் மார்க்கதரிசிகளாய் பரமார்த்த நிஷ்டையிலிருக்கின்றனர். நானும் அவர்களைப்போல் அவிமுக்தர்களின் விடுதலையை நாடி இங்கு வாழ விரும்புகிறேன்.

---

9. 16. **त्रस्तोस्म्यलं।** 9. 43. **भवदुरत्यय।**

9. 44. **मुनयस्त्वविमुक्तकामाः। परमार्थनिष्ठाः।** பா. பே.

यन्मैथुनादि गृहमेधि-सुखं हि तुच्छं कण्डूयनेन करयोरिव दुःख-दुःखम् ।
तृप्यन्ति नेह कृपणा बहु-दुःखभाजः कण्डूतिवन्
मनसिजं विषहेत धीरः ॥ ९.४५ ॥

मौन-व्रत-श्रुत-तपोऽध्ययन-स्वधर्म-व्याख्या-रहो-जप-समाधय आपवर्ग्याः ।
प्रायः परं पुरुष ते त्वजितेन्द्रियाणां वार्ता भवन्त्युत
न वात्र तु दांभिकानाम् ॥ ९.४६ ॥

श्री भगवानुवाच—

प्रह्लाद भद्र भद्रं ते प्रीतोऽहं तेऽसुरोत्तम ।
वरं वृणीष्वाभिमतं कामपूरोऽस्म्यहं नृणाम् ॥ ९.५२ ॥

प्रह्लाद उवाच—

यस्त आशिष आशास्ते न स भृत्यः स वै वणिक् ।
आशासानो न वै भृत्यः स्वामिन्याशिष आत्मनः ॥
न स्वामी भृत्यतः स्वाम्य-मिच्छन् यो राति चाशिषः ॥ १०.५ ॥

---

9. 45. கலவியால் இல்லறத்தோர் பெறும் சுகம் அற்பமானது; கைகளில் அரிப்புக்குச் சொரிவதுபோல் மேன்மேலும் துக்கமே. வெகுவாய்க் துக்கத்தை யனுபவித்தும் அற்ப புத்தியுள்ளவர்கள் அரிப்பைச் சொரிவதுபோல் அது போதுமென்று எண்ணுவதில்லை. புத்தி வன்மை யுடையவனே மனதிலெழும் காமத்தை வெல்லுகிறுன்.

9. 46. புருஷோத்தமரே! மௌனம், விரதம், கேள்வி, தவம், அத்தியயனம், ஸ்வதர்மம், உபதேசம், தனிமை, ஜபம், ஸமாதி முதலியவை சிறந்த மோக்ஷஸாதனங்கள் எனினும் வெகுவாய் இந்திரிய ஜயமற்றவர்களிடம் அவை ஜீவனுேபாயமாகவும், டாம்பிகர்களிடம் அதற்குக்கூடப் பயன்படாமலும் போகின்றன.

ஸ்ரீ பகவான் கூறியது—

9. 52. அசுரோத்தமனுகிய பிரஹ்லாதா! மங்கள வடிவினனே! உனக்கு மங்களம். நான் உன்னிடம் மகிழ்ந்தேன். உனக்கிஷ்டமான வரத்தைக் கேள். மக்களுடைய ஆசைகளை நான் பூர்த்தி செய்விப்பவன்.

பிரஹ்லாதன் கூறியது—

10. 5. எவன் உம்மிடம் வந்து தனது ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ள விரும்புகின்றுனே அவன் பக்தனல்லன், அவன் வியாபாரியே ஆவான். யஜமானனிடத்தில் தன் ஆசைகளின் பூர்த்தியையே வேண்டுபவன் (உத்தமமான) பணியாளாகான். பணியாளிடம் தனக்கு ஏற்றத்தை விரும்பி அவனுக்கு ஆசிகளை யளிப்பவன் (உத்தமமான) யஜமானனுமாகான்.

---

9. 45. ஒ. 'ஸர்வமேவ துஃக்கம் விவேகினும்.' —யோகசூத்ரம்: பதஞ்ஜலி
ஒ. எவன் உடல் நீங்குவதற்கு முன்பாக காமத்தாலும் கோபத்தாலும் எழும் மனக்கிளர்ச்சியை இங்கிருக்கும்போதே தாங்குவதற்கு வலிமை பெற்றவனே அவன் யோகத்தில் நிலைத்தவன், அவனே சுகபுருஷன். —கீ 5. 23.
9. 46. ஒ. 'யக்ஷ்யே, தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞானவிமோஹிதா :'—கீ 16. 15.
ஒ. 'உதரநிமித்தம் பஹுக்ருதவேஷ:' —சங்

**अहं त्वकाम-स्त्वद्भक्त-स्त्वं च स्वाम्यनपाश्रयः।**
**नान्यथेहावयो-रर्थो राजसेवकयोरिव** ॥ १०.६ ॥

**यदि रासीश मे कामान् वरांस्त्वं वरदर्षभ।**
**कामानां हृद्यसंरोहं भवतस्तु वृणे वरम्** ॥ १०.७ ॥

**इन्द्रियाणि मनः प्राण आत्मा धर्मो धृति-र्मतिः।**
**ह्रीः श्रीस्तेजः स्मृतिः सत्यं यस्य नश्यन्ति जन्मना** ॥ १०.८ ॥

**विमुंचति यदा कामान् मानवो मनसि स्थितान्।**
**तर्ह्येव पुण्डरीकाक्ष भगवत्त्वाय कल्पते** ॥ १०.९ ॥

**ओं नमो भगवते तुभ्यं पुरुषाय महात्मने।**
**हरयेऽद्भुत-सिंहाय ब्रह्मणे परमात्मने** ॥ १०.१० ॥

---

10. 6. நான் ஆசையற்றவன்; உமது பக்தன். நீரும் ஒன்றும் வேண்டாதவர்; உலக நாயகன். அப்படியிருக்கையில் அரசனுக்கும் சேவகனுக்கும்போல நம்மிடையில் வேறு விதமான பயனுக்கிடமில்லை.

10. 7-8. உலக நாயகரே! வரத ராஜரே! நான் வேண்டும் வரங்களைத் தருவீரேல், எந்த ஆசைகள் பிறந்தால் இந்திரியங்களும் மனதும் பிராணனும் உடலும் தருமமும், தைரியமும், மதியும், வெட்கமும், செல்வமும், புத்தி கூர்மையும், ஞாபகமும், ஸத்தியமும் அழிவுறுகின்றனவோ அவ்வாசைகள் என்னுள்ளத்தில் முளைவிடாதிருத்தலையே உம்மிடம் வரமாக வேண்டுகிறேன்.

10. 9. தாமரைக்கண்ணா! மனிதன் மனதிலுறையும் காமங்களை எப்போது விடுகின்றானோ அப்போதே பகவத் தன்மையை அடைதற்குரியவனாகின்றான்.

10. 10. ஓம் பரப்பிரம்மமும் பரமாத்மாவும் பரம புருஷனும் மகாத்மாவும் அத்புதச் சிங்க வடிவில் தோன்றிய ஹரியும் பகவானுமாகிய உமக்கு நமஸ்காரம்.

---

10. 6. ஒ. வேண்டுதல் வேண்டாமையிலானடி சேர்ந்தார்க்கு யாண்டு மிடும்பையில.
—குறள்

10. 7-8. ஒ. நாத யோனிஸஹஸ்ரேஷு யேஷு யேஷு வ்ரஜாம்யஹம்। தேஷு தேஷ்வச்யுதா பக்தி-ரச்யுதாஸ்து ஸதா த்வயி॥ யா ப்ரீதி-ரவிவேகானாம் விஷயேஷ்வநபாயினீ। த்வா-மனுஸ்மரத: ஸா மே ஹ்ருதயான் மாபஸர்ப்பது॥ விஷ்ணுபுராணம் 1. 20. 18-19.

ஒ. உந்தன்னோடுற்றோமே யாவோம்
உனக்கே நாமாட் செய்வோம
மற்றை நங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். —திருப்பாவை

10. 9. இராவணனிடம் எத்தனையோ பெருமைகளிருந்தும் காமத்தை ஜயிக்காததால் அழிந்தான்.

ஒ. 'மஹாசனோ மஹாபாப்மா வித்த்யேனமிஹ வைரிணம்' —கீ 3. 37.

---

10. 7. यदि दास्यसि। பா. பே.

श्रीभगवानुवाच—

भोगेन पुण्यं कुशलेन पापं कलेवरं कालजवेन हित्वा ।
कीर्तिं विशुद्धां सुरलोकगीतां विताय मामेष्यसि मुक्तबन्धः ॥ १०.१३ ॥

त्रिस्सप्तभिः पिता पूतः पितृभिः सह तेऽनघ ।
यत् साधोऽस्य गृहे जातो भवान् वै कुलपावनः ॥ १०.१८ ॥

ब्रह्मोवाच—

देव देवाखिलाध्यक्ष भूतभावन पूर्वज ।
दिष्ट्या ते निहतः पापो लोकसन्तापनोऽसुरः ॥ १०.२६ ॥

श्रीभगवानुवाच—

मैवं वरोऽसुराणां ते प्रदेयः पद्मसंभव ।
वरः क्रूरनिसर्गाणा-महीना-ममृतं यथा ॥ १०.३० ॥

नारद उवाच—

इत्युक्त्वा भगवान् राजन् तत्रैवान्तर्दधे हरिः ।
अदृश्यः सर्वभूतानां पूजितः परमेष्ठिना ॥ १०.३१ ॥

---

ஸ்ரீபகவான் கூறியது—

10. 13. போகத்தால் புண்ணியத்தையனுபவித்து, நற்செயல்களால் பாவத்தைப் போக்கி, காலவேகத்தால் உடலைக் களைந்து தேவலோகத்தில் கீர்த்தனம் செய்தற்குரிய புகழைப்பெருக்கி, தளைகளினின்று விடுபட்டவனுய் என்னை யடைவாய்.

10. 18. ஸாதுவே! பாவமற்றவனே! குலத்தைப் புனிதமாக்கும் நீ இந்த வீட்டில் பிறந்ததாலேயே உனது பிதா மூவேழு தலைமுறைப் பிதிருக்களுடன் புனிதராகி விட்டார்.

பிரம்மா கூறியது—

10. 26. தேவதேவனே! அனைத்தையும் அறிபவனே! உலகைப் படைப்பவனே! ஆதித் தோன்றலே! உலகைத் தவிக்கச் செய்த பாவியாகிய அசுரன் உம்மால் அதிர்ஷ்டவசமாய் அழிவுற்ருன்.

ஸ்ரீ பகவான் கூறியது—

10. 30. தாமரையிற் பிறந்தவரே! அசுரர்களுக்கு இவ்வண்ணம் நீர் வரங் கொடுத்தல் கூடாது. இயற்கையிலேயே கொடியவர்களுக்கு வரமளித்தல் பாம்புகளுக்கு அமிர்தமளித்தல் எப்படியோ அப்படியாகின்றது.

நாரதர் கூறியது—

10. 31. அரசே! பகவான் ஹரியானவர் இங்ஙனம் கூறிவிட்டு பிரம்மாவால் பூஜிக்கப் பெற்று அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அங்கேயே காணுமல் மறைந்து போனுர்.

---

10. 18. ஒ. மோதந்தே பிதரோ, ந்ருத்யந்தி தேவதா:, ஸநாதா ச இயம் பூர்ப்பவதி।
—நாரதபக்திஸூத்ரம் 71.

ஒ. 'குலம் பவித்ரம் ஜனனீ க்ருதார்த்தா' —ஸூதஸம்ஹிதை.

---

10. 30. मैवं सुरासुराणां ते। பா. பே.

ततः काव्यादिभिः सार्धं मुनिभिः कमलासनः।
दैत्यानां दानवानां च प्रह्लादमकरोत् पतिम् ॥ १०.३३ ॥

प्रतिनन्द्य ततो देवाः प्रयुज्य परमाशिषः।
स्वधामानि ययू राजन् ब्रह्माद्याः प्रतिपूजिताः ॥ १०.३४ ॥

एतद् य आदिपुरुषस्य मृगेन्द्रलीलां दैत्येन्द्र-यूथपवधं प्रयतः पठेत।
दैत्यात्मजस्य च सतां प्रवरस्य पुण्यं
श्रुत्वानुभाव-मकुतोभयमेति लोकम् ॥ १०.४७ ॥

यूयं नृलोके बत भूरि-भागा लोकं पुनाना मुनयोऽभियन्ति।
येषां गृहानावसतीति साक्षाद् गूढं परं ब्रह्म मनुष्यलिंगम् ॥ १०.४८ ॥

स वा अयं ब्रह्म महद्विमृग्य-कैवल्य-निर्वाण-सुखानुभूतिः।
प्रियः सुहृद्वः खलु मातुलेय आत्मार्हणीयो विधिकृद् गुरुश्च ॥ १०.४९ ॥

---

10. 33. பின்னர் பிரம்மதேவர் சுக்கிராசாரியார் முதலிய முனிவர்களுடன் கூடி தைத்தியர்களுக்கும் தானவர்களுக்கும் பிரஹ்லாதனை அரசனாக்கினார்.

10. 34. அரசே! பின்னர் பிரம்மாதி தேவர்கள் பிரஹ்லாதனால் பூஜிக்கப் பெற்றவர்களாய் மகிழ்ந்து அவனை மனமார வாழ்த்தித் தங்கள் இருப்பிடமேகினர்.

10. 47. ஆதி புருஷனுடைய நரசிம்மாவதார லீலையையும், அசுரர் தலைவனையும் அசுரக் கூட்டத்தையும் அழித்ததையும் எவன் பக்தி சிரத்தையுடன் படிக்கின்றானோ, அசுர குமாரனாயினும் ஸாதுக்களிற் சிறந்தவனாகிய பிரஹ்லாதனுடைய புண்ணியமான வரலாற்றையும் கேட்கின்றானோ, அவன் பயமேதுமில்லாத லோகமாகிய பரம பதத்தை யடைகிறான்.

10. 48. ஸாக்ஷாத் பரப்பிரம்மம் மனித உருவில் மறைந்துகொண்டு வசிக்கிற தென்று எவர்கள் வீட்டை நாடி உலகைப் புனிதமாக்கும் முனிவர்கள் வந்து கொண்டே இருக்கிறார்களோ, அப்படிப்பட்ட நீங்களன்றோ மனித உலகில் மகா பாக்கியசாலிகள்.

10. 49. உங்களுக்குப் பிரியராகவும் உங்கள் நன்மையை நாடுபவராகவும் மாமன் மகனாகவும் உயிருக்கொப்பானவராகவும் பூஜிக்கத்தக்கவராகவும், நீங்கள் இட்ட வேலையைச் செய்பவராகவும், உங்கள் குருவாகவும் உள்ள இவரே மகான்களால் தேடியடையப்படும் கைவல்ய நிர்வாண சுக வடிவான பரப்பிரம்மம்.

---

10. 48. ஒ. (உபநிஷதர்த்த-முலாகலே நிபத்தம்) உபநிஷத்தின் உட்பொருள் உருவில் கட்டிவைக்கப்பட்டுள்ளது. —க்ருஷ்ணகர்ணாம்ருதம்.

பிரஹ்லாதனைக் காட்டிலுங் கூட நீங்கள் பாக்கிய சாலிகள். பிரஹ்லாதனுக்குக் காட்சியளித்தது இரண்டு நாழிகை. உங்களுடன் இடைவிடாதுறைகிறான்.

---

10. 49. सर्वाश्रयं ब्रह्म। பா. பே.

न यस्य साक्षाद् भव-पद्मजादिभी रूपं धिया वस्तुतयोपवर्णितम्।
मौनेन भक्त्योपशमेन पूजितः प्रसीदतामेष स सात्वतां पतिः
॥ १०.५० ॥

स एष भगवान् राजन् व्यतनोद् विहतं यशः।
पुरा रुद्रस्य देवस्य मयेनानन्तमायिना ॥ १०.५१ ॥

राजोवाच—

कस्मिन् कर्मणि देवस्य मयोऽहञ्जगदीशितुः।
यथा चोपचिता कीर्तिः कृष्णेनानेन कथ्यताम् ॥ १०.५२ ॥

नारद उवाच—

निर्जिता असुरा देवै-र्युध्यनेनोपबृंहितैः।
मायिनां परमाचार्यं मयं शरण-माययुः ॥ १०.५३ ॥

---

10. 50. எவருடைய உண்மையான ஸ்வரூபம் சிவனுலும் பிரம்மாவாலுங்கூட புத்தி சக்தியைக் கொண்டு இத்தகையதென வர்ணிக்கப்படாததோ, எவர் மௌனத்தாலும் பக்தியாலும் வைராக்கியத்தாலுமே பூஜித்தற்குரியவரோ, அந்த நல்லோரின் நாயகனுகிய கிருஷ்ணன் நம்மிடம் சந்தோஷமடைய வேண்டும்.

10. 51. அரசே! முன்னெருகால் அளவு கடந்த மாயாவியான மயனுல் ருத்திர தேவருடைய கீர்த்திக்கு ஊறு விளைவிக்கப்பட்டபோது இந்தக் கிருஷ்ண பகவான்தான் அந்தக் கீர்த்தியை நிலை நாட்டினுர்.

அரசன் கூறியது—

10. 52. ஜகதீசுவரரான ருத்திர தேவருடைய கீர்த்தியை எந்தக் காரியத்தில் மயன் கெடுத்தான்? இந்தக் கிருஷ்ணனுல் அக்கீர்த்தி எவ்வாறு நிலை நாட்டப்பட்டது? அதைக் கூற வேண்டும்.

நாரதர் கூறியது—

10. 53. கிருஷ்ணனுல் அனுக்கிரகிக்கப் பெற்ற தேவர்களால் அசுரர்கள் ஜெயிக்கப்பட்டபோது, அவர்கள் மாயாவிகளுக்குக்கெல்லாம் பரமாசாரியனுன மயனைச் சரணடைந்தனர்.

---

10. 50. वस्तु तदात्रु। பா. பே.
10. 51. विततं यशः।

स निर्माय पुर-स्तिस्रो हैमी-रौ-प्यायसी-र्विभुः।
दुर्लक्ष्यापाय-संयोगा दुर्वितर्क्य-परिच्छदाः ॥ १०.५४ ॥

ताभि-स्तेऽसुर-सेनान्यो लोकां-स्त्रीन् सेश्वरान् नृप।
स्मरन्तो नाशयांचक्रुः पूर्व-वैर-मलक्षिताः ॥ १०.५५ ॥

ततस्ते सेश्वरा लोका उपासाद्येश्वरं विभो।
त्राहि नस्तावकान् देव विनष्टां-स्त्रिपुरालयैः ॥ १०.५६ ॥

अथानुगृह्य भगवान् मा भैष्टेति सुरान् विभुः।
शरं धनुषि सन्धाय पुरेष्वस्त्रं व्यमुंचत ॥ १०.५७ ॥

ततोऽग्निवर्णा इषव उत्पेतुः सूर्यमण्डलात्।
यथा मयूख-सन्दोहा नादृश्यन्त पुरो यतः ॥ १०.५८ ॥

---

10. 54. கெட்டிக்காரனான அந்த மயன் பொன்னாலும், வெள்ளியாலும் இரும்பாலும் மூன்று பறக்கும் புரிகளை நிர்மாணம் செய்து (அவர்களுக்குக் கொடுத்தான்) அவைகளின் போக்கும் வரவும் (பிரிதலும் கூடுதலும்), அவற்றின் பந்தோபஸ்துகளும் பரிவாரங்களும் ஊகித்தறிய முடியாதனவாயிருந்தன.

10. 55. அரசே! அவ்வசுர ஸேனா நாயகர்கள் முன் வைரத்தை நினைந்து அவ் விமானபுரிகளில் ஏறிக்கொண்டு பிறர் காணாமல் மூன்றுலகங்களையும் அவற்றின் தலைவர்களுடன்கூட நாசம் செய்தனர்.

10. 56. அப்போது அவ்வுலக வாசிகளும் அவற்றின் நாயகர்களும் பரமேசுவரனைச் சரணடைந்து, "பிரபுவே! தேவதேவனே! உங்களைச் சார்ந்த எங்களைக் காத்தருள வேண்டும். முப்புரவாசிகளால் நாங்கள் அழிவுற்றோம்" என்றனர்.

10. 57. பரமேசுவரன் "பயப்படாதீர்கள்" என்று தேவர்களுக்கு அனுக்கிரகம் செய்து, வில்லில் அம்பைப்பூட்டி முப்புரத்தின்மேல் அஸ்திரப் பிரயோகம் செய்தார்.

10. 58. அப்போது சூரிய மண்டலத்திலிருந்து கிளம்பும் கிரணங்களின் கூட்டங்களைப்போல் அக்னி வர்ணமான அம்புகள் வெளிப்போந்தன. அதனால் முப்புரம் காணப்படா தொழிந்தது.

---

10. 54. முப்புரமும் சிலேடையாக ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களைக்குறிக்கும் முப்புரமும் ஒருங்கே எரிபட்டபோதே முக்தி.

ஒ. வளைந்தது வில்லு விளைந்தது பூசல் உளைந்தன முப்புரமுந்தீபற ஒருங்குடன் வெந்தவாறுந்தீபற. —மாணிக்க வாசகர்

---

10. 54. स निर्ममे।
10. 56. उपासाद्येश्वरं विभुम्। பா. பே.

तैः स्पृष्टा व्यसवः सर्वे निपेतुः स्म पुरौकसः ।
तानानीय महायोगी मयः कूपरसेऽक्षिपत् ॥ १०.५९ ॥

सिद्धामृतरस-स्पृष्टा वज्रसारा महौजसः ।
उत्तस्थु-र्मेघदलना वैद्युता इव वह्नयः ॥ १०.६० ॥

विलोक्य भग्नसङ्कल्पं विमनस्कं वृषध्वजम् ।
तदायं भगवान् विष्णु-स्तत्रोपाय-मकल्पयत् ॥ १०.६१ ॥

वत्स आसीत्तदा ब्रह्मा स्वयं विष्णु-रयं हि गौः ।
प्रविश्य त्रिपुरं काले रसकूपामृतं पपौ ॥ १०.६२ ॥

तेऽसुरा ह्यपि पश्यन्तो न न्यषेधन्विमोहिताः ।
तद् विज्ञाय महायोगी रसपालानिदं जगौ ॥ १०.६३ ॥

---

10. 59. அஸ்திரங்கள்பட்டு உயிரிழந்து முப்புரத்தினரனைவரும் வீழ்ந்தனர். மஹா யோகியான மயன் அவர்களைக் கொணர்ந்து அமிருதரஸம் நிறைந்த கிணற்றில் போட்டான்.

10. 60. அந்த சித்தனுடைய அமிருதரஸம் பட்டமாத்திரத்தில் மேகத்தைப் பிளந்து கொண்டுவரும் மின்னல் பிழம்பைப்போல் பிரகாசம் பொருந்தியவர்களாகவும் வயிரம் பாய்ந்த மேனி படைத்தவர்களாகவும் அசுரர்கள் உயிர்த்தெழுந்தனர்.

10. 61. விருஷபத்வஜராகிய பரமசிவன் ஸங்கல்பம் பூர்த்தியாகாமல் கவலை கொண்டவராய்க் காணப்பட்டபோது இந்த பகவான் விஷ்ணு அச்சமயத்தில் அதற்கு ஒரு உபாயத்தைச் செய்தார்.

10. 62. விஷ்ணு தன்னைப் பசுவாகவும் பிரம்மாவைக் கன்றுகவும் செய்து கொண்டு முப்புரத்தில் புகுந்து (மத்தியான்ன) காலத்தில் ரஸக் கிணற்றிலிருந்த அமிருதத்தைப் பருகி விட்டார்.

10. 63. அவ்வசுரர்கள் அதைக் கண்ணுற்ற போதிலும் மதி மயங்கியவர்களாய்த் தடுக்கவில்லை. மஹா யோகியான மயன் அதையறிந்து ரஸபாலர்களிடம் இங்ஙனம் கூறினன்.

---

10. 62. ஒ. ப்ரஜாதி-ரம்ருத மானந்த இத்யுபஸ்தே ।
**கூபாம்ருதம்**—ஸ்துலத்தில் ரேதஸ்; ஸூக்ஷமத்தில் குண்டலினி சக்தி; இதை அசுரர்கள் பருகவிடாமல் தேவாதிதேவனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும்.

---

10. 59. **निपेतुस्त्रिपुरौकसः ।**
10. 63. **तं विज्ञाय ।** பா. பே.

स्वयं विशोकः शोकार्तान् स्मरन् दैवगतिं च ताम् ।
देवोऽसुरो नरोऽन्यो वा नश्वरोऽस्तीह कश्चन ॥ १०.६४ ॥

आत्मनोऽन्यस्य वा दिष्टं दैवेनापोहितुं द्वयोः ।
अथासौ शक्तिभिः स्वाभिः शंभोः प्राधनिकं व्यधात् ॥ १०.६५ ॥

धर्म-ज्ञान-विरक्त्यृद्धि-तपो-विद्या-क्रियादिभिः ।
रथं सूतं ध्वजं वाहान् धनुर्वर्म शरादि यत् ॥ १०.६६ ॥

सन्नद्धो रथमास्थाय शरं धनु-रुपाददे ।
शरं धनुषि सन्धाय मुहूर्तेऽभिजितीश्वरः ॥ १०.६७ ॥

ददाह तेन दुर्भेद्या हरोऽथ त्रिपुरो नृप ।
दिवि दुन्दुभयो नेदुर्विमान-शत-संकुलाः ॥ १०.६८ ॥

एवं दग्ध्वा पुर-स्तिस्रो भगवान् पुरहा नृप ।
ब्रह्मादिभिः स्तूयमानः स्वधाम प्रत्यपद्यत ॥ १०.७० ॥

---

10. 64-65. தான் சோகமற்றவனுய் விதியின் போக்கை நினைவுறுத்திக் கொண்டு சோகத்தால் பீடிக்கப்பட்ட அவர்களை நோக்கி, "தேவனே, அசுரனே, மனிதனே அழியும் இயல்புள்ள வேறு எவனேயாயினும், தனக்கோ, பிறர்க்கோ இருவருக்குமோ விதிவசமாய் ஏற்பட்டதைப் போக்கக் கூடியவன் எவனும் இல்லை" என்ருன். பின்னர் இந்த பகவான் கிருஷ்ணன் தன் சக்திகளால் சம்புவிற்குப் போர்ச் சாமான்களை ஆக்கித் தந்தார்.

10. 66. தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், தவம், வித்தை, கிரியை முதலியவற்ருல் தேர், தேர்ப்பாகன், கொடி, குதிரைகள், வில், கவசம், அம்பு முதலிய யாவையும் கல்பனை செய்தார்.

10. 67-68. அரசே! ஹரனுகிய ஈசுவரன் அபிஜித் (மத்யான்ன) வேளையில் போருக்கு ஆயத்தமாகித் தேரிலேறிப் பாணத்தையும் வில்லையும் எடுத்தார். வில்லில் பாணத்தைப்பூட்டி அதனுல் பிளக்க முடியாத முப்புரத்தை எரித்தார். ஆகாயத்தில் துந்துபிகள் முழங்கின, நூற்றுக் கணக்கான தேவ விமானங்கள் தோன்றின.

10. 70. அரசே! இங்ஙனம் முப்புரத்தையெரித்துத் திரிபுரஹரனெனப் பெயர் பெற்ற பகவான் பிரம்மாதி தேவர்களால் துதிக்கப் பெற்றுத் தனதிருப்பிட மடைந்தார்.

---

10. 66. தர்மமாகிய தேர், ஞானமாகிய ஸாரதி, வைராக்கியமாகிய வில், தவமாகிய வாகனம், வித்தையாகிய கொடி, செயல்களாகிய அம்புகள்.

10. 67. அபிஜித் முகூர்த்தத்தில் ஞானசக்தி உச்சநிலையில் இருக்கையில்.

---

10. 64. स्मयन् विशोकः । 10. 68. यथा पुरंतु संलग्नं ददाह त्रिपुरं नृप ।
10. 66. धर्मज्ञान-विरक्त्यर्थी । பா. பே.

**एवं विधान्यस्य हरेः स्वमायया विडम्बमानस्य नृलोक-मात्मनः ।**
**वीर्याणि गीतान्यृषिभि-र्जगद्गुरो-र्लोकान् पुनानान्यपरं**
**वदामि किम्  ॥ १०.७१ ॥**

**युधिष्ठिर उवाच—**

**गृहस्थ एतां पदवीं विधिना येन चांजसा ।**
**याति देवऋषे ब्रूहि मादृशो गृहमूढधीः  ॥ १४.१ ॥**

**नारद उवाच—**

**गृहेष्ववस्थितो राजन् क्रियाः कुर्वन् गृहोचिताः ।**
**वासुदेवार्पणं साक्षा-दुपासीत महामुनीन्  ॥ १४.२ ॥**

---

10. 71. தனது மாயையினுல் மனிதரைப்போல் லீலை புரியும் பரமாத்மாவும் ஜகத் குருவுமான ஹரியினுடைய இதுபோன்ற வீரியச் செயல்கள் உலகங்களைப் புனிதமாக்குபவை ரிஷிகளால் பாடப் பெற்றுள்ளன. இதற்குமேல் என்ன சொல்ல வேண்டும்?

யுதிஷ்டிரர் கூறியது—

14. 1. தேவ ரிஷியே! இல்லறத்தில் மதி மழுங்கிய என்போன்ற கிருஹஸ்தன் (பகவானிடம் நிலைத்த பக்தியாகிய) இந்நிலையை எந்த முறையில் எளிதில் அடைவானே அதைக் கூறியருள வேண்டும்.

நாரதர் கூறியது—

14. 2. அரசே! இல்லறத்திலிருப்பவன் இல்லறத்திற்குரிய கடமைகளை பகவானுக்கு அர்ப்பணமாகச் செய்து மகான்களான முனிவர்களை நாடிச் சேவை செய்ய வேண்டும்.

---

**பதினொராவது அத்தியாயம்** வர்ண தர்மங்களையும் ஸ்திரீதர்மங்களையும் கூறுகிறது.
**பன்னிரண்டாவது அத்தியாயம்** ஆசிரம தர்மங்களைக் கூறுகிறது.

**பதின்மூன்ருவது அத்தியாயம்** ஸந்நியாஸியின் தர்மத்தைக் கூறுகிறது. ஸந்நியாஸி ஆத்மஞானத்தைப் புகட்டாத சாஸ்திரங்களில் பற்று வைக்கக்கூடாது. ஜீவனத்திற்காகத் தொழில்செய்து ஸம்பாதிக்கக் கூடாது. வாக்குவாதம் செய்யக்கூடாது. சீடர்களைச் சேர்க்க முயலக்கூடாது. பித்தனைப் போலும் பாலனைப்போலும் மானிடர்களுக்குத் தன்னைக் காட்டிக் கொள்ள வேண்டும். இதை விளக்க நாரதர் தத்தாத்ரேய மகாயோகிக்கும் பிரஹ்லாதனுக்கும் நிகழ்ந்த ஸம்வாதத்தைக் கூறுகிருர். தத்தாத்ரேயர் தனக்குத் தேனீயும் மலைப்பாம்பும் குரு என்று கூறித் தேனீயைப்போல் சேகரித்துப் பரிகொடுக்காமல் மலைப்பாம்பைப்போல் முயற்சியின்றி கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைந்து பரமானந்த நிலையிலிருக்கும் இரகசியத்தை உபதேசிக்கிருர்.

14. 2. ஒ. துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. —குறள்

---

14. 1. येन संवृतः । यायाद्देवर्षे ।
14. 2. गृहे व्यवस्थितो । பா. பே.

यावदर्थ-मुपासीत देहे गेहे च पण्डितः ।
विरक्तो रक्तवत्तत्र नृलोके नरतां न्यसेत् ॥ १४.५ ॥

यावद्भ्रियेत जठरं तावत्स्वत्वं हि देहिनाम् ।
अधिकं योऽभिमन्येत स स्तेनो दण्ड-मर्हति ॥ १४.८ ॥

मृगोष्ट्र-खरमर्काखु-सरी-सृप्-खग-मक्षिकाः ।
आत्मवत् पुत्रवत् पश्येत् तैरेषा-मन्तरं कियत् ॥ १४.९ ॥

त्रिवर्गं नाति-कृच्छ्रेण भजेत गृहमेध्यपि ।
यथादेशं यथा कालं यावद्दैवोपपादितम् ॥ १४.१० ॥

देव-ऋषि-भूतेभ्य आत्मने स्वजनाय च ।
अन्नं संविभजन् पश्येत् सर्वं तत्पुरुषात्मकम् ॥ १५.६ ॥

---

14. 5. புத்திமான் உடலிலும் வீட்டிலும் எவ்வளவு அத்தியாவசியமோ அவ்வளவு மட்டும் அனுசரித்துக்கொண்டு பற்றில்லாதவனுய்ப் பற்றுள்ளவனைப்போல் உலகில் மனிதவழக்கத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

14. 8. உடல்படைத்தோர்க்கு வயிறு எவ்வளவு கொள்ளுமோ அவ்வளவுதான் சொந்தமாகிய சொத்து. அதற்குமேல் அபிமானம் வைத்தால் அவன் திருடன், தண்டிக்கத்தற்குரியவன்.

14. 9. மான், ஒட்டகை, கழுதை, பூனை, எலி, பாம்பு, பறவை, தேனீ எதுவாயினும் அவற்றையும் தன்னைப்போலவும் தன் மக்களைப்போலவும் பார்க்கவேண்டும். இவற்றிக்கும் அவற்றிற்கும் என்ன வேற்றுமை ?

14. 10. இல்லறத்தானும் அறம் பொருள் இன்பம் என்ற மூன்றைத் தேடுவதில் அதிகமாய்ப் பாடுபடக் கூடாது. தெய்வ வசமாய்க் கிடைத்ததைக் கொண்டு குருவும் சாஸ்திரமும் காட்டிய வழியில் காலத்துக் கிசைந்தவாறு அனுபவிக்கவேண்டும்.

15. 6. தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பிராணிகளுக்கும் தனக்கும் சுற்றத்தார்க்கும் உணவை பகிர்ந்தளித்து அவர்கள் யாவரையும் பரமபுருஷரூபமாகவே பார்க்க வேண்டும்.

---

14. 5. அந்தர்-நாஸக்த: பஹி: ஸ்வாஸக்த இவ ।

ஒ. கர்மத்தில் பற்றுள்ள பாமரர் எவ்வாறு செய்கின்றனரோ அவ்வாறே ஞானியும் உலகை நல்வழிப் படுத்துவதை விரும்பிப் பற்றில்லாமல் செய்ய வேண்டும்.

கீ. 3. 25

14. 8. தைவாத் பூரிலாபே ஜாதேऽபி தத்ராபிமானோ ந கார்ய: ।

14. 9. யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜானத: । தத்ர கோ மோஹ: க: சோக: ஏகத்வ-மனுபச்யத: ॥ ஈ. ச. உப.

---

14. 5. यावदर्थ-मुपासीनो ।

14. 10. त्रिवर्गतां निमित्तेन भजेत । பா. பே.

एके कर्ममयान् यज्ञान् ज्ञानिनो यज्ञवित्तमाः ।
आत्मसंयमनेऽनीहा जुह्वति ज्ञानदीपिते ॥ १५.९ ॥

द्रव्य-यज्ञै-र्यक्ष्यमाणान् दृष्ट्वा भूतानि बिभ्यति ।
एष माऽकरुणो हन्या-दतज्ञो ह्यसुतृप् ध्रुवम् ॥ १५.१० ॥

तस्माद्दैवोपपन्नेन मुन्यन्नेनापि धर्मवित् ।
सन्तुष्टोऽहरहः कुर्या-न्नित्यनैमित्तिकाः क्रियाः ॥ १५.११ ॥

धर्मार्थमपि नेहेत यात्रार्थं वाऽधनो धनम् ।
अनीहानीहमानस्य महाहेरिव वृत्तिदा ॥ १५.१५ ॥

सदा सन्तुष्टमनसस्सर्वा-श्शिव-मया दिशः ।
शर्करा-कण्टकादिभ्यो यथोपानत् पदश्शिवम् ॥ १५.१७ ॥

15. 9. யஜ்ஞத்தின் ரகசியத்தை உணர்ந்தவர்களிற் சிறந்த ஞானிகள் சிலர் எப்பயனையும் விரும்பாதவர்களாய் ஆத்ம நிஷ்டையின் மூலம் ஜ்வலிக்கும் ஞானக் கினியில் செயல் வடிவான யஜ்ஞங்களை ஹோமம் செய்கின்றனர்.

15. 10. திரவிய யஜ்ஞங்களால் யாகம் செய்பவர்களைக் கண்டு "ஆத்மதத்து வத்தை அறியாதவனும் கருணையற்றவனும் தனது பிராணனைத் திருப்திசெய்ப வனுமாகிய இவன் நிச்சயமாக நம்மைக் கொல்லப் போகிருன்" என்று பிராணிகள் பயப்படுகின்றன.

15. 11. ஆகையால் தருமமறிந்தவன் (கிடைத்ததைக் கொண்டு) திருப்தியடைந் தவனும் விதிவசமாய்க் கிடைத்ததும் முனிவர்களின் உணவாகியதுமான காய் கனி தானியம் முதலியவற்றுல் நாள் தோறும் நித்திய நைமித்திகக் கிரியைகளைச் செய்ய வேண்டும்.

15. 15. தனமில்லாதவன் தருமத்திற்காகவோ யாத்திரைக்காகவோ தனத்திற் காகவோ முயற்சி செய்யக்கூடாது. மலைப்பாம்பு (முயற்சியின்றி ஆகாரத்தையடைவது போல் எதையும் வேண்டாதிருப்பவனுக்கு அவ் வேண்டாமையே ஜீவாதாரத்தை யளிப்பதாய்விடும்.

15. 17. காலில் செருப்பணிந்தவர்க்குக் கல்லிலும் முள்ளிலும்கூட (துன்பமின்றி) இன்பமே உண்டாவதுபோல் எப்போதும் ஸந்தோஷமுடைய மனத்தினர்க்கு எல்லாத் திசைகளும் இன்பமயமாகவே இருக்கின்றன.

---

15. 9. 'ப்ரத்யக் ஸ்பூர்த்தி-ரஸத் ஸ்பூர்த்திః ஸ்வானுஷ்டான-**விகா**தகம் | ஸம்லக்ஷ்ய **ஸந்த்**யஜேத் கர்ம த்யஜன் விக்னஹேதோன்யதா ||' — ஸர்வஜ்ஞஸூக்தம்

ஒ. ஆத்மஸம்யம-யோ**காக்**னௌ ஜுஹ்வதி ஜ்ஞான**தீ**பிதே | —கீ. 4. 27.

பொருள் மயமான யஜ்ஞத்தைக் காட்டிலும் ஞான யஜ்ஞம் சிறந்தது. மிச்சமின்றி எல்லாக் கர்மமும் ஞானத்தில் பூர்த்தியடைகிறது. கீ. 4. 33

15. 15. ஒ. '**த**ர்மார்த்தம் யஸ்ய வித்தேஹா தஸ்யாபி ந **சுபா**வஹா | ப்ரக்ஷா **லனாத்தி** பங்கஸ்ய **தூ**ரா-தஸ்பர்சனம் வரம் ||'

---

15. 17. **सुखमया दिशः ।** பா. பே.

सन्तुष्टः केन वा राजन् न वर्तेतापि वारिणा ।
औपस्थ्य-जैह्व्य-कार्पण्याद् गृहपालायते जनः ॥ १५.१८ ॥

कामस्यांतं हि क्षुत्तृड्भ्यां क्रोधस्यांतं फलोदयात् ।
जनो याति न लोभस्य जित्वा भुक्त्वा दिशो भुवम् ॥ १५.२० ॥

असंकल्पा-ज्जयेत् कामं क्रोधं कामविवर्जनात् ।
अर्थेऽनर्थेक्षया लोभं भयं तत्त्वावमर्शनात् ॥ १५.२२ ॥

आन्वीक्षिक्या शोकमोहौ दंभं महदुपाश्रयात् ।
योगांतरायान्मौनेन हिंसां कायाद्यनीहया ॥ १५.२३ ॥

कृपया भूतजं दुःखं दैवं जह्यात् समाधिना ।
आत्मजं योगवीर्येण निद्रां सत्वनिषेवया ॥ १५.२४ ॥

---

15. 18. அரசே! போதுமென்ற மனமுடையவன் எதைக்கொண்டு தான் ஜீவிக்க மாட்டான்? ஜலத்தைக்கொண்டு கூட ஜீவிப்பான். உபஸ்த சுகத்திலும் நாக்கின் சுகத்திலும் நப்பாசை கொண்ட காரணத்தாலேயே மக்கள் நாய்போல நடக்கின்றனர்.

15. 20. பசியும் தாகமும் வந்தால் மக்கள் காமத்தினின்று விடுதலையடைகின்றனர்; பயன் தோன்றினல் கோபத்தினின்று விடுதலையடைகின்றனர்; திசைகளை யெல்லாம் ஜயித்தும், பூமியெல்லாம் ஆண்டனுபவித்தும் லோபத்தினின்று விடுதலை யடைவதில்லை.

15. 22. ஸங்கல்பம் செய்யாமையால் காமத்தையும், காமத்தை விடுவதால் கோபத்தையும், அர்த்தத்தில் அனர்த்தத்தின் விளைவை யெண்ணிப் பார்த்து லோபத்தையும், தத்துவ சிந்தனையால் பயத்தையும் ஜயிக்கவேண்டும்.

15. 23. தத்துவ திருஷ்டியால் சோக மோஹங்களையும், மகான்களைச் சேவிப்பதால் இடம்பத்தையும், மௌனத்தால் யோகத்தின் இடையூறுகளையும், உடற்பற்றைக் குறைத்தலால் ஹிம்சையையும் ஜயிக்கவேண்டும்.

15. 24. பிராணிகளிடமிருந்து வரும் துக்கத்தைக் கருணையாலும் தைவத்தால் ஏற்பட்டதை ஸமாதியாலும், உடலில் ஏற்பட்டதை யோக வலிமையாலும், நித்திரையை ஸாத்விக ஆகாரத்தாலும் ஜயிக்கவேண்டும்.

---

15. 18. ஒ. வயமிஹ பரிதுஷ்டா வல்கலைஸ்-த்வம் துகூலை:
ஸம இஹ பரிதோஷோ நிர்விசேஷோ விசேஷ: ।
ஸ து பவது தரித்ரோ யஸ்ய த்ருஷ்ணா விசாலா
மனஸி ஹி பரிதுஷ்டே கோ ஽ர்த்தவான் கோ தரித்ர: ॥ —பர்த்ருஹரி

15. 20. ஒ. 'ஆசைக் கோரளவில்லை யகில மெல்லாங் கட்டியாளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைப்பார் அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்த பேரும் நேசித்து ரஸவாத வித்தைக் கலைந்திடுவர்.' —தாயுமானவர்

ஒ. 'ஆசாஹி பரமம் து:க்கம் நைராச்யம் பரமம் ஸுகம்.'

15. 23. ஆன்வீக்ஷிக்யா—ஆத்மானாத்ம-விவேகேன ।

रजस्तमश्च सत्वेन सत्वं चोपशमेन च ।
एतत् सर्वं गुरौ भक्त्या पुरुषो ह्यंजसा जयेत् ॥ १५.२६ ॥

भावाद्वैतं क्रियाद्वैतं द्रव्याद्वैतं तथात्मनः ।
वर्तयन् स्वानुभूत्येह त्रीन् स्वप्नान् धुनुते मुनिः ॥ १५.६२ ॥

कार्यकारण-वस्त्वैक्य-दर्शनं पटतन्तुवत् ।
अवस्तुत्वा-द्विकल्पस्य भावाद्वैतं तदुच्यते ॥ १५.६३ ॥

यद्ब्रह्मणि परे साक्षात् सर्वकर्म-समर्पणम् ।
मनो-वाक्-तनुभिः पार्थ क्रियाद्वैतं तदुच्यते ॥ १५.६४ ॥

आत्मजाया-सुतादीना-मन्येषामपि देहिनाम् ।
यत्स्वार्थ-कामयोरैक्यं द्रव्याद्वैतं तदुच्यते ॥ १५.६६ ॥

---

15. 26. ஸத்துவத்திஞல் ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் ஜயிக்கவேண்டும். வைராக்கியத்திஞல் ஸத்துவத்தையும் ஜயிக்கவேண்டும். குருவினிடம் பக்தியால் ஒரு புருஷன் இவையனைத்தையும் எளிதில் ஜயித்துவிடுவான்.

15. 62. பாவாத்வைதம், கிரியாத்வைதம், திரவ்யாத்வைதம் என்ற மூன்றையும் சொந்த அனுபவத்தில் தன்னிடம் நிகழச் செய்து முனியானவன் மூன்று கனவுகளையும் நீக்கிக் கொள்ளுகிருன்.

15. 63. வேற்றுமை பொய்யாதலால் நூலுந் துணியும் ஒன்ருகியவாறு காரணமும் காரியமும் ஒன்றேயெனக் காணுதல் பாவாத்வைதமாம்.

15. 64. பார்த்தா! மனத்தாலும் வாக்காலுங் காயத்தாலும் நிகழும் எல்லாக் கருமங்களையும் ஸாக்ஷாத் பரப் பிரம்மத்தினிடம் நன்கு அர்ப்பணம் செய்தல் எதுவோ அது கிரியாத்வைதம்.

15. 66. தன்னுடைய பொருளும் இன்பமும் எதுவோ அதற்கும் தனது மனைவி மக்களுடையது எதுவோ அதற்கும், உடல் படைத்த பிறருடையது எதுவோ அதற்கும் (வேற்றுமையின்றி) ஒற்றுமை காணல் திரவ்யாத்வைதம் எனப்படும்.

---

15. 62. ஒ. 'த்ரய ஆவஸதாஸ்த்ரய: ஸ்வப்னு:'। வஸ்துனி **பேதபுத்தி**ரேக: ஸ்வப்ன:। ததஸ்தத்த-**ததி**கார-பேதேன கர்ம-**பேதபுத்தி**ர்-**த்வி**தீய:। தத: ஸத்கர்ம-ஸா**தி தம்** பலம் மமைவ **போக்**யமிதி **த்ரு**தீய:।

ஒ. 'முள்ளுமுனையிலே மூனு குளம் வெட்டினேன்
இரண்டு குளம் பாழொன்று தண்ணியே இல்லை.' —நாடோடிப்பாட்டு.

15. 64. ஒ. கண்டாலும் கேட்டாலும் தொட்டாலும் முகர்ந்தாலும் உண்டாலும் சென்ருலும் தூங்கிஞலும் மூச்சு விட்டாலும் மெய்யறிவுடைய யோகி ஒன்றையும் தான் செய்ய வில்லை என்று எண்ண வேண்டும். எவன் கர்மங்களை பிரம்மத்தினிடத்தில் வைத்துப் பற்றை விட்டுச் செய்கிருனே அவன் தாமரை இலைபோல் பாவத்தால் பற்றப் படுவதில்லை.
—கீ. 8-10.

ஒ. சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவானிறையென வறிந்து நெஞ்சமே
தேட்ட மொன்றற வருட் செயலினிற்றியேல்
வீட்டறந்துறவற மிரண்டு மேன்மையே.
—தாயுமானவர்.

---

15. 26. सत्त्वंचोपासनेन च । பா. பே.

एतैरन्यैश्च वेदोक्तै-र्वर्तमानः स्वकर्मभिः।
गृहेऽप्यस्य गतिं यायाद्राजं-स्तद्भक्तिमाङ्नरः ॥ १५.६७ ॥

श्रीशुक उवाच—

इति देवर्षिणा प्रोक्तं निशम्य भरतर्षभः।
पूजयमास सुप्रीतः कृष्णं च प्रेमविह्वलः ॥ १५.७८ ॥

कृष्णपार्थावुपामन्त्र्य पूजितः प्रययौ मुनिः।
श्रुत्वा कृष्णं परं ब्रह्म पार्थः परम-विस्मितः ॥ १५.७९ ॥

इति दाक्षायणीनां ते पृथग्वंशाः प्रकीर्तिताः।
देवासुर-मनुष्याद्या लोका यत्र चराचराः ॥ १५.८० ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां
संहितायां पारमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीव-
ब्रह्मविद्यायां सप्तमः स्कन्धः समाप्तः ॥

---

15. 67. அரசே! இச் சாதனங்களாலும் மற்றும் வேதத்தில் விதிக்கப்பெற்ற கருமங்களில் தனக்குரியவற்றைச் செய்வதாலும் இல்லறத்திலிருப்பினும் ஒருவன் பகவானிடம் பக்தியுள்ளவனுயின் பகவானுடைய கதியை யடைவான்.

ஸ்ரீ சுகர் கூறியது—

15. 78. இவ்விதம் தேவரிஷியால் சொல்லப்பட்டதைக் கேட்டு தருமபுத்திரர் அன்பினுல் கசிந்து மிகுந்த பிரீதியுடன் அவரைப் பூஜித்துக் கிருஷ்ணனையும் பூஜித்தார்.

15. 79. பூஜிக்கப்பெற்ற அம் முனிவர் கிருஷ்ணனிடமும் தருமபுத்திரரிடமும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார். கிருஷ்ணன் பரப் பிரம்மம் என்று கேட்ட தருமபுத்திரர் ஆச்சரியமும் ஆனந்தமும் மிக்கவரானுர்.

15. 80. எந்த வம்சங்களில் தேவர்களும் அசுரர்களும் மனிதர்களும் மற்ற ஜீவ ராசிகளும் தோன்றினரோ அந்த தக்ஷ புத்திரிகளின் வம்சங்கள் பிரித்து உமக்கு இங்ஙனம் வர்ணிக்கப்பட்டன.

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம் சுலோ
கங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை எனப்படுவதுமான
ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் ஏழாவது ஸ்கந்தம் முற்றும்.

---

15. 67-75. நாரதர் மேலும் கூறினுர் :— தேவரிஷியாகிய நான் இரண்டு ஜன்மங்களுக்குமுன் உபபர்ஹணன் என்ற கந்தர்வனுயிருந்தேன். ஒரு சமயம் ஸ்திரீகள் சூழ ஸாதுக்களின் ஸபைக்குச் சென்று மரியாதைக் குறைவாக நடந்து கொண்டேன். அதனுல் சூத்திரனுய்ப்பிறக்க வேண்டும் என்று அவர்கள் சாபம் கொடுத்தார்கள். அப்படிப் பிறந்து ஸாதுக்களுக்குப் பணிவிடை செய்துஅவர்களுடைய அனுக்கிரகத்தால் பிரம்ம புத்திரனுகப் பிறந்தேன். ஆகையால் மகான்களை அவமதித்தால் வீழ்ச்சி, அவர்களை ஆசிரயித்ததால் ஏற்றம் என்பதை முக்கியமாக உணர வேண்டும்.

# ॥ अष्टमः स्कन्धः ॥

## ॥ गजेन्द्रमोक्षणम् ॥ १५ ॥

राजोवाच--

स्वायंभुवस्येह गुरो वंशोऽयं विस्तराच्छ्रुतः ।
यत्र विश्वसृजां सर्गो मनू-नन्यान् वदस्व नः ॥ १.१ ॥

यत्र यत्र हरेर्जन्म कर्माणि च महीयसः ।
गृणन्ति कवयो ब्रह्मं-स्तानि नो वद शृण्वताम् ॥ १.२ ॥

---

# எட்டாவது ஸ்கந்தம்

## 15. கஜேந்திர மோக்ஷம்

அரசன் (பரீக்ஷித்து) கூறியது—

1. 1. குருதேவரே! ஸ்வாயம்புவ மனுவின் வம்சம் விரிவாகக் கேட்கப்பட்டது. பிரஜாபதிகளின் சிருஷ்டியைப் பற்றியும் மற்ற மனுக்களைப் பற்றியும் உள்ள வரலாறு எதுவோ அதைக் கூறி யருளவேண்டும்.

1. 2. பிரம்ம ஸ்வரூபியே! மகிமைமிக்க ஹரியின் அவதாரமும் லீலைகளும் எங்கெங்கு எவ்வண்ணம் கவிகளால் வர்ணிக்கப்படுகின்றனவோ அவற்றையும் கேட்க விருப்பமுள்ள எங்களுக்குக் கூறி யருளவேண்டும்.

---

எட்டாவது ஸ்கந்தத்தில் 'மன்வந்தரம்' வர்ணிக்கப்படுகிறது. ஒவ்வொரு மன்வந்தரத்திலும் மனு, மனு புத்திரர்கள், ரிஷிகள், தேவர்கள் இந்திரன், பகவானுடைய மூர்த்தி என ஆறு விஷயங்கள் விவரிக்கப்படும். அவர்களே தர்மத்தைப்பிரவிர்த்திப்பித்து, அனுஷ்டித்துப் பரிபாலித்து உலகை நல்வழிப்படுத்துபவர்களாவர்.

ஒ. மன்வந்தரம் மனுர்-தேவா மனுபுத்ரா: ஸுரேச்வரா:। ருஷயோ ऽம்சாவதாரச்ச ஹரே: ஷட்வித-முச்யதே ||

1, 1. **விச்வஸ்ருஜாம் ஸர்க்க:**— மரீச்யாதீனும் மனு-கன்யாஸு புத்ர-பௌத்ராதி ஸர்க்க:।

---

1. 2. **यत्र मन्वन्तरे हरेः । गरीयसः, महौजसः ।** பா. பே.

श्रीशुक उवाच—

स्वारोचिषो द्वितीयस्तु मनुरग्नेः सुतोऽभवत्।
तृतीय उत्तमो नाम प्रियव्रत-सुतो मनुः ॥ १.२३ ॥

चतुर्थ उत्तम-भ्राता मनु-र्नाम्ना च तामसः।
तत्रापि जज्ञे भगवान् हरिण्यां हरिमेधसः।
हरिरित्याहृतो येन गजेन्द्रो मोचितो ग्रहात् ॥ १.३० ॥

राजोवाच—

बादरायण एतत् ते श्रोतुमिच्छामहे वयम्।
हरि-र्यथा गजपतिं ग्राह-ग्रस्त-ममूमुचत् ॥ १.३१ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 23. அக்கினியின் குமாரரான ஸ்வாரோசிஷர் இரண்டாவது மனுவானார். பிரியவிரதருடைய குமாரரான உத்தமர் மூன்றாவது மனுவானார்.

1. 30. உத்தமருடைய சகோதரர், தாமஸர் எனப் பெயர் பூண்டவர், நான்காவது மனுவானார். அங்கு (அந்த தாமஸ மன்வந்தரத்தில்) ஹரிமேதஸ் என்பவருக்குப் பத்தினியான ஹரிணியிடம் ஹரி என்ற பெயருடன் பகவான் அவதரித்தார். அந்த அவதாரத்தில்தான் 'ஹரியே' என்று எந்த கஜேந்திரனால் அழைக்கப்பட்டாரோ அந்த கஜேந்திரனை முதலையிடமிருந்துக் காப்பாற்றினார்.

அரசன் கூறியது—

1. 31. பாதராயண முனியே! முதலையால் பீடிக்கப்பட்ட கஜேந்திரனை ஹரி எங்ஙனம் விடுவித்தார் என்ற வரலாற்றை உம்மிடம் நாங்கள் கேட்க விரும்புகிறோம்.

---

1. 23. இதுவரை விரிவாக ஸ்வாயம்புவ மன்வந்தரத்தைப்பற்றிச் சொல்லியாயிற்று. அதில் பிரியவிரதரும் உத்தரனபாதரும் மனுபுத்திரர்கள். யாமாதியர் தேவர்கள் மரீசி முதலியவர்கள் ஸப்தரிஷிகள். யஜ்ஞராக மனுபுத்திரியான ஆகூதியிடம் பகவான் அவதரித்து அவரே தேவேந்திரனுமானார். தேவஹூதியிடம் கபிலராகவும் பகவான் அவதரித்தார்.

இரண்டாவது ஸ்வாரோசிஷ மன்வந்தரம். ரோசனன் இந்திரன்; துஷிதர் முதலியோர் தேவர்கள்; ஊர்ஜர், ஸ்தம்பர் முதலியோர் ஸப்தரிஷிகள்; வேதசிரஸ் எனும் ரிஷியிடம் 'விபு' என்று பகவானுடைய அவதாரம்.

மூன்றாவது உத்தம மன்வந்தரம். ஸத்யஜித் இந்திரன். உத்தமபுத்திரர்களான பாவனன், ஸ்ருஞ்சயன் முதலியோர் தேவர்கள். வசிஷ்ட குமாரர்களான பிரமதன் முதலியோர் ரிஷிகள். தர்மரிடம் 'ஸத்யஸேனர்' என்று பகவானுடைய அவதாரம்.

நாலாவது தாமஸ மன்வந்தரம். (சுகர் அப்போது தாமஸருடைய குமாரராயிருந்தார்). ஸத்யகர்கள் முதலியோர் தேவர்கள்; ஜ்யோதிஸ், வ்யோகா முதலியோர் ரிஷிகள்; த்ரிசிகன், இந்திரன்; ஹரிமேதஸ் என்பவருக்கு ஹரிணியிடம் 'ஹரி' என்று பகவானுடைய அவதாரம்

श्रीशुक उवाच--

आसीद् गिरिवरो राजं-स्त्रिकूट इति विश्रुतः ॥ २.१ ॥

तस्य द्रोण्यां भगवतो वरुणस्य महात्मनः ।
उद्यान-मृतुमन्नाम आक्रीडं सुरयोषिताम् ॥ २.९ ॥

तत्रैकदा तद्गिरि-काननाश्रयः करेणुभि-र्वारणयूथप-श्चरन् ।
सकण्टकान् कीचकवेणुवेत्रवद् विशालगुल्मं प्ररुजन् वनस्पतीन् ॥ २.२१ ॥

स घर्मतप्तः करिभिः करेणुभिर्वृतो मदच्युत् कलभैरनुद्रुतः ।
गिरिं गरिम्णा परितः प्रकम्पयन् निषेव्यमाणोऽलिकुलै-र्मदाशनैः ॥ २.२३ ॥

सरोऽनिलं पंकजरेणुरूषितं जिघ्रन्विदूरान्मदविह्वलेक्षणः ।
वृतः स्वयूथेन तृषार्दितेन तत् सरोवराभ्याश-मथागमद् द्रुतम् ॥ २.२४ ॥

विगाह्य तस्मि-न्नमृतांबु निर्मलं हेमारविन्दोत्पल-रेणु-वासितम् ।
पपौ निकामं निज-पुष्करोद्धृत-मात्मान-मद्भिः स्नपयन् गतक्लमः ॥ २.२५ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

2. 1. அரசே! திரிகூடம் எனப் பெயர் பெற்ற ஒரு சிறந்த மலை உண்டு.

2. 9. அதன் தாழ்வரையில் மகாத்மாவாகிய வருண பகவானுக்கு உரித்தானதும் ருதுமத் எனப் பெயர் கொண்டதுமான ஒரு உத்தியானவனம் உண்டு. அது தேவ ஸ்திரீகள் கிரீடை செய்யுமிடம்.

2. 21. அம் மலையிலும் வனத்திலும் வாழ்ந்த ஒரு சிறந்த யானை பெண்யானை களுடன் ஒரு ஸமயம் முட்கள் மிகுந்ததும் கெட்டி மூங்கில்களும் குழல் மூங்கில்களு மடர்ந்ததும், பிரம்புகளும் கொடிகளும் படர்ந்ததும், விருக்ஷங்கள் நிறைந்ததுமான அவ் விடத்தில் அனைத்தையும் சிதறடித்துக்கொண்டு சஞ்சரித்தது.

2. 23. வெயிலால் தாபமடைந்த அந்த யானை மற்ற ஆண் பெண் யானைகளால் சூழப்பெற்று மதஜலத்தைப் பெருக்கிக்கொண்டு மதத்தைப் பருகும் வண்டுகள் சூழ, மலையசைய நடமாடிற்று.

2. 24. மதத்தால் சுழலுங் கண்களையுடைய அந்த யானை தூரத்திலுள்ள ஒரு தடாகத்திலிருந்து காற்றில் மிதந்துவரும் தாமரையின் மகரந்த வாசனையை முகர்ந்து தாகத்தினல் துன்புற்ற தன் கூட்டத்துடன் அந்தத் தடாகத்தின் கரைக்கு விரைந்து வந்தது.

2. 25. தடாகத்தில் மூழ்கித் தெளிவான அமுதம் போன்றதும் பொற்றாமரை கரு நெய்தல் இவற்றின் தூள்களால் வாசனை பொருந்தியதுமான நீரை ஆசைதீரப் பருகித் தன் துதிக்கையால் எடுத்த நீரால் தன்னைக் குளிப்பாட்டிக்கொண்டு களைப்பு நீங்கிய தாக ஆயிற்று.

---

2. 21, ப்ரருஜன்—ப்ரபஞ்ஜன் (மிதித்துக்கொண்டு)
2. 23. அந்த யானையின் காதில் பெருகும் மத நீரின் வாஸனையைக் காற்றில் முகர்ந்தால் சிங்கமும் பயப்படும்; அப்படிப்பட்ட சிறப்புடையது அது.

---

2. 24. वृतं स यूथेन । பா. பே.

स्वपुष्करेणोद्धृत-शीकरांबुभि-र्निपाययन् संस्नपयन् यथा गृही ।
घृणी करेणूः कलभांश्च दुर्मदो नाचष्ट कृच्छ्रं कृपणोऽज-मायया ॥ २.२६ ॥

तं तत्र कश्चि-न्नृप दैवचोदितो ग्राहो बलीयां-श्चरणे रुषाऽग्रहीत् ।
यदृच्छयैवं व्यसनं गतो गजो यथा बलं सोऽतिबलो विचक्रमे ॥ २.२७ ॥

तथाऽऽतुरं यूथपतिं करेणवो विकृष्यमाणं तरसा बलीयसा ।
विचुक्रुशु-र्दीनधियोऽपरे गजाः पार्ष्णि-ग्रहा-स्तारयितुं नचाशकन् ॥ २.२८ ॥

ततो गजेन्द्रस्य मनोबलौजसां कालेन दीर्घेण महानभूद्व्ययः ।
विकृष्यमाणस्य जलेऽवसीदतो विपर्ययोऽभूत् सकलं जलौकसः ॥ २.३० ॥

इत्थं गजेन्द्रः स यदाऽऽप संकटं प्राणस्य देही विवशो यदृच्छया ।
अपारय-न्नात्मविमोक्षणे चिरं दध्याविमां बुद्धिमथाभ्यपद्यत ॥ २.३१ ॥

---

2. 26. துர்மதம் பிடித்த அந்த யானை கிருஹஸ்தனைப்போல் அன்புடன் பெண் யானைகளையும் குட்டி யானைகளையும் தன் துதிக்கையிலெடுத்த நீர்த் திவலைகளால் பானம் செய்வித்து ஸ்நானம் செய்வித்துக்கொண்டு பகவானுடைய மாயையால் மதி கலங்கி (இனி வரப்போகும்) துன்பத்தை எண்ணவில்லை.

2. 27. அரசே! அப்பொழுது விதிவசத்தால் ஒரு பலம் மிகுந்த முதலை சினந்து அதன் கால்களைக் கவ்விற்று. எதிர்பாராது இங்ஙனம் துன்பத்தையடைந்த அந்த பலம் மிக்க யானை தன் பலங்கொண்டவரை இழுத்துப் பார்த்தது.

2. 28. அங்ஙனம் வன்மைமிக்க முதலையால் விரைந்து இழுக்கப்பட்டுத் துன்பத்திலாழ்ந்த தங்கள் கூட்டத் தலைவனைக் குறித்துப் பெண்யானைகள் தீனமான குரலில் மனங் கசிந்து கதறின. அதைக் காப்பதற்கு அருகில் வந்து இழுத்த மற்ற யானைகள் அதை மீட்க முடியவில்லை.

2. 30. இப் போராட்டத்தில் நீண்ட காலம் சென்றதால் நீரினுள்ளிழுக்கப்பட்டு துயரத்திலாழ்ந்த யானையரசின் மனோவன்மையும் இந்திரிய வன்மையும் படிப்படியாகக் குறைந்தன. நீர் வாழும் பிராணியாகிய முதலைக்கு இவையெல்லாம் எதிரிடையாய் வளர்ந்தன.

2. 31. இங்ஙனம் உடற்பற்று மிகுந்த யானையரசு விதிவசமாய்ப் பிராண ஸங்கடத்தை யடைந்தபோது தன்னால் கூடியவரை தன்னை விடுவித்துக் கொள்ள நெடுங்காலம் முயன்றும் முடியாமற் போகவே தற்செயலாகப் பின்வருமாறு நிச்சயத்தை யடைந்தது.

---

2. 26. जिघ्रन् करेणूः । दुर्मदानाचष्ट । பா. பே.

यः कश्चनेशो बलिनोऽन्तकोरगात् प्रचण्डवेगा-दभिधावतो भृशम् ।
भीतं प्रपन्नं परिपाति यद्भयान्मृत्युः प्रधावत्यरणं तमीमहि ॥ २.३३ ॥

एवं व्यवसितो बुद्ध्या समाधाय मनो हृदि ।
जजाप परमं जाप्यं प्राग्जन्मन्यनुशिक्षितम् ॥ ३.१ ॥

गजेन्द्र उवाच—

ओं नमो भगवते तस्मै यत एतच्चिदात्मकम् ।
पुरुषायादिबीजाय परेशायाभिधीमहि ॥ ३.२ ॥

यस्मिन्निदं यतश्चेदं येनेदं य इदं स्वयम् ।
योऽस्मात् परस्माच्च पर-स्तं प्रपद्ये स्वयंभुवम् ॥ ३.३ ॥

---

2. 33. "எல்லாவற்றினும் வலியதும் எல்லாவற்றையும் முடிப்பதும், எதிர்க்க முடியாத வேகத்துடன் எத்திக்கிலும் பாய்வதுமாகிய கால ஸர்ப்பத்தினிடம் பயந்து சரண் புகுந்தவனை எந்த ஒரு ஈசன் பரிபாலிக்கின்ருனே, எவனிடம் யமனும் பயந்து ஓடுகின்ருனே அவனை நான் சரணடைகின்றேன்."

3. 1. இங்ஙனம் புத்தியால் நிச்சயித்த அந்த யானை மனதையடக்கிக்கொண்டு முன் பிறவியில் கற்றிருந்த உத்தமமான ஸ்தோத்திரத்தை (புண்ணிய வசத்தால் நினைவிற்கொண்டு) இருதயத்தில் ஜபம் செய்தது.

கஜேந்திரன் கூறியது—

3. 2. ஓம். எவனால் இவ்வுலகு உயிருள்ளதாகின்றதோ, அந்த பகவானுக்கு, ஆதிசக்தியாகிய பிரகிருதியாகவும் விதையாகிய புருஷனாகவும் உள்ள பரமேசுவரனுக்கு வந்தனம் செய்கிறேன்.

3. 3. இவ்வுலகு எவனிடம் விளங்குகிறதோ, எவனிடருந்து உண்டாகியதோ, எவனால் உண்டாகியதோ, எவன் வடிவாகவே இருக்கின்றதோ, எவன் இகத்திற்கும் பரத்திற்கும் (காரியத்திற்கும் காரணத்திற்கும்) அப்பாற்பட்டவனே, தான் தானாகவே தோன்றியவனே, அவனைச் சரணடைகிறேன்,

---

2. 33. ஒ. **பீஷாஸ்மாத்** வாத: பவதே। —தை. உப. 28.
(ம்ருத்யுர் யஸ்யோப ஸேசனம்)
யமன் எந்த பகவானுக்கு ஊறுகாய் போன்றவனே.—கட. உப: 2.25
**அரணம்—சர**ணம்।
ஒ. ஸ்துதிஸ்தோதா-(அ) ரணப்ரிய!। —**விஷ்ணு** ஸஹஸ்ர நாமம்,

3. 1. **பேயம்**—ஸ்தோத்ரம்।
யானைப்பிறவியிலும் முன் பிறவியில் செய்த புண்ணியம் உதவிற்று.
ஒ. (யோகப் பிரஷ்டனும் மறு பிறவியில்) முன் உடலில் உண்டாகிய புத்தியின் கூட்டுறவை அடைகிருன். மேலும் அதைவிட மேலான சித்தி எய்துதற்கு முயல்கிருன். முன் பழக்கத்தாலேயே தான் உணராவிடினும் கூட அவன் இயக்கப்படுகின்ருன். —கீ. 6, 43-44

3. 3. **அஸ்மாத்** கார்யாத், **பரஸ்மாத்** காரணாச்ச ய: பர: தம் ஸ்வயம்புவம் ஸ்வத: ஸித்தம்।

न यस्य देवा ऋषयः पदं विदु-र्जन्तुः पुनः कोऽर्हति गन्तुमीरितुम् ।
यथा नटस्याकृतिभि-र्विचेष्टितो दुरत्ययानुक्रमणः स मावतु ॥ ३.६ ॥

न विद्यते यस्य च जन्म कर्म वा न नामरूपे गुणदोष एव वा ।
तथापि लोकाप्यय-संभवाय यः स्वमायया तान्यनुकाल-मृच्छति ॥ ३.८ ॥

तस्मै नमः परेशाय ब्रह्मणेऽनन्तशक्तये ।
अरूपायोरुरूपाय नम आश्चर्य-कर्मणे ॥ ३.९ ॥

नम आत्मप्रदीपाय साक्षिणे परमात्मने ।
नमो गिरां विदूराय मनस-श्चेतसामपि ॥ ३.१० ॥

सत्वेन प्रतिलभ्याय नैष्कर्म्येण विपश्चिता ।
नमः कैवल्य-नाथाय निर्वाण-सुख-संविदे ॥ ३.११ ॥

---

3. 6. எவனுடைய நிலையை தேவர்களும் ரிஷிகளுங்கூட அறியார்களோ அவனை எந்தப் பிராணிதான் நாடவோ வர்ணிக்கவோ தகுதியுடையதாகும்? நடிகனைப்போல் பல உருவங்களில் விளையாடும் எவனுடைய போக்கை அறிய இயலாதோ அவன் என்னைக் காக்கட்டும்.

3. 8. எவனுக்குப் பிறப்பும் தொழிலும் பெயரும் வடிவும் குணமும் தோஷமும் இல்லாமலிருப்பினும், உலகின் அழிவிற்கும் ஆக்கத்திற்கும் காரணமாக எவன் தன் மாயையால் இவற்றைக் காலத்திற்கிசைந்தவாறு அடைகின்றானோ;

3. 9. எவன் அளவற்ற சக்தியுடைய பரமேசுவரனோ, பரப்பிரம்மமோ அவனுக்கு நமஸ்காரம். ரூபமில்லாதவனும் பல ரூபமுடையவனும் ஆச்சரியமான செயலுடையவனுமான அவனுக்கு நமஸ்காரம்.

3. 10. தன்னைத் தன்னாலே விளக்குபவனும், ஸாக்ஷியும், பரமாத்மாவும் ஆகிய அவனுக்கு நமஸ்காரம். வாக்கிற்கும் மனதிற்கும் உணர்விற்கும் எட்டாத அவனுக்கு நமஸ்காரம்.

3. 11. ஸந்நியாஸத்தால் பரிசுத்தமான மனத்தால் ஞானிகளால் அடையத்தக்கவனும் கைவல்யபதியும் நிர்வாண ஸுக ஸ்வரூபியும் ஆகிய அவனுக்கு நமஸ்காரம்.

---

3. 6. **கந்தும்**—ஜ்ஞாதும், **ஈரிதும்**—வக்தும் ।

3. 0. ஒ. சாதிகுலம் பிறப்பிறப்பு பந்தமுத்தி அருவுருவத் தன்மை நாமம்
ஏதுமின்றி எப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவற நின் றியக்கஞ் செய்யும்
சோதியை மாத்தூவெளியை மனதவிழ நிறைவான துரியவாழ்வைத்
தீதில் பரமாம் பொருளைத் திருவருளே நினைவாகச் சிந்தை செய்வாம்.
—தாயுமானவர்.

3. 11. ஒ. **நைஷ்கர்ம்யேண**—ஸந்ந்யாஸேன । ஒ. 'ஸந்ந்யாஸயோகாத் யதய: **சுத்த** ஸத்வா:'।

नमः शान्ताय घोराय मूढाय गुणधर्मिणे ।
निर्विशेषाय साम्याय नमो ज्ञानघनाय च ॥ ३.१२ ॥

क्षेत्रज्ञाय नमस्तुभ्यं सर्वाध्यक्षाय साक्षिणे ।
पुरुषायात्ममूलाय मूलप्रकृतये नमः ॥ ३.१३ ॥

सर्वेन्द्रिय-गुण-द्रष्ट्रे सर्वप्रत्यय-हेतवे ।
असताच्छाययोक्ताय सदाभासाय ते नमः ॥ ३.१४ ॥

नमो नमस्तेऽखिल-कारणाय निष्कारणायाद्भुत-कारणाय ।
सर्वागमाम्नाय-महार्णवाय नमोऽपवर्गाय परायणाय ॥ ३.१५ ॥

मादृक्प्रपन्न–पशुपाश–विमोक्षणाय मुक्ताय भूरिकरुणाय नमोऽलयाय ।
स्वांशेन सर्वतनुभृन्मनसि प्रतीत–प्रत्यग्दृशे भगवते बृहते नमस्ते ॥ ३.१७ ॥

---

3. 12. சாந்தமாகவும், கோரமாகவும், மூடமாகவும் உள்ள (ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற) குண தர்மங்களை யனுசரிப்பவனுக்கு நமஸ்காரம். நிர்விசேஷனும், ஸமமாக உள்ளவனும், ஞானமே உருக்கொண்டவனுமாகியவனுக்கு நமஸ்காரம்.

3. 13. க்ஷேத்திரஜ்ஞனும் எல்லாவற்றிற்கும் பிரபுவும் ஸாக்ஷியுமாகிய உனக்கு நமஸ்காரம். ஆத்ம மூலமும் மூலப்பிரகிருதியும் ஆகிய புருஷனுக்கு நமஸ்காரம்.

3. 14. இந்திரியங்களனைத்தின் விஷயங்களையும் பார்ப்பவனும், இந்திரியங்களின் போக்குக்குக் காரணமாகியவனும், நிழல் போன்ற பொய்யுலகாலும் குறிப்பிடப் பட்டவனும், (பொய்யிலும்) மெய்போன்ற தோற்றமுடையவனுமாகிய உனக்கு நமஸ்காரம்.

3. 15. அனைத்திற்கும் காரணனும் அற்புதமாகிய காரணனும் தனக்குக் காரண மில்லாதவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஆகமங்களும் வேதங்களுமாகிய பெருங்கடல் வடிவினனும், அனைத்திற்கும் உறைவிடமுமாகியவனுக்கு நமஸ்காரம்.

3. 17. என்போன்று சரண்புகுந்த அறிவிலிகளின் தளைகளைக் களைபவனும், தளைகளற்றவனும், அளவு கடந்த கருணையுள்ளவனும், ஒழிவில்லாதவனும் ஆகியவனுக்கு நமஸ்காரம். தனதம்சத்தால் உடல் படைத்தோர் மனத்திலெல்லாம் விளங்கும் அகக்கண்ணாகியவனும், பெரியவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம்,

---

3. 13, **புருஷாய**—பூர்வமேவ ஸதே। ஒ. 'பூர்வமேவாஹ-மிஹாஸமிதி தத்புருஷஸ்ய புருஷத்வம்'।

3. 14. **அஸதா** அஹங்காராதி ப்ரபஞ்சேன **ச்சாயயா** அஸத்ருபயா ॥
**உக்தாய** ப்ரதி **பிம்**பேன **பிம்ப**மிவ ஸூசிதாய।
பாடாந்தரே அஸத்யஸ்ய ச்சாயயா அத்யாஸேன **அக்தாய** யுக்தாய
தததிஷ்டானய।

3. 17. ஒ. 'ய ஆத்மனி திஷ்டன்னாத்மான,-மந்தரோ யமயதி' —ப்ரு. உப. 3. 7.
மனஸி ஸ்திதத்வேபி **ப்ருஹதே** அபரிச்சின்னய।

---

3. 14. **छाययाक्ताय ।**

பா. பே

स वै न देवासुर-मर्त्य-तिर्यङ् न स्त्री न षण्डो न पुमान् न जन्तुः ।
नायं गुणः कर्म न सन्न-चासन्-निषेधशेषो जयतादशेषः ॥ ३.२४ ॥

जिजीविषे नाहमिहामुया किमन्त-र्बहिश्चावृतयेभयोन्या ।
इच्छामि कालेन न यस्य विप्लव-स्तस्यात्म-लोकावरणस्य मोक्षम्
॥ ३.२५ ॥

सोऽहं विश्वसृजं विश्व-मविश्वं विश्ववेदसम् ।
विश्वात्मान-मजं ब्रह्म प्रणतोऽस्मि परं पदम् ॥ ३.२६ ॥

योगरन्धित-कर्माणो हृदि योगविभाविते ।
योगिनो यं प्रपश्यन्ति योगेशं तं नतोऽस्म्यहम् ॥ ३.२७ ॥

नायं वेद स्वमात्मानं यच्छक्त्याहंधिया हतः ।
तं दुरत्यय-माहात्म्यं भगवन्त-मितोऽस्म्यहम् ॥ ३.२९ ॥

---

3. 24. அவன் தேவனுமல்லன், அசுரனுமல்லன், மனிதனுமல்லன், பசுபக்ஷியுமல்லன், பெண்ணுமல்லன், ஆணுமல்லன், அலியுமல்லன்; பிறப்பிறப்புடையவனல்லன்; குணத்திற்கும் கர்மத்திற்கும் அப்பால், உளதிற்கும் இலதிற்கும் அப்பால் மீதியுள்ள எல்லாம் நீங்கிய பின்னும் நீக்கமற நிறைகின்ற அவன் தோன்றி என்னைக் காக்க வேண்டும்.

3. 25. நான் உயிர்வாழ விரும்பவில்லை. உள்ளும் புறம்பும் அவிவேகத்தால் சூழப்பெற்ற இந்த யானைப்பிறவியால் ஆவதென்ன? ஆன்ம உலகின் திரை நீங்குதலாகிய மோக்ஷத்தையே விரும்புகிறேன். அதற்குக் காலத்தால் அழிவு இல்லை.

3. 26. உலகை ஆக்கியவரும், உலகே ஆகியவரும், எனினும் உலகல்லாதவரும், உலகத்தையே உடைமையாய்க் கொண்டவரும், உலகின் ஆத்மாவும் பிறப்பற்ற பிரம்மமும் பரமபதமுமாகி விளங்கும் அவனை வணங்குகின்றேன்.

3. 27. யோகத்தால் கருமங்களொடுங்கப்பெற்ற யோகிகள் யோகபாவனை கூடிய இருதயத்தில் எவனைப் பார்க்கின்றார்களோ அந்த யோகேசுவரனை நான் நமஸ்கரிக்கின்றேன்.

3. 29. எவனுடைய மாயா சக்தியாகிற அஹங்காரத்தால் சூழப்பெற்றமையால் இந்த ஜீவன் தனது ஆத்மாவை அறிந்துகொள்ளவில்லையோ அந்த அளவுகடந்த மகிமையுள்ள பகவானைச் சரணடைகின்றேன்.

---

3. 24. ஒ. ஆணல்லன் பெண்ணல்லன் அலியுமல்லன்
காணலுமாகான் உளனல்லன் இல்லையல்லன்
பேணுங்கால் பேணுமுருவாகு மல்லனுமாம்
கோணை பெரிதுடைத் தெம்பெம்மானைக் கூறுதலே. —நம்மாழ்வார்.

श्रीशुक उवाच—

एवं गजेन्द्र-मुपवर्णित-निर्विशेषं ब्रह्मादयो विविधलिंग-भिदाभिमानाः ।
नैते यदोपससृपु-र्निखिलात्मकत्वात्
तत्राखिलामर-मयो हरिराविरासीत् ॥ ३.३० ॥

तं तद्वदार्त-मुपलभ्य जगन्निवासः स्तोत्रं निशम्य दिविजैः सह संस्तुवद्भिः ।
छन्दोमयेन गरुडेन समुह्यमान-श्चक्रायुधोऽभ्यगम-दाशु
यतो गजेन्द्रः ॥ ३.३१ ॥

सोऽन्तः सरस्युरुबलेन गृहीत आर्तो दृष्ट्वा गरुत्मति हरिं स उपात्त-चक्रम् ।
उत्क्षिप्य सांबुजकरं गिरमाह कृच्छ्रा-न्नारायणाखिल-गुरो
भगवन् नमस्ते ॥ ३.३२ ॥

तं वीक्ष्य पीडित-मजः सहसावतीर्य सग्राहमाशु सरसः कृपयोज्जहार ।
ग्राहाद् विपाटित-मुखा-दरिणा गजेन्द्रं संपश्यतां
हरि-रमूमुचदुस्त्रियाणाम् ॥ ३.३३ ॥

---

ஸ்ரீசுகர் கூறியது—

3. 30. இங்ஙனம் நிர்விசேஷப்பொருளை (ஒரு தனிமூர்த்தியைக் குறிப்பிடாமல்) துதித்து நின்ற யானையரசிடம் வெவ்வேறுபட்ட வடிவங்களில் அபிமானங் கொண்ட பிரம்மாதிதேவர்கள் வராதுபோக, அப்போது அனைத்திற்கும் ஆத்மாவாகவும் ஸர்வ தேவஸ்வரூபியாகவும் விளங்கும் ஹரியானவர் தோன்றினர்.

3. 31. உலகெங்கும் காங்துறையு மீசன் துன்புற்று நின்ற கஜேந்திரனை நாடி, அதன் துதியைக் கேட்டு மகிழ்ந்து, துதிபாடுந் தேவர்களால் சூழப்பெற்றவராய், வேத ரூபியாகிய கருடனுல் வகிக்கப்பெற்றவராய்ச் சக்கராயுத மேந்தியவராய், அது இருந்த இடத்திற்கு விரைவில் வந்தார்.

3. 32. தடாகத்திற்குள் மிகுந்த பலத்துடன் (முதலையால்) இழுக்கப்பட்டுத் துன்பத்திலாழ்ந்திருந்த அந்த யானையரசு சக்கரமேந்திக் கருடன் மேல் தோன்றிய ஹரியைக் கண்ணுற்று, தாமரை ஏந்திய தன் துதிக்கையை உயரத்தூக்கி மிகுந்த பிரயாசையுடன் "நாராயணு! அகிலகுருவே! பகவானே! உனக்கு நமஸ்காரம்!" என்று கூவிற்று.

3. 33. பகவான் துன்புற்ற யானையரசைக் கடாக்ஷித்து கருணைமிக்கவராய் உடனே இறங்கி விரைவில் தடாகத்தினின்று முதலையுடன் தூக்கிவிட்டார். தேவர்கள் பார்த்திருக்கச் சக்கராயுதத்தால் பிளவுண்ட முதலைவாயினின்று பகவான் யானையரசை விடுவித்தார்.

---

3. 33, **ஸஹஸா—கருடோபி** மந்**தக**திரிதி தத: ஸஹஸா அவதீர்ய |
**அரிணு**—சக்ரேண | **உஸ்ரியாணும்**—தேவாணும் |
**ஓ.** நக்ர-**க்ர**ஸ்தபதம் ஸமு**த்த்**ருத-கரம்-**ப்**ரஹ்மா**த**யோ **போ** ஸுரா:
பால்யந்**தா**மிதி **தீ**னவாக்ய-கரிணம் **தே**வேஷ்வ**ச**க்தேஷு ய:|
மா **சோ**சேதி ரக்ஷ நக்ர-**ஹ**னனே **ச**க்ராயுத: ஸ்ரீத**ர**:
ஆர்த்தத்ராண-பராயண: ஸ **பக**வான் நாராயணோ மே **க**தி: ||
—கூரேசர்: **ஆ**ர்த்தத்ராண நாராயணஷ்டகம்.

---

3. 31. **स ऊह्यमानः ।**

பா. பே.

तदा देवर्षि-गन्धर्वा ब्रह्मेशान-पुरोगमाः ।
मुमुचुः कुसुमासारं शंसन्तः कर्म तद्धरेः ॥ ४.१ ॥

यो वै ग्राहः स वै सद्यः परमाश्चर्य-रूपधृक् ।
मुक्तो देवलशापेन हूहू-गन्धर्व-सत्तमः ॥ ४.३ ॥

प्रणम्य शिरसाधीश-मुत्तमश्लोक-मव्ययम् ।
अगायत यशोधाम कीर्तन्य-गुण-सत्कथम् ॥ ४.४ ॥

सोऽनुकंपित ईशेन परिक्रम्य प्रणम्य तम् ।
लोकस्य पश्यतो लोकं स्वमगान् मुक्तकिल्बिषः ॥ ४.५ ॥

गजेन्द्रो भगवत्स्पर्शाद् विमुक्तोऽज्ञानबन्धनात् ।
प्राप्तो भगवतो रूपं पीतवासा-श्चतुर्भुजः ॥ ४.६ ॥

स वै पूर्व-मभूद्राजा पाण्ड्यो द्रविडसत्तमः ।
इन्द्रद्युम्न इति ख्यातो विष्णुव्रतपरायणः ॥ ४.७ ॥

---

4. 1. அப்போது பிரம்மாவையும் ஈசுவரனையும் முன்னிட்டுக்கொண்டு தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் ஹரியின் அச்செயலைக் கொண்டாடிப் புஷ்பமாரி பொழிந்தார்கள்.

4. 3. ஹூஹூ என்ற கந்தர்வசிரேஷ்டன் தேவலமஹரிஷியின் சாபத்தால் முதலையாயிருந்தான். அவன் இப்போது திடீரென மிகவும் ஆச்சரியமான ரூபத்தையடைந்து சாபம் நீங்கியவனானான்.

4. 4. ஈசுவரசிரேஷ்டனும், உத்தமசுலோகனும், அழிவற்றவனும், புகழ்நிறைந்தவனும், கீர்த்தனம் செய்தற்குரிய குணங்களும் நற்சரிதமும் படைத்தவனுமாகிய பகவானைத் தலையால் வணங்கி வாயினால் பாடினான்.

4. 5. ஈசுவரனால் அனுக்கிரகிக்கப் பெற்று அவரை வலம்வந்து நமஸ்கரித்துப் பாவம் நீங்கியவனாய் இவ்வுலகினர் காணத் தன்னுலகம் சென்றான்.

4. 6. கஜேந்திரன் பகவானுடைய கை பட்டதால் அஞ்ஞானத் தளையகன்று மஞ்சட் பட்டாடையுடனும் நான்கு புஜங்களுடனும் பகவானைப்போல் ரூபந்தரித்தவனாய் விளங்கினான்.

4. 7. அவன் முன்பு திராவிட சிரேஷ்டனாகிய பாண்டிய நாட்டரசனாய் இந்திரத்யும்னன் என்ற பெயருடனும் விஷ்ணு விரத பாராயணனாய் விளங்கியவன்,

---

4. 3. தேவலர் ஸ்நானம் செய்யும்போது நீராடிக் கொண்டிருந்த ஹூஹூ என்ற கந்தர்வன் அவர் காலைப் பிடித்திழுத்தான். அவர் அவனைச் சபித்தார்.

स एकदाराधन-काल आत्मवान् गृहीत-मौनव्रत ईश्वरं हरिम् ।
जटाधर-स्तापस आप्लुतोऽच्युतं समर्चयामास कुलाचलाश्रमः ॥ ४.८ ॥

यदृच्छया तत्र महायशा मुनिः समागमच्छिष्यगणैः परिश्रितः ।
तं वीक्ष्य तूष्णी-मकृतार्हणादिकं रहस्युपासीन-मृषिश्चुकोप ह ॥ ४.९ ॥

तस्मा इमं शाप-मदा-दसाधु-रयं दुरात्माकृतबुद्धि-रद्य ।
विप्रावमन्ता विशतां तमोऽन्धं यथा गजः स्तब्धमतिः स एव ॥ ४.१० ॥

आपन्नः कौंजरीं योनि-मात्मस्मृति-विनाशिनीम् ।
हर्यर्चनानुभावेन यद्गजत्वे-प्यनुस्मृतिः ॥ ४.१२ ॥

एतन्महाराज तवेरितो मया कृष्णानुभावो गजराज-मोक्षणम् ।
स्वर्ग्यं यशस्यं कलिकल्मषापहं दुःस्वप्ननाशं कुरुवर्य शृण्वताम् ॥ ४.१४ ॥

इदमाह हरिः प्रीतो गजेन्द्रं कुरुसत्तम ।
शृण्वतां सर्वभूतानां सर्व-भूतमयो विभुः ॥ ४.१६ ॥

4. 8. அவன் ஒரு சமயம் ஜடைதரித்துத் தவவேடம் பூண்டு மலய பர்வத்தில் ஆசிரமம் அமைத்துக்கொண்டு நீராடிப் பரிசுத்தனுய் அச்சுதனை அர்ச்சித்து வந்தான். ஈசுவரனுகிய ஹரியை ஆராதிக்கும் காலத்தில் திடச்சித்தத்துடன் மௌனவிரதம் பூண்டிருந்தான்.

4. 9. அங்கு எதிர்பாராமல் கீர்த்திவாய்ந்த (அகஸ்திய) முனிவர் சிஷ்ய கணங்கள் சூழ வந்துசேர்ந்தார். தனக்கு மரியாதை யேதுஞ் செய்யாமல் மௌனமாய்த் தனிமையில் வீற்றிருந்த அவனைக்கண்டு (முனிவர்) கோபமுற்ருர்.

4. 10. 'இவன் ஸாதுவல்ல, மதிகெட்டவன், புத்தி திருந்தாதவன், வேதியர்களை அவமதிப்பவன் போலும்; யானைபோல் ஜடமான புத்தியுடையவனுய்த் தோன்றுகிருன். ஆகையால் அங்ஙனமே (யானையாகவே) தமஸ்ஸில் புகுந்துழையட்டும்' என்று சாபங் கொடுத்தார்.

4. 12. அவ்வரசன் அங்ஙனமே ஆத்மநினைவை யழிக்கும் யானைப் பிறவியை யடைந்தானெனினும் ஹரியை அர்ச்சித்த மகிமையால் யானையாகியும் நன்னினைவு தொடர்ந்திருந்தது.

4. 14. அரசர் பெருமானே! இங்ஙனம் கஜேந்திர மோக்ஷமாகிய ஹரிமகிமை உனக்கு என்னுல் கூறப்பட்டது. குருசிரேஷ்டா! இது கேட்பவர்க்கு ஸ்வர்க்கத்தையும் கீர்த்தியையும் அளிப்பது, கலிதோஷத்தைப் போக்குவது, கெட்ட கனவை யொழிப்பது.

4. 16. குருசிரேஷ்டனே! ஸர்வ பூத ஸ்வரூபியும் பிரபுவுமான ஹரி பிரீதி மிக்கவராய் யாவரும் கேட்டிருக்கையில் கஜேந்திரனிடம் இங்ஙனம் கூறினுர்.

4, 9. மகான்களை உபசரிப்பதற்காக மௌனம் போன்ற எல்லா நியமங்களையும் விடலாம்.

श्रीभगवानुवाच—

ये मां त्वां च सरश्चेदं गिरिकन्दरकाननम्।
वेत्र-कीचकवेणूनां गुल्मानि सुरपादपान् ॥ ४.१७ ॥

मत्स्यकूर्म-वराहाद्यै-रवतारैः कृतानि मे।
कर्मा-ण्यनन्त-पुण्यानि सूर्यं सोमं हुताशनम् ॥ ४.२१ ॥

प्रणवं सत्य-मव्यक्तं गो-विप्रान् धर्म-मव्ययम्।
दाक्षायणी-र्धर्मपत्नीः सोम-कश्यपयो-रपि ॥ ४.२२ ॥

गङ्गां सरस्वतीं नन्दां कालिंदीं सितवारणम्।
ध्रुवं ब्रह्मर्षीन् सप्त पुण्यश्लोकांश्च मानवान् ॥ ४.२३ ॥

उत्थायापर-रात्रान्ते प्रयताः सुसमाहिताः।
स्मरन्ति मम रूपाणि मुच्यन्ते ह्येनसोऽखिलात् ॥ ४.२४ ॥

---

ஸ்ரீ பகவான் கூறியது—

4. 17. என்னையும் உன்னையும் இந்த தடாகத்தையும், மலை, குகை, வனம், பிரம்பு, கெட்டிமூங்கில், குழல் மூங்கில், புதர்கள், தேவவிருக்ஷங்கள் ஆகிய இவைகளையும்;

4. 21. எனது மத்ஸ்யம் கூர்மம் வராஹம் முதலிய அவதார லீலைகளையும், அளவற்ற புண்ணியச் செயல்களையும், சூரியனையும், ஸோமனையும் அக்கினியையும் ;

4. 22. பிரணவம், ஸத்தியம், யோகமாயை, பசு, பிராம்மணர்கள், அழிவில்லாத தருமம், தருமனுக்கும் ஸோமனுக்கும் கசியபருக்கும் பத்தினிகளாகிய தக்ஷபுத்திரிகள் ஆகிய இவர்களையும் ;

4. 23. கங்கை, ஸரஸ்வதி, நர்மதை, யமுனை, ஐராவதம், துருவன், ஏழு பிரம்ம ரிஷிகள், புண்ணிய கீர்த்தியுள்ள மனிதர்கள் ஆகிய இவர்களையும் ;

4. 24. என்னுடைய ரூபங்களையும், எவர்கள் விடியற்காலையிலெழுந்து தூய்மையுடன் மனதையடக்கி நினைக்கின்றார்களோ அவர்கள் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகின்றனர்.

---

4. 23. ஸிதவாரணம்-ஐராவதம்।

---

4. 24. प्रणताः सुसमाहिताः। ते अंहसोऽखिलात्।

ये मां स्तुवन्त्यनेनाङ्ग प्रतिबुध्य निशात्यये।
तेषां प्राणात्यये चाहं ददामि विमलां मतिम् ॥ ४.२५ ॥

श्रीशुक उवाच—

इत्यादिश्य हृषीकेशः प्रध्माय जलजोत्तमम्।
हर्षयन् विबुधानीक-मारुरोह खगाधिपम् ॥ ४.२६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां
संहितायां अष्टमस्कन्धे गजेन्द्रमोक्षणं नाम
चतुर्थोऽध्यायः ॥

---

4. 25. அன்பனே! எவர்கள் இரவின் முடிவில் எழுந்து இதனுல் என்னைத் துதிக்கின்றுர்களோ அவர்களுக்கு நான் பிராணப் பிரயாண காலத்தில் தெளிவான மதியைத் தருகின்றேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 26 ஹிருஷீகேசர் இவ்வாறு உபதேசித்துவிட்டுச் சிறந்த சங்கத்தை முழக்கித் தேவர் குழாத்தை மகிழ்வித்துப் பக்ஷிராஜன் மீதேறிஞர்.

இங்ஙனம் பதினெண்ணுயிரம் சுலோகங்கள் அடங்கிய ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் எட்டாவது ஸ்கந்தம் நாலாவது அத்தியாயத்துடன் கஜேந்திர மோக்ஷணம் முற்றும்.

---

4, 26. ஜலஜோத்தமம்-சங்கவரம், ப்ரத்மாய-வாதயித்வா।

---

4. 25. विपुलां मतिं। பா. பே.

## ॥ अमृतमथनम् ॥ १६ ॥

श्रीशुक उवाच--

पंचमो रैवतो नाम मनु-स्तामससोदरः ।
बलिविन्ध्यादय-स्तस्य सुता अर्जुनपूर्वकाः ॥ ५.२ ॥

यदा युद्धेऽसुरै-र्देवा बाध्यमानाः शितायुधैः ।
गतासवो निपतिता नोत्तिष्ठेरन्स्म भूयशः ॥ ५.१५ ॥

यदा दुर्वाससः शापात् सेन्द्रो लोकास्त्रयो नृप ।
निः श्रीकाश्चाभवं-स्तत्र नेशु-रिज्यादयः क्रियाः ॥ ५.१६ ॥

---

## 16. அமிருதமதனம்

ஸ்ரீசுகர் கூறியது—

5. 2. தாமஸ மனுவின் சகோதரரான ரைவதர் என்று பெயர் பெற்றவர் ஐந்தாவது மனு. அர்ஜுனன் பலிவிந்தியன் முதலியோர் அவருடைய புத்திரர்கள்.

5. 15. எப்போது போரில் தேவர்கள் கூரிய ஆயுதங்களால் அசுரர்களால் துன்புறுத்தப்பட்டு உயிரிழந்து வீழ்ந்தவர்களாய் மீண்டும் எழுந்திருக்காமல் இருந்தனரோ ;

5. 16. அரசே! எப்போது துர்வாஸ சாபத்தால் இந்திரனுடன் மூவுலகும் ஒளியிழந்து யாகாதிக் கிரியைகளும் அழிந்து போயினவோ ;

---

5. 2. **ஐந்தாவது மன்வந்தரம்**—ரைவதர் மனு; அர்ஜுனன், பிரதிவிந்தியன் முதலியோர் மனு புத்திரர்கள்; விபு என்பவன் இந்திரன்; பூதரயன் முதலியோர் தேவர்கள்; ஹிரண்யரோமா, வேதசிரஸ், ஊர்த்வபாகு முதலியோர் ரிஷிகள்; சுப்ரருக்கு விகுண்டை எனும் மனைவியிடம் வைகுண்டர் என்று பகவானுடைய அவதாரம்.

**ஆறுவது மன்வந்தரம்**—சாக்ஷுஷர் மனு; இந்திரத்யும்னன் இந்திரன்: ஆப்யன் முதலியோர் தேவர்கள்; ஹவிஷ்மான் முதலியோர் ரிஷிகள்; வைராஜருக்கு ஸம்பூதியிடம் அஜிதர் என்று பகவானுடைய அவதாரம்.

5. 16. ஒரு ஸமயம் துர்வாஸ மகரிஷி யானை மேலிருந்த இந்திரனுக்குப் பிரஸாதமாக ஒரு மாலையை யளிக்க அவன் அதை மதியாமல் யானையின் மஸ்தகத்தில் வைத்தான். யானை அதைக் கீழே தள்ளிக் காலால் மிதித்தது. துர்வாஸர் கோபமடைந்தார். இந்திரன் மன்னிப்புக் கேட்டான், துர்வாஸர் 'மன்னிப்பது என் வழக்கமில்லை' என்று சபித்தார். அசுரர்கள் இதையறிந்து படையெடுத்தனர். மஹாபலிக்கு ஜயமும் இந்திரனுக்குத் தோல்வியும் ஏற்பட்டது.

---

5. 2. **मनुस्तामसपूर्वकः ।**
5. 15. **नोत्तिष्ठेरन् पुनश्च ते ।** பா. பே.

ततो ब्रह्मसभां जग्मु-र्मेरो-र्मूर्धनि सर्वशः ।
सर्वं विज्ञापयांचक्रुः प्रणताः परमेष्ठिने ॥ ५.१८ ॥

ब्रह्मोवाच--

यथा हि स्कन्ध-शाखानां तरो-र्मूलावसेचनम् ।
एव-माराधनं विष्णोः सर्वेषा-मात्मनश्च हि ॥ ५.४९ ॥

नमस्तुभ्य-मनन्ताय दुर्वितर्क्यात्म-कर्मणे ।
निर्गुणाय गुणेशाय सत्त्वस्थाय च सांप्रतम् ॥ ५.५० ॥

एवं स्तुतः सुरगणै-र्भगवान् हरिरीश्वरः ।
तेषा-माविरभूद्राजन् सहस्रार्कोदय-द्युतिः ॥ ६.१ ॥

श्रीभगवानुवाच--

अमृतोत्पादने यत्नः क्रियता-मविलंबितम् ।
यस्य पीतस्य वै जन्तु-र्मृत्युग्रस्तोऽमरो भवेत् ॥ ६.२१ ॥

क्षिप्त्वा क्षीरोदधौ सर्वा वीरुत्तृण-लतौषधीः ।
मन्थानं मन्दरं कृत्वा नेत्रं कृत्वा तु वासुकिम् ॥ ६.२२ ॥

सहायेन मया देवा निर्मन्थध्व-मतन्द्रिताः ।
क्लेश-भाजो भविष्यन्ति दैत्या यूयं फलग्रहाः ॥ ६.२३ ॥

---

5. 18. அப்போது எல்லோரும் மேருவின் உச்சியிலுள்ள பிரம்ம ஸபையை யடைந்து பிரம்மாவிடம் வணங்கி எல்லாவற்றையும் தெரிவித்துக் கொண்டனர்.

பிரம்மா கூறியது—

5. 49. ஒரு மரத்தின் வேரில் நீர் விடுவது அதன் கிளைகளுக்கும் கொம்புகளுக்கும் ஆவதுபோல் விஷ்ணுவின் ஆராதனம் எல்லோருக்கும் தனக்கும் ஆகிறது. (அவரைத்தான் ஆராதிக்கவேண்டும் என்று கூறி அவரைத் துதித்தார்.)

5. 50. "அளவிறந்தவரும், அறியவொண்ணுத செயல்களையுடையவரும், நிர்க்குணரும் குணங்களுக்கு ஈசுவரரும் நிகழ்காலத்தில் ஸத்துவத்தில் நிலைத்தவருமாகிய உமக்கு நமஸ்காரம்."

6. 1. இவ்விதம் தேவ கணங்களால் துதிக்கப்பெற்ற ஹரியும் ஈசுவரனுமான பகவான் ஆயிரம் சூரியர்களுதித்தாற்போன்ற பிரகாசத்துடன் அவர்களிடை தோன்றினுர்.

ஸ்ரீ பகவான் கூறியது—

6. 21. அமிர்தத்தை உண்டாக்குவதில் தாமதமின்றி முயற்சி செய்யவேண்டும். அதைப் பருகுவதால் சாவினுல் பீடிக்கப்பட்ட ஜீவன் சாவற்றவனுவான்.

6. 22-23. தேவர்களே! எல்லாவிதமான புல் பூண்டு செடி கொடிகளையும் பாற்கடலில் போட்டு மந்திரமலையை மத்தாகவும் வாசுகியைக் கயிருகவும் கொண்டு சோம்பலை விட்டு என்னுதவியுடன் கடையுங்கள். அசுரர்கள் கிலேசத்தை அடைவார்கள், நீங்கள் பயனை யடையப் போகிறீர்கள்.

यूयं तदनुमोदध्वं यदिच्छन्त्यसुराः सुराः ।
न संरंभेण सिद्ध्यन्ति सर्वेऽर्थाः सान्त्वया यथा ॥ ६.२४ ॥

न भेतव्यं कालकूटाद् विषाज्जलधि-संभवात् ।
लोभः कार्यो न वो जातु रोषः कामस्तु वस्तुषु ॥ ६.२५ ॥

श्रीशुक उवाच—

इति देवान् समादिश्य भगवान् पुरुषोत्तमः ।
तेषा-मन्तर्दधे राजन् स्वच्छन्दगति-रीश्वरः ॥ ६.२६ ॥

तत्र देवासुराः कृत्वा संविदं कृतसौहृदाः ।
उद्यमं परमं चक्रु-रमृतार्थे परन्तप ॥ ६.३२ ॥

ते नागराज-मामन्त्र्य फलभागेन वासुकिम् ।
परिवीय गिरौ तस्मिन् नेत्रमब्धिं मुदान्विताः ॥ ७.१ ॥

आरेभिरे सुसंयत्ता अमृतार्थं कुरूद्वह ।
हरिः पुरस्ताज्जगृहे पूर्वं देवा-स्ततोऽभवन् ॥ ७.२ ॥

6. 24. தேவர்களே! அசுரர்கள் எதை விரும்புகிறார்களோ அதை ஒப்புக்கொள்ளுங்கள். சமாதானத்தால் எங்ஙனம் எல்லாப் பொருள்களும் சித்திக்குமோ அங்ஙனம் கலவரத்தால் சித்திக்கமாட்டா.

6. 25. ஸமுத்திரத்தினின்று தோன்றப்போகும் காலகூட விஷத்திற்குப் பயப்படக்கூடாது; (அதில் தோன்றும் மற்ற) வஸ்துக்களிடம் ஒருபோதும் லோபமோ கோபமோ காமமோ உங்களுக்கு உண்டாகக் கூடாது.

ஸ்ரீ சுகர் கூறியது—

6. 26. அரசே! இஷ்டப்படி செல்லும் ஈசுவரனும் புருஷோத்தமனுமான பகவான் தேவர்களுக்கு இங்ஙனம் கட்டளையிட்டுவிட்டு அவர்களிடையிருந்து மறைந்தார்.

6. 32. எதிரிகளை எரிப்பவனே! பின்னர் தேவர்களும் அசுரர்களும் சிநேகம் செய்துகொண்டு ஒப்பந்தமும் செய்து கொண்டு அமிருதத்திற்காகச் சிறந்த முயற்சியைச் செய்தனர்.

7. 1-2. குருசிரேஷ்டனே! அவர்கள் அமிருதமாகிய பயனில் பங்களிப்பதாய்க் கூறி நாகராஜனை இணங்கச்செய்து அவனை மந்திரமலையில் கயிறாகச் சுற்றி மகிழ்ச்சியுடனும் நன் முயற்சியுடனும் அமிருதத்திற்காகக் கடைய ஆரம்பித்தனர். ஹரியானவர் முதலில் வாசுகியின் முன்பக்கம் பிடிக்கத் தேவர்களும் தொடர்ந்து அவ்வாறே செய்தனர்.

6. 32. ஒரு நாட்டை ஆளுபவர் எதிர்க்கட்சிக்காரர்களையும் சட்ட சபையில் சேர்த்துக் கொண்டு சர்க்காரின் குற்றங் குறைகளை எடுத்துக் காட்டப் பயன் படுத்திக் கொள்வதும் இம்முறையை அனுசரித்ததே.

6. 26. स्वच्छन्दमति-रीश्वरः ।

6. 32. अमृतार्थे-परस्परम् ।

7. 2. सुरा यत्ते मथितुं ते अमृतार्थिनः । பா. பே.

तन्नैच्छन् दैत्यपतयो महापुरुष-चेष्टितम् ।
न गृह्णीमो वयं पुच्छ-महे-रङ्ग-ममंगलम् ॥ ७.३ ॥

स्वाध्याय-श्रुतसंपन्नाः प्रख्याता जन्मकर्मभिः ।
इति तूर्ष्णीं स्थितान् दैत्यान् विलोक्य पुरुषोत्तमः ॥
स्मयमानो विसृज्याग्रं पुच्छं जग्राह सामरः ॥ ७.४ ॥

कृतस्थान-विभागास्त एवं कश्यप-नन्दनाः ।
ममन्थुः परमायत्ता अमृतार्थं पयोनिधिम् ॥ ७.५ ॥

मथ्यमानेऽर्णवे सोऽद्रि-रनाधारो-ह्यपोऽविशत् ।
ध्रियमाणोऽपि बलिभि-र्गौरवात् पाण्डुनन्दन ॥ ७.६ ॥

ते सुनिर्विण्ण-मनसः परिम्लान-मुखश्रियः ।
आसन् स्वपौरुषे नष्टे दैवेनाति-बलीयसा ॥ ७.७ ॥

विलोक्य विघ्नेशविधिं तदेश्वरो दुरन्तवीर्योऽवितथाभिसन्धिः ।
कृत्वा वपुः काच्छप-मद्भुतं महत् प्रविश्य तोयं गिरिमुज्जहार ॥ ७.८ ॥

---

7. 3. புருஷோத்தமனுடைய அச்செயலை அசுரத் தலைவர்கள் விரும்பவில்லை. 'பாம்பின் இழிவான அங்கமாகிய வாலை நாங்கள் பிடிக்கமாட்டோம்' (என்றனர்).

7. 4. '(நாங்கள்) அத்தியயனத்தாலும் கேள்வியாலும் சிறந்தவர்கள்; பிறவி, செயல் இவற்றால் புகழ்பெற்றவர்கள்' என்றிங்ஙனம் கூறிப் பேசாமல் நின்ற அசுரர் களைப் பார்த்துப் புருஷோத்தமர் சிரித்துக்கொண்டு தலையை விட்டுவிட்டுத் தேவர் களுடன் வாலைப் பிடித்தார்.

7. 5. இவ்விதம் கசியபநந்தனர்களாகிய தேவர்களும் அசுரர்களும் இடத்தைப் பங்கு போட்டுக் கொண்டு அமிருதத்திற்காகப் பாற்கடலை மிகுந்த பரபரப்புடன் கடைந்தார்கள்.

7. 6 பாண்டுநந்தனரே! கடல் கடையப்படும்போது ஆதாரமற்ற அந்தமலை பலவான்களால் பிடிக்கப்பட்டிருந்த போதிலும் கனத்தினால் நீரில் மூழ்கிப்போயிற்று.

7. 7. (அப்போது) அவர்கள் விதியின் வலிமையால் தங்கள் பராக்கிரமம் வீணாய்ப் போனதுபற்றி மிக்க வெறுப்படைந்தவர்களாகவும் முகம் வாடிப் பொலி வற்றவர்களாகவும் ஆயினர்.

7. 8. விக்னேசனால் ஏற்பட்ட விதியைக்கண்டு வீரியமும் வீண்போகாத ஸங்கல்பமுமுடைய பகவான் அப்போது ஆச்சரியமான பெரிய ஆமை வடிவுகொண்டு நீரில் மூழ்கி மலையை மேலே தூக்கினார்.

तमुत्थितं वीक्ष्य कुलाचलं पुनः समुत्थिता निर्मथितुं सुरासुराः।
दधार पृष्ठेन स लक्षयोजन-प्रस्तारिणा द्वीप इवापरो महान् ॥ ७.९ ॥

सुरासुरेन्द्रै-र्भुजवीर्यवेपितं परिभ्रमन्तं गिरिमङ्ग पृष्ठतः।
बिभ्रत् तदावर्तन-मादिकच्छपो मेनेऽङ्गकण्डूयन-मप्रमेयः ॥ ७.१० ॥

तथासुरानाविश-दासुरेण रूपेण तेषां बलवीर्य-मीरयन्।
उद्दीपयन् देवगणांश्च विष्णु-र्दैवेन नागेन्द्र-मबोधरूपः ॥ ७.११ ॥

उपर्यगेन्द्रं गिरिराडिवान्य आक्रम्य हस्तेन सहस्रबाहुः।
तस्थौ दिवि ब्रह्म-भवेन्द्र-मुख्यै-रभिष्टुवद्भिः सुमनोऽभिवृष्टः ॥ ७.१२ ॥

उपर्यधश्चात्मनि गोत्रनेत्रयोः परेण ते प्राविशता समेधिताः।
ममन्थु-रब्धिं तरसा मदोत्कटा महाद्रिणा क्षोभितनक्रचक्रम् ॥ ७.१३ ॥

---

7. 9. அக்குல பர்வதம் மேலே கிளம்பியதைக்கண்டு தேவர்களும் அசுரர்களும் மீண்டும் கடைய ஆயத்தமாயினர். லக்ஷயோஜனை பரந்த பெரியதொரு துவீபம் போன்று விளங்கிய பகவான் தன் முதுகில் (மலையைத்) தாங்கினர்.

7. 10. பிரியனே! தேவாசுரசிரேஷ்டர்களின் தோள் வலியால் ஆட்டப் பெற்றுச் சுழலும் மலையை முதுகில் சுமக்கின்றவரும் அறியவொண்ணுதவரும் ஆதிக்கச்சபரு மாகிய பகவான் அம்மலை சுழலுவதைத் தனது அங்கத்திற்குச் சொரிந்து கொடுப் பதாகக் கருதினர்.

7. 11. (மேலும்) விஷ்ணுவானவர் அசுர வடிவில் அசுரர்களிடமிருந்து கொண்டு அவர்கள் பலத்தையும் வீரியத்தையும் வளரச் செய்துகொண்டும் அவ்வாறே தேவவடிவில் தேவ கணங்களையும் பிரகாசிக்கச் செய்து கொண்டும் உணராமை எனும் வடிவில் வாசுகியிடமும் புகுந்து நிற்கலானர்.

7. 12. மந்தர மலைமேல் மற்ருெரு மலைபோலிருந்துகொண்டு அதைக் கையால் அமுத்திப் பிடிப்பவராகவும் ஆயிரங் கைகளுடைய பகவான் இருந்தார். (அப்போது) ஆகாயத்தில் தோன்றித் துதிக்கும் பிரம்மா, சிவன், இந்திரன் முதலியவர்களால் பெய்யப் பெற்ற புஷ்பமாரியுடன் விளங்கினர்.

7. 13. மேலும், கீழும், தங்களிடமும், மலையிலும், கயிற்றிலும் புகுந்து நின்ற பரம புருஷனல் விருத்தி செய்விக்கப்பட்ட அவர்கள் மதோன்மத்தர்களாய்ப் பெரிய மலையினல் முதலைக் கூட்டங்கள் சிதறடிக்கப்பட்ட கடலைக் கடைந்தார்கள்.

---

7. 13. கோத்ரே தார்ட்யரூபேண, நேத்ரே அபேத்யரூபேண ஹரிணா।

---

7. 9. समुद्यता निर्मथितुं। 7. 13. महाबलाः। பா.பே.

अहीन्द्र-साहस्र-कठोर-दृङ्मुख-श्वासाग्नि-धूमाहत-वर्चसोऽसुराः ।
पौलोम-कालेय-बलील्वलादयो दवाग्नि-दग्धाः सरला इवाभवन्
॥ ७.१४ ॥

मथ्यमानात् तथा सिन्धो-र्देवासुर-वरूथपैः ।
यदा सुधा न जायेत निर्ममन्थाजितः स्वयम् ॥ ७.१६ ॥

निर्मथ्यमाना-दुदधे-रभूद्विषं महोल्बणं हालहलाह्व-मग्रतः ।
संभ्रान्त-मीनान्-मकराहि-कच्छपात् तिमिद्विपग्राह-तिमिंगिलाकुलात्
॥ ७.१८ ॥

तदुग्रवेगं दिशि दिश्युपर्यधो विसर्प-दुत्सर्पदसह्यमप्रति ।
भीताः प्रजा दुद्रुवु-रङ्ग सेश्वरा अरक्ष्यमाणाः शरणं सदाशिवम्
॥ ७.१९ ॥

विलोक्य तं देववरं त्रिलोक्या भवाय देव्याभिमतं मुनीनाम् ।
आसीन-मद्रावपवर्ग-हेतो-स्तपो जुषाणं स्तुतिभिः प्रणेमुः ॥ ७.२० ॥

---

7. 14. பாம்பரசனுடைய ஆயிரம் கொடிய கண்களினின்றும் வாய்களினின்றும் மூச்சுக் காற்றினின்றும் கிளம்பிய தீயாலும் புகையாலும் அசுரர்கள் பொலிவிழந்த வராயினர். பௌலோமன், காலேயன், பலி, இல்வலன் முதலிய அனைவரும் காட்டுத் தீயால் பொசுக்கப்பட்ட ஸரள மரங்கள் போலாயினர். (இது தலைப் பக்கத்திற்குத் தாங்களே வந்ததின் பயன்.)

7. 16. அவ்வாறு தேவாசுர வீரர்களால் கடையப்பட்டும் கடலில் அமிருதம் எப்போது உண்டாகவில்லையோ அப்போது பகவான் தானே கடையலானார்.

7. 18. மீன், மகரம், பாம்பு, ஆமை, திமி, நீர்யானை, திமிங்கிலம் முதலியவை பயந்து மேற்கிளம்பவும் கலங்கவும் கடையப்பட்ட ஸமுத்திரத்திலிருந்து மிகக் கொடிய ஹாலாஹல மெனும் விஷம் முதலில் உண்டாயிற்று.

7. 19. பிரியனே! எல்லாத் திக்குகளிலும் மேலுங்கீழும் பரவுகின்றதும் கிளம்பு கின்றதும் எதிர்க்க முடியாததும் பொறுக்க முடியாததுமான அதனுடைய கொடிய வேகத்தைக் கண்டு பயந்த பிரஜைகள் பிரஜா நாயகர்களுடன் இரக்ஷிப்பவர்கள் வேறெவருமின்றிச் சதாசிவனைச் சரணடைந்தார்கள்.

7. 20. மூவுலகின் நன்மைக்காக (கைலாஸ) பர்வதத்தில் உமாதேவியுடன் வீற்றிருப்பவரும், முனிவர்களின் மனதுக் குகந்தவரும் (அவர்களுடைய) மோக்ஷங் காரணமாகத் தவத்தைச் செய்பவருமான அந்த தேவதேவனைத் தரிசித்துத் துதி களுடன் வணங்கினர்.

---

7. 18. ஒ. எந்த சுகம் ஆரம்பத்தில் விஷம் போலும் முடிவில் அமிருதத்துக் கொப் பாகவும் ஆத்மாவில் நிலை பெற்ற புத்தியின் தெளிவில் தோன்றுவதாகவும் உள்ளதோ அந்த சுகம் ஸாத்விகம் எனச் சொல்லப்படும். —கீ. 18-37.

7. 20. 'நிர்க்குணம் ஸகுணஞ் சைவ சிவம் ஹரி பராக்ரமை: । ஸ்துவந்தச்ச ப்ரஜே சா: நாமன்யந்தாந்தரம் தயோ: ॥' —ஸ்ரீ

प्रजापतय ऊचुः—

देवदेव महादेव भूतात्मन् भूतभावन।
त्राहि नः शरणापन्नां-स्त्रैलोक्य-दहनाद् विषात् ॥ ७.२१ ॥

त्वं ब्रह्म परमं गुह्यं सदसद्भाव-भावनः।
नाना-शक्तिभि-राभात-स्त्वमात्मा जगदीश्वरः ॥ ७.२४ ॥

ये त्वात्मराम गुरुभिर्हृदि-चिन्तितांघ्रि-
द्वन्द्वं चरन्तमुमया तपसाभितप्तम्।
कत्थन्त उग्रपुरुषं निरतं श्मशाने
ते नून-मूति-मविदं-स्तव हातलज्जाः ॥ ७.३३ ॥

श्रीशुक उवाच—

तद्वीक्ष्य व्यसनं तासां कृपया भृशपीडितः।
सर्वभूत-सुहृद् देव इदमाह सतीं प्रियाम् ॥ ७.३६ ॥

---

பிரஜாபதிகள் கூறியது—

7. 21. தேவதேவா! மஹாதேவா! உண்டாயவற்றின் உயிராகியவனே! உண்டாயவற்றை யெல்லாம் பரிபாலிப்பவனே! மூவ்வுலகையும் பொசுக்கும் விஷத்தினின்று சரண் புகுந்த எங்களைக் காத்தருளவேண்டும்.

7. 24. இரகசியமான பரப்பிரம்மம் நீரே! உயர்ந்ததும் தாழ்ந்ததுமான அனைத்தையும் ஆக்கியளிப்பவர் நீரே! பல சக்திகளுடன் உலகில் பிரகாசிப்பவரும், உலகின் ஈசுவரரும் ஆத்மாவும் நீரே!

7. 33. ஆத்மாவிலேயே இன்புற்றிருக்கும் குருக்களால் எவருடைய இரு சரணங்களும் இதயத்தில் சிந்திக்கப்படுகின்றனவோ அப்படிப்பட்ட உம்மை (காமிகளைப்போல்) உமையுடன் எப்போதும் கூடி யுலவுகிறவரென்றும், தவத்தால் தவிப்பவராயினும் கொடியவரென்றும், மயானத்தில் வசிப்பவரென்றும் எவர்கள் பிதற்றுகிறார்களோ அந்த வெட்கங்கெட்டவர்கள் உமது போக்கை உணரமாட்டார்கள்.

ஸ்ரீ சுகர் கூறியது—

7. 36. அவர்களுடைய அந்த விசனத்தைக் கண்டு அதனால் மிகவும் பீடிக்கப்பட்டுக் கிருபையுடன் உயிரனைத்திற்கும் உண்மை நண்பனாகிய மகாதேவன் பிரியையான ஸதீதேவியிடம் பின்வருமாறு கூறினார்.

---

7. 33. 'கதமாத்மாராமைஸ்-ஸேவித-சரண-யுகளஸ்ய காமித்வாதிகம்? கதம் வா தபஸாபி தப்தஸ்ய சாந்தஸ்ய உக்ரத்வம் பருஷத்வம் வா ஸம்பவதி?' இத்யவிசார்யைவ ப்ரலபந்தி மூர்க்கா: ॥ —ஸ்ரீ.

ஒ, பரந்துலகேழும் படைத்த பிரானை
இரந்துணியென்பர்க ளெற்றுக் கிரக்கும்
நிரந்தரமாக நினையுமடியார்
இரந்துண்டு தன்கழ லெட்டச் செய்மாறே. —திருமந்திரம்;

---

7, 33. हीनलज्जाः। பா. பே.

शिव उवाच—
अहो बत भवान्येतत् प्रजानां पश्य वैशसम् ।
क्षीरोद-मथनोद्भूतात् कालकूटा-दुपस्थितम् ॥ ७.३७ ॥
आसां प्राणपरीप्सूनां विधेय-मभयं हि मे ।
एतावान् हि प्रभोरर्थो यद् दीनपरिपालनम् ॥ ७.३८ ॥
प्राणैः स्वैः प्राणिनः पान्ति साधवः क्षणभंगुरैः ।
बद्धवैरेषु भूतेषु मोहितेष्वात्ममायया ॥ ७.३९ ॥
पुंसः कृपयतो भद्रे सर्वात्मा प्रीयते हरिः ।
प्रीते हरौ भगवति प्रीयेऽहं सचराचरः ।
तस्मादिदं गरं भुंजे प्रजानां स्वस्तिरस्तु मे ॥ ७.४० ॥
श्रीशुक उवाच—
एव-मामन्त्र्य भगवान् भवानीं विश्वभावनः ।
तद् विषं जग्धु-मारेभे प्रभावज्ञान्वमोदत ॥ ७.४१ ॥

---

சிவன் கூறியது—

7. 37. பவானீ! ஐயோ பாவம்! பாற்கடலைக் கடையும்போது உண்டான கால கூட விஷத்தினின்று பிரஜைகளுக்கு விளைந்துள்ள இந்தத் துன்பத்தைப் பார்த்தாயா?

7. 38. பிராணனைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பும் இவர்களுக்கு அபய மளித்தல் என் கடமையல்லவா? தீனர்களைப் பரிபாலித்தல் என்பதொன்றே பிரபுக் களின் நாட்டமாயிருக்கவேண்டும்.

7. 39. ஆத்ம மாயையால் மயங்கிப் பகையை வளர்க்கும் பிராணிகளிடை ஸாதுக்கள் கணப் போதில் அழியக்கூடிய தங்கள் பிராணனால் மற்ற பிராணிகளைக் காக்கிறார்கள்.

7. 40. மங்கள வடிவினளே! கிருபை செய்யும் புருஷனிடம் ஸர்வாத்மாவான ஹரி பிரீதியடைகிறார். பகவான் ஹரி பிரீதியடைந்தால் சராசரப் பிரபஞ்சத்துடன் நானும் பிரீதியடைகிறேன். ஆகையால் இந்த விஷத்தைச் சாப்பிடுகிறேன். என் மக்களுக்கு க்ஷேமம் உண்டாகட்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

7. 41. உலகைக் காப்பவரான பகவான் பரமேசுவரன் இவ்வண்ணம் பவானியைக் கலந்து யோசித்து அந்த விஷத்தைச் சாப்பிட முற்பட்டார். அவருடைய மகிமை தெரிந்த பவானியும் உடன்பட்டு மகிழ்ந்தாள்.

---

7. 37. **வைசஸம்**-துக்கம் |

7. 41. **அமிருதபா**னம் செய்தும் தேவர்கள் அழிகின்றனர். விஷத்தை யருந்தியும் சிவனுக்கழிவில்லை. இது தேவியின் தாடங்க மகிமை என்று ஸௌந்தர்ய லஹரியில் ஸ்ரீ சங்கரர் கூறுகிறார்,

ஓ. (யா தே ருத்ர சிவா தனூ : சிவா விச்வாஹ பேஷஜீ |
சிவா ருத்ரஸ்ய பேஷஜீ | தயா நோ ம்ருட ஜீவஸே |)
உமாதேவி உம்முடைய தேகத்தில் பாதியாயிருப்பதாலும் உலகுக்கெல்லாம் மருந்தாகிய அவள் உமக்கும் மருந்தாயிருப்பதாலும் நீர் விஷத்தை உண்டும் எங்கள் பொருட்டு வாழ்கிறீர், —ஸ்ரீருத்ரம்.

பா. பே.

---

7. 38. **परिरक्षणम् ।**

ततः करतलीकृत्य व्यापि हालाहलं विषम्।
अभक्षयन्-महादेवः कृपया भूतभावनः ॥ ७.४२ ॥

तस्यापि दर्शयामास स्ववीर्यं जलकल्मषः।
यच्चकार गले नीलं तच्च साधो-र्विभूषणम् ॥ ७.४३ ॥

तप्यन्ते लोकतापेन साधवः प्रायशो जनाः।
परमाराधनं तद्धि पुरुषस्याखिलात्मनः ॥ ७.४४ ॥

निशम्य कर्म तच्छंभो-र्देवदेवस्य मीढुषः।
प्रजा दाक्षायणी ब्रह्मा वैकुण्ठश्च शशंसिरे ॥ ७.४५ ॥

---

7. 42. பின்பு உலக ரக்ஷகரான மகாதேவன் பரவி நின்ற ஹாலாஹல விஷத்தை கைத்தலத்திலொடுக்கிக் கிருபையுடன் உட்கொண்டார்.

7. 43. நீரின் குற்றமாகிய அவ் விஷம் தனது வீரியத்தை அவரிடம்கூடக் காட்டி விட்டது. அவருடைய கழுத்தில் கருப்பாய்க் கறைப்படுத்திற்று. அதுவும் ஸாதுவான மஹாதேவனுக்குச் சிறந்த அலங்காரமாகிவிட்டது.

7. 44. பெரும்பாலும் ஸாதுக்களான ஜனங்கள் உலகின் துன்பத்தைக் கண்டு தாங்களும் தவிக்கிறார்கள். அனைத்திற்கும் ஆத்மாவாகிய பரம புருஷனுக்குச் செய்யும் சிறந்த ஆராதனம் அதுவேயன்றோ?

7. 45. உலகை இன்புறச் செய்பவனும் தேவதேவனுமான சம்புவின் அந்தக் காரியத்தைக் கேட்டு எல்லா மக்களும், தாக்ஷாயணீதேவியும், பிரம்மாவும், வைகுண்ட நாதனும் புகழ்ந்தார்கள்.

---

7. 42. ஒ. (நாலம் வா பரமோபகாரகமிதம் த்வேகம் பசூனும்பதே
பச்யன் குக்ஷிகதான் சராசரகணுன் பாஹ்யஸ்திதான் ரக்ஷிதும்।
ஸர்வாமர்த்ய-பலாயனௌஷத-மதிஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரலம் களே ந கிளிதம் நோத்கீர்ண-மேவ த்வயா ॥)

பசுபதியே! நீர் செய்த பரம உபகாரமான இது ஒன்று போதாதா? தேவர்கள் கண்டு நடுங்கி ஓடிய கொடிய ஹாலாஹல விஷத்தை விழுங்கினால் வயிற்றிலுள்ள உலகம் அழியுமென்றும் உமிழ்ந்தால் வெளியிலுள்ள ஜிவராசிகள் அழியுமென்றும் கழுத்திலேயே நிறுத்திக் கொண்டீரல்லவா? —சிவானந்தலஹரீ.

7. 43, ஒ. (ஜ்வாலோக்ர : ஸகலாமராதி-பயத : க்ஷ்வேல : கதம் வாத் வயா
த்ருஷ்ட : கிஞ்ச கரே த்ருத : கரதலே கிம் பக்வ-ஜம்பூபலம்।
ஜிஹ்வாயாம் நிஹிதச்ச ஸித்த-குடிகாவா கண்டதேசே ப்ருத :
கிம் தே நீலமணிர்-விபூஷண-மயம்-சம்போ மஹாத்மன் வத ॥)

கொடிய ஜ்வாலை வீசுவதும் தேவர்களனைவரும் கண்டு நடுங்குவதுமான விஷத்தை நீர் எப்படிப் பார்த்தீர்? எப்படி அதைக் கையிலேந்தினீர்? அது என்ன நாவல் பழமா? எப்படி கழுத்தில் தரித்தீர்? அது என்ன ஸித்த குளிகையா? அல்லது நீலமணியாலான ஆபரணமா? சம்புவே! மஹாத்மாவே! கூறும். —சிவானந்தலஹரீ.

---

7. 42. कृपया भक्तवत्सलः । பா. பே.

प्रस्कन्नं पिबतः पाणे-र्यत् किंचिज्जगृहुः स्म तत् ।
वृश्चिकाहि-विषौषध्यो दन्तशूकाश्च येऽपरे ॥ ७.४६ ॥

पीते गरे वृषांकेण प्रीता-स्तेऽमरदानवाः ।
ममन्थु-स्तरसा सिन्धुं हविर्धानी ततोऽभवत् ॥ ८.१ ॥

तत उच्चैःश्रवा नाम हयोऽभूच्चन्द्र-पाण्डुरः ।
तत ऐरावतो नाम वारणेन्द्रो विनिर्गतः ॥ ८.४ ॥

कौस्तुभाख्य-मभूद्रत्नं पद्मरागो महोदधेः ।
ततोऽभवत् पारिजातः सुरलोक-विभूषणम् ॥ ८.६ ॥

ततश्चाप्सरसो जाता निष्क-कण्ठ्यः सुवाससः ।
ततश्चाविरभूत् साक्षाच्छ्री रमा भगवत्परा ॥ ८.७ ॥

विलोकयन्ती निरवद्य-मात्मनः पदं ध्रुवं चाव्यभिचारिसद्गुणम् ।
गन्धर्व-यक्षासुर-सिद्धचारण-त्रैविष्टपेयादिषु नान्वविन्दत ॥ ८.१९ ॥

---

7. 46. பருகும்போது கையிலிருந்து நழுவிய சிறு பகுதி எதுவோ அதைத் தேளும் பாம்பும் விஷ மூலிகைகளும் மற்றுமுள்ள விஷ ஜந்துக்கள் எவையோ அவை களும் கிரகித்துக்கொண்டன.

8. 1. பரமசிவனால் விஷம் பருகப்பட்டபின் தேவர்களும் அசுரர்களும் பிரீதி யடைந்தவர்களாய் மீண்டும் பரபரப்புடன் கடலைக் கடைந்தார்கள். அப்போது காமதேனு உண்டாயிற்று.

8. 4. பின் சந்திரன்போல் வெண்மையானதும் உச்சைசிரவஸ் என்று பெயர் பெற்றதுமான குதிரை உண்டாயிற்று. பிறகு ஐராவதம் எனப் பெயர்கொண்ட யானை யரசு வெளிப்பட்டது.

8. 6. தாமரைபோல் சிவந்த கௌஸ்துபம் எனும் ரத்னம் பெருங்கடலி னின்றுண்டாயிற்று. பின்னர் தேவலோகத்திற்கணியாய் விளங்கும் பாரிஜாதம் தோன்றிற்று.

8. 7. அதன்பின் காசுமாலை யணிந்தவர்களும் அழகிய ஆடை யுடுத்தவர்களு மான அப்ஸர ஸ்திரீகள் உண்டானார்கள். பின்பு பகவானிடமே மனம் வைத்த ரமா தேவியான செல்வநாயகி எல்லோரும் காணும்படி தோன்றினாள்.

8. 19. கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர், சாரணர், தேவர் முதலிய வர்க்கங் களில் ஆராய்ந்தும், குற்றமற்றதாய், நிலைத்து நிற்பதாய், முறை பிறழாத நற்குணத்தின் நிலயமாய்த் தான் உகந்து வசிக்கத்தக்கதான இடத்தை (தனக்குரிய நாயகனை) அடைந்தாளில்லை,

नूनं तपो यस्य न मन्यु-निर्जयो ज्ञानं क्वचित् तच्च न संगवर्जितम् ।
कश्चिन्महां-स्तस्य न कामनिर्जयः स ईश्वरः किं परतोऽव्यपाश्रयः ॥ ८.२० ॥

धर्मः क्वचित् तत्र न भूतसौहृदं त्यागः क्वचित् तत्र न मुक्तिकारणम् ।
वीर्यं न पुंसोऽस्त्यजवेग-निष्कृतं न हि द्वितीयो गुणसंगवर्जितः ॥ ८.२१ ॥

क्वचि-च्चिरायु-र्नहि शीलमंगलं क्वचित्तदप्यस्ति न वेद्य-मायुषः ।
यत्रोभयं कुत्र च सोऽप्यमंगलः सुमंगलः कश्च न कांक्षते हि माम्॥ ८.२२ ॥

एवं विमृश्याव्यभिचारि-सद्गुणै-र्वरं निजैकाश्रयतया-गुणाश्रयम् ।
वव्रे वरं सर्वगुणै-रपेक्षितं रमा मुकुन्दं निरपेक्ष-मीप्सितम् ॥ ८.२३ ॥

---

8. 20. நிச்சயமாய் எவருக்குத் தவமிருக்கிறதோ அங்கு கோபம் ஜயிக்கப்படவில்லை; ஓரிடத்தில் ஞானமிருக்கிறது, ஆனால் அது பற்றற்றதாயில்லை; ஒருவர் பெருமை வாய்ந்தவராயிருக்கிறார், ஆனால் அவரிடம் காம ஜயமில்லை; (ஒருவன் ஈசுவரன் எனப்படுகிறான் ஆனால்) பிறரையாசிரயிக்கும் ஒருவன் ஈசுவரனாவது எங்ஙனம்?

8. 21. ஓரிடத்தில் தருமமிருக்கிறது, ஆனால் அங்கு பிராணிகளிடம் கருணையில்லை; ஓரிடத்தில் தியாகமிருக்கிறது, ஆனால் முக்திக்குப் பயன்படவில்லை; ஒரு புருஷனுக்கு வீரியமிருக்கிறது, ஆனால் அது கால வேகத்தால் அழிவு படாததாயில்லை; குணங்களில் பற்றையொழித்து நிர்மலமான ஒருவர் இருக்கலாம், ஆனால் அவர் என்னுடன் இரண்டாக இணைய மாட்டார்.

8. 22. சிலரிடத்தில் நீண்ட ஆயுள் உளது, ஆனால் (ஸ்திரீகளுக்குப் பிடிக்கும்) சீலமோ மங்களமோ இல்லை. சிலரிடத்தில் அது இருக்கலாம், ஆனால் அவர்களில் ஆயுள் நிலை அறியக் கூடியதாயில்லை. இவ்விரண்டும் எங்கு அதிசயமாய்ச் சேர்ந்துள்ளதோ அவர் அமங்கள வடிவினராயிருக்கிறார். ஸுமங்களமான ஒரே ஒருவர் இருக்கிறார்; அவர் (எதையும் வேண்டாதவர்) என்னை வேண்டவில்லை.

8. 23. இவ்விதம் ஆராய்ந்து லக்ஷ்மீதேவி மாறுபடாத நற்குணங்களிற் சிறந்தவரும், தனக்குத் தானே ஆசிரயமாகியவரும், பிரகிருதி குணங்களுக்கெட்டாதவரும், (அணிமாதி ஐசுவரிய) குணங்களால் சேவிக்கப் பெற்றவரும், எதிலும் அபேக்ஷையில்லாதவரும், ஆகிய முகுந்தனைத் தனக்குப் பிடித்தவராகவும் சிறந்தவராகவும் வரித்தாள்.

---

8. 19-20. துர்வாஸர் முதலியோரிடம் தவமிருந்தும் கோபஜயமில்லை; சுக்ரர் முதலியோரிடம் ஞானமிருந்தும் பற்று நீங்கவில்லை, ஸோமன் முதலியோரிடம் ஏற்றமிருந்தும் காம ஜயமில்லை; தேவர்களுக்கு அரசனாயினும் இந்திரன் மற்றவர்களை ஆசிரயிக்கிறான்; பரசுராமர் போன்றவர்களிடம் தர்மானுஷ்டான மிருந்தாலும் பூத தயை இல்லை; சிபி போன்றவர்களிடம் தியாகமிருந்தும் அது முக்திக்குக் காரணமாயில்லை; கார்த்த வீரியன் போன்றவர்களிடம் வீரிய மிருந்தாலும் அவர்களால் காலத்தை ஜயிக்க முடியவில்லை; ஸநகாதியர் குணப்பற்று நீங்கியவர்கள், ஆகையால் அவர்களுடன் இணைதல் இயலாது; மார்க்கண்டேயர் போன்றவர் சிரஞ்ஜீவிகளாயினும் சீல மங்களமில்லை; இந்த மாதிரி தோஷங்கள் ருத்ரரிடம் இல்லையாயினும் அவர் இடுகாட்டில் வசிப்பவர், எல்லா மங்களங்களும் நிறைந்தவர் ஒருவரே; அவர் வேண்டுதல் வேண்டாமையிலாதவ ராகையால் என்னை நாடவில்லை.

---

8. 21. त्यागः क्वचिद्यस्तु । 8. 23. निजैकाश्रयसद्गुणा ।

तस्याः श्रियस्त्रिजगतो जनको जनन्या वक्षो निवासमकरोत् परमं विभूतेः।
श्रीः स्वाः प्रजाः सकरुणेन निरीक्षणेन यत्र स्थितैधयत
साधिपतींस्त्रिलोकान् ॥ ८.२५ ॥

श्रिया विलोकिता देवाः सप्रजापतयः प्रजाः।
शीलादिगुण-संपन्ना लेभिरे निर्वृतिं पराम् ॥ ८.२८ ॥

निः सत्त्वा लोलुपा राजन् निरुद्योगा गतत्रपाः।
यदा चोपेक्षिता लक्ष्म्या बभूवु-र्दैत्य-दानवाः ॥ ८.२९ ॥

अथासीद् वारुणी-देवी कन्या कमललोचना।
असुरा जगृहु-स्तां वै हरेरनुमतेन ते ॥ ८.३० ॥

अथोदधे-र्मथ्यमानात् काश्यपै-रमृतार्थिभिः।
उदतिष्ठन्-महाराज पुरुषः परमाद्भुतः ॥ ८.३१ ॥

स वै भगवत-स्साक्षाद्विष्णोरंशांश-संभवः।
धन्वन्तरि-रिति ख्यात आयुर्वेद-दृगिज्यभाक् ॥ ८.३४ ॥

---

8. 25. மூவ்வுலகிற்கும் பிதாவாகிய பகவான் லோக மாதாவும் ஐசுவரியங்களின் உறைவிடமுமாகிய அந்த ஸ்ரீதேவிக்குத் தனது மார்பை வாசஸ்தானமாயளித்தார். ஸ்ரீதேவியானவள் அங்கிருந்துகொண்டு தனது பிரஜைகளையும் பிரஜா பாலகர்களையும் மூவ்வுலகங்களையும் கருணை நிறைந்த பார்வையால் வளரும்படி செய்தாள்.

8. 28. ஸ்ரீதேவியால் கடாக்ஷிக்கப் பெற்ற பிரஜைகளும் பிரஜா பாலகர்களும் தேவர்களும் சீலம் முதலிய லக்ஷணங்கள் பொருந்தியவர்களாய் பரமானந்த மெய்தினர்.

8. 29. அரசே! தைத்தியர்களும் தானவர்களும் லக்ஷ்மியால் எப்போது உபேக்ஷிக்கப்பட்டார்களோ அப்போது வலியிழந்தவர்களாகவும், சஞ்சல புத்தியுள்ள வர்களாகவும், முயற்சியற்றவர்களாகவும், வெட்கமற்றவர்களாகவும் ஆயினர்.

8. 30. பின்னர் (பாற்கடலினின்று) கமலம் போன்ற கண்களையுடைய கன்னிகையாகிய வாருணீ (மதியை மயக்கும் மது) தேவி தோன்றினுள் அவளை ஹரியின் அனுமதியுடன் அசுரர்கள் கிரகித்துக்கொண்டனர்.

8. 31. மஹாராஜனே! அமிருதத்திற்காக மேலும் கசியப குமாரர்களால் பாற்கடல் கடையப்பட்டபோது அதிலிருந்து பரமாச்சரிய வடிவுடன் ஒரு புருஷன் தோன்றினுன்.

8. 34. அப்புருஷன் பகவான் மகாவிஷ்ணுவின் அம்ச பாகமாய்த் தோன்றியவன். யஜ்ஞ பாகமும் ஆயுர்வேத ஞானமும் படைத்து தன்வந்தரி எனப் பெயர் பெற்றவன்.

---

8. 25. ஒ. (சகர்த்த யஸ்யா பவனம் புஜாந்தரம்
தவ ப்ரியம் தாம யதீய-ஜன்மபூ:।
ஜகத்ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்
யதர்த்த-மம்போதி-ரமந்த்யபந்தி ச ॥)

உம்முடைய திருமார்பை எவளுக்கு வாசஸ்தானமாக்கினீரோ, எவளுடைய பிறந்த வீடாகிய பாற்கடலை உமக்குப் பிரியமான வாசஸ்தான மாக்கிக் கொண்டீரோ, எவளுடைய கடைக்கண் பார்வையால் உலகனைத்தும் விளங்குகிறதோ, எவளுக்காகக் கடலைக் கடைந்தும் அதில் அணை கட்டியும் பாடுபட்டீரோ (அப்படிப்பட்டவள் ஸ்ரீதேவி). -ஸ்தோத்ரரத்னம்.

तमालोक्यासुराः सर्वे कलशं चामृताभृतम् ।
लिप्सन्तः सर्व-वस्तूनि कलशं तरसाहरन् ॥ ८.३५ ॥

नीयमानेऽसुरै-स्तस्मिन् कलशेऽमृत-भाजने ।
विषण्णमनसो देवा हरिं शरण-माययुः ॥ ८.३६ ॥

इति तद्दैन्य-मालोक्य भगवान् भृत्य-काम-कृत् ।
मा खिद्यत मिथोऽर्थं वः साधयिष्ये स्वमायया ॥ ८.३७ ॥

इत्युक्त्वा सान्त्वयन् देवांस्तत्रैवान्तर्दधे हरिः ॥
मिथः कलि-रभूत्तेषां तदर्थे तर्षचेतसाम् ।
अहं पूर्व-महं पूर्वं न त्वं न त्वमिति प्रभो ॥ ८.३८ ॥

एतस्मि-न्नन्तरे विष्णुः सर्वोपायवि-दीश्वरः ।
योषिद्रूप-मनिर्देश्यं दधार परमाद्भुतम् ॥ ८.४१ ॥

प्रेक्षणीयोत्पल-श्यामं सर्वावयव-सुन्दरम् ।
सव्रीड-स्मित-विक्षिप्त-भ्रूविलासावलोकनैः ॥
दैत्ययूथपचेतःसु काम-मुद्दीपयन् मुहुः ॥ ८.४६ ॥

---

8. 35. அந்த தன்வந்தரிதேவனையும் அமிருதம் நிறைந்த கலசத்தையும் அசுரர்களனைவரும் கண்ணுற்று எல்லா வஸ்துக்களையும் கவர ஆவல் கொண்டவர்களாய் விரைவில் கலசத்தை அபஹரித்துக் கொண்டனர்.

8. 36. அமிருதம் கொண்ட அந்தக் கலசம் அசுரர்களால் கவர்ந்து செல்லப்பட்டபோது மனமுடைந்த தேவர்கள் ஹரியைச் சரணடைந்தனர்.

8. 37. அடியார்களின் ஆசையைப் பூர்த்தி செய்விக்கும் பகவான் அவர்களுடைய பரிதாபத்தை நோக்கி, "அமிருதத்தைக் கருதி வருத்தப்படாதீர்கள்; எனது மாயையால் உங்களுக்கு அதைக் கூட்டி வைக்கிறேன்" என்று கூறி தேவர்களைத் தேற்றி அங்கேயே மறைந்தார்.

8. 38. அரசே! அப்போது அமிருதத்திற்காகப் பேராவல் கொண்ட அசுரர்களிடை கலகம் ஏற்பட்டது. "நான்தான் முதல், நான்தான் முதல், நீ யல்லை, நீ யல்லை" எனக் கூவினர்.

8. 41. இதற்கிடையில் உபாயமெல்லாமறிந்த ஸர்வேசுவரனை விஷ்ணு விளக்குதற்கரிய அத்யத்புதமான ஸ்திரீ ரூபத்தை எடுத்துக்கொண்டார்.

8. 46. அவ் வடிவம் நீலோத்பல சியாமள வர்ணமுடையதாய் எல்லா அவயவங்களும் அதிசுந்தரமாய்க் கண்ணைக் கவருவதாயிருந்தது. வெட்கத்துடன் குழைந்த புன்முறுவலும், புருவ நெளிப்புங் கூடிய அழகிய கண்வீச்சால் அசுரத் தலைவர்களின் சித்தத்தில் மேன்மேலும் காமத் தீயை வளர்ப்பதாக அது அமைந்தது.

अहो रूप-महो धाम अहो अस्या नवं वयः ।
इति ते तामभिद्रुत्य पप्रच्छु-र्जातहृच्छयाः ॥ ९.२ ॥

का त्वं कंजपलाशाक्षि कुतो वा किं चिकीर्षसि ।
कस्यासि वद वामोरु मथ्नन्तीव मनांसि नः ॥ ९.३ ॥

सा त्वं नः स्पर्धमानाना-मेकवस्तुनि मानिनि ।
ज्ञातीनां बद्धवैराणां संविधत्स्व सुमध्यमे ॥ ९.६ ॥

वयं कश्यप-दायादा भ्रातरः कृतपौरुषाः ।
विभजस्व यथा न्यायं नैव भेदो यथा भवेत् ॥ ९.७ ॥

श्री भगवानुवाच—

कथं कश्यपदायादाः पुंश्चल्यां मयि सङ्गताः ।
विश्वासं पण्डिता जातु कामिनीषु न यान्ति हि ॥ ९.९ ॥

श्रीशुक उवाच—

इति ते क्ष्वेलितै-स्तस्या आश्वस्त-मनसोऽसुराः ।
जहसु-र्भावगंभीरं ददुश्चामृत-भाजनम् ॥ ९.११ ॥

---

9. 2. 'இவளுடைய ரூபமும் ஆச்சரியம், காந்தியும் ஆச்சரியம், நவயௌவனமும் ஆச்சரியம்.' என்று கூறிக்கொண்டு அவர்கள் காம நோயால் வருந்தி அவளைத் தொடர்ந்து பின்வருமாறு கேட்டனர்.

9. 3. 'தாமரை யிதழ் போன்ற கண் படைத்தவளே! நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? என்ன செய்ய விரும்புகிறாய்? நீ யாருடையவள்? கூறுவாய் அழகிய துடையுடையவளே! எங்கள் மனதைக் கலக்கவந்தவள்போல் காண்கின்றாய்.

9. 6. அழகிய இடையுள்ளவளே! உயர்ந்த மனம் படைத்தவளே! இவ்வளவு மகிமை வாய்ந்த நீ ஒரே வஸ்துவில் பேராவல் கொண்டவர்களும் அதனால் விரோதங் கொண்டவர்களும் தாயாதிகளுமாகிய எங்களுக்கு நல்ல முறையில் பாகம் செய்விக்க வேண்டும்.

9. 7. நாங்கள் காசியபரிடம் தோன்றிய தாயாதிகள்; பௌருஷம் ஓங்கிநிற்கும் சகோதரர்கள்; எங்களிடம் வேற்றுமை வளராமலிருக்கும்வண்ணம் நியாயமாகப் பங்கிட வேண்டும்.

ஸ்ரீ பகவான் கூறியது—

9. 9. கசியப புத்திரர்களே! ஆண்கள் விஷயத்தில் ஸ்திரபுத்தியற்ற என்னிடம் நீங்கள் எங்ஙனம் பற்றுக் கொண்டீர்கள்? அறிவாளிகள் ஒருபோதும் காமினிகளிடம் நம்பிக்கை வைக்கமாட்டார்களே.

ஸ்ரீ சுகர் கூறியது—

9. 11. இங்ஙனம் அவளுடைய கர்வங்கொண்ட சொற்களால் சமாதானமடைந்த மனத்தினரான அவ் வசுரர்கள் எதோ அபிப்பிராயத்தைக் காட்டுவதுபோல் கம்பீரமாகச் சிரித்தார்கள். அமிருத கலசத்தையும் கொடுத்தார்கள்.

பா. பே.

---

9. 6. सा त्वं संस्पर्धे । सं विधत्स्व ।

ततो गृहीत्वामृत-भाजनं हरि-र्बभाष ईषत्-स्मित-शोभया गिरा ।
यद्यभ्युपेतं क्व च साध्वसाधु वा कृतं मया वो विभजे
सुधामिमाम् ॥ ९.१२ ॥

इत्यभिव्याहृतं तस्या आकर्ण्यासुरपुङ्गवाः ।
अप्रमाण-विद्-स्तस्यास्तत् तथेत्यन्वमंसत ॥ ९.१३ ॥

असुराणां सुधादानं सर्पाणामिव दुर्नयम् ।
मत्वा जातिनृशंसानां न तां व्यभज-दच्युतः ॥ ९.१९ ॥
कल्पयित्वा पृथक् पङ्क्ती-रुभयेषां जगत्पतिः ।
तांश्चोपवेशयामास स्वेषु स्वेषु च पङ्क्तिषु ॥ ९.२० ॥

दैत्यान् गृहीत-कलशो वंचयन्नुपसंचरैः ।
दूरस्थान् पाययामास जरामृत्युहरां सुधाम् ॥ ९.२१ ॥

ते पालयन्तः समय-मसुराः स्वकृतं नृप ।
तूष्णीमासन् कृतस्नेहाः स्त्रीविवाद-जुगुप्सया ॥ ९.२२ ॥

---

9. 12. அதன்மேல் அமிருத பாத்திரத்தை வாங்கிக்கொண்டு (மோகினியான) ஹரியானவர் புன்சிரிப்பால் அழகிய வார்த்தைகளால், "அசுரர்களே! நான் செய்வது எதுவாயினும், நல்லதோ கெட்டதோ, நீங்கள் ஒப்புக்கொள்வதானுல் இந்த அமிருதத்தைப் பங்கிடுகிறேன்" என்று கூறினுர்.

9. 13. இவ்வாறு அந்த மோகினியால் கூறப்பெற்றதை அசுர சிரேஷ்டர்கள் கேட்டு இன்னது செய்வதென்றறியாமல் அவளிடம் 'நீ சொன்னது எதுவோ அது அப்படியே' என்று ஒப்புக்கொண்டார்கள்.

9. 19. பிறவியிலேயே கொடியவர்களான அசுரர்களுக்கு அமிருதத்தைக் கொடுப்பது பாம்புகளுக்குப் பால் வார்ப்பதுபோல் அநியாயமாகுமென்று எண்ணி அச்சுதர் அவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கவில்லை.

9. 20. ஜகந்நாதன் இரு கட்சியினருக்கும் தனித்தனி வரிசை ஏற்படுத்தி, அவரவர் வரிசையில் அவர்களை உட்கார வைத்தார்.

9. 21. கையில் கலசத்தை ஏந்திய அவர் அசுரர்களை உபசார வார்த்தைகளால் வஞ்சித்து எட்டியிருந்தவர்களுக்கு (தேவர்களுக்கு) மூப்பையும் மரணத்தையும் தவிர்க்கும் அமுதத்தைப் பானம் செய்வித்தார்.

9. 22. அரசே! அசுரர்கள் தாங்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்தைக் காப்பாற்று பவர்களாய் ஸ்திரீயிடம் வைத்த சிநேகத்தால் சச்சரவு செய்ய விரும்பாமல் மௌனமாயிருந்தனர்.

---

9. 13. பகவானும் எடுத்த வேஷத்திற்கு ஏமாற்றுவது பொருத்தம் என்று தீர்மானித்தார்.

9. 19. கிஞ்ச தைர்யதா ந்யாயம் விபஜஸ்வேத்யுக்தம் ந ச ஏதேப்யோ ஜாத்யைவ க்ரூரேப்யோ தானம் ந்யாய்யம் அதஸ் தேப்ய: ஸுதாம் ந ததாமீதி ।

---

9. 22. तत्कृतं नृप । பா. பே.

तस्यां कृतातिप्रणयाः प्रणयापायकातराः ।
बहुमानेन चाबद्धा नोचुः किंचन विप्रियम् ॥ ९.२३ ॥

एवं सुरासुरगणाः समदेशकाल-
हेत्वर्थ-कर्म-मतयोऽपि फले विकल्पाः ।
तत्रामृतं सुरगणाः फलमंजसाऽऽपु-
र्यत्पादपंकजरजः-श्रयणात् न दैत्याः ॥ ९.२८ ॥

यद् युज्यतेऽसुवसु-कर्ममनो-वचोभि-
र्देहात्मजादिषु नृभिस्तदसत् पृथक्त्वात् ।
तैरेव सद्भवति यत् क्रियतेऽपृथक्त्वात्
सर्वस्य तद् भवति मूल-निषेचनं यत् ॥ ९.२९ ॥

इति दानव-दैतेया नाविन्दन्नमृतं नृप ।
युक्ताः कर्मणि यत्ताश्च वासुदेव-पराङ्मुखाः ॥ १०.१ ॥

साधयित्वामृतं राजन् पाययित्वा स्वकान् सुरान् ।
पश्यतां सर्वभूतानां ययौ गरुडवाहनः ॥ १०.२ ॥

---

9. 23. அவளிடம் அன்பின் மிகுதியாலும் அன்பு அழிவுறுமோ என்ற அச்சத்தாலும் மரியாதைக்குக் கட்டுப்பட்டும் பிரியமில்லாத வார்த்தை சிறிதும் பேசவில்லை.

9. 28. இங்ஙனம் தேவகணங்களும் அசுரகணங்களும் இடம், காலம், ஏவல், பொருள், செயல், அறிவு எல்லாவற்றிலும் சமமானவர்களாயிருந்தும் பயனில் வேறுபட்டனர். பகவானுடைய பாததூளியை ஆசிரயத்ததால் தேவர்கள் ஆங்கு அமுதத்தைப் பயனாக விரைவில் அடைந்தனர். அசுரர்கள் அடையவில்லை.

9. 29. உயிர், உடைமை, செயல், மனம், சொல் இவற்றால் உடலிலும் மக்களிடத்தும் பிறவிடத்தும் மனிதர்களால் எந்தக் கூட்டுறவு செய்யப்படுகிறதோ அது வேற்றுமையால் வீணாகிறது. அவற்றாலேயே எது (பகவானிடம்) வேரில் நீர் வார்ப்பதுபோல் வேற்றுமையின்றிச் செய்யப் படுகிறதோ அது அனைத்திற்குமாகிறது.

10. 1. அரசே! இங்ஙனம் தானவர்களும் தைத்தியர்களும் செயலில் கூடியவர்களாயினும் முயற்சியில் ஈடுபட்டவர்களாயினும் வாசுதேவரிடம் நோக்கமின்மையால் அமுதத்தை யடையவில்லை.

10. 2. அரசே! தன்னிடம் மனம்வைத்த தேவர்களுக்கு அமுதத்தைத் தேடித் தந்தும் பானம் செய்வித்தும் எல்லோரும் பார்த்திருக்கக் கருடவாகனரான பகவான் சென்று விட்டார்.

---

9. 28. வேத வேதாந்தங்களைப் புத்தி சக்தியால் கடைந்தாலும் பக்தியில்லா விட்டால் ஞானமிருதம் அனுபவத்துக்கு வராது.

பா. பே.

---

10. 1. कर्मणि दक्षाश्च ।

सपत्नानां परामृद्धिं दृष्ट्वा ते दितिनन्दनाः।
अमृष्यमाणा उत्पेतु-र्देवान् प्रत्युद्यतायुधाः　　॥ १०.३ ॥

तत्रान्योन्यं सपत्नास्ते संरब्धमनसो रणे।
समासाद्यासिभि-र्बाणै-र्निजघ्नु-र्विविधायुधैः　　॥ १०.६ ॥

अन्येऽप्येवं प्रतिद्वन्द्वान् वाय्वग्नि-वरुणादयः।
सूदयामासु-रक्षौघै-र्मृगान् केसरिणो यथा　　॥ ११.४२ ॥

ब्रह्मणा प्रेषितो देवान् देवर्षि-र्नारदो नृप।
वारयामास विबुधान् दृष्ट्वा दानव-संक्षयम्　　॥ ११.४३ ॥

तत्रावशिष्टावयवान् विद्यमान-शिरोधरान्।
उशना जीवयामास संजीविन्या स्वविद्यया　　॥ ११.४७ ॥

बलिश्चोशनसा स्पृष्टः प्रत्यापन्नेन्द्रिय-स्मृतिः।
पराजितोऽपि नाखिद्य-ल्लोकतत्त्व-विचक्षणः　　॥ ११.४८ ॥

वृषध्वजो निशम्येदं योषिद्रूपेण दानवान्।
मोहयित्वा सुरगणान् हरिः सोम-मपाययत्　　॥ १२.१ ॥

वृषमारुह्य गिरिशः सर्वभूतगणै-र्वृतः।
सह देव्या ययौ द्रष्टुं यत्रास्ते मधुसूदनः　　॥ १२.२ ॥

---

10. 3. திதியின் புத்திரர்களான அசுரர்கள் தங்கள் சத்துருக்களின் செழிப்பைக் கண்டு பொருமையால் ஆயுதபாணிகளாய் தேவர்களை எதிர்த்தார்கள்.

10. 6. அங்கு அவ் வெதிரிகள் யுத்தத்தில் ஆவேசங்கொண்டு கைகலந்து பாணங்களாலும் ஆயுதங்களாலும் அடித்துக்கொண்டனர்.

11. 42. இங்ஙனம் எதிர்த்து யுத்தம் செய்தவர்களை வாயு, அக்கினி, வருணன் முதலிய தேவர்களும் மிருகங்களைச் சிங்கம் எதிர்த்தாற்போல் அஸ்திரக் கூட்டங்களால் இம்சித்தனர்.

11. 43. அரசே! பிரம்மாவால் தேவர்களிடம் அனுப்பப்பட்ட தேவரிஷியான நாரதர் அசுரர்களின் அழிவைக் கண்ணுற்று தேவர்களை (போரினின்று) தடுத்தார்.

11. 47. தலையும் கழுத்தும் பிளவுண்டும் அங்கங்களுடன் எஞ்சியிருந்தவர்களை ஸஞ்சீவினி என்னும் தனது வித்தையால் சுக்ராசாரியார் பிழைப்பூட்டினர்.

11. 48. பலியும் சுக்ரரால் தொடப்பட்டு இந்திரிய சக்தியையும் ஞாபக சக்தியையும் மீண்டும் பெற்று, ஜயிக்கப்பட்டபோதிலும் உலகத்தின் தத்துவத்தை அறிந்தவனுதலால் வருந்தவில்லை.

12. 1-2. ஹரியானவர் ஸ்திரீ வடிவில் அசுரர்களை வஞ்சித்துத் தேவகணங்களுக்கு அமுதத்தைப் பானம் செய்வித்த இவ் வரலாற்றைக் கேட்டு மலையிலுறையும் பரமசிவன் விருஷபத்திலேறிப் பூதகணங்கள் சூழ உமாதேவியுடன் மதுஸூதனனிருக்குமிடத்திற்கு அவரைக் காண வந்தார்.

---

10. 3. परां सिद्धिं।　　10. 6. विविधायुधाः।
10. 47. तद्वा विनष्टावयवान्।　　பா. பே.

**श्रीमहादेव उवाच—**

अवतारा मया दृष्टा रममाणस्य ते गुणैः ।
सोऽहं तद् द्रष्टुमिच्छामि यत्ते योषिद्-वपु-र्धृतम् ॥ १२.१२ ॥

**श्रीभगवानुवाच—**

तत्तेऽहं दर्शयिष्यामि दिदृक्षोः सुरसत्तम ।
कामिनां बहुमन्तव्यं संकल्प-प्रभवोदयम् ॥ १२.१६ ॥

**श्रीशुक उवाच—**

इति ब्रुवाणो भगवां-स्तत्रैवान्तरधीयत ।
सर्वत-श्चारयं-श्चक्षु-र्भव आस्ते सहोमया ॥ १२.१७ ॥

ततो ददर्शोपवने वरस्त्रियं विचित्र-पुष्पारुण-पल्लवद्रुमे ।
विक्रीडतीं कन्दुकलीलयालसद्-दुकूलपर्यस्त-नितंब-मेखलाम् ॥ १२.१८ ॥

तां वीक्ष्य देव इति कन्दुकलीलयेषद्-
व्रीडास्फुट-स्मित-विसृष्ट-कटाक्ष-मुष्टः ।
स्त्री-प्रेक्षण-प्रतिसमीक्षण-विह्वलात्मा
नात्मान-मन्तिक उमां स्वगणांश्च वेद ॥ १२.२२ ॥

---

ஸ்ரீ மகாதேவன் கூறியது—

12. 12. குணங்களால் இன்புறும் உம்முடைய அவதாரங்கள் என்னால் பார்க்கப் பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட நான் எந்த ஸ்திரீ வடிவம் உம்மால் ஏற்கப்பட்டதோ அதைக் காண விரும்புகிறேன்.

ஸ்ரீ பகவான் கூறியது—

12. 16. தேவ சிரேஷ்டரே! காமிகள் போற்றத்தக்கதும் ஆசையை உண்டாக்கி வளர்ப்பதுமான அந்த வடிவத்தைக் காண விரும்பும் உமக்குக் காட்டுகிறேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

12. 17. இங்ஙனம் கூறிக்கொண்டே பகவான் அவ்விடத்திலேயே மறைந்தார். உமையுடன் கூடிய சிவன் எங்கும் பார்வையைச் செலுத்திக்கொண்டு நின்றார்.

12. 18. பின்னர் விசித்திரமான புஷ்பங்களும் சிவந்த தளிர்களும் நிறைந்த மரங்களுடன் கூடிய உபவனத்தில் இடுப்பில் மேகலையும் பட்டாடையும் பிரகாசிக்கப் பந்து விளையாடுவதில் களிக்கும் ஒரு சிறந்த ஸ்திரீயைக் கண்டார்.

12. 22. பந்து விளையாட்டினால் சற்று வெட்கியவள்போல் வெளிப்படாத புன் சிரிப்புடன் கூடிய அவளுடைய கடைக்கண் பார்வையால் ஏமாற்றப்பட்ட மகாதேவர் அவளைக் கண்ணுற்றுத் தான் பார்ப்பதாலும் தன்னை அவள் திருப்பிப் பார்ப்பதாலும் மனம் இளகியவராய்த் தன்னருகில் உமாதேவி யிருப்பதையும் தமது கணங்கள் இருப்பதையும்கூட உணரவில்லை.

---

12. 22. कटाक्ष-मुष्णः । பா. பே.

तयापहृत-विज्ञान-स्तत्कृत-स्मरविह्वलः ।
भवान्या अपि पश्यन्त्या गतह्री-स्तत्पदं ययौ ॥ १२.२५ ॥

सा तमायान्त-मालोक्य विवस्त्रा व्रीडिता भृशम् ।
निलीयमाना वृक्षेषु हसन्ती नान्वतिष्ठत ॥ १२.२६ ॥

तामन्वगच्छद् भगवान् भवः प्रमुषितेन्द्रियः ।
कामस्य च वशं नीतः करेणुमिव यूथपः ॥ १२.२७ ॥

सोऽनुव्रज्यातिवेगेन गृहीत्वानिच्छतीं स्त्रियम् ।
केशबन्ध उपानीय बाहुभ्यां परिषस्वजे ॥ १२.२८ ॥

स्कन्ने रेतसि सोऽपश्यदात्मानं विष्णुमायया ।
जडीकृतं नृपश्रेष्ठ संन्यवर्तत कश्मलात् ॥ १२.३५ ॥

अथावगत-माहात्म्य आत्मनो जगदात्मनः ।
अपरिज्ञेय-वीर्यस्य न मेने तदुहाद्भुतम् ॥ १२.३६ ॥

---

12. 25. அவளால் அறிவைப் பறிகொடுத்தவரும் அவளிடம் காதலால் கலங்கியவருமாகிய அவர் பவானி பார்த்துக்கொண்டிருக்கையிலேயே வெட்கமில்லாமல் அந்த ஸ்திரீயின் அருகாமையை அடைந்தார்.

12. 26. அவளும் அவர் அணுகுவதைப் பார்த்து மிகவும் வெட்கிப் புன்சிரிப்புடன் மரங்களிடை மறைந்துகொண்டு நில்லாமல் நின்றாள்.

12. 27. பகவான் ருத்திரர் காம வசமடைந்து அவளைப் பெண் யானையைச் சிறந்த ஆண் யானை பின் தொடர்வதுபோல் இந்திரியம் நழுவப் பின்தொடர்ந்தார்.

12. 28. அவர் அந்த ஸ்திரீயை வெகுவேகமாய் அணுகி அவள் கூந்தலைப் பற்றியிழுத்து விருப்பமில்லாதவள்போன்ற அவளைக் கைகளால் தழுவினார்.

12. 35. அரச சிரேஷ்டரே! வீரியம் நழுவியபின் அவர் விஷ்ணு மாயையால் ஜடனைப்போல் தான் ஆக்கப்பட்டதைக் கண்டார்; புத்திக் கலக்கத்திலின்று மீண்டார்.

12. 36. பிறகு அறியவொண்ணா வீரியமுடைவரும் உலகின் ஆத்மாவுமாகிய விஷ்ணுவின் மாஹாத்மியத்தைச் சிந்தித்துத் தன்னிடத்தில் நிகழ்ந்ததை அதிசயமாகக் கருதவில்லை.

---

12. 28. விஷ்ணுவிற்கு இரண்டு ரூபம்: ஸ்திரீ ரூபத்தில் பரமசிவனுடைய பத்னீ, புருஷ ரூபத்தில் லக்ஷ்மியின் பதி.

சாஸ்தா ஹரிஹர புத்ரன். ஹரியின் அழகும் ஹரனின் தவமும் ஒருங்கே அமையப் பெற்றவர். அப்பய்ய தீக்ஷிதர் சாதுர்யமாக சாஸ்தாவை வர்ணிக்கிறார். 'கௌரியை அம்மா என்று கூப்பிடலாம், லக்ஷ்மியை என்னவென்று கூப்பிடுவது' என்று அவர் யோசித்துக்கொண்டிருப்பதாய்க் கூறுகிறார்.

'அம்பேதி கௌரீ-ம[illegible]-மாஹ்வயாமி பத்ன்ய: பிதுர்-மாதர ஏவ ஸர்வா:।
கதந்நு லக்ஷ்மீ-மிதி சிந்தயந்தம் சாஸ்தார-மீடே ஸகலார்த்த-ஸித்த்யை ॥'

12. 25. तद्गतस्मरविह्वलः । 12. 35. जडीकृतो ।
12. 36. तदिहाद्भुतं । பா. பே.

तमविक्लब-मव्रीड-मालक्ष्य मधुसूदनः ।
उवाच परमप्रीतो बिभ्रत् स्वां पौरुषीं तनुम् ॥ १२.३७ ॥

श्रीभगवानुवाच—

को नु मेऽतितरेन्मायां विषक्त-स्त्वदृते पुमान् ।
तां-स्तान्विसृजतीं भावान् दुस्तरा-मकृतात्मभिः ॥ १२.३९ ॥

सेयं गुणमयी माया न त्वामभिभविष्यति ।
मया समेता कालेन कालरूपेण भागशः ॥ १२.४० ॥

श्रीशुक उवाच—

एवं भगवता राजन् श्रीवत्साङ्केन सत्कृतः ।
आमन्त्र्य तं परिक्रम्य सगणः स्वालयं ययौ ॥ १२.४१ ॥

आत्मांश-भूतां तां मायां भवानीं भगवान् भवः ।
शृण्वता-मृषिमुख्यानां प्रीत्याचष्टाथ भारत ॥ १२.४२ ॥

---

12. 37. கலக்கமும் வெட்கமும் நீங்கிய அவரை நோக்கி மதுஸூதனர் தனது புருஷ வடிவை எடுத்துக்கொண்டு மிகுந்த அன்புடன் பின்வருமாறு கூறினார்.

ஸ்ரீ பகவான் கூறியது—

12. 39. அறிவு திருந்தாதவர்களால் கடத்தற்கரியதும் அப்பப்போது புதிது புதிதான விருப்பங்களை உண்டாக்குவதும் ஆகிய எனது மாயையை உம்மைத்தவிர விஷயப் பற்றுக் கொண்ட எந்த புருஷன்தான் கடந்து செல்வான்?

12. 40. காலரூபியாகிய என்னுடன்கூடிக் காலத்தினால் குண விபாகமடைந்த வளும் குணமயமானவளுமாகிய இந்த மாயை உம்மை மீறமாட்டாள்.

ஸ்ரீ சுகர் கூறியது—

12. 41. அரசே! ஸ்ரீவத்ஸத்தை அடையாளமாய்க் கொண்ட பகவானால் இங்ஙனம் போற்றப்பட்ட பரமசிவன் அவரை வலம் வந்து விடைபெற்றுக்கொண்டு தன் கணங்களுடன் தமதிருப்பிடம் சென்றார்.

12. 42. பாரதா! ருத்ர பகவான் பரமபுருஷனுடைய அம்சமாயமைந்த அந்த மாயையைப் பற்றி ரிஷி சிரேஷ்டர்கள் கேட்டுக்கொண்டிருக்க பவானியிடம் அன்புடன் கூறலானார்.

---

12. 39. ஒ. இந்த முக்குண வடிவான என் மாயை தெய்வ சக்தி வாய்ந்தது; தாண்டு தற்கரியது. எவர்கள் என்னையே சரணடைகின்றார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள். —கீ. 1-47

अपि व्यपश्यस्त्व-मजस्य मायां परस्य पुंसः परदेवतायाः।
अहं कलाना-मृषभो विमुह्ये ययाऽवशोऽन्ये किमुतास्वतन्त्राः ॥ १२.४३ ॥

असदविषय-मङ्घ्रिं भावगम्यं प्रपन्ना-
नमृत-ममरवर्या-नाशयत् सिन्धुमथ्यम्।
कपटयुवति-वेषो मोहयन् यः सुरारीं-
स्तमह-मुपसृतानां कामपूरं नतोऽस्मि ॥ १२.४७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां
संहितायां पारमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीव-
ब्रह्मविद्यायां अष्टमस्कन्धे शंकरमोहनं नाम
द्वादशोऽध्यायः ॥

---

12. 43. 'பிறப்பற்றவனும் பரதெய்வமுமாகிய பரமபுருஷனுடைய மாயையை நீ பார்த்தாயா? ஸித்திகளில் வல்லவனுன நானே அம்மாயையால் என்னையுமறியாமல் மயங்கினேனல்லவா? சுதந்திரமற்ற பிறரைப் பற்றிக் கேட்கவேண்டுமா?'

12. 47. 'கெட்டவர்களுக்கு எட்டாததும். அன்புடன் நாடுவோர்க்கு எட்டுவது மான தமது திருவடியைச் சரணடைந்த தேவ சிரேஷ்டர்களுக்கு எவர் கடலைக் கடைந் தெடுத்த அமுதத்தை ஊட்டுவித்தாரோ, தேவ சத்துருக்களைக் கபடமான ஸ்திரீ வேஷத்தால் மயக்கினுரோ, எவர் தம்மை யணுகியவர்க்கு ஆசைகளையெல்லாம் பூர்த்தி செய்விப்பவரோ அவரை நான் தலை வணங்குகிறேன்.'

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸபுத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணுயிரம் சுலோ கங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை எனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் எட்டாவது ஸ்கந்தத்தில் சங்கர மோஹனம் எனும் பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றும். அமிருதமதனக் கதை முற்றும்.

**மூன்ருவது நாள் கதை முற்றும்**

---

12. 43. அயி-ஹே பார்வதி!। கலானும்-அணிமாதிஸித்தீனும்।
12. 47. அஸதா-மவிஷயம் பாவோ பஜனம்। ஆசயத்-அபோஜயத்।

---

12. 42. स्वात्मानुभूतां तां।
12. 43. अपि व्यपश्यःस्त्वमजस्य। பா. பே.

# ஸ்ரீமத் பாகவதஸாரம்

## நாலாவது நாள் கதை (8·13—10·6)

(வாமனாவதாரத்திலிருந்து பூதனா ஸம்ஹாரம் வரை)

# ॥ श्रीमद्भागवतसारः ॥

## ॥ मन्वन्तरवर्णनम् ॥ १७ ॥

श्रीशुक उवाच—

मनु-र्विवस्वतः पुत्रः श्राद्धदेव इति श्रुतः ।
सप्तमो वर्तमानो यस्तदपत्यानि मे शृणु ॥ १३.१ ॥

इक्ष्वाकु-र्नभगश्चैव धृष्टः शर्याति-रेव च ।
नरिष्यन्तोऽथ नाभागः सप्तमो दिष्ट उच्यते ॥ १३.२ ॥

करूषश्च पृषध्रश्च दशमो वसुमान् स्मृतः ।
मनो-र्वैवस्वतस्यैते दश पुत्राः परन्तप ॥ १३.३ ॥

आदित्या वसवो रुद्रा विश्वेदेवा मरुद्गणाः ।
अश्विनावृभवो राजन्निन्द्र-स्तेषां पुरन्दरः ॥ १३.४ ॥

---

# ஸ்ரீமத் பாகவதஸாரம்

நாலாவது நாள் கதை

## 17. மன்வந்தர வர்ணனை

ஸ்ரீ சுகர் கூறியது—

13. 1. இப்பொழுது இருப்பவராகிய ஏழாவது மனு சிராத்த தேவர் எனப் பிரசித்தி பெற்றவர். இவர் விவஸ்வானுடைய புத்திரர். அவருடைய மக்களைப்பற்றி என்னிடம் கேட்பாய்.

13. 2. அரசே! இக்ஷ்வாகு, நபகர், திருஷ்டர், சர்யாதி, நரிஷ்யந்தர், நாபாகர்; ஏழாவதாக திஷ்டர் கூறப்படுகிறார்.

13. 3. பின்னர் கருஷர், ப்ருஷத்ரர்; பத்தாவதாக வசுமான் கூறப்படுகிறார். இவர்கள் பத்துப்பேரும் வைவஸ்வத மனுவின் புத்திரர்கள்.

13. 4. அரசே! ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்ரர்கள், விச்வே தேவர்கள், மருத்துக்கள், அசுவனீ தேவர்கள், ரிபுக்கள் என்போர் தேவர்கள். அவர்களுடைய இந்திரன் புரந்தரன்.

---

ச்சாயா = விவஸ்வான் = ஸம்ஜ்ஞா

ச்சாயாவின் மக்கள்: ஸவர்ணன் | தபதி (பெண்) | சனி

ஸம்ஜ்ஞாவின் மக்கள்: யமன் | யமீ | ச்ராத்த தேவன்

कश्यपोऽत्रि-र्वसिष्ठश्च विश्वामित्रोऽथ गौतमः ।
जमदग्नि-र्भरद्वाज इति सप्तर्षयः स्मृताः ॥ १३.५ ॥

अत्रापि भगवज्जन्म कश्यपा-ददिते-रभूत् ।
आदित्याना-मवरजो विष्णु-र्वामन-रूपधृक् ॥ १३.६ ॥

मनवो मनुपुत्राश्च मुनयश्च महीपते ।
इन्द्राः सुरगणाश्चैव सर्वे पुरुषशासनाः ॥ १४.२ ॥

ज्ञानं चानुयुगं ब्रूते हरिः सिद्धस्वरूपधृक् ।
ऋषिरूपधरः कर्म-योगं योगेशरूपधृक् ॥ १४.८ ॥

सर्गं प्रजेशरूपेण दस्यून् हन्यात् स्वराड्-वपुः ।
कालरूपेण सर्वेषा-मभावाय पृथग्गुणः ॥ १४.९ ॥

---

13. 5. கசியபர், அத்ரி, வசிஷ்டர், விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்கினி, பரத்துவாஜர் என்போர் ஸப்த ரிஷிகளாகக் கூறப்படுகின்றனர்.

13. 6. இந்த மன்வந்தரத்தில் அதிதியிடம் கசியபருக்குப் புத்திரராக பகவானுடைய பிறப்பு ஏற்பட்டது. அதிதி புத்திரர்களில் கடைசியாகப் பிறந்தவர் வாமன வடிவங்கொண்ட விஷ்ணு.

14. 2. அரசே! மனுக்கள், மனுபுத்திரர்கள், முனிவர்கள், இந்திரர்கள், தேவ கணங்கள் எல்லோரும் புருஷோத்தமனுடைய கட்டளையை நிறைவேற்றுபவர்கள்.

14. 8. யுகந்தோறும் ஹரியானவர் ஸித்தரூபம் தரித்து ஞானத்தையும், ரிஷி ரூபந்தரித்து கருமத்தையும், யோகீச ரூபந்தரித்து யோகத்தையும் உபதேசிக்கிறார்.

14. 9. வெவ்வேறு குணங்களுடைய பகவான் பிரஜாபதி ரூபத்தில் சிருஷ்டி செய்கிறார்; அரச வடிவில் திருடர்களை வதைக்கிறார்; காலரூபத்தில் எல்லோருடைய அழிவுக்கும் காரணமாகிறார்.

---

13. 6. **ஏழாவது மன்வந்தரம்**—வைவஸ்வதர் (சிராத்த தேவர்) மனு; இக்ஷ்வாகு முதலியோர் மனு புத்திரர்கள்; ஆதித்தியர் முதலியோர் தேவர்கள்; புரந்தரன் தேவேந்திரன்; கச்யபர் முதலியோர் ரிஷிகள்; வாமனர் பகவானுடைய அவதாரம்.

14. 8. ரூபாந்தரைரபி ஜகத்யாத்ரா-ப்ரவர்த்தன-மாஹ। **ஸித்தேசா**:—ஸநகாதய: **ருஷய**:-யாஜ்ஞவல்க்யாதய:। **யோகேசா**:—தத்தாத்ரேயாதய:।

14. 9. **ப்ரஜேசா**:—மரீச்யாதய:। **ஸ்வராட்வபு**:—ராஜமூர்த்தி:। **ப்ருதக்விதா குணா**:—சீதோஷ்ணாதய:॥

---

14. 2. इन्द्रः । 14. 9. सर्गे ।
14. 8. हरेः सर्वस्वरूपधृक् பா. பே.

राजोवाच—

बलेः पदत्रयं भूमेः कस्माद्धरि-रयाचत।
भूतेश्वरः कृपणवल्लब्धार्थोऽपि बबन्ध तम् ॥ १५.१ ॥

एतद् वेदितु-मिच्छामो महत् कौतूहलं हि नः।
यज्ञेश्वरस्य पूर्णस्य बन्धनं चाप्यनागसः ॥ १५.२ ॥

श्रीशुक उवाच—

पराजित-श्रीरसुभिश्च हापितो हीन्द्रेण राजन् भृगुभिः स जीवितः।
सर्वात्मना तानभजद् भृगून् बलिः शिष्यो महात्मार्थ-निवेदनेन
॥ १५.३ ॥

अथारुह्य रथं दिव्यं भृगुदत्तं महारथः।
ययाविन्द्रपुरीं स्वृद्धां कंपयन्निव रोदसीम् ॥ १५.११ ॥

यां न व्रजन्त्यधर्मिष्ठाः खला भूतद्रुहः शठाः।
मानिनः कामिनो लुब्धा एभि-र्हीना विशन्ति यत् ॥ १५.२२ ॥

---

அரசன் கூறியது—

15. 1. உலக நாயகனுகிய ஹரி மூன்றடி பூமியைப் பலியிடமிருந்து எதற்காக அற்பனைப்போல் யாசித்தார்? கேட்டதைப் பெற்றபின் அவனை ஏன் கட்டினார்?

15. 2. யஜ்ஞேசுவரனும் பூர்ணனுமான பகவானுடைய இவ் வரலாற்றையும் குற்றமற்ற பலியின் பந்தனத்தையும் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறோம். அதில் எங்களுக்கு மிகுந்த ஆவல்.

ஸ்ரீ சுகர் கூறியது—

15. 3. அரசே! இந்திரனுல் தோற்கடிக்கப்பட்டு ஐசுவரியத்தை யிழந்தவனும் பிராணனையுங்கூட இழந்தவனும் பிருகு குலத்துக் குருமார்களால் பிழைப்பூட்டப்பட்ட வனுமான மகாத்மாவான பலி சிஷ்ய பாவத்துடன் தனது நோக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு எல்லா வகையிலும் அந்த பிருகு குலத்துக் குருமார்களே கதியென் றடைந்தான்.

15. 11. பின்னர் பிருகு குலத்தவரால் தனக்கு அளிக்கப்பட்ட தெய்வீகத் தேரில் ஏறிக்கொண்டு மஹாரதனுன பலி பூமியையும் ஆகாயததையும் நடுங்கச் செய்து கொண்டு இந்திரனுடைய தலைநகர் சென்றுன்.

15. 22. அதர்மிஷ்டர்களும், துஷ்டர்களும், பிராணிகளுக்குத் துரோகம் செய்பவர்களும், வஞ்சகர்களும், கர்வங்கொண்டவர்களும், காமிகளும், லோபிகளும் அங்கு (இந்திரன் தலைநகராகிய அமராவதிக்கு) செல்ல இயலாது. இப்படி இல்லா தவர்கள்தான் அங்கு செல்ல இயலும்.

---

15. 22. न यां व्रजन्त्यधर्मिष्ठा भूतधर्म-द्रुहश्शठाः।
मानिनः कामिनो लुब्धास्त्वद्भिर्हीना व्रजंति याम् ॥

तां देवधानीं स वरूथिनीपति-र्बहिस्समन्ताद् रुरुधे पृतन्यया ।
आचार्यदत्तं जलजं महास्वनं दध्मौ प्रयुंजन् भयमिन्द्रयोषिताम्
॥ १५.२३ ॥

हित्वा त्रिविष्टपं जग्मु-र्गीर्वाणाः कामरूपिणः ।
देवेष्वथ निलीनेषु बलि-र्वैरोचनः पुरीम् ॥
देवधानी-मधिष्ठाय वशं निन्ये जगत्त्रयम् ॥ १५.३३ ॥

बुभुजे च श्रियं स्वृद्धां द्विजदेवोपलंभिताम् ।
कृतकृत्यमिवात्मानं मन्यमानो महामनाः ॥ १५.३६ ॥

एवं पुत्रेषु नष्टेषु देवमातादितिस्तदा ।
हृते त्रिविष्टपे दैत्यैः पर्यतप्य-दनाथवत् ॥ १६.१ ॥

एकदा कश्यप-स्तस्या आश्रमं भगवानगात् ।
निरुत्सवं निरानन्दं समाधे-र्विरत-श्चिरात् ॥ १६.२ ॥

स पत्नीं दीनवदनां कृतासनपरिग्रहः ।
सभाजितो यथान्याय-मिदमाह कुरूद्वह ॥ १६.३ ॥

---

15. 23. அந்த தேவ ராஜதானியைச் சேனாநாயகனாகிய பலி வெளியே எல்லாப் பக்கத்திலும் சேனா பலத்தைக்கொண்டு முற்றுகை யிட்டான். இந்திரனுடைய ஸ்திரீகளுக்குப் பயத்தை விளைத்துக்கொண்டு அவன் ஆசாரியன் கொடுத்ததும் பயங்கரமான சப்தம் செய்வதுமான சங்கத்தை ஊதினான்.

15. 33. அப்போது விரும்பிய வடிவெடுக்கும் சக்திவாய்ந்த தேவர்கள் ஸ்வர்க்கத்தை விட்டு வெளியேறினார்கள். தேவர்கள் மறைந்தபின் விரோசன புத்திரனாகிய பலி அந்த தேவ ராஜதானியாகிய அமராவதியிலமர்ந்துகொண்டு மூவுலகையும் தன் வசமாக்கிக்கொண்டான்.

15. 36. பிராம்மண சிரேஷ்டர்களால் கூட்டுவிக்கப் பெற்றதும் எல்லாச் செல்வத்துடனும் கூடியதுமான அந்த ஸாம்ராஜ்ய ஸம்பத்தை விசாலமான மனதுடைய பலி தன்னைக் கிருதார்த்தனாக எண்ணி அனுபவித்து வந்தான்.

16. 1. இங்ஙனம் தைத்தியர்களால் தேவலோகம் அபகரிக்கப்பட்டுத் தனது மக்கள் குறைவடைந்தபோது தேவர்களின் தாயாகிய அதிதி நாதனற்றவளைப்போல் பரிதவித்தாள்.

16. 2. அப்போது ஒரு சமயம் பகவான் கசியபர் நீண்டகால ஸமாதி கலைந்து அவளுடைய ஆசிரமத்திற்கு வந்தார். அது ஆராதனைகளின்றியும் ஆனந்தமின்றியும் காணப்பட்டது.

16. 3. குரு சிரேஷ்டரே! அவர் முறைப்படி பூஜிக்கப் பெற்று ஆஸனத்திலமர்ந்து முகம் வாடியிருந்த பத்தினியைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்.

---

15. 36. श्रियं शुद्धां । பா. பே.

16. 1. நஷ்டேஷு அத்ருஷ்டேஷு ஸத்ஸு ।

अप्यग्नयस्तु वेलायां न हुता हविषा सति।
त्वयोद्विग्नधिया भद्रे प्रोषिते मयि कर्हिचित् ॥ १६.८ ॥

अपि सर्वे कुशलिनस्तव पुत्रा मनस्विनि।
लक्षयेऽस्वस्थमात्मानं भवत्या लक्षणैरहम् ॥ १६.१० ॥

अदितिरुवाच—

अग्नयोऽतिथयो भृत्या भिक्षवो ये च लिप्सवः।
सर्वं भगवतो ब्रह्मन्ननुध्यानान्न रिष्यति ॥ १६.१२ ॥

तवैव मारीच मनः-शरीरजाः प्रजा इमाः सत्वरजस्तमोजुषः।
समो भवां-स्तास्वसुरादिषु प्रभो तथापि भक्तं
भजते महेश्वरः ॥ १६.१४ ॥

तस्मादीश भजन्त्या मे श्रेयश्चिन्तय सुव्रत।
हृतश्रियो हृतस्थानान् सपत्नैः पाहि नः प्रजाः ॥ १६.१५ ॥

यथा तानि पुनः साधो प्रपद्येरन् ममात्मजाः।
तथा विधेहि कल्याणं धिया कल्याणकृत्तम ॥ १६.१७ ॥

---

16. 8. "பதிவிரதையே! மங்கள ஸ்வரூபியே! நான் வெளிச் சென்றிருந்தபோது எப்போதாவது நீ மனவருத்தத்தினுல் உரிய வேளைகளில் அக்கினிகளை ஹவிஸ்ஸினுல் ஹோமம் செய்து பூஜிக்காமலிருந்துவிட்டாயா?

16. 10. "நல்ல மனமுடையவளே! உனது புத்திரர்கள் எல்லோரும் க்ஷேமமா? உனது குறிகளால் உனது மனோநிலை கலங்கி யிருப்பதாய் நான் காண்கிறேன்."

அதிதி கூறியது—

16. 12. பிரம்ம ஸ்வரூபியே! அக்கினிகளும், அதிதிகளும், பணியாட்களும் துறவிகளும் மற்றபடி உதவி நாடுவோரும் எல்லாம் உமது தியானத்தால் (இங்கு பெறும் ஆதரவிற்கு) குறைவில்லை.

16. 14. மரீசி புத்திரரே! ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்ற வெவ்வேறு குணங்களுடன் கூடிய இம் மக்கள் உம்முடைய மனத்தினின்றும் சரீரத்தினின்றும் தோன்றியவர்கள். பிரபுவே! தாங்கள் அவர்களிடமும் அசுரர்களிடமும் ஸமமானவர். எனினும் மகேசுவரன் பக்தரை ஆதரிக்கிறுர்.

16. 15. ஈசனே! விரதங்களிற் சிறந்தவரே! ஆகையால் உம்மிடம் பக்தி செய்யும் எனக்கு உயர்நலத்தை எண்ணி யருளவேண்டும். ஸம்பத்தும் இருப்பிடமும் எதிரிகளால் அபகரிக்கப்பட்ட நமது மக்களைக் காத்தருளவேண்டும்.

16. 17. மங்களங்களைச் செய்வதில் சிறந்த ஸாதுவே! எனது புதல்வர்கள் (இழந்த) அவற்றை மீண்டும் எங்ஙனம் எய்துவரோ அங்ஙனம் யோசித்து நன்மையைக் கூட்டிவைக்கவேண்டும்.

---

16. 10. पुत्रायशस्विनि।
16 14. तवैव हे देव मनः शरीरजा इमाः प्रजास्सत्वरजस्तमोजुषः।
समो भवांस्तासु सुरादिषु प्रभो तथापि भक्तं भजते महेश्वरः॥ பா. பே.

कश्यप उवाच—

उपतिष्ठस्व पुरुषं भगवन्तं जनार्दनम् ।
सर्वभूतगुहावासं वासुदेवं जगद्गुरुम् ॥ १६.२० ॥

स विधास्यति ते कामान् हरि-र्दीनानुकंपनः ।
अमोघा भगवद्भक्ति-र्नेतरेति मतिर्मम ॥ १६.२१ ॥

फाल्गुनस्यामले पक्षे द्वादशाहं पयोव्रतः ।
अर्चयेदरविन्दाक्षं भक्त्या परमयान्वितः ॥ १६.२५ ॥

नमस्तुभ्यं भगवते पुरुषाय महीयसे ।
सर्व-भूतनिवासाय वासुदेवाय साक्षिणे ॥ १६.२९ ॥

नमो द्विशीर्ष्णे त्रिपदे चतुः-शृंगाय तन्तवे ।
सप्तहस्ताय यज्ञाय त्रयीविद्यात्मने नमः ॥ १६.३१ ॥

---

கசியபர் கூறியது—

16. 20. பகவானும் பரமபுருஷனும், எல்லோருடைய இருதயத்திலும் வசிப்பவனும், வாசுதேவனும் ஜகத்குருவுமான ஜனார்த்தனனை ஆராதிப்பாய்.

16. 21. தீனர்களுக்கிரங்கும் அந்த ஹரியானவர் உனது ஆசைகளைப் பூர்த்தி செய்விப்பார். பகவானிடம் செய்யும் பக்தி வீண் போகாது. மற்ற எதுவும் அம்மாதிரி ஆகாது என எனது தீர்மானம்.

16. 25. பங்குனி மாதம் சுக்லபக்ஷத்தில் பன்னிரண்டு நாள் பயோ விரதமிருந்து அரவிந்தாக்ஷனைப் பரமபக்தியுடன் கூடப் பூஜிப்பாய். (அவனைப் பின்வருமாறு துதித்துப் போற்றவேண்டும்.)

16, 29. 'மகிமைமிக்க புருஷனும், உண்டாயவற்றிலெல்லாம் உறைபவனும், வாஸுதேவனும், ஸாக்ஷியும் பகவானுமாகிய உமக்கு நமஸ்காரம்.

16. 31. 'இரண்டு தலைகளும், மூன்று பாதங்களும், நான்கு கொம்புகளும், ஏழு கைகளும் உடையவரும், யஜ்ஞ ஸ்வரூபியும், கர்மபலனைப் பெருக்கியளிப்பவரும், வேதங்களை உயிராய்க் கொண்டவருமாகிய உமக்கு நமஸ்காரம்.

---

16. 31. ஓ. சத்வாரி ச்ருங்காஸ்-த்ரயோ அஸ்ய பாதா :
த்வே சீர்ஷே ஸப்த ஹஸ்தாஸோ அஸ்ய ।
த்ரிதா பத்தோ வ்ருஷபோ ரோரவீதி
மஹோதேவோ மர்த்யான் ஆவிவேச ॥ —தை. ஆ.

ஆதௌ மந்த்ரோக்த-யஜ்ஞ ரூபேண விஷ்ணோ: ப்ரணம: । தந்தவே-பல விஸ்தாரகாய । த்ரய்யாம் வித்யாயாம் ஆத்மா யஸ்யேதி த்ரிதா பத்த இதயஸ்யார்த்த உக்த: ॥ —ஸ்ரீ

சத்வாரிச்ருங்கேதி வேதா ஏவ உக்தா: । த்ரயோ அஸ்ய பாதா இதி ஸவனானி த்ரீணி; த்வே சீர்ஷே ப்ராயணீயோதயனீயே; ஸப்த ஹஸ்தாஸ: ஸப்தச் சந்தாம்ஸி; த்ரிதா பத்தோ மந்த்ர-ப்ராஹ்மண-கல்பை:; வ்ருஷபோ ரோரவீதி ரோரவணம் அஸ்ய ஸவன-க்ரமணே ருக்பி: யஜுர்ப்பி: ஸாமபி: யதேனம் ருக்பி: சம்ஸந்தி, யஜுர்ப்பிர்-யஜந்தி ; ஸாமபி: ஸ்துவந்தீதி ॥ —யாஸ்காசாரியர்.

பா. பே.

16. 21. कंपकः । भगवत्सेवा ।

नमः शिवाय रुद्राय नमः शक्तिधराय च ।
सर्व-विद्याधिपतये भूतानां पतये नमः　　॥ १६.३२ ॥

नमो हिरण्यगर्भाय प्राणाय जगदात्मने ।
योगैश्वर्य-शरीराय नमस्ते योगहेतवे　　॥ १६.३३ ॥

नमस्ते आदिदेवाय साक्षिभूताय ते नमः ।
नारायणाय ऋषये नराय हरये नमः　　॥ १६.३४ ॥

एतै-र्मन्त्रै-र्हृषीकेश-मावाहन-पुरस्कृतम् ।
अर्चयेच्छ्रद्धया युक्तः पाद्योपस्पर्शनादिभिः　　॥ १६.३८ ॥

पयसा स्नापयित्वार्चेद् यावद्व्रत-समापनम् ।
पयोभक्षो व्रत-मिदं चरे-द्विष्णवर्चनादृतः　　॥ १६.४६ ॥

एवं त्वहरहः कुर्याद् द्वादशाहं पयोव्रतः ।
हरेराराधनं होम-मर्हणं द्विजतर्पणम्　　॥ १६.४७ ॥

प्रतिपद्दिन-मारभ्य यावच्छुक्लत्रयोदशी ।
ब्रह्मचर्य-मधः स्वप्नं स्नानं त्रिषवणं चरेत्　　॥ १६.४८ ॥

---

16. 32. 'சிவ ஸ்வரூபியும் ருத்ர ஸ்வரூபியுமான உமக்கு நமஸ்காரம். சக்தியைத் தரிக்கும் உமக்கு நமஸ்காரம். வித்தைகளுக்கெல்லாம் அதிபதியும் பூதங்களுக் கெல்லாம் பதியுமாகிய உமக்கு நமஸ்காரம்.

16. 33. 'ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபியும் உலகிற்குயிராகிய பிராண ஸ்வரூபியும், யோகைசுவரியத்தையே உடலாய்க் கொண்டவரும், யோகத்திற்குக் காரணமூர்த்தியு மாகிய உமக்கு நமஸ்காரம்.

16. 34. 'ஆதிதேவனாகிய உமக்கு நமஸ்காரம். ஸாக்ஷியாய் விளங்கும் உமக்கு நமஸ்காரம். நாராயணனும், ரிஷியும், நரனும் ஹரியுமாகிய உமக்கு நமஸ்காரம்.'

16. 38. ஆவாகனத்தால் எழுந்தருளச் செய்யப் பெற்ற ஹ்ருஷீகேசனைச் சிரத்தையுடன் பாத்தியம் ஸ்நானம் முதலிய உபசாரங்களால் ஆராதிக்கவேண்டும்.

16. 46. பாலினால் ஸ்நானம் செய்வித்துப் பின் அர்ச்சிக்கவேண்டும். விரதம் முடியும்வரை பாலை மட்டும் ஆகாரமாய்க்கொண்டு விஷ்ணுவை ஆராதிப்பதில் ஆர்வத் துடன் இந்த விரதத்தைக் கைக்கொள்ளவேண்டும்.

16. 47-48. இவ்வாறு தினந்தோறும் பன்னிரண்டு நாள் ஹரியின் பூஜை, ஹோமம், வந்தனம், பிராம்மணர்களை (போஜனம், தானம் முதலியவற்றால்) திருப்தி செய்வித்தல் முதலியவற்றுடன் 'பயோ விரதம்' எனும் இதைச் சுக்லபக்ஷப் பிரதமையில் ஆரம்பித்துத் திரயோதசி வரை அனுஷ்டிக்கவேண்டும்.

---

16. 47. **பயோவ்ரத:**—பயோ-**பக்ஷ**-வ்ரத:। பய ஏவ பக்ஷ: ஆஹார:।

---

16. 33. **देवाय जगदात्मने ।**
16. 34. **नमस्त आदिदेवाय देवदेवाय ते नमः ।**　　பா. பே.

दक्षिणां गुरवे दद्यादृत्विग्भ्यश्च यथार्हतः ।
अन्नाद्येनाश्वपाकांश्च प्रीणयेत् समुपागतान् ॥ १६.५५ ॥

भुक्तवत्सु च सर्वेषु दीनान्धकृपणेषु च ।
विष्णोस्तत्प्रीणनं विद्वान् भुंजीत सह बन्धुभिः ॥ १६.५६ ॥

एतत् पयोव्रतं नाम पुरुषाराधनं परम् ।
पितामहेनाभिहितं मया ते समुदाहृतम् ॥ १६.५८ ॥

तस्मादेतद्व्रतं भद्रे प्रयता श्रद्धया चर ।
भगवान् परितुष्टस्ते वरानाशु विधास्यति ॥ १६.६२ ॥

श्रीशुक उवाच—

इत्युक्ता साऽऽदिती राजन् स्वभर्त्रा कश्यपेन वै ।
अन्वतिष्ठद् व्रतमिदं द्वादशाह-मतन्द्रिता ॥ १७.१ ॥

मनश्चैकाग्रया बुद्ध्या भगवत्यखिलात्मनि ।
वासुदेवे समाधाय चचार ह पयोव्रतम् ॥ १७.३ ॥

---

16. 55-56. குருவுக்கும் ரித்விக்குகளுக்கும் தக்க முறையில் தக்ஷிணை கொடுக்க வேண்டும். இழி குலத்தோர் உள்பட வந்திருக்கும் எல்லோரையும் அன்னதானம் முதலியவற்றால் திருப்தி செய்விக்கவேண்டும். ஏழை, குருடர், எளியோர் ஆகிய எல்லோரும் போஜனம் செய்தபின் அறிவாளியாகிய யஜமானன் பந்துக்களுடன் புசிக்க வேண்டும். அதுவே விஷ்ணுவைப் பிரீதி செய்வதாகும்.

16. 58. பயோ விரதம் எனப் பெயர் பெற்ற இந்தச் சிறந்த பரமபுருஷனுடைய ஆராதனம் பிரம்ம தேவரால் (எனக்கு) உபதேசிக்கப்பட்டது. (அது) என்னால் உனக்கு எடுத்துக் கூறப்பட்டது.

16. 62. ஆகையால், மங்கள வடிவினளே! தூய்மையுடனும் சிரத்தையுடனும் இதை அனுஷ்டிப்பாயாக. (அதனால்) பகவான் பிரீதியடைந்து உனது சிறந்த விருப்பங்களை விரைவில் பூர்த்தி செய்விப்பார்.

ஸ்ரீ சுகர் கூறியது—

17. 1. அரசே! தனது பர்த்தாவாகிய கசியபரால் இங்ஙனம் உபதேசிக்கப் பெற்ற அந்த அதிதிதேவியானவள் பன்னிரண்டு நாள் சோம்பலின்றி இந்த விரதத்தை அனுஷ்டித்தாள்.

17. 3. ஏகாக்ர புத்தியால் ஸர்வஸ்வரூபியும் பகவானுமான வாசுதேவனிடம் மனதை நிலைநிறுத்திப் பயோ விரதத்தை யனுஷ்டித்தாள்.

तस्याः प्रादुरभूत्तात भगवानादिपूरुषः।
पीतवासा-श्चतुर्बाहुः शंखचक्र-गदाधरः　　　　॥ १७.४ ॥

प्रीत्या शनै-र्गद्गदया गिरा हरिं तुष्टाव सा देव्यदितिः कुरूद्वह।
उद्वीक्षती सा पिबतीव चक्षुषा रमापतिं यज्ञपतिं जगत्पतिम्　　　　॥ १७.७ ॥

अदिति-रुवाच—
यज्ञेश यज्ञपुरुषाच्युत तीर्थपाद तीर्थश्रवः श्रवणमंगलनामधेय।
आपन्न-लोक-वृजिनोपशमोदयाद्य शं नः कृधीश भगवन्नसि
दीननाथः　　　　॥ १७.८ ॥

श्रीभगवानुवाच—
त्वयार्चित-श्चाह-मपत्यगुप्तये पयोव्रतेनानुगुणं समीरितः।
स्वांशेन पुत्रत्व-मुपेत्य ते सुतान् गोप्तास्मि मारीच-तपस्यधिष्ठितः　　　　॥ १७.१८ ॥

नैतत् परस्मा आख्येयं पृष्टयापि कथंचन।
सर्वं संपद्यते देवि देवगुह्यं सुसंवृतम्　　　　॥ १७.२० ॥

---

17. 4. ஐயனே! ஆதிபுருஷனாகிய பகவான் சங்கமும் சக்கரமும் கதையும் ஏந்தி நான்கு கைகளுடனும் மஞ்சட் பட்டாடையுடனும் அவள் முன் காட்சியளித்தார்.

17. 7. குரு சிரேஷ்டா! லக்ஷ்மீபதியும், யஜ்ஞபதியும் ஜகத்பதியுமான ஹரியைக் கண்களால் பருகுபவள்போல் ஆவலுடன் உற்று நோக்கி அந்த அதிதிதேவியானவள் பிரீதியுடன் தழுதழுத்த வார்த்தைகளால் மெதுவாகத் துதிக்கலானாள்.

அதிதி கூறியது—

17. 8. யஜ்ஞேசா! யஜ்ஞபுருஷா! அச்சுதா! திருவடியாலும் கீர்த்தியாலும் (அனைத்தையும்) புனிதமாக்குபவனே! கேட்போருக்கு எல்லா நலனையுமளிக்கும் பேர் கொண்டவனே! சரணடைந்த உலகின் பாவத்தைப் போக்குவதற்காகத் தோன்று பவனே! நீ எளியோரை ரக்ஷிப்பவனாதலால், பகவானே! ஈசா! எங்களுக்கு உயர் நலனை அருள்வாய்.

ஸ்ரீ பகவான் கூறியது—

17. 18. மக்களை ரக்ஷிப்பதற்காக உன்னால் பயோ விரதத்தின்மூலம் நான் பூஜிக்கப்பட்டேன். குணத்துக்கிசைந்த வகையில் வசமாகிய நான் எனது அம்சத்தினால் கசியபருடைய தவத்தில் அதிஷ்டானத்தை யடைந்து புத்திரனாயவதரித்து உனது மக்களை ரக்ஷிக்கிறேன்.

17. 20. தேவி! வினவப்பட்டாலும் இதை ஒருபோதும் வேறு எவருக்கும் சொல்லக்கூடாது. தேவரகசியம் நன்கு மறைத்துவைக்கப்பட்டால் எல்லாம் ஸித்திக்கும்.

---

17. 8. **தீர்த்தச்ரவ:**—தீர்த்தம் ச்ரவ: கீர்த்திர் யஸ்ய।

---

17. 18. **पयोव्रतेनानुगुणं समीडितः।**
17. 20. **आख्येयं देवगुह्यं कथंचन।**　　　　பா. பே.

श्रीशुक उवाच—

दिशः प्रसेदुः सलिलाशय-स्तदा प्रजाः प्रहृष्टा ऋतवो गुणान्विताः ।
द्यौ-रन्तरिक्षं क्षितिरग्नि-जिह्वा गावो द्विजाः संजहृषु-र्नगाश्च ॥ १८.४ ॥

श्रोणायां श्रवणद्वादश्यां मुहूर्तेऽभिजिति प्रभुः ।
सर्वे नक्षत्र-ताराद्या-श्चक्रु-स्तज्जन्म दक्षिणम् ॥ १८.५ ॥

द्वादश्यां सविता तिष्ठन्मध्यंदिनगतो नृप ।
विजया नाम सा प्रोक्ता यस्यां जन्म विदु-र्हरेः ॥ १८.६ ॥

दृष्ट्वादितिस्तं निजगर्भ-संभवं परं पुमांसं मुदमाप विस्मिता ।
गृहीतदेहं निजयोगमायया प्रजापतिश्चाह जयेति विस्मितः ॥ १८.११ ॥

यत्तद् वपु-र्भाति विभूषणायुधै-रव्यक्तचिद् व्यक्तमधारयद्धरिः ।
बभूव तेनैव स वामनो वटुः संपश्यतो-र्दिव्यगति-र्यथा नटः ॥ १८.१२ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 4. (பகவானுடைய அவதார காலம் ஸமீபித்தது) அப்போது திசைகள் நிர்மல மாயின; நீர் நிலைகள் தெளிந்தன; மக்கள் (தங்களையறியாமல்) மகிழ்ச்சியுற்றனர்; ருதுக்கள் உரிய குணபூர்த்தி உடையவையாயின; வானுலகும் அந்தரிக்ஷமும், பூமியும் மலைகளும், பசுக்களும் மகிழ்வுற்றன; தேவர்களும் வேதியர்களும் மகிழ்ந்தனர்.

18. 5. ஆவணி மாதம் (சுக்லபக்ஷ) சிரவண நக்ஷத்திரம் கூடிய துவாதசியில் அபிஜித் முகூர்த்தத்தில் பகவான் அவதரித்தார். நக்ஷத்திரங்கள் கிரகங்கள் முதலியவை அவருடைய ஜனன காலத்தை உயர்வாய்ச் செய்தன.

18, 6. பகலில் சூரியன் உச்சியிலிருக்க எந்த துவாதசியில் ஹரியின் அவதாரம் ஏற்பட்டதாய் உணர்ந்தனரோ அது 'விஜயா' எனப் பெயர் பெற்றதாய்க் கூறப்படும்.

18. 11. அதிதிதேவி தன் கர்ப்பத்தில் தோன்றியவனும் தனது யோகமாயையால் சரீரமெடுத்தவனுமான அந்தப் பரம புருஷனைப்பார்த்து ஆச்சரியமும் ஸந்தோஷமும் அடைந்தாள். கசியபப்பிரஜாபதியும் ஆச்சரியம் மிக்கவராய் ஜயகோஷம் செய்தார்.

18. 12. வெளிப்படையாகக் காணும்படி காந்தியுடனும் ஆபரணங்களுடனும் ஆயுதங்களுடனும் எந்த வடிவைத் தோற்றுவித்தாரோ அதைத் தாய் தந்தையர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அற்புத லீலை புரியும் அவர் ஒரு நடிகனைப்போல் (உருமாறிக் குட்டையான) வாமனப் பிரம்மசாரியாக விளங்கினார்.

---

18. 4. **அக்னிஜிஹ்வா:**—தேவா:। நகா: - பர்வதா:।

18. 5. **சக்ருஸ் தஜ்ஜன்ம-தக்ஷிணம்**—ஜன்ம முஹூர்த்தே குண பஹவோ பபூவு-ரித்யர்த்த:।

ஒரு ஜீவனுடைய பிறப்பு ஒரு வீட்டில் விளக்கேற்றுவதுபோல; பகவானுடைய அவதாரம் சூரியோதயம் போல.

तं वटुं वामनं दृष्ट्वा मोदमाना महर्षयः।
कर्माणि कारयामासुः पुरस्कृत्य प्रजापतिम् ॥ १८.१३ ॥

तस्योपनीयमानस्य सावित्रीं सवितात्रवीत्।
बृहस्पति-र्ब्रह्मसूत्रं मेखलां कश्यपोऽददात् ॥ १८.१४ ॥

ददौ कृष्णाजिनं भूमि-र्दण्डं सोमो वनस्पतिः।
कौपीनाच्छादनं माता द्यौश्छत्रं जगतः पतेः ॥ १८.१५ ॥

कमण्डलुं वेदगर्भः कुशान् सप्तर्षयो ददुः।
अक्षमालां महाराज सरस्वत्यव्ययात्मनः ॥ १८.१६ ॥

तस्मा इत्युपनीताय यक्षराट् पात्रिकामदात्।
भिक्षां भगवती साक्षा-दुमाऽदा-दम्बिका सती ॥ १८.१७ ॥

स ब्रह्मवर्चसेनैवं सभां संभावितो वटुः।
ब्रह्मर्षिगण-संजुष्टा-मत्यरोचत मारिषः ॥ १८.१८ ॥

---

18. 13. அந்த வாமனப் பிரம்மசாரி வடிவைப் பார்த்து மகரிஷிகள் மகிழ்ச்சி பொங்குபவர்களாய்க் கசியபபிரஜாபதி முன்னிலேயில் (ஜாதகர்மா முதலிய) ஸம்ஸ்காரங்களை (வைதீக முறைப்படி) செய்வித்தனர்.

18. 14. உபநயனம் செய்விக்கப்பெற்ற வாமனருக்கு ஸவித்ரு (சூரிய) தேவன் ஸாவித்ரி (காயத்ரி) மந்திரத்தை உபதேசித்தார். பிருஹஸ்பதி பூணூலேக் கொடுத்தார். கசியபர் மேகலேயைக் கொடுத்தார்.

18. 15. பூதேவி மான் தோல் கொடுத்தாள்; மரங்களுக்குப் பதியாகிய ஸோமன் தண்டத்தைக் கொடுத்தார். உலக நாயகனுகிய வாமனருக்குத் தாய் கௌபீனத்தையும் வஸ்திரத்தையும் கொடுத்தாள். ஆகாசத்தின் அதி தேவதை குடை கொடுத்தது.

18. 16. பிரம்மா கமண்டுலுவையும், ஸப்தரிஷிகள் தர்ப்பைகளையும் அளித்தனர். மகாராஜனே! அழிவற்ற வடிவினராகிய அவருக்கு ஸரஸ்வதி அக்ஷமாலேயைக் கொடுத்தாள்.

18. 17. உபநயனம் செய்விக்கப்பெற்ற அவருக்கு யக்ஷராஜனுன குபேரன் சிறியதொரு பிக்ஷாபாத்திரத்தைக் கொடுத்தார். எல்லோருங்காணும்படி பகவதியும் ஸதியும் அம்பிகையுமான உமாதேவியே பிக்ஷையிட்டாள்.

18. 18. இவ்விதம் போற்றப்பெற்ற அந்தச் சிறந்த வாமனப் பிரம்மசாரி பிரம்மரிஷிகணங்கள் நிறைந்த அந்த ஸபையைத் தனது பிரம்ம தேஜஸ்ஸால் (மீறியவராய்) பிரகாசிக்கச்செய்தார்.

---

18. 18. மாரிஷ:—ச்ரேஷ்ட:।

---

18. 17. तस्योपनीयमानस्य பா. பே.

समिद्ध-माहितं वह्निं कृत्वा परिसमूहनम् ।
परिस्तीर्य समभ्यर्च्य समिद्भि-रजुहोद् द्विजः ॥ १८.१९ ॥

श्रुत्वाश्वमेधै-र्यजमान-मूर्जितं बलिं भृगूणा-मुपकल्पितै-स्ततः ।
जगाम तत्राखिल-सार-संभृतो भारेण गां सन्नमयन् पदे पदे ॥ १८.२० ॥

तन्नर्मदाया-स्तट उत्तरे बले-र्य ऋत्विजस्ते भृगुकच्छसंज्ञके ।
प्रवर्तयन्तो भृगवः क्रतूत्तमं व्यचक्षतारा-दुदितं यथा रविम् ॥ १८.२१ ॥

मौञ्ज्या मेखलया वीत-मुपवीताजिनोत्तरम् ।
जटिलं वामनं विप्रं माया-माणवकं हरिम् ॥ १८.२४ ॥

प्रविष्टं वीक्ष्य भृगवः सशिष्यास्ते सहाग्निभिः ।
प्रत्यगृह्णन् समुत्थाय संक्षिप्ता-स्तस्य तेजसा ॥ १८.२५ ॥

यजमानः प्रमुदितो दर्शनीयं मनोरमम् ।
रूपानुरूपावयवं तस्मा आसन-माहरत् ॥ १८.२६ ॥

---

18. 19. பிராமணச் சிறுவராகிய வாமனர் அக்னியை பிரதிஷ்டைசெய்து எரியச் செய்து பரிஸ்தரணமிட்டு பூஜித்து ஸமித்துக்களால் ஹோமம் செய்தார்.

18. 20. பிருகு சிரேஷ்டர்களான ஆசாரியர்களால் நடத்துவிக்கப்பட்ட அசுவ மேதத்தால் சிறப்புடன் பூஜிக்கும் பலிசக்ரவர்த்தியைப்பற்றிக் கேள்விப்பட்டு, எல்லா வலிமைகளும் பரிபூர்ணமாய் நிரம்பிய வாமனர் அடிவைக்குந்தோறும் பாரத்தால் பூமி வணங்கும்படி அங்கு (அந்த யாக சாலையை நோக்கிச்) சென்றார்.

18. 21. நர்மதையின் வடக்குக்கரையில் பிருகுகச்சம் எனப் பெயர்பெற்ற க்ஷேத்திரத்தில் பலிக்குச் சிறந்த யாகத்தை நடத்துவிக்கும் ரித்விக்குகளாகிய பிருகு குலத்தினர் அண்டையில் சூரியன்போல் பிரகாசித்த அந்த வாமனரைக் கண்ணுற்றனர்.

18. 24-25, முஞ்ஜிப்புல்லாலான மேகலையுடனும் உபவீதமாயணியப்பட்ட மான் தோல் உத்தரீயத்துடனும், ஜடையுடனும் மாயா மாணவனுகவும் வாமன உருக்கொண்ட வேதியராகவும் பிரவேசித்த ஹரியைக் கண்ணுற்று அவருடைய காந்தியால் தங்கள் ஒளி குன்ற பிருகு குலத்தோர் தங்கள் சிஷ்யர்களுடனும் அக்கினிகளுடனும் எழுந்து எதிர்கொண்டு வரவேற்றார்கள்.

18. 26. யஜமானனுகிய பலிசக்ரவர்த்தி காட்சிக்கினியவரும் மனதுக்கினியவரும் ரூபத்திற்கொத்த அவயவ அழகுவாய்ந்தவருமான அவரைக்கண்டு களித்து மகிழ்ச்சி பொங்கியவனுய் அவருக்கு ஆஸனத்தையளித்தான்.

---

18. 21. **ஆராத்**—ஸமீப ஏவ।

---

18. 19. **समिद्भि-रजुहोद्विप्रः ।**
18. 21. **भृगुवरसंज्ञिके** பா. பே.

स्वागतेनाभिनन्द्याथ पादौ भगवतो बलिः ।
अवनिज्यार्चयामास मुक्तसंग-मनोरमम् ॥ १८.२७ ॥

तत्पादशौचं जनकल्मषापहं स धर्मविन्मूर्ध्न्यदधात् सुमंगलम् ।
यद् देवदेवो गिरिश-श्चन्द्रमौलि-र्दधार मूर्ध्ना परया च भक्त्या ॥ १८.२८ ॥

बलिरुवाच—

स्वागतं ते नमस्तुभ्यं ब्रह्मन् किं करवाम ते ।
ब्रह्मर्षीणां तपः साक्षान्मन्ये त्वाऽऽर्य वपुर्धरम् ॥ १८.२९ ॥

अद्य नः पितर-स्तृप्ता अद्य नः पावितं कुलम् ।
अद्य स्विष्टः क्रतु-रयं यद् भवानागतो गृहान् ॥ १८.३० ॥

यद् यद् वटो वांछसि तत्प्रतीच्छ मे त्वामर्थिनं विप्रसुतानुतर्कये ।
गां कांचनं गुणवद् धाम मृष्टं तथान्नपेय-मुत वा विप्रकन्याम् ।
ग्रामान् समृद्धांस्तुरगान् गजान् वा रथां-स्तथार्हत्तम संप्रतीच्छ ॥ १८.३२ ॥

---

18. 27. நல்வரவுகூறிக் கொண்டாடி பலியானவன் பகவானுடைய திருவடிகளுக்கு நீராட்டிப் பற்றற்ருர் மனதுக்கினிய அவரைப் பூஜித்தான்.

18. 28. மக்களின் மலத்தைப் போக்குவதும் பரம மங்களமானதுமான அவருடைய திருவடியில் சேர்ந்த நீரை தருமந்தெரிந்த பலி தனது சிரசில் சேர்த்துக் கொண்டான். தேவதேவனும், மலைவாசியுமான சந்திரமௌளியுமன்ரே பரமபக்தியுடன் அதைத் தன் தலையில் தாங்கினுர்.

பலி கூறியது—

18. 29. ஐயனே! பிரம்மஸ்வரூபியே! உங்களுக்கு நல்வரவு, நமஸ்காரம். உங்களுக்கு நான் என்ன செய்யலாம்? பிரம்மரிஷிகளுடைய தவமே நேரில் உருக் கொண்டு வந்ததாய் உம்மை நான் கருதுகிறேன்.

18. 30. எங்கள் கிருகங்களுக்கு நீங்கள் வந்தமையால் எங்கள் பிதிருக்கள் இப்போதே திருப்தியுற்றவர்களாயினர். எங்கள் குலம் புனிதமாயிற்று. இந்த யாகமானது நன்கு அனுஷ்டிக்கப்பட்டதாயிற்று.

18. 32. பிராம்மண குமாரா! பூஜித்தற்குரியவரே! எதையெல்லாம் விரும்புகிறீரோ அதையெல்லாம் கேட்டு வாங்கிக்கொள்ளலாம். உம்மைப் பொருளில் நாட்டமுடையவரென ஊகிக்கிறேன். பசுவோ, பொன்னே, அழகிய வீடோ, அன்னபான ஸம்ருத்தியோ, (விவாகத்திற்கு) பிராம்மணப் பெண்ணே, செழிப்பான கிராமங்களோ, குதிரைகளோ, யானைகளோ, சிறந்த தேர்களோ, எது வேண்டுமானுலும் பெற்றுக் கொள்ளலாம்.

---

18. 28. ஒ. ஸமஸ்த ஸம்பத்-ஸமவாப்தி ஹேதவஸ்-ஸமுத்திதாபத்குல-தூம கேதவ:। அபார ஸம்ஸார-ஸமுத்ர-ஸேதவ: புனந்து மாம் ப்ராஹ்மண-பாத-பாம்ஸவ: ॥

---

18. 28. कलिकल्मषापहं स्वधर्मवित् । कुलकल्मषापहं
18. 29. करवाणि ते । 18. 32. यवसंवान् । பா. பே.

श्रीभगवानुवाच—

वचस्तवैत-ज्जनदेव सूनृतं कुलोचितं धर्मयुतं यशस्करम् ।
यस्य प्रमाणं भृगवः सांपराये पितामहः कुलवृद्धः प्रशान्तः ॥ १९.२ ॥

यतो जातो हिरण्याक्ष-श्चरन्नेकं इमां महीम् ।
प्रतिवीरं दिग्विजये नाविन्दत गतायुधः ॥ १९.५ ॥

निशम्य तद्वधं भ्राता हिरण्यकशिपुः पुरा ।
हन्तुं भ्रातृहणं क्रुद्धो जगाम निलयं हरेः ॥ १९.७ ॥

तमायान्तं समालोक्य शूलपाणिं कृतान्तवत् ।
चिन्तयामास कालज्ञो विष्णु-र्मायाविनां वरः ॥ १९.८ ॥

यतो यतोऽहं तत्रासौ मृत्युः प्राणभृतामिव ।
अतोऽहमस्य हृदयं प्रवेक्ष्यामि पराग्दृशः ॥ १९.९ ॥

स तन्निकेतं परिमृश्य शून्य-मपश्यमानः कुपितो ननाद ।
क्ष्मां द्यां दिशः खं विवरान् समुद्रान् विष्णुं विचिन्वन्
न ददर्श वीरः ॥ १९.११ ॥

---

ஸ்ரீ பகவான் (வாமனர்) கூறியது—

19. 2. அரசே! இவ்வுலகைக் கடந்துநிற்கும் தருமவிஷயத்தில் வழிகாட்டுபவர்களாகப் பிருகு குலத்தினரையும், உமது குலபதியும் பரமசாந்தருமான பாட்டனரையும் (பிரஹ்லாதரையும்) கொண்ட உம்முடைய பேச்சு இனியதாயும் குலத்திற்கேற்றதாயும், தருமத்துடன்கூடியதாயும், புகழை வளர்க்கக்கூடியதாயும் இருக்கிறது.

19. 5. இந்தக் குலத்தில் தோன்றிய ஹிரணியாக்ஷன் கதையை ஏந்திக்கொண்டு ஒருவனுக இந்த பூமிமுழுதும் சுற்றி ஒவ்வொரு வீரனையும் எதிர்த்து வென்று திக்விஜயத்தை நாட்டவில்லையா?

19. 7. அவன் வதமடைந்ததைக் கேட்டு அவனுடைய சகோதரனுகிய ஹிரணியகசிபு முன்னுளில் சகோதரனைக் கொன்றவனைக் கொல்வதற்காகக் கோபங்கொண்டு விஷ்ணுவின் இருப்பிடம் நாடிச் சென்றுனன்றே!

19. 8-9. சூலத்தைக் கையிலேந்தி யமன்போல் எதிர்த்து வந்த அவனைக்கண்டு மாயாவிகளிற்சிறந்த மாயாவியும் காலத்தின் போக்கை அறிந்தவருமான விஷ்ணு "பிராணிகளைப் பின்தொடரும் யமனைப்போல் இவன் நான் எங்கெங்கு சென்றாலும் அங்கெல்லாம் வருகிறுன்; ஆகையால் வெளிநோக்குடைய இவனது இருதயத்தில் நான் புகுந்துகொள்ளுகிறேன்" என்று எண்ணினுர்.

19. 11. அதனுல் அவ்வீரன் (ஹிரணியகசிபு) அந்த விஷ்ணுவின் இருப்பிடம் (வைகுண்டம்) சென்று அது சூன்யமாயிருக்கக்கண்டு கோபித்துக் கர்ஜித்தான். (பின்னர்) பூவுலகு, வானுலகு, திசைகள், ஆகாயம், பாதாளம், ஸமுத்திரங்கள் எல்லாவற்றையும் தேடியும் (விஷ்ணுவைக்) காணவில்லை. (விஷ்ணு அவனுக்குப் பயந்து அப்படி ஒளிந்துகொண்டார் என்று வாமனர் கூறினுர்.)

---

19. 2. ப்ரஹ்லாதன் புத்திரன் விரோசனன். விரோசனனுடைய புத்திரன் பலி.

भवानाचरितान् धर्मा-नास्थितो गृहमेधिभिः ।
ब्राह्मणैः पूर्वजैः शूरै-रन्यैश्चोद्दामकीर्तिभिः ॥ १९.१५ ॥

तस्मात् त्वत्तो महीमीषद् वृणेऽहं वरदर्षभात् ।
पदानि त्रीणि दैत्येन्द्र संमितानि पदा मम ॥ १९.१६ ॥

नान्यत् ते कामये राजन् वदान्याज्जगदीश्वरात् ।
नैनः प्राप्नोति वै विद्वान् यावदर्थ-प्रतिग्रहः ॥
अधिकं योऽभिकांक्षेत स स्तेनो दण्डमर्हति ॥ १९.१७ ॥

बलिरुवाच—

न पुमान् मामुपव्रज्य भूयो याचितु-मर्हति ।
तस्माद् वृत्तिकरीं भूमिं वटो कामं प्रतीच्छ मे ॥ १९.२० ॥

श्रीभगवानुवाच—

यावन्तो विषयाः प्रेष्ठा-स्त्रिलोक्या-मजितेन्द्रियम् ।
न शक्नुवन्ति ते सर्वे प्रतिपूरयितुं नृप ॥ १९.२१ ॥

---

19. 15. (அந்தக் குலத்தில் பிறந்த தங்கள் பெருமைக்கும் குறைவில்லை). இல்லறத்தில் நின்ற பிராம்மணர்களாலும் மற்றும் கீர்த்திவாய்ந்த முன்னோர்களான சூரர்களாலும் அனுஷ்டிக்கப்பட்ட தர்மங்களில் தாங்கள் நிலைபெற்று விளங்குகின்றீர்கள்.

19. 16. ஆனதுபற்றி, அசுரர்களின் வேந்தே! வரங்கொடுப்பவர்களிற் சிறந்த தங்களிடம் என் பாதத்தால் அளந்து மூன்று அடி அளவு சிறிது பூமியையே வரமாய் வேண்டுகின்றேன்.

19. 17. அரசே! கொடையாளியும் உலக நாயகனுமாகிய உம்மிடம் நான் வேறு எதற்கும் ஆசைப்படவில்லை. எவ்வளவு அவசியமோ அவ்வளவுமட்டும் ஏற்கும் அறிவாளி பாவத்திற்காளாகமாட்டான். அதிகத்திற்கு ஆசைப்படுபவன் திருடன்; அவன் தண்டனைக்குரியவனாவான்.

பலி கூறியது—

19. 20. பிரம்மசாரியே! என்னை ஒரு புருஷன் அண்டியபின் மறுபடியும் (இன்னொருவரிடம் சென்று) யாசிப்பது தகுதியன்று. ஆகையினால் ஜீவனத்திற்குப் போதுமான பூமியை வேண்டியவரை வாங்கிக்கொள்ளலாம்.

பகவான் (வாமனர்) கூறியது—

19. 21. அரசே! எவ்வளவு அதிகமாய் விரும்பத்தக்க விஷயங்களானாலும் மூவுலகிலுமுள்ள அவையனைத்தும்கூட இந்திரிய அடக்கமில்லாதவனைத் திருப்தி செய்விக்க இயலாது.

---

19. 21. **विषयाः श्रेष्ठाः** பா. பே.

यदृच्छालाभ-तुष्टस्य तेजो विप्रस्य वर्धते।
तत् प्रशाम्यत्यसंतोषा-दंभसेवाशुशुक्षणिः ॥ १९.२६ ॥

तस्मात् त्रीणि पदान्येव वृणे त्वद् वरदर्षभात्।
एतावतैव सिद्धोऽहं वित्तं यावत् प्रयोजनम् ॥ १९.२७ ॥

श्रीशुक उवाच--

इत्युक्तः स हसन्नाह वाञ्छातः प्रतिगृह्यताम्।
वामनाय महीं दातुं जग्राह जलभाजनम् ॥ १९.२८ ॥

शुक्र उवाच--

एष वैरोचने साक्षाद् भगवान् विष्णु-रव्ययः।
कश्यपाददिते-र्जातो देवानां कार्यसाधकः ॥ १९.३० ॥

प्रतिश्रुतं त्वयैतस्मै यदनर्थ-मजानता।
न साधु मन्ये दैत्यानां महानुपगतोऽनयः ॥ १९.३१ ॥

---

19. 26. தானாகக் கிடைப்பதில் திருப்தியடையும் வேதியனுக்குத் தவ ஒளி வளர்கிறது. திருப்தியற்றவனுக்கு நீரால் நெருப்பணைவதுபோல் அது அழிந்து போகிறது.

19. 27. வரமளிப்பவர்களிற் சிறந்தவரே! ஆகையால் உம்மை நான் கேட்பது மூன்று அடி (மண்) மட்டுமே. அவ்வளவாலேயே நான் எண்ணம் கைகூடியவனாவேன். எவ்வளவு பயன்படுமோ அவ்வளவு பொருள்தான் ஒரு பொருட்டாகும் (அதற்குமேல் அது துன்பந்தரும் சுமை).

ஸ்ரீ சுகர் கூறியது—

19. 28. இம் மறுமொழியைக் கேட்டு அந்த பலி சிரித்துக்கொண்டே, "இஷ்டமானதைப் பெற்றுக்கொள்ளலாம்" என்று கூறிவிட்டு வாமனருக்கு (அவர் கேட்ட) பூமியை தானம் செய்ய ஜலபாத்திரத்தை எடுத்தான்.

சுக்ராசாரியார் கூறியது—

19. 30. விரோசனபுத்திரரே! இவர் மாறுபாடற்றவராகிய ஸாக்ஷாத் பகவான் விஷ்ணு, கசியபருக்கு அதிதியிடம் பிறந்தவர்; தேவர்களின் காரியத்தை முடித்துக் கொடுக்க உதவிபுரிபவர்.

19. 31. அனர்த்தம் விளையப்போவதை அறிந்துகொள்ளாத உன்னால் இவருக்கு வாக்களிக்கப்பட்டதை நான் நல்லதாகக் கருதவில்லை. அசுரர்களுக்குப் பெரிய அநீதி விளையப் போகிறது.

---

19. 31. அநய:—அந்யாய:।

---

19. 28. वांछित। பா. பே.

एष ते स्थान-मैश्वर्यं श्रियं तेजो यशः श्रुतम् ।
दास्यत्याच्छिद्य शक्राय मायामाणवको हरिः ॥ १९.३२ ॥

बलिरुवाच—

स चाहं वित्तलोभेन प्रत्याचक्षे कथं द्विजम् ।
प्रतिश्रुत्य ददामीति प्राह्लादिः कितवो यथा ॥ २०.३ ॥

सुलभा युधि विप्रर्षे ह्यनिवृत्ता-स्तनुत्यजः ।
न तथा तीर्थ आयाते श्रद्धया ये धनत्यजः ॥ २०.९ ॥

यजन्ति यज्ञक्रतुभि-र्यमादृता भवन्त आम्नाय-विधान-कोविदाः ।
स एव विष्णु-र्वरदोऽस्तु वा परो दास्याम्यमुष्मै क्षिति-
मीप्सितां मुने ॥ २०.११ ॥

शुक्र उवाच—

दृढं पण्डितमान्यज्ञः स्तब्धोऽस्यस्म-दुपेक्षया ।
मच्छासनातिगो यस्त्व-मचिराद् भ्रश्यसे श्रियः ॥ २०.१५ ॥

---

19. 32. மாயா மாணவனுக வந்த இந்த ஹரியானவர் உனது பதவி, ஆட்சி, செல்வம், வன்மை, கீர்த்தி, கேள்வி அனைத்தையும் பறித்து இந்திரனுக்களிக்கப் போகிருர்.

பலி கூறியது—

20. 3. பிரஹ்லாதருடைய வம்சத்தில் தோன்றிய நான் பிராம்மணனெருவனுக்குக் கொடுப்பதாக வாக்களித்ததைப் பொருளில் பேராசை பிடித்த வஞ்சனைகப்போல் எப்படி இல்லையென்று சொல்லுவேன் ?

20. 9. பிரம்ம ரிஷியே! போரில் பின்வாங்காமல் உடலைத் தியாகம் செய்கிறவர்கள் எளிதில் கிடைப்பர். நல்ல காலமும் பாத்திரமும் நேர்ந்தபோது சிரத்தையுடன் எவர்கள் பொருளைத் தியாகம் செய்யக்கூடியவர்களோ அவர்கள் கிடைத்தலரிது.

20. 11. முனிவரே! வேதமார்க்கங்களை நன்குணர்ந்தவர்கள் யாகங்களாலும் கிரதுக்களாலும் எவரை ஆதரவுடன் கூடியவர்களாய்ப் பூஜிக்கின்ருர்களோ, அந்த விஷ்ணுவே இவராகும்போது, இவர் வரமளிப்பவராயினும் அல்லாதவராயினும் (கெடுப்பவராயினும்) இவருக்கு இவர் விரும்பும் பூமியைக் கொடுக்கப்போகிறேன்.

சுக்ரர் கூறியது—

20. 15. கெட்டிக்காரன் என்ற திடமான எண்ணமுடையவனுயினும் நீ ஒன்றும் அறியாதவன், கருவம்பிடித்தவனுயிருக்கின்ருய், என்னை மதியாமல் என் கட்டளையை மீறி நடக்கும் காரணத்தால் நீ விரைவில் செல்வத்தை யிழப்பாய்.

---

20. 15. ஒ. கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி விடுகின்ருய். —கம்பர்.

---

19. 32. यशस्ततम् ।　　20. 3. वृत्तिलोभेन ।　　பா. பே.

श्रीशुक उवाच--

एवं शप्तः स्वगुरुणा सत्यान्न चलितो महान् ।
वामनाय ददावेना-मर्चित्वोदक-पूर्वकम् ॥ २०.१६ ॥

विन्ध्यावलि-स्तदाऽऽगत्य पत्नी जालकमालिनी ।
आनिन्ये कलशं हैम-मवनेजन्यपां भृतम् ॥ २०.१७ ॥

यजमानः स्वयं तस्य श्रीमत्पादयुगं मुदा ।
अवनिज्यावहन्मूर्ध्नि तदपो विश्वपावनीः ॥ २०.१८ ॥

तद् वामनं रूप-मवर्धताद्भुतं हरे-रनन्तस्य गुणत्रयात्मकम् ।
भूः खं दिशो द्यौर्विवराः पयोधय-स्तिर्यङ् नृदेवा ऋषयो
यदासत ॥ २०.२१ ॥

काये बलि-स्तस्य महाविभूतेः सहर्त्वि-गाचार्य-सदस्य एतत् ।
ददर्श विश्वं त्रिगुणं गुणात्मके भूतेन्द्रियार्थाशय-जीवयुक्तम् ॥ २०.२२ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

20. 16. இவ்வாறு தனது குருவால் சபிக்கப்பட்டும் உண்மையினின்று வழுவாத பெருமை வாய்ந்த பலி வாமனரை அர்ச்சித்து நீர் வார்த்து இந்த பூமியைக் கொடுக்கலானான்.

20. 17. அவனுடைய மனைவி, முத்துமாலையணிந்த விந்தியாவளி, அப்போது அங்கு வந்து பாதத்தை யலம்புதற்காக ஜலம் நிறைந்த பொற்கலசத்தைக் கொண்டு நின்றாள்.

20. 18, யஜமானனாகிய பலி அப்போது வாமனரின் அழகிய இரு திருவடிகளையும் மகிழ்ச்சிபொங்கத் தானே அலம்பி உலகைப் பாவனமாக்கும் அந்த ஜலத்தைத் தனது தலையில் சேர்த்துக்கொண்டான்.

20. 21. அப்போது பகவானுடைய முக்குணவடிவான எந்த ரூபத்தில் பூமியும் ஆகாயமும் திசைகளும் ஸ்வர்க்கமும் பாதாளமும் ஸமுத்திரங்களும் பலவகை ஜந்துக்களும், மனிதர்களும் தேவர்களும் ரிஷிகளும் அடங்கியிருந்தனரோ அந்த வாமன ரூபம் வளர ஆரம்பித்தது,

20. 22. மஹத்தான பெருமைகளுக்கெல்லாம் இருப்பிடமான அந்த பகவானுடைய குணமயமான சரீரத்தில் முக்குணங்களின் தோற்றமான பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், இந்திரிய விஷயங்கள், அந்தக்கரணம் ஜீவன் இவற்றுடன்கூடிய இப்பிரபஞ்சத்தை, ரித்விக்குகளுடனும், ஆசாரியர்களுடனும், சபையோருடனும் பலிசக்கரவர்த்தி பார்த்தான்.

---

20 17. **ஜாலகம்**—முக்தாபரண-விசேஷ: ।
**அவனேஜனீ**—கால் அலம்பும் ஜலம் ।

20. 21. 'எது எது வேண்டுமோ அதை என்னிடம் கேள்' என்று பலி சொன்னதற்கு எல்லாம் தன்னிடமிருப்பதாக பகவான் காட்டினார்.

20. 22. அர்ஜுனன் திவ்ய சக்ஷுஸ்ஸால் பார்த்த விராட் ரூபத்தை பலிசக்ரவர்த்தி ஊனக் கண்ணால் பார்த்தான்.

---

20, 16. **ददावेतामर्चित्वोदाकपूर्विकाम् ।** பா. பே.

क्षितिं पदैकेन बलेर्विचक्रमे नभः शरीरेण दिशश्च बाहुभिः ।
पदं द्वितीयं क्रमत-स्त्रिविष्टपं न वै तृतीयाय तदीय-मण्वपि ॥ २०.३३ ॥

अथांघ्रये प्रोन्नमिताय विष्णो-रुपाहरत् पद्मभवोऽर्हणोदकम् ।
समर्च्य भक्त्याभ्यगृणा-च्छुचिश्रवा यन्नाभिपंकेरुहसंभवः स्वयम्
॥ २१.३ ॥

धातुः कमण्डलुजलं तदुरुक्रमस्य पादावनेजन-पवित्रतया नरेन्द्र ।
स्वर्धुन्यभू-न्नभसि सा पतती निमार्ष्टि लोकत्रयं भगवतो
विशदेव कीर्तिः ॥ २१.४ ॥

महीं सर्वां हृतां दृष्ट्वा त्रिपदव्याज-याच्ञया ।
ऊचुः स्वभर्तु-रसुरा दीक्षितस्यात्यमर्षिताः ॥ २१.९ ॥

न वा अयं ब्रह्मबन्धु-र्विष्णु-र्मायाविनां वरः ।
द्विजरूप-प्रतिच्छन्नो देवकार्यं चिकीर्षति ॥ २१.१० ॥

अनेन याचमानेन शत्रुणा वटुरूपिणा ।
सर्वस्वं नो हृतं भर्तुर्न्यस्तदण्डस्य बर्हिषि ॥ २१.११ ॥

---

20. 33. பலியின் பூமியை ஒரு அடியாலும், ஆகாயத்தை உடலாலும், திசைகளைக் கைகளாலும் (திரிவிக்கிரமராகிய பகவான்) வியாபித்து நின்றார். இரண்டாவது அடி யெடுக்கும்போது ஸ்வர்க்கலோகம்(ஆக்கிரமிக்கப்பட்டு)மூன்றாவதிற்கு அவனுடையதாக அணுவும் இல்லை.

21. 3. உயரச்சென்ற விஷ்ணுவின் திருவடிகளைப் பூஜிப்பதற்குரிய தீர்த்தத்தை பிரம்மதேவர் எடுத்துவந்தார். எவருடைய நாபிகமலத்தில் தான் தோன்றியவரோ அவரைப் பெருமைமிக்க பிரம்மதேவர் பக்தியுடன் அர்ச்சித்துத் துதித்தார்.

21. 4. அரசே! பிரம்மாவின் கமண்டுலுவிலிருந்து பெருகிய ஜலம் உருக்கிர மனுடைய திருவடிகளை அலம்பியதால் புனிதமாகி ஆகாய கங்கையாயிற்று. அது பகவானுடைய நிர்மலமான கீர்த்தியைப்போல் மூவுலகையும் பாவனமாக்குகிறது.

21. 9. யாகதீக்ஷை நியமத்திலிருந்த தங்கள் யஜமானனாகிய பலியிடமிருந்து மூன்று அடிகளை யாசிக்கும் சாக்கில் பூமி முழுவதும் அபகரிக்கப்பட்டதைக் கண்டு அசுரர்கள் மிகுந்த கோபமடைந்து (பின்வருமாறு) பேசலாயினர்.

21. 10. "இவர் (யாசகத்திற்கு வந்த) இழிவான பிராம்மணரல்லர்; மாயாவிகளில் சிறந்த விஷ்ணுவே இவர். பிராம்மண ரூபத்தில் மறைந்துகொண்டு தேவர்களின் காரியத்திற்கு அனுகூலம் செய்ய விரும்புகிறார்.

21. 11. "யாகதீக்ஷையில் (தன்னை ரக்ஷித்துக்கொள்ளவும் ஆயுதமெடுப்பதில்லை யென்று) தண்டிக்கும் உபாயத்தைத் தியாகம் செய்துள்ள நமது யஜமானனுடைய எல்லா சொத்தும் பிரம்மசாரி வேஷத்தில் வந்த இந்தச் சத்துருவால் யாசிக்கும் முறையில் அபகரிக்கப்பட்டது.

---

21. 4. பிரம்ம குமாரராகிய ஜாம்பவான் பகவானை மனோவேகத்தில் பிரதக்ஷிணம் செய்து பகவானுடைய பெருமையைத் திசையெங்கும் முழக்கினார்.

तस्मादस्य वधो धर्मो भर्तुः शुश्रूषणं च नः ।
इत्यायुधानि जगृहु-र्बलेरनुचरासुराः ॥ २१.१३ ॥

बलिरुवाच—
यो नो भवाय प्रागासी-दभवाय दिवौकसाम् ।
स एव भगवानद्य वर्तते तद्विपर्ययम् ॥ २१.२२ ॥

तस्मात् कालं प्रतीक्षध्वं यो नोऽर्थत्वाय कल्पते ॥ २१.२४ ॥

श्रीशुक उवाच—
पत्यु-र्निगदितं श्रुत्वा दैत्यदानव-यूथपाः ।
रसां निर्विविशू राजन् विष्णुपार्षद-ताडिताः ॥ २१.२५ ॥

अथ तार्क्ष्य-सुतो ज्ञात्वा विराट् प्रभु-चिकीर्षितम् ।
बबन्ध वारुणैः पाशै-र्बलिं सौत्येऽहनि क्रतौ ॥ २१.२६ ॥

---

21. 13. "ஆகையால் இவரைக் கொல்லுவது நமது தருமமும் நமது எஜமானனுக்குச் செய்யும் பணிவிடையுமாகும்" என்றிங்கனம் கூறிவிட்டு பலிசக்ரவர்த்தியைச் சூழ்ந்து நின்ற அசுரர்கள் ஆயுதங்களை எடுத்துக்கொண்டனர்.

பலி கூறியது—

21. 22. (காலரூபியாகிய) எவர் நமது ஆக்கத்திற்கும் தேவர்களின் அழிவிற்கும் முன்பு காரணமாக இருந்தாரோ, அந்த பகவானே இப்போது அதற்கு மாறாக இருக்கிறார்.

21. 24. ஆகையால் நமக்கு அனுகூலமானதை யளிக்கும் காலம் எதுவோ அந்தக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருப்போம்.

ஸ்ரீ சுகர் கூறியது—

21. 25. அரசே! பின்னர் தைத்தியதானவசிரேஷ்டர்கள் விஷ்ணுபாரிஷதர்களால் அடிக்கப்பட்டு (அவர்களை எதிர்க்காமல்) தங்கள் யஜமானனுடைய வார்த்தையைக் கேட்டு அதன்படி பாதாள லோகம் புகுந்தார்கள்.

21. 26. பிறகு பக்ஷிராஜனாகிய கருடன் பகவானுடைய நோக்கத்தை உணர்ந்தவராய் ஸோமரஸம் பிழியும் தினமாகிய அன்று வருணபாசங்களால் பலியைப் பிணித்தார்.

---

21. 26. **விராட்**—விஷு பக்ஷிஷு ராஜத இதி விராட் ।

**பபந்த வாருணை: பாசை:**—

அஸ்ய ஸர்வஸ்வாபஹாரேண மமேத்யபிமானம் ஸந்த்யாஜிதம், இதானீம் தேஹஸ்வீகாரேணாஹங்காரமபி த்யாஜயித்வா பரமானுக்ரஹம் கர்த்து-மிச்சதீதி ப்ரபோரபிப்ராயம் ஜ்ஞாத்வா தம் பபந்தேதி ।

**ஸௌத்யேஹனி**—ஸோமாபிஷவதினே ।

तं बद्धं वारुणैः पाशै र्भगवानाह वामनः ।
नष्टश्रियं स्थिरप्रज्ञ-मुदारयशसं नृप ॥ २१.२८ ॥

पदानि त्रीणि दत्तानि भूमेर्मह्यं त्वयासुर ।
द्वाभ्यां क्रान्ता मही सर्वा तृतीय-मुपकल्पय ॥ २१.२९ ॥

श्रीशुक उवाच—

एवं विप्रकृतो राजन् बलि-र्भगवताऽसुरः ।
भिद्यमानोऽप्यभिन्नात्मा प्रत्याहाविक्लवं वचः ॥ २२.१ ॥

बलिरुवाच—

यद्युत्तमश्लोक भवान् ममेरितं वचो व्यलीकं सुरवर्य मन्यते ।
करोम्यृतं तन्न भवेत् प्रलम्भनं पदं तृतीयं कुरु शीर्ष्णि मे निजम् ॥ २२.२ ॥

बिभेमि नाहं निरयात् पदच्युतो न पाशबन्धाद् व्यसनाद् दुरत्ययात् ।
नैवार्थ-कृच्छ्राद् भवतो विनिग्रहा-दसाधुवादाद् भृशमुद्विजे यथा ॥ २२.३ ॥

---

21. 28-29. அரசே! உயர்ந்த கீர்த்தியுள்ளவனும், பொருளையிழந்தாலும் புத்தியை இழக்காதவனும் வருணபாசங்களால் கட்டப்பட்டவனுமாகிய அவனைப் பார்த்து பகவான் வாமனர், "அரசனே! உன்னால் எனக்கு பூமியில் மூன்றடி மண் கொடுக்கப் பட்டது. இரண்டடியால் பூமி முழுதும் அளக்கப்பட்டது. மூன்றுவதிற்கு இடத்தைக் காண்பிப்பாய்" என்றார்.

ஸ்ரீ சுகர் கூறியது—

22. 1. அரசே! இங்ஙனம் பகவானால் நிலைதடுமாறச் செய்யப்பட்டபோதிலும் மனம் பிளவுபடும்படி செய்யப்பட்டபோதிலும் பிளவுபடாதவனுய்ச் சோர்வில்லாத வார்த்தையில் பதிலளித்தான்!

பலி கூறியது—

22. 2. கீர்த்தி மிக்கோனே! தேவதேவனே! நான் கூறிய வார்த்தையைத் தாங்கள் பொய்யெனக் கருதினால் இதோ அதை மெய்யாகச் செய்கிறேன். அது ஏமாற்றமாகக் கூடாது. தங்களுடைய மூன்றுவது அடியை என் தலையில் வைக்க வேண்டும்.

22. 3. (பொய்யன் என்ற) அபகீர்த்தியில் எங்ஙனம் மிகவும் அஞ்சுகின்றேனே அங்ஙனம் பதவியிழந்து நரகம் புகுதலிலோ, பாசத்தால் பிணிக்கப்படுவதிலோ, கடத்தற்கரிய துன்பத்தை எய்துவதிலோ, பொருளையிழந்து தவித்தலிலோ, உங்களிடம் தண்டனை யடைவதிலோ நான் அஞ்சவில்லை.

---

22. 0. ஸமர்ப்பித-தனூ-வித்த-நிர்மலாசல-பக்திபி: । ச்சலிதோ பலினு சித்ரம் ஸ்வமே வார்ப்பய-தச்யுத: ॥ —ஸ்ரீ.

தன்னையே அர்ப்பணம் செய்த பலிக்கு பகவானும் தன்னை துவாரபாலகனுக அர்ப்பணம் செய்தார்.

22. 2. எனது உடைமையெல்லாம் இரண்டடிக்குப் போதாவிட்டாலும், உடைமையை விட உடையவன் பெரியவனுதலால் என் தலை மூன்றுவதடிக்குப் போதும்.

पुंसां श्लाध्यतमं मन्ये दण्डमर्हत्तमार्पितम् ।
यं न माता पिता भ्राता सुहृदश्चादिशन्ति हि ॥ २२.४ ॥

त्वं नून-मसुराणां नः पारोक्ष्यः परमो गुरुः ।
यो नोऽनेक-मदान्धानां विभ्रंशं चक्षु-रादिशत् ॥ २२.५ ॥

यस्मिन् वैरानुबन्धेन रूढेन विबुधेतराः ।
बहवो लेभिरे सिद्धिं यामु-हैकान्त-योगिनः ॥ २२.६ ॥

पितामहो मे भवदीयसंमतः प्रह्लाद आविष्कृतसाधुवादः ।
भवद्विपक्षेण विचित्र-वैशसं संप्रापित-स्त्वत्परमः स्वपित्रा ॥ २२.८ ॥

श्रीशुक उवाच—

यस्येत्थं भाषमाणस्य प्रह्लादो भगवत्प्रियः ।
आजगाम कुरुश्रेष्ठ राकापति-रिवोत्थितः ॥ २२.१२ ॥

---

22, 4. மதிப்பிற்குரியவர்கள் அளிக்குந் தண்டனை மனிதர்க்குச் சிறந்த சிறப்பைத் தரும் என்றே கருதுகிறேன். தாயோ, தகப்பனே, சகோதரனே, நண்பர்களோ அந்த மாதிரி தண்டனை அளிக்கக்கூடியவர்களல்லர்.

22. 5. மறைந்து வந்த சத்துருவைப்போல் தோன்றுபவர் எவரோ அந்த நீங்கள் பலவகைப்பட்ட வீண் கர்வத்தால் அகக் கண்ணிழந்துவிட்ட எங்களுக்கு அந்த கர்வத்தைப் போக்கிக் கண் பார்வையை மீண்டும் அளித்தமையால் நீங்களே அசுரர் களின் பரமகுரு என்பது நிச்சயம்.

22. 6. உங்களிடம் அழுத்தமான பகைமை பூண்டுங்கூட தேவ சத்துருக்களிற் பலர் ஏகாந்த யோகிகள் எய்தும் சித்தியை எய்தியுள்ளனரன்றே?

22. 8. என்னுடைய பாட்டனாராகிய பிரஹ்லாதர் உம்மடியார்க்குப் பிரியமானவர்; ஸாதுவெனப் பெயரெடுத்தவர்; உம்மையே சரணடைந்தவர்; உம்மைப் பகைத்த தன் தந்தையால் பலவிதத் துன்பத்தை யடைந்தவர். (அந்த வம்சத்தில் பிறந்த புண்ணி யத்தால்தான் நான் இப்போது உமது அருளைப் பெற்றேன்.)

ஸ்ரீ சுகர் கூறியது—

22. 12. குருசிரேஷ்டனே! அவன் (பலிசக்கரவர்த்தி) இங்ஙனம் பேசிக் கொண்டிருக்கையில் பகவானுக்குப் பிரியரான பிரஹ்லாதர் பூர்ண சந்திரன் உதித்தாற் போல் அங்கு தோன்றினர்.

---

22. 4. ஹிதைஷிணா த்வயா நிக்ருஹீதோऽஹம் ச்லாக்ய ஏவாஸமிதி பாவ: । —ஸ்ரீ
22. 6. ஒ. கோப்ய: காமாத்-பயாத் கம்ஸோ த்வேஷாச் சைத்யாதயோ ந்ருபா: ।
ஸம்பந்தாத்-வ்ருஷ்ணய: ஸ்நேஹாத் யூயம் பக்த்யா வயம் ந்ருப ॥ —பாக. 7. 1. 30.
ஒ. ததர்ப்பிதாகிலாசார: ஸன் காமக்ரோதாபிமானாதிகம் தஸ்மின்னேவ கரணீயம் ॥ —நாரத பக்தி ஸூத்ரம்.
ஒ. 'கூடாரை வெல்லுஞ்சீர் கோவிந்தா.' —திருப்பாவை.

प्रह्लाद उवाच—

त्वयैव दत्तं पदमैन्द्र-मूर्जितं हृतं तदेवाद्य तथैव शोभनम्।
मन्ये महानस्य कृतो ह्यनुग्रहो विभ्रंशितो यच्छ्रिय आत्ममोहनात्
॥ २२.१६ ॥

यथा हि विद्वानपि मुह्यते यत-स्तत् को विचष्टे गतिमात्मनो यथा।
तस्मै नमस्ते जगदीश्वराय वै नारायणायाखिल-लोकसाक्षिणे
॥ २२.१७ ॥

ब्रह्मोवाच—

भूतभावन भूतेश देवदेव जगन्मय।
मुंचैनं हृतसर्वस्वं नायमर्हति निग्रहम् ॥ २२.२१ ॥

श्रीभगवानुवाच—

ब्रह्मन् यमनुगृह्णामि तद्विशो विधुनोम्यहम्।
यन्मदः पुरुषः स्तब्धो लोकं मां चावमन्यते ॥ २२.२४ ॥

---

பிரஹ்லாதர் கூறியது—

22. 16. (பகவானே!) உயர்வான இந்திரப் பதவி உம்மாலேயே (இவனுக்கு) கொடுக்கப்பட்டது. அதுவே இப்போது எடுத்துக்கொள்ளப்பட்டது. அது நன்மை யளிப்பதே யாகும். புத்தியை மயக்கும் செல்வத்தை விட்டுப் பிரித்தது இவனுக்குச் செய்த பெரிய அனுக்கிரகம் என்றே எண்ணுகிறேன்.

22. 17. முயற்சியுடையவனாயினும், அறிவாளியுங்கூட எதனால் (எந்தச் செல்வச் செருக்கால்) மயக்கமடைகிறானோ அத்துடன் சேர்ந்து எவன் தான் உள்ளபடி ஆத்ம கதியை உணர்வான்? (அப்படி அனைவரையும் ஆட்டுவிக்கும்) ஜகதீசுவரனும் உலகனைத்திற்கும் ஸாக்ஷியும் நாராயணனுமாகிய உமக்கு நமஸ்காரம்.

பிரம்மா கூறியது—

22. 21. உலகைக் காப்போனே! உலகை ஆள்வோனே! உலகேயாகியவனே! தேவர் தேவனே! இவனைக் கட்டினின்று விடுவிக்கவேண்டும். உடைமையனைத்தையும் இவனிடமிருந்து எடுத்துக்கொண்டபின் இனி இவனைச் சிக்ஷித்தல் தகாது.

ஸ்ரீ பகவான் கூறியது—

22. 24. பிரம்மதேவரே! எவனுக்கு அருள்புரிய எண்ணுகின்றேனோ அவனுடைய பொருளை நான் போக்கிவிடுகின்றேன். பொருள் படைத்த கொழுப்பாலன்றோ புருஷன் கர்வங்கொண்டு உலகையும் என்னையும் அவமதிக்கிறான்.

---

22. 16. (யஸ்யாஹ—மனுக்ருஹ்ணாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்) எவனுக்கு நான் அருள்புரிய விரும்புகிறேனோ அவனுடைய பொருளை நான் அபகரிக்கிறேன்.
—பாக. 10. 88. 8.

22. 20. விந்தியாவளி கூறியது—'எங்கள் சொத்தை உங்களுக்குக் கொடுத்தோம் என்ற எண்ணமே தவறு. எங்களை மன்னித்தருளும்.'

22. 24. பகவானுடைய கிருபைக்குத் தடையாயிருப்பது சொத்தில் மமகாரமும் உடலில் அகங்காரமும். இவ்விரண்டையும் பகவான் பலியிடமிருந்து கவர்ந்துகொண்டார். பலியை வஞ்சிப்பதுபோல் லீலை புரிந்தார்.

---

22. 16. पदमैन्द्र-मच्युतं।　　22. 17. तां को विचष्टे। अखिलकर्मसाक्षिणे।
22. 24. तद्वित्तं विधुनोम्यहम्।　　பா. பே.

पुंसां श्लाघ्यतमं मन्ये दण्डमर्हत्तमार्पितम् ।
यं न माता पिता भ्राता सुहृदश्चादिशन्ति हि ॥ २२.४ ॥

त्वं नून-मसुराणां नः पारोक्ष्यः परमो गुरुः ।
यो नोऽनेक-मदान्धानां विभ्रंशं चक्षु-रादिशत् ॥ २२.५ ॥

यस्मिन् वैरानुबन्धेन रूढेन विबुधेतराः ।
बहवो लेभिरे सिद्धिं यामु-हैकान्त-योगिनः ॥ २२.६ ॥

पितामहो मे भवदीयसंमतः प्रह्लाद आविष्कृतसाधुवादः ।
भवद्विपक्षेण विचित्र-वैशसं संप्रापित-स्त्वत्परमः स्वपित्रा ॥ २२.८ ॥

श्रीशुक उवाच—

यस्येत्थं भाषमाणस्य प्रह्लादो भगवत्प्रियः ।
आजगाम कुरुश्रेष्ठ राकापति-रिवोत्थितः ॥ २२.१२ ॥

---

22. 4. மதிப்பிற்குரியவர்கள் அளிக்கும் தண்டனை மனிதர்க்குச் சிறந்த சிறப்பைத் தரும் என்றே கருதுகிறேன். தாயோ, தகப்பனே, சகோதரனே, நண்பர்களோ அந்த மாதிரி தண்டனை அளிக்கக்கூடியவர்களல்லர்.

22. 5. மறைந்து வந்த சத்துருவைப்போல் தோன்றுபவர் எவரோ அந்த நீங்கள் பலவகைப்பட்ட வீண் கர்வத்தால் அகக் கண்ணிழந்துவிட்ட எங்களுக்கு அந்த கர்வத்தைப் போக்கிக் கண் பார்வையை மீண்டும் அளித்தமையால் நீங்களே அசுரர்களின் பரமகுரு என்பது நிச்சயம்.

22. 6. உங்களிடம் அழுத்தமான பகைமை பூண்டுங்கூட தேவ சத்துருக்களிற் பலர் ஏகாந்த யோகிகள் எய்தும் சித்தியை எய்தியுள்ளனரன்றோ?

22. 8. என்னுடைய பாட்டனராகிய பிரஹ்லாதர் உம்மடியார்க்குப் பிரியமானவர்; ஸாதுவெனப் பெயரெடுத்தவர்; உம்மையே சரணடைந்தவர்; உம்மைப் பகைத்த தன் தந்தையால் பலவிதத் துன்பத்தை யடைந்தவர். (அந்த வம்சத்தில் பிறந்த புண்ணியத்தால்தான் நான் இப்போது உமது அருளைப் பெற்றேன்.)

ஸ்ரீ சுகர் கூறியது—

22. 12. குருசிரேஷ்டனே! அவன் (பலிசக்கரவர்த்தி) இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில் பகவானுக்குப் பிரியரான பிரஹ்லாதர் பூர்ண சந்திரன் உதித்தாற்போல் அங்கு தோன்றினர்.

---

22. 4. ஹிதைஷிணா த்வயா நிக்ருஹீதோऽஹம் ச்லாக்ய ஏவாஸமிதி பாவ: | —ஸ்ரீ

22. 6. ஒ. கோப்ய: காமாத்-பயாத் கம்ஸோ த்வேஷாச் சைத்யாதயோ ந்ருபா: | ஸம்பந்தாத்-வ்ருஷ்ணய: ஸ்நேஹாத் யூயம் பக்த்யா வயம் ந்ருப || —பாக. 7. 1. 30.

ஒ. ததர்ப்பிதாகிலாசார: ஸன் காமக்ரோதாபிமானாதிகம் தஸ்மின்னேவ கரணீயம் || —நாரத பக்தி ஸூத்ரம்.

ஒ. 'கூடாரை வெல்லுஞ்சீர் கோவிந்தா.' —திருப்பாவை.

प्रह्लाद उवाच—

त्वयैव दत्तं पदमैन्द्र-मूर्जितं हृतं तदेवाद्य तथैव शोभनम्।
मन्ये महानस्य कृतो ह्यनुग्रहो विभ्रंशितो यच्छ्रिय आत्ममोहनात्
॥ २२.१६ ॥

यथा हि विद्वानपि मुह्यते यत-स्तत् को विचष्टे गतिमात्मनो यथा।
तस्मै नमस्ते जगदीश्वराय वै नारायणायाखिल-लोकसाक्षिणे
॥ २२.१७ ॥

ब्रह्मोवाच—

भूतभावन भूतेश देवदेव जगन्मय।
मुंचैनं हृतसर्वस्वं नायमर्हति निग्रहम्  ॥ २२.२१ ॥

श्रीभगवानुवाच—

ब्रह्मन् यमनुगृह्णामि तद्विशो विधुनोम्यहम्।
यन्मदः पुरुषः स्तब्धो लोकं मां चावमन्यते  ॥ २२.२४ ॥

---

பிரஹ்லாதர் கூறியது—

22. 16. (பகவானே!) உயர்வான இந்திரப் பதவி உம்மாலேயே (இவனுக்கு) கொடுக்கப்பட்டது. அதுவே இப்போது எடுத்துக்கொள்ளப்பட்டது. அது நன்மை யளிப்பதே யாகும். புத்தியை மயக்கும் செல்வத்தை விட்டுப் பிரித்தது இவனுக்குச் செய்த பெரிய அனுக்கிரகம் என்றே எண்ணுகிறேன்.

22. 17. முயற்சியுடையவனுயினும், அறிவாளியுங்கூட எதனுல் (எந்தச் செல்வச் செருக்கால்) மயக்கமடைகிருனே அத்துடன் சேர்ந்து எவன் தான் உள்ளபடி ஆத்ம கதியை உணர்வான்? (அப்படி அனைவரையும் ஆட்டுவிக்கும்) ஜகதீசுவரனும் உலகனைத்திற்கும் ஸாக்ஷியும் நாராயணனுமாகிய உமக்கு நமஸ்காரம்.

பிரம்மா கூறியது—

22. 21. உலகைக் காப்போனே! உலகை ஆள்வோனே! உலகேயாகியவனே! தேவர் தேவனே! இவனைக் கட்டினின்று விடுவிக்கவேண்டும். உடைமையனைத்தையும் இவனிடமிருந்து எடுத்துக்கொண்டபின் இனி இவனைச் சிக்ஷித்தல் தகாது.

ஸ்ரீ பகவான் கூறியது—

22. 24. பிரம்மதேவரே! எவனுக்கு அருள்புரிய எண்ணுகின்றேனே அவனுடைய பொருளை நான் போக்கிவிடுகின்றேன். பொருள் படைத்த கொழுப்பாலன்றே புருஷன் கர்வங்கொண்டு உலகையும் என்னையும் அவமதிக்கிறன்.

---

22. 16. (யஸ்யாஹ–மனுக்ருஹ்ணமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்) எவனுக்கு நான் அருள்புரிய விரும்புகிறேனே அவனுடைய பொருளை நான் அபகரிக்கிறேன்.
—பாக. 10. 88. 8.

22. 20. விந்தியாவளி கூறியது—'எங்கள் சொத்தை உங்களுக்குக் கொடுத்தோம் என்ற எண்ணமே தவறு. எங்களை மன்னித்தருளும்.'

22. 24. பகவானுடைய கிருபைக்குத் தடையாயிருப்பது சொத்தில் மமகாரமும் உடலில் அகங்காரமும். இவ்விரண்டையும் பகவான் பலியிடமிருந்து கவர்ந்துகொண்டார். பலியை வஞ்சிப்பதுபோல் லீலை புரிந்தார்.

---

22. 16. पदमैन्द्र-मच्युतं। 22. 17. तां को विचष्टे। अखिलकर्मसाक्षिणे।
22. 24. तद्वित्तं विधुनोम्यहम्। பா. பே.

जन्म-कर्म-वयो-रूप-विद्यैश्वर्य-धनादिभिः ।
यद्यस्य न भवेत् स्तंभ-स्तत्रायं मदनुग्रहः ॥ २२.२६ ॥

एष दानव-दैत्याना-मग्रणीः कीर्तिवर्धनः ।
अजैषी-दजयां मायां सीदन्नपि न मुह्यति ॥ २२.२८ ॥

एष मे प्रापितः स्थानं दुष्प्राप-ममरै-रपि ।
सावर्ण-रन्तरस्यायं भवतीन्द्रो मदाश्रयः ॥ २२.३१ ॥

इन्द्रसेन महाराज याहि भो भद्रमस्तु ते ।
सुतलं स्वर्गिभिः प्रार्थ्यं ज्ञातिभिः परिवारितः ॥ २२.३३ ॥

रक्षिष्ये सर्वतोऽहं त्वां सानुगं सपरिच्छदम् ।
सदा सन्निहितं वीर तत्र मां द्रक्ष्यते भवान् ॥ २२.३५ ॥

श्रीशुक उवाच—
एवमिन्द्राय भगवान् प्रत्यानीय त्रिविष्टपम् ।
पूरयित्वाऽदितेः काम-मशासत् सकलं जगत् ॥ २३.४ ॥

---

22. 26. பிறப்பு, தொழில், வயது, அழகு, கல்வி, செல்வாக்கு, பொருள் இவற்றால் ஒருவனுக்குக் கர்வம் ஏற்படாமலிருந்தால் அதுவே அங்கிலையில் எனது அருள் எனக் கொள்ளவேண்டும்.

22. 28. இவன் தானவர்களுள்ளும் தைத்தியர்களுள்ளும் முதன்மையானவன்; கீர்த்தி மிக்கவன்; துன்புற்றும் புத்தி கலங்கவில்லை; (இதனால்) ஜயிக்கமுடியாத மாயையை ஜயித்தவனாகின்றான்.

22. 31. தேவர்களுமடைதற்கரிய எனது ஸ்தானத்தை இவன் அடைந்துள்ளான். என்னை ஆசிரயித்த இவன் ஸாவர்ணி மன்வந்தரத்திற்கு இந்திரனாக விளங்கப் போகின்றான்.

22. 33. (பலியை நோக்கி) இந்திரஸேன மகாராஜனாகிய பலியே! உனது சுற்றத்தால் சூழப்பட்டு ஸ்வர்க்கவாசிகளும் விரும்பத்தக்க ஸுதலலோகம் செல்லலாம். உனக்கு மங்களம் உண்டாகும்.

22. 35. உன் சுற்றத்துடனும் பரிவாரத்துடனும், உன்னை நாற்புறத்தும் நான் காப்பாற்றுவேன். வீரனே! எப்போதும் உன்னருகில் உறைபவனாய் அங்கு நீ என்னைக் காண்பாய்.

ஸ்ரீ சுகர் கூறியது—

23. 4. இவ்வாறாக பகவான் ஸ்வர்க்க லோகத்தை இந்திரனுக்கு மீண்டும் அளித்து அதிதியின் ஆசையைப் பூர்த்தி செய்து உலகனைத்தையும் (உபேந்திரனாயிருந்துகொண்டு) பரிபாலித்தார்.

---

22. 35. மகாபலியின் உலகத்திற்கு ராவணன் திக்விஜயத்திற்குச் சென்றபோது பகவான் அவனைக் கட்டை விரலால் தூக்கியெறிந்தார்.

लब्धप्रसादं निर्मुक्तं पौत्रं वंशधरं बलिम् ।
निशाम्य भक्तिप्रवणः प्रह्लाद इदमब्रवीत् ॥ २३.५ ॥

प्रह्लाद उवाच—

नेमं विरिंचो लभते प्रसादं न श्री-र्न शर्वः किमुतापरे ते ।
यन्नोऽसुराणामसि दुर्गपालो विश्वाभिवन्द्यै-रपि वन्दितांघ्रिः ॥ २३.६ ॥

श्रीशुक उवाच—

अभिनन्द्य हरेराज्ञा-मुशना भगवानिति ।
यज्ञच्छिद्रं समाधत्त बलेर्विप्रर्षिभिः सह ॥ २३.१८ ॥

एवं बले-र्महीं राजन् भिक्षित्वा वामनो हरिः ।
ददौ भ्रात्रे महेन्द्राय त्रिदिवं यत् परै-र्हृतम् ॥ २३.१९ ॥

प्रजापतिपति-र्ब्रह्मा देवर्षि-पितृ-भूमिपैः ।
दक्ष-भृग्वंगिरो-मुख्यैः कुमारेण भवेन च ॥ २३.२० ॥

कश्यपस्यादितेः प्रीत्यै सर्व-भूतसुखाय च ।
लोकानां लोकपालना-मकरोद्वामनं पतिम् ॥ २३.२१ ॥

---

23. 5. (பகவானுடைய) அருளுக்குப் பாத்திரமாகியவனும் விடுதலை யடைந்தவனும் வம்சத்தை வளர்ப்பவனும் தனது பேரனாகிய பலியைப் பார்த்துப் பகவானிடம் பக்தியால் தலைவணங்கிப் பிரஹ்லாதன் பின்வருமாறு கூறினார்.

பிரஹ்லாதர் கூறியது—

23. 6. இத்தகைய அருளைப் பிரம்மா அடையவில்லை; லக்ஷ்மீதேவியும் அடையவில்லை; ருத்திரனும் அடையவில்லை; ஏனையோர் எங்ஙனம் அடைதல் கூடும்? எவர்களை உலகெல்லாம் வணங்குகிறதோ அவர்களும் வணங்கும் திருவடிகளையுடைய தாங்கள் அசுரர்களாகிய எங்களுடைய கோட்டைகளுக்குக் காவலாளராகவுமல்லவா ஆகின்றீர்?

ஸ்ரீ சுகர் கூறியது—

23. 18. பகவானுடைய கட்டளைப்படி மகிழ்ச்சியுடன் சுக்கிராசாரியர் நடுவில் தடைபட்ட பலியின் யாகத்தை மற்றப் பிரம்ம ரிஷிகளுடன் கூடிக் குறைவின்றிப் பூர்த்தி செய்வித்தார்.

23. 19. அரசே! பகவான் வாமனர் இங்ஙனம் பலியிடம் பூமியை தானம் வாங்கிய வியாஜத்தால் எதிரிகளால் அபகரிக்கப்பட்டிருந்த ஸ்வர்க்க லோகத்தைத் தன் சகோதரனை மகேந்திரனுக்குக் கொடுத்தார்.

23. 20-21. பிரஜாபதிகளுக்குத் தலைவரான பிரம்மா, தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள், பூபாலர்கள், தக்ஷர், பிருகு, அங்கிரஸ் முதலியோருடனும், குமாரராகிய ருத்திரருடனும் கசியபருக்கும் அதிதிக்கும் பிரியத்தைச் செய்யவும் எல்லா உயிர்களையும் இன்புறச் செய்யவும் வாமனரை உலகங்களுக்கும் உலக பாலகர்களுக்கும் அதிபதியாகச் செய்தார்.

---

23. 6. ஒ. க்வாஹம் ரஜ: ப்ரபவ ஈச தமோऽதிகேऽஸ்மின்
ஜாதஸ்ஸுரேதரகுலே க்வ தவானுகம்பா ।
ந ப்ரஹ்மணோ ந து பவஸ்ய ந வை ரமாயா
யன்மேऽர்பித: சிரஸி பத்மகர: ப்ரஸாத: ॥ —பாக. 7. 9. 26.

---

23. 18. अविनन्द्य । 23. 20. देवर्षिमनुभूमिपैः । பா. பே.

तदा सर्वाणि भूतानि भृशं मुमुदिरे नृप ॥ २३.२३ ॥
प्राप्य त्रिभुवनं चेन्द्र उपेन्द्र-भुजपालितः ।
श्रिया परमया जुष्टो मुमुदे गतसाध्वसः ॥ २३.२५ ॥

सर्व-मेतन्मयाऽऽख्यातं भवतः कुलनन्दन ।
उरुक्रमस्य चरितं श्रोतॄणा-मघ-मोचनम् ॥ २३.२८ ॥

पारं महिम्न उरु विक्रमतो गृणानो यः पार्थिवानि विममे स रजांसि मर्त्यः ।
किं जायमान उत जात उपैति मर्त्य इत्याह मन्त्रदृगृषिः पुरुषस्य यस्य ॥ २३.२९ ॥

य इदं देवदेवस्य हरे-रद्भुतकर्मणः ।
अवतारानुचरितं शृण्वन् याति परां गतिम् ॥ २३.३० ॥

---

23. 23. அரசே! அப்போது எல்லா ஜீவராசிகளும் மகிழ்ச்சியால் பூரித்தன.

23. 25. உபேந்திரனுடைய வலிமையால் இரக்ஷிக்கப்பட்ட மூவுலகையும் அடைந்து பயம் நீங்கியவனாகவும் சீரும் செல்வமும் மிக்கவனாகவும் இந்திரன் மகிழ்வெய்தினான்.

23. 28. குருநந்தனா! கேட்பவர்களின் பாவங்களைப் போக்கும் உருக்கிரமனுடைய சரித்திரமாகிய இது முழுதும் உனக்கு என்னால் சொல்லப்பட்டது.

23. 29. எந்த மனிதன் பூமியிலுள்ள தூசிகளை எண்ணக்கூடியவனோ அவனே உருக்கிரமனுடைய பெருமைகளின் எல்லையைக் கூறுவான். 'இந்தப் பரமபுருஷனுடைய பெருமைகளின் எல்லையைக் காணும் ஆற்றலை இதுவரை உண்டான மனிதனோ இனி உண்டாகப்போகிறவனோ அடையவா முடியும்?' என்று மந்த்ர-த்ரஷ்டாவான ரிஷி (வசிஷ்டர்) கூறியுள்ளார்.

23. 30. வியக்கத்தக்க செயல்களை யுடையவனும் தேவதேவனுமான ஹரியின் அவதார சரித்திரமாகிய இதைக் கேட்டமாத்திரத்திலேயே ஒருவன் ஒப்புயர்வற்ற பதவியை எய்துவான்.

இங்ஙனம் வாமனாவதாரக் கதை முற்றும்

---

23. 29. ஒ. 'விஷ்ணோர்-நு-கம் வீர்யாணி ப்ரவோசம்' விஷ்ணு ஸூக்தம் 'யதா பார்த்திவ பரமாணு-கணன-மசக்யம் ததா விஷ்ணோர்-குணகணன-மப்யசக்ய-மித்யர்த்த:' —ஸ்ரீ.

23. 30. ஒ. ஓங்கியுலகளந்த உத்தமன் பேர்பாடி நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாந் திங்கள் மும்மாரி பெய்து ஓங்குபெருஞ் செந் நெல்லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதிற் பொறிவண்டு கண்படுப்பத் தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.
—திருப்பாவை.

## ॥ मत्स्यावतारकथा ॥

राजोवाच—

भगवन् श्रोतुमिच्छामि हरे-रद्भुतकर्मणः।
अवतारकथा-माद्यां मायामत्स्य-विडंबनम् ॥ २४.१ ॥

श्रीशुक उवाच—

तत्र राजर्षिः कश्चि-न्नाम्ना सत्यव्रतो महान्।
नारायणपरोऽतप्यत् तपः स सलिलाशनः ॥ २४.१० ॥

सोऽसावस्मिन् महाकल्पे तनयः स विवस्वतः।
श्राद्धदेव इति ख्यातो मनुत्वे हरिणार्पितः ॥ २४.११ ॥

एकदा कृतमालायां कुर्वतो जलतर्पणम्।
तस्यांजल्युदके काचिच्छफर्येकाभ्यपद्यत ॥ २४.१२ ॥

सत्यव्रतोऽञ्जलिगतां सह तोयेन भारत।
उत्ससर्ज नदीतोये शफरीं द्रविडेश्वरः ॥ २४.१३ ॥

---

## மத்ஸ்யாவதாரம்

அரசன் கூறியது—

24. 1. பகவத் ஸ்வரூபியே! அத்புதமான செயல்களையுடைய ஹரியின் ஆதி அவதாரக் கதையாகிய மாயா மத்ஸ்ய லீலா வைபவத்தைக் கேட்க விரும்புகிறேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

24. 10. முன்னொரு காலத்தில் ஸத்தியவிரதன் எனும் பெயருடன்கூடியவனும் பெருமைமிக்க ரிஷி போன்றவனுமான அரசன் ஒருவன் இருந்தான். அவன் சித்தத்தை நாராயணனிடம் வைத்து நீரைமட்டும் ஆகாரமாய்க் கொண்டு தவம் செய்து வந்தான்.

24. 11. அவனே இந்த மகா கல்பத்தில் விவஸ்வானுக்குப் புத்திரனாய்த் தோன்றிச் சிராத்ததேவன் எனப் பெயர் பெற்று பகவானால் மனுவாக ஏற்படுத்தப் பட்டிருப்பவன்.

24. 12. ஒரு சமயம் கிருதமாலா நதியில் ஜலதர்ப்பணம் செய்கையில் அவனுடைய அஞ்ஜலி ஜலத்தில் ஒரு மீன் வந்தது.

24. 13. பாரதா! திராவிட ராஜனாகிய அந்த ஸத்தியவிரதன் அஞ்ஜலியில் ஜலத்துடன் வந்த மீனை நதி ஜலத்தில் விட்டான்.

---

24. 10. **स नृपः सलिलाशनः।**

तमाह सातिकरुणं महाकारुणिकं नृपम् ।
यादोभ्यो ज्ञातिघातिभ्यो दीनां मां दीनवत्सल ।
कथं विसृजसे राजन् भीतामस्मिन् सरिज्जले ॥ २४.१४ ॥

तस्या दीनतरं वाक्य-माश्रुत्य स महीपतिः ।
कलशाप्सु निधायैनां दयालु-र्निन्य आश्रमम् ॥ २४.१६ ॥

सा तु तत्रैकरात्रेण वर्धमाना कमण्डलौ ।
अलब्ध्वाऽऽत्मावकाशं वा इदमाह महीपतिम् ॥ २४.१७ ॥

नाहं कमण्डलावस्मिन् कृच्छ्रं वस्तुमिहोत्सहे ।
कल्पयौकः सुविपुलं यत्राहं निवसे सुखम् ॥ २४.१८ ॥

इत्युक्तः सोऽनयन्मत्स्यं तत्र तत्राविदासिनि ।
जलाशये संमितं तं समुद्रे प्राक्षिपज्झषम् ॥ २४.२३ ॥

क्षिप्यमाण-स्तमाहेद-मिह मां मकरादयः ।
अदन्त्यतिबला वीर मां नेहोत्स्रष्टु-मर्हसि ॥ २४.२४ ॥

24. 14. கருணைமிக்க அவ்வரசனிடம் அந்த மீன் மிகுந்த வருத்தத்துடன், "அரசே! எளியோர்க்கிரங்குவோனே! சுற்றத்தைக் கொல்லும் ஜலஜந்துக்களிடம் பயந்தவனும் எளியேனுமாகிய என்னை (மீண்டும்) நதி ஜலத்தில் எங்ஙனம் நீங்கள் விடலாம்?" என்றது.

24. 16. மிகவும் வருத்தத்துடன் மீன் சொல்லிய வார்த்தையைக் கேட்டு இரக்க முடைய அரசன் அதைக் கமண்டுலு ஜலத்தில் போட்டு ஆசிரமங் கொண்டுபோனான்.

24. 17-18. கமண்டுலுவில் ஓரிரவு வளர்ந்த பின்னர் தனக்கு இடம் போதாமல் அரசனிடம், "நான் இந்தக் கமண்டுலுவில் இங்கு நெருக்கடியில் வசிக்க முடியவில்லை. நான் எங்கு சுகமாக வசிக்கலாமோ அப்படிப்பட்ட விஸ்தாரமான இடத்தை யோசித் தளிக்கவேண்டும்" என்று கூறிற்று.

24. 23. இவ்வாறு வேண்டப்பட்டு அம்மீனை அவன் அப்போது (ஒன்றைவிட ஒன்று பெரியதான) ஒவ்வொரு நீர் நிலையில் சேர்க்கலானான். நீர் நிலையளவுக்குப் பெருத்துவிட்ட அம்மீனைச் சமுத்திரத்தில் விடுத்தான்.

24. 24. விடப்படும்போது அது, "வீரனே! இங்கு வலிமை மிகுந்த மகரம் முதலியவை என்னைத் தின்றுவிடுமாதலால் இங்கு என்னை நீர் விடுதல் தகாது" என்று கூறிற்று.

---

24. 17. अलब्ध्वात्मावकाशं साविदमाह । பா. பே.

एवं विमोहित-स्तेन वदता वल्गु भारतीम् ।
तमाह को भवानस्मान् मत्स्यरूपेण मोहयन् ॥ २४.२५ ॥

श्रीभगवानुवाच—

सप्तमेऽद्यतनादूर्ध्वं-महन्येत-दरिन्दम ।
निमंक्ष्यत्यप्ययांभोधौ त्रैलोक्यं भूर्भुवादिकम् ॥ २४.३२ ॥

त्रिलोक्यां लीयमानायां संवर्ताम्भसि वै तदा ।
उपस्थास्यति नौः काचिद् विशाला त्वां मयेरिता ॥ २४.३३ ॥

त्वं तावदोषधीः सर्वा बीजान्युच्चावचानि च ।
सप्तर्षिभिः परिवृतः सर्वसत्त्वोपबृंहितः ॥
आरुह्य बृहतीं नावं विचरिष्यस्यविक्लवः ॥ २४.३४ ॥

मदीयं महिमानं च परब्रह्मेति शब्दितम् ।
वेत्स्य-स्यनुगृहीतं मे संप्रश्नै-र्विवृतं हृदि ॥ २४.३८ ॥

इत्थ-मादिश्य राजानं हरि-रन्तरधीयत ।
सोऽन्ववैक्षत तं कालं यं हृषीकेश आदिशत् ॥ २४.३९ ॥

---

24. 25. அழகான பேச்சுப் பேசும் அந்த மீனிடம் மயங்கிய அவன் 'மீன் வடிவில் எங்களை மயங்கவைக்கும் தாங்கள் யார்?' என அம்மீனைக் கேட்டான்.

ஸ்ரீ பகவான் கூறியது—

24. 32. 'சத்துருக்களை யடக்குவோனே! இன்று முதல் ஏழு நாள் கடந்ததும் பூலோகம் புவர்லோகம் முதலிய மூவுலகும் பிரளய ஜலத்தில் முழுகிவிடப்போகிறது.

24. 33. 'மூவுலகும் அங்ஙனம் பிரளய ஜலத்தில் முழுகியபோது பெரியதோர் ஓடம் என்னால் செலுத்தப்பட்டு உன்னிடம் வந்து சேரும்.

24. 34. 'நீ அப்போது எல்லாவகையான ஒஷதிகளையும் எல்லாவகையான விதைகளையும் எல்லாப் பிராணிகளையும் நிரப்பிக்கொண்டு ஸப்த ரிஷிகள் சூழ அந்த ஓடத்திலேறிப் பயமின்றிச் சஞ்சரிக்கப் போகிறாய்.

24. 38. 'பரப் பிரம்மம் என்று வேதம் கூறும் எனது மகிமை உனது கேள்விகளால் உன் உள்ளத்தில் விளங்கும்படி என்னால் அனுக்கிரகிக்கப்பட்டு அறிவாய்.'

24. 39. அரசனுக்கு இவ்வாறு உபதேசித்துவிட்டு பகவான் அந்தர்த்தானமடைந்தார். பகவான் எந்தக் காலத்தைக் குறிப்பிட்டாரோ அதை அரசன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

ततः समुद्र उद्वेलः सर्वतः प्लावयन् महीम् ।
वर्धमानो महामेघै-र्वर्षद्भिः समदृश्यत ॥ २४.४१ ॥

ध्यायन् भगवतादेशं ददृशे नावमागताम् ।
तामारुरोह विप्रेन्द्रै-रादायौषधि-वीरुधः ॥ २४.४२ ॥

सोऽनुध्यात-स्ततो राज्ञः प्रादुरासीन्महार्णवे ।
एक-शृंगधरो मत्स्यो हैमो नियुत-योजनः ॥ २४.४४ ॥

निबध्य नावं तच्छृंगे यथोक्तो हरिणा पुरा ।
वरत्रेणाहिना तुष्ट-स्तुष्टाव मधुसूदनम् ॥ २४.४५ ॥

राजोवाच—

त्वं सर्वलोकस्य सुहृत् प्रियेश्वरो ह्यात्मा गुरु-र्ज्ञान-मभीष्टसिद्धिदः ।
तथापि लोको न भवन्त-मन्ध-धी-र्जानाति सन्तं हृदि बद्धकामः ॥ २४.५२ ॥

---

24. 41. (அந்தக் காலமும் நெருங்கிற்று.) பெரும் மேகங்கள் மழை பொழிய ஸமுத்திரம் பொங்கிக் கரைபுரண்டு எங்கும் பூமியை முழுக்குவதைக் கண்டான்.

24. 42. பகவானுடைய உபதேசத்தை எண்ணுகையில் அங்கு வந்த ஓடத்தைக் கண்டான். ஓஷதிகளையும் விதைகளையும் எடுத்துக்கொண்டு பிரம்ம ரிஷிகளுடன் அதில் ஏறினன்.

24. 44. அரசனால் தியானிக்கப்பட்ட பகவான் ஒற்றைக் கொம்புடன் லக்ஷம் யோஜனை நீண்டதொரு பொன் மீனுகக் காட்சியளித்தார்.

24. 45. முன்பே பகவானுல் சொல்லப்பட்ட வண்ணம் ஓடத்தை அதன் கொம்பில் வாசுகியாகிய கயிற்றால் கட்டிவிட்டு மகிழ்ச்சி பொங்க மதுஸூதனனாகிய பகவானைத் துதித்தான்.

அரசன் (ஸத்தியவிரதன்) கூறியது—

24. 52. உலகுக்கெல்லாம் நீர் நண்பரும், பிரியமானவரும், இறைவரும், ஆத்மாவும், குருவும் அறிவையும் இஷ்ட சித்தியையளிப்பவரும் ஆகின்றீர். எனினும் காமத்தில் கட்டுண்டு அறிவிழந்து குருடர்களாகிய உலக மக்கள் தமது இருதயத்தி லுறையும் உம்மை அறிந்துகொள்வதில்லை.

---

24. 41. (அத்ரேதம் சிந்த்யம் கிமயம் மஹாப்ரளயோ நைனந்-திநேவேதி) இது மஹாப் பிரளயமா அல்லது பிரம்மாவின் ஒவ்வொரு பகல் முடிவிலும் ஏற்படும் பிரளயமா அல்லது வேறு என்று யோசிக்கவேண்டும்.

மகாப் பிரளயத்தில் பிரகிருதி லயமேற்படுவதால் இது மகாப் பிரளயமன்று. பிரம்மாவின் தினந்தோறும் ஏற்படும் பிரளயமன்று, அது ஆறுவதாகிய சாக்ஷுஷ மன்வந்தரத்தில் இல்லை. (நைவாயம் வாஸ்தவ: கோபி ப்ரளய: கிந்து ஸத்யவ்ரதஸ்ய. ஜ்ஞானோபதேசாயாவிர்ப்பூதோ பகவான் வைராக்யார்த்தம் அகஸ்மாத் ப்ரளய மிவ தர்சயாமாஸ யதா ஸ்மின்னேவ வைவஸ்வத மன்வந்தரே மார்க்கண்டேயாய தர்சிதவான்). இது உண்மையான பிரளயமன்று. ஸத்யவிரதனுடைய ஞானோபதேசத்திற்காகத் தோன்றிய பகவான் வைராக்கியத்தைப் புகட்டப் பிரளயத்தைப்போன்ற தோற்றத்தை இந்த வைவஸ்வத மன்வந்தரத்தில் மார்க்கண்டேயருக்குக் காண்பித்தாற்போல் காண்பித்தார். —ஸ்ரீதரர்.

---

24. 42. ध्यायन् भगवतः पादौ । 24. 52. अथापि लोको न भवन्त-मन्धधीः ।

तं त्वामहं देववरं वरेण्यं प्रपद्य ईशं प्रतिबोधनाय।
छिन्ध्यर्थ-दीपै-र्भगवन् वचोभि-र्ग्रन्थीन् हृदय्यान् विवृणु स्वमोकः ॥ २४.५३ ॥

श्रीशुक उवाच—

इत्युक्तवंतं नृपतिं भगवानादिपूरुषः।
मत्स्यरूपी महांभोधौ विहरं-स्तत्त्व-मब्रवीत् ॥ २४.५४ ॥

प्रलयपयसि धातुः सुप्तशक्ते-र्मुखेभ्यः
श्रुतिगण-मपनीतं प्रत्युपादत्त हत्वा।
दितिज-मकथयद् यो ब्रह्म सत्यव्रतानां
तमह-मखिलहेतुं जिह्म-मीनं नतोऽस्मि ॥ २४.६१ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां संहितायां पारमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीव-ब्रह्मविद्यायां अष्टमः स्कन्धः समाप्तः॥

---

24. 53. தேவ சிரேஷ்டரும், தியான சிரேஷ்டரும், ஈசுவரருமாகிய உம்மை அறிவின் விளக்கத்திற்காகச் சரணடைகின்றேன். ஐயனே! ரஹஸ்யார்த்தங்களின் விளக்குப் போன்ற சொற்களால் இருதயத்திலுள்ள முடிச்சுகளைச் சேதித்து உமது உண்மையான ஸ்வரூபத்தைக் காட்டி யருளவேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

24. 54. இவ்வாறு கூறிய அரசனை நோக்கி ஆதி புருஷனும் மத்ஸ்ய வடிவெடுத்தவனுமாகிய பகவான் மகாஸமுத்திரத்தில் விளையாடிக்கொண்டே தத்துவத்தை உபதேசித்தார்.

24. 61. பிரளய ஜலத்தில் சக்திகளொடுங்கி நித்திரை செய்த பிரம்மாவின் முகங்களினின்று வேதங்களை யபகரித்த (குதிரை முக) அசுரனைக் கொன்று வேதங்களை மீண்டும் பிரம்மாவிடம் சேர்ப்பித்தவரும், ஸத்தியவிரத ராஜனுக்கும் ஸத்திய விரதம் பூண்டவர்களான மகரிஷிகளுக்கும் பிரம்ம ஞானத்தை உபதேசித்தவரும், அனைத்திற்கும் காரணமாகியவரும், மாயா மத்ஸ்ய ரூபியும் எவரோ அவரை நான் வணங்குகின்றேன்.

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸ புத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணாயிரம் சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை எனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத மஹாபுராணத்தில் எட்டாவது ஸ்கந்தம் முற்றும்.

---

24. 53. ஒ. அவர்களிடம் அருளால் நான் அவர்கள் உள்ளத்தில் நிலைபெற்றுப் பிரகாசிக்கும் ஞான தீபத்தால் அஜ்ஞானத்தாலுண்டான இருளை நாசம் செய்கிறேன்.
—கீ. 10. 11.

24. 61. **ஸத்யவ்ரதானாம்**—ஸத்யவ்ரதஸ்ய, ருஷீணாஞ்ச। ச்சத்ரிணோ கச்சந்தீதிவத் லிங்கஸமவாய ந்யாயாத் பஹுவசனம்। **ஜிஹ்மமீனம்**—மாயாமத்ஸ்யம்। —ஸ்ரீதரர்.

---

24. 53. **देवदेवं।**　　　　　　　　　　பா. பே.

# ॥ नवमः स्कन्धः ॥

## ॥ सूर्यवंशवर्णनम् ॥ १८ ॥

राजोवाच—

योऽसौ सत्यव्रतो नाम राजर्षि-र्द्रविडेश्वरः।
ज्ञानं योऽतीत-कल्पान्ते लेभे पुरुषसेवया ॥ १.२ ॥

स वै विवस्वतः पुत्रो मनुरासी-दिति श्रुतम्।
त्वत्तस्तस्य सुताश्चोक्ता इक्ष्वाकु-प्रमुखा नृपाः ॥ १.३ ॥

तेषां वंशं पृथग् ब्रह्मन् वंश्यानु-चरितानि च।
कीर्तयस्व महाभाग नित्यं शुश्रूषतां हि नः ॥ १.४ ॥

श्रीशुक उवाच—

परावरेषां भूताना-मात्मा यः पुरुषः परः।
स एवासीदिदं विश्वं कल्पान्तेऽन्यन्न किंचन ॥ १.८ ॥

---

# ஒன்பதாவது ஸ்கந்தம்

## 18. சூரிய வம்ச வர்ணனை

அரசன் கூறியது—

1. 2-3. ஸத்திய விரதன் என்ற பெயருடன், திராவிட மன்னனும் ராஜரிஷியுமாகிப் பரமபுருஷ சேவையால் சென்ற கல்பத்தின் முடிவில் ஞானத்தை யடைந்தவர் எவரோ அவரே விவஸ்வானுக்குப் புத்திரனுகவும் மனுவாகவும் ஆனூர் என்று உம்மிடமிருந்து கேட்டோம். அவருடைய புத்திரர்கள் இக்ஷ்வாகு முதலிய அரசர்கள் எனவும் கூறப் பட்டுள்ளனர்.

1. 4. பிரம்ம ஸ்வரூபியே! மகா பாக்கியசாலியே! தனித் தனியாக அவர்க ளுடைய வம்சத்தையும் வம்ச சரித்திரங்களையும் கேட்பதில் எப்போதும் ஆவலுள்ள எங்களுக்குக் கூறியருளுதல் வேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 8. பராபரப் பிரபஞ்சமனைத்திற்கும் ஆத்மாவான பரமபுருஷன் எவனோ அவன் ஒருவன்தான் கல்பத்தின் முடிவில் இருந்தான். இவ்வுலகோ வேறு எதுவோ சிறிதும் இல்லை.

---

ஒன்பதாவது ஸ்கதம்—

ஸ்ம தர்ம-சுத்த-ஸத்வானாம் அந்தரங்கே ச ஸத்கதா।
ஸூர்ய-ஸோமான்வயாக்யானைஃ ஈசானு ஸங்கதே ப்ரயதே ॥ —ஸ்ரீ.

இந்த ஸ்கந்தத்தில் பாகவதத்தின் ஏழாவது லக்ஷணமாகக் குறிப்பிடப்பட்ட 'ஈசானு கதை' கூறப்படுகிறது. பா. பே.

---

1. 8. यः प्रकृतेः परः।

तस्य नाभेः समभवत् पद्मकोशो हिरण्मयः ।
तस्मिन् जज्ञे महाराज स्वयंभू-श्चतुराननः ॥ १.९ ॥

मरीचि-र्मनस-स्तस्य जज्ञे तस्यापि कश्यपः ।
दाक्षायण्यां ततोऽदित्यां विवस्वा-नभवत् सुतः ॥ १.१० ॥

ततो मनुः श्राद्धदेवः संज्ञाया-मास भारत ।
श्रद्धायां जनयामास दशपुत्रान् स आत्मवान् ॥ १.११ ॥

इक्ष्वाकु-नृग-शर्याति-दिष्ट-धृष्ट-करूषकान् ।
नरिष्यन्तं पृषध्रं च नभगं च कविं विभुः ॥ १.१२ ॥

अप्रजस्य मनोः पूर्वं वसिष्ठो भगवान् किल ।
मित्रावरुणयो-रिष्टिं प्रजार्थ-मकरोत् प्रभुः ॥ १.१३ ॥

---

1.9. அரசே! அவருடைய நாபியில் பொன்மயமான பத்ம கோசம் உண்டாயிற்று. அதில் நான்முகப் பிரம்மா தானாகவே உண்டானார்.

1.10. அவருடைய மனதினின்று மரீசி தோன்றினார்; அவரிடம் கசியபர்; அவருக்கு தக்ஷபுத்திரியாகிய அதிதியிடம் விவஸ்வான் புத்திரனாகப் பிறந்தார்.

1.11-12. பாரதா! அவருக்கு ஸம்ஜ்ஞா தேவியிடம் சிராத்ததேவர் என்ற மனு பிறந்தார். ஆத்மவானான அந்தப் பிரபு சிரத்தை எனும் மனைவியிடம் இக்ஷ்வாகு, நிருகன், சர்யாதி, திஷ்டன், திருஷ்டன், கருஷகன், நரிஷயந்தன், ப்ருஷத்ரன், நபகன், கவி என்ற பத்துப் புத்திரர்களைப் பெற்றார்.

1.13. பூர்வத்தில் இம்மனுவுக்குப் புத்திரர்களில்லாதபோது வல்லமை வாய்ந்த வசிஷ்ட பகவான் மித்ரா வருணர்களை உத்தேசித்துப் புத்திர காமேஷ்டியைச் செய்வித்தார்.

---

1.9. **பொன் மயமான பத்ம கோசம்**—பத்மம் என்றால் நூறாயிரம் கோடி. கால வ்யூஹந்தான் பத்மம். காலத்தையும் விழுங்கிய பகவானிடமிருந்து காலம் கமல ரூபமாய் நாபியில் தோன்றிற்று. பொன் என்பது சுத்த ஸத்துவம்.

1.11.

நாராயணன்
|
பிரம்மா
|
மரீசி
|
கச்யபர் = அதிதி
|
விவஸ்வான் = ஸம்ஜ்ஞாதேவி
|
சிராத்ததேவன் = சிரத்தை
|
(இளை) ஸுத்யும்னன் | இக்ஷ்வாகு | நிருகன் | சர்யாதி | திஷ்டன் | த்ருஷ்டன் | கருஷகன் | நரிஷ்யந்தன் | ப்ருஷத்ரன் | நபகன் | கவி

1.12. கவி என்ற பத்தாவது புத்திரனுக்கு வஸுமான் என்ற பெயருமுண்டு. இவன் இளமையில் இறந்துவிட்டதால் ஹரிவம்சம் முதலிய இடங்களில் இவனை விட்டு ஒன்பது பேரை மட்டும் இக்ஷ்வாகு புத்திரர்களாகக் கூறப்பட்டுள்ளது.

---

1.9. स्वयंभूर्नभावनः । பா. பே.

तत्र श्रद्धा मनोः पत्नी होतारं समयाचत ।
दुहित्रर्थ-मुपागम्य प्रणिपत्य पयोव्रता ॥ १.१४ ॥

प्रेषितोऽध्वर्युणा होता ध्यायं-स्तत् सुसमाहितः ।
हविषि व्यचरत् तेन वषट्कारं गृणन् द्विजः ॥ १.१५ ॥

होतु-स्तद्व्यभिचारेण कन्येला नाम साऽभवत् ।
तां विलोक्य मनुः प्राह नातिहृष्टमना गुरुम् ॥ १.१६ ॥

विपर्यय-महो कष्टं मैवं-स्याद् ब्रह्मविक्रिया ।
यूयं मन्त्रविदो युक्ता-स्तपसा दग्ध-किल्बिषाः ॥ १.१७ ॥

तन्निशम्य वचस्तस्य भगवान् प्रपितामहः ।
होतु-र्व्यतिक्रमं ज्ञात्वा बभाषे रविनन्दनम् ॥ १.१९ ॥

एतत् संकल्पवैषम्यं होतुस्ते व्यभिचारतः ।
तथापि साधयिष्येहं सुप्रजास्त्वं स्वतेजसा ॥ १.२० ॥

---

1. 14. அப்போது பயோவிரத மனுஷ்டித்துவந்த மனுவின் பத்தினியான சிரத்தை, ஹோதாவை யணுகி நமஸ்கரித்துப் பெண் குழந்தை வேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

1. 15. அத்வர்யுவிடம் உத்திரவு பெற்று ஹோதாவாகிய பிராம்மணர் அவளுடைய பிரார்த்தனையை ஹவிஸ்ஸில் முழுமனதுடன் தியானித்துக்கொண்டு வஷட்காரத்தை உச்சரித்து ஹோமம் செய்தார்.

1. 16-17. ஹோதாவின் அந்த மாற்றுச் செயலால் ஒரு பெண் பிறந்தாள். அவள் பெயர் இளை. மனு அவளைப் பார்த்து மனதில் அதிகமான ஸந்தோஷமில்லாத வராய் குருவை நாடி, "அந்தோ! இந்த விபரீதம் வருந்தத்தக்கது. வேதக் கிரியை இவ்வண்ணம் தவறுதலடைதல் கூடாது. நீங்கள் மந்திரங்களை யறிந்தவர்களும், ஒருமைப்பட்ட மனதுடையவர்களும், தவத்தால் தோஷங்களை எரித்தவர்களுமாயிற்றே" என்றார்.

1. 19-20. வசிஷ்ட பகவான் அவருடைய அவ்வார்த்தையைக் கேட்டு ஹோதாவின் தவறுதலையறிந்து ரவிநந்தனராகிய மனுவிடம் "அரசே! உமது ஸங்கல்பத்திற்கு மாறான இது ஹோதாவின் தவறுதலால் ஏற்பட்டது. எனினும் நான் எனது தவ வலிமையால் உமக்கு நல்ல புத்திரனைக் கூட்டி வைக்கிறேன்" என்றார்.

---

1. 14. **பயோ வ்ரதம்**—பாக. 8. 16. 25. பார்க்க.

1. 19. **ப்ரபிதாமஹ:**—சுகஸ்ய பித்ரு ப்ரபிதாமஹத்வேனமனோர் - மரீசி - ப்ராத்ருத்வேனச ப்ரபிதாமஹோ வஸிஷ்ட: ॥

---

1. 15. **होता तद्ध्यायन् व्यचरत् तदा । गृहीते तेन हविषि वषट्कारं ।** பா. பே.

एवं व्यवसितो राजन् भगवान् स महायशाः ।
अस्तौषी-दादिपुरुष-मिलायाः पुंस्त्व-काम्यया　　॥ १.२१ ॥

तस्मै कामवरं तुष्टो भगवान् हरिरीश्वरः ।
ददाविलाभवत् तेन सुद्युम्नः पुरुषर्षभः　　॥ १.२२ ॥

स एकदा महाराज विचरन् मृगयां वने ।
सुकुमारवनं मेरो-रधस्तात् प्रविवेश ह　　॥ १.२५ ॥

यत्रास्ते भगवांञ्छर्वो रममाणः सहोमया ।
अपश्यत् स्त्रियमात्मान-मश्वं च बडवां नृप　　॥ १.२६ ॥

तथा तदनुगाः सर्वे आत्मलिंग-विपर्ययम् ।
दृष्ट्वा विमनसोऽभूवन् वीक्षमाणाः परस्परम्　　॥ १.२७ ॥

सापि तं चकमे सुभ्रूः सोमराजसुतं पतिम् ।
स तस्यां जनयामास पुरूरवस-मात्मजम्　　॥ १.३५ ॥

एवं स्त्रीत्व-मनुप्राप्तः सुद्युम्नो मानवो नृपः ।
सस्मार स्वकुलाचार्यं वसिष्ठमिति शुश्रुम　　॥ १.३६ ॥

---

1. 21. அரசே! பெரும் புகழ்பெற்ற வசிஷ்ட பகவான் இங்ஙனம் நிச்சயித்து இளைக்கு ஆண்மையை விரும்பி ஆதிபுருஷனைத் துதித்தார்.

1. 22. பகவானும் ஈசுவரனுமாகிய ஹரி ஸந்தோஷமடைந்து அவர் விரும்பிய வரனை அளித்தார். அதனால் இளை ஸுத்யும்னன் என்ற புருஷ சிரேஷ்டனாயினள்.

1. 25-26. அரசே! ஒரு சமயம் வேட்டையாடிக்கொண்டு வனத்தில் சஞ்சரிக்கையில் மேரு பர்வதத்தின் கீழேயுள்ள ஸுகுமாரவனத்தில் புகுந்தான். அங்கு உமாதேவியுடன் பகவான் சிவன் ரமித்துக் கொண்டிருக்கிறார். அங்கு புகுந்ததும் தான் ஸ்திரீயாகவும் தன் குதிரை பெண் குதிரையாகவும் மாறிவிட்டதை ஸுத்யும்னன் கண்டான்.

1. 27. அவ்வாறே அவனுடன் சென்றவர்களனைவரும் தங்கள் குறி விபரீதமடைந்ததைக் கண்டு, ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு மனமுடைந்தவர்களாயினர்.

1. 35. (நாளடைவில்) அழகிய புருவமுடைய ஸ்திரீயாகிய அவள் (இளை), ஸோமராஜன் புத்திரனாகிய புதனைப் பதியாக அடைந்தாள். அந்த புதன் அவளிடத்தில் புரூரவஸ் என்ற புத்திரனைப் பிறப்பித்தான்.

1. 36. இவ்வாறு மீண்டும் பெண்தன்மையடைந்த மனுபுத்திரனாகிய ஸுத்யும்ன பூபதி தனது குலகுருவாகிய வசிஷ்டரை நினைந்து போற்றினான் என்று கேள்வி.

स तस्य तां दशां दृष्ट्वा कृपया भृशपीडितः।
सुद्युम्नस्याशयन् पुंस्त्व-मुपाधावत शंकरम् ॥ १.३७ ॥

श्रीशंकर उवाच—

मासं पुमान् स भविता मासं स्त्री तव गोत्रजः।
इत्थं व्यवस्थया कामं सुद्युम्नोऽवतु मेदिनीम् ॥ १.३९ ॥

आचार्यानुग्रहात्कामं लब्ध्वा पुंस्त्वं व्यवस्थया।
पालयामास जगतीं नाभ्यनन्दन् स्म तं प्रजाः ॥ १.४० ॥

श्रीशुक उवाच—

तस्योत्कलो गयो राजन् विमलश्च सुतास्त्रयः।
दक्षिणापथ राजानो बभूवु-र्धर्मवत्सलाः ॥ १.४१ ॥

शर्याति-र्मानवो राजा ब्रह्मिष्ठः स बभूव ह।
यो वा अंगिरसां सत्रे द्वितीयमह ऊचिवान् ॥ ३.१ ॥

---

1. 37. அவரும் அவனுடைய அந்த நிலையைக் கண்டு மிகவும் வருந்தி, மன மிரங்கி ஸுத்யும்னனுக்கு ஆண்மையை வேண்டிச் சங்கரரை உபாஸித்தார்.

ஸ்ரீ சங்கரர் கூறியது—

1. 39. உம்மை குருவாய்க்கொண்டு பிறந்த அவன் ஒரு மாதம் ஆணுகவும் ஒரு மாதம் பெண்ணுகவும் இருக்கட்டும். இந்தக் கட்டுப்பாட்டுடன் இஷ்டப்படி ஸுத்யும்னன் பூமியை ஆளலாம்.

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 40. குருவின் அனுக்கிரகத்தால் ஒரு கட்டுப்பாட்டுடன் ஆண்மையைப் பெற்று பூமியை ஆண்டான் எனினும் பிரஜைகள் அவனிடம் ஸந்தோஷமடையவில்லை.

1. 41. அரசே! ஸுத்யும்னனுக்கு உத்கலன், கயன், விமலன் என்ற மூன்று குமாரர்கள். அவர்கள் தர்மத்தில் ஊக்கமுள்ளவர்களாய் தக்ஷிணபத அரசர்களாயினர்.

(இனி இரண்டாவது அத்தியாயத்தில் மனுபுத்திரர்களான ப்ருஷத்ரன், கருஷகன் நரிஷ்யந்தன், திஷ்டன் ஆகிய நால்வரின் வம்சவிஸ்தாரம் கூறப்படுகிறது.)

3. 1. மனுவின் (மற்றொரு) புத்திரனுகிய சர்யாதி மகாராஜா வேதத்தை நன் குணர்ந்தவனுயிருந்தார். (ஒரு சமயம்) அங்கிரசுகளின் யாகத்தில் இரண்டாவது நாள் செய்ய வேண்டிய கிரியைகளை அவன் எடுத்துக் கூறினுன் என்பது பிரசித்தம்.

---

3. 1. ப்ரஹ்மிஷ்ட:—வேதார்த்த தத்வஜ்ஞ: | த்விதீயமஹ:-த்விதீயே஽ன்ஹி

---

1. 39. मासं स्त्री तपसा तव।
1. 41. उत्तरापथराजानो बभूवुः। பா. பே.

सुकन्या नाम तस्यासीत् कन्या कमललोचना ।
तया सार्धं वनगतो ह्यगमच्च्यवनाश्रमम् ॥ ३.२ ॥

सा सखीभिः परिवृता विचिन्वत्यङ्घ्रिपान् वने ।
वल्मीकरन्ध्रे ददृशे खद्योते इव ज्योतिषी ॥ ३.३ ॥

ते दैवचोदिता बाला ज्योतिषी कण्टकेन वै ।
अविध्यन्मुग्धभावेन सुस्रावासृक् ततो बहु ॥ ३.४ ॥

सुकन्या प्राह पितरं भीता किंचित् कृतं मया ।
द्वे ज्योतिषी अजानन्त्या निर्भिन्ने कण्टकेन वै ॥ ३.७ ॥

दुहितु-स्तद्वचः श्रुत्वा शर्याति-र्जात-साध्वसः ।
मुनिं प्रसादयामास वल्मीकान्त-र्हितं शनैः ॥ ३.८ ॥

तदभिप्राय-माज्ञाय प्रादाद् दुहितरं मुनेः ।
कृच्छ्रान्मुक्तस्त-मामन्त्य पुरं प्रायात् समाहितः ॥ ३.९ ॥

---

3. 2. அவனுக்கு ஸுகன்யை எனப் பெயர் பூண்ட ஒரு பெண் இருந்தாள். அவள் தாமரையிதழ்போன்றழகிய கண் படைத்தவள். அவளுடன் ஒருகால் வனஞ் சென்று சியவன மகரிஷியின் ஆசிரமத்தை அடைந்தான்.

3. 3. அப்போது ஸுகன்யை தன் தோழிகள் சூழ வனத்திலுள்ள மரங்களை யெல்லாம் பரிசீலித்து வந்தாள். ஒரு புற்றின் துவாரத்தில் சூரியன் போன்று பிரகாசிக்கும் இரண்டு ஒளிகளைக் கண்டாள்.

3. 4. அறியாமையால் அச்சிறுமி விதிவசமாக ஒளிகளை முள்ளால் குத்தினாள். அவற்றினின்று ரத்தம் அதிகமாகப் பெருகிற்று.

3. 7. ஸுகன்யை பயந்து தந்தையிடம் சென்று 'நான் அறியாமையால் ஒன்று செய்துவிட்டேன். (புற்றில்) இரண்டு ஒளிகளைக் கண்டு முள்ளால் கிழித்துவிட்டேன்' என்றாள்.

3. 8. பெண்ணின் அச் சொல்லைக் கேட்டுச் சர்யாதி பயந்து புற்றில் மறைந்திருந்த முனிவரை மெதுவாகச் சமாதானப்படுத்த முயன்றான்.

3. 9. அவருடைய நோக்கத்தைத் தெரிந்துகொண்டு அம் முனிவருக்கு (பணிவிடை செய்ய) பெண்ணைக் கொடுத்தான். சங்கடத்திலிருந்து விடுபட்டு முனிவரிடம் விடைபெற்று மனதைத் தேற்றிக்கொண்டு நகரத்திற்குத் திரும்பினான்.

---

3. 2. ச்யவனர்—இவர் பிருகுவின் புத்திரர். இவர் கர்ப்பத்திலிருந்தபோது இவருடைய தாயாரைப் புலோமன் என்ற அசுரன் பலாத்காரம் செய்தான். அப்போது கரு (ச்யவித்து) நழுவி இவர் பிறந்ததால் 'ச்யவனர்' எனக் காரணப் பெயர் ஏற்பட்டது. பிறக்கும்போதே இவருக்கிருந்த சக்தியால் அநீதி யிழைத்த அசுரனாகிய புலோமன் இறந்தான்.

---

3. 9. प्रपुरं प्रायात् सहानुगः । பா. பே.

सुकन्या च्यवनं प्राप्य पतिं परम-कोपनम् ।
प्रीणयामास चित्तज्ञा ह्यप्रमत्तानुवृत्तिभिः ॥ ३.१० ॥

कस्यचित् त्वथ कालस्य नासत्या-वाश्रमागतौ ।
तौ पूजयित्वा प्रोवाच वयो मे दत्त-मीश्वरौ ॥ ३.११ ॥

ग्रहं ग्रहीष्ये सोमस्य यज्ञे वामप्यसोमपोः ।
क्रियतां मे वयो रूपं प्रमदानां यदीप्सितम् ॥ ३.१२ ॥

बाढमित्यूचतु-र्विप्रमभिनन्द्य भिषक्तमौ ।
निमज्जतां भवानस्मिन् ह्रदे सिद्धविनिर्मिते ॥ ३.१३ ॥

पुरुषास्त्रय उत्तस्थु-रपीच्या वनिताप्रियाः ।
पद्मस्रजः कुण्डलिनस्तुल्यरूपाः सुवाससः ॥ ३.१५ ॥

तान् निरीक्ष्य वरारोहा सरूपान् सूर्यवर्चसः ।
अजानती पतिं साध्वी अश्विनौ शरणं ययौ ॥ ३.१६ ॥

---

3. 10. ஸுகன்யை கோபம் மிக்கவரான சியவனரைப் பதியாக அடைந்து அவருடைய கருத்தறிந்து நடந்துகொண்டு கவனக் குறைவில்லாமல் அனுஸரணையால் அவரைப் பிரீதி செய்வித்தாள்.

3. 11-12. சிறிது காலத்திற்குப் பின் அவ்வாசிரமத்திற்கு அசுவினீ தேவர்கள் வந்தார்கள். அம் முனிவர் அவர்களைப் பூஜித்து "வைத்திய ஈசுவரர்களே! நீங்கள் எனக்கு (மூப்பை நீக்கி) யௌவனப் பருவத்தை அருளவேண்டும். யாகத்தில் ஸோமபானமில்லாத உங்களுக்கு நான் ஸோமபானத்தை ஏற்படுத்தி யாகத்தைச் செய்கிறேன். பெண்கள் விரும்பத்தக்கதான வடிவையும் வயதையும் எனக்கு உண்டாக்குங்கள்" என்று கூறினர்.

3. 13. வைத்திய சிரேஷ்டர்களாகிய அவர்கள் முனிவரைக் கொண்டாடி "அங்ஙனமே ஆகட்டும். சித்தர்களால் நிர்மாணம் செய்யப்பட்ட இம்மடுவில் ஸ்நாநம் செய்யுங்கள்" என்றனர்.

3. 15. ஸ்நாநம் செய்ய அவர் முழுகியதும் அம்மடுவினின்று மூன்று புருஷர்கள் எழுந்தனர். அவர்கள் பத்ம மாலையும் குண்டலமும் அணிந்து சம வயதும் சம வடிவும் அழகிய ஆடையும் உடையவர்களாய் அழகுமிக்கவர்களாய்ப் பெண்கள் விரும்பத்தக்கவர்களாய் விளங்கினர்.

3. 16. அழகிய இடையுடைய ஸுகன்யை சூரியன்போல் பிரகாசிக்கும் அவர்களைப் பார்த்து ஒரே ரூபத்துடனிருந்ததால் தன் பர்த்தாவைத் தெரிந்துகொள்ள முடியாமல் அசுவினீ தேவர்களைச் சரணடைந்தாள்.

---

3. 16. पुरुषान् सूर्यवर्चसः । பா. பே.

दर्शयित्वा पतिं तस्यै पातिव्रत्येन तोषितौ।
ऋषिमामन्त्र्य ययतु-र्विमानेन त्रिविष्टपम् ॥ ३.१७ ॥

यक्ष्यमाणोऽथ शर्याति-श्च्यवनस्याश्रमं गतः।
ददर्श दुहितुः पार्श्वे पुरुषं सूर्यवर्चसम् ॥ ३.१८ ॥

राजा दुहितरं प्राह कृतपादाभिवन्दनाम्।
आशिषश्चाप्रयुंजानो नातिप्रीतमना इव ॥ ३.१९ ॥

चिकीर्षितं ते किमिदं पतिस्त्वया प्रलंभितो लोकनमस्कृतो मुनिः।
यत्त्वं जराग्रस्त-मसत्यसम्मतं विहाय जारं भजसेऽमुमध्वगम् ॥ ३.२० ॥

एवं ब्रुवाणं पितरं स्मयमाना शुचिस्मिता।
उवाच तात जामाता तवैष भृगुनन्दनः ॥ ३.२२ ॥

शशंस पित्रे तत् सर्वं वयो रूपाभिलम्भनम्।
विस्मितः परमप्रीत-स्तनयां परिषस्वजे ॥ ३.२३ ॥

सोमेन याजयन्वीरं ग्रहं सोमस्य चाग्रहीत्।
असोमपोरप्यश्विनो-श्च्यवनः स्वेन तेजसा ॥ ३.२४ ॥

---

3. 17. அவளுக்குப் பர்த்தாவைக் காண்பித்து அவளுடைய பதிபக்தியை மெச்சி, ரிஷியிடம் விடைபெற்று விமானத்திலேறி ஸ்வர்க்கம் சென்றனர்.

3. 18. சர்யாதி மகாராஜன் ஒரு யாகம் செய்ய உத்தேசித்துச் சியவனருடைய ஆசிரமத்திற்கு (அவரை யழைக்கச்) சென்றபோது, தன் பெண்ணின் அருகில் சூரியன் போல் பிரகாசிக்கும் புருஷனைக் கண்டான்.

3. 19. தன் பாதத்தில் வணங்கிய பெண்ணை விருப்பமில்லாதவர்போல் பார்த்து ஆசீர்வதிக்காமலேயே அரசன் கூறியதாவது :

3. 20. "அஸத்தே! இது என்ன உன் ஆசை இப்படி ஆயிற்று? உலகம் வணங்கும் முனிவராகிய உனது மூப்பேறிய பர்த்தாவைப் பிடிக்காதவரென்று ஏமாற்றி அவரை விட்டு நீங்கி வழியில் கண்ட இந்தக் கள்ளப் புருஷனைச் சேவிக்கிறாயே?"

3. 22. இவ்வாறு கூறும் தந்தையிடம் "அப்பா! இவர் பிருகுநந்தனரான உமது மாப்பிள்ளையேதான்" என்று முகமலர்ச்சியுடன் சிரித்துக்கொண்டே கூறினாள்.

3. 23. வயதும் வடிவும் வந்த வரலாறு முழுவதையும் தந்தையிடம் கூறினாள். அவர் ஆச்சரியமும் பரமப் பிரீதியுமடைந்து பெண்ணை அணைத்துக்கொண்டார்.

3. 24. சியவனர் வீரனாகிய அரசனுக்கு ஸோம யாகம் செய்வித்து, தம்முடைய தவ வலிமையால் ஸோமபானமில்லாத அசுவினீ தேவர்களுக்கு ஸோம பானத்தை ஏற்படுத்தினார்.

---

3. 17 स्तूयमानौ त्रिविष्टपम्।

3. 19. आशिषो न प्रयुंजानो नातिहृष्ट-मना इव। பா. பே.

सुकन्या च्यवनं प्राप्य पतिं परम-कोपनम् ।
प्रीणयामास चित्तज्ञा ह्यप्रमत्तानुवृत्तिभिः ॥ ३.१० ॥

कस्यचित् त्वथ कालस्य नासत्या-वाश्रमागतौ ।
तौ पूजयित्वा प्रोवाच वयो मे दत्त-मीश्वरौ ॥ ३.११ ॥

ग्रहं ग्रहीष्ये सोमस्य यज्ञे वामप्यसोमपोः ।
क्रियतां मे वयो रूपं प्रमदानां यदीप्सितम् ॥ ३.१२ ॥

बाढमित्यूचतु-र्विप्रमभिनन्द्य भिषक्तमौ ।
निमज्जतां भवानस्मिन् ह्रदे सिद्धविनिर्मिते ॥ ३.१३ ॥

पुरुषास्त्रय उत्तस्थु-रपीच्या वनिताप्रियाः ।
पद्मस्रजः कुण्डलिनस्तुल्यरूपाः सुवाससः ॥ ३.१५ ॥

तान् निरीक्ष्य वरारोहा सरूपान् सूर्यवर्चसः ।
अजानती पतिं साध्वी अश्विनौ शरणं ययौ ॥ ३.१६ ॥

---

3. 10. ஸுகன்யை கோபம் மிக்கவரான சியவனரைப் பதியாக அடைந்து அவருடைய கருத்தறிந்து நடந்துகொண்டு கவனக் குறைவில்லாமல் அனுஸரணையால் அவரைப் பிரீதி செய்வித்தாள்.

3. 11-12. சிறிது காலத்திற்குப் பின் அவ்வாசிரமத்திற்கு அசுவினீ தேவர்கள் வந்தார்கள். அம் முனிவர் அவர்களைப் பூஜித்து "வைத்திய ஈசுவரர்களே! நீங்கள் எனக்கு (மூப்பை நீக்கி) யௌவனப் பருவத்தை அருளவேண்டும். யாகத்தில் ஸோமபானமில்லாத உங்களுக்கு நான் ஸோமபானத்தை ஏற்படுத்தி யாகத்தைச் செய்கிறேன். பெண்கள் விரும்பத்தக்கதான வடிவையும் வயதையும் எனக்கு உண்டாக்குங்கள்" என்று கூறினார்.

3. 13. வைத்திய சிரேஷ்டர்களாகிய அவர்கள் முனிவரைக் கொண்டாடி "அங்ஙனமே ஆகட்டும். சித்தர்களால் நிர்மாணம் செய்யப்பட்ட இம்மடுவில் ஸ்நாநம் செய்யுங்கள்" என்றனர்.

3. 15. ஸ்நாநம் செய்ய அவர் முழுகியதும் அம்மடுவினின்று மூன்று புருஷர்கள் எழுந்தனர். அவர்கள் பத்ம மாலையும் குண்டலமும் அணிந்து சம வயதும் சம வடிவும் அழகிய ஆடையும் உடையவர்களாய் அழகுமிக்கவர்களாய்ப் பெண்கள் விரும்பத்தக்க வர்களாய் விளங்கினர்.

3. 16. அழகிய இடையுடைய ஸுகன்யை சூரியன்போல் பிரகாசிக்கும் அவர் களைப் பார்த்து ஒரே ரூபத்துடனிருந்ததால் தன் பர்த்தாவைத் தெரிந்துகொள்ள முடியாமல் அசுவினீ தேவர்களைச் சரணடைந்தாள்.

பா. பே.

---

3. 16. पुरुषान् सूर्यवर्चसः ।

दर्शयित्वा पतिं तस्यै पातिव्रत्येन तोषितौ ।
ऋषिमामन्त्र्य ययतु-र्विमानेन त्रिविष्टपम् ॥ ३.१७ ॥

यक्ष्यमाणोऽथ शर्याति-श्च्यवनस्याश्रमं गतः ।
ददर्श दुहितुः पार्श्वे पुरुषं सूर्यवर्चसम् ॥ ३.१८ ॥

राजा दुहितरं प्राह कृतपादाभिवन्दनाम् ।
आशिषश्चाप्रयुंजानो नातिप्रीतमना इव ॥ ३.१९ ॥

चिकीर्षितं ते किमिदं पतिस्त्वया प्रलंभितो लोकनमस्कृतो मुनिः ।
यत्त्वं जराग्रस्त-मसत्यसम्मतं विहाय जारं भजसेऽमुमध्वगम् ॥ ३.२० ॥

एवं ब्रुवाणं पितरं स्मयमाना शुचिस्मिता ।
उवाच तात जामाता तवैष भृगुनन्दनः ॥ ३.२२ ॥

शशंस पित्रे तत् सर्वं वयो रूपाभिलम्भनम् ।
विस्मितः परमप्रीत-स्तनयां परिषस्वजे ॥ ३.२३ ॥

सोमेन याजयन्वीरं ग्रहं सोमस्य चाग्रहीत् ।
असोमपोरप्यश्विनो-श्च्यवनः स्वेन तेजसा ॥ ३.२४ ॥

---

3. 17. அவளுக்குப் பர்த்தாவைக் காண்பித்து அவளுடைய பதிபக்தியை மெச்சி, ரிஷியிடம் விடைபெற்று விமானத்திலேறி ஸ்வர்க்கம் சென்றனர்.

3. 18. சர்யாதி மகாராஜன் ஒரு யாகம் செய்ய உத்தேசித்துச் சியவனருடைய ஆசிரமத்திற்கு (அவரை யழைக்கச்) சென்றபோது, தன் பெண்ணின் அருகில் சூரியன் போல் பிரகாசிக்கும் புருஷனைக் கண்டான்.

3. 19. தன் பாதத்தில் வணங்கிய பெண்ணை விருப்பமில்லாதவர்போல் பார்த்து ஆசீர்வதிக்காமலேயே அரசன் கூறியதாவது :

3. 20. "அஸத்தே! இது என்ன உன் ஆசை இப்படி ஆயிற்று? உலகம் வணங்கும் முனிவராகிய உனது மூப்பேறிய பர்த்தாவைப் பிடிக்காதவரென்று ஏமாற்றி அவரை விட்டு நீங்கி வழியில் கண்ட இந்தக் கள்ளப் புருஷனைச் சேவிக்கிறாயே?"

3. 22. இவ்வாறு கூறும் தந்தையிடம் "அப்பா! இவர் பிருகுநந்தனரான உமது மாப்பிள்ளையேதான்'' என்று முகமலர்ச்சியுடன் சிரித்துக்கொண்டே கூறினாள்.

3. 23. வயதும் வடிவும் வந்த வரலாறு முழுவதையும் தந்தையிடம் கூறினாள். அவர் ஆச்சரியமும் பரமப் பிரீதியுமடைந்து பெண்ணை அணைத்துக்கொண்டார்.

3. 24. சியவனர் வீரனாகிய அரசனுக்கு ஸோம யாகம் செய்வித்து, தம்முடைய தவ வலிமையால் ஸோமபானமில்லாத அசுவினீ தேவர்களுக்கு ஸோம பானத்தை ஏற்படுத்தினார்.

---

3. 17 स्तूयमानौ त्रिविष्टपम् ।

3. 19. आशिषो न प्रयुंजानो नातिहृष्ट-मना इव । பா. பே.

नाभागो नभगापत्यं यं ततं भ्रातरः कविम्।
यविष्ठं व्यभजन् दायं ब्रह्मचारिणमागतम् ॥ ४.१ ॥

भ्रातरोऽभाङ्क्त किं मह्यं भजाम पितरं तव।
त्वां ममार्यास्तताभाङ्क्षुर्मा पुत्रक तदादृथाः ॥ ४.२ ॥

इमे ह्यंगिरसः सत्रमासतेऽद्य सुमेधसः।
षष्ठं षष्ठमुपेत्याहः कवे मुह्यन्ति कर्मणि ॥ ४.४ ॥

तांस्त्वं शंसय सूक्ते द्वे वैश्वदेवे महात्मनः।
ते स्वर्यन्तो धनं सत्रपरिशेषित-मात्मनः ॥ ४.५ ॥

दास्यन्ति तेऽथ तान् गच्छ तथा स कृतवान् यथा।
तस्मै दत्वा ययुः स्वर्गं ते सत्र-परिशेषितम् ॥ ४.६ ॥

---

3. 25-36. சர்யாதி மகாராஜனுக்கு ஸுகன்யைக்குப் பின் மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள்; அவர்கள் உத்தானபர்ஹிஸ், ஆனர்த்தன், பூரிஷேணன் என்பவர்கள். ஆனர்த்தனிடம் ரைவதன் பிறந்தான். அவன் ஸமுத்திர மத்தியில் குசஸ்தலி என்ற நகரத்தை ஏற்படுத்தி அதிலிருந்து ஆனர்த்தம் முதலிய தேசங்களை ஆண்டுவந்தான். ரைவதனுக்கு 100 பிள்ளைகளும் ரேவதி என்ற ஒரு பெண்ணும் பிறந்தனர். பெண்ணுக்கு வரனைத் தேடும் போது அவர் பெண்ணுடன் பிரம்ம லோகம் சென்றார். அங்கு ஒரு க்ஷணம் காத்திருந்தார். பின் பிரம்மாவை தரிசித்துப் பெண்ணுக்குத் தகுந்த வரன் கிடைக்கவேண்டும் என்றார். 'அரசே, நீர் இங்கே காத்துக்கொண்டிருந்த நொடிப்போதில் பூலோகத்தில் இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்றுவிட்டன. இப்போது பூலோகத்தில் பகவதம்சமாக பலராமர் அவதரித்திருக்கிறார். அவருக்கு இந்தக் கன்னிகையைக் கொடும்' என்று பிரம்மா கூறினார். ரைவதர் அங்ஙனமே செய்துவிட்டுப் பதரிகாசிரமத்திற்குத் தவத்துக்குச் சென்றார். (ஆதி யுகத்தில் பிறந்த ரேவதி பலராமரைவிட மிகவும் உயரமாயிருந்ததால் விவாகத்தின்போது தன்னுடைய ஹலாயுதத்தின் சக்தியால் அவளுடைய உயரத்தைத் தணித்தார் என்று வரலாறு கூறுகிறது.)

---

4. 1. வைவஸ்வத மனுவின் இன்னொரு புத்திரனாகிய நபகனுடைய குமாரன் நாபாகன். இளையவனும் குருகுலத்திலிருந்து பிரம்மச்சரியம் முடிந்து வந்தவனும் வித்துவானுமாகிய இந்த நாபாகனுக்குத்தான் சகோதரர்கள் தாயபாகமாகத் தந்தையைக் கொடுத்தனர்.

4. 2, 'சகோதரர்களே! எனக்கு என்ன தாயபாகம் வைத்தீர்கள்?' என்று கேட்க, 'உனக்குத் தந்தையைத் தாயபாகமாயளிக்கிறோம்' என்றனர். (நாபகன் பிதாவிடம் சென்று) 'என் தமயன்மார்கள் உங்களை எனக்குப் பாகமாகப் பிரித்திருக்கிறார்கள்' (என்று கூறினான்). பிதா 'இந்த வார்த்தையை நீ ஏற்றுக் கொள்ளாதே' (உனக்கு வேறு வழி காட்டுகிறேன்) என்றார்.

4. 4. "சிறந்த மேதாவிகளாகிய அங்கிரஸ வம்சத்தோர் இப்போது ஸத்திர யாகம் செய்கின்றனர். புத்திசாலியாகிய மகனே! ஒவ்வொரு ஆறுவது நாள் வரும் போதும் கர்மானுஷ்டான முறையில் (மேதாவிகளும்) மயங்குவார்கள்.

4. 5-6. "அப்போது மகாத்மாக்களாகிய அவர்களுக்கு விச்வேதேவ ஸூக்தங்கள் இரண்டையும் சொல்லிக் கொடு. அவர்கள் ஸ்வர்க்கம் செல்லும்போது யாகத்தில் மிகுந்த அவர்களுடைய பொருளை உனக்குக் கொடுப்பார்கள். ஆகையால் நீ அவர்களை நாடிச் செல்" (என்று நாபாகனுடைய தந்தை அவனிடம் கூறினார்). அவனும் சொன்னவாறே செய்தான். அவர்களும் (அங்கிரஸர்களும்) ஸத்திர யாகத்தில் மிகுந்ததை அவனுக்குக் கொடுத்துவிட்டு ஸ்வர்க்கம் சென்றனர்.

तं कश्चित् स्वीकरिष्यन्तं पुरुषः कृष्णदर्शनः।
उवाचोत्तरतोऽभ्येत्य ममेदं वास्तुगं वसु ॥ ४.७ ॥

ममेद-मृषिभि-र्दत्त-मिति तर्हि स्म मानवः।
स्यान्नौ ते पितरि प्रश्नः पृष्टवान् पितरं तथा ॥ ४.८ ॥

यज्ञवास्तु-गतं सर्वमुच्छिष्टमृषयः क्वचित्।
चक्रु-र्विभागं रुद्राय स देवः सर्व-मर्हति ॥ ४.९ ॥

नाभागस्तं प्रणम्याह तवेश किल वास्तुगम्।
इत्याह मे पिता ब्रह्मन् शिरसा त्वां प्रसादये ॥ ४.१० ॥

श्री रुद्र उवाच—

यत् ते पितावदद् धर्मं त्वं च सत्यं प्रभाषसे।
ददामि ते मन्त्र-दृशे ज्ञानं ब्रह्म सनातनम् ॥ ४.११ ॥

गृहाण द्रविणं दत्तं मत्सत्रे परिशेषितम्।
इत्युक्त्वान्तर्हितो रुद्रो भगवान् सत्यवत्सलः ॥ ४.१२ ॥

नाभागा-दंबरीषोऽभून्महाभागवतः कृती।
नास्पृशद् ब्रह्मशापोऽपि यं न प्रतिहतः क्वचित् ॥ ४.१३ ॥

---

4. 7. (நாபாகன் அப் பொருளைச் சேகரிக்கும்பொழுது) வட திசையிலிருந்து ஒரு கருத்த மேனியுள்ள புருஷன் வந்து, "யாகசாலையிலுள்ள இந்தப் பொருள் என்னுடையது" என்றான்.

4. 8. 'ரிஷிகளால் எனக்குக் கொடுக்கப்பட்டது' என்று மனு வம்சத்தோனாகிய நாபாகன் கூறினான். "இந்தப் பிரச்னையைப் பற்றி உன் பிதாவிடம் கேட்கலாம்' என்றார் வந்த புருஷன். அவ்வாறே பிதா கேட்கப்பட்டார்.

4. 9. யாகசாலையில் மிகுதியாயுள்ள எல்லாம் ஒருசமயம் (தக்ஷயாக காலத்தில்) ருத்திரனுக்குப் பாகமாகவேண்டுமென்று ரிஷிகள் ஏற்பாடு செய்தார்கள். அதனால் எல்லாம் அவருக்கே உரியது" (என்றார் பிதா).

4. 10. நாபாகன் (திரும்பி வந்து) ருத்திரனை வணங்கி "ஈசனே! யாகசாலையில் உள்ளது உம்முடையதுதான் என்று என் பிதா கூறினார். பிரம்ம ஸ்வரூபியே! உம்மை வணங்கி மன்னிப்பை வேண்டுகிறேன்" என்றான்.

ஸ்ரீ ருத்திரர் கூறியது—

4. 11. 'உன் தந்தை தருமத்தைக் கூறினார். நீயும் உண்மையே பேசுகிறாய். மந்திர ஞானமுள்ள உனக்கு ஸநாதனமான பிரம்ம ஞானத்தைக் கொடுக்கிறேன்.

4. 12. "ஸத்திரத்தில் மிகுந்த பொருளாகியதும் என்னுடையதுமான இதை என்னால் கொடுக்கப்பட்டு நீ எடுத்துக்கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டு ஸத்ய வத்ஸலரான ருத்திர பகவான் அங்கேயே மறைந்தார்.

4. 13. நாபாகனிடம் அம்பரீஷன் தோன்றினான். அவன் மகாபாகவதன், புண்ணியசாலி. எங்கும் தடைபடாத பிரம்ம சாபமும் அவனைத் தொடவில்லை.

---

4. 7. उवाचान्तरतोऽभ्येत्य। பா. பே.

नाभागो नभगापत्यं यं ततं भ्रातरः कविम्।
यविष्ठं व्यभजन् दायं ब्रह्मचारिणमागतम् ॥ ४.१ ॥

भ्रातरोऽभाङ्क्त किं मह्यं भजाम पितरं तव।
त्वां ममार्यास्तताभाङ्क्षुर्मा पुत्रक तदादृथाः ॥ ४.२ ॥

इमे ह्यंगिरसः सत्रमासतेऽद्य सुमेधसः।
षष्ठं षष्ठमुपेत्याहः कवे मुह्यन्ति कर्मणि ॥ ४.४ ॥

तांस्त्वं शंसय सूक्ते द्वे वैश्वदेवे महात्मनः।
ते स्वर्यन्तो धनं सत्रपरिशेषित-मात्मनः ॥ ४.५ ॥

दास्यन्ति तेऽथ तान् गच्छ तथा स कृतवान् यथा।
तस्मै दत्वा ययुः स्वर्गं ते सत्र-परिशेषितम् ॥ ४.६ ॥

---

3. 25-36. சர்யாதி மகாராஜனுக்கு ஸுகன்யைக்குப் பின் மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள்; அவர்கள் உத்தானபர்ஹிஸ், ஆனர்த்தன், பூரிஷேணன் என்பவர்கள். ஆனர்த்தனிடம் ரைவதன் பிறந்தான். அவன் ஸமுத்திர மத்தியில் குசஸ்தலி என்ற நகரத்தை ஏற்படுத்தி அதிலிருந்து ஆனர்த்தம் முதலிய தேசங்களை ஆண்டுவந்தான். ரைவதனுக்கு 100 பிள்ளைகளும் ரேவதி என்ற ஒரு பெண்ணும் பிறந்தனர். பெண்ணுக்கு வரனைத் தேடும் போது அவர் பெண்ணுடன் பிரம்மலோகம் சென்றார். அங்கு ஒரு க்ஷணம் காத்திருந்தார். பின் பிரம்மாவை தரிசித்துப் பெண்ணுக்குத் தகுந்த வரன் கிடைக்கவேண்டும் என்றார். 'அரசே, நீர் இங்கே காத்துக்கொண்டிருந்த நொடிப்போதில் பூலோகத்தில் இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்றுவிட்டன. இப்போது பூலோகத்தில் பகவதம்சமாக பலராமர் அவதரித்திருக்கிறார். அவருக்கு இந்தக் கன்னிகையைக் கொடும்' என்று பிரம்மா கூறினார். ரைவதர் அங்ஙனமே செய்துவிட்டுப் பதரிகாசிரமத்திற்குத் தவத்துக்குச் சென்றார். (ஆதி யுகத்தில் பிறந்த ரேவதி பலராமரைவிட மிகவும் உயரமாயிருந்ததால் விவாகத்தின்போது தன்னுடைய ஹலாயுதத்தின் சக்தியால் அவளுடைய உயரத்தைத் தணித்தார் என்று வரலாறு கூறுகிறது.)

---

4. 1. வைவஸ்வத மனுவின் இன்னொரு புத்திரனாகிய நபகனுடைய குமாரன் நாபாகன். இளையவனும் குருகுலத்திலிருந்து பிரம்மச்சரியம் முடிந்து வந்தவனும் வித்துவானுமாகிய இந்த நாபாகனுக்குத்தான் சகோதரர்கள் தாயபாகமாகத் தந்தையைக் கொடுத்தனர்.

4. 2, 'சகோதரர்களே! எனக்கு என்ன தாயபாகம் வைத்தீர்கள்?' என்று கேட்க, 'உனக்குத் தந்தையைத் தாயபாகமாயளிக்கிறோம்' என்றனர். (நாபகன் பிதாவிடம் சென்று) 'என் தமயன்மார்கள் உங்களை எனக்குப் பாகமாகப் பிரித்திருக்கிறார்கள்' (என்று கூறினான்). பிதா 'இந்த வார்த்தையை நீ ஏற்றுக் கொள்ளாதே' (உனக்கு வேறு வழி காட்டுகிறேன்) என்றார்.

4. 4. "சிறந்த மேதாவிகளாகிய அங்கிரஸ வம்சத்தோர் இப்போது ஸத்திர யாகம் செய்கின்றனர். புத்திசாலியாகிய மகனே! ஒவ்வொரு ஆறுவது நாள் வரும் போதும் கர்மானுஷ்டான முறையில் (மேதாவிகளும்) மயங்குவார்கள்.

4. 5-6. "அப்போது மகாத்மாக்களாகிய அவர்களுக்கு விச்வேதேவ ஸூக்தங்கள் இரண்டையும் சொல்லிக் கொடு. அவர்கள் ஸ்வர்க்கம் செல்லும்போது யாகத்தில் மிகுந்த அவர்களுடைய பொருளை உனக்குக் கொடுப்பார்கள். ஆகையால் நீ அவர்களை நாடிச் செல்" (என்று நாபாகனுடைய தந்தை அவனிடம் கூறினார்). அவனும் சொன்னவாறே செய்தான். அவர்களும் (அங்கிரஸர்களும்) ஸத்திர யாகத்தில் மிகுந்ததை அவனுக்குக் கொடுத்துவிட்டு ஸ்வர்க்கம் சென்றனர்.

तं कश्चित् स्वीकरिष्यन्तं पुरुषः कृष्णदर्शनः ।
उवाचोत्तरतोऽभ्येत्य ममेदं वास्तुगं वसु ॥ ४.७ ॥

ममेद-मृषिभि-र्दत्त-मिति तर्हि स्म मानवः ।
स्यान्नौ ते पितरि प्रश्नः पृष्टवान् पितरं तथा ॥ ४.८ ॥

यज्ञवास्तु-गतं सर्वमुच्छिष्टमृषयः कचित् ।
चक्रु-र्विभागं रुद्राय स देवः सर्व-मर्हति ॥ ४.९ ॥

नाभागस्तं प्रणम्याह तवेश किल वास्तुगम् ।
इत्याह मे पिता ब्रह्मन् शिरसा त्वां प्रसादये ॥ ४.१० ॥

श्री रुद्र उवाच—

यत् ते पितावदद् धर्मं त्वं च सत्यं प्रभाषसे ।
ददामि ते मन्त्र-दृशे ज्ञानं ब्रह्म सनातनम् ॥ ४.११ ॥

गृहाण द्रविणं दत्तं मत्सत्रे परिशेषितम् ।
इत्युक्त्वान्तर्हितो रुद्रो भगवान् सत्यवत्सलः ॥ ४.१२ ॥

नाभागा-दंबरीषोऽभून्महाभागवतः कृती ।
नास्पृशद् ब्रह्मशापोऽपि यं न प्रतिहतः कचित् ॥ ४.१३ ॥

---

4. 7. (நாபாகன் அப் பொருளைச் சேகரிக்கும்பொழுது) வட திசையிலிருந்து ஒரு கருத்த மேனியுள்ள புருஷன் வந்து, "யாகசாலையிலுள்ள இந்தப் பொருள் என்னுடையது" என்றான்.

4. 8. 'ரிஷிகளால் எனக்குக் கொடுக்கப்பட்டது' என்று மனு வம்சத்தோனாகிய நாபாகன் கூறினான். "இந்தப் பிரச்னையைப் பற்றி உன் பிதாவிடம் கேட்கலாம்' என்றார் வந்த புருஷன். அவ்வாறே பிதா கேட்கப்பட்டார்.

4. 9. யாகசாலையில் மிகுதியாயுள்ள எல்லாம் ஒருசமயம் (தக்ஷயாக காலத்தில்) ருத்திரனுக்குப் பாகமாகவேண்டுமென்று ரிஷிகள் ஏற்பாடு செய்தார்கள். அதனால் எல்லாம் அவருக்கே உரியது" (என்றார் பிதா).

4. 10. நாபாகன் (திரும்பி வந்து) ருத்திரனை வணங்கி "ஈசனே! யாகசாலையில் உள்ளது உம்முடையதுதான் என்று என் பிதா கூறினார். பிரம்ம ஸ்வரூபியே! உம்மை வணங்கி மன்னிப்பை வேண்டுகிறேன்" என்றான்.

ஸ்ரீ ருத்திரர் கூறியது—

4. 11. 'உன் தந்தை தருமத்தைக் கூறினார். நீயும் உண்மையே பேசுகிறாய். மந்திர ஞானமுள்ள உனக்கு ஸநாதனமான பிரம்ம ஞானத்தைக் கொடுக்கிறேன்.

4. 12. "ஸத்திரத்தில் மிகுந்த பொருளாகியதும் என்னுடையதுமான இதை என்னால் கொடுக்கப்பட்டு நீ எடுத்துக்கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டு ஸத்ய வத்ஸலரான ருத்திர பகவான் அங்கேயே மறைந்தார்.

4. 13. நாபாகனிடம் அம்பரீஷன் தோன்றினான். அவன் மகாபாகவதன், புண்ணியசாலி. எங்கும் தடைபடாத பிரம்ம சாபமும் அவனைத் தொடவில்லை.

---

4. 7. उवाचान्तरतोऽभ्येत्य । பா. பே.

## ॥ अम्बरीष चरित्रम् ॥

राजोवाच—

भगवञ्छ्रोतु-मिच्छामि राजर्षे-स्तस्य धीमतः।
न प्राभूद् यत्र निर्मुक्तो ब्रह्मदण्डो दुरत्ययः ॥ ४.१४ ॥

श्रीशुक उवाच—

अंबरीषो महाभाग-स्सप्तद्वीपवतीं महीं।
अव्ययां च श्रियं लब्ध्वा विभवं चातुलं विभुः ॥ ४.१५ ॥

मेनेऽतिदुर्लभं पुंसां सर्वं तत् स्वप्नसंस्तुतम्।
विद्वान् विभवनिर्वाणं तमो विशति यत् पुमान् ॥ ४.१६ ॥

वासुदेवे भगवति तद्भक्तेषु च साधुषु।
प्राप्तो भावं परं विश्वं येनेदं लोष्टवत् स्मृतम् ॥ ४.१७ ॥

पादौ हरेः क्षेत्रपदानुसर्पणे शिरो हृषीकेश-पदाभिवन्दने।
कामं च दास्ये न तु कामकाम्यया यथोत्तमश्लोक-जनाश्रया रतिः
॥ ४.२० ॥

---

## அம்பரீஷ சரித்திரம்

அரசன் கூறியது—

4. 14. பகவத் ஸ்வரூபியே! விலக்க முடியாத பிரம்ம தண்டமும் எவரிடம் விடப்பட்டு வீணாயிற்றோ அந்த புத்திமானாகிய ராஜரிஷியின் சரித்திரத்தைக் கேட்க விரும்புகிறேன்.

ஸ்ரீ சுகர் கூறியது—

4. 15-16. மகாபாகவதனான அம்பரீஷன் மனிதனாலடைதற்கு மிகவரிதாகிய ஏழு தீவுகளடங்கிய இப் பூமியையும் குறைவற்ற செல்வத்தையும் நிகரற்ற பெருமையையும் அடைந்தும் அவ்வனைத்தும் கனவுக்கு நிகராக நிரூபிக்கப்பட்டிருப்பதை எண்ணினான். எதனால் மனிதன் இருளில் புகுகின்றானோ அந்த வைபவமெல்லாம் அழிவுள்ளது என்பதை அவன் நன்கறிந்தவன்.

4. 17. பகவான் வாசுதேவனிடத்திலும் பகவத் பக்தர்களாகிய ஸாதுக்களிடத்திலும் வைத்த பரம பக்தியால் இவ்வுலகச் செல்வமனைத்தையும் மண்கட்டிக்குச் சமமாய்க் கருதினான்.

4. 20. பகவான் கோயில் கொண்டுள்ள க்ஷேத்திரங்களுக்குச் செல்லுவதில் கால்களையும் பகவானுடைய பாதங்களில் வந்தனம் செய்வதில் தலையையும் (அவ்வாறே எல்லா அங்கங்களையும்) பயன்படுத்தி, காமபோக வஸ்துக்களை இன்ப நுகர்ச்சிக்குப் பயன்படுத்தாமல் பகவத் சேவைக்கும் பாகவத சேவைக்கும் பயன்படுத்தி எவ்வாறு விஷ்ணு பக்தர்களிடம் மனங்கசிந்த அன்பு விளங்குமோ அது தன்னிடம் விளங்க வாழ்ந்தான்.

एवं सदा कर्मकलाप-मात्मनः परेऽधियज्ञे भगवत्यधोक्षजे।
सर्वात्मभावं विदधन्महीमिमां तन्निष्ठ-विप्राभिहितः शशास ह ॥ ४.२१ ॥

स इत्थं भक्तियोगेन तपोयुक्तेन पार्थिवः।
स्वधर्मेण हरिं प्रीणन् सङ्गान् सर्वान् शनैर्जहौ ॥ ४.२६ ॥

तस्मा अदा-द्धरि-श्चक्रं प्रत्यनीक-भयावहम्।
एकान्त-भक्तिभावेन प्रीतो भृत्याभिरक्षणम् ॥ ४.२८ ॥

आरिराधयिषुः कृष्णं महिष्या तुल्यशीलया।
युक्तः सांवत्सरं वीरो दधार द्वादशीव्रतम् ॥ ४.२९ ॥

व्रतान्ते कार्तिके मासि त्रिरात्रं समुपोषितः।
स्नातः कदाचित् कालिन्द्यां हरिं मधुवनेऽर्चयत् ॥ ४.३० ॥

महाभिषेक-विधिना सर्वोपस्कर-संपदा।
अभिषिच्यांबराकल्पै-र्गन्धमाल्यार्हणादिभिः ॥ ४.३१ ॥

तद्गतान्तरभावेन पूजयामास केशवम्।
ब्राह्मणांश्च महाभागान् सिद्धार्थानपि भक्तितः ॥ ४.३२ ॥

---

4. 21. இவ்விதம் அதி யஜ்ஞ ரூபியும் அதோக்ஷஜனுமான பகவானிடம் ஸர்வாத்ம பாவனை செய்து, தான் செய்யும் எல்லாவிதமான செயல்களையும் எப்போதும் அவனுக்கே அர்ப்பணம் செய்து, அவனிடம் நிலைத்த மனத்தினரான பிராம்மணர்களின் மந்திரா லோசனைப்படி இந்த பூமியை ஆண்டான்.

4. 26. தவத்துடனும் ஸ்வதர்மானுஷ்டானத்துடனும் கூடிய இப்படிப்பட்ட பக்தி யோகத்தால் அவ்வரசன் பகவானைப் பிரீதி செய்வித்து எல்லாப் பற்றுக்களையும் மெதுவாக விட்டுவிட்டான்.

4. 28. இவனுடைய ஏகாந்த பக்தி யோகத்தால் பிரீதியடைந்த பகவான் சத்துருக்களுக்கு பயத்தைத் தருவதும் அடியார்களை ரக்ஷிப்பதுமான தனது சக்ரத்தை அவனுக்கு அளித்தார்.

4. 29. பகவானை ஆராதிக்க விரும்பிய வீரனாகிய அரசன் மனமொத்த மனைவி யுடன் கூடி ஒரு வருஷம் துவாதசீ விரதத்தை அனுஷ்டித்தான்.

4. 30. கார்த்திகை மாதத்தில் விரதம் முடியும்போது மூன்று நாள் உபவாச மிருந்து யமுனையில் நீராடி மது வனத்தில் ஹரியை பூஜித்தான்.

4. 31-32. மகாபிஷேக முறைப்படி சிறந்த திரவியங்களனைத்தாலும் அபிஷேகம் செய்து வஸ்திரம் ஆபரணம் கந்தம், புஷ்ப மாலைகள் மற்றுமுள்ள பூஜாத் திரவியங் களாகியவற்றைக் கொண்டு உள்ளன்பால் ஒன்றுபட்ட மனத்துடன் கேசவனைப் பூஜித்தான். மகாபாகவதர்களாகிய பிராம்மணர்களையும், அவர்கள் எதையும் வேண்டாத ஸித்தர்களாயினும், பக்தியுடன் பூஜித்தான்.

---

4. 31: கந்ததைலம், பஞ்சாமிருதம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு பழச்சாறு, இளநீர், சந்தனம், புண்ய தீர்த்தம் ஆகியவற்றால் செய்யப்படுவது மகாபிஷேகம்.

---

4. 28. भीताभिरक्षणम्। 4. 29. आरिराधयिषु-र्विष्णुं। பா. பே.

भोजयित्वा द्विजानग्रे स्वाद्वन्नं गुणवत्तमम् ।
लब्धकामै-रनुज्ञातः पारणायोपचक्रमे ।
तस्य तर्ह्यतिथिः साक्षाद् दुर्वासा भगवानभूत् ॥ ४.३५ ॥

तमानर्चातिथिं भूपः प्रत्युत्थानासनार्हणैः ।
ययाचेऽभ्यवहाराय पादमूलमुपागतः ॥ ४.३६ ॥

प्रतिनन्द्य स तद्याच्ञां कर्तु-मावश्यकं गतः ।
निममज्ज बृहद् ध्यायन् कालिन्दी-सलिले शुभे ॥ ४.३७ ॥

मुहूर्तार्धावशिष्टायां द्वादश्यां पारणं प्रति ।
चिन्तयामास धर्मज्ञो द्विजैस्तद्धर्मसङ्कटे ॥ ४.३८ ॥

ब्राह्मणातिक्रमे दोषो द्वादश्यामप्यपारणे ।
यत्कृत्वा साधु मे भूया-दधर्मो वा न मां स्पृशेत् ॥ ४.३९ ॥

अंभसा केवलेनाथ करिष्ये व्रतपारणाम् ।
प्राहु-रब्भक्षणं विप्रा ह्यशितं नाशितं च तत् ॥ ४.४० ॥

---

4. 35. நல்ல சுவையுள்ள சிறந்த அன்னத்தை முதலில் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்வித்து, ஆசைகளின் பூர்த்தியெய்திய அவர்களுடைய அனுமதி பெற்றுப் பாரணை செய்ய முற்பட்டான். அப்போது பகவான் துர்வாஸர் அதிதியாக அங்கு தோன்றினர்.

4. 36. அரசன் அங்ஙனம் வந்த அதிதியை எதிர்கொண்டு வரவேற்று ஆஸனமளித்து மரியாதையுடன் பூஜித்தான். அவருடைய காலடியிலமர்ந்து போஜனத்திற்கு வரவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

4. 37. அந்தப் பிரார்த்தனையைக் கொண்டாடி அவசியமான அனுஷ்டானத்தை முடித்துவரச் சென்றார். தூய்மையான யமுனை நீரில் பிரம்மத் தியானத்துடன் மூழ்கினர்.

4. 38. ஒரு நாழிகைப்போது துவாதசி மீதியிருக்கையில் தர்ம சாஸ்திரமறிந்த அரசன் பாரணையைப் பற்றிய தர்ம ஸங்கடமான விஷயத்தில் பிராம்மணர்களுடன் பின்வருமாறு ஆலோசித்தான்.

4. 39. "பிராம்மணர்களை மீறுவதிலுந் தோஷம், துவாதசியில் பாரணை செய்யாமலிருப்பதும் தோஷம். எதைச் செய்வதால் எனக்கு நன்மையுண்டாகும், அதர்மம் என்னைச் சாராமலிருக்கும்?

4. 40. "விரத பாரணையைத் தீர்த்தத்தால் மட்டும் செய்கிறேன். நீரை அருந்துதல் சாப்பிடுதலுமாகும் சாப்பிடாததுமாகும் என்று பிராம்மணர்கள் கூறுவரன்றோ?"

---

4. 40. ஒ: 'அபோச்னுதி தந்நைவாசிதம் நைவாநசிதம்' ।
பாரணம்—ஸமாப்தி ।

---

4. 37. तद्वाक्यं कर्तुमा । निमंमज्ज । सलिले शुचौ । பா. பே.

इत्यपः प्राश्य राजर्षि-श्चिन्तयन् मनसाऽच्युतम् ।
प्रत्याचष्ट कुरुश्रेष्ठ द्विजागमन-मेव सः ॥ ४.४१ ॥

दुर्वासा यमुनाकूलात् कृतावश्यक आगतः ।
राज्ञाभिनन्दित-स्तस्य बुबुधे चेष्टितं धिया ॥ ४.४२ ॥

यो मामतिथि-मायात-मातिथ्येन निमन्त्र्य च ।
अदत्त्वा भुक्तवांस्तस्य सद्यस्ते दर्शये फलम् ॥ ४.४५ ॥

एवं ब्रुवाण उत्कृत्य जटां रोषविदीपितः ।
तया स निर्ममे तस्मै कृत्यां कालानलोपमाम् ॥ ४.४६ ॥

तामापतन्तीं ज्वलती-मसिहस्तां पदा भुवम् ।
वेपयन्तीं समुद्वीक्ष्य न चचाल पदान्नृपः ॥ ४.४७ ॥

प्राग्दिष्टं भृत्यरक्षायां पुरुषेण महात्मना ।
ददाह कृत्यां तां चक्रं क्रुद्धाहिमिव पावकः ॥ ४.४८ ॥

---

4. 41. குரு சிரேஷ்டனே! இவ்வாறு தீர்மானித்துத் தீர்த்தபானம் செய்துவிட்டு அந்த ராஜரிஷியாகிய அம்பரீஷன் அச்சுதனை மனதால் நினைத்துக்கொண்டு வேதியராகிய துர்வாஸர் வரவையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

4. 42. துர்வாஸர் அனுஷ்டானத்தை முடித்துக்கொண்டு யமுனைக் கரையிலிருந்து வந்தார். அரசனால் உபசரிக்கப்பட்டபோது அவன் செய்திருந்ததை புத்தியால் அறிந்துகொண்டார்.

4. 45-46. "அதிதியாக வந்த என்னை போஜனத்துக்கழைத்துவிட்டு, போஜனமளிக்காமல் புசித்தவனாகிய உனக்கு உடனே பலனைக் காட்டுகிறேன்" என்று கூறிக்கொண்டே கோபம் பொங்க ஜடையைக் கிள்ளி அதனால் காலாக்கினிக்குச் சமமான ஒரு துர்தேவதையை உண்டாக்கி அரசனை நோக்கி அதை ஏவினார்.

4. 47. தன்னை நோக்கிப் பாய்வதும், கத்தியைக் கையிலேந்தி ஜ்வலிப்பதும், அடிவைப்பால் பூமியை அதிரச் செய்வதுமான அந்த துர்தேவதையைக் கண்ணுற்று அரசன் இடம் பெயராமல் நின்றான்.

4. 48. பரமாத்மாவாகிய புருஷோத்தமனால் பக்த ரக்ஷணத்திற்காக முன்பே அளிக்கப்பட்டிருந்த சக்ராயுதம் கோபங்கொண்ட பாம்பைக் காட்டுத் தீ பொசுக்குவது போல் அந்த துர்தேவதையைப் பொசுக்கிற்று.

---

4. 45. பக்தர்களைச் சோதித்து அவர்கள் பெருமையை உலகிற்கு விளக்குவதற்காக துர்வாஸர், நாரதர் போன்றவர்கள் அதிகார புருஷர்களாகச் சஞ்சரிக்கிறார்கள். அவர்களுடைய செயல்களுக்கு ஆழங்காண்பது கடினம்.

---

4. 46. तपसा निर्ममे । பா. பே.

तदभिद्रवदुद्वीक्ष्य स्वप्रयासं च निष्फलम् ।
दुर्वासा दुद्रुवे भीतो दिक्षु प्राणपरीप्सया ॥ ४.४९ ॥

दिशो नभः क्ष्मां विवरान् समुद्राँ-
ल्लोकान् सपालांस्त्रिदिवं गतः सः ।
यतो यतो धावति तत्र तत्र सुदर्शनं दुष्प्रसहं ददर्श ॥ ४.५१ ॥

अलब्धनाथः स यदा कुतश्चित् संत्रस्तचित्तोऽरणमेषमाणः ।
देवं विरिंचं समगाद् विधात-स्त्राह्यात्मयोनेऽजिततेजसो माम् ॥ ४.५२ ॥

प्रत्याख्यातो विरिंचेन विष्णुचक्रोपतापितः ।
दुर्वासाः शरणं यातः शर्वं कैलासवासिनम् ॥ ४.५५ ॥

श्रीरुद्र उवाच—

तस्य विश्वेश्वरस्येदं शस्त्रं दुर्विषहं हि नः ।
तमेव शरणं याहि हरिस्ते शं विधास्यति ॥ ४.५९ ॥

ततो निराशो दुर्वासाः पदं भगवतो ययौ ।
वैकुण्ठाख्यं यदध्यास्ते श्रीनिवासः श्रिया सह ॥ ४.६० ॥

---

4. 49. பின்பு அச் சக்ரம் தன்னை நோக்கிப் பாய்வதையும் தன் முயற்சி வீணுவதையுங் கண்டு துர்வாஸர் பயந்து தன்னுயிரைக் காத்துக்கொள்ள நாற்புரமும் ஓடினர்.

4. 51. திக்குத் திசைகளிலோ, ஆகாயத்திலோ, பூமியிலோ, பாதாளத்திலோ ஸமுத்திரத்திலோ லோக பாலர்களுடைய உலகங்களிலோ, ஸ்வர்க்கத்திலோ அவர் எங்கெங்கு சென்ருரோ அங்கங்கெல்லாம் ஸுதர்சன சக்ரத்தைக் கண்டார்.

4. 52. எங்கும் தன்னைக் காக்கக்கூடியவரைக் காணுதபோது நடுங்கிய மன துடன் புகலிடம் நாடி பிரம்மதேவனை யடைந்தார். "உலகை யளிப்பவரே! தனக்குத் தானே காரணமாகியவரே! விஷ்ணுவின் தேஜோ ரூபமான சக்ரத்தினின்று என்னைக் காக்கவேண்டும்" என்ருர்.

4. 55. விஷ்ணு சக்ரத்தால் தாபமடைந்த துர்வாஸர் பிரம்மாவினுல் கைவிடப் பட்டுக் கைலாஸ வாசியாகிய சிவனைச் சரணடைந்தார்.

ஸ்ரீ ருத்ரர் கூறியது—

4. 59. "உலக நாயகனுகிய அவனுடைய இந்த ஆயுதம் எங்களால் பொறுக்க முடியாதது. அவனையே சரணடைவாய். ஹரியானவர் உனக்கு மங்களத்தைச் செய்வார்."

4. 60. ஆசை வீணுகிய துர்வாஸர் பின்னர் ஸ்ரீநிவாஸன் ஸ்ரீதேவியுடன் நித்ய வாஸம் செய்வதும் வைகுண்டம் எனப் பெயர் பெற்றதுமான பகவானுடைய ஸ்தானத்தை யடைந்தார்.

---

4. 52. அரணமேஷமாண:—சரணமிச்சன் । அஜித தேஜஸ:—ஹரேச் சக்ராத் ।

---

4. 49. तदभिद्रवमुद्वीक्ष्य । பா. பே.

दुर्वासा उवाच—

अजानता ते परमानुभावं कृतं मयाघं भवतः प्रियाणाम्।
विधेहि तस्यापचितिं विधात-र्मुच्येत यन्नाम्न्युदिते
नारकोऽपि ॥ ४.६२ ॥

श्रीभगवानुवाच—

अहं भक्तपराधीनो ह्यस्वतन्त्र इव द्विज :
साधुभि-र्ग्रस्त-हृदयो भक्तै-र्भक्तजनप्रियः ॥ ४.६३ ॥

ये दारागारपुत्राप्तान् प्राणान् वित्त-मिमं परम्।
हित्वा मां शरणं याताः कथं तांस्त्यक्तु-मुत्सहे ॥ ४.६५ ॥

मयि निर्बद्ध-हृदयाः साधवः समदर्शनाः।
वशीकुर्वन्ति मां भक्त्या सत्स्त्रियः सत्पतिं यथा ॥ ४.६६ ॥

साधवो हृदयं मह्यं साधूनां हृदयं त्वहम्।
मदन्यत् ते न जानन्ति नाहं तेभ्यो मनागपि ॥ ४.६८ ॥

अयं ह्यात्माभिचारस्ते यतस्तं यातु वै भवान्।
साधुषु प्रहितं तेजः प्रहर्तुः कुरुतेऽशिवम् ॥ ४.६९ ॥

---

துர்வாஸர் கூறியது—

4. 62. எவருடைய பேரைச் சொன்னமாத்திரத்தில் நரகத்திலிருந்தும் விடுபடுவானோ அப்படிப்பட்ட புருஷோத்தமா! உம்முடைய மகிமையை உணராத என்னால் உமது பக்தர்களுக்கு தீங்கிழைக்கப்பட்டது. அந்த எனக்குப் பிராயச்சித்தம் விதிக்க வேண்டும்.

ஸ்ரீ பகவான் கூறியது—

4. 63. வேதியரே! நான் சுதந்திரம் இல்லாதவன்போல் பக்தர்களுக்கு அடிமைப் பட்டவன். பக்தர்களான ஸாதுக்களுக்கு இருதயத்தைப் பறிகொடுத்தவன். பக்தர்களிடத்தில் பிரியம் வைத்தவன்.

4. 65. எவர்கள் மனைவி, வீடு, மக்கள், நண்பர்கள், பிராணன், செல்வம், இவ்வுலகு, மேலுலகு எல்லாவற்றையும் விட்டு என்னைச் சரணடைந்தவர்களோ, அவர்களை நான் எங்ஙனம் விடமுடியும்?

4. 66. நல்ல ஸ்திரீகள் நல்ல நாயகனை வசப்படுத்துவதுபோல் ஸமதர்சிகளாகிய ஸாதுக்கள் பக்தியால் என்னிடம் கட்டுண்ட மனத்தினராய் என்னை வசப்படுத்துகின்றனர்.

4. 68. ஸாதுக்கள் எனது இருதயம்; ஸாதுக்களுக்கு நான் இருதயம். என்னையன்றி அவர்கள் மற்றொன்றை அறியமாட்டார்கள்; நானும் அவர்களையன்றிச் சிறிதுமறியேன்.

4. 69. உமக்கு விளைந்துள்ள இந்தக் கெடுதி எங்கிருந்துண்டாயிற்றோ அங்கு சென்று அவரையே நீர் சரணம் அடைவீராக. ஸாதுக்களிடம் அடங்கியுள்ள வீரியம் இம்சிப்பவருக்கு அமங்களத்தை விளைக்கும்.

---

4. 66. समदर्शिनः। பா. பே.

तपो विद्या च विप्राणां निःश्रेयसकरे उभे ।
ते एव दुर्विनीतस्य कल्पेते कर्तुरन्यथा ॥ ४.७० ॥

ब्रह्मं-स्तद् गच्छ भद्रं ते नाभागतनयं नृपम् ।
क्षमापय महाभागं ततः शान्ति-र्भविष्यति ॥ ४.७१ ॥

श्रीशुक उवाच—

एवं भगवताऽऽदिष्टो दुर्वासा-श्चक्रतापितः ।
अंबरीष-मुपावृत्य तत्पादौ दुःखितोऽग्रहीत् ॥ ५.१ ॥

तस्य सोद्यमनं वीक्ष्य पादस्पर्श-विलज्जितः ।
अस्तावी-त्तद्धरेरस्त्रं कृपया पीडितो भृशम् ॥ ५.२ ॥

अंबरीष उवाच—

सुदर्शन नमस्तुभ्यं सहस्राराच्युतप्रिय ।
सर्वास्त्रघातिन् विप्राय स्वस्ति भूया इडस्पते ॥ ५.४ ॥

---

4. 70. தவமும் வித்தையும் விப்பிரர்களுக்கு இரண்டும் உயர்ந்த நன்மையளிப்பவை. அவையே வணக்கமில்லாத கர்த்தாவுக்கு நேர்மாறான பயனைத் தருவனவாம்.

4. 71. பிரம்ம ரிஷியே! ஆகையால் நாபாகரின் குமாரனாகிய அம்பரீஷ ராஜனிடம் நீர் செல்லும். உமக்கு மங்களமுண்டாகும். அந்த மகாபாகவதரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும், பிறகு சாந்தி ஏற்படும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

5. 1. சக்ரத்தால் தாபமடைந்த துர்வாஸர் பகவானால் இவ்வாறு கட்டளையிடப்பட்டு அம்பரீஷனிடம் வந்து அவனுடைய இரு பாதங்களையும் துக்கத்துடன் இறுகப் பிடித்தார்.

5. 2. அவருடைய அம்முயற்சியைக் கண்டு அவர் தன் பாதத்தைத் தொட்டதற்கு வெட்கிக் கிருபையால் மனம் மிகவும் நொந்து ஹரியினுடைய அந்த அஸ்திரத்தைத் துதிக்கலானார்.

அம்பரீஷன் கூறியது—

5. 4. ஸுதர்சனா! ஆயிரம் அரங்களுடையவனே! அச்சுதனுக்குப் பிரியனே! எல்லா அஸ்திரங்களையும் அழிப்பவனே! பூமிக்குப் பதியே! பிராம்மணருக்கு நன்மையளிக்கவேண்டும்.

---

4. 70. ஒ. (தபோ ந கல்கோ ऽத்யயனம் ந கல்க: ஸ்வாபாவிகோ வேத-விதிர் ந கல்க:। ப்ரஸஹ்ய வித்தாஹரணம் ந கல்கஸ்-தான்யேவ பாவோபஹதானி கல்க:॥) தவம் குற்றமுடையதன்று, அத்யயனம் குற்றமுடையதன்று, ஸ்வபாவத்துக்கியைந்த வேதவிதி குற்றமுடையதன்று. கஷ்டப்பட்டுப் பொருள் சம்பாதிப்பது குற்றமுடையதன்று; ஆனால் இவையே கெட்ட நோக்கத்துடன் உபயோகிக்கப்பட்டால் குற்றமுடையனவாம் (வீழ்ச்சிக்குக் காரணமாம்). —ம. பா. 1·1. 256.

நல்ல எண்ணமில்லாதவர்களிடம் கல்வி, செல்வம் போன்ற நல்லவையும் தீயவாம்.

---

4. 71. क्षमापय महाभाग ।

5. 2. तस्य न्द्युद्यमनं वीक्ष्य । पादस्पर्शेन लज्जितः । अस्तौषीत्तद्धरेश्चक्रं । பா. பே.

यद्यस्ति दत्तमिष्टं वा स्वधर्मो वा स्वनुष्ठितः।
कुलं नो विप्रदैवं चेद् द्विजो भवतु विज्वरः ॥ ५.१० ॥

यदि नो भगवान् प्रीत एकः सर्वगुणाश्रयः।
सर्वभूतात्मभावेन द्विजो भवतु विज्वरः ॥ ५.११ ॥

श्रीशुक उवाच—

इति संस्तुवतो राज्ञो विष्णुचक्रं सुदर्शनम्।
अशाम्यत् सर्वतो विप्रं प्रदहद् राजयाच्ञया ॥ ५.१२ ॥

दुर्वासा उवाच—

अहो अनन्तदासानां महत्त्वं दृष्टमद्य मे।
कृतागसोऽपि यद्राजन् मंगलानि समीहते ॥ ५.१४ ॥

राजन्ननुगृहीतोऽहं त्वयातिकरुणात्मना।
मदघं पृष्ठतः कृत्वा प्राणा यन्मेऽभिरक्षिताः ॥ ५.१७ ॥

---

5. 10. தான பலனும் யாக பலனும், நன்கு ஸ்வதர்மத்தை யனுஷ்டித்த பலனும் இருக்குமேயானல், எங்கள் குலம் பிராம்மணர்களைத் தெய்வமாய்க் கொண்டிருப்பது உண்மையானல், இந்த வேதியர் தாபமற்றவராகவேண்டும்.

5. 11. எல்லா குணங்களுக்கும் உறைவிடமாகிய ஒருவனுயுள்ள பகவான் எல்லாப் பிராணிகளிடத்தும் ஆத்ம பாவனை செய்யும் எங்களிடத்தில் பிரீதியடைந்திருந்தால் பிராம்மணர் தாபமற்றவராகவேண்டும்.

ஸ்ரீ சுகர் கூறியது—

5. 12. இங்ஙனம் அரசன் துதிக்கவே வேதியரை நாற்புறமும் தகித்த விஷ்ணுவின் ஸுதர்சன சக்ரம் அரசனுடைய பிரார்த்தனைக் கிணங்கி சாந்தமாயிற்று.

துர்வாஸர் கூறியது—

5. 14. 'ஆச்சரியம்! விஷ்ணு பக்தர்களின் பெருமை எனக்குக் கண்கூடாயிற்று. நான் உனக்குத் தீங்கிழைத்தவனுயினும், அரசே! நீ எனக்கு மங்களத்தையல்லவா வேண்டுகிருய்.

5. 17. 'அரசே! கருணைமிக்க உள்ளத்தினராகிய உம்மால் நான் அருள்புரியப் பெற்றேன். எனது தீமையைக் கவனியாது எனது பிராணனைக் காப்பாற்றினீரல்லவா?

---

5. 10. ஒ. தேஷ்வஹம் மித்ரபாவேன ஸம: பாபோஸ்மி ந க்வசித்।
யதா தேனத்ய ஸத்யேன ஜீவந்த்வஸுர-யாஜகா: ॥
பிரஹ்லாதன் கூறியது—விஷ்ணுபுராணம். 1-18-43.

ஒ. யத்யஸ்தி பதி-சுச்ரூஷா யத்யஸ்தி சரிதம் தப:।
யதி சாஸ்த்-யேக பத்னீத்வம் சீதோ பவ ஹனூமத: ॥
ஸீதை கூறியது—ராமாயணம்.

---

5. 12. नादहद्राजयाच्ञया।
5. 17. ममाघं पृष्ठतःकृत्वा। பா. பே.

राजा तमकृताहारः प्रत्यागमनकाङ्क्षया ।
चरणावुपसंगृह्य प्रसाद्य समभोजयत् ॥ ५.१८ ॥

प्रीतोऽस्म्यनुगृहीतोऽस्मि तव भागवतस्य वै ।
दर्शन-स्पर्शनालापै-रातिथ्येनात्ममेधसा ॥ ५.२० ॥

श्रीशुक उवाच—

एवं-संकीर्त्य राजानं दुर्वासाः परितोषितः ।
ययौ विहायसाऽऽमन्त्र्य ब्रह्मलोक-महैतुकम् ॥ ५.२२ ॥

एवं-विधानेकगुणः स राजा परात्मनि ब्रह्मणि वासुदेवे ।
क्रियाकलापैः समुवाह भक्तिं ययाऽऽविरिञ्च्यान् निरयांश्चकार ॥ ५.२५ ॥

---

5. 18. அவர் திரும்பி வருவதை எதிர்பார்த்துக்கொண்டு உணவருந்தாமலிருந்த அரசன் அவருடைய பாதங்களைப் பிடித்து அவரை மகிழ்வித்துத் திருப்தியாக போஜனம் செய்வித்தார்.

5. 20. 'பாகவதராகிய உம்முடைய தர்சனம், ஸ்பர்சனம், ஸம்பாஷணம், ஆத்ம ஞானத்தை வளர்க்கும் உண்டி ஆகியவற்றால் நான் பிரீதியடைந்தேன், அருள்புரியப் பெற்றவனானேன்.'

ஸ்ரீ சுகர் கூறியது—

5. 22. இவ்வாறு அரசனைப் புகழ்ந்து துர்வாஸர் மகிழ்ச்சி பொங்குபவராய் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு ஆகாயமார்க்கமாய் ஆசையற்றவர் செல்லும் பிரம்ம லோகம் சென்றார்.

5. 25. இம்மாதிரி பல நற்குணங்கள் படைத்த அரசன் வாசுதேவ பரப்பிரம்மத்தினிடம் பக்தியைச் செலுத்திக் கிரியைகளை யனுஷ்டித்து வந்தான். அதனால் பிரம்ம பதம் முதலிய பதவிகளையும் நரகத்துக் கொப்பாகக் கருதினான்.

---

5. 25. ஒ. யோகியானவன் தவசிகளைவிட உயர்ந்தவன்; கற்றோரை விடவும் உயர்ந்தவன்; கர்மஞ் செய்வோரையும்விட உயர்ந்தவன் என்பது நிச்சயம்; ஆகையால் அர்ஜுனா, யோகியாக ஆவாய். எவன் சிரத்தை உடையவனாக என்னிடத்தில் ஊன்றிய உள்ளத்தால் என்னையே தொழுகின்றானோ அவன் எல்லா யோகிகளுக்குள்ளும் சிறந்தவன் என்பது என்னுடைய முடிவான அபிப்பிராயம். —கீ. 6. 46-47.

ஒ. (பக்தி : ஸித்தேர்-கரீயஸீ) பக்தியானது ஸித்திகளைக் காட்டிலும் சிறந்தது.

अथांबरीष-स्तनयेषु राज्यं समानशीलेषु विसृज्य धीरः।
वनं विवेशात्मनि वासुदेवे मानो दधद् ध्वस्तगुणप्रवाहः ॥ ५.२६ ॥

इत्येतत् पुण्यमाख्यान-मंबरीषस्य भूपतेः।
संकीर्तयन्ननुध्यायन् भक्तो भागवतो भवेत् ॥ ५.२७ ॥

इति श्रीमद्भागवते नवमस्कन्धेऽम्बरीषचरितं नाम
पञ्चमोऽध्यायः ॥

---

5. 26. நாளடைவில் தீரனுகிய அவ்வரசன் தன்க்குச் சமமான குணம் படைத்த மக்களிடம் அரசை ஒப்புவித்து வனம் புகுந்தான். ஸம்ஸாரச் சுழலினின்று விடுபட்டு வாசுதேவனிடம் மனத்தை நிறுத்தினுன்.

5. 27. இப்படிப்பட்ட இந்த அம்பரீஷ மகாராஜனுடைய புண்ணியமான சரித்திரத்தை ஒருவன் கீர்த்தனம் செய்தாலும் தியானம் செய்தாலும் பக்தனும் பாகவதனும் ஆவான்.

இங்ஙனம் ஸ்ரீமத் பாகவதத்தில் ஒன்பதாவது ஸ்கந்தத்தில் அம்பரீஷ
சரித்திரம் எனப் பெயர் பெற்ற ஐந்தாவது
அத்தியாயம் முற்றும்.

## ॥ इक्ष्वाकु-वंशवर्णनम् ॥

श्रीशुक उवाच—

यावत् सूर्य उदेति स यावच्च प्रतितिष्ठति ।
सर्वं तद् यौवनाश्वस्य मान्धातुः क्षेत्रमुच्यते ॥ ६.३७ ॥

शशबिन्दो-र्दुहितरि बिन्दुमत्या-मधान्नृपः ।
पुरुकुत्स-मंबरीषं मुचुकुंदं च योगिनम् ॥
तेषां स्वसारः पंचाशत् सौभरिं वव्रिरे पतिम् ॥ ६.३८ ॥

यमुनान्तर्जले मग्न-स्तप्यमानः परंतपः ।
निर्वृतिं मीनराजस्य वीक्ष्य मैथुन-धर्मिणः ॥ ६.३९ ॥

जातस्पृहो नृपं विप्रः कन्या-मेका-मयाचत ।
सोऽप्याह गृह्यतां ब्रह्मन् कामं कन्याः स्वयंवरे ॥ ६.४० ॥

स विचिन्त्याप्रियं स्त्रीणां जरठोऽय-मसंमतः ।
वलीपलित एजत्क इत्यहं प्रत्युदाहृतः ॥ ६.४१ ॥

---

### இக்ஷ்வாகு வம்ச வர்ணனை

ஸ்ரீ சுகர் கூறியது—

6. 37. சூரியன் எங்கு உதிக்கிருனே அங்கிருந்து எங்கு அஸ்தமிக்கிருனே அதுவரை உள்ள பிரதேசம் முழுவதும் யுவனுசுவ குமாரனுகிய மாந்தாதாவினுடைய தேசமென்று கூறப்படுகிறது.

6. 38. இந்த அரசன் சசபிந்துவின் பெண்ணுகிய பிந்துமதியிடம் புருகுத்ஸன், அம்பரீஷன், முசுகுந்தயோகி என்ற புத்திரர்களைப் பெற்ருன். அவர்களுடைய சகோதரிகள் ஐம்பதுபேரும் ஸௌபரி மகரிஷியைப் பதியாக அடைந்தார்கள்.

6. 39-40. காமம் முதலிய உட்பகைகளை வெல்லுபவராய் (ஸௌபரி மகரிஷி) யமுனை நதியினுள் மூழ்கிக்கொண்டுத் தவஞ் செய்கையில் சிறந்த மீனென்று பெண் மீன்களுடன்கூடிக் குலவி யானந்திப்பதைக் கண்ணுற்று, (சிற்றின்பத்தில்) ஆசையெழுந்தவராய் அரசனை (மாந்தாதாவை) அணுகி அந்தப் பிராம்மணர் ஒரு கன்னிகையைத் தனக்குத் தரும்படி யாசித்தார். "பிராம்மணரே! ஸ்வயம்வரத்தில் இஷ்டம் போல் கன்னிகைகளைக் கிரகித்துக்கொள்ளலாம்" என்ருர் அரசர்.

6. 41. இதைக் கேட்டு அவர் "இவன் மூப்படைந்தவன், சதை சுருங்கியவன், நரை விழுந்தவன், தலையாடுபவன், ஸ்திரீகள் விரும்பாதவன், ஆதலின் ஸம்மதிக்க முடியாதவன் என்று எண்ணி இவ்வரசன் இவ்வாறு பதில் கூறினன் போலும்" என்று நினைத்தார்.

---

**ஆருவது அத்தியாயம்**

(1.-36.) இக்ஷ்வாகுவின் பிள்ளையான விகுக்ஷியின் புத்திரன் புரஞ்ஜயன், இவன் மகாவீரன். அசுரர்களின் பட்டணங்களை ஜயித்ததால் புரஞ்ஜயன் என்றும். ரிஷபத்தின் திமில் மேல் சவாரி செய்ததால் ககுத்ஸ்தன் என்றும் இவனுக்குப் பெயர். இவனுக்கு ஐந்தாவது தலைமுறைக்குப்பின் தலைமுறையில் தோன்றியவன் யுவனுசுவன். இதற்குப் பத்துத் தலை முறைக்குப்பின் இன்னொரு யுவனுசுவன். அவன் புத்ரகாமேஷ்டி செய்கையில் யாகசாலையில் இராத்திரியில் எழுந்து மந்திரித்த கலசத்திலிருந்த தீர்த்தத்தைத் தெரியாமல் தாகத்திற்குச் சாப்பிட்டு விட்டான். அதன் வீரியத்தால் அவனுடைய விலாப்புறத்தைப் பிளந்துகொண்டு ஒரு குழந்தை தோன்றிற்று. அந்தக் குழந்தையை 'அழாதே' என்று இந்திரன் சமாதானப் படுத்தி 'இவன் என்னைக் காப்பவன்—மாந்தாதா—'என்ருன்.

---

பா. பே.

6. 38. शशबिन्दोः । बिन्दुमत्या-मजीजनत् ।

साधयिष्ये तथाऽऽत्मानं सुरस्त्रीणा-मभीप्सितम् ।
किं पुन-र्मनुजेन्द्राणा-मिति व्यवसितः प्रभुः ॥ ६.४२ ॥

मुनिः प्रवेशितः क्षत्त्रा कन्यान्तःपुरमृद्धिमत् ।
वृतश्च राजकन्याभिरेकः पंचाशता वरः ॥ ६.४३ ॥

---

6. 42. " ஆகையால் தேவ ஸ்திரீகளும் விரும்பத்தக்கதாக என் சரீரத்தை ஆக்கிக்கொள்வேன். அப்போது மானிட சிரேஷ்டர்கள் விரும்புவர் எனச் சொல்ல வேண்டுமா ?" என்று ஸர்வ வல்லமை வாய்ந்த ஸௌபரி நிச்சயித்துக்கொண்டார்.

6. 43. வாயிற்காப்போனால் ஐசுவரியம் நிறைந்த கன்யா மாடத்தினுள் முனிவர் அனுமதிக்கப்பட்டார். ஐம்பது அரச குமாரிகளாலும் இந்த ஒருவர் சிறந்த பதியாக வரிக்கப்பட்டார்.

---



**एवं गृहेष्वभिरतो विषयान् विविधैः सुखैः।**
**सेवमानो न चातुष्य-दाज्यस्तोकै-रिवानलः** ॥ ६.४८ ॥

**स कदाचिदुपासीन आत्मापह्नव-मात्मनः।**
**ददर्श बह्वृचाचार्यो मीनसङ्ग-समुत्थितम्** ॥ ६.४९ ॥

**अहो इमं पश्यत मे विनाशं तपस्विनः सच्चरितव्रतस्य।**
**अन्तर्जले वारिचरप्रसंगात् प्रच्यावितं ब्रह्म चिरं धृतं यत्** ॥ ६.५० ॥

**संगं त्यजेत मिथुनव्रतिनां मुमुक्षुः सर्वात्मना न विसृजेद् बहिरिन्द्रियाणि।**
**एकश्चरन् रहसि चित्तमनन्त ईशे युंजीत तद्व्रतिषु साधुषु चेत्प्रसंगः** ॥ ६.५१॥

**एवं वसन् गृहे कालं विरक्तो न्यास-मास्थितः।**
**वनं जगामानुययु-स्तत्पत्न्यः पतिदेवताः** ॥ ६.५३ ॥

---

6. 48. இவ்வாறுக (அவர் ராஜகன்னிகைகளுடன் கூடி) கிருகங்களில் பற்றுக் கொண்டு பலவிதமான சுகங்களைத் தரும் விஷயங்களை யனுபவித்தார்; எனினும் நெய்த் துளிகளால் நெருப்புத் திருப்தியடையாதவாறு அவர் திருப்தியடையவில்லை.

6. 49. பல ரிக்குகளைப் படிக்கும் ரிக்வேதிகளுக்கும் ஆசாரியராகிய அவர் ஒரு சமயம் தனிமையில் வீற்றிருக்கும்போது (மனது அடங்காத காரணத்தால்) மீன்களுடன் ஸஹவாஸத்தால் தனக்கு ஏற்பட்ட வீழ்ச்சியை எண்ணிப் பார்த்தார்.

6. 50. அந்தோ! தபஸ்வியும் நன்னடத்தையுள்ளவனுமான எனக்கேற்பட்ட இந்த அழிவைப் பாருங்கள். நீரினுள் மூழ்கியிருந்த எனக்கு நீர்வாழும் ஜந்துக்களின் கூட்டுறவால் நெடுங்காலம் காக்கப்பட்ட தவம் எதுவோ அது அழிந்துவிட்டது.

6. 51. மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன் பெண்களுடன் கூடி வாழ்பவர்களின் உறவை விட்டுவிடவேண்டும். எவ்விதத்திலும் இந்திரியங்களை வெளியே செல்ல விடக்கூடாது. தனிமையில் ஒருவனுக இருந்துகொண்டு சித்தத்தை அளவு கடந்த மகிமையுடைய ஸர்வேசுவரனிடத்தில் செலுத்தவேண்டும். பிறருடன் கூடியிருக்க விரும்பினுல் விரத சீலர்களான ஸாதுக்களுடன் இருக்கவேண்டும்.

6. 53. இவ்வாறு அவர் சிறிதுகாலம் கிருஹத்தில் வசித்துப் பற்றையொழித்து வைராக்கிய சீலராய் (வானப்பிரஸ்தராக) வனம் சென்றுர். பதியைத் தெய்வமாகக் கொண்ட அவருடைய பத்தினிகளும் அவரைப் பின்பற்றினர்.

---

6. 49. **அபஹ்னவம்**—தபோஹானிம்।
ஒ. ஜடபரதர், அஜாமிளன்.

6. 50. ஒ. (ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம:। ஸ்ம்ருதிப்ரம்சாத்-புத்திநாசோ புத்தி நாசாத் ப்ரணச்யதி।) மோஹத்தினின்று நன்னினைவின் கேடு விளைகின்றது; நன்னினைவு கெட்டதால் புத்தி நாசம் ஏற்படுகிறது; புத்தி நாசத்தினுல் முற்றும் அழிகிறுன். —கீ. 2. 63.
**ப்ரஹ்ம**—தப:।

6. 51. ஒ. ந ததாஸ்ய பவேன் மோஹோ பந்தச்சான்ய-ப்ரஸங்கத:।
யோஷித் ஸங்காத் யதா பும்ஸோ யதா தத்ஸங்கஸங்கித:॥
—பாக. 3. 31-35.

---

6. 50. **पश्यत सङ्गदोषं।** 6. 53. **कामं विरक्तो।** பா. பே.

तत्र तप्त्वा तपस्तीक्ष्ण-मात्मकर्श-मनात्मवित् ।
सहैवाग्निभि-रात्मानं युयोज परमात्मनि          ॥ ६.५४ ॥

ताः स्वपत्यु-र्महाराज निरीक्ष्याध्यात्मिकीं गतिम् ।
अन्वीयु-स्तत्प्रभावेण अग्निं शान्त-मिवार्चिषः          ॥ ६.५५ ॥

मान्धातुः पुत्रप्रवरो योऽम्बरीषः प्रकीर्तितः ।
पितामहेन प्रवृतो यौवनाश्वश्च तत्सुतः ॥
हारीत-स्तस्य पुत्रोऽभून्मान्धातृ-प्रवरा इमे          ॥ ७.१ ॥

त्रसद्दस्युः पौरुकुत्सो योऽनरण्यस्य देहकृत् ।
हर्यश्व-स्तत्सुत-स्तस्मादरुणोऽथ त्रिबन्धनः          ॥ ७.४ ॥

तस्य सत्यव्रतः पुत्र-स्त्रिशंकुरिति विश्रुतः ।
प्राप्तश्चाण्डालतां शापाद् गुरोः कौशिक-तेजसा          ॥ ७.५ ॥

सशरीरो गतः स्वर्ग-मद्यापि दिवि दृश्यते ।
पातितोऽवाक्-शिरा देवैस्तेनैव स्तंभितो बलात्          ॥ ७.६ ॥

---

6. 54. ஆத்ம ஞானியாகிய முனிவர் அங்கு உடலை வருத்திக் கடுமையான தவம் புரிந்து அக்கினிகளுடன் தன்னைப் பரமாத்மாவிடம் லயப்படுத்தினர்.

6. 55. மகாராஜனே! பத்தினிகள் பர்த்தாவின் அத்தியாத்ம கதியைக் கண்டு அவருடைய மகிமையால் சாந்தமான அக்கினியில் ஜ்வாலைகள் ஒடுங்குவதுபோல் அவரைத் தொடர்ந்து ஐக்கியமாயினர்.

7. 1. மாந்தாதாவின் புத்திரர்களில் சிறந்தவன் அம்பரீஷன் எனப் புகழ் பெற்றவன். அவனை அவனுடைய பாட்டனர் (யுவனாச்வர்) ஸ்வீகாரம் செய்து கொண்டார். அவனுடைய புத்திரன் யௌவனாச்வன். யௌவனாசுவனுக்குப் புத்திரனாகத் தோன்றியவன் ஹாரீதன். (யுவனாச்வன், அம்பரீஷன், ஹாரீதன்) இம் மூவரும் மாந்தாத்ரு கோத்ரப் பிரவர்த்தகர்கள்.

7. 4. புருகுத்ஸனுடைய குமாரன் த்ரஸத்தஸ்யு; த்ரஸத்தஸ்யுவின் குமாரன் ஹர்யச்வன்; ஹர்யச்வனுடைய குமாரன் அருணன்; அருணனுடைய குமாரன் த்ரிபந்தனன்.

7. 5-6. அவனுக்கு ஸத்யவிரதன் புத்திரன்; அவனே திரிசங்கு எனப் பிரசித்தி பெற்றவன்; குருவின் சாபத்தால் சண்டாளத் தன்மையடைந்தும், கௌசிக முனிவரின் தவ மகிமையால் சரீரத்துடன் சுவர்க்கம் சென்று இப்பொழுதும் வானத்தில் (நக்ஷத்திர வடிவில்) காணப்படுகிறன். தேவர்களால் தலைகீழாகத் தள்ளப்பட்டும் அந்தக் கௌசிக முனிவரின் தவவலிமையாலேயே (வானத்தில்) நிலைநிறுத்தப்பட்டவனுயினன்.

---

7. 5-6. த்ரய: சங்கவ இவ து:க்க ஹேதவோ தோஷா யஸ்யாஸௌ த்ரிசங்கு: ॥
(1) தந்தையின் கோபத்திற்காளானது. (2) குருவின் பசுவை இருட்டில் புலியென்று நினைத்துக் கொன்றது. (3) பிராம்மண கன்னிகையை அபகரித்தது.

---

6. 54. तपस्तीव्र ।          7. 1. युवनाश्वश्च ।          பா. பே.

त्रैशंकवो हरिश्चन्द्रो विश्वामित्र-वसिष्ठयोः।
यन्निमित्त-मभूद्युद्धं पक्षिणो-र्बहुवार्षिकम् ॥ ७.७ ॥

सोऽनपत्यो विषण्णात्मा नारदस्योपदेशतः।
वरुणं शरणं यातः पुत्रो मे जायतां प्रभो ॥ ७.८ ॥

यदि वीरो महाराज तेनैव त्वां यजे इति।
तथेति वरुणेनास्य पुत्रो जातस्तु रोहितः ॥ ७.९ ॥

रोहितस्तदभिज्ञाय पितुः कर्म चिकीर्षितम्।
प्राणप्रेप्सु-र्धनुष्पाणिररण्यं प्रत्यपद्यत ॥ ७.१६ ॥

षष्ठं संवत्सरं तत्र चरित्वा रोहितः पुरीम्।
उपव्रजन्नजीगर्ता-दक्रीणान्मध्यमं सुतम् ॥ ७.२० ॥

शुनश्शेपं पशुं पित्रे प्रदाय समवन्दत।
ततः पुरुषमेधेन हरिश्चन्द्रो महायशाः ॥ ७.२१ ॥

मुक्तोदरोऽयजद्देवान्वरुणादीन्महत्कथः।
शुनःशेपस्य माहात्म्य-मुपरिष्टात् प्रवक्ष्यते ॥ ७.२४ ॥

---

7. 7. திரிசங்குவின் குமாரன் ஹரிச்சந்திரன். அவன் பொருட்டு வீசுவாமித்திரரும் வசிஷ்டரும் பறவை உருக்கொண்டு பல வருஷங்கள் சண்டையிடும்படி ஆயிற்று.

7. 8-9. புத்திரனில்லாத ஹரிச்சந்திரன் மனம் வருந்தி நாரதருபதேசத்தால் வருணனைச் சரணடைந்து, "பிரபுவே! எனக்குப் புத்திரனுண்டாகும்படி அருள்புரிய வேண்டும். வருண மகாராஜனே! வீரனாகிய குமாரன் உண்டானால் அவனாலேயே உமக்கு யாகம் செய்கிறேன்" என்று பிராத்தித்தான். வருணனும் "அங்ஙனமே ஆகுக!" என்றான். இவனுக்கு ரோஹிதன் என்ற புத்திரனும் பிறந்தான்.

7. 16. ரோஹிதன் (நாளடைவில்) தகப்பன் செய்ய விரும்பிய காரியத்தையறிந்து பிராணனைக் காத்துக்கொள்ள விரும்பிக் கையில் வில்லுடன் அரணியம் சென்றான்.

7. 20. ஆறு வருஷம் அங்கு தவம் செய்துவிட்டு நகரம் திரும்பும்போது அஜீகர்த்தர் என்ற ரிசீக முனிவரிடமிருந்து அவருடைய (மூன்று புத்திரர்களில்) நடுவலனான புத்திரனைக் கிரயத்துக்கு வாங்கி வந்தான்.

7.21-24. சுனச்சேபன் என்ற அவனை யாகப் பசுவாகப் பிதாவிடம் கொடுத்து வந்தனம் செய்தான். எவனுடைய கதையை மகான்கள் பேசுகின்றார்களோ அந்தப் பெரும் புகழ்பெற்ற ஹரிச்சந்திரன் பிறகு (தனக்கு ஏற்பட்டிருந்த) மஹோதர வியாதியினின்று விடுபட்டுப் புருஷமேதத்தால் வருணன் முதலிய தேவர்களைப் பூஜித்தான். சுனச்சேபனுடைய மாஹாத்மியத்தை மேலே கூறுவோம்.

हरितो रोहितसुत-श्चंपस्तस्माद्विनिर्मिता ।
चंपापुरी सुदेवोऽतो विजयो यस्य चात्मजः ॥ ८.१ ॥

रुरुकस्तत्सुत-स्तस्माद् वृकस्तस्यापि बाहुकः ।
सोऽरिभि-र्हृतभू राजा सभार्यो वनमाविशत् ॥ ८.२ ॥

वृद्धं तं पंचतां प्राप्तं महिष्यनु मरिष्यती ।
और्वेण जानताऽऽत्मानं प्रजावंतं निवारिता ॥ ८.३ ॥

आज्ञायास्यै सपत्नीभि-र्गरो दत्तोऽम्भसा सह ।
सह तेनैव संजातः सगराख्यो महायशाः ॥ ८.४ ॥

सगर-श्चक्रवर्त्यासीत् सागरो यत्सुतैः कृतः ।
सोऽश्वमेधै-रयजत सर्ववेदसुरात्मकम् ॥ ८.७ ॥

और्वोपदिष्ट-योगेन हरि-मात्मान-मीश्वरम् ।
तस्योत्सृष्टं पशुं यज्ञे जहाराश्वं पुरन्दरः ॥ ८.८ ॥

---

8. 1. ரோஹிதனுடைய குமாரன் ஹரிதன்; ஹரிதனுடைய புத்திரன் சம்பன். இந்த சம்பனுல் நிர்மாணம் செய்யப்பட்டதுதான் சம்பாபுரீ. சம்பனுடைய புத்திரன் ஸுதேவன். ஸுதேவனுடைய குமாரன் விஜயன்.

8. 2. விஜயனுடைய குமாரன் ருருகன். அவனுடைய புத்திரன் வ்ருகன். அவனிடமிருந்து பாஹுகன். அவ்வரசன் எதிரிகளால் தோற்கடிக்கப்பட்டு அரசிழந்து மனைவிகளுடன் வனம் புகுந்தான்.

8. 3. மூப்படைந்த அவ்வரசன் மரணமடைந்தும் அவனுடைய பட்டமகிஷி உடன்கட்டையேற விரும்பியபோது அவள் கர்ப்பவதியாயிருந்ததை யறிந்த ஔர்வ மகரிஷியால் தடுக்கப்பட்டாள்.

8. 4. இதையறிந்த ஸஹகளத்திகளால் தண்ணீருடன் கலந்து அவளுக்கு விஷம் (கரம்) கொடுக்கப்பட்டது. அந்த விஷத்துடன் பிறந்தவன்தான் பெரும்புகழ் வாய்ந்த ஸகரன் எனப்படுவோன்.

8. 7-8. ஸகரன் சக்ரவர்த்தியானுன். அவனுடைய குமாரர்களால்தான் ஸாகரம் ஏற்படுத்தப்பட்டது. அவன் ஔர்வர் உபதேசித்த முறைப்படி ஸர்வவேதஸ்வரூபியும் ஸர்வதேவாத்மகனும் ஆத்மாவும் ஈசுவரனுமாகிய ஹரியை அசுவ மேதங்களால் ஆராதித்தான். அவன் யாகத்தில் அவிழ்த்துவிடப்பட்ட குதிரையை இந்திரன் அபகரித்து மறைத்தான்.

---

8. 4. न हतस्तेन संजातः
8. 7. सर्वदेवं सुरोत्तमम् । பா. பே.

सुमत्यास्तनया दृप्ताः पितुरादेशकारिणः ।
हयमन्वेषमाणास्ते समन्तान्न्यखनन् महीम् ॥ ८.९ ॥

प्रागुदीच्यां दिशि हयं ददृशुः कपिलान्तिके ।
एष वाजिहरश्चौर आस्ते मीलित-लोचनः ॥ ८.१० ॥

हन्यतां हन्यतां पाप इति षष्टिसहस्रिणः ।
उदायुधा अभिययु-रुन्मिमेष तदा मुनिः ॥ ८.११ ॥

स्वशरीराग्निना तावन्महेन्द्र-हृत-चेतसः ।
महद्व्यतिक्रमहता भस्मसा-द्भवन् क्षणात् ॥ ८.१२ ॥

न साधुवादो मुनिकोप-भर्जिता नृपेन्द्र पुत्रा इति सत्त्वधामनि ।
कथं तमो रोषमयं विभाव्यते जगत् पवित्रात्मनि खे रजो भुवः ॥ ८.१३ ॥

योऽसमंजस इत्युक्तः स केशिन्या नृपात्मजः ।
तस्य पुत्रोंऽशुमान् नाम पितामह-हिते रतः ॥ ८.१५ ॥

---

8. 9. (ஸகரபத்தினியாகிய) ஸுமதியின் குமாரர்கள் தந்தையின் கட்டளையை நிறைவேற்றும் பொருட்டு குதிரையைத் தேடிக்கொண்டு கர்வத்துடன் நாற்புறமும் சென்று பூமியைப் பறித்தார்கள்.

8. 10-11. வடகிழக்கில் (கபிலாசிரமத்தில்) கபிலரின் அருகில் அவர்கள் குதிரையைக் கண்டனர். "இவன்தான் குதிரையைத் திருடியவன், கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறுன்; பாவியாகிய இவனைக் கொல்லுங்கள், கொல்லுங்கள்" என்று அறுபதினுயிரம் பேரும் அவரை நோக்கி ஓடினுர்கள். அப்போது அம் முனிவர் கண் விழித்தார்.

8. 12. (இந்திரனுடைய மாயையால்) சித்தங் கெட்டவர்களும் மகாபுருஷருக்குச் செய்த அவமானத்தால் சவம் போன்றவர்களுமான அவர்கள் கபிலருடைய உடலி லிருந்து கிளம்பிய தீயில் ஒரு நொடியில் சாம்பலாயினர்.

8. 13. முனிவருடைய கோபத்தால் அரச சிரேஷ்டரின் புத்திரர்கள் நாசமடைந் தனர் என்பது நல்லோருடைய பேச்சன்று. ஸத்துவ குணத்தின் உறைவிடமும் உலகின் புனிதமே உருவாகியவருமான அவரிடம் கோபத்தாலாகிய தமோகுணம் எங்ஙனம் கற்பிக்க இயலும்? அது பூமியிலிருந்து கிளம்பிய புழுதியை ஆகாயத்தின் குற்றமாய்க் கூறியதுபோலாகும்.

8. 15. (ஸகர சக்ரவர்த்தியின் மற்றொரு மனைவியாகிய) கேசினியிடம் பிறந்த அரச குமாரன் அஸமஞ்சஸன் எனப்படுபவன். அவனுடைய புத்திரன் அம்சுமான் எனப் பெயர் பெற்றவன். அவன் பாட்டனுருக்கு விருப்பமானதைச் செய்வதில் ஆசை யுள்ளவன்.

असमंजस आत्मानं दर्शयन्नसमंजसम्।
जातिस्मरः पुरा सङ्गाद् योगी योगाद् विचालितः ॥ ८.१६ ॥

आचरन् गर्हितं लोके ज्ञातीनां कर्म विप्रियम्
सरय्वां क्रीडतो बालान् प्रास्यदुद्वेजयन् जनम् ॥ ८.१७ ॥

अंशुमांश्चोदितो राज्ञा तुरंगान्वेषणे ययौ।
पितृव्यखातानुपथं भस्मान्ति ददृशे हयम् ॥ ८.२० ॥

तत्रासीनं मुनिं वीक्ष्य कपिलाख्य-मधोक्षजम्।
अस्तौत् समाहितमनाः प्रांजलिः प्रणतो महान् ॥ ८.२१ ॥

अद्य नः सर्वभूतात्मन् कामकर्मेन्द्रियाशयः।
मोहपाशो दृढश्छिन्नो भगवंस्तव दर्शनात् ॥ ८.२७ ॥

**श्रीशुक उवाच—**

इत्थं गीतानुभावस्तं भगवान् कपिलो मुनिः।
अंशुमन्त-मुवाचेद-मनुगृह्य धिया नृप ॥ ८.२८ ॥

**श्री भगवानुवाच—**

अश्वोयं नीयतां वत्स पितामह पशुस्तव।
इमे च पितरो दग्धा गंगांभोऽर्हन्ति नेतरत् ॥ ८.२९ ॥

---

8. 16-17. இந்த அஸமஞ்சஸன் தன்னை மதியீனனைப்போல் காட்டிக்கொண்டு பிறர் வெறுக்கத்தக்கனவும் உறவினர்க்குப் பிரியமற்றனவுமான செயல்களை உலகில் செய்துகொண்டு, ஜனங்களை இம்சிப்பவனாய் ஸரயூ நதியில் விளையாடுங் குழந்தைகளை விட்டெறிந்தான். (இதற்காக நாடுகடத்தப்பட்டபோது அக்குழந்தைகளை யோக பலத்தால் மீண்டும் பிழைப்பித்தான்.)

8. 20. குதிரையைத் தேடுவதற்காக அரசனால் ஏவப்பட்ட அம்சுமான் தன் தந்தையுடன் பிறந்தவர்கள் சென்ற மார்க்கத்தில் சென்று சாம்பல் சுட்டுக்கருகில் குதிரையைக் கண்டான்.

8. 21. விஷ்ணுவின் அவதாரமும் கபிலர் எனப் பெயர் பெற்றவருமாகிய முனிவர் அங்கு வீற்றிருக்கக் கண்டு மனதை நிலைப்படுத்திக்கொண்டு கை கூப்பி நமஸ்கரித்து மகானாகிய அம்சுமான் அவரைத் துதித்தான்.

8. 27. அனைத்திற்கும் ஆன்மாவாகிய பகவானே! காமத்திற்கும் கருமத்திற்கும் இந்திரிய வியாபாரங்களுக்கும் உறைவிடமானதும் திடமானதும் ஆகிய மோஹ பாசம் உமது தரிசனத்தால் அறுபட்டுப் போயிற்று.

ஸ்ரீ சுகர் கூறியது—

8. 28. அரசே! இவ்விதம் துதிக்கப்பெற்ற மகானுபாவராகிய பகவான் கபில முனிவர் அம்சுமானிடம் அருள் சுரந்து பின்வருமாறு கூறினார்.

ஸ்ரீ பகவான் கபிலர் கூறியது—

8. 29. குழந்தாய்! உன் பாட்டனாரின் யாகக் குதிரை இதோ இருக்கிறது, ஓட்டிக்கொண்டு போகலாம். எரிந்துபோன உன் பிதிருக்களாகிய இவர்கள் கங்கை நீரை அடையவேண்டிய தகுதியுள்ளவர்கள்; வேறு நீர் உரித்தாகாது.

श्रीशुक उवाच—

तं परिक्रम्य शिरसा प्रसाद्य हयमानयत्।
सगरस्तेन पशुना क्रतुशेषं समापयत् ॥ ८.३० ॥

राज्य-मंशुमति न्यस्य निःस्पृहो मुक्तबन्धनः।
और्वोपदिष्टमार्गेण लेभे गतिमनुत्तमाम् ॥ ८.३१ ॥

अंशुमांश्च तपस्तेपे गङ्गानयन-काम्यया।
कालं महान्तं नाशक्नोत् ततः कालेन संस्थितः ॥ ९.१ ॥

दिलीप-स्तत्सुत-स्तद्व-दशक्तः कालमेयिवान्।
भगीरथ-स्तस्य पुत्र-स्तेपे स सुमहत् तपः ॥ ९.२ ॥

दर्शयामास तं देवी प्रसन्ना वरदास्मि ते।
इत्युक्तः स्वमभिप्रायं शशंसावनतो नृपः ॥ ९.३ ॥

कोऽपि धारयिता वेगं पतन्त्या मे महीतले।
अन्यथा भूतलं भित्त्वा नृप यास्ये रसातलम् ॥ ९.४ ।

किं चाहं न भुवं यास्ये नरा मय्यामृजंत्यघम्।
मृजामि तदघं कुत्र राजंस्तत्र विचिंत्यताम् ॥ ९.५ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

8. 30. அம்சுமான் அவரை வலம் வந்து தலையால் வணங்கித் திருப்தி செய்வித்து விட்டுக் குதிரையை அழைத்துச் சென்ருன். ஸகரரும் அக் குதிரையைக்கொண்டு குறைப்பட்டிருந்த யாகத்தை முடித்துக் கொண்டார்.

8. 31. பின்பு ஸகரர் அரசை அம்சுமானிடம் கொடுத்துவிட்டு ஆசையற்றுத் தளைகள் நீங்கியவராய் ஔர்வர் உபதேசித்த வழி நின்று உயர்வற உயர்ந்த கதியை யடைந்தார்.

9. 1. அம்சுமான் கங்கையைக் கொண்டுவர விரும்பி நெடுங்காலம் தவஞ் செய்தான் எனினும் அதைச் சாதிக்க முடியவில்லை. நாளடைவில் மரணமடைந்தான்.

9. 2. அவன் புத்திரனுன திலீபனும் அவனைப்போலவே காரியத்தைச் சாதிக்க மாட்டாமல் காலமடைந்தான். அவனுடைய புத்திரன் பகீரதன் பெருந் தவம் செய்தான்.

9. 3. அவனுக்குக் கங்காதேவி தரிசனமளித்து, 'உன் தவத்திற்கு மெச்சினேன், வரமளிக்கிறேன்' என்று கூற அவ்வரசனும் தலைவணங்கித் தனது கோரிக்கையை வெளியிட்டான்.

9. 4-5. 'நான் பூமியில் வீழ்கையில் என் வேகத்தைத் தாங்குபவர் யார் உளர்? அரசே! தாங்கக்கூடியவர் இல்லாவிடின் நான் பூமியைப் பிளந்துகொண்டு, பாதாளம் சென்று விடுவேன். மேலும் நான் பூமியில் செல்லமாட்டேன். (அங்ஙனம் சென்ருல்) மனிதர் என்னிடம் பாவத்தைக் கழிப்பார்கள். அந்தப் பாவத்தை நான் எங்கே போக்குவேன்? அரசே! இதைப்பற்றி யோசிக்க வேண்டும் (என்று கங்கை கூறிஞள்.)

भगीरथ उवाच—

साधवो न्यासिनः शान्ता ब्रह्मिष्ठा लोकपावनाः।
हरन्त्यघं तेऽङ्गसङ्गात् तेष्वास्ते ह्यघभिद्धरिः ॥ ९.६ ॥

धारयिष्यति ते वेगं रुद्रस्त्वात्मा शरीरिणाम्।
यस्मिन्नोत-मिदं प्रोतं विश्वं शाटीव तन्तुषु ॥ ९.७ ॥

इत्युक्त्वा स नृपो देवं तपसातोषयच्छिवम्।
कालेनाल्पीयसा राजं-स्तस्येशः समतुष्यत ॥ ९.८ ॥

तथेति राज्ञाभिहितं सर्वलोकहितः शिवः।
दधारावहितो गङ्गां पादपूतजलां हरेः ॥ ९.९ ॥

भगीरथः स राजर्षि-र्निन्ये भुवनपावनीम्।
यत्र स्वपितॄणां देहा भस्मीभूताः स्म शेरते ॥ ९.१० ॥

भस्मीभूताङ्गसङ्गेन स्वर्याताः सगरात्मजाः।
किं पुनः श्रद्धया देवीं ये सेवन्ते धृतव्रताः ॥ ९.१३ ॥

---

பகீரதன் கூறியது—

9. 6. 'சாந்தர்களும், பிரம்ம நிஷ்டர்களும், உலகைப் புனிதமாக்குபவர்களுமாகிய ஸாதுக்களும் ஸந்நியாஸிகளும் தங்களுடைய சரீரச் சேர்க்கையால் உன்னிடம் வரும் பாவத்தைப் போக்குவார்கள். பாவங்களைப் போக்கும் ஹரி அவர்களிடம் உறைகின்றார்.

9. 7. உடல் படைத்தோரின் ஆத்மாவாய் விளங்கும் ருத்திரர் உனது வேகத்தைத் தாங்குவார். அவரிடமன்றோ இவ்வுலகு நூல்களில் வஸ்திரம்போல் கோக்கப்பட்டுள்ளது.

9. 8. இங்ஙனம் கூறிவிட்டு அவ்வரசன் மகாதேவனுகிய சிவனைத் தவத்தால் ஸந்தோஷிப்பிக்க முயன்ருன். அரசே! குறுகிய காலத்தில் அவனிடத்தில் ஈசுவரனும் ஸந்தோஷமடைந்தார்.

9. 9. அரசனுடைய கோரிக்கையை அங்ஙனமே ஆகுக, என்று ஒப்புக்கொண்டு உலகனைத்திற்கும் நன்மையை நாடும் சிவன் ஹரியின் பாதத்தால் பாவனமான கங்கை நீரை ஸாவதானமாகத் தாங்கினுர்.

9. 10. ராஜ ரிஷியாகிய பகீரதன் உலகைப் புனிதமாக்கும் கங்கையைத் தன் பிதிருக்களின் உடல்கள் சாம்பலாக இருந்த இடத்திற்கு அழைத்துச் சென்ருன்.

9. 13. சாம்பலாய்ப்போன உடலில் (கங்கை நீர்)பட்ட மாத்திரத்தில் ஸகர புத்திரர்கள் ஸ்வர்க்கம் சென்றனர். அப்படியிருக்கச் சிரத்தையுடன் திடவிரதர்களாய்க் கங்காதேவியைச் சேவிப்பவர்களைப்பற்றிக் கேட்கவேண்டுமா?

न ह्येतत् परमाश्चर्यं स्वर्धुन्या यदि होदितम् ।
अनन्तचरणांभोज-प्रसूताया भवच्छिदः ॥ ९.१४ ॥

श्रुतो भगीरथाज्जज्ञे तस्य नाभोऽपरोऽभवत् ।
सिन्धुद्वीप-स्ततस्तस्मादयुतायु-स्ततोऽभवत् ॥ ९.१६ ॥

ऋतुपर्णो नलसखो योऽश्वविद्यामयान्नलात् ।
दत्त्वाक्षहृदयं चास्मै सर्वकामस्तु तत्सुतः ॥ ९.१७ ॥

ततः सुदास-स्तत्पुत्रो मदयन्ती-पति-र्नृप ।
विज्ञाप्य ब्राह्मणीशापं महिष्या स निवारितः ॥ ९.३७ ॥

तत ऊर्ध्वं स तत्याज स्त्रीसुखं कर्मणाऽप्रजाः ।
वसिष्ठस्तदनुज्ञातो मदयन्त्यां प्रजामधात् ॥ ९.३८ ॥

---

9. 14. பகவானுடைய பாத கமலங்களில் உதித்தவளும் பிறவித் துன்பத்தைப் போக்குபவளுமான ஆகாய கங்கையைப்பற்றி இங்கு கூறியது ஆச்சரியமன்று.

9. 16. பகீரதனிடம் சுருதன் பிறந்தான். அவனிடம் நாபன் தோன்றினுன். அவனிடம் ஸிந்துத்துவீபனும், அவனிடமிருந்து அயுதாயுஸ்ஸும் தோன்றினுர்கள்.

9. 17. அயுதாயுஸ்ஸிடம் ருதுபர்ணன் பிறந்தான். இந்த ருதுபர்ணன் நளனுடைய நண்பன். நளனுக்கு அக்ஷஹிருதயத்தைக் கற்பித்து அவனிடம் அசுவ வித்தையைக் கற்றுக்கொண்டான். ருதுபர்ணனுடைய குமாரன் ஸர்வகாமன்.

9. 37. அரசே! ஸர்வகாமனுடைய குமாரன் ஸுதாஸன். அவனுடைய குமாரன் (ஸௌதாஸன்) மதயந்தியின்பதி. இவனுக்கு (ஒரு பிராம்மண ஸ்திரீயின் சாபம் ஏற்பட்டிருந்தது. ஸ்திரீயுடன் சேர்ந்தால் மரணமுண்டாகும் என்பது அந்தச் சாபம்). அந்தச் சாபத்தைத் ஞாபகப்படுத்தி அவன் மனைவி தன்னிடம் அவன் சேர்வதைத் தடுத்தாள்.

9. 38. அதன்பின் இவன் ஸ்திரீ ஸுகத்தை விடுத்தான். அச் செயலால் மக்களில்லாதவனுனன். ஆனுல் அவனுடைய அனுமதியால் வசிஷ்டர் மதயந்திக்குப் புத்திரனை யளித்தார்.

---

9. 14. ஒ. மாதர்-ஜான்ஹவி சம்பு-ஸங்கவலிதே மௌலௌ நிதாயாஞ்ஜலிம் த்வத் தீரே வபுஷோ஽வஸான-ஸமயே நாராயணுங்க்ரித்வயம்। ஸானந்தம் ஸ்மரதோ பவிஷ்யதி மம ப்ராண-ப்ரயாணோத்ஸவே பூயாத்-பக்தி-ரவிச்யுதா ஹரிஹராத்வைதாத்மிகா சாச்வதீ ॥
—கங்கா ஸ்தோத்ரம்: சங்.

9. 37. ஸௌதாஸன் ஒரு சமயம் வேட்டையாடுகையில் ஒரு ராக்ஷஸனைக் கொன்றுன். அவனுடைய சகோதரன் இதற்குப் பழிவாங்க எண்ணி மாறுவேஷத்தில் அரசன் அரண் மனையில் சமையல்காரனுயமர்ந்தான். குலகுருவாகிய வசிஷ்டருக்கு நரமாம்ஸத்தைச் சமையல் செய்து வைத்தான். வசிஷ்டர் அரசனைச் சபித்தார், "நீ ராக்ஷஸனுயிருக்க வேண்டியவன்" என்று. பின்னர் உண்மையறிந்து, "பனிரண்டு வருஷங்கழித்து சாபம் முடிவுபெறும்" என்று கூறினுர். ராக்ஷஸனுகிய ஸௌதாஸன் ஒரு சமயம் வனத்தில் ஒரு பிராம்மணன் மனைவியுடன் கூடும் ஸமயத்தில் அவனைக் கொன்றுன். பிராம்மண ஸ்திரீ 'நீ இனி ஸ்திரீயை அணைந்தால் இறந்துபோகக் கடவாய்' என்று சாபமிட்டாள்.

अश्मकान्मूलको जज्ञे यः स्त्रीभिः परिरक्षितः ।
नारीकवच इत्युक्तो निःक्षत्रे मूलकोऽभवत् ॥ ९.४० ॥

राजा विश्वसहो यस्य खट्वाङ्गश्चक्रवर्त्यभूत् ॥ ९.४१ ॥

यो देवैरर्थितो दैत्या-नवधीद् युधि दुर्जयः ।
मुहूर्त-मायु-र्ज्ञात्वैत्य स्वपुरं संदधे मनः ॥ ९.४२ ॥

न बाल्येऽपि मतिर्मह्य-मधर्मे रमते क्वचित् ।
नापश्य-मुत्तमश्लोका-दन्यत् किंचन वस्त्वहम् ॥ ९.४४ ॥

देवैः कामवरो दत्तो मह्यं त्रिभुवनेश्वरैः ।
न वृणे तमहं कामं भूतभावन-भावनः ॥ ९.४५ ॥

---

9. 40. (அந்தப் புத்திரன் அச்மகன்.) அவனிடம் மூலகன் பிறந்தான். இவன் ஸ்திரீகளால் (பரசுராமரிடமிருந்து) ரக்ஷிக்கப்பட்டு நாரீகவசன் எனப் பெயர் பெற்ருன். க்ஷத்திரியர்களற்றுப்போன குலத்திற்கு மூலமாக இருந்தமையால் இவன் மூலகன் எனப் பெயர் பெற்ருன்.

9. 41. இவனுக்கு விச்வஸஹன் பிறந்தான். இவன் கட்வாங்கன் என்ற பெயருடன் சக்கரவர்த்தியாஞன்.

9. 42. இவன் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவன். தேவர்களுடைய வேண்டுதலுக்கிணங்கி அசுரர்களை வதம் செய்தான். தேவர்களிடமிருந்து தனது ஆயுள் மிகுதி இரண்டு நாழிகைதான் என்று அறிந்தபோது தனது நகரம் திரும்பி மனத்தைப் பகவானிடம் நிறுத்திஞன்.

9. 44. 'சிறுவயதிலுங்கூட என் புத்தி ஒருபோதும் அதருமத்தில் இன்புற்றதில்லை. உத்தம சுலோகஞகிய பகவானைத் தவிர வேறு எதையும் நான் பொருட்படுத்தியதில்லை.

9. 45. 'மூவ்வுலக நாயகர்களாகிய தேவர்களால் எனக்கு இஷ்டமான வரம் கொடுக்கப்பட்டது. பூதபாவனரான பகவானிடம் மனம் வைத்த நான் வேறு எந்த வரத்துக்கும் ஆசைப்படவில்லை.

---

வம்ச விருக்ஷம்

ஸௌதாஸன் = மதயந்தி (வசிஷ்டரிடம்)
|
அச்மகன்
|
மூலகன் (நாரீகவசன்)
|
கட்வாங்கன் (விச்வஸஹன்)
|
திலீபன் (தீர்க்கபாஹு)
|
ரகு
|
அஜன்
|
தசரதன்

---

9. 44. अधर्मे रमते क्वचित् ।

ये विक्षिप्तेन्द्रिय-धियो देवास्ते स्वहृदिस्थितम् ।
न विन्दन्ति प्रियं शश्व-दात्मानं किमुतापरे ॥ ९.४६ ॥

अथेश-माया-रचितेषु सङ्गं गुणेषु गन्धर्व-पुरोपमेषु ।
रूढं प्रकृत्याऽऽत्मनि विश्वकर्तु-र्भावेन हित्वा तमहं प्रपद्ये ॥ ९.४७ ॥

यत् तद् ब्रह्म परं सूक्ष्म-मशून्यं शून्यकल्पितम् ।
भगवान् वासुदेवेति यं गृणन्ति हि सात्वताः ॥ ९.४८ ॥

खट्वाङ्गाद् दीर्घबाहुश्च रघु-स्तस्मात् पृथुश्रवाः ।
अज-स्ततो महाराज-स्तस्माद् दशरथोऽभवत् ॥ १०.१ ॥

तस्यापि भगवानेष साक्षाद् ब्रह्ममयो हरिः ।
अंशांशेन चतुर्भागात् पुत्रत्वं प्रार्थितः सुरैः ॥
राम-लक्ष्मण-भरत-शत्रुघ्ना इति संज्ञया ॥ १०.२ ॥

---

9. 46. 'இந்திரியங்களையும் புத்தியையும் சிதற விட்டவர்களாகிய தேவர்கள் தமது உள்ளத்தில் இடைவிடாதுறையும் பிரியனாகிய ஆத்மாவை அறிந்து கொள்ள வில்லை. மற்றவர்களைப்பற்றிக் கேட்கவேண்டுமா ?

9. 47. 'ஆகையால் ஈசுவரனுடைய மாயையால் தோற்றுவிக்கப்பட்ட கந்தர்வ நகரத்திற்கொப்பான குணங்களில் இயற்கையாகவே மனதிலேற்பட்டுள்ள பற்றுதலை உலக நாயகனாகிய பகவானைத் தியானித்தலால் விட்டு பகவானைச் சரண்புகுகின்றேன்'.

9. 48. எது சூக்ஷ்மமான பரப்பிரம்மமோ, எது சூனியம்போல் தோன்றினாலும் சூனியமன்றோ, எந்த வஸ்துவைப் பக்தர்கள் பகவான் வாசுதேவன் என்று போற்று கிறார்களோ அதை (கட்வாங்கன்) அடைந்தான்.

10. 1. கட்வாங்கனிடம் தீர்க்கபாஹு தோன்றினார். தீர்க்கபாஹுவிடம் கீர்த்தி மிக்க ரகு பிறந்தார். அரசே! ரகுவிடம் அஜன் பிறந்தார். அஜனிடம் தசரதர் உண்டானார்.

10. 2. பிரம்ம மயரும் ஸாக்ஷாத் பகவானுமாகிய ஹரி தேவர்களால் பிரார்த்திக் கப்பட்டவராய் அம்சத்தின் அம்சமாய் நான்கு பிரிவாகி ராமன், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் எனப் பெயர் கொண்டு தசரதருக்குப் புத்திரராகும்தன்மையை அடைந்தார்.

---

9. 48. ஒ. அப்தார்த்தேன ஹரிம் ப்ரஸன்ன-மகரோ-தௌத்தானபாதி: சிசு: ஸப்தாஹேன ந்ருப: பரீக்ஷிதபலா யாமார்த்தத: பிங்கலா! கட்வாங்கோ கடிகாத்வயேன, நவதி ப்ராயோऽபி தந்ந-வ்யதே, த்வாம் காருண்ய-நிதிம் ப்ரபத்ய சரணம் சேஷாயுஷா தோஷயே ॥ —குருவாயூர் செல்லப்பரம்பு பட்டர்.

ஒ. முஹூர்த்தாத் ஸர்வ- முத்ஸ்ருஜ்ய கதவா-னபயம் ஹரிம் ॥ —பாக. 2. 1. 13.

तस्यानुचरितं राजन् ऋषिभि-स्तत्त्वदर्शिभिः ।
श्रुतं हि वर्णितं भूरि त्वया सीतापते-र्मुहुः　　॥ १०.३ ॥

गुर्वर्थे त्यक्तराज्यो व्यचर-दनुवनं पद्मपद्भ्यां प्रियायाः
पाणिस्पर्शाक्षमाभ्यां मृजितपथरुजो यो हरीन्द्रानुजाभ्याम् ।
वैरूप्याच्छूर्पणख्याः प्रियविरहरुषा-ऽऽरोपितभ्रूविजृंभ-
त्रस्ताब्धि-र्बद्धसेतुः खलदवदहनः कोसलेन्द्रोऽवतान्नः　　॥ १०.४ ॥

यः सत्यपाश-परिवीत-पितुर्निदेशं स्त्रैणस्य चापि शिरसा जगृहे सभार्यः ।
राज्यं श्रियं प्रणयिनः सुहृदो निवासं त्यक्त्वा ययौ वनमसूनिव मुक्तसंगः　　॥ १०.८ ॥

रक्षोऽधमेन वृकवद् विपिनेऽसमक्षं वैदेहराज-दुहित-र्यपयापितायाम् ।
भ्रात्रा वने कृपणवत् प्रियया वियुक्तः स्त्रीसंगिनां गतिमिति प्रथयंश्चचार　　॥ १०.११ ॥

---

10. 3. அரசே! தத்துவமுணர்ந்த ரிஷிகளால் அந்த பகவானுடைய சரித்திரம் வர்ணிக்கப்பட்டுள்ளது. ஸீதாபதியினுடைய வரலாறு உன்னல் வெகுவாயடிக்கடி கேட்கப்பட்டிருக்கிறது.

10. 4. குருவாகிய பிதாவின் நிமித்தம் ராஜ்யத்தை விட்டவரும், பிரியமான ஸீதை கையால் வருடுவதையும் பொறுக்காத செந்தாமரைபோன்ற பாதங்களால் வனந் தோறும் சஞ்சரித்தவரும், ஹனுமாராலும் தம்பியாலும் வழிநடந்த களைப்புத் தீர்க்கப் பெற்றவரும், சூர்ப்பணகை விகாரப்படுத்தப் பெற்றதால் பிரியமான மனைவியையிழந்து, கோபங்கொண்டு நெறிந்த புருவத்துடன் ஸமுத்திர ராஜனை நடுங்கச் செய்தவரும், ஸேதுபந்தம் செய்து துஷ்டர்களின் கூட்டமாகியகாட்டிற்குத் தீயாய் விளங்கியவருமான கோசலசிரேஷ்டன் நம்மைக் காப்பாற்றட்டும்.

10, 8. பிதா ஸ்திரீவசப்பட்டிருந்தபோதிலும் ஸத்தியத்தில் கட்டுப்பட்டு நின்ற பிதாவின் கட்டளையை, எவர் சிரமேற்கொண்டாரோ, அரசையும் செல்வத்தையும் அன்புமிக்க நண்பர்களையும், அரண்மனையையும் பற்றற்ற யோகியானவன் பிராணன்களை விடுவதுபோல் மனைவியுடன்கூடி எவர் விட்டுச் சென்ருரோ (அந்த ராமன் நம்மைக் காப்பாற்றட்டும்.)

10, 11. வனத்தில் யாருங்காணுமல் செந்நாய்போல் புகுந்து ராக்ஷஸாதமனல் வைதேஹ ராஜபுத்திரி அபகரித்துச் செல்லப்பட்டபின் பிரியநாயகியை யிழந்த அவர் தம்பியுடன் காட்டில் ஏதலனைப்போல் ஸ்திரீகளிடம் பற்றுவைத்தவர்களின் கதியைக் காட்டுபவராய்ச் சஞ்சரித்தார்.

---

10. 4. ஒ. க்ரந்த-கோடிபி-ராகீர்ண-மத்புதம் ராம-விக்ரமம் | அத்யாய-த்வயதோ வக்ஷ்யன்னேக ச்லோகே நமஸ்யதி ||
—ஸ்ரீதரர்.

---

10. 8. राज्यश्रियं ।　　பா. பே.

तेऽनीकपा रघुपते-रभिपत्य सर्वे द्वन्द्वं वरूथ-मिभपत्ति-रथाश्वयोधैः ।
जघ्नुर्द्रुमै-र्गिरिगदेषुभि-रङ्गदाद्याः सीताभिमर्श-हतमंगल-रावणेशान् ॥१०.२० ॥

विभीषणाय भगवान् दत्वा रक्षोगणेशताम् ।
लंकामायुश्च कल्पान्तं ययौ चीर्णव्रतः पुरीम् ॥ १०.३३ ॥

जटा निर्मुच्य विधिवत् कुलवृद्धैः समं गुरुः ।
अभ्यषिंच-द्यथैवेन्द्रं चतुस्सिन्धुजलादिभिः ॥ १०.४९ ॥

रामे राजनि धर्मज्ञे सर्वभूतसुखावहे ।
वनानि नद्यो गिरयो वर्षाणि द्वीपसिन्धवः ॥ १०.५३ ॥

सर्वे कामदुघा आसन् प्रजानां भरतर्षभ ॥
नाधि-व्याधि-जरा-ग्लानि-दुःख-शोक-भय-क्लमाः ।
मृत्युश्चानिच्छतां नासीद् रामे राजन्यधोक्षजे ॥ १०.५४ ॥

---

10. 20. ரகுநாதருடைய சேனுபதிகளாகிய அங்கதன் முதலிய எல்லோரும் யானை காலாள் தேர் குதிரைகளுடன்கூடிய எதிரி சைனியத்தை எதிர்த்துத் துவந்துவ யுத்தம் செய்தும் மரங்களாலும் குன்றுகளாலும், கதைகளாலும் பாணங்களாலும் தாக்கியும் சீதையை ஸ்பரிசித்ததால் மங்களத்தை பிழந்துவிட்ட ராவணனுடைய ஆட்களை வதைத்தார்கள்.

10. 33. பகவான் ஸ்ரீராமர் (ராவணனை வதைத்து) விபீஷணனுக்கு ராக்ஷஸர்களின் அரசாட்சியையும் லங்கா ராஜ்யத்தையும் கல்பம் முடியும்வரை ஆயுளையும் அளித்து தான் கொண்ட விரதத்தை நிறைவேற்றியவராய் அயோத்யாபுரிக்குத் திரும்பினர்.

10. 49. குலகுருவாகிய வசிஷ்டர் பெரியோர்களுடன்கூடி அவரை ஜடையைக் களையச் செய்து நான்கு ஸமுத்திர ஜலம் முதலியவற்ருல் விதிப்படி இந்திரனுக்குச் செய்வதுபோல் பட்டாபிஷேகம் செய்தார்.

10. 53. பரத சிரேஷ்டனே ! எல்லா உயிர்களுக்கும் இன்பமளிப்பவரும் தருமமுணர்ந்தவருமான ஸ்ரீராமர் அரசுசெலுத்தியபோது வனங்களும் நதிகளும் மலைகளும் தேசங்களும் தீவுகளும் கடல்களும் எல்லாம் மக்களுக்கு ஆசைப் பொருள்களைப் பொழிவன ஆயின.

10. 54. மனக்கவலை, வியாதி, மூப்பு, பசி, தாகம், துக்கம், சோகம், பயம், வாட்டம் இவைகள் மக்களுக்கு ஏற்படவில்லை. அதோக்ஷஜராகிய ராமன் அரசாட்சியில், மரணமும் அதை இச்சிக்காதவர்களுக்கு ஏற்படவில்லை.

---

10. 54. ஒ. ராமோ ராமோ ராம இதி ப்ரஜாணு-மபவன் கதா:। ராமபூதம் ஜகதபூத்-ராமே ராஜ்யம் ப்ரசாஸதி ॥ —வால்மீகி ராமாயணம்: 6. 128. 102.

एकपत्नी-व्रतधरो राजर्षि-चरितः शुचिः।
स्वधर्मं गृहमेधीयं शिक्षयन् स्वयमाचरत् ॥ १०.५५ ॥

प्रेम्णानुवृत्त्या शीलेन प्रश्रयावनता सती।
धिया ह्रिया च भावज्ञा भर्तुः सीताहरन्मनः ॥ १०.५६ ॥

कदाचि-ल्लोक-जिज्ञासु-र्गूढो रात्र्या-मलक्षितः।
चरन् वाचोऽशृणोद् रामो भार्या-मुद्दिश्य कस्यचित् ॥ ११.८ ॥

नाहं बिभर्मि त्वां दुष्टा-मसतीं परवेश्मगाम्।
स्त्रीलोभी बिभृयात् सीतां रामो नाहं भजे पुनः ॥ ११.९ ॥

इति लोकाद् बहुमुखाद् दुराराध्या-दसंविदः।
पत्या भीतेन सा त्यक्ता प्राप्ता प्राचेतसाश्रमम् ॥ ११.१० ॥

अन्तर्वत्न्यागते काले यमौ सा सुषुवे सुतौ।
कुशो लव इति ख्यातौ तयोश्चक्रे क्रियां मुनिः ॥ ११.११ ॥

10. 55. ஏகபத்னீவிரதம் கைக்கொண்டவரும், ராஜ ரிஷிகளின் நடத்தையைப் பின்பற்றியவரும் பரிசுத்தருமாகிய அவர் கிருஹஸ்தாசிரமத்திற்குரிய ஸ்வதருமத்தை (மக்கள்) அனுஷ்டிக்கும்படி செய்து தானும் அனுஷ்டித்தார்.

10. 56. விநயத்தால் வணங்கியவளும் பதிவிரதையுமாகிய ஸீதை அன்புகனிந்த அனுசரணையாலும், மதியூகத்தாலும், நாணத்தாலும் குறிப்பறிந்தொழுகுவதாலும் கணவனுடைய மனத்தைக் கவர்ந்தாள்.

11. 8. ஒரு சமயம் ஸ்ரீராமர் உலகின் போக்கையறிய விரும்பியவராய் மறைவாக யாருமறியாமல் இரவில் சஞ்சரிக்கையில் யாரோ ஒருவன் தன் மனைவியைக் குறித்துப் பின்வருமாறு பேசுவதைக் கேட்டார்.

11. 9. 'துர்நடத்தையுள்ளவளும் கெட்டவளும் பிறர்வீட்டை அடைந்தவளுமான உன்னை நான் காப்பாற்றமாட்டேன். ஸ்திரீலோபியான ராமன் ஸீதையை ஏற்றுக் கொண்டான். நான் உன்னை மீண்டும் ஏற்கமாட்டேன்?'

11. 10. இவ்வாறு பலவாறாய்ப் பேசுகிறவர்களும் திருப்தி செய்விக்க முடியாதவர்களும் அறிவீனர்களுமான உலக மக்களுக்குப் பயந்த பதியால் கைவிடப்பட்ட ஸீதை வால்மீகி முனிவரின் ஆசிரமத்தையடைந்தாள்.

11. 11. கர்ப்பிணியாயிருந்த அவள் நாளடைவில் இரட்டைப் பிள்ளைகளைப் பெற்றாள். முனிவர் அவர்களுக்கு ஜாதகர்மா முதலியவற்றைச் செய்வித்தார். அவர்கள் தான் குசன் என்றும் லவன் என்றும் பிரசித்தி பெற்றவர்கள்.

10. 56. भिया ह्रियाच।
11. 9. स्त्रैणो हि बिभृयात्। பா. பே.

मुनौ निक्षिप्य तनयौ सीता भर्त्रा विवासिता ।
ध्यायन्ती रामचरणौ विवरं प्रविवेश ह ॥ ११.१५ ॥

तच्छ्रुत्वा भगवान् रामो रुन्धन्नपि धिया शुचः ।
स्मरंस्तस्या गुणां-स्तां ता-न्नाशक्नोद् रोद्धुमीश्वरः ॥ ११.१६ ॥

तत ऊर्ध्वं ब्रह्मचर्यं धारयन्नजुहोत् प्रभुः ।
त्रयोदशाब्द-साहस्र-मग्निहोत्र-मखण्डितम् ॥ ११.१८ ॥

स्मरतां हृदि विन्यस्य विद्धं दण्डक-कण्टकैः ।
स्वपाद-पल्लवं राम आत्मज्योति-रगात् ततः ॥ ११.१९ ॥

स यैः स्पृष्टोऽभिदृष्टो वा संविष्टोऽनुगतोऽपि वा ।
कौसलास्ते ययुः स्थानं यत्र गच्छन्ति योगिनः ॥ ११.२२ ॥

पुरुषो रामचरितं श्रवणैरुपधारयन् ।
आनृशंस्यपरो राजन् कर्मबन्धै-र्विमुच्यते ॥ ११.२३ ॥

---

11. 15. கணவனால் காட்டிற்கனுப்பப்பட்ட ஸீதை முனிவரிடம் குழந்தைகளை ஒப்புவித்துவிட்டு ஸ்ரீராமருடைய திருவடிகளைத் தியானம் செய்துகொண்டு பூமியின் பிளவில் புகுந்து மறைந்து போனாள்.

11. 16. பகவான் ஸ்ரீ ராமர் ஈச்வரனேயாயினும் அதைக் கேட்டபின் புத்தி சக்தியால் தன் துக்கத்தை யடக்கிக்கொள்ள முயன்றபோதிலும் அவளுடைய குணங்களை ஒவ்வொன்றாக நினைத்து நினைத்துத் துக்கத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை.

11. 18. பிறகு ஸ்ரீ ராமச்சந்திரப் பிரபு பிரம்மசரிய விரதம் பூண்டு பதின் மூன்றாயிர வருஷங்கள் விடாமல் அக்னி ஹோத்ரத்தைச் செய்தார்.

11. 19. தன்னை நினைப்பவர்களுடைய இருதயத்தில் ஸ்ரீ ராமர் தண்டகாரணியத்தின் முட்களால் கிழிபட்ட தனது தளிர்போன்ற பாதங்களை வைத்துவிட்டுப் பரம பதம் சென்றார்.

11. 22. ஸ்ரீ ராமனை ஸ்பரிசித்தவர்களும் தரிசித்தவர்களும் உடன் வீற்றிருந்தவர்களும் உடன் சென்றவர்களுமான கோசல வாசிகள் யோகிகள் அடையும் ஸ்தானத்தையடைந்தார்கள்.

11. 23. அரசே! ஸ்ரீ ராம சரித்திரத்தைக் கேட்டு அதில் மனதை நிறுத்தும் புருஷன் சாந்தியெய்தியவனாய்க் கருமத்தளைகளினின்று விடுபடுகிறான்.

இக்ஷ்வாகுவம்ச வர்ணனை முற்றிற்று.

---

11. 19. विद्ध-दण्डककण्टकैः
11. 22. सर्वतोऽनुगतोऽपि वा । பா. பே.

## ॥ चन्द्रवंशवर्णनम् ॥ १९ ॥

**श्रीशुक उवाच—**

अथातः श्रूयतां राजन् वंशः सोमस्य पावनः ।
यस्मिन्नैलादयो भूपाः कीर्त्यन्ते पुण्यकीर्तयः ॥ १४.१ ॥

---

### 19. சந்திர வம்ச வர்ணனை

ஸ்ரீ சுகர் கூறியது—

14. 1. அரசே! எந்தப் புனிதமான சந்திர வம்சத்தில் நற்கீர்த்திவாய்ந்த ஐளன் முதலிய அரசர்கள் வர்ணிக்கப்படுகின்றார்களோ அதைப்பற்றி இனிக் கேட்கலாம்.

---

**பனிரண்டாவது** அத்தியாயத்தில் ஸ்ரீ ராமாவதாரத்திற்குப்பின் வம்ச பரம்பரை கூறப்படுகிறது.




**பதின்மூன்றாவது** அத்தியாயத்தில் இக்ஷ்வாகுவின் குமாரனாகிய நிமியின் வரலாறு கூறப்படுகிறது. நிமி ஸத்ரயாகம் செய்ய எண்ணி வசிஷ்டரை வரிக்க அவர் தான் ஏற்கெனவே அச்சமயத்தில் இந்திரனால் வரிக்கப்பட்டிருப்பதாயும் அந்த யாகம் முடிந்ததும் வருவதாயும் சொல்லிச் சென்றார். நிமி தேகம் அநித்யம் என்பதைக் கருதி வேறு ரித்விக்கை வரித்து யாகம் நடத்தினான். வசிஷ்டர் அது தவறெனக் கருதி அவனுக்குச் சாபமிட்டார். 'லோபத்தால் தர்மத்தை மறந்து சாபமிட்ட உம்முடைய தேகமும் விழட்டும்' என்று நிமி பிரதி சாபம் கொடுத்தான். இதன்பின் அத்தியாத்மஸ்வருபத்தில் நிலைபெற்ற நிமி எல்லா உயிர்களிடமும் கண்ணின் இமைகளில் வசிப்பதாய்க் கூறுகின்றனர். வசிஷ்டரும் சாபத்தால் மித்ராவருணர்களுக்கு ஊர்வசியிடம் பிறந்தார். நிமியின் புத்திரன் மிதிலையை நிர்மாணம் செய்த வைதேஹ ஜனகன். இந்த வம்சத்தில் வந்தவர்கள் உதாவஸு, நந்திவர்த்தனன், ஸீரத்வஜன் முதலியோர். ஸீரத்வஜன் உழவை முக்கியமாக்கி கலப்பையைக் கொடியில் கொண்டவன். இந்த ஸீரத்வஜ ஜனகன் யாகத்திற்காக பூமியை உழும்போது கலப்பையின் நுனியினின்று ஸீதையுண்டானாள். இந்த மிதில பரம்பரையைச் சேர்ந்த அரசர்கள் எல்லோரும் ஆத்ம வித்தையில் பண்டிதர்கள். யோகேசுவரர்களாகிய யாக்ஞவல்கியர் முதலியவர்களின் அனுக்கிரகத்தால் அரசாட்சி புரியும்போதும் பற்றற்ற ஞானிகளாய் வாழ்ந்தவர்கள்.

'ஏதே வை மைதிலா ராஜன்னாத்ம-வித்யா-விசாரதா : |
யோகேச்வர-ப்ரஸாதேன த்வந்த்வைர்-முக்தா க்ருஹேஷ்வபி ||'

सहस्रशिरसः पुंसो नाभिह्रद-सरोरुहात् ।
जातस्यासीत् सुतो धातुरत्रिः पितृसमो गुणैः ॥ १४.२ ॥

तस्य दृग्भ्योऽभवत् पुत्रः सोमोऽमृतमयः किल ।
विप्रौषध्युडुगणानां ब्रह्मणा कल्पितः पतिः ॥ १४.३ ॥

सोऽयजद्राजसूयेन विजित्य भुवनत्रयम् ।
पत्नीं बृहस्पते-र्दर्पा-त्तारां नामाहरद्बलात्
तत्याज व्रीडिता तारा कुमारं कनकप्रभम् ॥ १४.४ ॥

बुद्ध्या गंभीरया येन पुत्रेणापोडुराण् मुदम् ।
ततः पुरूरवा जज्ञे इलायां य उदाहृतः ॥ १४.१५ ॥

ऐलस्य चोर्वशीगर्भात् षडासन्नात्मजा नृप ।
आयुः श्रुतायुः सत्यायू रयोऽथ विजयो जयः ॥ १५.१ ॥

---

14. 2. ஆயிரம் சிரம் படைத்த பரமபுருஷனுடைய நாபியாகிய மடுவில் தோன்றிய தாமரையில் பிறந்த பிரம்மாவுக்குப் புத்திரனாகியவர் அத்ரி. அவர் குணங்களால் தந்தைக்குச் சமமானவர்.

14. 3. அவருடைய ஆனந்தக் கண்ணீரினின்று அமிருதமயமான ஸோமன் புத்திரனாய்த் தோன்றினான். வேதியர்க்கும், செடி கொடிகளுக்கும், நக்ஷத்திரக் கூட்டங்களுக்கும் அவன் பிரம்மாவால் அதிபதியாக்கப்பட்டான்.

14. 4. அவன் மூவுலகையும் ஜயித்து ராஜஸூய யாகம் செய்தான். கொழுப்பால் பிருஹஸ்பதியின் மனைவியாகிய தாரையைப் பலாத்காரமாயடைந்தான். அந்தத் தாரை வெட்கமடைந்து பொன்போல் பிரகாசிக்கும் குமாரனைப் பெற்றாள்.

14, 15. அவளிடம் தோன்றின புத்திரனாகிய புதனுடைய கம்பீரமான புத்தியைக் கண்டு சந்திரன் மகிழ்வுற்றான். அந்தப் புதனுக்கு இளையிடம் புரூரவஸ் பிறந்தான் எனக் கூறப்படுகிறது.

15. 1. அரசே! இளையின் புத்திரனாகிய புரூரவஸ்ஸுக்கு ஊர்வசியின் கர்ப்பத்தில் ஆறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் ஆயுஸ், ச்ருதாயுஸ், ஸத்யாயுஸ், ரயன், விஜயன், ஜயன் என்பவர்கள்.

---

14. 14. ஸோமன் தாரையை அபகரித்தபோது தேவர்கள் அவனை எதிர்த்தனர். அவன் அசுரர்களுடன் சேர்ந்து சுக்ராசாரியார் உதவியால் தேவர்களுடன் யுத்தம் செய்து தோல்வியடைந்தான். அதன்பின் தாரை விடுவிக்கப்பட்டு பிருஹஸ்பதியிடம் கொண்டுவரப்பட்டாள். அவள் அப்போது கர்ப்பிணியாயிருந்தபோதிலும் பிருஹஸ்பதி கருணையின் மிகுதியால் அவளை ஏற்றுக்கொண்டார். அவளுக்குப் பிறந்த குழந்தை புதன். அவனை ஸோமன் கிரகித்துக்கொண்டான். புதனுடைய புத்திரன் புரூரவஸ்.

14. 15. **இளையின் வரலாறு** :—பாகவதம் ஒன்பதாவது ஸ்கந்தம் முதல் அத்தியாயம் பார்க்க.

15. 1. புரூரவஸ்ஸுடைய காலத்திற்கு முன் கிருத யுகத்தில் பிரணவம் ஒன்றே வேதம், நாராயணன் ஒருவனே தெய்வம், அக்னியும் ஒன்று. (ஜாதி) வர்ணமும் ஒன்று. புரூரவஸ்ஸுக்குப்பின் த்ரேதாயுகத்தில் தான் வேதம் மூன்றாக ஆயிற்று.

भीमस्तु विजयस्याथ कांचनो होत्रकस्ततः ।
तस्य जह्नुः सुतो गंगां गण्डूषीकृत्य योऽपिबत् ॥ १५.३ ॥

जह्नोस्तु पूरुस्तत्पुत्रो बलाकश्चात्मजोऽजकः ।
ततः कुशः कुशस्यापि कुशांबो धूर्तरयो वसुः ॥
कुशनाभश्च चत्वारो गाधि-रासीत् कुशांबतः ॥ १५.४ ॥

तस्य सत्यवतीं कन्यामृचीकोऽयाचत द्विजः ।
वरं विसदृशं मत्वा गाधिर्भार्गव-मब्रवीत् ॥ १५.५ ॥

---

15. 3. (இவர்களில்) விஜயனுடைய புத்திரன் பீமன்; அவன் புத்திரன் காஞ்சனன்; அவன் புத்திரன் ஹோத்ரகன்; அவன் புத்திரன் ஜன்ஹு. இந்த ஜன்ஹு கங்கையைக் கொப்பளிக்கும் நீர்போல் வாயிலடக்கிக் குடித்து விட்டார்.

15. 4. ஜன்ஹுவின் புத்திரன் பூரு; அவன் புத்திரன் பலாகன்; அவன் புத்திரன் அஜகன்; அவனிடமிருந்து குசன்; குசனுக்குக் குசாம்பன், தூர்த்தரயன், வஸு, குசநாபன் என நான்கு புத்திரர்கள். குசாம்பனிடம் காதி பிறந்தார்.

15. 5. காதியினுடைய குமாரியாகிய ஸத்யவதியை ரிசீகர் என்ற பிராம்மணர் விவாகம் செய்துகொள்ள விரும்பினர். வரன் ஸமானமாயில்லாததைக் கருதி காதி பிருகுவம்சத்தவரான ரிசீகரிடம் பின்வருமாறு கூறினர்.

---

**சந்திர வம்சம்**

பிரம்மா
|
அத்ரி
|
சந்திரன்
|
புதன் = இளை
|
புரூரவஸ் = ஊர்வசி
|
ஆயுஸ் | ச்ருதாயுஸ் | ஸத்யாயுஸ் | ரயன் | விஜயன் | ஜயன்

ஆயுஸ்
⋮
நஹுஷன்
|
தேவயானி = யயாதி = சர்மிஷ்டை

விஜயன்
⋮
ஜன்ஹு
⋮
குசன்
⋮
காதி
|
விசுவாமித்திரர் | (கௌசிகீ) ஸத்யவதி = ரிசீகர்

விசுவாமித்திரர்
|
101 புத்திரர்கள்
(நடுவலவன் மதுச்சந்தஸ)

ஸத்யவதி = ரிசீகர்
|
ஜமதக்னி = ரேணுகா
|
வஸு மனஸ் முதலியோர் | பரசுராமர் (இளையவர்)

---

15. 4. बलाकश्चाजको यतः । பா. பே.

एकतः श्यामकर्णानां हयानां चन्द्रवर्चसाम् ।
सहस्रं दीयतां शुल्कं कन्यायाः कुशिका वयम् ॥ १५.६ ॥

इत्युक्तस्तन्मतं ज्ञात्वा गतः स वरुणान्तिकम् ।
आनीय दत्त्वा तानश्वा-नुपयेमे वराननाम् ॥ १५.७ ॥

स ऋषिः प्रार्थितः पत्न्या श्वश्र्वा चापत्य-काम्यया ।
श्रपयित्वोभयै-र्मन्त्रैश्चरुं स्नातुं गतो मुनिः ॥ १५.८ ॥

तावत् सत्यवती मात्रा स्वचरुं याचिता सती ।
श्रेष्ठं मत्वा तयायच्छन्मात्रे मातुरदत् स्वयम् ॥ १५.९ ॥

तद् विज्ञाय मुनिः प्राह पत्नीं कष्ट-मकारषीः ।
घोरो दण्डधरः पुत्रो भ्राता ते ब्रह्मवित्तमः ॥ १५.१० ॥

प्रसादितः सत्यवत्या मैवं भूदिति भार्गवः ।
अथ तर्हि भवेत् पौत्रो जमदग्नि-स्ततोऽभवत् ॥ १५.११ ॥

---

15. 6. 'நாங்கள் குசிக வம்சத்தைச் சார்ந்தவர்கள். எங்கள் கன்னிகையை விரும்பினல் ஒரு செவி கருத்தும் மேனியெல்லாம் நிலாவைப்போல் வெண்மையாகவுமுள்ள ஆயிரம் குதிரைகளைக் கன்னியா சுல்கமாகக் கொடுக்கவேண்டும்'.

15. 7. இங்ஙனம் பதிலளிக்கப்பட்ட ரிசீகர் அவருடைய கருத்தை உணர்ந்து கொண்டு வருணனிடம் சென்று அப்படிப்பட்ட குதிரைகளைக் கொணர்ந்து சேர்ப்பித்து அழகிய முகமுடைய அக்கன்னிகையை விவாகம் செய்து கொண்டார்.

15. 8. புத்திரர்களைப் பெற விரும்பிய மனைவியாலும் மாமியாராலும் அவர் பிரார்த்திக்கப்பட்டார். இருவேறான மந்திரங்களால் சருவைச் சமைத்து ஜபித்து வைத்து ஸ்நானம் செய்யச் சென்றார்.

15. 9. ஸத்தியவதியின் சரு சிறந்ததாயிருக்கக்கூடும் என்ற எண்ணத்தால் அவளுடைய தாயார் அதைத் தனக்களிக்கும்படி கேட்க, அவ்வாறே ஸத்தியவதி அதைத் தாய்க்களித்துவிட்டு, தாய்க்கேற்படுத்தியிருந்த சருவைத் தான் உட்கொண்டாள்.

15. 10. இதையறிந்த முனிவர் மனைவியை நோக்கி "நீ கஷ்டத்தை விளைவித்து விட்டாய். உன் புத்திரன் அச்சம் தருபவனாகவும் தண்டனை விதிப்பவனாகவும் இருப்பான். உன் சகோதரன் பிரம்ம ஞானிகளில் சிறந்தவனாய் விளங்குவான்" எனக் கூறினார்.

15. 11. பிருகுவம்சத்தவரான அம்முனிவரிடம் அது அவ்வாறு நிகழக்கூடாதென்று ஸத்தியவதி பிரார்த்திக்கவே, "அப்படியானால் உனது புத்திரனுடைய புத்திரன் அப்படியிருக்கட்டும்" எனக் கூறினார். அவ்வாறாக (ஸத்தியவதியிடம்) ஜமதக்கினி பிறந்தார்.

---

பா. பே:

15. 9. सा चरुं । मत्वा तु सा यच्छत् ।

सा चाभूत् सुमहापुण्या कौशिकी लोकपावनी ।
रेणोः सुतां रेणुकां वै जमदग्निरुवाह याम्  ॥ १५.१२ ॥

तस्यां वै भार्गवर्षेः सुता वसुमनादयः ।
यवीयान् जज्ञ एतेषां राम इत्यभिविश्रुतः  ॥ १५.१३ ॥

यमाहु-र्वासुदेवांशं हैहयानां कुलान्तकम् ।
त्रिःसप्तकृत्वो य इमां चक्रे निःक्षत्रियां महीम्  ॥ १५.१४ ॥

दुष्टं क्षत्रं भुवो भार-मब्रह्मण्य-मनीनशत् ।
रजस्तमो वृत्तमहन् फल्गुन्यपि कृतेऽहसि  ॥ १५.१५ ॥

राजोवाच—

किं तदंहो भगवतो राजन्यै-रजितात्मभिः ।
कृतं येन कुलं नष्टं क्षत्रियाणा-मभीक्ष्णशः  ॥ १५.१६ ॥

श्रीशुक उवाच—

हैहयाना-मधिपति-रर्जुनः क्षत्रियर्षभः ।
दत्तं नारायणस्यांश-माराध्य परिकर्मभिः  ॥ १५.१७ ॥

---

15. 12. பின்னர் ஸத்தியவதி உலகைப் பரிசுத்தம் செய்வதும் மிகுந்த புண்ணியம் வாய்ந்ததுமான கௌசிகீ எனும் நதியாக மாறினாள். ஜமதக்கினி முனிவர் ரேணுவின் பெண்ணாகிய ரேணுகாதேவியை மணந்தார்.

15. 13. அவளிடம் பார்க்கவ ரிஷியாகிய ஜமதக்கினிக்குப் பிறந்தவர்கள் வஸுமனஸ் முதலிய புத்திரர்கள். இவர்களுள் இளையவன்தான் ராமன் எனப் பிரசித்தி பெற்றவர்.

15. 14. ஹேஹய குலத்தையழித்த இவரை வாசுதேவருடைய அம்சம் எனக் கூறுவர். இருபத்தொருமுறை இப்புவியில் க்ஷத்திரியர்களே இல்லாமல் போகும்படி செய்தார்.

15. 15. பிராம்மணர்களைப் பகைப்பவரும் பூமிக்குச் சுமையானவர்களும் கொடியவர்களும், ரஜோ குணமும் தமோ குணமும் மிக்கவர்களுமான க்ஷத்திரியர்கள் சிறு தீங்கிழைப்பினும் அவர்களை இவர் கொன்றார்.

அரசன் கூறியது—

15. 16. தன்னடக்கமற்ற அரசர்களால் பகவதம்சம் வாய்ந்த அவருக்கு இழைக்கப்பட்ட எத் தீங்கினால் க்ஷத்திரியர்களின் குலம் மீண்டும் மீண்டும் அழிவுற்றதோ அத்தீங்கு யாது ?

ஸ்ரீ சுகர் கூறியது—

15. 17. ஹேஹய நாட்டு மக்களின் இறைவனாகிய அர்ஜுனன் என்பவன் க்ஷத்திரியர்களிற் சிறந்தவன். அவன் நாராயணரின் அம்சமாகிய தத்தாத்திரேயரைப் பலவகைப் பணிவிடையால் ஆராதித்து ;

---

15. 12. रेणोः सुतां रेणुकाख्यां  15. 15. दृष्ट्वा क्षत्रं । भारमब्रह्मण्य-मुपाहरत् ।
15. 17. नारायणांशांशं  பா. பே.

बाहून् दशशतं लेभे दुर्धर्षत्व-मरातिषु ।
अव्याहतेन्द्रियौजः श्री-तेजो-वीर्य-यशो-बलम् ॥ १५.१८ ॥

योगेश्वरत्व-मैश्वर्यं गुणा यत्राणिमादयः ।
चचाराव्याहत-गति-र्लोकेषु पवनो यथा ॥ १५.१९ ॥

स्त्री-रत्नै-रावृतः क्रीडन् रेवांभसि मदोत्कटः ।
वैजयन्तीं स्रजं बिभ्रद् रुरोध सरितं भुजैः ॥ १५.२० ॥

विप्लावितं स्वशिबिरं प्रतिस्रोतः सरिज्जलैः ।
नामृष्यत् तस्य तद्वीर्यं वीरमानी दशाननः ॥ १५.२१ ॥

गृहीतो लीलया स्त्रीणां समक्षं कृतकिल्बिषः ।
माहिष्मत्यां संनिरुद्धो मुक्तो येन कपिर्यथा ॥ १५.२२ ॥

स एकदा तु मृगयां विचरन् विपिने वने ।
यदृच्छयाऽऽश्रमपदं जमदग्नेरुपाविशत् ॥ १५.२३ ॥

---

15. 18-19. ஆயிரம் கைகளையும், சத்துருக்கள் அணுகமுடியாத பராக்கிரமம் அழிவுபடாத இந்திரியவன்மை, செல்வம், ஒளி, வீரியம், புகழ், பலம், சிறந்த யோகசக்தி, அணிமாதி ஐசுவரிய குணங்கள் ஆகியவற்றையும் அடைந்து, காற்றைப்போல் தடையுருத போக்குடையவனாய் உலகங்களில் சஞ்சரித்தான்.

15. 20. ஒரு சமயம் கொழுப்புமிக்க இவன் வைஜயந்தீ மாலையணிந்து சிறந்த ஸ்திரீகள் சூழ நர்மதை நீரில் விளையாடிக்கொண்டிருக்கையில் கைகளால் நீரோட்டத்தைத் தடுத்தான்.

15. 21. எதிர்த்துவரும் ஆற்றுநீரால் தனது கூடாரம் மிதக்கத் துவங்கியதைக் கண்டு தான் மகாவீரனெனக் கர்வித்திருந்த பத்துத்தலை ராவணன் அவனுடைய அடாத செயலைப் பொறுக்கவில்லை.

15. 22. (அப்போது கார்த்தவீரியார்ஜுனனை எதிர்த்துச் சென்று துன்புறுத்த முயன்ற) ராவணன் ஸ்திரீகள் முன்னிலையிலேயே விளையாட்டாகக் குரங்கைப்போல் பிடிக்கப்பட்டு மாஹிஷ்மதிக்குக் கொண்டுபோய்ச் சிறையிலிடப்பட்டு பின்னர் விடுவிக்கப்பட்டான்.

15. 23. அவன் (கார்த்தவீர்யார்ஜுனன்) ஒரு சமயம் அடர்ந்ததொரு வனத்தில் வேட்டையாடித் திரிகையில் தற்செயலாக ஜமதக்கினி முனிவரின் ஆசிரமத்திற்கு வந்தான்.

---

15. 22. ஏ. வால்மீகி ராமாயணம் உத்தரகாண்டம் அத்யாயம் 31, 32, 33.

---

15. 18. यशोऽतुलम् । 15. 23. विजने वने । பா. பே.

तस्मै स नरदेवाय मुनि-रर्हण-माहरत्।
स-सैन्यामात्य-वाहाय हविष्मत्या तपोधनः ॥ १५.२४ ॥

स वीर-स्तत्र तद् दृष्ट्वा आत्मैश्वर्यातिशायिनम्।
तन्नाद्रियताग्निहोत्र्यां साभिलाषः स हैहयः ॥ १५.२५ ॥

हविर्धानीमृषे-र्दर्पान्नरान् हर्तु-मचोदयत्।
ते च माहिष्मतीं निन्युः सवत्सां क्रन्दतीं बलात् ॥ १५.२६ ॥

अथ राजनि निर्याते राम आश्रम आगतः।
श्रुत्वा तत् तस्य दौरात्म्यं चुक्रोधाहिरिवाहतः ॥ १५.२७ ॥

घोरमादाय परशुं सतूणं चर्म कार्मुकम्।
अन्वधावत दुर्धर्षो मृगेन्द्र इव यूथपम् ॥ १५.२८ ॥

कृत्तबाहोः शिरस्तस्य गिरेः शृंगमिवाहरत्।
हते पितरि तत्पुत्रा अयुतं दुद्रुवु-र्भयात् ॥ १५.३५ ॥

---

15. 24. தவச் செல்வராகிய அம் முனிவர், சேனை மந்திரிகள் வாகனங்கள் முதலியவற்றுடன்கூடிய அவ்வரசனுக்குக் காமதேனுவைக்கொண்டு போஜனம் முதலிய உபசாரங்களைக் கூட்டுவித்தார்.

15. 25. தனது ஐசுவரியத்தினும் மீறி நின்ற அம் முனிவருடைய அவ்வுபசாரத்தின் பெருமையைக் கண்ணுற்ற அவ் வீரனாகிய ஹேஹய சக்ரவர்த்தி அக்கினி ஹோத்திரப் பசுவிடம் பேராசை கொண்டவனாய் அவ்வுபசாரத்தை ஏற்கவில்லை.

15. 26. ரிஷியினுடைய காமதேனுவைக் கவர்ந்து செல்லும்படி கொழுப்பால் அவ்வரசன் தனது ஆட்களுக்குக் கட்டளையிட்டான். அவர்களும் கன்றுடன் கூடிக் கதறும் அப்பசுவை பலாத்காரமாய் மாஹிஷ்மதிக்குக் கொண்டு சென்றார்கள்.

15. 27. அரசன் சென்றபின் பரசுராமர் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தார். அவ்வரசன் இழைத்த கொடுமையைப் பற்றிக்கேட்டு மிதிபட்ட ஸர்ப்பம்போல் வெகுண்டார்.

15. 28. எதிர்க்கமுடியாத பரசுராமர் பயங்கரமான கோடாரியாயுதத்தையும் அம்புடன் வில்லையும் கேடயத்தையும் கைக்கொண்டு ஒரு சிங்கம் யானையைத் தொடர்ந்தாற்போல் (அவ்வரசனை) துரத்திச் சென்றார்.

15. 35. (அவனுடைய சேனைகளை வதஞ் செய்து அவனுடைய ஆயிரங் கைகளையும் வெட்டி வீழ்த்தியபின்) கைகளையிழந்த அவனுடைய தலையையும் மலையின் சிகரத்தை வீழ்த்துவதுபோல் வீழ்த்தினார். தகப்பன் கொல்லப்பட்டதும் அவனுடைய புத்திரர்கள் பத்தாயிரம்பேரும் பயந்து ஓடியொளிந்தனர்.

---

15. 24. **मुनिरर्हणमाचरत्।** 15. 25. **सचैश्वर्यं तु तद्।**
15. 27. **श्रुत्वा स तस्य।** 15. 28. **परशुं घोरमादाय स क्षणाद्वर्म कार्मुकम्। दुर्मर्षो।**

अग्निहोत्री-मुपावर्त्य सवत्सां परवीरहा ।
समुपेत्याश्रमं पित्रे परिक्लिष्टां समर्पयत् ॥ १५.३६ ॥

स्वकर्म तत्कृतं रामः पित्रे भ्रातृभ्य एव च ।
वर्णयामास तच्छ्रुत्वा जमदग्निरभाषत ॥ १५.३७ ॥

राम राम महाबाहो भवान् पापमकारषीत् ।
अवधीन्नरदेवं यत् सर्वदेवमयं वृथा ॥ १५.३८ ॥

वयं हि ब्राह्मणा-स्तात क्षमयार्हणतां गताः ।
यया लोकगुरुर्देवः पारमेष्ठ्य-मगात्पदम् ॥ १५.३९ ॥

क्षमया रोचते लक्ष्मी-र्ब्राह्मी सौरी यथा प्रभा ।
क्षमिणा-माशु भगवां-स्तुष्यते हरि-रीश्वरः ॥ १५.४० ॥

राज्ञो मूर्धाभिषिक्तस्य वधो ब्रह्मवधाद् गुरुः ।
तीर्थसंसेवया चांहो जह्यङ्गाच्युत-चेतनः ॥ १५.४१ ॥

पित्रोपशिक्षितो रामस्तथेति कुरुनन्दन ।
संवत्सरं तीर्थयात्रां चरित्वाऽऽश्रम-माव्रजत् ॥ १६.१ ॥

---

15. 36. எதிரிகளின் கொட்டத்தையடக்கிய பரசுராமர் துன்புற்ற காமதேனுவைக் கன்றுடன் திரும்ப ஆசிரமம் கொணர்ந்து தந்தையிடம் ஸமர்ப்பித்தார்.

15. 37. பரசுராமர் தான் செய்ததையும் எதிரி செய்ததையும் தந்தையிடமும் சகோதரர்களிடமும் வர்ணித்தார். அதைக் கேட்டு ஜமதக்கினி பின்வருமாறு கூறினார்.

15. 38 'ராமா! தோள்வலி மிக்க ராமா! ஸர்வதேவ வடிவினனான அரசனை வீணாகக் கொன்றதால் நீ பாவஞ் செய்துவிட்டாய்.

15. 39. 'குழந்தாய்! நாம் பிராம்மணர்கள். பொறுமையாலேயே நாம் மேன்மையடைந்துள்ளோம். அதனாலேயே லோக குருவாகிய பிரம்ம தேவரும் தமது பதவியையடைந்துள்ளார்.

15. 40. 'சூரியன் பிரபையுடன் பிரகாசிப்பதுபோல் பிரம்மவர்ச்சஸ் பொறுமையுடன்கூடப் பிரகாசிக்கிறது. ஈசுவரரும் பகவானுமாகிய விஷ்ணு பொறுமையுள்ளவர்களிடமே பிரீதியடைகின்றார்.

15. 41. 'அபிஷேகம் பெற்ற அரசனுடைய வதம் பிரம்மஹத்தியினும் கொடிது. நீ அச்சுதனிடம் மனதைவைத்துத் தீர்த்தாடனம் செய்து இந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்வாயாக'.

16. 1. அரசே! தந்தை இட்ட கட்டளையை 'அங்ஙனமே ஆகுக' என்று ஏற்றுப் பரசுராமர் ஒருவருஷம் தீர்த்தயாத்திரை செய்து முடித்து ஆசிரமத்திற்குத் திரும்பினார்.

---

16. 1. तीर्थचर्यां பா. பே

कदाचिद्रेणुका याता गंगायाम् पद्ममालिनम् ।
गन्धर्वराजं क्रीडंत-मप्सरोभिरपश्यत ॥ १६.२ ॥

विलोकयन्ती क्रीडन्त-मुदकार्थं नदीं गता ।
होमवेलां न सस्मार किंचि-च्चित्ररथस्पृहा ॥ १६.३ ॥

कालात्ययं तं विलोक्य मुनेः शापविशंकिता ।
आगत्य कलशं तस्थौ पुरोधाय कृतांजलिः ॥ १६.४ ॥

व्यभिचारं मुनिर्ज्ञात्वा पत्न्याः प्रकुपितोऽब्रवीत् ।
घ्नतैनां पुत्रकाः पापा-मित्युक्तास्ते न चक्रिरे ॥ १६.५ ॥

रामः संचोदितः पित्रा भ्रातॄन् मात्रा सहावधीत् ।
प्रभावज्ञो मुनेः सम्यक् समाधेस्तपसश्च सः ॥ १६.६ ॥

वरेण छन्दयामास प्रीतः सत्यवती-सुतः ।
वव्रे हतानां रामोऽपि जीवितं चास्मृतिं वधे ॥ १६.७ ॥

---

16. 2. ஒரு சமயம் (பரசுராமருடைய தாய்) ரேணுகை கங்கைக்குச் சென்றவள் அங்கு பத்மமாலை யணிந்த கந்தர்வ ராஜன் ஒருவன் அப்ஸரஸ்த்ரீகளுடன் விளையாடு வதைக் கண்ணுற்றாள்.

16. 3. ஜலம் கொண்டுவர நதிக்குச் சென்றவள் அவ்விளையாட்டைப் பார்த்துக் கொண்டு அந்தச் சித்திரரதன் என்பவனிடம் சபலங் கொண்டவளாய் ஹோம வேளையை மறந்துவிட்டாள்.

16. 4. காலங்கடந்துவிட்டதை உணர்ந்து முனிவர் சபித்து விடுவாரோ என்ற அச்சத்துடன் திரும்பிவந்து கலசத்தை அவர் முன்வைத்துக் கைகூப்பி நின்றாள்.

16. 5. மனைவியின் மனது சலித்ததை உணர்ந்த முனிவர் கோபங்கொண்டவராய் "புத்திரர்களே! பாவமிழைத்த இவளைக் கொல்லுங்கள்" என்றார். அவர்கள் அங்ஙனம் செய்ய ஒப்பவில்லை.

16. 6. பின்னர் தாயுடன்கூடச் சகோதரர்களையும் சேர்த்துக்கொல்லும்படி கட்டளையிடப்பட்ட பரசுராமர் முனிவரின் ஸமாதி, தவம் முதலியவற்றின் மகிமையை முற்றும் அறிந்தவராதலால் அங்ஙனமே செய்து முடித்தார்.

16. 7. ஸத்யவதீ புத்திரரான ஜமதக்கினி முனிவர் பிரீதியடைந்து "வேண்டும் வரனைக் கேள்" என்றார். கொல்லப்பட்டவர்கள் உயிர்த்தெழவேண்டுமென்றும் கொல்லப்பட்ட நினைவு இருக்கக்கூடாதென்றும் பரசுராமர் கேட்டுக்கொண்டார்.

---

16. 5. तेनोक्ताः पुत्रकाः पापा हन्यतां ते न चक्रिरे ।
16. 6. समाधेस्तपसः सुतः । பா. பே.

उत्तस्थुस्ते कुशलिनो निद्रापाय इवांजसा ।
पितु-र्विद्वां-स्तपो-वीर्यं रामश्चक्रे सुहृद्वधम् ॥ १६.८ ॥

येऽर्जुनस्य सुता राजन् स्मरन्तः स्वपितुर्वधम् ।
रामवीर्य-पराभूता लेभिरे शर्म न कचित् ॥ १६.९ ॥

एकदाऽऽश्रमतो रामे स भ्रातरि वनं गते ।
वैरं सिसाधयिषवो लब्धच्छिद्रा उपागमन् ॥ १६.१० ॥

दृष्ट्वाऽग्न्यगार आसीन-मावेशितधियं मुनिम् ।
भगवत्युत्तमश्लोके जघ्नुस्ते पापनिश्चयाः ॥ १६.११ ॥

रेणुका दुःखशोकार्ता निघ्नन्त्याऽऽत्मान-मात्मना ।
राम रामेति तातेति विचुक्रोशोच्चकैः सती ॥ १६.१३ ॥

तदुपश्रुत्य दूरस्थो हा रामेत्यार्तवत् स्वनम् ।
त्वरयाऽऽश्रम-मासाद्य ददृशे पितरं हतम् ॥ १६.१४ ॥

---

16. 8. அவர்கள் க்ஷேமமாக விரைவில் தூங்கியெழுந்தவர்கள்போல் எழுந்தார்கள். தந்தையினுடைய தவத்தின் விரியத்தை அறிந்தவரானதால்தான் பிரியமானவர்களையும் பரசுராமர் வதஞ் செய்தார்.

16. 9. அரசே! கார்த்தவீரியார்ஜுனனுடைய குமாரர்கள் தங்கள் தந்தை கொல்லப்பட்டதை மனதில் கொண்டு பரசுராமரின் பராக்கிரமத்திற்கஞ்சி எப்போதும் நிம்மதியற்றிருந்தனர்.

16. 10. ஒரு சமயம் சகோதரர்களுடன் பரசுராமர் ஆசிரமம் விட்டு, வனம் சென்றிருக்கையில் தங்கள் விரோதத்தைச் சாதித்துக்கொள்ள சமயம் வாய்த்ததென்று (அக்குமாரர்கள்) வந்து சேர்ந்தார்கள்.

16. 11. பாவச் செயலுக்குத் துணிந்து வந்த அவர்கள் அக்கினி சாலையில் உட்கார்ந்து உத்தமசுலோகராகிய பகவானிடம் புத்தியைச் செலுத்தியிருந்த முனிவரைக் கண்டு அவரைக் கொன்றுவிட்டார்கள்.

16. 13. பதிவிரதையாகிய ரேணுகை துக்கத்தாலும் சோகத்தாலும் பீடிக்கப்பட்டவளாய்த் தன்னைத்தானே அடித்துக் கொள்பவளாய் "ராமா! ராமா! அப்பா!" என்று உரத்த குரலில் கதறினாள்.

16. 14. 'ஆ! ராமா!' என்ற துன்பம் மிகுந்த குரலைத் தூரத்திலிருந்தவர்கள் (புத்திரர்கள்) கேட்டு விரைவில் ஆசிரமம் வந்து தந்தை கொல்லப்பட்டிருந்ததைக் கண்டார்கள்.

---

16. 13. राम रामेहि 16. 14. रामेत्यार्तवत्स्वरम् । பா. பே.

गत्वा माहिष्मतीं रामो ब्रह्मघ्न-विगतश्रियम् ।
तेषां स शीर्षभी राजन् मध्ये चक्रे महागिरिम् ॥ १६.१७ ॥

तद्रक्तेन नदीं घोरा-मब्रह्मण्य-भयावहाम् ।
हेतुं कृत्वा पितृवधं क्षत्रेऽमंगल-कारिणि ॥ १६ .१८ ॥

त्रिस्सप्तकृत्वः पृथिवीं कृत्वा निःक्षत्रियां प्रभुः ।
स्यमन्त-पंचके चक्रे शोणितोदान् ह्रदान् नव ॥ १६.१९ ॥

पितुः कायेम सन्धाय शिर आदाय बर्हिषि ।
सर्वदेवमयं देव-मात्मान-मयजन् मखैः ॥ १६.२० ॥

स्वदेहं जमदग्निस्तु लब्ध्वा संज्ञानलक्षणम् ।
ऋषीणां मण्डले सोऽभूत् सप्तमो रामपूजितः ॥ १६.२४ ॥

जामदग्न्योपि भगवान् रामः कमललोचनः ।
आगामिन्यन्तरे राजन् वर्तयिष्यति वै बृहत् ॥ १६.२५ ॥

---

16. 17. அரசே! பிரம்மஹத்தி தோஷத்தால் ஸ்ரீயை யிழந்துவிட்ட மாஹிஷ்மதீ நகரம் சென்று பரசுராமர் அரசகுமாரர்களின் தலைகளை வெட்டி (நகர நடுவில்) மலைபோல் குவித்தனர்.

16. 18-19. பிராம்மணர்களைப் பகைப்போர்க்குப் பயத்தை விளைவிக்கும் வண்ணம் அவர்களுடைய ரத்தத்தை நதிபோல் ஓடச் செய்தார். பிரபுவாகிய பரசுராமர் பிதிருவதத்தின், காரணத்தால் அநீதியிழைத்த க்ஷத்திரிய குலத்தையே வெறுத்து, இருபத்தொருதடவை பூமியில் க்ஷத்திரியர்களில்லாமல் போகும்படி செய்து, ஸ்யமந்த பஞ்சகத்தில் ஒன்பது மடுக்களை ரத்தஜலம் நிறைந்ததாக்கினுர்.

16. 20. தந்தையின் தலையை உடலுடன் பொருத்தி ஸர்வதேவஸ்வஸ்வரூபியாகிய பரமாத்மாவை யாகங்களால் ஆராதித்தார்.

16. 24. ஜமதக்கினி முனிவர் அறிவு வடிவான தனது தேகத்தை மீண்டும் அடைந்து பரசுராமரால் பூஜிக்கப்பெற்று ரிஷிகளின் மண்டலத்தில் ஏழாவது ரிஷியாயினர்.

16. 25. அரசே! ஜமதக்கினியின் குமாரரும் கமலக்கண்ணருமான பகவான் பரசுராமர் இனிவரும் மன்வந்தரத்தில் வேதத்தை விஸ்தாரப்படுத்துபவராய் (ஸப்தரிஷிகளில் ஒருவரராய்) விளங்கப்போகிருர்.

---

16. 25. அடுத்த மன்வந்தர ஸப்தரிஷிகள் :—காலவர், தீப்திமான், பரசுராமர், அச்வத்தாமா, கிருபர், ரிஷ்யச்ருங்கர், வியாஸர்,

---

16. 17. तस्यां स शीर्षभी राज्ञां　　பா. பே.

आस्तेऽद्यापि महेन्द्राद्रौ न्यस्तदण्डः प्रशान्तधीः ।
उपगीयमानचरितः सिद्ध-गन्धर्व-चारणैः ॥ १६.२६ ॥

एवं भृगुषु विश्वात्मा भगवान् हरिरीश्वरः ।
अवतीर्य परं भारं भुवोऽहन् बहुशो नृपान् ॥ १६.२७ ॥

गाधे-रभून्महातेजाः समिद्ध इव पावकः ।
तपसा क्षात्रमुत्सृज्य यो लेभे ब्रह्मवर्चसम् ॥ १६.२८ ॥

विश्वामित्रस्य चैवासन् पुत्रा एकशतं नृप ।
मध्यमस्तु मधुच्छन्दा मधुच्छन्दस एव ते ॥ १६.२९ ॥

16. 26. அரசே! இப்போதும் அவர் மஹேந்திர பர்வதத்தில் பிறரைத் தண்டிப்பதைவிட்டுச் சாந்தமான புத்தியுடையவராய்ச் சித்தர்களாலும் கந்தர்வர்களாலும் சாரணர்களாலும் போற்றப்பட்டு விளங்குகிறுர்.

16. 27. இவ்வாறுக ஈசுவரனும் விச்வாத்மாவும் பகவானுமான ஹரி பிருகு வம்சத்தில் அவதரித்துப் பூமிக்குச் சுமையாயிருந்த அரசர்களை வெகுவாய் ஒழித்தார்.

16. 28. அக்கினிபோல் ஜ்வலிப்பவரும் தவத்தால் க்ஷத்திரியத் தன்மையை விட்டு பிரம்ம வர்ச்சஸ்ஸை அடைந்தவரும் ஏவரோ அந்த மஹா தேஜஸ்வியான (விசுவாமித்திரரும் இக் குலத்தில்) காதியிடம் தோன்றினுர்.

16. 29. விசுவாமித்திரருக்குப் புத்திரர்கள் நூற்றொருபேர். அவர்களில் நடுவலவன் மதுச்சந்தஸ். அவன் பெயரைக்கொண்டே எல்லோரும் மதுச்சந்தர்கள் எனப்படுவர்.

16. 26. பரசுராமாவதாரத்தில் பகவான் ஸமுத்திரம் வியாபிக்காமல் தடுத்துக் கேரளத்தைக் காப்பாற்றினுர் என்று நாராயணீயம் குறிப்பிடுகிறது. 'உத்ஸார்யோத்த்ருத கேரளோ ப்ருகுபதே வாதேச ஸம்ரக்ஷயதாம்.'

16. 28.




16. 29.-37. ஹரிச்சந்திரன் வருணனை உபாசித்துப் பிள்ளை பிறந்தால் அந்தப் பிள்ளையை வருணனுக்குச் சமர்ப்பிப்பதாய்ச் சபதம் செய்திருந்தான். ரோகிதன் என்ற பிள்ளை பிறந்தபின் அச்சபதத்தை நிறைவேற்றவில்லை. பல இன்னல்கள் விளையவே, சுனச்சேபனை ரிசீகரிடமிருந்து விலைக்கு வாங்கி வருணனைக் குறித்து யாகம் செய்யத் தொடங்கினுன். விசுவாமித்திரர் அவனுக்கு 'இமம் மே வருண' முதலிய வருண மந்திரங்களை உபதேசித்து அவனை யூபஸ்தம்பத்திலிருந்து விடுதலையடையும்படி செய்தார். அப்படி தேவர்களால் திருப்பியளிக்கப்பட்டதால் அவன் தேவராதன் எனப் பெயர் பெற்றுன். பெற்றோர் அவனை விற்று விட்டதால் விசுவாமித்திரர் தன் புத்திரர்களினும் சிறந்த தத்துப் பிள்ளையென அவனைக் கொண்டார். மதுச்சந்தஸ்ஸும் அவன் தம்பிகள் 50 பேரும் தேவராதனைத்

16. 27. हरिरव्ययः । பா. பே.

श्रीशुक उवाच—

यति-र्ययातिः संयाति-रायाति-र्वियतिः कृतिः।
षडिमे नहुषस्यास-न्निन्द्रियाणीव देहिनः ॥ १८.१ ॥

राज्यं नैच्छद्यतिः पित्रा दत्तं तत्परिणामवित्।
यत्र प्रविष्टः पुरुष आत्मानं नावबुध्यते ॥ १८.२ ॥

पितरि भ्रंशिते स्थाना-दिन्द्राण्या धर्षणाद् द्विजैः।
प्रापितेऽजगरत्वं वै ययाति-रभवन्नरः ॥ १८.३ ॥

---

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 1. (புதனுடைய புத்திரன் புரூரவஸ்ஸின் குமாரனாகிய ஆயுஸுக்கு நகுஷன் முதலிய நால்வர் புத்திரர்கள்.) உடல் படைத்தவனுக்கு இந்திரியங்களைப்போல் நகுஷனுக்கு ஆறுபேர் புத்திரர்கள். அவர்கள் யதி, யயாதி, ஸம்யாதி, ஆயாதி, வியதி, க்ருதி என்பவர்கள்.

18. 2. அரசாட்சியில் புகுந்த புருஷன் தன்னையறியாமல் போகிறான் என்ற விளைவை உணர்ந்திருந்த யதியானவன் தந்தை கொடுத்த அரசை விரும்பவில்லை.

18. 3. இந்திராணியை ஆக்கிரமித்ததற்காகத் தந்தையாகிய நகுஷன் வேதியர்களால் ஆட்சிப்பதவியிலிருந்து விலக்கப்பட்டு மலைப்பாம்பாகச் சபிக்கப்பட்டபின் யயாதி அரசனானான்.

---

தமயனாக ஏற்றுக் கொண்டனர். ஏற்றுக்கொள்ளாத முதல் 50 பிள்ளைகளையும் மிலேச்சர்களாய்ப் போகும்படி விசுவாமித்திரர் சபித்தார்.

ஒ. ததா ஆச்வலாயன-போதாயனாதிபி: கௌசிகானாம் தேவராதப்ரவரமுக்தம், ப்ரவரச்ச தஸ்மின்னேவ வம்சே அவாந்தரபேத:,ந து வம்சாந்தர: ॥ ஸ்ரீதரர்

ஏக ஏவ ரிஷிர்யாவத் ப்ரவரேஷ்வனுவர்த்ததே । தாவத் ஸமான-கோத்ரத்வம விநா ப்ருக்வங்கிரோகணாத் ॥ —ஸம்ருதி

ஒ. 'இமம் மே' இத்யாதி மந்த்ராணாம் சுனச்சேப-வஸிஷ்ட-அத்ரய: ருஷய:, காயத்ரீ த்ரிஷ்டுபாதீனி சந்தாம்ஸி, வருணோ தேவதா ॥

**பதினேழாவது அத்தியாயம் :-வம்சாவளி**

சந்திரன்
|
புதன் = இளை
|
புரூரவஸ்
|
விஜயன் — ஆயுஸ் — க்ருதாயுஸ் — ஸத்யாயுஸ் — ஜயன் — ரயன்

விஜயன் | பீமன் : ஜன்ஹு | காதி | விசுவாமித்ரர்

ஆயுஸ் | க்ஷத்ரவிருத்தன், நஹுஷன்

க்ஷத்ரவிருத்தன் | குசன் : சுனகர் | சௌனகவர்

நஹுஷன் | யதி (யதி ராஜ்யத்தை விரும்பவில்லை), யயாதி, ஸம்யாதி, ஆயாதி, வியதி, க்ருதி

---

18. 1. संयातिरायति। பா. பே.

चतसृष्वादिशद् दिक्षु भ्रातॄन् भ्रात्रा यवीयसः ।
कृतदारो जुगोपोर्वीं काव्यस्य वृषपर्वणः ॥ १८.४ ॥

राजोवाच—

ब्रह्मर्षि-र्भगवान् काव्यः क्षत्रबन्धुश्च नाहुषः ।
राजन्य-विप्रयोः कस्माद् विवाहः प्रतिलोमकः ॥ १८.५ ॥

श्रीशुक उवाच—

एकदा दानवेन्द्रस्य शर्मिष्ठा नाम कन्यका ।
सखी-सहस्र-संयुक्ता गुरुपुत्र्या च भामिनी ॥ १८.६ ॥

देवयान्या पुरोद्याने पुष्पित-द्रुमसंकुले ।
व्यचरत् कलगीतालि-नलिनी-पुलिनेऽबला ॥ १८.७ ॥

ता जलाशय-मासाद्य कन्याः कमललोचनाः ।
तीरे न्यस्य दुकूलानि विजह्रुः सिंचती-र्मिथः ॥ १८.८ ॥

शर्मिष्ठाजानती वासो गुरुपुत्र्याः समव्ययत् ।
स्वीयं मत्वा प्रकुपिता देवयानीद-मब्रवीत् ॥ १८.१० ॥

---

18. 4. தமயனுகிய யயாதி நான்கு தம்பிமார்களேயும் நான்கு திக்குகளிலும் நாட்டைப் பரிபாலிக்கும்படி கட்டளேயிட்டு, சுக்கிராசாரியாரியர் பெண்ணேயும் விருஷ பர்வாவின் பெண்ணேயும் மனைவிகளாய்க்கொண்டு பூமியை ரக்ஷித்தான்.

அரசன் கூறியது—

18. 5. பகவான் சுக்கிரசாரியரோ பிரம்மரிஷி, நகுஷ புத்திரனுகிய யயாதியோ க்ஷத்திரியபந்து; க்ஷத்திரிய குலத்திற்கும் பிராம்மண குலத்திற்குமிடை இந்தப் பிரதி லோம விவாஹம் எங்ஙனம் ஏற்பட்டது?

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 6-7. ஒரு சமயம் அசுரராஜனுகிய விருஷபர்வாவின் கன்னிப்பெண் அழகு மிக்க சர்மிஷ்டை என்பவள் ஆயிரக்கணக்கான தோழிகளுடனும் குருபுத்ரியான தேவயானியுடனும் புஷ்பித்த மரங்களடர்ந்ததும், இனிமையாகப் பாடும் வண்டுகளுடன் கூடியதுமான நகரத்தின் நந்தவனத்தில் தாமரை ஓடையின் மணல் திட்டுகளில் விளேயாடிக்கொண்டிருந்தாள்.

18. 8. தாமரை யிதழ்போன்ற கண்படைத்த அக் கன்னிகைகள் ஒரு குளத் திற்குச் சென்று கரையில் ஆடைகளே வைத்துவிட்டு ஒருவர்மேலொருவர் நீரை வாரி இறைத்துக்கொண்டு விளேயாடினுர்கள்.

18. 10. (பின்னர் கரையேறுகையில்) சர்மிஷ்டை குருபுத்திரியின் வஸ்திரத்தைத் தன்னுடையதென்று தவருக எண்ணித் தரித்துக்கொண்டாள். கோபங்கொண்ட தேவயானி பின்வருமாறு பேசத் தொடங்கினுள்.

अहो निरीक्ष्यता-मस्या दास्याः कर्म ह्यसांप्रतम्।
अस्मद्धार्यं धृतवती शुनीव हविरध्वरे ॥ १८.१३ ॥

एवं शपन्तीं शर्मिष्ठा गुरुपुत्री-मभाषत।
रुषा श्वसन्त्युरङ्गीव धर्षिता दष्टदच्छदा ॥ १८.१५ ॥

आत्मवृत्त-मविज्ञाय कत्थसे बहुभिक्षुकि।
किं न प्रतीक्षसेऽस्माकं गृहान् बलिभुजो यथा ॥ १८.१६ ॥

श्रीशुक उवाच—

एवं विधैः सुपरुषैः क्षिप्त्वाऽऽचार्य-सुतां सतीम्।
शर्मिष्ठा प्राक्षिपत् कूपे वास आदाय मन्युना ॥ १८.१७ ॥

तस्यां गतायां स्वगृहं ययाति-र्मृगयां चरन्।
प्राप्तो यदृच्छया कूपे जलार्थी तां ददर्श ह ॥ १८.१८ ॥

दत्त्वा स्वमुत्तरं वासस्तस्यै राजा विवाससे।
गृहीत्वा पाणिना पाणि-मुज्जहार दयापरः ॥ १८.१९ ॥

---

18. 13. 'ஐயோ! இந்த அடிமைப் பெண்ணின் அநியாயச் செயலைப் பாருங்கள். யாகத்தில் ஹவிஸ்ஸை நாய் அபகரித்தாற்போல் நாம் உடுக்கும் உடையை உடுத்துக் கொண்டிருக்கிறாள்.'

18. 15. இப்படி கடுமையாய்ப் பேசும் குருபுத்திரியை நோக்கிச் சர்மிஷ்டை கோபத்தால் உதடுகளைக் கடித்துக்கொண்டு ஆக்கிரமிக்கப்பட்ட பெண் பாம்புபோல் பெருமூச்சுடன் பேசலானாள்.

18. 16. 'பிச்சைக்காரி! நீ உன் தொழிலை அறியாமல் அதிகமாய்ப் பிதற்றுகிறாய். பலிக்காகக் காத்திருக்கும் காக்கைபோல் நீ எங்கள் வீட்டில் காத்திருக்கவில்லையா?'

ஸ்ரீ சுகர் கூறியது—

18. 17. இவ்வாறான கடுஞ் சொற்களால் நல்லவளான குருபுத்திரியை அவமதித்துக் கோபத்தால் அவளுடைய வஸ்திரத்தை எடுத்துக்கொண்டு கிணற்றில் தள்ளினாள்.

18. 18. அவள் தன் வீடு சென்றபின் வேட்டையாடிக்கொண்டுவந்த யயாதி ஜலத்தை விரும்பித் தற்செயலாகக் கிணற்றையடைந்து அந்த தேவயானியைக் கண்டான்.

18. 19. வஸ்திரமில்லாத அவளுக்குத் தயாளுவான அவ்வரசன் தனது மேல் வஸ்திரத்தைக்கொடுத்து தன் கையால் அவள் கையைப் பிடித்துத் தூக்கிவிட்டான்.

---

18. 11. **कर्म च सांप्रतम्।**
18. 15. **एवं ब्रुवन्तीं। श्वसन्ती व्यालीव।**
18. 17. **वासश्चादाय सा ययौ।** பா. பே.

तं वीरमाहौशनसी प्रेमनिर्भरया गिरा ।
राजं-स्त्वया गृहीतो मे पाणिः परपुरंजय ॥ १८.२० ॥

हस्तग्राहोऽपरो मा भूद् गृहीताया-स्त्वया हि मे ।
एष ईशकृतो वीर संबन्धो नौ न पौरुषः ॥
यदिदं कूपलग्नाया भवतो दर्शनं मम ॥ १८.२१ ॥

न ब्राह्मणो मे भविता हस्तग्राहो महाभुज ।
कचस्य बार्हस्पत्यस्य शापाद् यमशपं पुरा ॥ १८.२२ ॥

ययाति-रनभिप्रेतं दैवोपहृत-मात्मनः ।
मनस्तु तद्गतं बुद्ध्वा प्रतिजग्राह तद्वचः ॥ १८.२३ ॥

गते राजनि सा वीरे तत्र स्म रुदती पितुः ।
न्यवेदयत् ततः सर्वमुक्तं शर्मिष्ठया कृतम् ॥ १८.२४ ॥

---

18. 20-21. சுக்கிராசாரியாரின் பெண்ணாகிய தேவயானி அன்பு நிறைந்த சொற்களால் பின்வருமாறு கூறினாள். "சத்துருவின் நகரத்தை ஜயிக்கும் வீரரான அரசரே! உம்மால் எனது கைபிடிக்கப்பட்டதாயிற்று. உம்மால் பிடிக்கப்பட்ட எனக்கு மற்றொருவன் கைபிடிப்பவனாக வேண்டாம். வீரரே! கிணற்றில் கிடந்த எனக்கு உம்முடைய இந்த தரிசனம் ஏற்பட்டமையால் நமக்குள் இந்த ஸம்பந்தம் ஈசுவரன் கூட்டிவைத்ததேயன்றி மனிதராலானதன்று.

18. 22. "பெருந்தோள் படைத்தவரே! (இன்னுமொரு செய்தி உண்டு). முன்னொரு சமயம் பிருஹஸ்பதியின் புத்திரனான கசனை நான் சபிக்க நேரிட. அவனுடைய பிரதிசாபத்தால் பிராம்மணன் என்னை கைப்பிடிப்பவனாகான்."

18. 23. அது தகுதியற்றதாகத் தோன்றினாலும் தெய்வங் கூட்டிவைத்ததையும் தன் மனம் அவள்பால் சென்றதையும் கருதி யயாதி அவளுடைய சொல்லை ஏற்றுக் கொண்டான்.

18. 24. வீரனாகிய அரசன் சென்றபின்பு, தேவயானி அழுதுகொண்டே தந்தையிடம் சென்று சர்மிஷ்டை கூறியதையும் செய்ததையும் எல்லாவற்றையும் தெரிவித்தாள்.

---

18. 22. பிருஹஸ்பதியின் குமாரனான கசன் சுக்ராசாரியாரிடம் செத்தவரைப் பிழைப்பூட்டும் 'ம்ருதஸஞ்ஜீவினி' வித்தையைக் கற்றுக்கொள்வதற்காக மாறு வேடத்தில் வந்து குருகுலவாசம் செய்தான். கசனை சுக்ராசாரியாரின் பெண் தேவயானி கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்பட்டாள். கசன் 'நீ குரு புத்ரியாதலால் எனக்கு சகோதரி' என்று கூறிவிட்டான். 'ம்ருதஸஞ்ஜீவினி வித்தை' உனக்குப் பயன்படாமல் போகட்டும்' என்று தேவயானி சாபங் கொடுத்தாள். 'உனக்குப் பிராமணன் புருஷனாகாமல் போகட்டும்' என்று கசன் பிரதி சாபம் கொடுத்தான்.

---

18. 23. दैवोपहृत-मानसः । பா. பே.

दुर्मना भगवान् काव्यः पौरोहित्यं विगर्हयन् ।
स्तुवन् वृत्तिं च कापोतीं दुहित्रा स ययौ पुरात् ॥ १८.२५ ॥

वृषपर्वा तमाज्ञाय प्रत्यनीक-विवक्षितम् ।
गुरुं प्रसादयन् मूर्ध्ना पादयोः पतितः पथि ॥ १८.२६ ॥

क्षणार्धमन्यु-र्भगवान् शिष्यं व्याचष्ट भार्गवः ।
कामोऽस्याः क्रियतां राजन् नैनां त्यक्तु-मिहोत्सहे ॥ १८.२७ ॥

तथेत्यवस्थिते प्राह देवयानीमनोगतम् ।
पित्रा दत्ता यतो यास्ये सानुगा यातु मामनु ॥ १८.२८ ॥

स्वानां तत् संकटं वीक्ष्य तदर्थस्य च गौरवम् ।
देवयानीं पर्यचरत् स्त्री-सहस्रेण दासवत् ॥ १८.२९ ॥

नाहुषाय सुतां दत्त्वा सह शर्मिष्ठयोशना ।
तमाह राजञ्छर्मिष्ठा-माधा-स्तल्पे न कर्हिचित् ॥ १८.३० ॥

---

18. 25. பகவான் சுக்ராசாரியார் மனமுடைந்தவராய் புரோகிதத் தொழிலை நிந்தித்து உஞ்சவிருத்தியைத் துதித்துக்கொண்டு பெண்ணுடன் நகரத்தை விட்டுச் சென்றார்.

18. 26. தேவர்களுடைய அருளைக் கூட்டுவிக்க வல்லவர் எனக் குருவை அறிந்தவனுதலால் விருஷபர்வா அவரை நாடி அவரை மகிழ்விக்க வழியில் அவர் பாதங்களில் தலையால் வணங்கினான்.

18. 27. அரை நொடி கோபங்கொண்ட பகவான் சுக்ராசாரியர் சிஷ்யனை நோக்கி 'அரசே! இந்த தேவயானியின் விருப்பத்தைச் செய்யவேண்டும். இவளை நான் விடமுடியாது' என்று கூறினார்.

18. 28. விருஷபர்வா 'அங்ஙனமே ஆகுக' என்று கூறத் தேவயானி தன் மனதிலுள்ளதைக் கூறினாள்; 'பிதாவால் கொடுக்கப்பட்டு நான் எங்கு செல்லுகிறேனே அங்கு சகிகளுடன் (சர்மிஷ்டை) பின் தொடரவேண்டும்'.

18. 29. தன்னைச் சார்ந்தவர்க்கேற்பட்ட ஸங்கடமான நிலைமையையும் காரியத்தின் அவசியத்தையும் நினைத்துப் பார்த்து (சர்மிஷ்டை) ஆயிரம் ஸ்திரீகளுடன் வேலைக்காரிபோல் தேவயானிக்குப் பணிவிடைசெய்தாள்.

18. 30. சுக்ராசாரியார் தன் பெண்ணைச் சர்மிஷ்டையுடன் நகுஷனுக்குக் கொடுத்து அவளிடம் 'அரசே! சர்மிஷ்டையை ஒருபோதும் படுக்கையில் சேர்க்கக் கூடாது' என்று கூறினார்.

---

18. 29. दासीवत् स्त्रीगणैस्सह । பா. பே.

विलोक्यौशनसीं राजञ्छर्मिष्ठा सप्रजां कचित् ।
तमेव वव्रे रहसि सख्याः पतिमृतौ सती ॥ १८.३१ ॥

राजपुत्र्यार्थितोऽपत्यो धर्मं चावेक्ष्य धर्मवित् ।
स्मरञ्छुक्रवचः काले दिष्टमेवाभ्यपद्यत ॥ १८.३२ ॥

यदुं च तुर्वसुं चैव देवयानी व्यजायत ।
द्रुह्युं चानुं च पूरुं च शर्मिष्ठा वार्षपर्वणी ॥ १८.३३ ॥

गर्भसंभव-मासुर्या भर्तु-र्विज्ञाय मानिनी ।
देवयानी पितु-र्गेहं ययौ क्रोध-विमूर्च्छिता ॥ १८.३४ ॥

प्रिया-मनुगतः कामी वचोभिरुपमन्त्रयन् ।
न प्रसादयितुं शेके पादसंवाहनादिभिः ॥ १८.३५ ॥

शुक्रस्तमाह कुपितः स्त्रीकामानृत-पूरुष ।
त्वां जरा विशतां मन्द विरूपकरणी नृप ॥ १८.३६ ॥

18. 31. அரசே! பிரஜையுடன்கூடிய தேவயானியைக் கண்ணுற்ற ஸதீ சர்மிஷ்டை ஒரு சமயம் இரகசியமாக ருது காலத்தில் தனது சகியின் பதியாகிய நகுஷனைத் தன்னையும் ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினாள்.

18. 32. அரசகுமாரியான சர்மிஷ்டை மக்களை விரும்பிப் பிரார்த்தித்தமையால் தருமத்தையுணர்ந்த அவன் தருமத்தையும் சுக்ராசாரியரின் சொல்லையும் எண்ணிப் பார்த்து காலப்போக்கில் இது தெய்வத்தால் ஏற்பட்டதென்று அதை ஒப்புக் கொண்டான்.

18. 33. யது, துர்வஸு என்ற புத்திரர்களை தேவயானி பெற்றாள். விருஷ பர்வாவின் புத்திரியாகிய சர்மிஷ்டை த்ருஹ்யன், அனு, பூரு என்றவர்களைப் பெற்றாள்.

18. 34. அசுரஸ்திரீயாகிய சர்மிஷ்டையிடம் தோன்றிய கரு தன் கணவனுடையது என்று அறிந்த மானினியான தேவயானி கோபமுண்டு தந்தையின் வீடு சென்றாள்.

18. 35. காமியாகிய அரசன் பிரிய நாயகியைத் தொடர்ந்து சென்று நல்வார்த்தை சொல்லியும் காலைப்பிடித்துக் கெஞ்சியும் இன்னும் அதுபோன்றவற்றாலும் அவளைச் சமாதானப்படுத்த முடியவில்லை.

18. 36. கோபங் கொண்ட சுக்கிரர், அவனை நோக்கி, "பெண்ணாசையில் மயங்கியவனே! ஆண்மை பொய்த்தவனே? மூடனே! அரசனே! அழகைக் கெடுக்கும் மூப்பு உன்னிடம் புகுந்து கொள்ளட்டும்" என்று, சபித்தார்.

தேவயானி = யயாதி = சர்மிஷ்டை

யது — துர்வஸு (தேவயானி)

த்ருஹ்யன் — அனு — பூரு (சர்மிஷ்டை)

18. 31. विलोक्यौशनसीं राज्ञीं शर्मिष्ठा सुप्रजाः क्वचित् ॥
तमेव वव्रे रहसि सख्याः परिवृता सती ॥

18. 36. स्त्रीकामानृतपौरुष । विरूपकरणी नृणाम् । பா. பே.

ययाति-रुवाच—

अतृप्तोऽस्म्यद्य कामानां ब्रह्मन् दुहितरि स्म ते ।
व्यत्यस्यतां यथा कामं वयसा योऽभिधास्यति ॥ १८.३७ ॥

इति लब्धव्यवस्थानः पुत्रं ज्येष्ठ-मवोचत ।
यदो तात प्रतीच्छेमां जरां देहि निजं वयः ॥ १८.३८ ॥

यदुरुवाच—

नोत्सहे जरसा स्थातु-मन्तरा प्राप्तया तव ॥ ॥ १८.४० ॥

पूरु-रुवाच—

को नु लोके मनुष्येन्द्र पितुरात्मकृतः पुमान् ।
प्रतिकर्तुं क्षमो यस्य प्रसादाद् विन्दते परम् ॥ १८.४३ ॥

उत्तमश्चिन्तितं कुर्यात् प्रोक्तकारी तु मध्यमः ।
अधमोऽश्रद्धया कुर्या-दकर्तोच्चरितं पितुः ॥ १८.४४ ॥

---

யயாதி கூறியது—

18. 37. "பிராம்மண சிரேஷ்டரே! உமது புத்திரியிடம் நான் கொண்ட போக இச்சைகள் பூர்த்தியாகாமலிருக்கும்போதே (இப்போது இப்படி சபித்து விட்டீரே!")?

(சுக்ரர் கூறியது) "அரசே! எவனுவது தனது யௌவனத்தை விரும்பி உனக்களிக்கச் சம்மதித்தால் இந்த மூப்பை இஷ்டப்படி மாற்றிக் கொள்ளலாம்".

18. 38. இப்படி வியவஸ்தை யடைந்தபின் யயாதி தனது மூத்த குமாரனை நோக்கி (நிகழ்ந்ததைக் கூறி) "குழந்தாய்! யதுவே! எனக்கேற்பட்டுள்ள இந்த மூப்பை நீ சிறிது காலம் ஏற்றுக்கொண்டு உனது யௌவனத்தை எனக்குக் கொடுப்பாயா?" என்றான்.

யது கூறியது—

18. 40. "இடைநடுவே வந்து சேர்ந்த உமது மூப்பை ஏற்று நிற்க நான் சக்தியுள்ளவனல்லன்".

(அவ்வாறே துர்வஸுவும், த்ருஹ்யனும், அனுவும் ஒப்புக்கொள்ளவில்லை.) பின்னர் பூருவைக் கேட்டான்).

பூரு கூறியது—

18. 43. "மனுஷ்யேந்திரரே! எந்தப் பிதா உடலளித்தவரோ எவருடைய அருளால் உயர்ந்த நன்மையை அடையக் கூடுமோ அவருக்கு எவன் இவ்வுலகில் பிரதி உபகாரம் செய்யவல்லவன்?

18. 44. "தந்தை எண்ணியதைச் செய்பவன் உத்தமன்; சொல்லியதைச் செய்பவன் மத்தியமன்; சிரத்தையின்றிச் செய்பவன் அதமன்; செய்யாதவன் தந்தை கழித்த மலத்துக் கொப்பாவான்".

इति प्रमुदितः पूरुः प्रत्यगृह्णाज्जरां पितुः ।
सोऽपि तद्वयसा कामान् यथावज्जुजुषे नृप ॥ १८.४५ ॥

ययाति-रुवाच—

न जातु कामः कामाना-मुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ॥ १९.१४ ॥

तस्मादेतामहं त्यक्त्वा ब्रह्मण्याधाय मानसम् ।
निर्द्वन्द्वो निरहंकार-श्चरिष्यामि मृगैः सह ॥ १९.१९ ॥

इत्युक्त्वा नाहुषो जायां तदीयं पूरवे वयः ।
दत्त्वा स्वां जरसं तस्मा-दाददे विगतस्पृहः ॥ १९.२१ ॥

भूमण्डलस्य सर्वस्य पूरुमर्हत्तमं विशाम् ।
अभिषिच्याग्रजां-स्तस्य वशे स्थाप्य वनं ययौ ॥ १९.२३ ॥

आसेवितं वर्षपूगान् षड्वर्गं विषयेषु सः ।
क्षणेन मुमुचे नीडं जातपक्ष इव द्विजः ॥ १९.२४ ॥

---

18. 45. இவ்வாறு கூறிவிட்டு மகிழ்ச்சியுடன் பூருவானவன் தந்தையின் மூப்பை வாங்கிக் கொண்டான். யயாதியும் பூருவின் யௌவனத்தைப் பெற்று காமரூபங்களை உள்ளபடி அனுபவிக்கலானுன்.

(நாளடைவில் காமசுகங்களில் ஏமாற்றமடைந்த யயாதி கூறியது—)

19. 14. காமபோகங்களை யனுபவிப்பதால் காமம் ஒருபோதும் அடங்குவதில்லை. ஹோமம் செய்த நெய்யால் அக்கினியைப்போல் மேலும் வளரவே செய்கின்றது.

19. 19. ஆகையால் நான் இதைவிட்டு மனதைப் பிரம்மத்திடம் வைத்து இரட்டைகளைக் கடந்து அகங்காரத்தை யொழித்து மிருகங்களுடன் சஞ்சரிக்கப் போகிறேன்.

19. 21. நகுஷ புத்திரனை யயாதி தன் மனைவியிடம் இங்ஙனம் கூறி ஆசை யொழிந்தவனுய்ப் பூருவிடம் அவனுடைய யௌவனத்தைத் திருப்பிக் கொடுத்துத் தனது மூப்பைத் திரும்ப அவனிடமிருந்து வாங்கிக் கொண்டான்.

19. 23. பூமண்டலம் முழுதுக்கும் சக்ரவர்த்தியாகப் பூருவை அபிஷேகம் செய்வித்துத் தமயன்மார்களை அவன் வசம் வைத்து (யயாதி) வனம் சென்றுன்.

19. 24. அறுவகை விஷய சுகங்களைப் பல ஆண்டுகள் அனுபவித்த அவன் சிறகு முளைத்த பறவை கூட்டிலிருந்து பறந்து செல்வது போல் ஒரு கணத்தில் விட்டுச் சென்றுன்.

---

19. 14. ஒ. (காமம்) பெருந்தீனி வேண்டுவது; கொடிய பாவத்தை விளைவிப்பது; இவ்வுலகில் இதைச் சத்துருவாக அறிவாய். —கீ. 3. 38.

---

பா. பே.

18. 45. इति प्रत्युदितः पूरुः । यथावद्बुभुजे ।

सर्वत्र संग-मुत्सृज्य स्वप्नौपम्येन भार्गवी।
कृष्णे मनः समावेश्य व्यधुनो-ल्लिंग-मात्मनः ॥ १९.२८ ॥

पूरोर्वंशं प्रवक्ष्यामि यत्र जातोऽसि भारत।
यत्र राजर्षयो वंश्या ब्रह्मवंश्याश्च जज्ञिरे ॥ २०.१ ॥

जनमेजयोऽभवत्पूरोः प्राचिन्वांस्तत्सुतस्ततः।
प्रवीरोऽथ नमस्युर्वै तस्माच्चारुपदोऽभवत् ॥ २०.२ ॥

पुत्रोऽभूत् सुमते रैभ्यो दुष्यन्तस्तत्सुतो मतः।
दुष्यन्तो मृगयां यातः कण्वाश्रमपदं गतः।
तत्रासीनां स्वप्रभया मण्डयन्तीं रमामिव ॥ २०.८ ॥

विलोक्य सद्यो मुमुहे देवमायामिव स्त्रियम्।
बभाषे तां वरारोहां भटैः कतिपयैर्वृतः ॥ २०.९ ॥

दुष्यन्त उवाच—

का त्वं कमलगर्भाभे कस्यासि हृदयंगमे।
किं वा चिकीर्षितं त्वत्र भवत्या विजने वने ॥ २०.११ ॥

---

19. 28. பிருகு வம்சத்தினளான தேவயானியும் கனவு போன்ற இவ்வுலகில் அனைத்திலும் பற்றை யொழித்துக் கிருஷ்ண பரமாத்மாவிடம் மனதை நிலைநிறுத்தி முக்குணத்தைக் கடந்து சென்றாள்.

20. 1. பாரதனாகிய பரீக்ஷித்தே! நீ உதித்துள்ள வம்சம் எதுவோ எந்த வம்சத்தில் ராஜரிஷிகளும் பிராம்மணர்களும் தோன்றியுள்ளார்களோ அந்தப் பூரு வம்சத்தைப்பற்றிக் கூறுகிறேன் (கேள்).

20. 2. பூருவுக்கு ஜனமேஜயன் பிறந்தான். ஜனமேஜயனுடைய குமாரன் பிராசின்வான் என்பவன். பிராசின்வானிடம் ப்ரவீரன் பிறந்தான். அவனுக்கு நமஸ்யு. அவனிடமிருந்து சாருபதன் பிறந்தான்.

20. 8-9. (அதிலிருந்து எட்டாவது தலைமுறையில் ரந்திஸாரனுக்குப் புத்திரர்களாக ஸுமதி, துருவன், அப்பிரதிரதன் என மூவர் தோன்றினர். அப்பிரதிரதன் புத்திரன் கண்வன், கண்வனுக்குப் புத்திரன் மேதாதிதி. மேதாதிதிக்குப் பிறந்த பிரஸ்கந்தன் முதலிய புத்திரர்கள் வேதியர்களாயினர்.) ஸுமதிக்கு ரைப்யன் புத்திரன், ரைப்யனுக்குத் துஷ்யந்தன் புத்திரன். துஷ்யந்தன் ஒரு சமயம் வேட்டைக்குச் சென்றபோது கண்வ முனிவரின் ஆசிரமத்தையடைந்தான். அங்கு லக்ஷ்மியைப்போலும் தேவ மாயையைப்போலும் தனது காந்தியால் ஆசிரமத்தை அழகுறச் செய்து கொண்டிருந்த பெண்ணைக் கண்ணுற்று அப்போதே அவளிடம் காதல் கொண்டான். சில பணியாட்கள் பின்தொடர அவ்வழகியை யணுகினான்.

துஷ்யந்தன் கூறியது—

20. 11. தாமரையிற் றோன்றியவளைப்போல் பிரகாசிப்பவளே! என் மனதிற் புகுந்துவிட்டவளே! நீ யார்? யாருடையவள்? மனித நடமாட்டமில்லாத இவ் வனத்தில் இங்கு உன்னால் விரும்பப்படுவது யாது?

व्यक्त राजन्यतनयां वेद्म्यहं त्वां सुमध्यमे ।
न हि चेतः पौरवाणा-मधर्मे रमते क्वचित् ॥ २०.१२ ॥

शुकुन्तलोवाच—

विश्वामित्रात्मजैवाहं त्यक्ता मेनकया वने ।
वेदैतद् भगवान् कण्वो वीर किं करवाम ते ॥ २०.१३ ॥

आस्यतां ह्यरविन्दाक्ष गृह्यतां चार्हणं च नः ।
भुज्यतां सन्ति नीवारा उष्यतां यदि रोचते ॥ २०.१४ ॥

दुष्यन्त उवाच—

उपपन्नमिदं सुभ्रु जातायाः कुशिकान्वये ।
स्वयं हि वृणते राज्ञां कन्यकाः सदृशं वरम् ॥ २०.१५ ॥

श्रीशुक उवाच—

ओमित्युक्ते यथा-धर्म-मुपयेमे शकुन्तलाम् ।
गान्धर्व-विधिना राजा देश-काल-विधानवित् ॥ २०.१६ ॥

अमोघवीर्यो राजर्षि-र्महिष्यां वीर्य-मादधे ।
श्वोभूते स्वपुरं यातः कालेनासूत सा सुतम् ॥ २०.१७ ॥

---

20. 12. இடையழகியவளே! நான் உன்னை க்ஷத்திரியப் பெண் என நிச்சயமாய் நம்புகிறேன். பூரு வம்சத்திலுள்ளவர்களின் மனம் ஒருபோதும் அதர்மத்தில் மகிழ்வுறாது.

சகுந்தலை கூறியது—

20. 13. வீரரே! நான் விசுவாமித்திரருடைய பெண். மேனகையால் வனத்தில் விடப்பட்டவள். இதைப் பகவான் கண்வ மகரிஷி அறிவார். உமக்கு நாங்கள் செய்யக்கூடியது யாது?

20. 14. தாமரைக் கண்ணரே! உட்காரலாம். எங்களுடைய பூஜையை ஏற்றுக் கொள்ளலாம். நீவாரதானியம் உளது, புசிக்கலாம்; ஸம்மதமானால் தங்கி இளைப்பாறலாம்.

துஷ்யந்தன் கூறியது—

20. 15. அழகிய புருவம் படைத்தவளே! குசிகவம்சத்திலுதித்தவளாகிய உனக்கு (இவ்வளவு அழகாகப் பேசும்) இது தகுதியே. அரச கன்னிகைகள் தங்களுக்குச் சமமான வரனைத் தாமே வேண்டியடைவதும் பொருத்தமே.

ஸ்ரீ சுகர் கூறியது—

20. 16. அவள் சம்மதம் தெரிவித்தபின் இடத்திற்கும் காலத்திற்கும் தகுதியை யறிந்தவனான துஷ்யந்தன் கந்தர்வ முறைப்படி சகுந்தலையை விவாகம் செய்து கொண்டான்.

20. 17. வீண்போகாத வீரியம்படைத்த ராஜரிஷியாகிய துஷ்யந்தன் மனைவியிடம் வீரியத்தை வைத்தான். மறுநாள் காலை தனது நகரம் சென்றான். நாளடைவில் அவள் புத்திரனைப் பெற்றாள்.

---

20. 12. ஒ. ஸதாம் ஹி ஸந்தேஹ-பதேஷு வஸ்துஷு ப்ரமாண-மந்த:கரணப்ரவ்ருத்தய: —காளிதாஸன்

कण्वः कुमारस्य वने चक्रे समुचिताः क्रियाः ।
बद्ध्वा मृगेन्द्रांस्तरसा क्रीडति स्म स बालकः ॥ २०.१८ ॥

तं दुरत्ययविक्रान्त-मादाय प्रमदोत्तमा ।
हरे-रंशांश-संभूतं भर्तुरन्तिक-मागमत् ॥ २०.१९ ॥

यदा न जगृहे राजा भार्या-पुत्रावनिन्दितौ ।
शृण्वतां सर्वभूतानां खे वागाहाशरीरिणी ॥ २०.२० ॥

भरस्व पुत्रं दुष्यन्त मावमंस्थाः शकुन्तलाम् ।
त्वं चास्य धाता गर्भस्य सत्यमाह शकुन्तला ॥ २०.२२ ॥

पितर्युपरते सोऽपि चक्रवर्ती महायशाः ।
महिमा गीयते तस्य हरेरंश-भुवो भुवि ॥ २०.२३ ॥

वितथस्य सुतो मन्यु-र्बृहत्क्षत्रो जयस्ततः ।
महावीर्यो नरो गर्ग-स्संकृतिस्तु नरात्मजः ॥ २१.१ ॥

---

20. 18. கண்வ மகரிஷி வனத்தில் உசிதமான கிரியைகளைக் குமாரனுக்குச் செய்வித்தார். அச்சிறுவன் சிங்கங்களைக் கட்டிப்போட்டு விளையாடலானான்.

20. 19. விஷ்ணுவின் அம்சத்தின் பகுதியால் தோன்றியவனும் மீறமுடியாத பராக்கிரமம் பொருந்தியவனுமாகிய அவனை யழைத்துக்கொண்டு அந்தப் பெண்ணரசி கணவனிடம் சென்றாள்.

20. 20. (அப்படி வந்த) குற்றமற்றவர்களான மனைவியையும் மகனையும் அரசன் ஏற்றுக்கொள்ள மறுத்தபோது எல்லோரும் கேட்கும்படி ஆகாயத்திலிருந்து அசரீரி வாக்கொன்று பின்வருமாறு பேசிற்று.

20. 22. "துஷ்யந்தா! புத்திரனை ஏற்றுக் காப்பாற்று. சகுந்தலையை அவமதிக்காதே. நீதான் இந்த கர்ப்பத்தைத் தரிக்கச் செய்தவன். சகுந்தலை சத்தியத்தையே பேசுகிறாள்".

20. 23. தந்தை காலஞ் சென்றபின் அப்பரதன் புகழ்மிக்க சக்கரவர்த்தியாய் விளங்கினான். விஷ்ணுவின் அம்சத்தாலுண்டான அவனுடைய மகிமை பூவுலகெங்கும் பாடப்படுகிறது.

21. 1. (பரத மகாராஜனுக்குத் தத்துப் புத்திரனான) விததனுக்கு மன்யு என்றவன் புத்திரன். அவனிடம் தோன்றியவர்கள் பிருஹத்க்ஷத்திரன், ஜயன், மஹாவீர்யன், நரன் கர்க்கன் என்பவர்கள். நரனுடைய புத்திரன் ஸங்கிருதி.

---

20. 19. ஒ. நாரீணாம் சிரவாஸோ ஹி பாந்தவேஷு ந ரோசதே । —ம. பா.

20. 23. ஒ. பரதாத் பாரதீகீர்த்திர் யேனேதம் பாரதம் குலம் ।
அபரே யே ச பூர்வே ச பாரதா இதி தே ஸ்மவன் ॥ ம. பா. 1. 58. 12.

गुरुश्च रन्तिदेवश्च संकृतेः पाण्डुनन्दन ।
रन्तिदेवस्य हि यश इहामुत्र च गीयते ॥ २१.२ ॥

वियद्वित्तस्य ददतो लब्धं लब्धं बुभुक्षतः ।
निष्किञ्चनस्य धीरस्य सकुटुंबस्य सीदतः ॥ २१.३ ॥

व्यतीयुरष्टचत्वारिंश-रहान्यपिबतः किल ।
घृतपायस-संयावं तोयं प्रात-रुपस्थितम् ॥ २१.४ ॥

कृच्छ्रप्राप्तकुटुंबस्य क्षुत्तृड्भ्यां जात-वेपथोः ।
अतिथि-र्ब्राह्मणः काले भोक्तुकामस्य चागमत् ॥ २१.५ ॥

---

21. 2. பாண்டு நந்தன! ஸங்கிருதியின் புத்திரர்கள் குருவும் ரந்தி தேவனும். ரந்தி தேவனுடைய புகழ் இவ்வுலகிலும் மேலுலகிலும் பாடப்படுகிறது.

21. 3-5. (ஒருசமயம் பஞ்ச காலத்தில்) பொருளனைத்தும் செலவாகிய பின்னும் கிடைக்கக் கிடைக்கக் கொடுப்பவனும், பசியால் வாடியவனும், ஏதுமற்றவனாயினும் தீரனும் குடும்பத்துடன் வருந்துபவனும் ஆகிய அவனுக்கு (ரந்தி தேவனுக்கு) இவ்வாறாக நாற்பத்தெட்டு நாட்கள் கழிந்தன. பின்னர் காலையில் சிறிது நெய்யும் பாலும் கலந்த கஞ்சியும் தீர்த்தமும் கிடைத்ததை அருந்த விரும்புகையில் குடும்பத்தின் துன்பத்தை நினைத்து வருந்துபவனும் பசியாலும் தாகத்தாலும் உடலில் நடுக்கமேற்பட்டவனுமாகிய அவனை நாடி ஒரு பிராம்மணன் அதே சமயத்தில் அதிதியாக வந்து சேர்ந்தான்.

---

**பூருவின்வம்சம் :—**



तस्मै संव्यभजत् सोऽन्नमादृत्य श्रद्धयान्वितः ।
हरिं सर्वत्र संपश्यन् स भुक्त्वा प्रययौ द्विजः ॥ २१.६ ॥

अथान्यो भोक्ष्यमाणस्य विभक्तस्य महीपते ।
व्यभक्तं व्यभजत् तस्मै वृषलाय हरिं स्मरन् ॥ २१.७ ॥

याते शूद्रे तमन्योऽगादतिथिः श्वभिरावृतः ।
राजन् मे दीयतामन्नं श्वगणाय बुभुक्षते ॥ २१.८ ॥

स आदृत्यावशिष्टं यद् बहुमान-पुरस्कृतम् ।
तच्च दत्त्वा नमश्चक्रे श्वभ्यः श्वपतये विभुः ॥ २१.९ ॥

पानीयमात्र-मुच्छेषं तच्चैकपरितर्पणम् ।
पास्यतः पुल्कसोऽभ्यागादपो देह्यशुभस्य मे ॥ २१.१० ॥

तस्य तां करुणां वाचं निशम्य विपुलश्रवाः ।
कृपया भृश-संतप्त इदमाहामृतं वचः ॥ २१.११ ॥

न कामयेऽहं गतिमीश्वरात् परा-मष्टर्द्धियुक्ता-मपुनर्भवं वा ।
आर्तिं प्रपद्येऽखिलदेहभाजा-मन्तःस्थितो येन भवन्त्यदुःखाः ॥ २१.१२ ॥

---

21. 6. விஷ்ணுவையே எங்கும் பார்ப்பவனுகிய அவன் சிரத்தையுடன் உபசரித்து அந்தப் பிராம்மணனுக்கு அவ்வுணவை யளித்தான். அவன் அதை உண்டு விட்டுச் சென்ருன்.

21. 7. அரசே! பின்னர் குடும்பத்தில் மற்றவர்களுக்கெனப் பங்கு வைத்திருந்ததில் தனக்களிக்கப்பட்டதை அருந்த எண்ணியபோது மற்ெருருவன் வந்துசேரவே, விஷ்ணுவை மனதால் நினைத்து அந்த சூத்திரனுக்கு அந்தப் பங்கை அளித்தான்.

21. 8. சூத்திரன் சென்றதும் மற்ெருரு அதிதி நாய்கள் பின்தொடர வந்து சேர்ந்தான். "அரசே! இந்தக் கும்பலுடன் பசியால் வாடும் எனக்குச் சோறு போடுங்கள்" என்று அவன் கேட்டான்.

21. 9. பிரபுவாகிய ரந்திதேவன் அவனையும் மரியாதையுடன் ஆதரித்து என்ன மீதியிருந்ததோ அதையளித்து நாய்க்கும் நாயின் எஜமானனுக்கும் நமஸ்காரம் செய்தான்.

21. 10. பிறகு ஒருவனுக்குமட்டும் தாகசாந்தி செய்யக்கூடிய அளவு தீர்த்தம் மீதியிருந்தது. அதைப் பானம் செய்யத் தொடங்கியபோது ஒரு புலையன் வந்து, "ஐயனே! இழிகுலத்தோனுகிய எனக்குச் சிறிது தண்ணீர் கொடுங்கள்' என்ருன்.

21. 11. கீர்த்திமிக்க ரந்திதேவன் அவனுடைய தீனமான சொல்லைக்கேட்டு மிகவும் வருந்திப் பின்வருமாறு அமுதத்துக்கொப்பான மொழிகளைக் கூறினுன்.

2. 12. "நான் ஈசுவரனிடமிருந்து சிறப்புமிக்க அஷ்ட ஐசுவரியங்களுடன் கூடிய கதியையோ மோக்ஷத்தையோ விரும்பவில்லை. உடல் படைத்த எல்லோரும் எதனுல் துன்பம் நீங்கியவர்களாவார்களோ அங்ஙனம் அவர்கள் உள்ளத்தில் நின்று அவர்களுடைய துன்பத்தை ஏற்றுக்கொள்ள விரும்புகிறேன்."

---

**21.** 12. ஒ. அர்ஜுனு! எவன் எங்கும் சுகமாயினும் துக்கமாயினும் தன்னை உபமானமாகக்கொண்டு சமமாகப் பார்க்கிருனே அந்த யோகிதான் சிறந்தவன் என்பது துணிபு. —கீ. 6. 32.

---

211. 2. न कामयेऽहं गतिमीश्वराणां

क्षुत्तृट् श्रमो गात्र-परिभ्रमश्च दैन्यं क्लमः शोक-विषाद-मोहाः ।
सर्वे निवृत्ताः कृपणस्य जन्तो-र्जिजीविषो-र्जीवजलार्पणान्मे ॥ २१.१३ ॥

इति प्रभाष्य पानीयं म्रियमाणः पिपासया ।
पुल्कसायाददाद्धीरो निसर्गकरुणो नृपः ॥ २१.१४ ॥

तस्य त्रिभुवनाधीशाः फलदाः फलमिच्छताम् ।
आत्मानं दर्शयांचक्रु-र्माया-विष्णु-विनिर्मिताः ॥ २१.१५ ॥

स वै तेभ्यो नमस्कृत्य निस्सङ्गो विगतस्पृहः ।
वासुदेवे भगवति भक्त्या चक्रे मनः परम् ॥ २१.१६ ॥

ईश्वरालंबनं चित्तं कुर्वतोऽनन्यराधसः ।
माया गुणमयी राजन् स्वप्नवत् प्रत्यलीयत ॥ २१.१७ ॥

तत्प्रसंगानुभावेन रन्तिदेवानुवर्तिनः ।
अभवन् योगिनः सर्वे नारायण-परायणाः ॥ २१.१८ ॥

---

21. 13. "உயிர்வாழ விரும்பும் ஒரு எளிய ஜீவனுக்கு ஜீவாதாரமான நீரை யளிப்பதால் என்னுடைய பசி, தாகம், களைப்பு, உடலின் தள்ளாமை, எளிமை, வாட்டம், சோகம், வருத்தம், மோஹம் இவை யாவும் நீங்கும்."

21. 14. கருணையே இயற்கையாகக் கொண்ட தீரனுகிய அவ்வரசன் இவ்வாறு கூறிவிட்டு நீர் வேட்கையால் மரணத்தருவாயிலிருந்த அந்தப் புலையனுக்கு (தன்னிட மிருந்த) குடிநீரைக் கொடுத்தான்.

21. 15. விஷ்ணுமாயையால் மாறுவேஷங்களில் (பிராம்மணனுகவும், சூத்திர னுகவும் புலையனுகவும்) தோன்றியவர்களும் பலனை விரும்புவோர்க்கு வேண்டிய பலனை அளிப்பவர்களும் உலக நாயகர்களுமாகிய மும்மூர்த்திகள் தங்களுடைய உண்மை வடிவில் ரந்தி தேவனுக்குக் காட்சியளித்தனர்.

21. 16. அப்போது அவனே பற்றற்றவனுய் ஆசையற்றவனுய் அவர்களுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு பகவான் வாசுதேவனிடத்திலேயே வேறு நாட்டமின்றி பக்தி யுடன் மனத்தைச் செலுத்தினுன்.

21. 17. அரசே! வேறு விருப்பமின்றி ஈசுவரனையே பற்றுக மனதில் கொண்ட அவனுக்குக் கடுமையான மாயை கனவுபோல் மறைந்தது.

21. 18. ரந்திதேவனுக்குப் பின் அவனுடைய வம்சத்தில் உதித்தோர் அவனுடைய உறவின் பெருமையால் எல்லோரும் யோகிகளாகவும் நாராயண பக்தி மிக்கவர்களாகவும் ஆயினர்.

---

21. 13. பரதுஃக்க நிவ்ருத்த்யைவ மம ஸர்வதுஃக்க நிவ்ருத்தி: ।

21. 14. ததீய தைர்ய-பரீக்ஷார்த்தம் ப்ரதமம் மாயயா வ்ருஷலாதி ரூபேண ப்ரதீதா: ஸந்த: ।

---

21. 14. पुक्कसायाददाद्धीरो பா. பே.

बाह्लिकात् सोमदत्तोऽभूद् भूरि-र्भूरिश्रवास्ततः ।
शलश्च शंतनोरासीद् गंगायां भीष्म आत्मवान् ॥ २२.१८ ॥

सर्वधर्मविदां श्रेष्ठो महाभागवतः कविः ।
वीरयूथाग्रणीर्येन रामोऽपि युधि तोषितः ॥ २२.१९ ॥

शन्तनो-र्दाशकन्यायां जज्ञे चित्रांगदः सुतः ।
विचित्रवीर्यावरजो नाम्ना चित्रांगदो हतः ॥ २२.२० ॥

यस्यां पराशरात् साक्षादवतीर्णो हरेः कला ।
वेदगुप्तो मुनिः कृष्णो यतोऽहमिद-मध्यगाम् ॥ २२.२१ ॥

हित्वा स्वशिष्यान् पैलादीन् भगवान् बादरायणः ।
मह्यं पुत्राय शांताय परं गुह्य-मिदं जगौ ॥ २२.२२ ॥

---

22. 18. (பரத மகாராஜனுக்குத் தத்துப் புத்திரரான விததரின் மைந்தன் மன்யு; மன்யுவின் மைந்தர்கள் பிருஹத்க்ஷத்திரன் முதலிய ஐவர். பிருஹத்க்ஷத்திரனுடைய ஸந்ததியில் தோன்றியவன் குரு. அவனுக்குப் பல தலைமுறைக்குப்பின் தோன்றியவன், ப்ரதீபன். பிரதீபனுக்கு தேவாபி, சந்தனு, பாஹ்லிகன் என்று மூன்று குமாரர்கள்.) பாஹ்லிகனிடம் ஸோமதத்தன் பிறந்தான். ஸோமதத்தனுக்கு பூரி, பூரிசிரவஸ் சலன் என மூன்று குமாரர்கள். சந்தனுவுக்குக் கங்கா தேவியிடம் ஆத்ம ஞானியாகிய பீஷ்மர் தோன்றினார்.

22. 19. அவர் தர்மங் தெரிந்தவர்களுக்கெல்லாம் சிறந்தவரும், மகா பாகவதரும், தீர்க்கதரிசியும், வீரர் கூட்டத்தின் தலைவரும் ஆகியவர். பரசுராமரும் யுத்தத்தில் இவரால் மகிழ்விக்கப்பட்டார்.

22. 20. செம்படவனால் வளர்க்கப்பட்ட (ஸத்யவதி என்ற) பெண்ணிடம் சந்தனுவுக்கு விசித்திரவீரியன், சித்திராங்கதன் என இரு குமாரர்கள் தோன்றினர். இளையவனான சித்திராங்கதன் அதே பேர் கொண்ட ஒரு கந்தர்வனால் கொல்லப் பட்டான்.

22. 21. இதே ஸத்யவதியிடம் (கன்னிப் பருவத்தில்) பராசரரின் தவமகிமையால் ஹரியின் அம்சமாகத் தோன்றியவர் வேதரக்ஷகரான கிருஷ்ணத்துவைபாயன முனிவர், இவரிடம் தான் நான் இதை அத்தியயனம் செய்தேன்.

22. 22. பகவான் பாதராயணர் தமது மாணவர்களாகிய பைலர் முதலியவர்களை விட்டுப் புத்திரனும் சாந்தனுமான எனக்கு அதிரகசியமான இதைக் கூறினார்.

---

**குருவம்சம்**

குரு
|
ப்ரதீபன்
- தேவாபி (ராஜ்யத்தை விரும்பாமல் வனம் சென்றான்)
- ஸத்யவதி = சந்தனு = கங்கை
  - (ஸத்யவதி) சித்ராங்கதன்; அம்பை = விசித்ரவீர்யன் = அம்பாலிகை
  - (கங்கை) பீஷ்மர்
- பாஹ்லிகன்
  - ஸோமதத்தன்
    - பூரி
    - பூரிசிரவஸ்
    - சலன்

विचित्रवीर्योऽथोवाह काशिराजसुते बलात् ।
स्वयंवरादुपानीते अंबिकांबालिके उमे ॥ २२.२३ ॥

तयोरासक्तहृदयो गृहीतो यक्ष्मणा मृतः ॥ २२.२४ ॥

क्षेत्रेऽप्रजस्य वै भ्रातु-र्मात्रोक्तो बादरायणः ।
धृतराष्ट्रं च पाण्डुं च विदुरं चाप्यजीजनत् ॥ २२.२५ ॥

गान्धार्यां धृतराष्ट्रस्य जज्ञे पुत्रशतं नृप ।
तत्र दुर्योधनो श्रेष्ठो दुःशला चापि कन्यका ॥ २२.२६ ॥

शापान्मैथुन-रुद्धस्य पाण्डोः कुन्त्यां महारथाः ।
जाता धर्मानिलेन्द्रेभ्यो युधिष्ठिरमुखास्त्रयः ॥ २२.२७ ॥

नकुलः सहदेवश्च माद्र्यां नासत्यदस्रयोः ।
द्रौपद्यां पंच पंचभ्यः पुत्रास्ते पितरोऽभवन् ॥ २२.२८ ॥

तव तातः सुभद्राया-मभिमन्यु-रजायत ।
सर्वातिरथजिद् वीर उत्तरायां ततो भवान् ॥ २२.३३ ॥

---

22. 23. விசித்திர வீரியன் (பீஷ்மரால்) ஸ்வயம்வரத்தில் பலாத்காரமாகக் கொண்டுவரப்பட்ட காசிராஜனுடைய புத்திரிகளான அம்பை அம்பாலிகை இருவரையும் மணந்து கொண்டான்.

22. 24. அவர்களிடம் மனம்பற்றியிருந்த விசித்திர வீரியன் க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டு இறந்தான்.

22. 25. புத்திரப்பேறின்றி இறந்துபோன சகோதரனுகிய அவனுடைய மனைவிகளிடம் பாதராயணர் தாயின் சொல்படி திருதராஷ்டிரனையும் பாண்டுவையும், விதுரனையும் பிறக்கச் செய்தார்.

22. 26. திருதராஷ்டிரனுக்குக் காந்தாரியிடம் நூறு புத்திரர்களும் துச்சலை என்ற பெண்ணும் பிறந்தார்கள். அவர்களுள் மூத்தவன் துரியோதனன்.

22. 27. சாபத்தால் ஸ்திரீஸங்கம் தடுக்கப்பட்டிருந்த பாண்டுவுக்குக் குந்தியிடம் தருமன், வாயு, இந்திரன் இவர்களுடைய அருளால் யுதிஷ்டிரன் முதலிய மூன்று மகாரதர்கள் பிறந்தனர்.

22. 28. அசுவினீ தேவர்களின் அருளால் (மற்றொரு மனைவியாகிய) மாத்ரியிடம் நகுலனும் ஸஹதேவனும் பிறந்தார்கள். துரௌபதியிடம் (பாண்டவர்) ஐவருக்கும் உனது பிதிருக்களாகிய ஐந்து புத்திரர்கள் பிறந்தனர்.

22 .33. உனது (பாட்டனுக்கு) ஸுபத்திரையிடம் உனது பிதாவாகிய அபிமன்யு பிறந்தான். அவன் அதிரதர்களை யெல்லாம் ஜயங்கொண்ட வீரன். அபிமன்யுவுக்கு உத்தரையிடம் பிறந்தவன் நீ.

परिक्षीणेषु कुरुषु द्रौणे-र्ब्रह्मास्त्रतेजसा ।
त्वं च कृष्णानुभावेन सजीवो मोचितोऽन्तकात् ॥
तवेमे तनयास्तात जनमेजयपूर्वकाः ॥ २२.३४ ॥

ययातेर्ज्येष्ठपुत्रस्य यदोर्वंशं नरर्षभ ।
वर्णयामि महापुण्यं सर्वपापहरं नृणाम् ॥ २३.१८ ॥

यदोर्वंशं नरश्श्रुत्वा सर्व-पापैः प्रमुच्यते ।
यत्रावतीर्णो भगवान् परमात्मा नराकृतिः ॥ २३.१९ ॥

यदोस्सहस्रजित्क्रोष्टु-र्नलो रिपुरिति श्रुताः ।
चत्वारस्सूनवस्तत्र शतजित्प्रथमात्मजः ॥ २३.२० ॥

---

22. 34. துரோண புத்திரனுடைய பிரம்மாஸ்திரத்தின் வீரியத்தால் குருவம்சம் நாசமானபோது ஸ்ரீ கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தால் நீ யமன் வாயிலிருந்து விடுபட்டுப் பிழைத்தாய். ஜனமேஜயன் முதலாகிய இவர்கள் உனது குமாரர்கள்.

23. 18-19. நரசிரேஷ்டனே! யயாதியின் மூத்த குமாரனாகிய யதுவின் வம்சத்தை வர்ணிக்கிறேன். அது மிகவும் புண்ணியமானது. மனிதர்களின் பாவமனைத்தையும் போக்கவல்லது. எதில் பகவான் பரமாத்மா மானிட வடிவில் அவதரித்தாரோ அந்த யதுவின் வம்சத்தைப்பற்றிக் கேட்கும் மனிதன் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகிறான்.

23. 20. யதுவுக்கு ஸஹஸ்ரஜித், க்ரோஷ்டு, நளன், ரிபு என நான்கு புத்திரர்கள் பிரசித்தி பெற்றவர்கள். அவர்களுள் முதல்வனுடைய புத்திரன் சதஜித். (இவனுடைய ஸந்ததியார் மாதவர்கள், விருஷ்ணிகள், யாதவர்கள் எனப் பல பிரிவாயினர்.)

---

**யதுவம்சம்—**



यदुपुत्रस्य च क्रोष्टोः पुत्रो वृजिनवांस्ततः।
श्वाहितो मेरुशेकुर्वै तस्य चित्ररथस्ततः ॥ २३.३१ ॥

देवमीडस्य शूरस्य मारिषा नाम पत्न्यभूत्।
तस्यां संजनयामास दशपुत्रानकल्मषान् ॥ २४.२७ ॥

वसुदेवं देवभागं देवश्रवस-मानकम्।
सृंजयं श्यामकं कंक-मनीकं वत्सकं वृकम् ॥ २४.२८ ॥

देवदुन्दुभयो नेदु-रानका यस्य जन्मनि।
वसुदेवं हरेः स्थानं वदन्त्यानकदुन्दुभिम् ॥ २४.२९ ॥

पृथा च श्रुतदेवा च श्रुतकीर्तिः श्रुतश्रवाः।
राजाधिदेवी चैतेषां भगिन्यः पंच कन्यकाः ॥ २४.३० ॥

कुन्तेः सख्युः पिता शूरो ह्यपुत्रस्य पृथा-मदात्।
साऽऽप दुर्वाससो विद्यां देवहूतीं प्रतोषितात् ॥ २४.३१ ॥

प्रपितामह-स्तामुवाह पाण्डुर्वै सत्यविक्रमः ॥ २४.३६ ॥

श्रुतदेवां तु कारूषो वृद्धकर्मा समग्रहीत्।
यस्या-मभूद्दन्तवक्त्र ऋषिशप्तो दितेः सुतः ॥ २४.३७ ॥

---

23. 31. யதுவின் புத்திரனாகிய க்ரோஷ்டுவுக்கு விருஜினவான் புத்திரன். விருஜினவானுக்கு ச்வாஹிதன் குமாரன். ச்வாஹிதனுக்குப் பேருசேகு குமாரன். பேருசேகுவுக்குச் சித்திரரதன் மைந்தன்.

24. 27. (இந்த ஸந்ததியில் வந்தவர்கள் போஜர்கள், ஸாத்வதர்கள், பல தலைமுறைகளுக்குப்பின் தோன்றியவன் தேவமீடன்). தேவமீடனுக்குச் சூரன் புத்திரன். சூரனுக்கு மாரிஷை என்பவள் மனைவி. அந்த மாரிஷையிடம் களங்கமற்ற பத்துப் புத்திரர்களை யடைந்தான்.

24. 28. அவர்கள் வசுதேவன், தேவபாகன், தேவசிரவன், ஆனகன், ஸ்ருஞ் ஜயன், ச்யாமகன், கங்கன், அனீகன், வத்ஸகன், வ்ருகன் என்றவர்கள்.

24. 29. எவர் பிறந்தபோது தேவதுந்துபிகளும் ஆனக வாத்தியங்களும் முழங்கினவோ, எவர் பகவானுடைய அவதாரஸ்தானமோ அந்த வசுதேவரை ஆனக துந்துபி எனக் கூறுகின்றனர்.

24. 30. பிருதை, சுருததேவை, சுருதகீர்த்தி, சுருதசிரவஸ், ராஜாதிதேவி என்று ஐந்து பெண்கள் இவருடைய சகோதரிகள்.

24. 31. பிதாவாகிய சூரன் தனது நண்பன் குந்தி என்பவன் குழந்தையற்றவனா யிருந்ததால் அவனுக்குப் பிருதையை வளர்ப்புப் பெண்ணாகக் கொடுத்தான். அவள் அவள் பணிவிடையால் மகிழ்விக்கப்பெற்ற துர்வாஸரிடமிருந்து தேவர்களை யழைப் பிக்கும் வித்தையைப் பெற்றாள்.

24. 36. பொய்க்காத பராக்கிரமுடைய உனது பிரபிதாமகனாகிய பாண்டுமகா ராஜர் அவளை விவாகம் செய்து கொண்டார்.

24. 37. சுருததேவையைக் காருஷனாகிய விருத்தகர்மா விவாகம் செய்து கொண்டான். ரிஷிசாபத்துக்காளான திதிபுத்திரன் அவளிடம் தந்தவக்த்ரன் என்ற புத்திரனாகத் தோன்றினான்.

राजाधिदेव्या-मावन्त्यौ जयत्सेनोऽजनिष्ट ह ।
दमघोष-श्चेदिराजः श्रुतश्रवस-मग्रहीत् ॥
शिशुपालः सुतस्तस्याः कथित-स्तस्य संभवः ॥ २४.३८ ॥

पौरवी रोहिणी भद्रा मदिरा रोचना इला ।
देवकी प्रमुखा आसन् पत्न्य आनकदुन्दुभेः ॥ २४.४५ ॥

वसुदेवस्तु देवक्या-मष्ट पुत्रानजीजनत् ।
अष्टमस्तु तयो-रासीत् स्वयमेव हरिः किल ॥
सुभद्रा च महाभागा तव राजन् पितामही ॥ २४.५५ ॥

यदा यदेह धर्मस्य क्षयो वृद्धिश्च पाप्मनः ।
तदा तु भगवानीश आत्मानं सृजते हरिः ॥ २४.५६ ॥

न ह्यस्य जन्मनो हेतुः कर्मणो वा महीपते ।
आत्ममायां विनेशस्य परस्य द्रष्टुरात्मनः ॥ २४.५७ ॥

कलौ जनिष्यमाणानां दुःख-शोक-तमोनुदम् ।
अनुग्रहाय भक्तानां सुपुण्यं व्यतनोद् यशः ॥ २४.६१ ॥

---

24. 38. ராஜாதி தேவியை ஜயத்ஸேனன் மணந்து அவளிடம் (விந்தன் அனுவிந்தன் என்ற) அவந்தி நாட்டினராய் விளங்கிய இரு புத்திரர்களைப் பெற்றான். சேதிராஜனுகிய தமகோஷன் சுருதசிரவஸை விவாகம் செய்து கொண்டான். அவனுக்கு அவளிடம் சிசுபாலன் பிறந்தது பேசப்படுகிறது.

24. 45. பௌரவீ, ரோஹிணீ, பத்ரை, மதிரை, ரோசனை, இளை, தேவகீ·முதலிய வர்கள் ஆனகதுந்துபி எனப் பெயர் பெற்ற வசுதேவருடைய மனைவிகள்.

24. 55. வசுதேவர் தேவகியிடம் எட்டுப் புத்திரர்களைப் பெற்றார். அவர்களுள் எட்டாவதாக விஷ்ணு தாமே தோன்றினார். அரசே! மகாபாக்யசாலியும் உமது பாட்டியுமாகிய சுபத்திரையும் அவர்களுக்குப் பிறந்தவள்.

24. 56. எப்பெப்போது தர்மத்திற்குக் குறைவும் பாவத்திற்கு ஏற்றமும் ஏற்படுகிறதோ அப்போது பகவானும் ஈசுவரனுமாகிய விஷ்ணு தன்னையே சிருஷ்டித்துக் கொள்ளுகிறார்.

24. 57. அரசே! ஈசனும் பரனும் ஸாக்ஷியும் ஆத்மாவுமாகிய இவருக்குத் தம் மாயையன்றி ஜன்மத்திற்கும் கர்மத்திற்கும் வேறு காரணம் எதுவுமில்லை.

24. 61. கலியுகத்தில் பிறக்கப்போகும் மக்களின் துக்கத்தையும் சோகத்தையும் அஞ்ஞானத்தையும் போக்குவதும், புண்ணியம் மிக்கதுமான, தனது கீர்த்தியைப் பக்தர்களை அனுக்கிரகிக்கும் பொருட்டு விஸ்தாரப்படுத்தினார்.

---



स्निग्ध-स्मितेक्षितोदारै-र्वाक्यै-र्विक्रमलीलया ।
नृलोकं रमयामास मूर्त्या सर्वांगरम्यया ॥ २४.६४ ॥

यस्याननं मकरकुण्डल-चारुकर्ण-भ्राजत्कपोलसुभगं सविलासहासम् ।
नित्योत्सवं न ततृपुर्दृशिभिः पिबन्त्यो नार्यो नराश्च
मुदिताः कुपिता निमेश्च ॥ २४.६५ ॥

जातो गतः पितृगृहाद् व्रजमेधितार्थो हत्वा रिपून् सुत-शतानि कृतोरुदारः ।
उत्पाद्य तेषु पुरुषः क्रतुभिः समीजे आत्मान-मात्मनिगमं
प्रथयञ्जनेषु ॥ २४.६६ ॥

पृथ्व्याः स वै गुरुभरं क्षपयन् कुरूणा-मन्तः समुत्थकलिना युधि भूपचक्रम् ।
दृष्ट्या विधूय विजये जयमुद्विघोष्य प्रोच्योद्धवाय च
परं समगात् स्वधाम ॥ २४.६७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां
संहितायां पारमहंस्यां वैयासिक्यां
श्रीहयग्रीव-ब्रह्मविद्यायां

नवमः स्कन्धः समाप्तः ॥

---

24. 64. பிரியமான புன்முறுவலாலும் பார்வையாலும் கம்பீரமான பேச்சாலும் லீலாவிலாஸங்களாலும் அவயவங்கள் அனைத்தின் கவர்ச்சியாலும் வடிவழகாலும் மானிட உலகை மகிழ்வித்தார்.

24. 65. மகர குண்டலங்களால் அழகிய செவியும், பிரகாசிக்கும் சிறந்த கன்னமும், ஹாஸ்ய விலாசமும் கூடியது அவருடைய முகமண்டலம்; அவரைக் காண்பதே நித்தியோத்ஸவம்; அவருடைய அழகைக் கண்களால் பருகிய ஆடவரும் பெண்டிரும் மகிழ்வு பொங்கியும் திருப்தியடையாமல், கொட்டும் இமையைக் கோபிப்பவராயினர்.

24. 66. (தேவரூபத்துடன்) பிறந்து (மனுஷ்ய ரூபத்துடன்) தந்தை வீட்டிலிருந்து ஆய்ப்பாடி சென்று அங்குள்ளவர்களுடைய காரியங்களைக் கூட்டுவித்து, எதிரிகளையழித்துப் பல மனைவிகளையடைந்து அவர்களிடம் நூற்றுக்கணக்கான புத்திரர்களைப் பெற்றுப் பரமபுருஷன் மக்களிடம் வேதமார்க்கத்தை விஸ்தாரப்படுத்தி யாகங்களால் தன்னையே பூஜித்தார்.

24. 67. கௌரவர்களிடை விளைந்த பூசலை நிமித்தமாய்க்கொண்டு போரில் அரசர் கூட்டத்தைக் கண்பார்வையாலேயே அழித்து அதிகமாயிருந்த பூபாரத்தைப் போக்கி அர்ஜுனனிடம் ஜயகோஷம் செய்து உத்தவருக்குத் தத்துவத்தை உபதேசித்துத் தமது பதத்திற்கெழுந்தருளினர்.

இங்ஙனம் பரமஹம்ஸரான வியாஸ புத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணாயிரம்
சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை எனப்படுவதுமான
ஸ்ரீமத் பாகவத மகா புராணத்தில் ஒன்பதாவது ஸ்கந்தம்
முற்றும்.

## ॥ दशमः स्कन्धः ॥

### ॥ श्रीकृष्णावतारः ॥ २० ॥

राजोवाच—

कथितो वंशविस्तारो भवता सोमसूर्ययोः।
राज्ञां चोभयवंश्यानां चरितं परमाद्भुतम् ॥ १.१ ॥

यदोश्च धर्मशीलस्य नितरां मुनिसत्तम।
तत्रांशेनावतीर्णस्य विष्णोर्-वीर्याणि शंस नः ॥ १.२ ॥

अवतीर्य यदोर्वंशे भगवान् भूतभावनः।
कृतवान् यानि विश्वात्मा तानि नो वद विस्तरात् ॥ १.३ ॥

निवृत्ततर्षै-रुपगीयमानाद् भवौषधाच्छ्रोत्र-मनोऽभिरामात्।
क उत्तमश्लोक-गुणानुवादात् पुमान् विरज्येत विनाऽपशुघ्नात् ॥ १.४ ॥

---

## பத்தாவது ஸ்கந்தம்

### 20. ஸ்ரீ கிருஷ்ணவதாரம்

அரசன் கூறியது—

1. 1. உம்மால் சந்திர சூரியவம்ச விஸ்தாரமும் இரண்டு வம்சங்களின் அரசர்களின் அதியற்புதமான சரிதமும் சொல்லப்பட்டன.

1. 2. முனிசிரேஷ்டரே! மிகவும் தருமசீலரான யதுவின் சரிதமும் சொல்லப்பட்டது. அவ்வம்சத்தில் அம்சத்துடன் அவதரித்த விஷ்ணுவின் வீரச் செயல்களை எங்களுக்கு கூறியருளவேண்டும்.

1. 3. உலகனைத்திற்கும் ஆன்மாவும் உண்டாயவற்றையெல்லாம் ஊட்டி வளர்ப்பவரும் ஆகிய பகவான் யது வம்சத்தில் அவதரித்து என்னென்ன செய்தாரோ அவற்றையெல்லாம் எங்களுக்கு விரிவாய் எடுத்துரைக்க வேண்டும்.

1. 4. உலகப்பற்று நீங்கியவர்களால் கானம் செய்யப்படுவதும் பிறவிப்பிணிக்கு மருந்தாவதும், செவிக்கும் மனதிற்கும் இனிமைமிக்கதும் ஆகிய உத்தம சுலோகனுடைய குணங்களைச் சொல்லுவதிலும் கேட்பதிலும் ஆத்மஹத்தி செய்பவனைத் தவிர வேறு எவன்தான் வெறுப்படைவான்?

---

**பத்தாவது ஸ்கந்தம்**—தசமே க்ருஷ்ணஸத்கீர்த்தி-விதாநாயாநுவர்ண்யதே। தர்ம-க்லானி-நிமித்தஸ்து நிரோதோ துஷ்ட பூபுஜாம் ॥ —ஸ்ரீதரர்.

1. 4. அத்ரலோகே த்ரிவிதா ஜநா: முக்தா: முமுக்ஷவ: விஷயிணச்ச। தேஷாம் மத்யே அத்ர கஸ்யாப்யலம் ப்ரத்யய இத்யாஹ। நிவ்ருத்த தர்ஷைர் கதத்ருஷ்ணை: முக்தைரித்யர்த்த:। முமுக்ஷுணாமயமேவோபாய இத்யாஹ பவௌஷதாதிதி। விஷயிணமபி பரமோ விஷயோ யமே-வேத்யாஹ ச்ரோத்ர-மனோபிராமாதிதி ॥ அபகதா சுக் யஸ்மாத் தமாத்மானம் ஹந்தீத்-யபசுக்ன: தஸ்மாத்। பசுகாதிந இதி வா ॥ —ஸ்ரீதரர்,

पितामहा मे समरेऽमरंजयै-र्देवव्रताद्यातिरथै-स्तिमिंगिलैः ।
दुरत्ययं कौरवसैन्यसागरं कृत्वातरन् वत्सपदं स्म यत्प्लवाः ॥ १.५ ॥

द्रौण्यस्त्र-विप्लुष्ट-मिदं मदंगं सन्तानबीजं कुरुपाण्डवानाम् ।
जुगोप कुक्षिं गत आत्तचक्रो मातुश्च मे यः शरणं गतायाः ॥ १.६ ॥

वीर्याणि तस्याखिल-देहभाजा-मन्तर्बहिः पूरुषकालरूपैः ।
प्रयच्छतो मृत्यु-मुतामृतं च मायामनुष्यस्य वदस्व विद्वन् ॥ १.७ ॥

नैषातिदुःसहा क्षुन्मां त्यक्तोदमपि बाधते ।
पिबन्तं त्वन्मुखांभोजच्युतं हरिकथामृतम् ॥ १.१३ ॥

सूत उवाच—

एवं निशम्य भृगुनन्दन साधुवादं वैयासकिः स भगवानथ विष्णुरातम् ।
प्रत्यर्च्य कृष्णचरितं कलिकल्मषघ्नं व्याहर्तु-मारभत भागवतप्रधानः ॥ १.१४ ॥

1. 5. தேவர்களையும் ஜயிக்கவல்ல பீஷ்மர் முதலிய அதிரதர்கள் எந்தக் கௌரவ சேனு ஸமுத்திரத்தில் திமிங்கிலங்கள்போல் விளங்கினர்களோ, அவர்களுடன் நிகழ்ந்த போரில் கடத்தற்கரிய அந்த ஸமுத்திரத்தை என்னுடைய பாட்டன்மார்கள் எவருடைய உதவியாகிய கப்பலைக் கொண்டு கன்றுக்குட்டியின் குளம்படியைக் கடப்பதுபோல் எளிதில் கடந்தார்களோ (அந்த பகவானுடைய லீலைகளை எங்களுக்குக் கூறுங்கள்).

1. 6. கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஸந்தானத்திற்கு வித்தாக இருந்த என்னுடைய இச்சரீரம் துரோணபுத்திரனுடைய அஸ்திரத்தால் சிதைக்கப் பட்டபோது, சரணடைந்த என் தாயின் வயிற்றில் சக்கரமேந்தியவனுய்ப் புகுந்து எவர் காப்பாற்றினரோ (அந்த பகவானுடைய லீலைகளை எங்களுக்குக் கூறுங்கள்).

1. 7. பகவானுடைய பெருமைகளை அறிந்தவரே! உடல் படைத்த எல்லோரிடமும் உள்ளே புருஷரூபியாகவும் வெளியே காலரூபியாகவும் இருந்துகொண்டு எவர் (அகக் கண்ணுல் காண்பவர்க்கு) மோக்ஷமாகிய அமிருதத்தையும் (காணமாட்டாதவர்க்கு கால ரூபமான) சாவையும் கொடுக்கின்றரோ அந்த மாயா மானிடராகிய பகவானுடைய வீரியங்களைக் கூறியருளுங்கள்.

1. 13. உம்முடைய முகமாகிற தாமரையிலிருந்து பெருகும் ஹரிகதையாகிற அமுதத்தேனைப் பருகும் என்னை ஜலபானம்கூடச் செய்யாமலிருந்தும் பொறுத்தற்கரிய பசியும் வருத்தவில்லை.

ஸூதர் கூறியது—

1. 14. பிருகுநந்தனரே (சௌனகரே)! பாகவத சிரேஷ்டரும் வியாசபுத்திரருமான பகவான் சுகதேவர் சிலாக்கியமான இவ்வார்த்தைகளைக் கேட்டுப் பரீக்ஷித்தைப் புகழ்ந்து கொண்டாடி கலிதோஷத்தைப் போக்கும் கிருஷ்ண சரித்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

1. 7. **அந்தர்பஹி:—அந்த:** புருஷரூபேண பஹி: காலரூபேண। அந்தர்யாமி ரூபேண அந்தர்த்ருஷ்டீனும் முக்திம், பஹிர்த்ருஷ்டீனுஞ்ச காலரூபேண ம்ருத்யு ப்ரததாதி। யுத: அந்தர்த்ருஷ்ட்யா தத்வீர்யாண்யேவ ச்ரோதவ்யானீதி ॥

1. 13. ஒ. செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்.
—குறள் 421.

श्रीशुक उवाच—

वासुदेवकथाप्रश्नः पुरुषांस्त्रीन् पुनाति हि।
वक्तारं पृच्छकं श्रोतॄंस्तत्पाद-सलिलं यथा ॥ १.१६ ॥

भूमि-र्दृप्तनृपव्याज-दैत्यानीकशतायुतैः।
आक्रान्ता भूरिभारेण ब्रह्माणं शरणं ययौ ॥ १.१७ ॥

ब्रह्मा तदुपधार्याथ सहदेवै-स्तया सह।
जगाम स-त्रिनयन-स्तीरं क्षीरपयोनिधेः ॥ १.१९ ॥

तत्र गत्वा जगन्नाथं देवदेवं वृषाकपिम्।
पुरुषं पुरुषसूक्तेन उपतस्थे समाहितः ॥ १.२० ॥

गिरं समाधौ गगने समीरितां निशम्य वेधास्त्रिदशानुवाच ह।
गां पौरुषीं मे शृणुतामराः पुन-र्विधीयतामाशु तथैव मा चिरम् ॥ १.२१ ॥

पुरैव पुंसावधृतो धराज्वरो भवद्भिरंशै-र्यदुषूपजन्यताम्।
स यावदुर्व्या भरमीश्वरेश्वरः सकालशक्त्या क्षपयंश्चरेद्भुवि ॥ १.२२ ॥

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 16. பகவானுடைய பாதத்திலிருந்து பெருகிய கங்கை (பார்ப்பவர், ஸ்நானம் செய்பவர், பானம் செய்பவர் ஆகியோரைப் பாவனமாக்குவது) எவ்வாறோ அவ்வாறே வாசுதேவருடைய கதையைக் கேட்பதும் சொல்லுகிறவர், சொல்லத்தூண்டுகிறவர், கேட்பவர் ஆகிய மூன்று வகையான புருஷர்களையும் பாவனமாக்குகிறது.

1. 17. பூமிதேவியானவள் பெயரால் மட்டும் அரசர்களாகவும் உண்மையில் கொழுப்பேறிய அசுரக் கூட்டங்களாகவும் இருந்தவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டு அதிக பாரத்தால் வருந்தி பிரம்மதேவரைச் சரணடைந்தாள்.

1. 19. பிரம்மா (அவள் கூறிய) அதை மனதில் வாங்கிக்கொண்டு அந்த பூமி தேவியுடனும் தேவர்களுடனும் முக்கண்ணருடனும் பாற்கடலின் கரையை நாடிச் சென்றார்.

1. 20. அங்கு சென்று உலகநாயகரும் உள்ளிருந்து ஆட்டிவைப்பவரும் பரிபூர்ணருமாகிய வாசுதேவரை ஒன்றுபட்ட மனத்துடன் புருஷஸூக்தத்தால் போற்றி வழிபட்டார்.

1. 21. பிரம்மா அப்போது ஸமாதி நிலையில் ஆகாயத்தில் அசரீரியாக எழுந்த வாக்கைக் கேட்டு தேவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறினார்; "தேவர்களே! பரம புருஷருடைய கட்டளையை என்னிடமிருந்து கேளுங்கள், பின்னர் தாமதிக்காமல் அதன்படி விரைவில் நடந்துகொள்ளுங்கள்.

1. 22. "ஏற்கெனவே பூமிதேவியின் மனக்கவலையை பகவான் உணர்ந்திருக்கிறார். நீங்கள் யது குலத்தில் உங்கள் அம்சங்களால் பிறவியை யடைந்து ஈசுவரர்களுக்கும் ஈசுவரரான பகவான் காலசக்தியால் பூபாரத்தைப் போக்குவதற்கு எவ்வளவு காலம் பூமியில் சஞ்சரிப்பாரோ அவ்வளவு காலம் நீங்களும் பூமியிலிருக்கவேண்டும்.

वासुदेवगृहे साक्षाद् भगवान् पुरुषः परः।
जनिष्यते तत्प्रियार्थं संभवन्तु सुरस्त्रियः ॥ १.२३ ॥

इत्यादिश्यामरगणान् प्रजापतिपतिर्विभुः।
आश्वास्य च महीं गीर्भिस्स्वधाम परमं ययौ ॥ १.२६ ॥

शूरसेनो यदुपति-र्मथुरामावसन् पुरीम्।
माथुराञ्छूरसेनांश्च विषयान् बुभुजे पुरा ॥ १.२७ ॥

राजधानी ततः साभूत् सर्वयादव-भूभुजाम्।
मथुरा भगवान् यत्र नित्यं संनिहितो हरिः ॥ १.२८ ॥

तस्यां तु कर्हिचिच्छौरि-र्वसुदेवः कृतोद्वहः।
देवक्या सूर्यया सार्धं प्रयाणे रथमारुहत् ॥ १.२९ ॥

उग्रसेनसुतः कंसः स्वसुः प्रियचिकीर्षया।
रश्मीन् हयानां जग्राह रौक्मै रथशतैर्वृतः ॥ १.३० ॥

पथि प्रग्रहिणं कंस-माभाष्याहाशरीरवाक्।
अस्यास्त्वा-मष्टमो गर्भो हन्ता यां वहसेऽबुध ॥ १.३४ ॥

---

1. 23. "பரம புருஷனுன பகவான் வசுதேவருடைய கிருஹத்தில் தாமே நேரில் அவதரிக்கப் போகிருர். அவருக்குகந்ததைச் செய்யும் பொருட்டு தேவஸ்திரீகளும் பூமியில் பிறக்கட்டும்."

1. 26. பிரஜாபதிகளுக்குப் பதியான பிரம்மா இவ்விதம் தேவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு, பூமிதேவியையும் தக்க வார்த்தைகளால் சமாதானம் செய்து விட்டுத் தமது சிறந்த ஸ்தானத்துக் கேகிஞர்.

1. 27. அதற்குமுன் யது தலைவனுன சூரசேனன் என்பவன் மதுராபுரியிலிருந்து கொண்டு மதுரையைச் சார்ந்த தேசங்களையும் சூரஸேன தேசங்களையும் ஆண்டனுப வித்து வந்தான். அதனுல் அம்மதுராபுரி யதுகுல மன்னர்களனைவருக்கும் தலைநகராய் விளங்கியது. அங்கு பகவான் ஹரியானவர் நித்தியவாசம் செய்கிருர்.

1. 28. அங்கு ஒரு சமயம் சூரனுடைய புத்திரரான வசுதேவர் விவாகம் செய்து கொண்டு தாம் மணந்த பெண்ணுகிய தேவகியுடன் தேரிலேறிப் பிரயாணப்பட்டார்.

1. 30. உக்கிரசேன புத்திரனுன கம்ஸன் தன் சகோதரிக்குப் பிரியத்தைக் காட்ட விரும்பிப் பொன்மயமான பல தேர்கள் சூழ நின்ற அத்தேரிலேரிக் குதிரை களின் கடிவாளத்தைக் கையில் பிடித்தான்.

1. 34. கடிவாளம் பிடித்த கம்ஸனைக் கூவி நடுவழியில் அசரீரி வாக்குப் பின்வருமாறு கூறிற்று: "அறிவு கெட்டவனே! எவளை வாகனத்தில் கொண்டு செல்லுகிருயோ அவளுடைய எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது.'!

---

1. 27. **விஷயான்—தேசான்** ।
1. 29. **ஸூர்யயா**—நவோடயா ।

---

1. 23. **तत्पूजार्थं** । 1. 30. **कंसो भगिन्यां** । பா. பே.

इत्युक्तः स खलः पापो भोजानां कुलपांसनः।
भगिनीं हन्तुमारब्धः खड्गपाणिः कचेऽग्रहीत् ॥ १.३५ ॥

तं जुगुप्सित-कर्माणं नृशंसं निरपत्रपम्।
वसुदेवो महाभाग उवाच परिसान्त्वयन् ॥ १.३६ ॥

वसुदेव उवाच—

श्लाघनीयगुणः शूरै-र्भवान् भोजयशस्करः।
स कथं भगिनीं हन्यात् स्त्रिय-मुद्वाहपर्वणि ॥ १.३७ ॥

एषा तवानुजा बाला कृपणा पुत्रिकोपमा।
हन्तुं नार्हसि कल्याणी-मिमां त्वं दीनवत्सल ॥ १.४५ ॥

न ह्यस्यास्ते भयं सौम्य यद् वागाहाशरीरिणी।
पुत्रान् समर्पयिष्येऽस्या यतस्ते भयमुत्थितम् ॥ १.५४ ॥

श्रीशुक उवाच—

स्वसुर्वधान्निववृते कंसस्तद्वाक्यसारवित्।
वसुदेवोऽपि तं प्रीतः प्रशस्य प्राविशद्गृहम् ॥ १.५५ ॥

---

1. 35. இங்ஙனம் சொல்லக்கேட்ட அந்தக் கம்ஸன் துஷ்டனும் பாவியும் போஜ குலத்திற்குக் களங்கம் போன்றவனுமாகையால் வாளைக் கையிலெடுத்துக்கொண்டு தங்கையைக் கொல்ல ஆரம்பித்துத் தலைமயிரில் கைபோட்டுப் பிடித்தான்.

1. 36. இழிதொழிலில் இறங்கியவனும் கொடியவனும் வெட்கமற்றவனும் ஆகிய அவனை சமாதானப்படுத்துபவராய் மகா பாக்கியசாலியான வசுதேவர் பின்வருமாறு கூறினார்.

வசுதேவர் கூறியது—

1. 37. 'நீர் சூரர்களால் போற்றற்குரிய குணமுடையவர். போஜ குலத்தின் புகழை வளர்ப்பவர். அப்படிப்பட்ட நீர் ஒரு ஸ்திரீயை அதுவும் சகோதரியைக் கலியாண சமயத்தில் எங்ஙனம் கொல்லலாம்?

1. 45. 'இவள் உமது தங்கை, சிறுமி, இரங்கத்தக்கவள், புத்திரிக்கொப்பானவள். ஏழைகளுக்கிரங்குபவரே! மங்கள வடிவினளான இவளை நீர் கொல்வது தகுதியன்று.

1. 54. 'சித்தம் அழகியவரே! அசரீரி வாக்கு எதைச் சொல்லிற்றோ அந்த பயம் உமக்கு இவளிடமிருந்தல்லவே; இவளுக்குப் பிறக்கும் எந்தப் புத்திரர்களால் பயம் தோன்றியுளதோ அந்தப் புத்திரர்களை உம்மிடம் ஸமர்ப்பித்து விடுகிறேன்'.

ஸ்ரீ சுகர் கூறியது—

1. 55. கம்ஸன் அவர் கூறியதன் கருத்தை உணர்ந்துகொண்டு சகோதரியின் வதத்திலிருந்து மனது திரும்பியவனானான். வசுதேவரும் அதனால் மகிழ்ந்து அவனை ஸ்தோத்திரம் செய்துவிட்டுத் தனது வீடுபோய்ச் சேர்ந்தார்.

---

1. 35. கசே—கேசபந்தே।

1. 54. பிள்ளைகளைக் கம்ஸனிடம் கொடுக்கச் சம்மதிக்கலாமா என்றால் ஒருவேளை பிள்ளைகள் இவளிடம் பிறக்காமல் போகலாம், அல்லது கம்ஸனே இறந்து போகலாம், அல்லது தெய்வ வாக்குப் பலிக்கலாம். எது நடந்தாலும் நடக்கட்டும், இப்போது தேவகியின் உயிரைக் காப்போம், என்பது வசுதேவரின் எண்ணம்.

---

1. 54. यद्व ह्याहाशरीरवाक्।

பா. பே.

अथ काल उपावृत्ते देवकी सर्वदेवता ।
पुत्रान् प्रसुषुवे चाष्टौ कन्यां चैवानुवत्सरम् ॥ १.५६ ॥

कीर्तिमन्तं प्रथमजं कंसायानकदुन्दुभिः ।
अर्पयामास कृच्छ्रेण सोऽनृतादतिविह्वलः ॥ १.५७ ॥

किं दुःसहं नु साधूनां विदुषां किमपेक्षितम् ।
किमकार्यं कदर्याणां दुस्त्यजं किं धृतात्मनाम् ॥ १.५८ ॥

दृष्ट्वा समत्वं तच्छौरेः सत्ये चैव व्यवस्थितिम् ।
कंस-स्तुष्टमना राजन् प्रहसन्निद-मब्रवीत् ॥ १.५९ ॥

प्रतियातु कुमारोऽयं नह्यस्मा-दस्ति मे भयम् ।
अष्टमाद् युवयो-र्गर्भान्-मृत्युर्मे विहितः किल ॥ १.६० ॥

तथेति सुत-मादाय ययावानकदुन्दुभिः ।
नाभ्यनन्दत तद्वाक्य-मसतोऽविजितात्मनः ॥ १.६१ ॥

---

1\. 56. நாளடைவில் ஸர்வதேவதாஸ்வரூபியான தேவகி வருஷத்திற்கொன்றாக எட்டுப் பிள்ளைகளையும் ஒரு பெண்ணையும் பெற்றாள்.

1\. 57. வார்த்தை பொய்யாவதற்கு மிகவும் அஞ்சியவரான வசுதேவர் மிகுந்த வருத்தத்துடன் தனது முதல் குமாரனை கீர்த்திமந்தன் என்பவனைக் கம்ஸனிடம் அர்ப்பணம் செய்தார்.

1\. 58. ஸாதுக்களுக்குச் சகிக்கமுடியாதது எது? ஞானிகளுக்கு வேண்டுவது என்ன? மனதை நிலைநிறுத்தியவர்களுக்கு விடமுடியாதது எது? துஷ்டர்கள் எதைத் தான் செய்யமாட்டார்கள்?

1\. 59. அரசே! கம்ஸன் வசுதேவருடைய ஸமத்துவ புத்தியையும் ஸத்தியத்தில் கட்டுப்பட்டிருக்குந் தன்மையையும் கண்டு மனமகிழ்ந்து சிரித்துவிட்டுப் பின்வருமாறு கூறினான்.

1\. 60. "இந்தக் குழந்தை போகலாம். இவனிடமிருந்து எனக்குப் பயமில்லை. உங்களுடைய எட்டாவது கர்ப்பத்தினாலல்லவா எனக்குச் சாவு கூறப்பட்டது."

1\. 61. 'அப்படியே யாகட்டும்' என்று குழந்தையை எடுத்துக்கொண்டு வசுதேவர் சென்றார். ஆனால் கொடியவனும் தன்னடக்கமற்றவனுமான அவனுடைய வார்த்தையில் நம்பிக்கை கொண்டு மகிழவில்லை.

---

1\. 60. यवीयांस्तु कुमारोऽयं । युवयोः पुत्रान्मृत्युर्मे ।
1\. 61. यावदानकदुन्दुभिः । பா. பே.

नन्दाद्या ये व्रजे गोपा याश्चामीषां च योषितः।
वृष्णयो वसुदेवाद्या देवक्याद्या यदुस्त्रियः ॥ १.६२ ॥

सर्वे वै देवताप्राया उभयोरपि भारत।
ज्ञातयो बन्धु-सुहृदो ये च कंस-मनुव्रताः ॥ १.६३ ॥

एतत् कंसाय भगवाञ्छशंसाभ्येत्य नारदः।
भूमे-र्भारायमाणानां दैत्यानां च वधोद्यमम् ॥ १.६४ ॥

ऋषे-र्विनिर्गमे कंसो यदून् मत्वा सुरानिति।
देवक्या गर्भसंभूतं विष्णुं च स्ववधं प्रति ॥ १.६५ ॥

देवकीं वसुदेवं च निगृह्य निगलैर्गृहे।
जातं जात-महन् पुत्रं तयो-रजनशंकया ॥ १.६६ ॥

मातरं पितरं भ्रातॄन्सर्वांश्च सुहृद-स्तथा।
घ्नन्ति ह्यसुतृपो लुब्धा राजानः प्रायशो भुवि ॥ १.६७॥

उग्रसेनं च पितरं यदुभोजान्धकाधिपम्।
स्वयं निगृह्य बुभुजे शूरसेनान् महाबलः ॥ १.६९ ॥

1. 62-64. பாரத குலத்தரசே! கோகுலத்திலுள்ள நந்தர் முதலிய கோபர்களும் அவர்களுடைய ஸ்திரீகளும் வசுதேவர் முதலிய விருஷ்ணிகளும் தேவகி முதலிய யாதவ ஸ்திரீகளும், இருகுலத்திலுமுள்ள எல்லோருமே அநேகமாய் தேவதைகளின் அவதாரங்களே. கம்ஸனுடைய ஞாதிகளும் மற்ற உறவினர்களும் பரிவாரங்களும் எவர்களோ அவர்கள் எல்லோரும் அசுரர்கள். நாரத பகவான் கம்ஸனிடம் வந்து இதை எடுத்துரைத்துப் பூமிக்குப் பாரமாயிருக்கும் அசுரர்களை வதைப்பதற்காகச் செய்யப்படும் முயற்சி இது என்றும் விளக்கினர்.

1. 65-66. ரிஷி சென்றதும் யாதவர்களெல்லாம் தேவர்கள் என்று மனத்தில் கருதிய கம்ஸன் தேவகியின் கருவில் தோன்றுவதெல்லாம் தன்னைக் கொல்லுவதற்காக வரும் விஷ்ணுவாகவே இருக்கவேண்டும் என்று கொண்டு தேவகியையும் வசுதேவரையும் வீட்டிலேயே விலங்கிட்டு வைத்து, அவர்களுக்குப் பிள்ளை உண்டாக உண்டாக ஒவ்வொரு பிள்ளையையும் விஷ்ணு என்று சந்தேகித்துக் கொன்றான்.

1. 67. இப்பூமியில் தமது உயிரையே பெரிதாய் நினைக்கிறவர்களும், பேராசை பிடித்தவர்களுமான அரசர்கள் வெகுவாய்த் தாய் தந்தை சகோதரர்கள், சிநேகிதர்கள் எல்லோரையுமே கொல்லுகிறார்கள்.

1. 69. யாதவர்கள், போஜர்கள், அந்தகர்கள் ஆகியவர்களுக்கு அரசனுயிருந்த தன் தகப்பன் உக்கிரசேனனையும் விலங்கிட்டு மகாபலசாலியான கம்ஸன் தானே சூரசேன தேசத்தை ஆளலானுன்.

---

1. 64. भगवाञ्छ्रुत्वाभ्यागात्। 1. 67. पुत्रांश्च सुहृदः सखीन्। பா. பே.

प्रलंब-बक-चाणूर-तृणावर्त-महाशनैः ।
मुष्टिकारिष्ट-द्विविद-पूतना-केशि-धेनुकैः ॥ २.१ ॥

अन्यैश्चासुर-भूपालै-र्बाण-भौमादिभि-र्युतः ।
यदूनां कदनं चक्रे बली मागध-संश्रयः ॥ २.२ ॥

ते पीडिता निविविशुः कुरु-पञ्चाल-केकयान् ।
शाल्वान् विदर्भान् निषधान् विदेहान् कोसलानपि ॥ २.३ ॥

एके तमनुरुन्धाना ज्ञातयः पर्युपासते ।
हतेषु षट्सु बालेषु देवक्या औग्रसेनिना ॥ २.४ ॥

सप्तमो वैष्णवं धाम यमनन्तं प्रचक्षते ।
गर्भो बभूव देवक्या हर्ष-शोक-विवर्धनः ॥ २.५ ॥

भगवानपि विश्वात्मा विदित्वा कंसजं भयम् ।
यदूनां निजनाथानां योगमायां समादिशत् ॥ २.६ ॥

गच्छ देवि व्रजं भद्रे गोपगोभिरलंकृतम् ।
रोहिणी वसुदेवस्य भार्याऽऽस्ते नन्दगोकुले ॥
अन्याश्च कंस-संविग्ना विवरेषु वसन्ति हि ॥ २.७ ॥

---

2. 1-2. பிரலம்பன், பகன், சாணூரன், திருணாவர்த்தன், மஹாசனன் (அகாசுரன்), முஷ்டிகன், அரிஷ்டன், த்விவிதன், பூதனை, கேசி, தேனுகன் இவர்களுடனும் மற்றும் பாணன், நரகாசுரன் முதலிய அரசர்களுடனும் கூடிக்கொண்டு மகதநாட்டரசனாகிய ஜராஸந்தனுடைய ஆதரவையும் பெற்று பலவானான கம்ஸன் யாதவர்களுக்குத் துன்பம் விளைத்தான்.

2. 3. பீடிக்கப்பட்ட அவர்கள் குரு, பாஞ்சாலம், கேகயம், சால்வம், விதர்ப்பம், நிஷதம், விதேஹம், கோஸலம் முதலிய நாடுகளை அடைந்தனர்.

2. 4-5. அவனுக்குக் கட்டுப்பட்ட சில உறவினர்கள் மட்டும் அவனையனுசரித்துச் சேவை செய்துகொண்டிருந்தார்கள். தேவகியின் ஆறு குழந்தைகள் கம்ஸனால் கொல்லப்பட்டபின், விஷ்ணுவின் அம்சமாய் எந்த ஆதிசேஷன் கூறப்படுகிறாரோ அவரே தேவகிக்கு இன்பத்தையும் துன்பத்தையும் வளர்ப்பவர்போல் ஏழாவது கர்ப்பமாக ஆனார்.

2. 6. எல்லா உயிர்களுக்கும் ஆத்மாவாகிய பகவான் தன்னையே நம்பி வாழும் யாதவர்களுக்குக் கம்ஸனால் ஏற்பட்ட பயத்தை உணர்ந்து யோகமாயைக்குப் பின் வருமாறு கட்டளை இட்டார்.

2. 7. "தேவி! மங்களவடிவினளே! இடையர்களாலும் பசுக்களாலும் அழகுற்று விளங்கும் ஆயர்பாடிக்கு நீ செல்லவேண்டும். அங்கு நந்தகோகுலத்தில் வசுதேவருடைய மனைவி ரோகிணி இருக்கின்றாள். கம்ஸனிடம் பயந்து மறைவான இடங்களில் பிறரும் வசிக்கின்றனர்.

देवक्या जठरे गर्भं शेषाख्यं धाम मामकम् ।
तत् संनिकृष्य रोहिण्या उदरे संनिवेशय ॥ २.८ ॥

अथाहमंशभागेन देवक्याः पुत्रतां शुभे ।
प्राप्स्यामि त्वं यशोदायां नन्दपत्न्यां भविष्यसि ॥ २.९ ॥

अर्चिष्यन्ति मनुष्यास्त्वां सर्वकामवरेश्वरीम् ।
धूपोपहारबलिभिः सर्वकामवर-प्रदाम् ॥ २.१० ॥

नामधेयानि कुर्वन्ति स्थानानि च नरा भुवि ।
दुर्गेति भद्रकालीति विजया वैष्णवीति च ॥ २.११ ॥

कुमुदा चण्डिका कृष्णा माधवी कन्यकेति च ।
माया नारायणीशानी शारदेत्यंबिकेति च ॥ २.१२ ॥

गर्भसंकर्षणात् तं वै प्राहुः संकर्षणं भुवि ।
रामेति लोकरमणाद् बलभद्रं बलोच्छ्रयात् ॥ २.१३ ॥

---

2. 8. "தேவகியின் வயிற்றில் சேஷன் எனப்படும் என்னுடைய அம்சமான கர்ப்பம் இருக்கிறது. அதை எடுத்துக்கொண்டுபோய் ரோகிணியின் வயிற்றில் வைக்க வேண்டும்.

2. 9. "மங்களஸ்வரூபியே! அதன் பின்னர் நான் என் கலையின் பகுதிகள் எல்லாவற்றுடன் தேவகியின் புத்திரனாகத் தோன்றப்போகிறேன். நீயும் நந்தபத்தினியாகிய யசோதையிடம் தோன்றுவாயாக.

2. 10. "விரும்பப்படும் வரங்களுக்கெல்லாம் ஈசுவரியும், விரும்பப்படும் வரங்களையெல்லாம் அளிப்பவளும் ஆகிய உன்னை மனிதர்கள் தூபம் முதலிய உபசாரங்களுடனும் காணிக்கைகளுடனும் பூஜிக்கப் போகிறார்கள்.

2. 11-12. "பூவுலகில் மனிதர்கள் உனக்கு துர்க்கை, பத்ரகாளீ, விஜயா, வைஷ்ணவீ, குமுதை, சண்டிகை, கிருஷ்ணா, மாதவீ, கன்னிகை, மாயை, நாராயணி, ஈசானீ, சாரதா, அம்பிகை எனப் பெயர்களையும் (ஆராதனைக்கு) இடங்களையும் ஏற்படுத்துவார்கள்.

2. 13. "(தேவகியிடமிருந்து உன்னால்) ஆகர்ஷணம் செய்யப்பட்டமையால் (ரோகிணியிடம் பிறக்கப்போகும் ஆதிசேஷனாகிய) அவனைப் பூமியில் ஸங்கர்ஷணன் என்றும், உலகிற்கினியவனாகையால் ராமன் என்றும் பலம் மிகுந்தவனாதலால் பலபத்திரன் என்றும் கூறுவார்கள்."

---

2. 9. **அம்சபாகேன — அம்சை: சக்திபி: பஜதே அதி**திஷ்டதி ஸர்வான் ப்ரஹ்மா**தி**-ஸ்தம்**ப** பர்யந்தான் இத்யம்**சபாக**: । தேன பரிபூர்ண-ரூபேணேத்யர்த்த: । யத்வா **அம்சை**: ஜ்ஞானைச்வர்ய-**பலாதிபி**: । பாஜயதி யோஜயதி ஸ்வீயாநிதி ததா தேன । ஸர்வதா பரிபூர்ண-ரூபேணேதி **விலக்ஷி**தம் । க்ருஷ்ணஸ்து **பக**வான் ஸ்வயமித்யுக்தத்வாத் ॥—ஸ்ரீதரர்.

ஆகையால் இந்த இடத்தில் அம்சபாகத்துடன் என்ற வார்த்தைக்கு அம்சமாய் என்று அர்த்தம் கொள்வது சரியல்ல.

---

2. 6. **योगनिद्रां ।** 2. 7. **वसन्ति याः ।**

2. 10. **सर्वकर्मवरेश्वरीम् नानोपहारबलिभिः ।** 2. 13. **बलं बलवदुच्छ्रयात् ।** பா. பே.

सन्दिष्टैवं भगवता तथेत्योमिति तद्वचः ।
प्रतिगृह्य परिक्रम्य गां गता तत् तथाकरोत् ॥ २.१४ ॥

गर्भे प्रणीते देवक्या रोहिणीं योगनिद्रया ।
अहो विस्रंसितो गर्भ इति पौरा विचुक्रुशुः ॥ २.१५ ॥

भगवानपि विश्वात्मा भक्तानामभयंकरः ।
आविवेशांश-भागेन मन आनकदुन्दुभेः ॥ २.१६ ॥

स बिभ्रत् पौरुषं धाम भ्राजमानो यथा रविः ।
दुरासदोऽतिदुर्धर्षो भूतानां संबभूव ह ॥ २.१७ ॥

ततो जगन्मंगळ-मच्युतांशं समाहितं शूरसुतेन देवकी ।
दधार सर्वात्मक-मात्मभूतं काष्ठा यथाऽऽनन्दकरं मनस्तः ॥ २.१८ ॥

सा देवकी सर्वजगन्निवास-निवासभूता नितरां न रेजे ।
भोजेन्द्र गेहेऽग्निशिखेव रुद्धा सरस्वती ज्ञानखले यथा सती ॥ २.१९ ॥

---

2. 14. பகவானால் இவ்விதம் கட்டளையிடப்பட்ட (மாயா தேவியாகிய) அவள் 'அப்படியே ஆகட்டும்' என்று அவ்வார்த்தையை ஏற்று (பகவானை) வலம் வந்து பூமியிற் சென்று அதை அப்படியே செய்து முடித்தாள்.

2. 15. தேவகியிடமிருந்து ரோகிணியிடம் கர்ப்பம் யோக நித்திரையால் கொண்டு போகப்பட்டபின் பட்டணத்து மக்கள் 'ஐயோ! கர்ப்பம் கரைந்துவிட்டது' என்று பிரலாபித்தார்கள்.

2. 16. உலகின் உயிராகிய பகவானும் பக்தர்களின் பயத்தைப் போக்குபவ ராய்த் தமது அம்ச பாகத்தால் வசுதேவருடைய மனதில் ஆவிர்ப்பவித்தார்.

2. 17. பரமபுருஷருடைய தேஜஸ்ஸைத் தாங்கிய அவர் சூரியனைப்போல் பிரகா சிப்பவராய் எவராலும் அடக்கமுடியாதவராய் அமட்டமுடியாதவராய் விளங்கினார்.

2. 18. பின்னர் வசுதேவரால் தன்னிடம் சேர்ப்பிக்கப்பட்டதும், உலக மங்கள மாகியதும், உலகனைத்திற்கும் ஆன்மாவாகியதும், தனக்கும் ஆத்மாவாய்த் தன்னிடமே யிருப்பதும் ஆகிய அச்சுதனுடைய கலையைத் தேவகியானவள் உலகை மகிழ்விக்கும் சந்திர கலையைக் கீழ்த்திசை தரிப்பதுபோல் மனதில் தரித்தாள்.

2. 19. கம்ஸன் வீட்டில் அடைபட்ட பதிவிரதையான தேவகி உலகிற்கெல்லாம் உறைவிடமாகியவனுக்குத் தான் உறைவிடமாகிக் குடத்தில் வைத்த விளக்குப்போலும் ஞான வஞ்சகனிடத்தில் சேர்ந்த கல்விபோலும் காணப்பட்டாள்.

---

2. 16. **ஆவிவேச**—மனஸ்யாவிர்ப்பபூவ ஜீவானுமிவ ந **தாது-ஸம்பந்த** இத்யர்த்த:

2. 18. **அச்யுதாம்சம்**—ச்யுதிரஹிதா: அம்சா: ஐச்வர்யாதயோ யஸ்ய தம் । யத்வா அச்யுதஸ்ய **அம்ச** இவாம்ச: பக்தானுக்ரஹார்த்தம் பரிச்சின்னவபுரித்யர்த்த: । **ஆத்மபூதம்**—ஸ்வஸ்மின்னுதாவேவ ஸந்தம் மனஸ்த: மனஸைவ । **காஷ்டா**—ப்ராசீதிக். **ஆனந்த கரம்**—சந்த்ரம்

2. 19. **ஜ்ஞானகலே**—ஜ்ஞானவஞ்சகே ।

---

2. 17. **दुरासदः सुदुर्धर्षो ।** 2. 19. **नितरां विरेजे ।** பா. பே.

तां वीक्ष्य कंसः प्रभयाजितांतरां विरोचयंतीं भवनं शुचिस्मिताम् ।
आहैष मे प्राणहरो हरिर्गुहां ध्रुवं श्रितो यन्न पुरेयमीदृशी ॥ २.२० ॥

आसीनः संविशंस्तिष्ठन् भुंजानः पर्यटन् महीम् ।
चिन्तयानो हृषीकेश-मपश्यत् तन्मयं जगत् ॥ २.२४ ॥

ब्रह्मा भवश्च तत्रैत्य मुनिभि-र्नारदादिभिः ।
देवैः सानुचरैः साकं गीर्भि-र्वृषणमैडयन् ॥ २.२५ ॥

सत्यव्रतं सत्यपरं त्रिसत्यं सत्यस्य योनिं निहितं च सत्ये ।
सत्यस्य सत्य-मृत-सत्य-नेत्रं सत्यात्मकं त्वां शरणं प्रपन्नाः ॥ २.२६ ॥

---

2. 20. விஷ்ணுவைக் கர்ப்பத்தில் கொண்டவளும் முகம் மலர்ந்தவளும் வீட்டை ஒளிபெறச் செய்பவளுமாகிய அவளைக் கம்ஸன் கண்ணுற்றுக் கூறுவான்; 'என்னுயிரைக் கவரப்போகும் ஹரி இவள் கருவில் வந்திருப்பது நிச்சயம். ஏனெனில் இவள் இதற்குமுன் இப்படியிருக்கவில்லை'.

2. 24. உட்கார்ந்தாலும் படுத்தாலும் நின்றாலும் உண்டாலும் பூமியில் சஞ்சரித்தாலும் ஹ்ருஷீகேசனையே நினைப்பவனாய் உலகை அவன்மயமாகவே கண்டான்.

2. 25. பிரம்மாவும் சிவனும் நாரதர் முதலிய முனிவர்களுடனும் பரிவாரங்களுடன் கூடிய தேவர்களுடனும் அங்கு வந்து இஷ்ட சித்தியளிக்கும் பகவானை இனிய சொற்களால் துதித்தனர்.

2. 26. 'ஸத்தியவிரதரும், ஸத்தியத்தால் அடைதற்குரியவரும், முக்காலத்தும் ஸத்தியமாகியவரும், பிரபஞ்சத்திற்குப் பிறப்பிடமாகியவரும், பிரபஞ்சத்தில் மறைந்துறைபவரும், பிரபஞ்சத்தின் (நாமரூபத்திற்கப்பால் ஸத்-சித்-ஆனந்தமாய் உள்ள) ஸத்தியமாகியவரும், வாய்மையையும் உண்மையையும் கண்களாகக் கொண்டவரும், ஸத்தியமே வடிவாகியவரும் ஆகிய உம்மை நாங்கள் சரணடைகின்றோம்.

---

2. 24. **ஸம்விசன்—ச**யான: ।

2. 25. **வ்ருஷணம்**—காமவர்ஷிணம் । **ஐடயன்-**துஷ்டுவு: ।

2. 26. **ஸத்யவ்ரதம்**—ஸத்யம் வ்ரதம் ஸங்கல்போ யஸ்ய தம் ।
**ஸத்யபரம்**—ஸத்யம் பரம் ச்ரேஷ்டம் ப்ராப்தி-ஸாதனம் யஸ்மின் தம் ।
**த்ரிஸத்யம்**—த்ரிஷ்வபி காலேஷு ஸத்யம் ।

**ஸத்யஸ்ய யோனிம்**—ஸச்சப்தேன ப்ருதிவ்யப்-தேஜாம்ஸி । த்ய-**சப்தே**ன வாய்வாகாசௌ । ஏவம் ஸச்ச த்யஞ்ச ஸத்யம் பூதபஞ்சகம் தத் ஸத்யமித்-யாசக்ஷத இதி ச்ருதே: ॥ தஸ்ய யோனிம் காரணம் । ததா ஸத்யே தஸ்மின்னேவ நிஹிதம் அந்தர்யாமிதயா ஸ்திதம் । ஸத்யஸ்ய ஸத்யம் பாரமார்த்திகம் தந்நாசேப்யவசிஷ்யமாண ரூபம் ।

**ருதஸத்ய-நேத்ரம்**—'ஸத்யஞ்சஸமதர்சனம்ருதஞ்ச ஸூந்ருதாவாணீ கவிபி: பரிகீர்த்திதேதி' । தயோ: நேத்ரம் நயனஸாதனம் நேதாரம் ப்ரவர்த்தகமிதி : யாவத் ஏவம் ஸர்வப்ரகாரேண ஸத்யாத்மகம் ॥

---

2. 24. पर्यटन् पिबन् । 2. 25. देवाः सानुचराः । मुनयो नारदादयः ।

**एकायनोऽसौ द्विफलस्त्रिमूल-श्चतूरसः पंचशिफः षडात्मा ।**
**सप्तत्वगष्टविटपो नवाक्षो दशच्छदी द्विखगो ह्यादिवृक्षः ॥ २.२७ ॥**

**त्वय्यंबुजाक्षाखिल-सत्त्वधाम्नि समाधिनाऽऽवेशित-चेतसैके ।**
**त्वत्पादपोतेन महत्कृतेन कुर्वन्ति गोवत्सपदं भवाब्धिम् ॥ २.३० ॥**

**स्वयं समुत्तीर्य सुदुस्तरं द्युमन् भवार्णवं भीममदभ्रसौहृदा ।**
**भवत्पदांभोरुह-नाव-मत्र ते निधाय याताः सदनुग्रहो भवान् ॥ २.३१ ॥**

**येऽन्येऽरविन्दाक्ष-विमुक्तमानिन-स्त्वय्यस्त-भावा-दविशुद्ध-बुद्धयः ।**
**आरुह्य कृच्छ्रेण परं पदं ततः पतन्त्यधोऽनादृत-युष्मदंघ्रयः ॥ २.३२ ॥**

---

2. 27. '(இப்பிரபஞ்சமாகிய) ஆதிவிருக்ஷம் ஒரு இருப்பிடத்தையும் இரண்டு பழங்களையும், மூன்று வேர்களையும், நான்கு ரஸங்களையும், ஐந்து விழுதுகளையும், ஆறு உயிர்நிலைகளையும் ஏழு கோசங்களையும் எட்டுக் கிளைகளையும் ஒன்பது துவாரங்களையும் பத்து இலைகளையும் உடையதாய் (அதன்மேல் வீற்றிருக்கும்) இரண்டு பக்ஷிகளுடன் விளங்குகின்றது.

2. 30. 'தாமரைக்கண்ணா! உலகிற்கெல்லாம் உறைவிடமாகிய உம்மிடத்தில் ஸமாதியால் சித்தத்தை நிலைநிறுத்திய மகான்களாகிய சிலர் உமது திருவடியாகிய தெப்பத்தையே பெருந்துணையாய்க்கொண்டு பிறவிக்கடலைப் பசுங்கன்றின் குளம்படியாக்கி விடுகின்றனர்.

2. 31. 'ஸ்வயம்பிரகாசமானவரே! தாங்கள் ஸாதுக்களுக்கு அருள் புரிபவர். கருணைமிகுந்த மகான்கள் கடத்தற்கரிய பயங்கரமான பிறவிக் கடலைத் தங்கள் திருவடித் தாமரையாகிய தெப்பத்தால் கடந்து அதை இங்கு வைத்துவிட்டுப் போயிருக்கின்றனர்.

2. 32. 'தாமரைக்கண்ணா! வேறு சிலரோ எனின் தாங்கள் முக்தி எய்திவிட்டதாய் எண்ணங்கொண்டு உம்மிடம் மனதைச் செலுத்தாமையால் தூய்மையிழந்த புத்தியுடையவர்களாய் மிகுந்த சிரமப்பட்டு உயர்ந்த பதவிக்கு ஏறியும் உமது திருவடிகளை அநாதரவு செய்து கீழே விழ்கின்றனர்.

---

2. 27. **வ்ருக்ஷ** :—வ்ருச்ச்யத் இதி வ்ருக்ஷ: (வெட்டப்பட்டு அழிவதால் அது காரணப் பெயர்.)

**ஏகாயன** :—ஏகா ப்ரக்ருதி: அயனம் ஆச்ரயோ யஸ்ய ஸ:। **த்வே** ஸுகது:க்கே பலே। **த்ரயோ** குணா மூலானி। தர்மார்த்த-காம-மோக்ஷ **சத்வாரோ** ரஸா:।

**பஞ்சேந்த்ரியாணி** **சி**பா: (விழுதுகள்)।

**புபு**க்ஷா ச பிபாஸா ச ப்ராணஸ்ய மனஸ: ஸ்ம்ருதௌ। **சோக**மோஹௌ **சரீ**ரஸ்ய ஜராம்ருத்யு ஷடூர்மய: ஸ்வபாவா: யஸ்ய ஸ: **ஷடாத்மா**।

**ஸப்ததாதவ** :—(த்வக்-ருதிர - மாம்ஸ - மேதோ-மஜ்ஜா-ஸ்நாயவோ஽ஸ்தீனி) த்வசோ யஸ்ய ஸ:। பஞ்சபூதானி-மனோ-**புத்த்**யஹங்காராச் சேத்-**யஷ்டௌ** விடபா: (கிளைகள்)

**நவாக்ஷா** நவத்வாராணி அக்ஷீணி ச்சித்ராணி யஸ்ய ஸ:।

**தசப்ராணா** :—நாக - கூர்ம - க்ருகர - **தேவதத்த** - **த**னஞ்ஜய-ப்ராணா-பான- வ்யானோ-தான-ஸமானா: ச்சதா: பத்ராணி யஸ்ய ஸ:। **த்வௌ** ஜீவேச்வரௌ **ககௌ** யஸ்மின் ஸ: **த்விகக:**॥

**न तेऽभवस्येश भवस्य कारणं विना विनोदं बत तर्कयामहे ।**
**भवो निरोधः स्थितिरप्यविद्यया कृता यतस्त्वय्यभयाश्रयात्मनि ॥ २.३९ ॥**

**मत्स्याश्व-कच्छप-नृसिंह-वराह-हंस-राजन्य-विप्र-विबुधेषु कृतावतारः ।**
**त्वं पासि नस्त्रिभुवनं च यथाधुनेश भारं भुवो हर यदूत्तम**
**वंदनं ते ॥ २.४० ॥**

**दिष्ट्यांब ते कुक्षिगतः परः पुमा-नंशेन साक्षाद् भगवान् भवाय नः**
**मा भूद् भयं भोजपते-र्मुमूर्षो-र्गोप्ता यदूनां भविता तवात्मजः ॥ २.४१ ॥**

**श्रीशुक उवाच—**

**अथ सर्वगुणोपेतः कालः परम-शोभनः ।**
**यर्ह्येवाजनजन्मर्क्षं शान्तर्क्ष-ग्रहतारकम् ॥ ३.१ ॥**

**दिशः प्रसेदुर्गगनं निर्मलोडुगुणोदयम् ।**
**मही मङ्गलभूयिष्ठ-पुरग्रामव्रजाकरा ॥ ३.२ ॥**

---

2. 39. 'ஈசனே! பிறப்பில்லாத உமது பிறவிக்குக் காரணம் உம்முடைய லீலை என்பதைத் தவிர வேறு எதையும் நாங்கள் ஊகிக்க முடியவில்லை. அபயத்திற்கு ஆசிரயமானவரே! பிறப்பும் இறப்பும் இருப்பும் ஜீவாத்மாவிடம் கூட அவித்தையினுலேயே ஏற்படுவதால் இவை உம்மிடம் எங்ஙனம் பொருந்தும்?

2. 40. 'ஈசனே! உமக்கு நமஸ்காரம். மீனுகவும் குதிரையாகவும் ஆமையாகவும் நரசிங்கமாகவும் வராகமாகவும் ஹம்ஸமாகவும் அரசகுமாரனுகவும் பிராம்மணனுகவும் தேவனுகவும் தோன்றி எங்ஙனம் எங்களையும் மூவுலகையும் காப்பாற்றுகின்றீரோ அவ்வாறே இப்போதும் பூமியின் பாரத்தைப் போக்கியருளும். யது சிரேஷ்டரே உமக்கு வந்தனம்'. 'அம்மா! ஸாக்ஷாத் பரமபுருஷராகிய பகவானே எங்களுடைய க்ஷேமத்திற்காகத் தமது அம்சத்தால் அதிர்ஷ்டவசமாய் உமது வயிற்றையடைந்திருக்கிருர். உமது புத்திரராகிய அவர் யதுக்களின் ரக்ஷகராகப்போகிருர். சாகப்போகும் போஜராஜனுகிய கம்சனிடமிருந்து உமக்குப் பயம் இல்லாமலிருக்கட்டும்'.

ஸ்ரீ சுகர் கூறியது—

3. 1. (பகவானுடைய அவதார சமயம் நெருங்கியதும்) காலம் எல்லா நற்குணங்களும் பொருந்தி வெகு மங்களமாக விளங்கிற்று. பிரம்மாவின் ஜன்ம நக்ஷத்திரமான ரோகிணி உதயமாயிற்று. நக்ஷத்திரங்களும் கிரகங்களும் தாரகைகளும் சாந்தமாயிருந்தன.

3. 2. திசைகள் தெளிவாயிருந்தன. ஆகாயம் நிர்மலமாய் நக்ஷத்திரங்களுடன் பிரகாசித்தது. பட்டணங்களிலும் கிராமங்களிலும் இடைச்சேரிகளிலும் மங்களம் பொங்க பூமி விளங்கிற்று.

---

3. 1. அதேதி மங்களார்த்த:। யர்ஹி யதா ஸர்வகுணோபேத: காலோ **பபூவ** । **ததா தேவக்யாம் விஷ்ணு-ராவிராஸீதிதி**: **அ**ஷ்டம-ச்லோகேனுன்வய:। அஜனத் நாராயணத் ஜன்ம யஸ்ய ப்ரஜாபதேஸ்-தஸ்ய ருக்ஷம் ரோஹிணீ நக்ஷத்ரம் ।

---

2. 40. **तथाधुनेश ।**

नद्यः प्रसन्न-सलिला ह्रदा जलरुहश्रियः ।
द्विजालिकुलसंनाद-स्तबका वनराजयः ॥ ३.३ ॥

ववौ वायुः सुखस्पर्शः पुण्यगन्धवहः शुचिः ।
अग्नयश्च द्विजातीनां शान्ता-स्तत्र समिन्धत ॥ ३.४ ॥

मनांस्यासन् प्रसन्नानि साधूना-मसुरद्रुहाम् ।
जायमानेऽजने तस्मिन् नेदु-र्दुन्दुभयो दिवि ॥ ३.५ ॥

जगुः किन्नर-गन्धर्वा-स्तुष्टुवुः सिद्धचारणाः ।
विद्याधर्यश्च ननृतु-रप्सरोभिः समं तदा ॥ ३.६ ॥

मुमुचु-र्मुनयो देवाः सुमनांसि मुदान्विताः ।
मन्दं मन्दं जलधरा जगर्जु-रनुसागरम् ॥
निशीथे तम उद्भूते जायमाने जनार्दने ॥ ३.७ ॥

---

3. 3. நதிகளில் நீர் தெளிந்திருந்தது. நீர் நிலைகள் தாமரையால் அழகுபெற்றிருந்தன. வண்டுகளும் பக்ஷிகளும் கூடிப்பாடும் பூங்கொத்துக்கள் நிறைந்தனவாய்ச் சோலைகள் விளங்கின.

3. 4, காற்றுச் சுகமாகவும் சுகந்தமுடையதாகவும் சுத்தமாகவும் வீசிற்று துவிஜர்கள் பூஜிக்கும் அக்கினிகுண்டங்களில் சாந்தமாயிருந்த அக்கினிகள் ஜ்வலிக்கலாயின.

3. 5. அசுரர்களைப் பகைக்கும் சாதுக்களின் மனது நிர்மலமாயிற்று. பிறப்பில்லாதவன் பிறந்த அந்த வேளையில் வானுலகில் துந்துபி முழங்கிற்று.

3. 6. கின்னரர்களும் கந்தர்வர்களும் பாடினார்கள். சித்தர்களும் சாரணர்களும் துதித்தார்கள். வித்தியாதரஸ்திரீகளும் அப்ஸரஸுகளும் நர்த்தனம் செய்தார்கள்.

3. 7. இருள்சூழ்ந்த நடுநிசிப்போதில் ஜனார்த்தனர் அவதரிக்கையில் முனிவர்களும் தேவர்களும் அகமகிழ்ந்து மலர்மாரி பெய்தனர்; கடலருகில் மேகங்கள் மெள்ள மெள்ளச் சப்தித்தன.

---

3. 3. ஜலருஹாணும் ஸ்ரீ: **சோபா** ।

3. 4. ஒ. மது வாதா ருதாயதே । மது க்ஷரந்தி ஸிந்தவ: ।

ஒ. மது நமக்கு மது நமக்கு மது நமக்கு விண்ணெலாம்
மதுரமிக்க ஹரி நமக்கு மதுவெனக் கதித்தலால். —பாரதி.

3. 7. **நிசீதே தம உத்பூதே**—எல்லோருடைய உள்ளத்திலும் மறைந்துறைபவன் என்றோ ஒரு நாள் காட்சியளிப்பான். அதுவே கிருஷ்ணவதாரம். தேவகியாகிய ஒருத்தியிடம் ஓரிரவு பிறந்தது போதாது. இன்று நம்மிடம் அவதரிக்கவேண்டும். அன்று இரவில் அவதரித்தான். சிறையில் அவதரித்தான். இருளுந் துன்பமுங்கூட அவன் அவதரிக்க அனுகூலம் போலும். இருளேஇல்லாவிட்டால் ஒளியின் பெருமை தெரியாது.

---

3, 4. **समेधिताः** । பா. பே.

देवक्यां देवरूपिण्यां विष्णुः सर्वगुहाशयः ।
आविरासीद् यथा प्राच्यां दिशीन्दु-रिव पुष्कलः ॥ ३.८ ॥

तमद्भुतं बालक-मंबुजेक्षणं चतुर्भुजं शंखगदाद्युदायुधम् ।
श्रीवत्सलक्ष्मं गलशोभिकौस्तुभं पीतांबरं सान्द्रपयोदसौभगम् ॥ ३.९ ॥

महार्ह-वैदूर्य-किरीट-कुण्डल-त्विषा परिष्वक्त-सहस्रकुन्तलम् ।
उद्दाम-काञ्च्यंगद-कङ्कणादिभि-र्विरोचमानं वसुदेव ऐक्षत ॥ ३.१० ॥

स विस्मयोत्फुल्ल-विलोचनो हरिं सुतं विलोक्यानकदुन्दुभि-स्तदा ।
कृष्णावतारोत्सव-संभ्रमोऽस्पृशन् मुदा द्विजेभ्योऽयुत-माप्लुतो गवाम्
॥ ३.११ ॥

अथैन-मस्तौ-दवधार्य पूरुषं परं नताङ्गः कृतधीः कृतांजलिः ।
स्वरोचिषा भारत सूतिका-गृहं विरोचयन्तं गतभीः प्रभाववित् ॥ ३.१२ ॥

---

3. 8. எல்லோருடைய இருதய குகையிலும் வசிக்கும் விஷ்ணு தேவரூபியான தேவகியம்மாளிடம் தோன்றியது கிழக்குதிக்கின் வயிற்றில் சந்திரன் தோன்றியது போலிருந்தது.

3. 9-10. தாமரையொத்த கண்களையும் நான்கு புஜங்களையும் உடையவராய் சங்கு சக்கரம் கதை முதலிய ஆயுதங்களை ஏந்தியவராய் ஸ்ரீவத்ஸம் என்னும் அடையாளமுள்ள மார்பும் கௌஸ்துபமணி விளங்கும் கழுத்தும் உடையவராய், மஞ்சட் பட்டாடையணிந்து நீருண்ட மேகம்போல் அழகிய வண்ணத்தினராய் சிறந்த வயிரக் கிரீட குண்டலங்களின் கிரணங்களால் தழுவப்பெற்ற கூந்தலையுடையவராய் அரை ஞாண் தோள்வளை கங்கணம் முதலிய ஆபரணங்களுடன் கூடியவராகப் பிரகாசித்த அந்த அற்புதக் குழந்தையை வசுதேவர் கண்டார்.

3. 11. கிருஷ்ணவதார உத்ஸவத்தால் உத்ஸாஹத்தை யடைந்தவரும் ஆச்சரியத்தால் கண்கள் மலர்ந்தவருமான வசுதேவர் தனக்கு மகனாய் வந்த ஹரியைக் கண்டு மகிழ்ச்சி பொங்கப் பிராம்மணர்களுக்கு ஆயிரம் பசுக்களை மனதால் தானம் செய்தார்.

3. 12. பரதவம்சத்தரசே! பின்னர் பகவானுடைய பெருமையை அறிந்தவரும் தெளிந்த புத்தியுடையவருமான வசுதேவர் அவரைப் பரமபுருஷனென நிச்சயித்துப் பயத்தைவிட்டுக் கைகூப்பி உடல் வணங்கித் தனது காந்தியால் பிரசவ அறையைப் பிரகாசிப்பித்த அவரைத் துதிக்கலானார்.

---

3. 9. **லக்ஷ்ம**—லக்ஷணம் ।
3. 10. **த்விஷா**—காந்த்யா ।
1. 11. **அஸ்ப்ருசத்**-மனஸா தத்தவான் ।

---

3. 8. सर्वगुणाश्रयः ।
3. 9. शंख-गदाद्युदायुधम् । பா. பே.

नद्यः प्रसन्न-सलिला ह्रदा जलरुहश्रियः ।
द्विजालिकुलसंनाद-स्तबका वनराजयः ॥ ३.३ ॥

ववौ वायुः सुखस्पर्शः पुण्यगन्धवहः शुचिः ।
अग्नयश्च द्विजातीनां शान्ता-स्तत्र समिन्धत ॥ ३.४ ॥

मनांस्यासन् प्रसन्नानि साधूना-मसुरद्रुहाम् ।
जायमानेऽजने तस्मिन् नेदु-र्दुन्दुभयो दिवि ॥ ३.५ ॥

जगुः किन्नर-गन्धर्वा-स्तुष्टुवुः सिद्धचारणाः ।
विद्याधर्यश्च ननृतु-रप्सरोभिः समं तदा ॥ ३.६ ॥

मुमुचु-र्मुनयो देवाः सुमनांसि मुदान्विताः ।
मन्दं मन्दं जलधरा जगर्जु-रनुसागरम् ॥
निशीथे तम उद्भूते जायमाने जनार्दने ॥ ३.७ ॥

---

3. 3. நதிகளில் நீர் தெளிந்திருந்தது. நீர் நிலைகள் தாமரையால் அழகுபெற்றிருந்தன. வண்டுகளும் பக்ஷிகளும் கூடிப்பாடும் பூங்கொத்துக்கள் நிறைந்தனவாய்ச் சோலைகள் விளங்கின.

3. 4. காற்றுச் சுகமாகவும் சுகந்தமுடையதாகவும் சுத்தமாகவும் வீசிற்று துவிஜர்கள் பூஜிக்கும் அக்கினிகுண்டங்களில் சாந்தமாயிருந்த அக்கினிகள் ஜ்வலிக்கலாயின.

3. 5. அசுரர்களைப் பகைக்கும் சாதுக்களின் மனது நிர்மலமாயிற்று. பிறப்பில்லாதவன் பிறந்த அந்த வேளையில் வானுலகில் துந்துபி முழங்கிற்று.

3. 6. கின்னரர்களும் கந்தர்வர்களும் பாடினார்கள். சித்தர்களும் சாரணர்களும் துதித்தார்கள். வித்தியாதரஸ்திரீகளும் அப்ஸரஸுகளும் நர்த்தனம் செய்தார்கள்.

3. 7. இருள்சூழ்ந்த நடுநிசிப்போதில் ஜனார்த்தனர் அவதரிக்கையில் முனிவர்களும் தேவர்களும் அகமகிழ்ந்து மலர்மாரி பெய்தனர்; கடலருகில் மேகங்கள் மெள்ள மெள்ளச் சப்தித்தன.

---

3. 3. ஜலருஹாணாம் ஸ்ரீ: **சோபா** ।

3. 4. ஓ. மது வாதா ருதாயதே । மது க்ஷரந்தி ஸிந்தவ: ।
ஓ. மது நமக்கு மது நமக்கு மது நமக்கு விண்ணெலாம்
மதுரமிக்க ஹரி நமக்கு மதுவெனக் கதித்தலால். —பாரதி.

3. 7. **நிசீதே தம உத்பூதே**—எல்லோருடைய உள்ளத்திலும் மறைந்துறைபவன் என்றோ ஒரு நாள் காட்சியளிப்பான். அதுவே கிருஷ்ணாவதாரம். தேவகியாகிய ஒருத்தியிடம் ஓரிரவு பிறந்தது போதாது. இன்று நம்மிடம் அவதரிக்கவேண்டும். அன்று இரவில் அவதரித்தான். சிறையில் அவதரித்தான். இருளும் துன்பமுங்கூட அவன் அவதரிக்க அனுகூலம் போலும். இருளே இல்லாவிட்டால் ஒளியின் பெருமை தெரியாது.

---

3. 4. **समेधिताः** । பா. பே.

देवक्यां देवरूपिण्यां विष्णुः सर्वगुहाशयः ।
आविरासीद् यथा प्राच्यां दिशीन्दु-रिव पुष्कलः ॥ ३.८ ॥

तमद्भुतं बालक-मंबुजेक्षणं चतुर्भुजं शंखगदाद्युदायुधम् ।
श्रीवत्सलक्ष्मं गलशोभिकौस्तुभं पीतांबरं सान्द्रपयोदसौभगम् ॥ ३.९ ॥

महार्ह-वैदूर्य-किरीट-कुण्डल-त्विषा परिष्वक्त-सहस्रकुन्तलम् ।
उद्दाम-काञ्च्यंगद-कङ्कणादिभि-र्विरोचमानं वसुदेव ऐक्षत ॥ ३.१० ॥

स विस्मयोत्फुल्ल-विलोचनो हरिं सुतं विलोक्यानकदुन्दुभि-स्तदा ।
कृष्णावतारोत्सव-संभ्रमोऽस्पृशन् मुदा द्विजेभ्योऽयुत-माप्लुतो गवाम्
॥ ३.११ ॥

अथैन-मस्तौ-दवधार्य पूरुषं परं नताङ्गः कृतधीः कृतांजलिः ।
स्वरोचिषा भारत सूतिका-गृहं विरोचयन्तं गतभीः प्रभाववित् ॥ ३.१२ ॥

---

3. 8. எல்லோருடைய இருதய குகையிலும் வசிக்கும் விஷ்ணு தேவரூபியான தேவகியம்மாளிடம் தோன்றியது கிழக்குதிக்கின் வயிற்றில் சந்திரன் தோன்றியது போலிருந்தது.

3. 9-10. தாமரையொத்த கண்களையும் நான்கு புஜங்களையும் உடையவராய் சங்கு சக்கரம் கதை முதலிய ஆயுதங்களை ஏந்தியவராய் ஸ்ரீவத்ஸம் என்னும் அடையாளமுள்ள மார்பும் கௌஸ்துபமணி விளங்கும் கழுத்தும் உடையவராய், மஞ்சட் பட்டாடையணிந்து நீருண்ட மேகம்போல் அழகிய வண்ணத்தினராய் சிறந்த வயிரக் கிரீட குண்டலங்களின் கிரணங்களால் தழுவப்பெற்ற கூந்தலையுடையவராய் அரை ஞாண் தோள்வளை கங்கணம் முதலிய ஆபரணங்களுடன் கூடியவராகப் பிரகாசித்த அந்த அற்புதக் குழந்தையை வசுதேவர் கண்டார்.

3. 11. கிருஷ்ணவதார உத்ஸவத்தால் உத்ஸாஹத்தை யடைந்தவரும் ஆச்சரி யத்தால் கண்கள் மலர்ந்தவருமான வசுதேவர் தனக்கு மகனாய் வந்த ஹரியைக் கண்டு மகிழ்ச்சி பொங்கப் பிராம்மணர்களுக்கு ஆயிரம் பசுக்களை மனதால் தானம் செய்தார்.

3. 12. பரதவம்சத்தரசே! பின்னர் பகவானுடைய பெருமையை அறிந்தவரும் தெளிந்த புத்தியுடையவருமான வசுதேவர் அவரைப் பரமபுருஷனென நிச்சயித்துப் பயத்தைவிட்டுக் கைகூப்பி உடல் வணங்கித் தனது காந்தியால் பிரசவ அறையைப் பிரகாசிப்பித்த அவரைத் துதிக்கலானார்.

---

3. 9. **லக்ஷ்ம**—லக்ஷணம் ।
3. 10. **த்விஷா**—காந்த்யா ।
1. 11. **அஸ்ப்ருசத்**-மனஸா தத்தவான் ।

---

3. 8. **सर्वगुणाश्रयः ।**
3. 9. **शंख-गदाद्युदायुधम् ।**  பா. பே.

वसुदेव उवाच—

विदितोऽसि भवान् साक्षात्पुरुषः प्रकृतेः परः ।
केवलानुभवानन्द-स्वरूपः सर्वबुद्धिदृक् ॥ ३.१३ ॥

स एव स्वप्रकृत्येदं सृष्ट्वाग्रे त्रिगुणात्मकम् ।
तदनु त्वं ह्यप्रविष्टः प्रविष्ट इव भाव्यसे ॥ ४.१४ ॥

अयं त्वसभ्यस्तव जन्म नौ गृहे
श्रुत्वाग्रजांस्ते न्यवधीत् सुरेश्वर ।
स तेऽवतारं पुरुषैः समर्पितं*
श्रुत्वाधुनैवाभिसरत्युदायुधः ॥ ३.२२ ॥

श्रीशुक उवाच—

अथैन-मात्मज वीक्ष्य महापुरुषलक्षणम् ।
देवकी तमुपाधावत् कंसाद् भीता शुचिस्मिता ॥ ३.२३ ॥

---

வஸுதேவர் கூறியது—

3. 13. 'நீர் கேவல அனுபவ ஆனந்த ஸ்வரூபியாகவும், எல்லா புத்திகளிலும் ஸாக்ஷியாகவும் பிரகிருதிக்கு அப்பாற்பட்டவராகவும் உள்ள புருஷர் என்பதை நான் நேரில் காண்கின்றேன்.

3. 14. 'நீர் முக்குணவடிவான இவ்வுலகை உமது பிருகிருதியால் சிருஷ்டித்து அதனுடன் கூடியிருப்பதால் அதனுட் புகாதவராயினும் புகுந்தவரெனக் கருதப் படுகிறீர்.

3. 22. 'தேவர்கோனே! நீர் எனது வீட்டில் அவதரிக்கப்போகிறீர் என்பதைக் கேள்வியுற்று துஷ்டனான இந்தக் கம்ஸன் உமக்கு முன் தோன்றியவர்களைக் கொன்றான். அவன் தன் மனிதர்கள் மூலமாக உம்முடைய அவதாரத்தைப்பற்றிக் கேட்டு இப்போதே ஆயுதபாணியாய் ஓடிவரப்போகிறான்'.

ஸ்ரீ சுகர் கூறியது—

3. 23. மகாபுருஷ லக்ஷணம் பொருந்திய தனது குமாரனைப் பார்த்து மகிழ்ச்சியால் முகம் மலர்ந்தவளாயினும் கம்ஸனிடம் பயத்தால் தேவகி பின்வருமாறு துதித்தாள்.

---

3. 22. அஸப்ய :—:கல । ஸமர்ப்பிதம்—கதிதம் ।
3. 23. உபாதாவத்—அஸ்தௌத் ।

---

பா.பே.

3. 22. हतवान् सुरेश्वर ।

देवक्युवाच—

रूपं यत्तत् प्राहुरव्यक्तमाद्यं ब्रह्मज्योति-र्निर्गुणं निर्विकारम् ।
सत्तामात्रं निर्विशेषं निरीहं स त्वं साक्षाद् विष्णु-रध्यात्म-दीपः ॥ ३.२४ ॥

नष्टे लोके द्विपरार्धावसाने महाभूतेष्वादि-भूतं गतेषु ।
व्यक्तेऽव्यक्तं कालवेगेन याते भवानेकः शिष्यते शेषसंज्ञः ॥ ३.२५ ॥

स त्वं घोरा-दुग्रसेनात्मजान्न-स्त्राहि त्रस्तान् भृत्यवित्रासहासि ।
रूपं चेदं पौरुषं ध्यानधिष्ण्यं मा प्रत्यक्षं मांसदृशां कृषीष्ठाः ॥ ३.२८ ॥

जन्म ते मय्यसौ पापो मा विद्यान्मधुसूदन ।
समुद्विजे भवद्धेतोः कंसा-दहमधीरधीः ॥ ३.२९ ॥

उपसंहर विश्वात्मन्नदो रूप-मलौकिकम् ।
शङ्खचक्रगदापद्म-श्रिया जुष्टं चतुर्भुजम् ॥ ३.३० ॥

---

தேவகி கூறியது—

3. 24. 'எந்த ரூபத்தை அவ்யக்தமென்றும் ஆதியென்றும் பிரம்மமென்றும் ஜோதியென்றும் நிர்க்குணமென்றும் நிர்விகாரமென்றும் நிர்விசேஷமென்றும், இச்சை யற்றதென்றும் என்றும் உள்ளதென்றும் கூறுகின்றனரோ அது நீரே. அத்தியாத்ம தீபமாக அந்த விஷ்ணுவாகிய நீரே இப்போது என் கண்முன் விளங்குகிறீர்.

3. 25. 'இரண்டு பரார்த்த முடிவில் உலகம் முடிவுற்று, மகாபூதங்கள் ஸூக்ஷ்ம பூதங்களில் ஒடுங்கி, இப்பிரபஞ்சம் அவ்வியக்தத்தில் கால வேகத்தால் புகும்போது தாங்கள் ஒருவரே சேஷர் என்ற பெயருடன் எஞ்சி நிற்கிறீர்.

3. 28. 'அப்படிப்பட்ட நீர் அடியார்களின் பயத்தைப் போக்குபவர். உக்கிர ஸேனரின் குமாரனை கொடிய கம்ஸனிடம் பயமடைந்திருக்கும் எங்களைக் காத்தருளும். தியானத்திற்குரிய இந்த மகாபுருஷ ரூபத்தை ஊனக் கண்படைத் தோர்க்குப் பிரத்தியக்ஷமாய்க் காட்டவேண்டாம்.

3. 29. 'மதுஸூதனா! நீர் என்னிடம் பிறந்ததை இந்தப் பாவி அறியவேண்டாம். தைரியமில்லாத நான் உம்மைக் குறித்துக் கம்ஸனிடம் மிகவும் பயப்படுகிறேன்.

3. 30. 'விசுவ ரூபியே! சங்கம் சக்கரம் கதை பத்மம் ஸ்ரீவத்ஸம் முதலியவற் றுடனும் நான்கு புஜங்களுடனும் கூடிய இந்த அப்பிராகிருத ஸ்வரூபத்தை மறைத் தருளும்.

---

3. 24. ஒ. நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச் சுத்தமு மாய்ச் சமீபமுமாய்த் துரிய நிறை சுடராய் எல்லாம் வைத்திருந்த தாரகமாய் ஆனந்தமயமாகி மனவாக்கெட்டாச் சித்துருவாய் நின்ற வொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தை செய்வாம். —தாயுமானவர்,

அத்யாத்மதீப :—புத்த்யாதி-கார்யகரண-ஸங்காத-ப்ரகாசக: |

विश्वं यदेतत् स्वतनौ निशान्ते यथावकाशं पुरुषः परो भवान् ।
बिभर्षि सोऽयं मम गर्भगोऽभूदहो नृलोकस्य विडंबनं हि तत् ॥ ३.३१ ॥

श्री भगवानुवाच—

त्वमेव पूर्वसर्गेऽभूः पृश्निः स्वायंभुवे सति ।
तदायं सुतपा नाम प्रजापति-रकल्मषः ॥ ३.३२ ॥

प्रादुरासं वरदराड् युवयोः कामदित्सया ।
व्रियतां वर इत्युक्ते मादृशो वां वृतः सुतः ॥ ३.३८ ॥

अजुष्ट-ग्राम्य-विषया-वनपत्यौ च दंपती ।
न वव्राथेऽपवर्गं मे मोहितौ मम मायया ॥ ३.३९ ॥

गते मयि युवां लब्ध्वा वरं मत्सदृशं सुतम् ।
ग्राम्यान् भोगानभुंजाथां युवां प्राप्तमनोरथौ ॥ ३.४० ॥

अदृष्ट्वान्यतमं लोके शीलौदार्यगुणैः समम् ।
अहं सुतो वामभवं पृश्निगर्भ इति श्रुतः ॥ ३.४१ ॥

---

3 31. 'பிரளய காலத்தில் எல்லா உலகங்களையும் விசாலமாக இடமளித்து எந்த உமது உருவத்தில் பரமபுருஷராகிய நீர் தாங்குகிறீரோ அந்த உருவம் இந்த மானிட உலகில் என் கருவில் தோன்றியது வெகு ஆச்சரியம்'.

ஸ்ரீ பகவான் கூறியது—

3. 32. 'முன் கல்பத்தில் ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் நீ ப்ருச்னி என்பவளாக இருந்தாய். அப்போது இவர் (வசுதேவர்) ஸுதபஸ் என்ற பிரஜாபதியாகக் கல்மஷ மற்றவராக இருந்தார்.

3. 38. வரமளிப்பவர்களிற் சிறந்த நான் உங்களுடைய மனோரதத்தையளிக்க விரும்பி உங்கள் முன் தோன்றினேன். "வேண்டிய வரத்தைக் கேட்கலாம்" என்று கூறியபோது என்னைப்போன்ற குமாரன் வேண்டுமென்று கேட்டுக் கொண்டீர்கள்.

3. 39. 'சிற்றின்பத்தை யனுபவியாதவர்களாகவும் குழந்தையில்லாதவர்களாக வும் இருந்த தம்பதிகளாகிய நீங்கள் எனது மாயையில் மயங்கி மோக்ஷத்தைக் கேட்க வில்லை.

3. 40. 'எனக்குச் சமமான புத்திரப் பேற்றை வரமாகப் பெற்ற நீங்கள் நான் சென்றபின் சிற்றின்ப போகங்களை யனுபவித்தீர்கள்.

3. 41. 'உலகில் சீலத்திலும் உதாரத்திலும் குணத்திலும் எனக்குச் சமமாக வேறெவரையும் காணமல் நானே ப்ருச்னிகர்ப்பன் என்ற பிரசித்தமான பெயருடன் உங்களுக்குப் புத்திரனுயவதரித்தேன்.

---

3. 31. ஒ. விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்திலடக்கி வெறு
வெளியாய் ஞானக் கண்ணுைக் கண்டவன்பர்
கண்ணூடே ஆனந்தக் கடலாய் வேறென்
றெண்ணாத படிக்கிரங்கித் தானுகச் செய்தருளும்
இறையே யுன்றன் தண்ணருஞ் சாந்த அருளை நினைந்து
கரமலர்கள் தலைமேற் கொள்வாம். —தாயுமானவர்.

ஒ. பெண்டிர் வாழ்வார் நின்னெப்பாரைப்
பெறுது மென்னு மாசையாலே. —திவ்யப்ரபந்தம்.

तयोर्वां पुनरेवाहमदित्यामास कश्यपात् ।
उपेन्द्र इति विख्यातो वामनत्वाच्च वामनः ॥ ३.४२ ॥

तृतीयेऽस्मिन् भवेऽहं वै तेनैव वपुषाथ वाम् ।
जातो भूयस्तयोरेव सत्यं मे व्याहृतं सति ॥ ३.४३ ॥

एतद् वां दर्शितं रूपं प्राग्जन्म-स्मरणाय मे ।
नान्यथा मद्भवं ज्ञानं मर्त्य-लिंगेन जायते ॥ ३.४४ ॥

युवां मां पुत्रभावेन ब्रह्मभावेन चासकृत् ।
चिन्तयन्तौ कृतस्नेहौ यास्येथे मद्गतिं पराम् ॥ ३.४५ ॥

यदि कंसाद्बिभेषि त्वं तर्हि मां गोकुलं नय ।
यशोदायाश्च तां कन्यां मन्मायामानय द्रुतम् ।
स्वयं स्युर्विवृता वारो यमुना च सुदुस्तरा ॥ ३.४६ ॥

श्रीशुक उवाच—
इत्युक्त्वासीद्धरिस्तूष्णीं भगवानात्ममायया ।
पित्रोः संपश्यतोः सद्यो बभूव प्राकृतः शिशुः ॥ ३.४७ ॥

---

3. 42. 'பின் அதிதியாகவும் கசியபராகவும் பிறந்த உங்களுக்கு மீண்டும் நான் பிரசித்திபெற்ற உபேந்திரனுக அவதரித்தேன். குட்டையாயிருந்ததால் வாமனன் என்ற பெயரும் ஏற்பட்டது.

3. 43. 'தாயே! இந்த மூன்ருவது பிறவியில் அதே திவ்ய ரூபத்தோடு நான் மீண்டும் அப்படிப்பட்ட உங்களுக்குப் பிறந்து எனது சொல்லைச் சத்தியமாக்கி விட்டேன்.

3. 44. 'உங்களுக்கு இந்த திவ்ய ரூபத்தைக் காட்டியது பூர்வ ஜன்மத்தை ஞாபகப்படுத்துவதற்காகவே. நானே தோன்றியுள்ளேன் என்ற ஞானம் மனித உருவில் தோன்றியிருந்தால் ஏற்பட்டிருக்காது.

3. 45. 'நீங்கள் அன்புடன் என்னைப் புத்திரனுகவும் பிரம்மமாகவும் அடிக்கடி சிந்தித்து அதனுல் எனது பரமகதியை அடையப் போகிறீர்கள்.

3. 46. 'நீங்கள் கம்ஸனிடம் பயப்பட்டால் என்னைக் கோகுலம் கொண்டுபோய்ச் சேருங்கள். அங்கு யசோதைக்குப் பிறந்திருக்கும் பெண்ணுகிய எனது யோக மாயையை விரைவில் கொண்டுவாருங்கள். கதவுகள் தாமாகவே திறந்துகொள்ளும். கடக்கமுடியாத யமுனையும் வழிவிடும்'.

ஸ்ரீ சுகர் கூறியது—

3. 47. இங்ஙனம் கூறி பகவான் ஹரி சற்று மௌனமாயிருந்துவிட்டுத் தாய் தந்தையர் பார்த்துக்கொண்டிருக்கும்போதே சாதாரணக் குழந்தையாகிவிட்டார்.

---

3. 43. वपुषाऽनघे । பா. பே.

ततश्च शौरि-र्भगवत्प्रचोदितः सुतं समादाय स सूतिकागृहात् ।
यदा बहिर्गन्तु-मियेष तर्ह्यजा या योगमायाजनि नन्दजायया ॥ ३.४८ ॥

तया हृतप्रत्यय-सर्ववृत्तिषु द्वाःस्थेषु पौरेष्वपि शायितेष्वथ ।
द्वारस्तु सर्वाः पिहिता दुरत्यया बृहत्कपाटायस-कीलश्रृंखलैः ॥ ३.४९ ॥

ताः कृष्णवाहे वसुदेव आगते स्वयं व्यवर्यन्त यथा तमो रवेः ।
ववर्ष पर्जन्य उपांशुगर्जितः शेषोऽन्वगाद् वारि निवारयन् फणैः ॥ ३.५० ॥

मघोनि वर्षत्यसकृद् यमानुजा गंभीरतोयौघजवोर्मि-फेनिला ।
भयानकावर्त-शताकुला नदी मार्गं ददौ सिन्धुरिव श्रियः पतेः ॥ ३.५१ ॥

नन्दव्रजं शौरिरुपेत्य तत्र तान् गोपान् प्रसुप्ता-नुपलभ्य निद्रया ।
सुतं यशोदा-शयने निधाय तत् सुतामुपादाय पुनर्गृहानगात् ॥ ३.५२ ॥

---

3. 48. பகவானால் ஏவப்பட்ட வசுதேவர் பிரசவ அறையிலிருந்து பிள்ளையை எடுத்துக்கொண்டு எப்போது புறப்பட்டாரோ அதே சமயத்தில் பிறப்பில்லாத யோக மாயை நந்தகோபர் மனைவியிடம் பிறந்தாள்.

3. 49-50. அந்த யோகமாயையால் துவாரபாலகர்களெல்லாம் இந்திரிய சக்திகளை இழந்து நிற்கவும் நகரத்தோரெல்லாம் உறங்கிக் கொண்டிருக்கவும், வஸுதேவர் கிருஷ்ணனை எடுத்துக்கொண்டுவரவே இரும்புக் கீல்களும் சங்கிலிகளும் கொண்டு பூட்டப்பட்டிருந்த வாயில்களெல்லாம் சூர்யனைக்கண்ட இருள் விலகுவதுபோல் தாமே திறந்துகொண்டன. மேகம் மெதுவான இடியுடன் மழை பொழிந்தது. ஆதிசேஷன் வழியில் குழந்தையின்மேல் மழைத்துளி விழாவண்ணம் படமெடுத்து மறைத்துக் கொண்டு சென்றார்.

3. 51. இப்படி மேகம் அடிக்கடி பொழிகையில் அலைகளுடனும் நுரைகளுடனும் பயங்கரமான சுழல்களுடனும் பெருக்கெடுத்துக் கம்பீரமாக ஓடிய யமுனை ஸ்ரீராம னுக்குச் சமுத்திரம் வழிவிட்டதுபோல் வழிவிட்டது.

3. 52. வசுதேவர் நந்த கோகுலத்தையடைந்து அங்கு கோகுலத்து மக்க ளெல்லாம் நித்திரையிலாழ்ந்திருக்கக்கண்டு, தன் மகனை யசோதையின் படுக்கையில் விட்டுவிட்டு, அவளுடைய பெண்ணை எடுத்துக்கொண்டு மீண்டும் தன் வீடு வந்தார்.

---

3. 50. ஒ. (பித்யதே ஹ்ருதயக்ரந்திச் சித்யந்தே ஸர்வ-ஸம்சயா: | க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே ||) அந்தப்பராபரவஸ்து பார்க்கப்பட்டதும் இவனுடைய இருதய முடிச்சு அவிழ்கிறது, சந்தேகங்களெல்லாச் ஒழிகின்றன. கருமங்க ளெல்லாம் நாசமடைகின்றன. —மு. உப. 2. 2. 9.

**சேஷோ஽ன்வகாத்** | ஒ. நிவாஸ சய்யாஸன பாதுகாம்சுகோபதான - வர்ஷாதப வாரணதிபி: | சரீரபேதைஸ்தவ சேஷதாங்கதைர்-யதோசிதம் சேஷ இதீர்யதே ஜனை: ||

ஒ. சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கரவு. —பொய்கையாழ்வார்.

---

3. 50. **स्वयं विशीर्यन्त** 3. 52. **शिशुं यशोदा-शयने** । பா. பே.

देवक्याः शयने न्यस्य वसुदेवोऽथ दारिकाम् ।
प्रतिमुच्य पदो-र्लोह-मास्ते पूर्ववदावृतः ॥ ३.५३ ॥

यशोदा नन्दपत्नी च जातं परमबुध्यत ।
न तल्लिंगं परिश्रान्ता निद्रयापगतस्मृतिः ॥ ३.५४ ॥

बहिरन्तः पुरद्वारः सर्वाः पूर्ववदावृताः ।
ततो बालध्वनिं श्रुत्वा गृहपालाः समुत्थिताः ॥ ४.१ ॥

ते तु तूर्ण-मुपव्रज्य देवक्या गर्भजन्म तत् ।
आचख्यु-र्भोजराजाय यदुद्विग्नः प्रतीक्षते ॥ ४.२ ॥

स तल्पात्तूर्ण-मुत्थाय कालोऽयमिति विह्वलः ।
सूतीगृहमगात्तूर्णं प्रस्खलन् मुक्तमूर्धजः ॥ ४.३ ॥

तमाह भ्रातरं देवी कृपणाऽकरुणं सती ।
स्नुषेयं तव कल्याणी स्त्रियं मा हन्तुमर्हसि ॥ ४.४ ॥

बहवो हिंसिता भ्रातः शिशवः पावकोपमाः ।
त्वया दैवनिसृष्टेन पुत्रिकैका प्रदीयताम् ॥ ४.५ ॥

---

3. 53. தேவகியின் படுக்கையில் அக் குழந்தையைக் கிடத்திவிட்டு வசுதேவர் முன்போல் கால்களில் விலங்கு ஏறியவராக ஆனார்.

3. 54. கோகுலத்தில் களைப்பு மேலிட்டு உறக்கத்திலாழ்ந்து நினைவிழந்து கிடந்த நந்தபத்தினியாகிய யசோதை தனக்குக் குழந்தை பிறந்ததென்று மட்டும் உணர்ந்திருந் தாளேயொழிய அது ஆணா பெண்ணா என்று உணரவில்லை.

4. 1. (மதுராபுரியில்) வெளியும் உள்ளும் எல்லாக் கதவுகளும் முன்போல் மூடிக் கொண்டன. பின்பு குழந்தையின் குரலைக் கேட்டு வீட்டுக் காவற்காரர்கள் விழித்து எழுந்தனர்.

4. 2. அவர்கள் விரைவில் போஜ ராஜனாகிய கம்ஸனிடம் சென்று எந்தக் குழந் தையின் பிறப்பால் தனக்கு விபத்தை எதிர்பார்த்திருந்தானோ அந்தக் குழந்தை தேவகிக்குப் பிறந்துவிட்டதாய்க் கூறினார்கள்.

4. 3. அவன் படுக்கைவிட்டு விரைந்தெழுந்து படபடப்புடன் 'இதுதான் சமயம்' என்று சொல்லிக்கொண்டு கால்தடுக்கத் தலைவிரி கோலத்துடன் பிரசவ அறையை அடைந்தான்.

4. 4. கருணையற்ற அச்சகோதரனை நோக்கி மனம் நொந்தவளான தேவகி கூறுவாள்; 'இவள் உன் மருமகள்; மங்களம் மிக்கவள். இப்பெண்ணை நீ கொல்வது தகாது.

4. 5. 'சோதரா! அக்னிபோல் ஜ்வலிக்கும் குழந்தைகள் பலர் விதியின் ஏவுதலால் உம்மால் கொல்லப்பட்டனர். இந்த ஒரு பெண்ணையாவது எனக்கு அளியுங்கள்'.

---

3. 53. ப்ரதிமுச்ய—பத்வா ।

---

4. 4. तव कल्याण । 4. 5. हिंसिताङ्ग । பா. பே.

नन्वहं ते ह्यवरजा दीना हतसुता प्रभो ।
दातुमर्हसि मन्दाया अङ्गेमां चरमां प्रजाम् ॥ ४.६ ॥

उपगुह्यात्मजा-मेवं रुदन्त्या दीनदीनवत् ।
याचित-स्तां विनिर्भर्त्स्य हस्तादाचिच्छिदे खलः ॥ ४.७ ॥

तां गृहीत्वा चरणयोर्जातमात्रां स्वसुः सुताम् ।
अपोथयच्छिलापृष्ठे स्वार्थोन्मूलित-सौहृदः ॥ ४.८ ॥

सा तद्धस्तात् समुत्पत्य सद्यो देव्यंबरं गता ।
अदृश्यतानुजा विष्णोः सायुधाष्ट-महाभुजा ॥ ४.९ ॥

दिव्यस्रगंबरालेप-रत्नाभरण-भूषिता ।
धनुः शूलेषु-चर्मासि-शङ्खचक्र-गदाधरा ॥ ४.१० ॥

सिद्ध-चारणगन्धर्वै-रप्सरः-किन्नरोरगैः ।
उपाहृतोरुबलिभिः स्तूयमानेद-मब्रवीत् ॥ ४.११ ॥

---

4. 6. 'பிரபுவே; பிரியமானவரே! குழந்தைகளைப் பறிகொடுத்து வாடி நிற்கும் நான் உங்கள் சகோதரியல்லவா? பாக்கியங்குறைந்த எனக்கு இந்தக் கடைசிக் குழந்தையையாவது கொடுத்தருளும்'.

4. 7. இவ்வாறு கூறிக் குழந்தையை மறைத்துக்கொண்டு தீனக் குரலில் பிரலாபித்து யாசிக்கும் அவளை அதட்டி அவள் கையிலிருந்து அந்த துஷ்டன் அக் குழந்தையைப் பிடுங்கிக் கொண்டான்.

4. 8. சுயநலத்தால் ஈரமற்ற நெஞ்சனாகிய அவன் தனது சகோதரியின் பெண்ணாகிய அப்பச்சைக் குழந்தையைக் காலைப்பிடித்துத் தூக்கிக் கல்தரையின்மேல் அடித்தான்.

4. 9. அக்குழந்தை அவன் கையிலிருந்து மேலே கிளம்பி அப்போதே ஆகாயத்தையடைந்து விஷ்ணுவின் தங்கையாகிய அம்பிகையாக ஆயுதங்களையேந்திய எட்டுக் கைகளுடன் காட்சியளித்தாள்.

4. 10. திவ்வியமான மாலை வஸ்திரம் சந்தனம் இரத்தின ஆபரணங்கள் முதலியவற்றையணிந்து, வில், சூலம், பாணம், கேடயம், கத்தி, சங்கம், சக்கரம், கதை இவற்றைத் தாங்கியவளாய் விளங்கினாள்.

4. 11. அப்போது சித்தர், சாரணர், கந்தர்வர், அப்ஸரஸ்ஸுகள், கிந்நரர், நாகர் முதலியவர்களால் காணிக்கைகளுடன் புடைசூழ்ந்து துதிக்கப் பெற்ற தேவியானவள் பின்வருமாறு கூறலானாள்.

---

4. 6. चरमप्रजाम् । பா. பே.

किं मया हतया मन्द जातः खलु तवान्तकृत्।
यत्र क्व वा पूर्वशत्रु-र्मा हिंसीः कृपणान् वृथा ॥ ४.१२ ॥

इति प्रभाष्य तं देवी माया भगवती भुवि।
बहुनाम-निकेतेषु बहुनामा बभूव ह ॥ ४.१३ ॥

तयाभिहित-माकर्ण्य कंसः परमविस्मितः।
देवकीं वसुदेवं च विमुच्य प्रश्रितोऽब्रवीत् ॥ ४.१४ ॥

अहो भगिन्यहो भाम मया वां बत पाप्मना।
पुरुषाद इवापत्यं बहवो हिंसिताः सुताः ॥ ४.१५ ॥

स त्वहं त्यक्तकारुण्य-स्त्यक्तज्ञाति-सुहृत् खलः।
कान्लोकान् वै गमिष्यामि ब्रह्महेव मृतः श्वसन् ॥ ४.१६ ॥

दैवमप्यनृतं वक्ति न मर्त्या एव केवलम्।
यद्विश्रंभादहं पापः स्वसुर्निहतवाञ्छिशून् ॥ ४.१७ ॥

---

4. 12. 'மூடா! என்னைக் கொல்லுவதால் உனக்காவது என்ன? உனது பூர்வ சத்துரு உன்னைக் கொல்லுவதற்காக எங்கேயோ பிறந்திருக்கிறான். வீணாக ஏழைகளை இம்சியாதே'.

4. 13. பகவதி யோகமாயாதேவி அவனிடம் இவ்வாறு கூறிவிட்டு, பூமண்டலத்தில் பெயர் பெற்ற பல க்ஷேத்திரங்களில் பல பெயர் பூண்டு விளங்குபவளானாள்.

4. 14. கம்ஸன் அவள் கூறியதைக் கேட்டு வெகு ஆச்சரியமடைந்து, தேவகியையும் வசுதேவரையும் விடுவித்து அவர்களை வணங்கிப் பின்வருமாறு கூறினான்.

4. 15. 'ஐயோ, தங்காய்! தங்கையின் கணவரே! உங்களுக்குப் பிறந்த புத்திரர்கள் பலர் அரக்கனுக்கொப்பான பாவியாகிய என்னால் கொல்லப்பட்டார்களே!

4. 16. 'கருணையிழந்தவனும், உற்றாருறவினரைக் கைவிட்டவனும் கொடியவனும் பிரம்மஹத்தி செய்தவனுக்கொப்பானவனும் மூச்சுவிடும் பிணம் போன்றவனுமான நான் எந்த உலகங்களை யடையப்போகின்றேனோ.

4. 17, 'தெய்வமும் பொய் பேசுகின்றது, மனிதர்கள் மட்டுமன்று. அதை நம்பியல்லவா பாவியாகிய நான் சகோதரியின் குழந்தைகளைக் கொன்றவன் ஆயினேன்.

---

4. 12. ஒ. ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனா யொளித்து வளரத்
தருக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! —திருப்பாவை.

4. 13. ஒ. துர்க்கேதி பத்ரகாளீதி விஜயா வைஷ்ணவீதி ச |
குமுதா சண்டிகா க்ருஷ்ணா மாதவீ கன்யகேதி ச ||
மாயா நாராயணீ சேசானா சாரதேத் யம்பிகேதி ச ||
—பாக. 10. 2. 11-12.

---

4. 12. यत्र कचित्।    4. 13. एवं प्रभाष्य।
4. 15. अहो भाव।    பா. பே.

क्षमध्वं मम दौरात्म्यं साधवो दीनवत्सलाः ।
इत्युक्त्वाश्रुमुखः पादौ श्यालः स्वस्रोरथाग्रहीत् ॥ ४.२३ ॥

मोचयामास निगडाद् विश्रब्धः कन्यकागिरा ।
देवकीं वसुदेवं च दर्शयन्नात्म-सौहृदम् ॥ ४.२४ ॥

तस्यां रात्र्यां व्यतीतायां कंस आहूय मन्त्रिणः ।
तेभ्य आचष्ट तत् सर्वं यदुक्तं योगनिद्रया ॥ ४.२९ ॥

आकर्ण्य भर्तु-र्गदितं तमूचु-र्देवशात्रवः ।
देवान् प्रतिकृतामर्षा दैतेया नातिकोविदाः ॥ ४.३० ॥

एवं चेत्तर्हि भोजेन्द्र पुरग्रामव्रजादिषु ।
अनिर्दशान् निर्दशांश्च हनिष्यामोऽद्य वै शिशून् ॥ ४.३१ ॥

विप्रा गावश्च वेदाश्च तपः सत्यं दमः शमः ।
श्रद्धा दया तितिक्षा च क्रतवश्च हरेस्तनुः ॥ ४.४१ ॥

अयं वै तद्वधोपायो यदृषीणां विहिंसनम् ।
एवं दुर्मन्त्रिभिः कंसः सह संमन्त्र्य दुर्मतिः ।
ब्रह्महिंसां हितं मेने कालपाशावृतोऽसुरः ॥ ४.४३ ॥

---

4. 23. 'ஸாதுக்களும் ஏழைகளிடம் அன்புள்ளவர்களுமான நீங்கள் எனது கொடுமையை மன்னிக்கவேண்டும்' என்று கூறிவிட்டுக் கண்ணீர் வடியும் முகத்துடன் சகோதரியின் கால்களையும் சகோதரி புருஷன் கால்களையும் பிடித்துக் கொண்டான்.

4. 24. தெய்வப் பெண்ணின் சொல்லில் நம்பிக்கை வைத்து வசுதேவரிடமும் தேவகியிடமும் அன்பைக் காட்டுபவனாய் அவர்களை விலங்கிலிருந்து விடுவித்தான்.

4. 29. அன்றிரவு கழிந்ததும் கம்ஸன் மந்திரிகளைக் கூப்பிட்டு யோகமாயை கூறியதையெல்லாம் அவர்களிடம் தெரிவித்தான்.

4. 30. அசுரத்தன்மை வாய்ந்தவர்களும் தேவ சத்துருக்களும் எதையும் நன்கு யோசித்தறியும் அறிவற்றவர்களுமான அவர்கள் தங்கள் தலைவன் கூறியதைக் கேட்டுத் தேவர்களிடம் கோபம் மேலிட்டவர்களாய்ப் பின்வருமாறு பேசினர்.

4. 31. 'போஜ ராஜரே', அது அப்படியானால் பட்டணமோ கிராமமோ இடைச் சேரியோ எங்கெங்கு குழந்தைகள் பிறந்திருக்கின்றனவோ அவற்றைப் பத்து நாட்களுக்குட்பட்டிருந்தாலும் பத்து நாட்களுக்கு மேற்பட்டிருந்தாலும் இப்போதே கொல்லுவோம்,

4. 41. 'பிராம்மணர்களும் பசுக்களும் வேதங்களும் தவம், ஸத்தியம், புலனடக்கம், மனவமைதி, சிரத்தை, தயை, பொறுமை என்பவைகளும், யாகங்களும் ஹரியின் சரீரம்,

4. 43. 'ஆகையால் ரிஷிகளை இம்சிப்பதே அந்த விஷ்ணுவைக் கொல்லுவதற்கு உபாயம்'. என்று துர்மந்திரிகள் கூறக்கேட்டு அதுவே தக்கதென்று தீர்மானித்த துர்மதியான அசுரக் கம்ஸன் கால பாசத்தால் பீடிக்கப்பட்டுப் பிராம்மண இம்சையைத் தனக்கு இதமெனக் கருதினான்.

---

4. 30. **நாதிகோவிதா :—த்ருஷ்ட-மாத்ர-மதய:** |

---

4. 23. **बन्धुवत्सलाः ।** 4. 29. **योगमायया ।**

4. 41. **गावश्च देवाश्च ।** பா. பே.

आयुः श्रियं यशो धर्मं लोकानाशिष एव च।
हन्ति श्रेयांसि सर्वाणि पुंसो महदतिक्रमः ॥ ४.४६ ॥

नन्दस्त्वात्मज उत्पन्ने जाताह्लादो महामनाः।
आहूय विप्रान् वेदज्ञान् स्नातः शुचिरलंकृतः ॥ ५.१ ॥

वाचयित्वा स्वस्त्ययनं जातकर्मात्मजस्य वै।
कारयामास विधिवत् पितृदेवार्चनं तथा ॥ ५.२ ॥

कालेन स्नान-शौचाभ्यां संस्कारै-स्तपसेज्यया।
शुद्ध्यन्ति दानैः सन्तुष्ट्या द्रव्याण्यात्माऽऽत्मविद्यया ॥ ५.४ ॥

अवाद्यन्त विचित्राणि वादित्राणि महोत्सवे।
कृष्णे विश्वेश्वरेऽनन्ते नन्दस्य व्रजमागते ॥ ५.१३ ॥

गोपाः परस्परं हृष्टा दधि-क्षीर-घृतांबुभिः।
आसिंचन्तो विलिंपन्तो नवनीतैश्च चिक्षिपुः ॥ ५.१४ ॥

---

4. 46. ஒரு மனிதனுடைய ஆயுளையும் செல்வத்தையும் கீர்த்தியையும் தர்மத்தையும் புண்ணிய உலகங்களையும் நல்லாசிகளையும் எல்லா நலன்களையும் அழிப்பது மகான்களை அவமதிக்கும் செயல்.

5. 1-2. பெரிய மனது படைத்த நந்தகோபர் தனக்குப் பிள்ளை பிறந்ததால் மகிழ்ச்சி பொங்கியவராய்ப் பரிசுத்தமாக ஸ்நானம் செய்து அலங்கரித்துக்கொண்டு வேதமுணர்ந்த பிராம்மணர்களையழைத்து விதிப்படி குமாரனுக்குப் புண்யாஹவாசனமும் ஜாதகர்மாவும் செய்வித்துப் பிதிருக்களையும் தேவர்களையும் பூஜித்தார்.

5. 4. உரியகாலத்தாலும் ஸ்நாநத்தாலும் சௌசத்தாலும் ஸம்ஸ்காரங்களாலும், தவத்தாலும், யாகத்தாலும் தானங்களாலும் ஸந்தோஷத்தாலும் திரவியங்கள் பரிசுத்தப் படுகின்றன; ஆத்மஞானத்தால் ஆத்மா சுத்தி அடைகிறது.

5. 13. அளவற்ற மகிமைவாய்ந்த உலக நாயகனாகிய கிருஷ்ணன் நந்த கோகுலத்தில் வந்துதித்த அப்போது ஏற்பட்ட மகோத்ஸவத்தில் பலவகைப்பட்ட வாத்தியங்களை முழக்கினார்கள்.

5. 14. கோபர்கள் ஸந்தோஷத்தால் தயிர் பால் நெய் ஜலம் முதலியவற்றை ஒருவர்மேல் ஒருவர் இறைத்துக்கொண்டும் வெண்ணெய்யைப் பூசிக்கொண்டும் விளையாடினார்கள்.

---

5. 13. ஒ. பெண்டிர் வாழ்வார் நின்னொப்பாரைப் பெறுது
மென்னுமாசையாலே. —பெரியாழ்வார்.

5. 14. ஒ. உரியை முற்றத் துருட்டி நின்றிடுவார்
நறு நெய் பால் தயிர் நன்றாகத்தூவுவார்
செறிமென் கூந்த லவிழத் திளைத்தெங்கும்
அறிவழிந்தன ராய்ப்பாடியரே. —திவ்யப்பிரபந்தம்

---

5. 4. मन आत्मात्मविद्यया। 5. 13, नन्दव्रजमुपेयुषि। பா. பே.

विष्णोराराधनार्थाय स्वपुत्रस्योदयाय च ।
रोहिणी च महाभागा नन्दगोपाभिनन्दिता ॥
व्यचरद् दिव्यवासः-स्रक्कण्ठाभरण-भूषिता ॥ ५.१६ ॥

तत आरभ्य नन्दस्य व्रजः सर्वसमृद्धिमान् ।
हरेर्निवासात्मगुणै रमाक्रीडमभून्नृप ॥ ५.१८ ॥

गोपान् गोकुलरक्षायां निरूप्य मथुरां गतः ।
नन्दः कंसस्य वार्षिक्यं करं दातुं कुरूद्वह ॥ ५.१९ ॥

वसुदेव उपश्रुत्य भ्रातरं नन्दमागतम् ।
ज्ञात्वा दत्तकरं राज्ञे ययौ तदवमोचनम् ॥ ५.२० ॥

तं दृष्ट्वा सहसोत्थाय देहः प्राणमिवागतम् ।
प्रीतः प्रियतमं दोर्भ्यां सस्वजे प्रेमविह्वलः ॥ ५.२१ ॥

पूजितः सुखमासीनः पृष्ट्वानामय-मागतः ।
प्रसक्तधी-रात्मजयो-रिदमाह विशांपते ॥ ५.२२ ॥

---

5. 16. நந்தகோபரால் அன்புடன் காப்பாற்றப்பட்டுவந்த பெருமை வாய்ந்த ரோகிணியும் விஷ்ணுவின் ஆராதனைக்காகவும் தனது புத்திரனுடைய வளர்ச்சிக்காகவும் சிறந்த வஸ்திரம் புஷ்பம் ஆபரணம் முதலியவற்றால் அலங்கரிக்கப் பெற்று அங்கு வசித்து வந்தாள்.

5. 18. அது முதல் நந்த கோகுலம் பகவானுடைய வாசஸ்தானத்திற்குரிய எல்லா குணங்களும் செல்வங்களும் நிறைந்ததாய் லக்ஷ்மீதேவி ரமிக்கு மிடமாக விளங்கிற்று.

5. 19. குருநந்தன! (பின்னர்) கம்ஸனுக்குக் கப்பம் கட்டுவதற்காக நந்த கோபர் கோகுலத்தைப் பாதுகாக்கும்படி கோபர்களைத் திட்டம் செய்துவிட்டு மதுரைக்குச் சென்றார்.

5. 20. சகோதரர் நந்தகோபர் வந்த செய்தியும் அவர் அரசனுக்குக் கப்பம் கட்டியானதும் கேள்வியுற்று வசுதேவர் அவருடைய விடுதிக்குச் சென்றார்.

5. 21. உத்தம நண்பரான அவரைக் கண்டு மகிழ்ச்சியால் உள்ளம் நெகிழ்ந்து விரைந்து உடல் உயிரைத் தழுவுவதுபோல் இரு புஜங்களாலும் மார்புறத்தழுவினர்.

5. 22. அரசே! ஆசனமளிக்கப்பட்டு ஆரோக்கியமும் நல்வரவும் வினவப்பட்டு உபசரிக்கப்பட்டபின் வசுதேவர் தன் புத்திரர்களிடம் ஆசை பொங்கப் பின்வருமாறு கூறினர்.

---

5. 20. ப்ராதரம்—ஸகாயம்
5. 21. அவமோசனம்—நிவாஸஸ்தானம்!

दिष्ट्या भ्रातः प्रवयस इदानीमप्रजस्य ते ।
प्रजाशाया निवृत्तस्य प्रजा यत् समपद्यत　　॥ ५.२३ ॥

दिष्ट्या संसारचक्रेऽस्मिन् वर्तमानः पुनर्भवः ।
उपलब्धो भवानद्य दुर्लभं प्रियदर्शनम्　　॥ ५.२४ ॥

नैकत्र प्रियसंवासः सुहृदां चित्रकर्मणाम् ।
ओघेन व्यूहमानानां प्लवानां स्रोतसो यथा　　॥ ५.२५ ॥

कच्चित् पशव्यं निरुजं भूर्यम्बुतृणवीरुधम् ।
बृहद्वनं तदधुना यत्रास्से त्वं सुहृद्वृतः　　॥ ५.२६ ॥

भ्रातर्मम सुतः कच्चिन् मात्रा सह भवद्व्रजे ।
तातं भवन्तं मन्वानो भवद्भ्या-मुपलालितः　　॥ ५.२७ ॥

नन्द उवाच—

अहो ते देवकी पुत्राः कंसेन बहवो हताः ।
एकावशिष्टावरजा कन्या सापि दिवं गता　　॥ ५.२९ ॥

नूनं ह्यदृष्टनिष्ठोऽय-मदृष्टपरमो जनः ।
अदृष्ट-मात्मन-स्तत्त्वं यो वेद न स मुह्यति　　॥ ५.३० ॥

---

5. 23. 'சகோதரரே! குழந்தையில்லாமல் வயது சென்று இனிக் குழந்தை பிறக்கும் என்ற ஆசையும் நீங்கியபின் அதிருஷ்டவசமாய் உமக்கு இப்போது புத்திரப் பேறு உண்டாயிருக்கிறது.

5. 24. 'இந்த ஸம்சார சக்கரத்தின் சுழலில் நீர் புதுப்பிறவியடைந்தவர்போல் காணப்படுகிறீர். காணுதற்கரியவரும் காணுதற் கினியவருமான நீர் இன்று எனக்குக் காணக்கிடைத்ததும் அதிருஷ்டமே.

5. 25. 'நதியின் வெள்ளத்தில் கவர்ந்து செல்லப்படும் கட்டைகளுக்கு எப்படியோ, அப்படியே பலவகைப்பட்ட செயல்களால் கவரப்பட்ட நண்பர்களுக்கும் விரும்பிய ஒரு இடத்தில் சேர்ந்திருப்பது என்பதும் இல்லை.

5. 26. நீர் உற்றுருறவினருடன் இப்போது வசிக்கும் அந்த பிருஹத்வனம் புல் பூண்டு ஜலம் முதலிய நிறைந்துளதா? பசுக்கள் நோயற்றிருக்கின்றனவா?

5. 27. 'சகோதரரே! என் புத்திரன் ஒருவனும் தன் தாயுடன் உமது கோகுலத்தில் உம்மால் போஷிக்கப்பட்டு உம்மையே தந்தையாகக் கொண்டு சுகமாக வளர்ந்து வருகிறனு'?

நந்தர் கூறியது—

5. 29. உமக்கு தேவகியிடம் பிறந்த புத்திரர்கள் அனைவரையும் கம்ஸன் கொன்றுவிட்டது மிகவும் பரிதவிக்கத்தக்கது. கடைசியாய்ப் பிறந்த ஒரு பெண் இருந்தாள். அவளும் சொர்க்கமடைந்துவிட்டாள்.

5. 30. இவ்வுலகு அதிருஷ்டத்திற்கு வசப்பட்டது. ஜனங்கள் அதிருஷ்டத்தையே உயர்ந்த தத்துவமாகக் காண்கிறார்கள். காணமுடியாமலிருந்துகொண்டு தனக்கு இன்பதுன்பங்களைத் தரும் புண்ணிய பாவங்களின் தத்துவத்தை எவன் அறிகின்றனே அவன் மயங்குவதில்லை.

---

5. 22. अनामयमास्तः ।　　பா. பே.

वसुदेव उवाच—

करो वै वार्षिको दत्तो राज्ञे दृष्टा वयं च वः।
नेह स्थेयं बहुतिथं सन्त्युत्पाताश्च गोकुले ॥ ५.३१ ॥

श्रीशुक उवाच—

इति नन्दादयो गोपाः प्रोक्तास्ते शौरिणा ययुः।
अनोभि-रनडुद्युक्तै-स्तमनुज्ञाप्य गोकुलम् ॥ ५.३२ ॥

नन्दः पथि वचः शौरेर्न मृषेति विचिन्तयन्।
हरिं जगाम चरण-मुत्पातागम-शंकितः ॥ ६.१ ॥

कंसेन प्रहिता घोरा पूतना बालघातिनी।
शिशूं-श्चचार निघ्नन्ती पुरग्रामव्रजादिषु ॥ ६.२ ॥

न यत्र श्रवणादीनि रक्षोघ्नानि स्वकर्मसु।
कुर्वन्ति सात्वतां भर्तु-र्यातुधान्यश्च तत्र हि ॥ ६.३ ॥

सा खेचर्येकदोपेत्य पूतना नन्दगोकुलम्।
योषित्वा माययाऽऽत्मानं प्राविशत् कामचारिणी ॥ ६.४ ॥

---

வசுதேவர் கூறியது—

5.31. 'அரசனுக்கு உம்மால் வருஷாந்தரம் கட்டவேண்டிய கப்பம் கட்டியாகி விட்டது. இனி நீர் இங்கு அதிக நாள் தங்குவது உசிதமன்று. கோகுலத்தில் ஆபத்துக் குறிகள் தோன்றுகின்றன.

ஸ்ரீ சுகர் கூறியது—

5.32. வசுதேவரால் இங்ஙனம் கூறப்பட்டபின் நந்தர் முதலிய கோபர்கள் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு வண்டிகளைப் பூட்டிக்கொண்டு கோகுலம் சென்றார்கள்.

6.1. நந்தர் வழியில் செல்லும்போதே என்ன ஆபத்து விளையுமோ, வசுதேவர் வாக்குப் பொய் போகாது என்று எண்ணி பகவானைச் சரணடைந்தார்.

6.2. (அதே சமயத்தில்) கம்ஸனால் ஏவப்பட்டிருந்தவளும் கொடியவளும் பாலர்களைக் கொல்லுபவளுமான பூதனை என்பவள் பட்டணங்களிலும் கிராமங்களிலும் இடைச் சேரிகளிலும் சென்று குழந்தைகளைக் கொன்று கொண்டு சஞ்சாரம் செய்து வந்தாள்.

6.3. நல்லோர்களின் நாயகனாகிய பகவானைப்பற்றிய சிரவணம் கீர்த்தனம் முதலியவை ராக்ஷஸர்களை நிக்கிரகம் செய்பவை. அவை எங்கு இல்லையோ அங்கு தான் ராக்ஷஸர்களுக்குத் தங்கள் செயல்களில் திறமை உண்டு.

6.4. ஆகாய மார்க்கமாய் இஷ்டமான வடிவில் செல்லவல்ல அந்தப் பூதனை மாயையால் தன்னை மானிடப் பெண்ணாக்கிக்கொண்டு நந்த கோகுலத்தில் புகுந்தாள்.

---

**யோஷித்வா**—வேஷதோ வராம் நாரீமிவ ஆத்மானம் விதாய।

---

6.2. **पुरग्रामाकरादिषु।** 6.3. **भर्तु-र्यातुधानाश्च।**
6.4. **खेचर्येकदोत्पत्य। गोपित्वा** பா. பே.

बालग्रह-स्तत्र विचिन्वती शिशून् यदृच्छया नन्दगृहेऽसदन्तकम् ।
बालं प्रतिच्छन्न-निजोरुतेजसं ददर्श तल्पेऽग्निमिवाहितं भसि ॥ ६.७ ॥

विबुध्य तां बालकमारिकाग्रहं चराचरात्माऽऽस निमीलितेक्षणः ।
अनन्त-मारोपय-दङ्क-मन्तकं यथोरगं सुप्त-मबुद्धि-रज्जुधीः ॥ ६.८ ॥

तां तीक्ष्णचित्ता-मतिवाम-चेष्टितां वीक्ष्यान्तरा कोशपरिच्छदासिवत् ।
वरस्त्रियं तत्प्रभया च धर्षिते निरीक्षमाणे जननी ह्यतिष्ठताम् ॥ ६.९ ॥

तस्मिन् स्तनं दुर्जरवीर्य-मुल्बणं घोराङ्क-मादाय शिशोर्ददावथ ।
गाढं कराभ्यां भगवान् प्रपीड्य तत् प्राणैः समं रोषसमन्वितोऽ
पिबत् ॥ ६.१० ॥

सा मुंच मुंचालमिति प्रभाषिणी निष्पीड्यमानाखिल-जीवमर्मणि ।
विवृत्य नेत्रे चरणौ भुजौ मुहुः प्रस्विन्न-गात्रा क्षिपती रुरोद ह ॥ ६.११ ॥

---

6. 7. பாலர்களைக் கொல்லும் பூதனை அங்கு குழந்தைகளைத் தேடுகையில் தெய்வ வசமாக நந்தகோபர் வீடுவந்து அங்கு துஷ்ட நிக்ரஹம் செய்பவனும் ஆனால் தனது பராக்கிரமத்தை மறைத்துக் கொண்டிருப்பவனும் நீர் பூத்த நெருப்புப்போன்றவனுமான குழந்தையைக் கண்டாள்.

6. 8. சராசரப் பிரபஞ்சத்தின் ஆத்மாவாகிய பகவான் குழந்தைகளைக் கொல்லும் அரக்கி என அவளை அறிந்தும் (அறியாதவர்போல்) கண்மூடி இருந்தார். அரக்கியும் தன்னை முடிக்கப்போகும் அவ்வனந்தனைத் தூங்கும் பாம்பைக் கயிறு எனக் கருதி அறியாமையால் எடுப்பதுபோல் எடுத்து மடியில் வைத்துக் கொண்டாள்.

6. 9. கொடிய மனதுடையவளும் அதிலுங் கொடிய செயலுடையவளும் உறையில் மறைக்கப்பட்ட கத்திபோல் உத்தம ஸ்திரீ வேஷத்தில் வந்தவளுமான அவ்வரக்கியை வீட்டினுள் கண்டு தாய்மார் இருவரும் அவளுடைய காந்தியில் மயங்கி செயலற்று நின்றார்கள்.

6. 10. மடியில் வைத்துக்கொண்ட குழந்தைக்குக் கொடிய விஷமே உருக்கொண்டு எழுந்தாற்போன்ற ஸ்தனத்தை அக் கொடியவள் கொடுத்தாள். அப்போது பகவான் ரோஷத்துடன் கைகளால் ஸ்தனத்தைப்பற்றி அவளுடைய உயிருடன் உறிஞ்சலானார்.

6. 11. அவள் அப்போது, "போதும், விடு, விடு" என்று கூவுபவளாய் உயிர் நிலையின் மர்மஸ்தானங்களிலெல்லாம் பீடிக்கப்பட்டவளாய்க் கண்களை மலர விழித்துக் கொண்டும் கால்களையும் கைகளையும் அடிக்கடி உதறிக்கொண்டும் உடல் வியர்க்கக் கதறினாள்.

---

6. 7. **பஸி—பஸ்மனி** ।

6. 8. பகவானுடைய இச்சைக்கு மாறானதாகத் தோன்றுபவையும் நிகழ்வது அவன் அனுமதியாலேயே. அவனுடைய லீலை சிறப்புறுவதற்காக தன்னை யெதிர்ப்பதையும் அவன் அனுமதிக்கிறான். அவன் அனுமதியின்றி அங்ஙனம் நிகழ இயலாது.

निशाचरीत्थं व्यथितस्तना व्यसु-र्व्यादाय केशां-श्चरणौ भुजावपि ।
प्रसार्य गोष्ठे निजरूप-मास्थिता वज्राहतो वृत्र इवापतन्नृप ॥ ६.१३ ॥

बालं च तस्या उरसि क्रीडन्त-मकुतोभयम् ।
गोप्यस्तूर्णं समभ्येत्य जगृहु-र्जातसंभ्रमाः ॥ ६.१८ ॥

गोप्यः संस्पृष्ट-सलिला अंगेषु करयोः पृथक् ।
न्यस्यात्मन्यथ बालस्य बीजन्यास-मकुर्वत ॥ ६.२१ ॥

स्वप्नदृष्टा महोत्पाता वृद्धबालग्रहाश्च ये ।
सर्वे नश्यन्तु ते विष्णो-र्नामग्रहण-भीरवः ॥ ६.२९ ॥

इति प्रणयबद्धाभि-र्गोपीभिः कृतरक्षणम् ।
पाययित्वा स्तनं माता संन्यवेशय-दात्मजम् ॥ ६.३० ॥

तावन्नन्दादयो गोपा मथुराया व्रजं गताः ।
विलोक्य पूतना-देहं बभूवु-रति-विस्मिताः ॥ ६.३१ ॥

---

6. 13. அரசே! இப்படி அந்த அரக்கி ஸ்தனம் பீடிக்கப்பட்டுப் பிராணனை விட்டு வாயைத் திறந்துகொண்டும் தலையை விரித்துக்கொண்டும் தன்னுடைய உண்மையான வடிவுடன் இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் அடிபட்டு வீழ்ந்த விருத்திராசுரனைப்போல் பூமியில் விழுந்தாள்.

6. 18. அவளுடைய மார்பில் பயமில்லாமல் விளையாடிக் கொண்டிருந்த குழந்தையைக் கோபிகைகள் நெஞ்சு துடிக்க விரைந்தோடி எடுத்தார்கள்.

6. 21. கோபிகைகள் ஆசமனம் செய்து தாங்கள் அங்கநியாஸமும் கரநியாஸமும் செய்துகொண்டு குழந்தைக்கும் பகவந் நாமங்களால் நியாஸம் செய்து ரக்ஷையைச் செய்வித்தார்கள்.

6. 29. 'கனவில் கண்ட கொடிய சகுனங்களும் மக்களைப் பீடிக்கும் விருத்தக் கிரகங்களும் பாலக்கிரகங்களும், விஷ்ணுவின் நாம ஜபத்தைக் கண்டு நடுக்கமுற்று எல்லாம் நாசத்தையடையட்டும்' (என்று பிரார்த்தித்தனர்.)

6. 30. இங்ஙனம் அன்புமிக்க கோபிகைகளால் ரக்ஷை செய்விக்கப்பட்டபின் தாய் குழந்தைக்குப் பாலூட்டித் தூங்கவைத்தாள்.

6. 31. அச்சமயத்தில் மதுரையிலிருந்து கோகுலம் வந்த நந்தர் முதலிய கோபர்கள் பூதனையின் சடலத்தைக் கண்ணுற்று மிகவும் ஆச்சரியமடைந்தார்கள்.

---

6. 13. தர்மத்தை எதிர்க்கும் ஸ்திரீயின் கொடுமை தர்மத்தை எதிர்க்கும் புருஷனின் கொடுமையினும் மிக்கது. அதனால்தான் ராமாவதாரத்திலும் கிருஷ்ணவதாரத்திலும் முதன் முதலாக அரக்கிவதம்போலும். இதில் மட்டுந்தான் இரு அவதாரங்களிலும் ஒற்றுமை. மற்றபடி பலவகையில் வேற்றுமை காணப்படும். ஸ்ரீராமவதாரம் பகல், கிருஷ்ணவதாரம் இரவு; ராமாவதாரம் உத்தராயணம், கிருஷ்ணவதாரம் தக்ஷிணயனம்; கோசலையின் ஆனந்தத்தை வளர்த்தவன், தேவகியின் சோகத்தை வளர்த்தவன்; சூரிய புத்ரன் சுக்ரீவன் நண்பன், சூரிய புத்ரன் கர்ணன் பகைவன்; ஏகபத்னீ விரதம், பஹுபத்னீ விரதம்; தர்மதத்வம், பிரம்ம தத்வம்.

6. 21. த்வாதசாங்கேஷு லலாடாதிஷு கேசவாதி-த்வாதச-நாமபி: ||

---

6. 30. मातापर्यंके संन्यवेशयत् । பா. பே.

नूनं बतर्षिः संजातो योगेशो वा समास सः ।
स एव दृष्टो ह्युत्पातो यदाहानकदुन्दुभिः ॥ ६.३२ ॥

कलेवरं परशुभिश्छित्त्वा तत्ते व्रजौकसः ।
दूरे क्षिप्त्वावयवशो न्यदहन् काष्ठधिष्ठितम् ॥ ६.३३ ॥

दह्यमानस्य देहस्य धूमश्चागरु-सौरभः ।
उत्थितः कृष्ण-निर्भुक्तेस्सपद्याहत-पाप्मनः ॥ ६.३४ ॥

पूतना लोकबालघ्नी राक्षसी रुधिराशना ।
जिघांसयापि हरये स्तनं दत्त्वाप सद्गतिम् ॥ ६.३५ ॥

किं पुनः श्रद्धया भक्त्या कृष्णाय परमात्मने ।
यच्छन् प्रियतमं किन्नु रक्ता-स्तन्मातरो यथा ॥ ६.३६ ॥

पद्भ्यां भक्तहृदिस्थाभ्यां वन्द्याभ्यां लोकवन्दितैः ।
अङ्गं यस्याः समाक्रम्य भगवानपिबत् स्तनम् ॥ ६.३७ ॥

यातुधान्यपि सा स्वर्ग-मवाप जननीगतिम् ।
कृष्ण-भुक्त-स्तनक्षीराः किमु गावोऽनुमातरः ॥ ६.३८ ॥

---

6. 32. 'வசுதேவர் எந்த விபத்து நிகழக்கூடுமென்ருரோ அதையே கண் கூடாகக் கண்டுவிட்டோம். அவர் உண்மையில் ஒரு ரிஷியாகத் தோன்றியிருக்க வேண்டும் அல்லது யோகீசுவரராக இருக்கவேண்டும். இது நிச்சயம்'.

6. 33. கோகுலவாசிகள் அரக்கியின் சடலத்தைக் கோடரிகளால் வெட்டி அப்புறப்படுத்தி விறகிலிட்டுத் தீ மூட்டினர்கள்.

6. 34. கிருஷ்ணன் பால்குடித்த காரணத்தால் அப்போதே பாவங்கள் ஒழியப் பெற்ற அவளுடைய சடலம் எரிக்கப்படுகையில் அகில் வாசனையுடன் புகை கிளம்பிற்று.

6. 35. உலகிலுள்ள குழந்தைகளை வதம் செய்பவளும், இரத்தத்தைக் குடிப் பவளுமாகிய அரக்கி கொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் பகவானுக்குப் பால் கொடுத்துங்கூட நற்கதியடைந்தாள்.

6. 36. சிரத்தையுடனும் பக்தியுடனும் கிருஷ்ண பரமாத்மாவுக்கு அவனுடைய தாய்மார்களைப்போல் அன்புடன் மிகவும் பிரியமான எதையாவது அளித்தவர்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

6. 37-40. உலகம் போற்றும் உத்தமர்களால் போற்றப்படுவனவும் பக்தர் களுடைய இருதயத்தில் நிலைபெற்றனவுமான திருவடிகளால் எவளுடைய அங்கங்களை ஆக்கிரமித்துப் பகவான் பாலைப்பருகினுரோ அவள் அரக்கியாயினும் தாயார் அடையக் கூடிய நற்கதியாகிய ஸ்வர்க்கத்தை யடைந்தாள். அப்படியிருக்கப் புத்திர சிநேகத் துடன் பெருக்கிய பாலை எந்த செவிலித்தாய்களிடமிருந்தும் பசுக்களிடமிருந்தும்

---

6. 32. बतर्षिः ज्ञानी वा ।     6. 33. ददहुः काष्ठवेष्टितम् ।     பா. பே.

पयांसि यासा-मपिबत् पुत्रस्नेहस्नुतान्यलम्।
भगवान् देवकीपुत्रः कैवल्याद्यखिलप्रदः ॥ ६.३९ ॥

तासा-मविरतं कृष्णे कुर्वतीनां सुतेक्षणम्।
न पुनः कल्पते राजन् संसारोऽज्ञानसंभवः ॥ ६.४० ॥

नन्दः स्वपुत्रमादाय प्रेत्यागत-मुदारधीः।
मूर्ध्न्युपाघ्राय परमां मुदं लेभे कुरूद्वह ॥ ६.४३ ॥

य एतत् पूतनामोक्षं कृष्णस्यार्भक-मद्भुतम्।
शृणुयाच्छ्रद्धया मर्त्यो गोविन्दे लभते रतिम् ॥ ६.४४ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टादशसाहस्रिकायां
संहितायां परमहंस्यां वैयासिक्यां श्रीहयग्रीवब्रह्मविद्यायां
दशमस्कन्धे पूर्वार्धे पूतनामोक्षो नाम षष्ठोऽध्यायः ॥

ஸ்ரீ கிருஷ்ணன் வேண்டியமட்டும் உண்டாரோ, எவர்கள் கிருஷ்ணன் பால் பருகக் கூடிய ஸ்தனத்தைப் படைத்திருந்தனரோ அவர்களைப் பற்றியும் கேட்க வேண்டுமா ? தேவகி புத்திரராகிய பகவான் கைவல்யம் முதலிய அனைத்தையும் அளிப்பவர். அரசே, புத்திரபாவனையுடன் இடைவிடாது கிருஷ்ணனிடம் அன்பு செய்தவர்களுக்கு அஜ்ஞானத்தால் ஏற்படும் ஸம்ஸாரம் மறுபடியும் உண்டாகாது.

6. 43. குரு சிரேஷ்டரே! செத்துப் பிழைத்தவன் போன்ற தமது குழந்தையை எடுத்தணைத்து உச்சி முகர்ந்து நந்தன் மட்டிலா மகிழ்ச்சியடைந்தார்.

6. 44. இந்த அற்புதக் குழந்தையின் பாலலீலையாகிய பூதனா மோக்ஷ சரித்திரத்தை சிரத்தையுடன் எந்த மானிடன் கேட்கிறானோ அவன் கோவிந்தனிடத்தில் பரிபூர்ணமான பக்தியை யடைவான்.

---

6. 44. ஒ. (அத்தும் தைத்யகுலாநீச : பூதனயா : சிசுச்சலாத் । ஸ்தன்ய போசனத : ப்ராணை : ப்ராணாஹூதிமகல்பயத் ॥) அரக்கர் குலத்தை உண்பதற்கு அவதரித் பகவான் பூதனையின் பாலுடன் அவள் பிராணனையும் குடித்தது சாப்பிடுவதற்கு மு பிராணாஹூதி போலாயிற்று. —ஸ்ரீத

இங்ஙனம் பரமஹம்ஸரான
வியாஸ புத்திரர் உபதேசித்ததும் பதினெண்ணாயிரம்
சுலோகங்கள் அடங்கியதும் ஹயக்கிரீவப் பிரம்ம வித்தை
எனப்படுவதுமான ஸ்ரீமத் பாகவத புராணத்தில்
பத்தாவது ஸ்கந்தத்தில் பூர்வபாகத்தில்
பூதனா மோக்ஷம் எனப் பெயர் பெற்ற
ஆறாவது அத்தியாயம்
முற்றும்.

**நான்காம் நாள் கதை முற்றும்.**